
இதோ! ரூ.4/-* பெறுமான சூப்பர் சலுகை!
கிஸான் மற்றும் டிப்பி'ஸ் ஜாம், சாஸ் மற்றும் ஸ்குவாஷுடன்!
Kissan
ORANGE SQUASH
FREE!
Dipy's
ORANGE SQUASH
Kissan
TOMATO SAUCE
Kissan
MIXED FRUIT JAM
Dipy's
TOMATO SAUCE
HERBERTSONS LIMITED
Dipy's
MIXED FRUIT JAM
HERBERTSONS LIMITED
ஒரு பாக்கெட்
"கிஸான் மில்க்ட்ரீம்" பிஸ்கட்
இலவசம்! இலவசம்! இலவசம்! இலவசம்
KISSAN MILK DREAM BISCUITS
*ஒவ்வொரு 500 கிராம்/700 மி.லி.
கிஸான் ஜாம்/சாஸ்/ ஸ்குவாஷ்
பாட்டிலுடன் அல்லது ஒவ்வொரு
500 கிராம்/400 கிராம்/ 700மிலி
டிப்பி'ஸ் ஜாம்/சாஸ்/ஸ்குவாஷ்
பாட்டிலுடன் சுமார் நான்கு
ரூபாய் பெறுமான 100 கிராம்
''கிஸான் மில்க்ட்ரீம்'' பிஸ்கட்
பாக்கெட் இலவசம்!
முந்துங்கள்! இச்சலுகை சரக்கு நீடிக்கும்
வரை தமிழ்நாடு, ஆந்திரா, கேரளா,
கோவா, கர்னாடகா மற்றும்
பாண்டிச்சேரி பிரதேசங்களில் மட்டுமே!
Visesh/KPL/8953/Iam

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...




உங்களுக்கும் உங்களது முன்னற்றத் ிற்கும் இடையில் இப்பொழுது ள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு ான் என்று நாங்கள் கூறினால் அது ற்று மிகையாகத் தோன்றும். ஆனால் ண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறு தற்கு ஆங்கில மொழியில் பாதிய பயிற்சியின்மை ஒரு தடை ாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் பாது அதை ஓரளவு புரிந்து கொண் ம், அதற்கு ஆங்கிலத்திலேயே பதில ிக்க முடியவில்லையே என்ற குறை ங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங் லத்தில் பேச முடியவில்லையே என்ற லிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற் த்தை இப்பொழுது அடைய ஒரே ரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழை ின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வண்டும், தயக்க மின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல் களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற் கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர் கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

---

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை - 17.**

NAGA

# அதிர்ஷ்ட தேவதை 1

***1986 — டிசம்பர் 5 — வெள்ளி***

'**சா**ண்டில்யா பிரதர்ஸ்' என்ற நிறுவனத்தின் ஆரம்ப உரிமையாளர் கிருஷ்ண சாண்டில்யாவின் பேரன் ரமேஷ் சாண்டில்யா இன்று காலை பம்பாய்க்கு ஓடியிருக்கிறான். நாளை மறுநாள் ஞாயிறன்று அவனுடைய 'மோகினி' மகாலட்சுமியில் ஓடுகிறது. ஏற்கெனவே நான்கு பந்தயங்களில் தொடர்ந்து, மற்ற குதிரைகளைப் பின்னுக்குத் தள்ளியிருந்த 'மோகினி' இந்த ஞாயிறன்றும் தனக்குத் தங்கக் கோப்பையையும் ஒரு லட்சம் ரூபாய் பரிசுப் பணத்தையும் அள்ளிக் கொடுக்கப் போகிறது என்று ரமேஷ் நம்பியிருக்கிறான்.

நிறுவனத்தில் மானேஜர், உதவி மானேஜர் என்ற பதவிகள் எதுவும் கிடையாது. தனக்கு அந்தரங்கக் காரியதரிசி போல நடந்து கொள்ளக் கூடியவன், கே. எஸ். வி. ரமணி ஒருவன்தான் என்று எண்ணிய ரமேஷ், அவனைத் தலைமை குமாஸ்தாவாக வைத்துக் கொண்டு, அவன் மூலம் மற்ற குமாஸ்தாக்களிடமிருந்தும், ஏனைய சிப்பந்திகளிடமிருந்தும் வேலை வாங்கினான். சம்பள விஷயத்தில் ரமேஷ் சற்றுத் தாராளமாக இருந்ததால், ஒட்டிக் கொண்டவர்கள் விலகவில்லை.

முதலாளி ஊரில் இல்லையென்றால்,



ஆபீஸ் ஆபீசாக இராது. ஒரு மனமகிழ் மன்றமாக மாறிவிடும். இந்த மன்றத்திலிருந்து விடுபட்டுத் தனித்து நிற்கிறவன் 'நெய் ரோஸ்ட்' கிச்சாதான். அவன் தனக்குத் தானே பேசிக் கொள்ளுவான். சிரித்துக் கொள்ளுவான். ஆனால் ஒரு நாள் கூட அழுதது கிடையாது. ஆகஸ்ட் பத்தாம் தேதி அன்று தனது இருபத்தெட்டாவது பிறந்த நாளை மௌன சோகத்துடன் கொண்டாடிய டைப்பிஸ்ட் சுகந்தி, அவ்வளவாக ஆபீஸ் அக்கப்போரில் கலந்து கொள்ள மாட்டாள். ஓர் ஆண் துணை இன்னும் அமைய வில்லையே என்ற தாபத்தில் அவள் தன்னுள்ளேயே முடங்கிப் போவாள். ரமணி மீது அவளுடைய மனம் புயலாய் அடித்துக் கொண்டிருந்தது. ஆனால் அவன் ஓரக் கண்ணால் கூட அவளுக்குக் கிருபை காட்டவில்லை. காரணம், அவனுடைய இரு கண்களும் எம். மணிமாலா மீதே நிலைத்துப் போயிருந்தன. எம். மணிமாலா தன் பெயரை, எம். எம். மாலா என்று அடக்கி வைத்திருந்தாள். ரமணி அழைக்கும் பெயர் மாலு. அவளைப் பற்றி நினைக்கும் போதெல்லாம்



எம். எம். ரப்பர் மெத்தை நெஞ்சில் விரியும். மாலுவும் ஒரு குமாஸ்தா.

இந்த மூன்று குமாஸ்தாக்கள் மற்றும் டைப்பிஸ்ட் சுகந்தியைத் தவிர இரண்டு சிப்பந்திகளும் ஒரு வாட்ச்மேனும் உண்டு. அவர்களில் வெங்கடாசலம், என்கிற வெங்கிக்கு வயது அறுபதாகப் போகிறது. ரமேஷுக்கு ரேஸ் விஷயங்களில் குழப்பம் ஏற்படும் போதெல்லாம் கீதோபதேசம் செய்கிறவன் வெங்கிதான். அவனுடைய உபதேசம் பீஷ்மர் துரோணர்களையெல்லாம் வீழ்த்தவில்லை என்றாலும் பல அசுவங்களின் மூலம் பணத்தை வாரிக் கொடுத்திருக்கிறது. இதனால் வெங்கியும் பணம் ஏதும் கட்டாமலேயே பலன் அடைந்திருக்கிறான். வாட்ச்மேன் மயில்சாமியை மாலை ஆறு மணிக்கு மேல்தான் பார்க்க முடியும். இதன் காரணமாக அவனால் மனமகிழ் மன்றத்தில் கலந்து கொள்ள முடியாது.

கடைசியாக —

ரங்கன். ஒருவன் அவனுடைய விரலை விட்டால், 'நறுக்'கென்று கடிக்க வேண்டாமோ? ஊஹூம். ரங்கன் விரலை நாக்கால் மிருதுவாகத் தடவிக் கொடுக்கக் கூட மாட்டான். பாம்பு, தேள், வெறிபிடித்த நாய் இவற்றை எல்லாம் கண்டு பயப்படாத அவன் மற்ற மனிதர்களைக் கண்டு பயந்தான். இந்தப் பயம் அவன் அம்மாவின் வயிற்றில் இருக்கும் போதே பிறந்த பயம் என்று ரமணி கருதினான். ரமணியின் ஆத்மார்த்த சிநேகிதன் ரங்கன் என்றால், ரங்கனுக்கு ரமணி ஒரு விசுவரூபம் போல. ரமணி நண்பன். ரமணி வழிகாட்டி. ரமணி ஒருவன் தான் அவனுடைய நல்வாழ்க்கையில் அக்கறை கொண்டுள்ளவன். ரமணிதான் அவனை என்றும் ஏமாற்றாமல் இருப்பான்.

இப்படி ஒரு நம்பிக்கை ரங்கனுடைய உள்ளத்தில் ஆலமரத்து வேராக நிலைத்துப் போயிற்று. அவனைக் கண்டு ஆபீசே ஏளனம் செய்யும். ஆனால் ரமணி ஒருவன் தான் பரிவு காட்டுவான். சம அந்தஸ்து கொடுப்பான்.

மனமகிழ் மன்றத்தில் ரங்கன் தனக்கு இடப்படும் பணிகளை நிறைவேற்றுவதோடு நிறுத்திக் கொள்ளுவான்.

**"ஹா**ய், ரமணி!'' — மாலு தன் கைப் பையை மேஜையின் மீது அலட்சியமாகப் போட்டுவிட்டு அவனை நோக்கி வந்தாள். ஓர் அப்சரஸ் தரையில் கால் பாவாமல் மிதந்து வருவதான காட்சி ரமணியின் மனத்தில் எழுந்தது. என்றுதான் அவளும் அவனும் மணமேடையில் அமர்வார்கள், முதல் இரவில் சந்திப்பார்கள், தேன் நிலவில் கை கோத்து ஓடுவார்கள்?

தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக்

ம.செ.ஆர்.

கொண்டு ரமணி —

''வா மாலு, வா. ஓ, இன்னிக்கு வெள்ளி. அதான் கூந்தலைப் பாயா விரிச்சு முனையிலே ஒரு சின்ன முடிச்சாப் போட்டிருக்கே, இல்லே!'' என்றான்.

மாலு அருகே ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள். ஹாலின் ஒரு மூலையில் டைப்பிங் மெஷினையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கும் சுகந்தியையோ, இன்னொரு மூலையில், மேஜை மீது இரு விரல்களால் தாளம் போட்டுத் தனக்குத் தானே பாடிக் கொண்டிருக்கும் 'நெய் ரோஸ்ட்' கிச்சாவையோ, அவள் லட்சியம் செய்யவில்லை.

''ரமணி!''

''என்ன மாலு?''

''ரெண்டு நல்ல நியூஸ்!''

''பெரிய நல்ல நியூஸை முதல்ல சொல்லு!''

''நேத்து ராத்திரி நீங்க என் சொப்பனத்திலே வந்தீங்க!''

''இதென்ன பெரிய நியூஸ், மாலு? நான் தினசரி வந்தாகணுமே!''

''நேத்து ஸ்பெஷலா வந்தீங்க, ரமணி! இதுவரையில் செய்யாததை நீங்க செய்தீங்க!''

''என்ன சொல்றே, மாலு?''

''வெக்கமாயிருக்கு!''

''நாம ரெண்டு பேரும் வெட்கப்படற வயசிலா இருக்கோம்? எனக்கு முப்பது. உனக்கு இருபத்தஞ்சு.''

''நீங்க என்னை ஒரு தடவை கூடத் தொட்டதில்லே!''

''அதனால் என்ன, நீ தொட்டுப் பாரு!''

''சொப்பனத்திலே நீங்க தொட்டதோட நிறுத்திக்கலே ரமணி!''

''பின்னே?''

''என்னைக் கட்டி... கட்டிப் பிடிச்சு முத்தம் கொடுத்து, அப்புறம்...''

''ஓ, ரொம்ப சுவாரசியமா இருக்கே, மாலு... சொல்லு... சொப்பனத்திலே வந்தது நான்தானா... இல்லே, வேறே யாராவது...? உம், கோபிச்சுக்காதே... என்னை அப்படிப் பார்க்காதே... எனக்கு என்னமோ செய்யறது. கம் ஆன் மாலு, அப்புறம் நான் என்ன செய்தேன்?''

''சொல்றேன்.''

''வணக்கம், ரமணி சார்... வணக்கம் மாலு அம்மா...''

ரங்கன் பிளாஸ்க்குடன் வந்தான்.

''காப்பி நன்னா ஸ்ட்ராங்கா இருக்கா, ரங்கா?''

''வேறே எப்படி சார் வாங்குவேன்! இருங்க, தம்ளர் எடுத்தாரேன்.''

''ரெண்டாக் கொண்டு வா.''

அவன் நகர்ந்ததும், ''சிவபூஜையில் கரடி

வந்துதான் பார்த்திருக்கேன்...'' என்று மாலு இழுத்தாள்.

''கரடி வந்து பார்த்திருக்கியா? நான் கேள்விதான் பட்டிருக்கேன்!''

''இப்ப குரங்கே வந்தது.''

''ரங்கனைக் குரங்குன்னு சொல்லாதே, மாலு. பாவம். அவன் அப்பாவி. ஆபீஸ்லே நாம இன்னிக்கு விசேஷமா இப்படிப் பேசறோம்னு அவனுக்கு எப்படித் தெரியும்?''

''அவன்கிட்டே சொல்லி வையுங்க, ரமணி!''

''என்னன்னு?''

''நாம ரெண்டு பேர் இப்படிக் கிட்டக் கிட்ட உட்கார்ந்து பேசிக்கிட்டிருக்கிறப்ப அவன் இடையிலே வரப்படாதுன்னு.''

''ரங்கன் ஒரு பரமசாது, மாலு.''

''தெரியும். நான் சாதுக்களை நம்பற தில்லை.''

''அதோ. அவனே வர்றான். பேசாம இ ந.''

இரு தம்ளர்களில் கர்ப்பியை ஊற்றிய பிறகு, ரங்கன் தன்னுடைய ஷர்ட் பாக்கெட் டிலிருந்துமூன்றுகாகிதங்களைஎடுத்துரமணி யிடம் நீட்டினான். கூடவே ஒரு டயரியையும் மேஜை மேல் வைத்தான்.

''ஏன் ரங்கா இப்படிப் பணத்தை லாட்டரிச் சீட்டிலே கொட்டி அழறே? இந்த அஞ்சு வருஷத்திலே நீ இதுக்காக எவ்வளவு செலவழிச்சிருக்கே, தெரியுமா? கிட்டத் தட்ட அஞ்சாயிரம்! ஒரு அம்பது ரூபாயா வது பரிசாத் திரும்பி வந்திருக்கா?''

காப்பியை, பேசும் போது, நடுநடுவே உறிஞ்சி உறிஞ்சி ருசித்த ரமணி ரங்கனைப் பரிதாபமாகப் பார்த்தான்.

ரங்கன் தலைகுனியாமல் மௌனமாக நின்றான்.

''இரு. டயரியில் நம்பர்களைக் குறிச்சுத் தர்றேன்.''

''டிக்கெட்டு பத்திரம், ரமணி சார்.''

''கவலைப்படாதே... நீ வாங்கி இருக்கிற டிக்கெட்டெல்லாம் பத்திரமா வீட்டிலே என் அலமாரியிலே இருக்கு.''

''நல்லது ரமணி, சார்!''

''நட்ட நடு ராத்திரியிலே நீ எழுப்பிக் கேட் டாலும் கிடைக்கும்.''

''உங்களைத் தெரியும், ரமணி சார்...''

''ஹங், அப்புறம், இன்னொண்ணு. உன் பாங்க் அகௌண்ட்லே இப்ப மூவாயிரத்து சொச்சம் இருக்கு. ரெண்டு வருஷம் முன் னாடி ஐயாயிரம் ரூபாய் டெபாசிட்டாப் போட்டிருந்தியே, அது பத்தாம் தேதி, அதான் அடுத்த புதன் கிழமை ஆறாயிரத்துச் சொச் சமாக் கிடைக்கப் போறது. இன்னும் ரெண் டாயிரம் போட்டு எட்டாயிரத்தை பாங்க் லேயே டெபாசிட் பண்றியா?''



# தூக்கம் இல்லை!

சமீபத்தில் நமீபியாவுக்குப் பிரதமர் சென்றிருந்த போது, நிறைய நிகழ்ச்சிகள் இருந்ததினால் சரியாகத் தூங்க முடிய வில்லை.

அருகில் இருந்த ஓர் அதிகாரி, ''இந்தியா வில் பிரதமரை தேவிலால் தூங்க விட வில்லை... நமீபியாவில் நிகழ்ச்சிகள் தூங்க விடவில்லை...'' எனக் கூறவும் பிரதமர் உள்பட அனைவரும் சிரித்து விட்ட னர்.

— ராஜி ராதா.

---

''டெபாசிட்லே இப்ப இருக்கிற பணமே இருக்கட்டும் ரமணி சார். நீங்க இப்ப சொன்ன மூவாயிரத்துச் சொச்சம் எனக்குத் தேவைப்படும் போல இருக்கு.''

''அவ்வளவுக்கும் லாட்டரிச் சீட்டு வாங் கப் போறியா?''

''கேலி செய்யாதீங்க, ரமணி சார்.''

''அப்ப எதுக்குத் தேவைப்படும்னு சொல்லு.''

''உங்களுக்குப் பிடிக்காத சமாசார முங்க.''

''ஓ, கல்யாண விஷயமா?'' கேள்வி கேட்ட ரமணி, அப்போதுதான் உணர்ந்தான், மாலு ஏற்கெனவே எழுந்து போய்விட்டாள் என்று.

வாயால் பதில் சொல்லாமல் ரங்கன் தலையாட்டினான்.

ரமணி அவனை ஏறிட்டுப் பார்த்தான்.

ஐந்து அடி உயரமான குள்ள உருவம். வற்றலான, சதைப் பற்றே இல்லாத உடல். உடலமைப்புக்குச் சம்பந்தமில்லாத மண்டை. இன்னும் கொஞ்சமாவது சிறிதாக இருந்தி ருக்கலாம். முன் மண்டையில் ஏற்கெனவே பிறந்திருந்த பாலைவனம் இன்னும் அகல மாகி ஓர் ஆற்றுப் படுகை போலிருந்தது. இருபுறமும் இருந்த ரோமக் கொத்தை எண் ணெய் தடவிச் சீவியிருந்தான். நல்ல வேளை யாக, கல்யாணம் செய்து கொள்ள வேண் டும் என்ற ஆசைத் துடிப்பில் உள்ளவன் மீசை வைத்துக் கொள்ளவில்லை. அது வேறு இருந்தால் அகோரமாகக் காட்சி அளித் திருப்பான்.

''என்ன ரமணி சார், பேச மாட்டேங்க நீங்க?'' அவன் குரலில் அழுகையின் கண் ணீர் ஓடியது.

''நான் யதார்த்தமாப் பேசினால் உனக் குப் பிடிக்கிறதில்லே, ரங்கா. நீ வாழ்க்கை யிலே சந்தோஷப்படக் கூடாதுன்னு நான்

நினைக்கிறதா நீ தப்புக் கணக்குப் போடறே... நீ மனசுக்குள்ளே ஒரு முடிவு எடுத்துட்டே... அந்த முடிவு நல்ல முடிவுன்னு நான் சொல்லணும்னு நீ ஆசைப்படறே... ஆனா என்ன செய்யறது, ரங்கா... நீயும் நானும் இந்த நாலு வருஷமா ரொம்ப நெருங்கிப் பழகிட்டோம்... நீ என்னை மலையா நம்பி, உன் பணம், உடைமை, லாட்டரிச் சீட்டு எல்லாத்தையும் ஒப்படைக்கிறே... நான் வஞ்சகம் செய்ய மாட்டேன்னு! அப்படி ஒரு நம்பிக்கை. உன் நம்பிக்கை வீண்போகாதபடி நானும் ஆண்டவன் அருளாலே நடந்து வந்துட்டேன்... ஆன்டல் உண்மையான, ஆத்மார்த்தமான சிநேகிதன்னா, அவன் கொடுக்கிற புத்திமதியையும் ஏத்துக்கணும். ஆனால் கல்யாண விஷயத்திலே மட்டும் உன் மனசு என் மனசோடு உடன்பட மாட்டேங்குது.''

''ரமணி சார், நான் உங்களை மனுஷனாகவே மதிக்கலே... தெய்வமாக நினைக்கிறேன்.''

''ஆனா தெய்வத்தோட பேச்சையும் கேட்க மாட்டேங்கிறியே, ரங்கா?''

''ஒரு பொண்ணோட வாழணும்ங்கிற ஆசை எல்லாருக்கும் இயற்கையா வர்ற ஆசைதானே, ரமணி சார்?''

''இல்லேன்னு சொல்லலே... ஆனா உன் நிலையை நீயே நினைச்சுப் பாரு. சோனியா இருக்கே. மனசுலே மட்டும் தெம்பு இருந்தாப் போதுமா, ரங்கா? உடம்பிலேயும் இருக்கணும். நிறையச் செலவாகுதேன்னு நீ சாப்பாட்டுச் செல்வையே குறைச்சிருக்கே. நீ ஒரு ஓட்டல்லே அஞ்சு ரூபா கொடுத்து முழுசாச் சாப்பாடு சாப்பிட்டு நான் பார்த்தது இல்லே. தினசரி ரெண்டுரூபாய்க்கு ரெண்டு பொட்டலம் மோர்ச் சாதம் சாப்பிட்டால் உடம்பு எப்படித் தேறும்? ராத்திரி நாலு இட்லி தின்னுட்டுத் தண்ணியைக் குடிச்சுட்டுப் படுக்கிறே. உடம்பு என்னத்துக்கு ஆகும்? முட்டை, இறைச்சி, பால், காய்கறி இதெல்லாம் ஏன் சாப்பிடக் கூடாது? சாப்பிட மாட்டே! ஏன், பணம் செலவாகும்... பணத்தைச் சேர்த்துச் சேர்த்து என்ன சாதிக்கப் போறே, ரங்கா?''

''எல்லாம் ஒத்துக்கறேன், ரமணி சார்... கல்யாணமாயிட்டா என் பெண்டாட்டி சோறு ஆக்கிப் போடுவா. நிறைய பணியாரமெல்லாம் பண்ணுவா. என் உடம்பு கொழுகொழுன்னு ஆயிடும்.''

''நீ உன் மனசிலே போட்டோ பிடிச்சு எனக்குக் காட்டற பொண்ணு உனக்குக் கிடைக்கணுமே, ரங்கா! அப்படிப்பட்டவ எங்கே இருக்கா?''

''கிடைப்பா, ரமணி சார்.''

''உன் அஞ்சு அடி உசரத்துக்கு ஏத்தபடி அவ அமையணும். நீ ஒரு சாது. நல்லவன். ரெண்டு வார்த்தை அடிச்சுப் பேசத் தெரியாது. உனக்கு வர்றவ ராட்சசியா இருந்தால் உன்னைப் பந்தாடிடுவா!''

ரங்கன் பதில் சொல்லவில்லை. ரமணி சொல்லுவதெல்லாம் உண்மைதான். அவனுக்குச் சாதாரணமாகவே பெண்களைக் கண்டால் பயம்தான். அவன் இப்போது தன் மனத்துக்குள் மணமேடை கட்டி, அதில் உட்கார வைத்திருக்கும் தனம் என்னும் தனபாக்கியம் நல்ல பெண் மாதிரி தென்படுகிறாள். ஒருவேளை ராட்சசியாக மாறிவிடுவாளோ? இதுபற்றி அவன் தெரிந்து கொள்ள வேண்டும். ரமணிக்குப் பிடிக்காதது எதையும் அவன் இதுவரையில் செய்ததில்லை. முதன் முறையாக அவனை மீறிச் செயல்புரியப் போகிறான். நாளைக்கு ரமணி அவனைப் பார்த்து ஏளனமாகச் சிரிக்க மாட்டான்தான். ஆனால், 'அன்னிக்கே சொன்னேனே, ரங்கா, என் பேச்சைச் கேட்டியா?' என்று பரிவும் கனிவுமாகக் கேட்பானே? அப்போது என்ன பதிலை ரங்கனால் கூற முடியும்?

ரங்கன் மௌனமாய் வெளியேற, ரமணி ஓரிரு வினாடிகள் அவனுடைய தளர்ந்த நடையையே பார்த்தவண்ணம் உட்கார்ந்தான். இப்படிப்பட்ட ஒரு நல்ல, சாதுவான ஜீவன் இந்த உலகத்துக்கு அவசியம்தானா என்ற கேள்வி எழுந்தது.

திடீரென்று மாலு தன்னருகே நிற்பதை ரமணி உணர்ந்தான்.

''உட்கார், மாலு.''

''உட்கார்றது இருக்கட்டும். இப்ப எனக்கு ஒன்று தெரிஞ்சாகணும்'' என்றாள் மாலு.

''தினசரி கேட்கிற கேள்விதானே, மாலு. ரங்கன் ஆபீசுக்குள்ளே ரொம்ப வேண்டியவன். நீ என் வாழ்க்கைக்கே ரொம்ப வேண்டியவள். சரி, இப்ப சொல்லு, அது என்ன இரண்டாவது நியூஸ்? நான் கேட்க ரெடி!''

''நான் சொல்ல ரெடி இல்லே.''

''ஓகே. நான் காத்திருக்கேன். நான் கொக்கு மாதிரி. பொறுமையாகக் காத்திருப்பேன்!''

இவனிடம் தன் ஜம்பம் என்றுமே சாய்ந்ததில்லை என்று மாலுவுக்குத் தெரியும்.

''கேளுங்க ரமணி... ரெண்டாவது நியூஸ் நம்ப காதலையே பாதிக்கிறது. ஏன், நாம காதலுக்கே ஒரு முடிவு கட்ட வேண்டிய நிலை பிறந்துட்ட மாதிரி எனக்குத் தோன்றது.''

மாலு சிரிக்காமல், முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு பேசினாள்.

எதற்குமே அசையாத ரமணி கூட ஒரு சில வினாடிகள் ஆடிப் போனான்.

(தொடரும்)

உடைமையாக்குகிறார். ஏற்பதும் ஏற்காததும் நம் இஷ்டம்.

* **ஆர். ஸ்ரீதரன், கும்பகோணம்.**

**? மறைந்த மலையாள நடிகர் அடூர் பாஸி பற்றிச் சில வரிகள்?**

! சிறந்த நடிகர், சிறந்த துணை நடிகர், சிறந்த நகைச்சுவை நடிகர் என்று மூன்று விதமாகவும் பாராட்டுப் பெற்று மூன்று வகை விருதுகளும் வென்றவர் அவர் ஒருவராகத்தான் இருப்பார் என்று தோன்றுகிறது. நகைச்சுவையுடன் கூடவே சோகத்தையும் பிரதிபலிப்பதில் நமது நாகேஷ் மாதிரி பிரகாசித்தவர். நகைச்சுவை நடிப்பிலும் இலைமறை காயாக அமைந்த உயர்தர, அடக்கமான நடிப்பு; அப்பட்டமான அசட்டு ஹாஸ்யம்; இரட்டை அர்த்தம் தொனிக்கும் கீழ்த்தரமான நகைச்சுவை என்று எல்லாவற்றையும் ஏற்றுப் படிப்படியாக உயர்ந்து காட்டியவர்.

* **அ. ராஜா ரஹ்மான், திருப்பரங்குன்றம்.**

**? 'என்னுடைய டெலிஃபோன் பேச்சுக்களை இந்த அரசு ஒட்டுக் கேட்கிறது' என்று சந்திரசேகர் குற்றம் சுமத்தியிருக்கிறாரே?**

! அப்படிக் குற்றம் சுமத்தியவர் ஸி. பி. ஐ. அதிகாரிகள் விசாரணைக்கும் சோதனைக்கும் வந்தபோது ஒத்துழைத்திருந்தால் அவர் கூறுவதற்கு மதிப்பு இருக்கும். அல்லாத போது மீண்டும் ஒரு முறை நம் மதிப்பில் தாழ்ந்து போகிறார்.

* **எஸ். கணேசன், பாண்டிச்சேரி.**

**? சமீபத்தில் தங்கள் நெஞ்சை நெருடிய நிகழ்ச்சி?**

! தமிழக மீனவர்களை விடுதலைப் புலிகள் பிடித்துப் போய்க் காவலில் வைத்திருந்து, பிறகு விடுவித்ததுதான். விடுதலைப் புலிகளைப் பாம்பு என்று மிதிக்கவும் முடியாது, பழுதை என்று தாண்டவும் முடியாது என்பதை மீண்டும் ஒரு முறை நிரூபித்திருக்கிறார்கள்.



...விளம்பரத்தில



...வித்தியாசப



* இந்த வயதிலும்...

* **ரகுவீர், சென்னை.**

**? ஸாம்பிட்ரோடா என்னவாகப் போகிறார்?**

! அவரது ஸி. டாட் இலாக்காவின் செயல்பாடு பற்றி ஆராயப் புகுந்த கமிட்டி, இரண்டு விதமாகவும் கருத்துத் தெரிவித்துள்ளது. 'போதிய முன்னேற்றமில்லை' என்று ஒரு முடிவு இருந்தாலும், அதே அறிக்கையில் 'முன்னேற்றம் கணிசமாக இருக்கிறது' என்பதாக ஆட்சேபணைக் குறிப்பும் கமிட்டியில் உள்ள சிலரால் எழுதப்பட்டுள்ளது. எனவே அமைச்சர், பிட்ரோடாவுக்கு மீண்டும் காலக்கெடு நிர்ணயித்து, மேலும் ஒரு வாய்ப்புத் தருவது உசிதமாக இருக்கும். அமைச்சர் உன்னிகிருஷ்ணனுக்குப் பிட்ரோடா மீது உள்ள தனிப்பட்ட ஒரு விரோத உணர்வு, பிட்ரோடாவைக் கழற்றி விடுவதிலேயே குறியாகச் செயல்படக் கூடாது. பிட்ரோடா நாட்டுக்கு நல்லது செய்யவே மனப்பூர்வமாக எண்ணுகிறார் என்பதை அவர் சொல்லும் செயலும் உணர்த்துகின்றன.

* **கமலா, செங்கல்பட்டு.**

**? கல்கியில் முன்பு வெளியான ''ரவி சந்திரிகா'' இப்போது டீ. வி. யில் தொடர் நாடகமாக வருகிறதே, பார்க்கிறீர்களா?**

! டேக் ஆஃப் சரியாக இல்லை; லாண்டிங் ஸ்மூத்தாக இருக்கிறது! கடந்த இரு வாரப் பகுதிகள் மனநிறைவை அளித்தன. சோமுவின் கதை, திடீர் திருப்பங்கள், மர்மங்கள் எதுவுமின்றி அளவான உணர்ச்சிப் பிரதிபலிப்புடன் சலசலத்துச் செல்லும் இலக்கியச் சிற்றோடை. அந்தக் கதையில் வரும் பாத்திரங்களின் குணசித்திரங்களை நடிப்பிலே கொண்டு வருவது ரொம்பக் கஷ்டம். முடிந்த மட்டில் நடிகர்கள் மனப்பூர்வமாகச் செயல்பட்டிருக்கிறார்கள் என்றாலும், சங்கீதம் — நாட்டியம் இரண்டுமே பிரதானமான கதைக்கு ஏற்றவர்களாக அவர்களால் பிரகாசிக்க முடியாமலிருப்பது ஏமாற்றமே.

தகுதியான கௌரவம்







* இன்னொரு வாய்ப்பு

# அதிர்ஷ்ட தேவதை

### சென்ற வாரம்

கிருஷ்ண சாண்டில்யா அண்ட் பிரதர்ஸ் நிறுவனத்தின் அதிபர், ரமேஷ் சாண்டில்யா, பம்பாய் சென்றிருக்கிறான். அவன் இல்லாத வேளையில் ஆபீஸ் அரட்டையில் இறங்குகிறது.

ரமேஷின் நம்பிக்கைக்கும் பாத்திரமான ரமணி ஒரு மூத்த குமாஸ்தா. அவனும் மாலு என்கிற பெண்ணும் ஒருவரை ஒருவர் காதலிக்கிறார்கள். சுகந்தி என்னும் இருபத்தொன்பது வயது டைப்பிஸ்டும், 'நெய் தோசை' கிச்சா' எனும் குமாஸ்தாவும், வெங்கி என்னும் வெங்கிடாசலமும், ரங்கன் என்பவனும் மற்ற சிப்பந்திகள். ரங்கன் ஒரு சோனி. குள்ளம். பரம சாது. ரங்கனுக்கு ரமணிதான் எல்லாம். அவன் கல்யாணம் செய்து கொண்டு வாழ்க்கையில் ஈடுபட விரும்புகிறான். மாதம் தவறாமல் லாட்டரிச் சீட்டு வாங்கி வரும் அவனுடைய பழக்கத்தைக் கண்டிக்கும் ரமணி, அவன் மண வாழ்க்கையில் ஈடுபட வேண்டாம் என்று புத்தி கூறுகிறான்.

## 2

**மா**லு சிரித்தாள்.

''என்ன ரமணி, ஷாக் அடிச்சாப்ல உட்கார்ந்துட்டீங்க?''

''ஷாக் அடிச்சிருந்தா உட்கார்ந்தா இருப்பேன், மாலு? கீழே விழுந்திருப்பேனே?''

''ரெண்டாவது நியூஸைச் சொல்லட்டுமா?''

''உன் இஷ்டம்.''

''ஒருவழியா என் அக்கா கலியாணம் முடிவாயிடுச்சு. எனக்கு ரெயில்வே கேட்டைத் திறந்து விட்டாச்சு!''

''ரொம்ப சந்தோஷம். நானே வந்து உன் அக்காவைப் பார்த்து வாழ்த்துச் சொல்றேன்.''

''எல்லாம் கலியாணத்தன்னிக்குச் சொன்னாப் போதும்... என் அம்மாவுக்கு ஓர் ஆசை.''

''என்ன?''

''ரெண்டு பெண்களோட கலியாணமும் ஒரே நாள்லே ஒரே மணமேடையிலே நடக்கணும்னு.''

''ஒரே பிள்ளைக்கேவா?''

''ரமணி, விளையாடாதீங்க! நாம ரெண்டு வருஷமா இருபத்து நாலு மணி... காதலிச்சுட்டு வர்றோம்.''

''நீ நினைக்கிற மாதிரி நம்ப கலியாணம் அவ்வளவு எளிதா முடிஞ்சுடும்னு எனக்குத் தோணலே... தப் படலே!''

''ஏன் ரமணி?''

''என் வீட்டுக்கு வந்திருக்கே இல்லே...''

''ஒரே ஒரு தடவை!''

''அன்னிக்கு ஈசி சேர்லே ஒருவர் உட்கார்ந்திருந்தாரே அவர்தான் தாத்தா... போன நூற்றாண்டிலே பொறந்தவர். 1898... முழுசா இன்னொரு நூற்றாண்டையும் முடிச்சுட்டு அடுத்த நூற்றாண்டிலே போய்ச் சேரலாம்ங்கற சங்கல்பத்தோட இருக்கார்.''

''நம்ப் கலியாணத்துக்கும் உங்க தாத்தாவுக்கும் என்ன சம்பந்தம், ரமணி?''

''இருக்கு. நிறைய இருக்கு மாலு! எங்க வீடு பெரிய வீடுதான். தாத்தாவுக்கு முப்பது வயசு இருக்கறப்ப மயிலாப்பூர்லே கிரவுண்டு ஐநூறு அறுநூறுன்னு இருந்தது. பாட்டியோட மஞ்சக்காணி நிலத்தை வித்து நிலத்தை வாங்கி வீடும் கட்டினார். மராமத்து இலாகாவிலே ஓவர்சிரா இருந்தாரா, கட்டறது எளிதா இருந்தது. அஞ்சு கிரௌண்ட். அதிலே மூவாயிரம் சதுர அடிக்கு வீடு.''

''இதெல்லாம் எதுக்குச் சொல்றீங்க, ரமணி?''

''கொஞ்சம் பொறுமையாக் கேளு, மாலு... பாட்டி போய் வருஷம் பத்தாறது. அறுபத்தஞ்சு வயசுப் பெரியப்பா, பெரியம்மா, நாப்பத்தஞ்சு வயசுப் பிள்ளை, அவரோட மூணு பிள்ளைகள், அப்புறம் என்னோட அப்பா, அம்மா, அண்ணா, இன்னும் சித்தப்பா, அவரோட ரெண்டு பிள்ளைகள் எல்லாரும் இந்த மூவாயிரம் சதுர அடியிலே ஒடுங்கி இருக்கோம். கலியாணமாகாத ரெண்டு பெண்கள் வேறே உண்டு. இருக்கிறது ஒரு ஹால். கீழே மூணு ரூம். மாடியிலே மூணு ரூம். கீழே ஒரு ரூம்லே தாத்தா. அதுக்குள்ளே யாரும் அனாவசியமா பிரவேசிக்கவே படாது.

''எல்லாப் பிள்ளைகளும் அவங்க மனைவிமாரும், பேரன்களும் அவங்க பெண்டாட்டிகளும், அவருக்கு சிசுருஷை செய்தே ஆகணும்னு தாத்தா தீவிரமா இருக்கார். அவர் மனசுப்படி நடக்கலேன்னா வெளியே போயிடலாம்னு உறுதியாகவும் சொல்றார். ஆனா யாருக்கும் வெளியே போகப் பைத்தியம் பிடிக்கலே. தாத்தாவைத் தவிர, நாங்க பதினேழு பேர் இருக்கோம். அப்பா, பெரியப்பா, சித்தப்பா மூணு பேரும் அப்பா எப்ப உயில் எழுதுவார்,

பி.வி.ஆர்.

...ணையைப் போடுவானனு காத்திருக்காங்க! தினசரி வாசலலே நின்னு ... வர்றானான்னு பாத்திட்டிருக்காங்க."

"...ன?"

"அக்கம பக்கத்திலே ரெண்டு மூணு வீடு வித்துப் போச்சு. எங்க வீட்டை விடச் சின்ன வீடு. எல்லாம பன்னிரெண்டு லட்சம், பதினைஞ்சு லட்சமனு போச்சு. மூணு அடுக்கு. நாலு அடுக்குக் கட்டடமாக கட்டியிருக்காங்க. எங்க வீடு குறைஞ்சது இருபது இருபத்திரண்டு லட்சத்துக்காவது போகும்."

"அதாவது தலா குறைஞ்சது ஏழு லட்சமாவது கிடைக்கும்னு மூணு பிள்ளைகளும் ...டபறாங்க."

"ஆமாம். ஆனா இதிலே ஒரு சிக்கல்."

"என்ன?"

"அம்மாவோட மஞ்சக்காணியை வித்ததுக்கு இப்ப ஆதாரம் தேட முடியாது. தாத்தா சொந்த சம்பாத்தியத்திலேர்ந்து கட்டினார்ங்கறதுக்கு ஆதாரம் இருக்கு. அதனாலே அவர் இஷ்டம் போல வீட்டை யார் பேருக்கு வேணுமனாலும எழுதி வைக்கலாம்."

"அப்படீன்னா?"

"எனக்கு மூணு அத்தைகள். மூணு பேரும் வாரா வாரம தாததாவுககு என னென்ன பிடிக்குமோ அதையெல்லாம் பண்ணி எடுத்துட்டு வருவா. அவருடைய கால்களைப் பிடிச்சு விடுவா. பாட்டியோட மலரும் நினைவுகளை அள்ளித் தெளிப்பா... தாத்தா மூணு பெண்களையும் உயில்லே மறக்கமா எழுதுவார்னு எல்லாருக்குப் பயம்."

"இது உங்க வீட்டு விவகாரம், ரமணி. எனக்கு இதிலே அக்கறை இல்லே. எனக்கு வேண்டியது நீங்கதான். நீங்க மட்டும்தான்."

"நீ ஒண்ணைப் புரிஞ்சுக்கலே, மாலு."

"என்ன அது?"

"நமக்குக் கலியாணம் ஆனா நமக்குன்னு ஒரு ரூம் வேண்டாமா? அது கூட இப்ப இல்லே."

"கலியாணமானப்புறம் நான் பத்தொன் பதாவது பேர்வழியாக் குடிவந்து அங்கே



குப்பை கொட்டுவேன்னு எதிர்பார்க்கறீங்களா, ரமணி?''

''நான் என் வீட்டையும் அப்பா அம்மாவையும் உதறி எறிஞ்சுட்டு நீ கை காட்டற திசையில் ஓடி வந்துடுவேன்னு நீ எதிர்பார்க்கிறியா மாலு?''

''தனிக்குடித்தனத்திலே என்ன தப்பு?''

''நான் என் மனசில ஒரு பெரிய திட்டம் தீட்டி வைச்சிருக்கேன். அது வெற்றியா முடியணும்னா, நான் தாத்தா வீட்லேயே இருந்தாகணும்.''

''என்ன திட்டம்?''

''சித்தப்பா ஒரு ரெண்டுங்கெட்டான். தாடியோட எந்தக் காவி போனாலும் பின்னாலே போயிடும். அதைத் திருப்பி இழுத்துட்டு வர்றதுக்குள்ளே சித்திக்கு உசிர் போய் உசிர் திரும்பி வந்துடும். வயசு அறுபது ஆச்சு. இன்னும் விவேகம் வரலே. பெரியப்பாவுக்கு வயசு அறுபத்தஞ்சு. ஒரு அட்டாக் வந்தாச்சு. இன்னொரு அட்டாக் வந்தா, தாத்தாவுக்கு முன்னாடி போயிடுவார். அவரோட ரெண்டு பிள்ளைகள்ளே ஒருத்தன் ஸ்டேட்ஸ்லே இருக்கான். இன்னொருத்தன் வீட்லே இருக்கான். ஆனா ஒட்டாம. அப்புறம் என் அப்பா. அவர் நான் வரைஞ்ச கோட்டைத் தாண்ட மாட்டார்.''

''உங்க திட்டம்தான் என்ன?''

''பிதாமகர் — அதுதான் தாத்தா ஒரு நாள் கண்ணை மூடித்தான் ஆகணும். அப்புறம்? யாருக்கும் வீடு வேண்டாம்! பணம்தான் வேணும்! அதை நான் எப்படியாவது ஏற்பாடு செய்து அவங்களைக் கழட்டி எறிஞ்சுடுவேன். இந்த வீட்டை இடிச்சுத் தள்ளுவேன். அப்புறம் என்ன? அஞ்சு கிரௌண்ட் நிலத்திலே குறைஞ்சது முப்பது ஃப்ளாட் கட்டலாம். மயிலாப்பூர்லே நிலத்தோட விலை ஏறிட்டே போறது. இந்த இடத்திலே சதுர அடி மூந்நூறு ரூபாய்னாலும் க்யூவிலே மனுஷா வந்து நிப்பா!''

''நம்ப காதல் முடிஞ்சுட்டுதுன்னு வைச்சுக்கலாமா, ரமணி?''

''ஏன் இப்படிப் பேசறே, மாலு?''

''காதலுக்கு இளமைதான் இருக்கலாம். மூப்பும் கிழட்டுத்தனமும் வர்ற அளவுக்குத் தொடரக் கூடாது ரமணி. என் அக்கா கலியாணம் முடிஞ்சு ஆறு மாசத்துக்குள்ளே நீங்க என் கழுத்திலே தாலியைக் கட்டியாகணும். உங்க வீட்லே நமக்குத் தனியா ஒரு பெட் ரூம் இல்லேன்னா, கிடைக்கிற இடத்தை பெட்ரூமா மாத்திப்போம்! அதுக்கு அப்புறம், நீங்க உங்க திட்டத்தை எப்படி வேணும்னாலும் தீட்டிக்குங்க, நிறைவேத்திக்குங்க!''

''யோசிக்கிறேன், யோசிக்கிறேன்! ஒரு வழி கிடைக்காமலா போயிடும்?'' என்றான் ரமணி.

மாலு கோபமாய்த் தன் இருக்கைக்கு சென்றாள்.

ரங்கன் சோர்ந்து போனான்.

ரமணி அவனைக் கடிந்து பேசவில்லை. ரங்கன் மீது எரிச்சல் கொள்ளவில்லை.

தன்னுடைய கண்ணோட்டத்தில் ரங்கனுடைய வாழ்க்கையை அலசிப் பார்த்து, அதன் யதார்த்தத்தில் புத்திமதி சொல்லுகிறான். என்ன செய்ய?

பழைய நாட்கள் கண்முன் நின்றன.

வானத்தில் பறந்து கொண்டிருக்கும் இரு பறவைகள் திடீரென்று சந்தித்துக் கொள்ளுவது போல அவனும் ரமணியும் நான்கு ஆண்டுகளுக்கு முன் சந்தித்துக் கொண்டார்கள். ஆனால் பறவைகளைப் போல அவர்கள் உடனடியாகப் பிரிந்து விடவில்லை. ஏதோ ஒரு சக்தி ஒருவரையொருவர் ஈர்த்து ஒட்ட வைத்தது.

''ஏம்ப்பா நீ யாரு... எங்கேயிருந்து வர்றே?''

''கும்பகோணம். அங்கேயிருந்து வர்றேன்.''

''பட்டணத்திலே பிழைப்புத் தேடவா?'' என்று கேட்டான் ரமணி.

''ஆமாம் ஐயா... அண்ணனும் அண்ணியும் துரத்திட்டாங்க!''.

''ஏன் ஏதானும் திருடிட்டியா?''

''ஐயய்யோ... திருட்டா? நானா? ஐயா நீங்க என்னைத் தப்பாப் புரிஞ்சுட்டிருக்கீங்க... நான் அண்ணனுக்கு ஒரு சுமையாம். எனக்கு தம்பி ஒருத்தன் இருக்கான். அவன்தான் அண்ணியுடைய அஞ்சு சவரன் சங்கிலியைத் திருடிட்டு ஓடிட்டான். நான் அப்படியில்லீங்க!''

''பிழைப்புத் தேடிட்டு வந்திருக்கியே, உன்னாலே எந்த வேலை செய்ய முடியும்? வாயாலே ஊதினாக் காத்துலே பறந்து கும்பகோணத்திலேயே போய் விழுவே போலிருக்கு. உனக்கு யார் என்ன வேலை கொடுப்பாங்க?''

ரங்கனால் அழத்தான் முடிந்தது.

''உன்னைப் பார்த்தா சாதுவாப் படறது. பாவமாகவும் இருக்கு.. ஆமாம், எது வரையில் படிச்சிருக்கே?''

''எட்டாங்கிளாஸ் பெயிலுங்க.''

''சாப்பிட்டியா?''

''உம்.''

''என்ன?''

''ரெண்டு பன். ஒரு டீ.''

''கையிலே காசு இருக்கா?''

''ஒரு ரூபாயும் சில்லறையும்.''

''ஒண்ணு செய்.''

''என்னங்க?''

''இப்ப என் வீட்டுக்கு வா. அங்கே என் தாத்தா இருக்கார். அவருக்கு வயசு தொண்ணூறுக்கு மேலாறது. அவர் அறையைச் சுத்தம் பண்ணி, அவருக்கு வேண்டியதைச் செய்.., அவரோட வேட்டி துணிகளைத் தினசரி தோய்ச்சு வை.''

''சரிங்க.''

''எங்க வீட்லே நிறையப் பேர் இருக்காங்க... ஆளுக்கு ஒரு வேலை சொல்லுவாங்க.''
''செய்யறேன்.''
''ஆனா யாரும் சம்பளம் கொடுக்க மாட்டாங்க.''
''ஐயா!''
''பயப்படாதே... ரெண்டு வேளை சாப்பாடு, காப்பி, பலகாரம் எல்லாம் கிடைக்கும். அது சரி உனக்கு என்ன பழக்கமெல்லாம் உண்டு?''
''என்ன சொல்றீங்க, ஐயா?''
''பிடி சிகரெட்? பட்டை... கள்ளு.''
''கிடையாதுங்க.''
''ஏம்பா ஒரு கெட்ட பழக்கமும் இல்லேன்னா எப்படி ஜாலியா வாழ்வே? நீ பொறந்ததே தப்பு!''
ரங்கன் பதில் சொல்லவில்லை.
''ஆமாம் அது என்ன உன் பாக்கட்லே, மஞ்சளாத் தெரியுது.''
''லாட்டரி டிக்கட்டுங்க. ஒரு ரூபா டிக்கெட்.''
''ஓ, இந்த டிக்கட்டை வைச்சுட்டு லட்சாதிபதியா ஆயிடலாம்னு சொப்பனமா? அது சரி, இது பழக்கமா?''
''ரெண்டு மூணு வருஷமா வாங்கிட்டு வரேனுங்க.''
''பணம்?''
''மேட்டுத் தெருவிலே ஒரு ஒட்டல்லே மேஜையைத் தொடச்சுட்டிருந்தேன். மாசம் பத்து ரூபா சம்பளம். சாப்பாடும் போடு வாங்க. அப்ப ஏற்பட்ட பழக்கம்.''
''எனக்குத் தெரியும், மனுஷன்னு பொறந்தா ஒரு கெட்ட பழக்கமாவது இருந்தாகணும்னு. சரி, வா என் கூட!''
ரமணியின் வீட்டில் மூன்று மாதங்கள். ஆளுக்கு ஆள் அவனை உலுக்கி எடுத்தார்கள்.
ஒரு நாள் —
ரமணி, ''நாளைக்கு என் கூட ஆபீசுக்கு வா'' என்றான்.
ரங்கன் போனான்.
ரமேஷ் சாண்டில்யா, ரமணியின் வேண்டுகோளை உடனடியாக ஏற்றுக் கொண்டான். ப்யூன் வேலை. நூறு ரூபாய் சம்பளம்.
அன்று முதல் ரமணி தான் ரங்கனுடைய தெய்வம். ஆதர்ச புருஷன் வழிகாட்டி.

இப்போது ரங்கனால் ரமணியின் சொல்லை மீறி நடக்கவும் முடியவில்லை. அதே சமயம் தன் ஆசையை அடக்கிக் கொள்ளவும் முடியவில்லை. சமீப காலமாக, வாட்ச்மேன் மயில்சாமி மிகவும் நெருங்கிப் பழகுகிறான். பெற்ற பிள்ளை மீது இருக்கக்கூடிய பாசத்தையும் பரிவையும் காட்டுகிறான். ஏற்கெனவே மூன்று நான்கு தடவைகள் அவனுடைய வீட்டுக்கு



எம். எல். ஏ.: வறட்சி நிவாரணத் திட்டத்தின் கீழ் என் தொகுதியில் ஒரு சோடா ஃபேக்டரி ஏற்படுத்தித் தருமாறு மாண்புமிகு அமைச்சரைக் கேட்டுக் கொள்கிறேன்!''

— கடுவை. கோபால்சாமி.

ரங்கன் போயாகி விட்டது. தனத்தைப் பார்த்தாகி விட்டது. அவளுடைய இளமை அவனைப் படாதபாடு படுத்தியது. அவளுடைய கண்கள் சிரித்துப் பேசுவது போன்ற பிரமையை ஏற்படுத்தியது. ஒரு தாயில்லாப் பெண்ணுக்கு வாழ்வு அளிக்க வேண்டியது அவனுடைய கடமை என்று மயில்சாமி அவனிடம் மன்றாடியிருக்கிறான். தனத்தைப் பார்த்தாலே பாவமாக இருக்கிறது. குடித்துக் குடித்துத் தன்னையே சீரழித்துக் கொண்டு வரும் மயில்சாமி திடீரென்று கண்ணை மூடி விட்டால்? அப்புறம், தனபாக்கியத்தின் கதி என்னாகும்? ஊரிலே இருக்கிற அயோக்கியர்களும் ரௌடிகளும் ஓநாய்களாக அவளைச் சீரழித்து விடுவார்களே!
திடீரென்று ரங்கனுடைய மனத்தில் ஒரு உறுதி பிறந்தது. ஆனால் மறு கணமே ரமணி உறுதியைக் குலைப்பது போலப் பட்டது.
''ரங்கா!''
ஏறிட்டுப் பார்த்தான்.
''ரமணி சார்! நீங்களா?''
''என்ன அசைபோட்டுட்டிருக்கே?''
''ஒண்ணுமில்லே ரமணி சார்!''
''அப்ப உனக்கு புத்திசுவாதீனம் இல்லேன்னு அர்த்தம்!''
''ரமணி சார்!''
''எனக்கு எல்லாம் தெரியும், ரங்கா! மயில்சாமி நல்லவன் இல்லே. அவன் பொண் தனமும் உனக்கு ஏத்தவ இல்லே... அவளை இந்த நிமிஷத்திலேந்து மறந்துடு. நீ கலியாணம் பண்ணிக்கவே வேண்டாம்.''
''ரமணி சார், ஏன் சார் இப்படி ஒரு தண்டனையை எனக்குக் கொடுக்கறீங்க?''
''அழுகையை நிறுத்து. பிளாஸ்க்கை எடுத்துட்டுப் போ. ஸ்ட்ராங்கா ரெண்டு கப் காப்பி!''
ரங்கன் மௌனமாய் நகர்ந்தான்.

(தொடரும்)

"எதுக்கு சீட்டுக் குலுக்கிப் போடறீங்க சார்?"

"பில்லுக்கு யார் பணம் குடுக்கறதுன்னு பார்க்கிறோம்பா!"

"அப்படியே டிப்ஸுக்கு யார் பணம் தர்றதுன்னும் பாத்துடுங்க சார்!"

— ஞா. ஞானமுத்து.





"பெண் பார்க்கப் போன இடத்தில் பையன் அல்பமா நடந்துக்கிட்டான், ஸார்..."

"எப்படி...?"

"பெண் உள்ளே போனதும், 'ஒன்ஸ் மோர்'னு கத்திட்டான்!"

— ஆர். வசந்தகுமார்.



"வர வர எதெதுக்குத்தான் போலீஸ் பாதுகாப்புக் கேட்கிறதுன்னு ஒரு வரை முறையே இல்லாமல் போச்சு..."

"ஏன் அப்படிச் சொல்றீங்க?"

"பேங்க்ல கொள்ளையடிக்கப் போறோம், பாதுகாப்புத் தர முடியுமான்னு ஒருத்தன் கேட்கிறானே?!"

— வி. ரேவதி.



மகாராஷ்டிர சட்டமன்றத் தலைவர் மதுகர்ராவ் சௌத்திரி 19 ஆண்டுகளுக்குப் பின் அங்கு காந்தி குல்லாயைக் காண வைக்கிறார்! இந்தக் குல்லாய் இல்லாமல் அவர் சட்டசபைக்கு வருவதே இல்லை! முதல் மந்திரி பவாரும் காந்தி குல்லாய் அணிவதுண்டு. ஆனால் குடியரசு தினம், சுதந்திர தினம் என்று ஆண்டுக்கு இருமுறை மட்டும்தான்!

ஆதாரம்: 'இந்தியன் எக்ஸ்பிரஸ்'
— தகவல்: ராஜீவி நரசிம்மன்.

"கதை சரியில்லைன்னா பிரசுரம் செய்யாம இருந்திருக்கலாமே, அதை விட்டுட்டுக் கதைக்குக் கீழே என் முழு முகவரியையும் வெளியிட்டு இப்படிப் பழி வாங்கிட்டீங்களே, சார்!"

— நீடாமங்கலம் ஜே. பி.



# வளமை

சட்சட்சட்சட்சட்சட்... ட்ரிச்சிக்...
சட்சட்சட்சட்சட் —

''விமலாம்மா... ஏ.ஓ. கூப்புடுராங்க...''

ஜரூராய்த் தட்டிக் கொண்டிருந்த டைப்பிங் நின்றது. சாவதானமாய் இடுப்பு முறித்து எழுந்தாள் விமலா.

மும்முரமாய் இயங்கிக் கொண்டிருந்தது செக்ஷன். மார்ச் மாசமென்றாலே பிட்டி நகன்று விடுகிறது எல்லோருக்கும். எல்லா கணக்கு வழக்குகளையும் பட்டியல் போட்டு, சரி பண்ணி மினிஸ்ட்ரிக்கு அனுப்பியாக வேண்டிய மாசம். சீஃப் அக்கவுண்ட்ஸ் ஆபீசர் தந்திருந்த நாலு பக்க ட்ராஃப்ட்களை ஒரே மூச்சில் அடித்து முடிக்க எத்தனித்திருக்க, இப்போது மூன்று பக்கங்களே முடிந்திருந்த ஆதங்கமிருந்தது விமலாவுக்கு.

பிசிறலாய்ப் பியூனிடம் கேட்டாள்: ''எதுக்கு ராஜா கூப்புடுறாரு?''

அவளது மேஜை பக்கத்து ஸ்டூலில்தான் ராஜாவின் இருக்கை. ஆபீசர் அடிக்கும் 'பெல்'களுக்கும் செக்ஷனிலுள்ளவர்கள் பணிக்கும் வேலைகளுக்கும் தயார்ப்படுத்திக் கொள்ள தோதான இடம். ஒழிந்த நேரங்களில் விமலாவோடு அரட்டையடித்தும் கொள்ளலாம்.

நமுட்டுச் சிரிப்பாய் உதட்டைப் பிதுக்கிக் கொண்டான் ராஜா. ''எனக்கு எப்படித் தெரியும்? அவுங்க அவுங்களுக்குள்ள ஆயிரம் விஷயமிருக்கும்!''

பரிகாசமான வார்த்தைகள். விமலாவுக்கு அதிலொன்றும் விகற்பமில்லை. அவன் பேச்சே இப்படித்தான். அதிலும் விமலாவென்றால் அதிக அந்நியோன்யமும் அதிக உரிமையும் பேச்சுக்களில் வடியும்.

''போயிட்டு வந்து பேசிக்கிடுறேன்...'' செல்லமாய்க் கடிந்து கொண்டு இடம் பெயர்ந்தாள் விமலா.

ஏ.ஓ.வின் அறைக் கதவு திறந்து உள்ளே நுழைந்தாள்.

''குட்மார்னிங் சார்...''

''குட்மார்னிங் குட்மார்னிங்... டேக் யுவர் சீட்...'' வாயெல்லாம் பல்லாக ஓர் அசாதாரணப் பார்வையுடன் வரவேற்றார் ஏ. ஓ. கண்ணாடி பளபளத்த லேமினேட்டட் டேபிளுக்கு மேல் கைநீட்டி ஸ்டீல் சேரைக் காட்டினார்.

அன்னமாய் நகர்ந்து வந்து, பவ்யமாய் சேரில் அமர்ந்து கொண்டாள் விமலா. மனசுக்குள் ஆதாரமற்றத் திணறல். இலக்கின்றிக் கவிழ்ந்து கொண்டன விழிகள். உச்சப் புள்ளியில் ஃபேன் சுற்றுகிறது போல 'விண்'ணென்ற இரைச்சல் மட்டுமே தீர்க்கமாய் ஒலித்துக் கொண்டிருந்தது. படிய வாரியிருந்த கேசம் கலைந்து இழை பிரிந்து அவளை உறுத்தியது. விரல் பதித்து அழுத்தி ஒழுங்குபடுத்திக் கொண்டாள். கும்ம்ம்மென்று அமுக்கிய பிரத்யேக வாசனை. மனிதர் இன்டிமேட்டில் வந்திருப்பாரென்றே தீர்மானித்துக் கொண்டாள் விமலா.

வெளிர்நீல சஃபாரியில் இருந்தார். வயசுக்கு மீறிய ஒப்பனை! வயசை மறைத்துக் கொள்வதில் இவருக்கேன் இத்தனைப் பிரயத்தனம் என்றிருந்தது விமலாவுக்கு. அவருக்கு எட்டாங்கிளாஸ் படித்துக் கொண்டிருந்த பெரிய பிள்ளை இருந்தது அவளுக்குத் தெரிந்திருந்தது. அவளின் ஜாகைக்குப் பக்கத்தில்தான் அந்தப் பள்ளிக்கூடம் இருந்தது. அவனையடுத்து இரண்டு இரண்டு இரண்டு வயசு வித்தியாசங்களில் இரண்டு பெண் குட்டிகள். இவ்வளவு வாழ்க்கை வாழ்ந்த பிறகுமா இத்தனை அலங்காரமென்று யோசித்தாள். அந்தந்த வயசுக்கு அதுக்கேற்ற அலங்காரமே நாகரிகமானது. திடீரென அவளின் மனசுக்குள் சமாதானக் கொடி உயர்ந்தது. அலங்காரத்திலென்ன இருக்கிறது... எல்லாம் மனசில் தானே இருக்கிறது. மனசில்தானே மனிதர்கள் இருக்கிறார்கள். மனசில்தானே வாழ்க்கை இருக்கிறது.

''சார் டிக்டேஷன் ஏதாவது...''

விமலாவுக்கு அவசரமிருந்தது. ட்ராஃப்டில் இன்னும் ஒரு பக்கம் 'டைப்' அடிக்க வேண்டியிருந்தது ஞாபகத்தில் வந்து உறுத்தியது. இருபத்தைந்து பேர் நிறைந்திருந்த அந்த செக்ஷனில் அவள் ஒருத்தியே டைப்பிஸ்ட்டாய் இருந்ததன் சுமை அழுத்தியது.

வெடிச் சிரிப்பாய்ச் சிரித்தார் ஏ.ஓ. ''டிக்டேஷனுக்கில்ல உன்னைக் கூப்பிட்டது... உனக்குப் பிரசன்ட் தர...''

''பிரசன்ட்டா? எனக்கா? எதுக்கு சார்? எனக்கொண்ணும் புரியலை நீங்க சொல்றது.''

''சொன்னா புரியாது. கண்ணை மூடிக்க.. ஆச்சரியப்படுவே...''

கண்ணை மூடாமலே ஆச்சரியப்பட்டாள் விமலா. என்ன பூடகம் வைக்கிறார்? சங்கோஜமாகவும், சங்கடமாகவும் இருந்தது அவளுக்கு. மறுத்து ஒதுக்கவும் தைரியமில்லை.

சாவதானமாய்க் கண்களை மூடிக் கொண்டாள். இருட்டுக் குகைக்குள் மின்னல் மின்னலாய் ஒளிப் பாம்புகள் படமெடுத்தன. நிசப்தம். மயான நிசப்தம்.

அந்த நிசப்தத்தை நிர்மூலமாக்கி பேப்பரின்

**அபிமானி**

கப்-போர்டைச் சன்னமாய்த் திறக்கும் ஓசை செவிகளைத் தீண்டியது 'என்ன... என்ன எடுக்கிறார்?'

"இப்பத் திற..."

திறந்தாள். இறுக்கமாய் மூடிக் கொண்ட தன் வலி உறுத்தியது விழிகளை.

"ஹேப்பி பர்த்டே டு யூ."

தீப்பெட்டி அளவில் மஞ்சள் நிறப் பெட்டியைத் திறந்து காண்பித்தார். ஊதாநிற வெல்வெட் துணிக்கு மத்தியில் அவரைப் போலவே பல்லிளித்து மின்னிற்று, தங்கமோதிரம் ஒன்று.

விமலாவுக்குப் 'பகீர்' என்றது. பின்னே? அவளுடைய பிறந்த நாள் அவளுக்கே பிரதானமில்லாத போது அவருக்கென்ன அதில் அக்கறை வந்தது? சுய பரிசீலனையில் அவளின் மனசு இம்சைப் பட்டது. அஞ்சாறு ஜீவன்களுக்கு ஒரே நிவாரணமாய் அவளின் வருமானம். நரகத்தின் படிகளாய் அவளின் நாட்கள். விபத்தொன்றில் காலிழந்து 'பாலம்மாள் டிரான்ஸ்போர்ட் கம்பெனி'யின் டிரைவர் உத்தியோகம் உயிரிழக்க, முடமாய் வீட்டில் கிடந்தார் அப்பா. அடுப்படிக்கு மட்டுமே நடக்கத் தெரிந்த அம்மா. கல்லூரியில் காசைக் கரைக்கும் தம்பி. ப்ளஸ் டூவோடு நின்றுபோய் வீட்டில் அம்மாவுக்குப் பேன் பார்க்க மட்டுமே தெரிந்திருந்த தங்கை. வீட்டின் மூத்த குழந்தை என்ற அங்கீகாரத்துடன் அவளின் வயசு அங்கீகாரமில்லாமல் மூப்படைந்து கொண்டிருந்தது. அவர்களின் வாழ்க்கை தளிர்விட்டுக் கிளை விட இவளின் வாழ்நாட்கள் உரமாகிப் போயின. யாருக்கு இஷ்டமிருக்கிறது, அவளின் எதிர்காலத்தைச் சிலாகிக்க? விமலாவும் இஷ்டப்படவில்லை. மூன்றாவது மனிதர் இவருக்கென்ன இந்த அக்கறை...?

"என்ன சார் இது?" அதிர்வாய் எழுந்து நின்றாள் விமலா. அமிலம் சிந்திய பார்வை.

"உனக்குத்தாம்மா... மோதிரம்... நாலரை கிராம்... வாங்கிக்க..."

சர்க்கரை தடவிய வார்த்தைகள். அதில் மொய்க்கும் ஈக்களைப் போல விரசம். விமலாவுக்கு உக்கிரம் பொங்கி நுரைவிட்டது. எதற்காக இந்த மனிதர் அடி போடுகிறாரென்பது உள்ளூரப் புரிந்தது. மனிதரா இவர்? ஓர் ஆபீசர் என்ற கௌரவமான கோட்டையைத் தாண்டிக் கீழிறங்கி, ஒரு டைப்பிஸ்ட்டிடம் கீழ்த்தரமாய்



நடந்து கொள்ள யத்தனிக்கும் இவர் மனிதரா?

''என்ன மிஸ்டர் பாலு... கேன்டீன் போகலாமா? ஆர் யூ ரெடி?'' அகஸ்மாத்தாய் சூப்பிரண்டென்ட் தண்டபாணி உள்ளே வந்தார். கோடி கும்பிடுகள் அவருக்கு! விமலாவைப் பார்த்ததும் சம்பிரதாயப் புன்னகை வீசினார்.

அசடு வழிந்தது ஏ ஓவின் முகத்தில். படபடவென்று பெட்டியைக் கைக்குள் மூடிக் கொண்டு உள்ளே இழுத்துக் கொண்டார்.

''நான் அப்புறமா கூப்பிடறேன்,'' என்று விமலாவைப் பார்த்து வழுக்கினார். ஆளை விட்டால் போதுமடா சாமியென்று பெருமூச்சுடன் வெளிவந்தாள் விமலா.

இலைமறை காயாய் இருந்த சந்தேகங்கள் இப்போது அழுகிப் போய்ச் சந்திக்கு வந்ததாய்த் தீர்மானித்துக் கொண்டாள் விமலா. ஆரம்பத்திலே இந்த அக்கவுண்ட்ஸ் ஆபீசரின் அணுகுமுறை அவளிடம் வித்தியாசமாகவும் விகற்பமாகவும் இருந்திருந்ததை இப்போது ஞாபகப்படுத்திச் சீர்தூக்கிப் பார்த்துக் கொண்டாள். அநேகக் காலைகளில் அவராகவே வலிய வந்து 'குட்மார்னிங் விமலா' போட்டதும்... மதிய வேளைகளில் அவளின் சம்படம் எடுத்துத் திறந்து, 'இன்னிக்கு என்ன ஸ்பெஷலோ...' என்று பல்லிளித்ததும்... அவைகூட விமலாவை அவ்வளவாகக் கலவரப்படுத்தி இருக்கவில்லை. சகஜமாய்ப் பழகும் அநேக சகாக்கள் செய்கிற லூட்டிகள்தான். அதற்கும் மேலாகப் பல படிகள் ஏறியிருந்தார் சில பொழுதுகளில்.

என்ன மனிதர் இவர்? ஏன் இவருக்கு இந்த அல்ப புத்தி? கரைகள் தெரியாத ஆழ் கடலில் விமலா.

— பதவி, வயசென்று பாகுபாடில்லாமல் எல்லோரிடமும் சகஜமாக வாயடித்துப் பழகிக் கொண்டிருந்தாளே, அதனாலா அவர் அப்படி...?'

— அல்லது இந்த ஆபீஸ் பியூன் ராஜாவோடும் அவனின் குடும்பத்தோடும் சௌஜன்யமாய் அவள் பழகிக் கொண்டிருந்தது எல்லோருக்கும் போல் அவருக்கும் தெரிந்திருக்க, 'பியூனிடமே அப்படி... ஒரு ஆபீசருடன் ஏன் கூடாது?' என்று தப்புக் கணக்குப் போட்டிருப்பாரா? வேதனையில் கரைந்திருந்தாள் விமலா. ராஜாவும் தானும் அப்படியல்லவென்று மனசுக்குள்ளே சாட்சி சொன்னாள்.

அது ஓர் அகஸ்மாத்தில் தொடங்கியிருந்த பழக்கம். ஆழமாய் வேரூன்றியிருந்தது. ஆபீசர் அறைக்கு அண்மையில் விமலாவின் சீட் இருந்ததால் ஒழிந்த நேரங்களில் அவளோடே சம்பாஷித்துக் கொண்டிருக்கும் சந்தர்ப்பம் கிடைத்திருந்தது ராஜாவுக்கு. சம்பாஷணை கொஞ்ச நாட்களில் அரட்டையாய்த் திரிந்திருந்தது. அரட்டை மாறி அன்பாய்க் குசலம் விசாரிப்பது வழக்கமாயிற்று. பக்கத்துப் பக்கத்துத் தெருக்களில் ஜாகைகள் இருந்ததால் அந்நியோன்னியம் கிடைத்தது. ஒருவர் வீட்டுக்கு ஒருவர் வீட்டார்கள் போய்விட்டு வருமளவுக்கு அன்பு உறுதியாகி இருந்தது. பியூன், டைப்பிஸ்ட் பதவிகளை மீறி, நல்ல சிநேகிதர்களாய்த் தேறியிருந்தார்கள். எந்தச் சந்தர்ப்பங்களிலும் வார்த்தைகளில்கூட எல்லை மீறல் இருந்ததில்லை. அப்படியே அவன் அரசல்புரசலாய் மீறினாலும் விமலாவின் கண் வீச்சில் ஸ்தானம் திரும்பிவிடுவான். அவர்கள் சில நேரங்களில் சூழ்நிலை மறந்து சிரித்திருக்கிறார்கள். சக ஊழியர்களின் சந்தேகப் பார்வைக்கு இலக்காகியிருக்கிறார்கள். ஆயினும் விமலாவுக்கு என்ன...! அவள் மனசில் களங்கம் இருந்ததில்லை. அதனால் அவை பற்றிக் கவலையும் இருந்ததில்லை. ஆயினும் அந்த ஏ.ஓ.வைப் பற்றி நினைக்க நினைக்க....

டீ டைமாக இருந்ததால் செக்ஷனில் கூட்டமில்லை. ஒற்றைக்கால் கொக்கு போல விமலாவின் சீட்டருகே ஸ்டூலில் ராஜா.

தளர்வாய் சேரில் வந்து அமர்ந்து கொண்டாள் விமலா. இறுக்கமான சூழல். பேப்பர் வெயிட்டை எடுத்துத் தூர வைத்துவிட்டு 'டைப்' அடித்திருந்த பிரதியை எடுத்துக் கொண்டு பார்வையிட்டாள். எண்ணெயில் ஒட்டாத நீராய் மனசு அல்லாடியது. அவளையே வெறித்திருந்தான் ராஜா...

''என்ன விசயம்... உம்முன்னு இருக்கிற மாதிரித் தோணுது...?'' என்றான்.

அவனிடம் சொல்லலாமா, வேண்டாமாவென்று குழப்பமாகியிருந்தது விமலாவுக்கு. சொல்லி விட்டால் அதையே ஆதர்சமாக்கிப் பரிகாசப்படுத்தலாம் அவளை. வேடிக்கை விஷமமாகக் காற்றில் பரவும்.

நீரோட்டமாய் ஓடிக் கொண்டிருந்த விமலாவின் சிந்தனையில் பிரளயமாய்த் தடையொன்று விழுந்தது. மற்றவர்களைப் போலவா ராஜாவுமென்று உளி செதுக்கிற்று.

சுருதிப் பிசகலாய் விமலா சொன்னாள்: ''ஒரு பொம்பளைன்னா பொன்னுக்கும்



சமீபத்தில் நண்பர் ஒருவர் வீட்டிற்குச் சென்றிருந்தேன். ''ஏலே, 'மரணம்' இங்கே வாடா!'' என்றழைத்தார் நண்பர். எனக்கு 'பக்' என்றது. ஒரு சின்னப் பையன் வந்தான். நண்பரின் உறவுப் பையன். அவன் பெயர் 'மரணக்குவளை!'

விசித்திரமாக இல்லை!

— இரா. ஆதிநாராயணன்.

பொருளுக்கும் மயங்கிடுவான்னு நெனைக்கி றானுங்க... துப்பு கெட்டப் பசங்க... மோதி ரத்தைக் கழிச்சுத் தூண்டிலைப் போடப் பாக்கிறான். அந்த ஏ. ஓ.''

நெஞ்சு படபடத்துக் கொண்டிருந்தது. உணர்ச்சிக் கொந்தளிப்பில் மேலும் கீழும் மூச்சு வாங்கியது. தேகத்தில் பரபரப்புத் தெரிந்தது. தயக்கமாய் ராஜாவை ஏறிட்டாள் விமலா. அவனின் முகத்தில் எந்தவித ஆத்திரமும் கோபமும் இல்லாதது கண்டு சட்டென்று கலவரமடைந்து போனாள். பரிகாசமாய் அவனின் உதடுகள் மட்டுமே நீளம் கூட்டின. கண்கள் பரிகாசமாய் விளிம்புகள் தொட்டன. விரக்தியாயிற்று விமலாவுக்கு. நம்பிக்கையாய் ஆதரவு தேடிக் கிளைவிரித்த கொடியின் ஆணிவேர் இற்றுப் போயிற்று. பெரிசாய் இல்லையென்றாலும் சாதாரணமாக வாவது ஆறுதல் சொல்லுவான் என்ற நம்பிக்கை.

''அவ்வளவுதானே! உன் கையைப் புடிக்கலியே!'' ராஜாவிடமிருந்து நிர்த்தாட்சண்யமாய்த் தெறித்தன வார்த்தைகள். நெருப்பில் விழுந்த புழுவாய்த் துடிதுடித்துப் போனாள் விமலா.

''ராஜா... நீங்களுமா இப்படிப் பேசறீங்க?''

''பின்ன? நா எதுவும் சொல்லிட்டா முகத்திலடிக்கிற மாதிரிப் பேசிடுவீங்க. அவரு செயல்லியே காட்டத் துணிஞ்சிருக்காரு.... வாய மூடிக்கிட்டு வந்துட்டீங்க.''

நாராசமாய் அடுத்து அவன் உதிர்த்த வார்த்தைகளில் அக்கினிப் பிழம்பானாள் விமலா.

''நீங்களே சம்மதப்பட்டு அவரு கையைப் புடிச்சுக்கிட்டு என்கிட்ட மழுப்பினால் வேண்டான்னாயிருக்கு?''

மறுகணமே —

''ப்ளடி ராஸ்கல்'' என்று நிஷ்டூரமாய் அவனின் கன்னத்தில் அறை விழுந்தது. விமலாவுக்கு ரௌத்திரம் கொதித்தது. அலுவலகமே ஸ்தம்பித்து நின்று விட்டது. கையும் காலும் விறைப்பாய் ராஜா நின்றிருந்தான்.

குலைபதற ஓடிவந்தார் ஏ ஓ பாலசுப்பிரமணியம். அப்போதுதான் டீயை முடித்து விட்டு வந்து கொண்டிருந்தார். ''என்ன? என்ன? என்ன நடந்திச்சு?''

அரக்கப் பரக்கத் தாவி விசாரித்தார். எல்லோரும் அதிர்ச்சியில் வார்த்தை மறந்து நின்றிருந்தார்கள். அதிர்ந்து போய் நின்றிருந்தான் ராஜா. கையில் சிலம்பில்லாத கண்ணகியாய் விமலா. அவரை நோக்கி வெறித்தாள் வெறுப்பாய்...

''பொம்பளைன்னா பொறுக்கின்னு நெனைக்கிறானுவ...'' என்று ஏகப் பொதுவாய்க் கர்ஜித்து முழங்கினாள்.

எங்கோ வலித்தது போலிருந்தது ஏ.ஓ. வுக்கு. மௌனமாகத் தலைசாய்த்துக் கொண்டே தம் அறைக்குத் திரும்பினார்.

ரா.நாகராஜன்



# மற்றவை நேரில்...

எக்ஸ்போர்ட் அப்ளிகேஷனை செக் செய்து கொண்டிருந்த போது ப்யூன் சுப்ரமணியம் அந்தத் தாளைக் கொண்டு வந்து கொடுத்தான்.

'மிஸ். லக்ஷ்மி வெயிட்டிங் அட் ரிசப்ஷன் கவுண்டர்.'

நல்லவேளை! பக்கத்து சீட்டில் பரமசிவனோ அல்லது ஸ்டெனோ ஜோசப்போ இல்லை.

லக்ஷ்மி முந்தா நாள் பார்த்துச் சம்மதம் சொல்லி விட்டு வந்த பெண்.

நண்பர்களுக்கு விஷயம் தெரிந்தால் கமெண்ட் அடித்துக் கலாட்டா செய்து விடுவார்கள்.

திடீரென்று எதிர்பாராத நேரத்தில் எதிர்பாராத நபர்!

கவுண்டரில் நாலைந்து பேர் காத்திருந்தனர்.

எல்லா அப்ளிகேஷன்களையும் வாங்கி வெயிட் வைத்து விட்டு மேலதிகாரியிடம் சொல்லி பெர்மிஷன் வாங்கி விட்டு ரிசப்ஷன் கவுண்டரை நெருங்க, நெருங்க மனம் படபடத்தது.

எதற்காக வந்திருக்கிறாள்? இந்தக் கல்யாணத்தில் இஷ்டமில்லையா? அவள் ஆபீஸில் யாரையேனும் காதலிக்கிறாளா? சே...! அப்படி என்றால் எவ்வளவு பெரிய அவமானம்?

பெண் பார்க்கப் போன படலம் மனத்தில் விரிந்தது.

அம்மா அக்கா, அப்பா நான் என்று நாலு பேர் மட்டும்தான் போனோம்.

பெண் பார்க்கும் படலம்தான் என்றாலும் அவர்கள் வீட்டில் நிறைய உறவுக்காரர்

---

# புதுவித நகைத் திருட்டு!



பம்பாயில் தன்னை 'சஞ்சய் கோக்கலே' என்று சொல்லிக் கொள்ளும் நவீன தோற்றமுடைய ஓர் இளைஞன், புது முறையில் நகைகளை அபேஸ் செய்கிறான்! தியேட்டர்கள் அருகே பஸ் ஸ்டாண்டுகளில் நின்று கொண்டிருக்கும் நடுத்தர வயதுப் பெண்களிடம் பேச்சுக் கொடுத்து அவர்கள் தங்கும் இடங்களைப் பற்றிய விவரம் அறிந்து, தான் டாக்ஸியில் செல்லப் போவதாகவும், அவர்கள் வீட்டிற்குப் பக்கத்தில்தான் தான் தங்குவதாகவும், அவர்களுக்கு லிஃப்ட் தருவதாகவும் கூறுகிறான்! வழியில் நகைக் கடையில் 'தன் அம்மாவிற்கு வளையல் வாங்க வேண்டும் என்று டாக்ஸியை நிறுத்துகிறான்; பையில் கைவிட்டு வளையலை மறந்துவிட்டது போல் நடித்து, 'எங்கள் அம்மாவின் கை அளவும் உங்கள் கை அளவும் ஒன்றுதான்; கொஞ்சம் மாதிரி அளவுக்கு உங்கள் வளையலைக் கொடுங்கள்' என்று வளையலை வாங்கிக் கொண்டு கடையில் நுழைந்து வேறு வழியே சென்று தலைமறைவாகி விடுகிறான். வளையலைக் கொடுத்து ஏமாந்தவர்கள், பின்னர் டாக்ஸிக்கும் பணத்தைக் கொடுத்துவிட்டு நடையைக் கட்ட வேண்டியது தான்!

— ராஜீவி நரசிம்மன்.

கள் வந்து அமர்க்களப்படுத்தி இருந்தார் கள்.

லக்ஷ்மியின் வீணை மீட்டல்.. மயில் படம். ...கை வேலை அடக்கம் நிறைந்த அழகு எல்லாமே முதல் பார்வையிலேயே ஓகே சொல்ல வைத்தன.

''பெண்ணோட தனியா ஏதாவது பேச ணுமா...?''

''அவசியம் இல்லே..''

''சும்மா தயங்காதேங்கோ. எதிர் ரூம் ஃப்ரீதான். தாராளமாப் போய்ப் பேசிட்டு வரலாம்.''

— பெண் வீட்டிலிருந்து ஒரு பெரியவர் சொன்னார்.

காலம்தான் எப்படியெல்லாம் மாறி விட்டது!

''ஏம்மா... நீ அவர்கிட்டே தனியாப் பேச ணும்னு விரும்பறியா?''

பதிலுக்கு ஒரு பெண் லக்ஷ்மியைக் கிண்டல் செய்ய, கூட்டம் சிரித்தது.

**அ**ன்று பேச முடியாததை இன்று பேச வருகிறாளா...?

இன்னும் சில நிமிஷங்களில் என் வாழ்க் கையிலேயே பெரிய வெற்றி அல்லது தோல்வி நிச்சயமாகப் போகிறதா?

பெண் பார்த்து விட்டுப் பதில் சொல் லாமல் போகின்ற போது ஒரு பெண்ணின் மனமும் இந்தப் பாடுதானே படும்..

தூரத்திலிருந்தே லக்ஷ்மி கவனித்து விட் டாள்.

இன்று கட்டியிருக்கும் காட்டன் புடைவை அவளின் அழகை மேலும் கூட்டிக் காண் பிக்கிறது.

தலையோரம் சொருகி இருக்கும் ரோஜா இன்னமும் வாடாமல்....

''ஹலோ'' என்று ஒரு புன்னகையுடன் வரவேற்றேன்.

''ஸாரி வேலைக்கு நடுவுல கூப்பிட்டுட் டேன். பிஸியாயிருந்தேளா?''

''நோ... நோ. கான்டீன்ல போய்ப் பேச லாம்...''

நாலரை மணியாதலால் கேன்டீனில் கூட்டமில்லை.

இரண்டு ஸ்வீட்டும், டீயும் வாங்கிக் கொண்டு மேஜைக்கு வந்த போது —

எதிர்ப்புறம் தெரிந்த கடலையே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள் லக்ஷ்மி.

''எவ்வளவு அழகான இடம். ஆபீஸ் விட்டுப் போறதுக்கே மனசு வராது இல்லே...''

''ம்...''

''அப்புறம்...'' என்று கேட்டாள். பேச வேண்டியது அவள்தான். இந்தக் கேள்விக் குப் பிறகு பேச ஒன்றுமே இல்லாத மாதிரி தோன்றியது.

''ம்... வந்த விஷயத்தை மறந்து விட்டு நான் ஏதேதோ பேசறேன். நேத்து கணை யாழில உங்க கவிதை படிச்சேன். ரியலா நான் அசந்துட்டேன். ரிஷபன்கற புனைப் பெயர் உங்க பெயர்ன்னு உறைக்கவே எனக்கு ரொம்ப நேரமானது. அதான் உங் களை நேர்லே பார்த்து...''

அவள் பிறகு பேசியது எதுவுமே என் காதில் விழவில்லை. இந்த விஷயம்தானா... இதற்குத்தான் இந்தப் பரபரப்பா? அவள் பேசப் பேச நான் லேசாகிப் போனேன்.

---




**அ**வருக்குக் காது கேட்காது. காது கேளாத பெண் ஒருத் தியை மணந்து கொண்டார். மணவாழ்க்கை மகிழ்ச்சிகரமாகவே அமைந்தது. ஒரு குழந்தையும் பிறந்தது. இதன் பிறகு, திடீரென்று அவர் மிகவும் வாட்டமுற்றுக் காணப்படுவதைக் கவனித்தார் அவர் நண்பர் கிரேமர். விசாரித்ததில் கணவனும், மனைவியும், இரவில் குழந்தை விழித்துக் கொண்டு அழுதால், தங்களுக்குக் காது கேட்காதே என்பதற்காக இரவெல்லாம் கண் விழித்துக் களைத்துப் போகிறார்கள் என்பது தெரிந்தது.

நண்பரின் நிலைமை கண்டு மனம் வருந்திய கிரேமர் அவருக்கு உதவ ஒரு புதிய கருவியை உருவாக்கினார். குழந்தை யின் தொட்டில் அருகே ஒரு மைக்கைப் பொருத்திவிட்டு அதனை 'ஷேக்கர்' என்ற இக்கருவியுடன் இணைந்தார். பெற்றோர் தூங்கப் போகும் முன்பு ஷேக்கரைக் கைக்கடிகாரம் போல் அணிந்து கொள்ள வேண்டும். குழந்தை அழும் ஓசை ஒலிபெருக் கியை எட்டும்போது, அதனுடன் இணைக்கப்பட்டுள்ள ஷேக்கர் இலேசான அதிர்வுகளை ஏற்படுத்தி, தூங்கிக் கொண்டிருக்கும் நபரை எழுப்பிவிடும்!

இக்கருவி மெல்ல மெல்லப் பிரபலமடைந்து இப்போது வியா பார ரீதியாகவும் தயாரிக்கப்படவிருக்கிறது.

ஆதாரம்: நியூஸ் ஃப்ரம் இஸ்ரேல்.

தகவல்: சிதா.

# அதிர்ஷ்ட தேவதை

## 3

ரங்கனுக்கு ரமணி ஒளி, திசை காட்டும் நட்சத்திரம். வழிகாட்டி. அவனுடைய வார்த்தைகள் வேதம். ஆபீஸ் முழுவதுமே ரமணியை எதிர்த்து நின்றாலும், ரங்கன் ரமணியின் கட்சி. ரங்கனை ஒரு மனிதனாக மாற்றியவனே ரமணி அல்லவா? சென்னையில் திசை தெரியாமல் அலமந்து கிடந்த போது, அவனுக்கு ஆதரவு காட்டித் தன் வீட்டில் சில மாதங்கள் அடைக்கலம் கொடுத்து, அதன் பிறகு இந்த ஆபீசில் ஒரு வேலையும் வாங்கிக் கொடுத்து வாழ வைக்கிறவன் ரமணிதானே?

இதுவரையில் ரமணி ஒரு கோட்டைக் கிழிக்கவும் ரங்கன் வாய்ப்புக் கொடுத்தது இல்லை. ஆனால் கல்யாணம் என்னும் மாய மான் அவனை இழுக்க முயற்சி செய்கிற போது, அதை ஓடிப் பிடிக்க அவன் துடிக்கிற போது, ரமணி அழுத்தமாக ஒரு கோட்டைக் கிழிக்கிறான். ரங்கன் அதைத் தாண்டக் கூடாது என்று கட்டளையிடுகிறான். ஏன்?

அவன் ஏன் ஒரு பெண்ணை முறைப்படித் திருமணம் செய்து கொண்டு, அப்பா, தாத்தா, தாத்தாவின் அப்பா, தாத்தாக்களைப் போல, தாம்பத்தியம் எனும் உலகில் பிரவேசிக்கக் கூடாது? இதில் ரமணிக்கு என்ன நஷ்டம்?

யாரை அவன் தெய்வமாகப் பாவித்து வழிபட்டுக் கொண்டிருக்கிறானோ அவனே இப்போது அவனுடைய தாம்பத்திய ஆசைக்கு முட்டுக்கட்டை போடுகிறான்! அவன் குள்ளம்தான், சோனிதான். ஒரு தடவை ஜுரத்தில் வீழ்ந்த போது ரமணி தான் ஒரு டாக்டரிடம் அழைத்துக் கொண்டு போனான். அப்போது, ரத்த சோகையால் உடல் பலவீனமாக இருக்கிறது என்று டாக்டர் கருத்துத் தெரிவித்து, ரங்கன் நிறைய காய்கறிகளும், பழங்களும், முட்டையும் சாப்பிட வேண்டும் என்றார், ஜுரம் தணிந்த பின் ரங்கன் டாக்டரையே மறந்து போனான். ரமணி தன் கைக்காசிலிருந்து வாங்கிக் கொடுத்த சாத்துக்குடிப் பழத்தை ஏழெட்டு நாட்கள் சாப்பிட்டான். அவன் ஒடிசலாக இருக்கிறானாம். சாதுவாம். பெண்டாட்டி ராட்சசியாக அமைந்து விட்டால் வாழ்க்கை ரணகளமாகிவிடுமாம். இப்படியெல்லாம் ஏன் ரமணி சொல்லி அவனைத் தளர வைக்க முயற்சி செய்ய வேண்டும்?

ஆபீஸ் கடிகாரம் ஆறு அடித்தது. எல்லோரும் போயாகி விட்டது. கம்பெனி அதிபர் விசேஷச் சலுகையாக, ரங்கன் ஆபீசிலேயே தங்கிக் கொள்ள அனுமதித்திருக்கிறார். தங்குவதற்குத் தனி இடம் தேடினால் குறைந்தது ஒரு சிறிய குடிசைக்கு ஐம்பது ரூபாயாவது அழ வேண்டும். அந்தப் பணம் இப்போது மிச்சம்.

ரமணி ஏன் இப்படிப் புத்தி சொல்லுகிறான்? தனக்குக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசை இருக்கிறது என்று தெரிந்தும் ரமணி, 'மயில்சாமி நல்லவன் இல்லை. அவன் பெண் தனம் உனக்கு ஏற்றவள் இல்லை... நீ கல்யாணம் பண்ணிக்கவே வேண்டாம்' என்றெல்லாம் கூறுவானேன்?

முதன் முறையாக ரமணி மீது கோபம் வந்தது. ஆயிரம் உதவிகள் செய்திருக்கிற காரணத்தினால் ஓர் அநீதியை நண்பன் இழைப்பதாகத் தோன்றியது.

திடீரென்று ஆள் அரவம் கேட்டது.

''என்ன தம்பி, செலையாக் குந்திக்கிட்டுக் கண்ணீர் வுடறே?''

வாட்ச்மேன் மயில்சாமி அங்குமிங்கும் கறைகளால் அலங்கரிக்கப்பட்ட காக்கி உடுப்பில் எதிரே நின்றான்.

ரங்கன் பதில் சொல்லவில்லை. மனத்தின் சிணுங்கல் கேவலாக மாறியது.

''எனக்கு யார் அழுதாலும் புடிக்காது, தம்பி! என்ன விசயம்? யார் என்ன சொன்னாங்க? என் கையிலே வுடு. பெசைஞ்சு எடுத்துடறேன்.''

''ஒண்ணுமில்லே, மயில்சாமி.''

''பின்னே என்னாத்துக்குப் பொம்பளை கணக்கா அளுவறே?''

''ஒரு சந்தேகம் மயிலு.''

''என்னா அது சந்தேகம்?''

''நான் குச்சியாவா இருக்கேன்? என் ஒடம்பிலே தெம்பு இல்லியா?''

''அதுக்கு என்னா இப்ப?''

''என்னை மாதிரி ஆளுங்க கல்யாணம் கட்டிக்கக் கூடாதா?''

''எந்த மடப்பய சொன்னான்?''

''யார் சொன்னா என்ன மயிலு? நீ பதில் சொல்லு.''

''பதினெட்டு வயசிலே நான் எப்படி இருந்தேன் தெரியுமா? பயத்தங்காக் கணக்கா! பசங்களெல்லாம் எலும்பை எண்ணிப் பார்ப்பாங்க... இப்ப எப்படி இருக்கேன் பாரு! வஸ்தாது மாதிரி இல்லே?''

''நீ என்ன சொல்றே மயிலு?''

''நீ ஜோரா, படா ஜோராக் கல்யாணம் கட்டிக்கலாம் தம்பி! அது கூடாதுன்னு இந்த அப்பன்காரனுக்குப் பட்டிருந்தா, என் பொண்ணையே உனக்குக் கட்டி வைக்க ஆசைப்படுவேனா?''

''அப்ப கல்யாணம் செஞ்சுக்கலாம்னு சொல்றியா, மயிலு?''

"என் பொண்ணை உனக்குப் பிடிச்சிருக்கு, இல்லே?"

"தனத்தைப் பிடிச்சுப் போச்சுன்னு முதவாட்டியா பார்த்தப்பவே சொல்லிட்டேனே, மயிலு!"

"அப்ப சல்தியா அவளைக் கட்டிக்க! அடுத்த வருசமே அவ ஒன் புள்ளையை — என் பேரப் பையனைக் குடுப்பா!"

"உண்மையாலுமா, மயிலு?"

"பொண்டாட்டி புருசனா ரெண்டு மாசம் வாய்ந்தாலே போதும் தம்பி, கொளு கொளுன்னு ஆவுறதுக்கு!"

"அப்ப என் உடம்பிலே சதை ஏறும்னு சொல்றியா?"

"இதிலே இன்னா சந்தேகம் உனக்கு? இந்தப் பயத்தங்கா பூசனிக்கா மாதிரி ஆச்சு! நீயும் ஆயிடுவே... சரி, எதுக்குச் சும்மாச் சும்மா இந்தப் பேச்சு? இந்த ஞாயித்துக் கிளமை, நம்ப ஊட்டுக்குச் சோறு துன்ன நீ வரப் போறேன்னு தனம் கையிலே சொல்லிட்டேன். பலான பணியாரமெல்லாம் செய்யப் போறதாச் சொல்லிச்சு. உனக்கு ஒரு விசயம் தெரியுமா தம்பி?"

"என்ன மயிலு?"

"அதுக்கு உன்னைப் பிடிச்சுப் போச்சு."

ரங்கன் ரமணியை அக்கணம் அடியோடு மறந்து போனான்.

"கல்யாணத்தை எங்கே வைச்சுக்கலாம், மயிலு?"

"என் ஊட்லேயே வைச்சுக்கிட்டா ஏகப்பட்ட சனம் வரும். நான் இன்னா சொல்றேன்னா...!"

"சொல்லு, மயிலு!"

"உன் ஊட்டு ஆளுங்க யாரெல்லாம் வருவாங்க, தம்பி?"

"யாரும் இல்லே."

"ஏன் அண்ணங்காரன் தம்பிக்காரன் அல்லாரும் இருக்காங்களே! ஒரு அக்கா கூட இருக்குது இல்லே?"

"அவங்க யாரும் எட்டிக் கூடப் பார்க்க மாட்டாங்க!"

"அப்ப ரொம்ப சுளுவாப் போச்சு!" என்ற மயில்சாமி, "எனக்கும் ஒரு அஞ்சாறு பேர்தான் இருக்காங்க!" என்றான்.

"ரமணி சார் வரணும். மாலு அம்மா அப்புறம் கிச்சா எல்லோரும் வரணும்!"

"இவங்களெல்லாம் வேணாம், தம்பி! அவுங்களுக்குன்னு கல்யாணத்தைப் பெரிசா நடத்தணும். ஏன் அனாவசியச் செலவு செய்யறே? இதைக் காதும் காதும் வைச்சாப்பல நடத்திப்புடுவோம்."

"மயிலு... மயிலு... நீ இப்ப என்ன சொன்னே?"

"அவங்கள்லாம் வேணாம்னேன்! ஏன் தப்பா?"

"அது இல்லே... செலவு பத்திப் பேசினியே, அது?"

"ஏன் இன்னாத் தப்பு? எங்க ஊர் வளக்கம், புள்ளை ஊட்டார்தான் கல்யாணச் செலவு செய்யணும். பொடவை, தாலி எல்லாம் புள்ளை செலவு. தனம் காதிலே



ஜிமிக்கி போட்டுட்டிருக்கு... அவ அம்மா வோட ஒரு சோடி வளையல் இருக்கு... அதை யும் கொடுத்துடறேன்.''

ஒரு சில நிமிடங்கள் ரங்கன் சோர்ந்து போனான். தனத்துக்கு இருநூறு ரூபாயில் ஒரு புடைவையும், தங்கமுலாம் பூசிய நகைகள் கொஞ்சமும் வாங்கத்தான் அவன் திட்டம் போட்டிருந்தான். இப்போது மயில் சாமி ஒரு குண்டை அல்லவா போடுகி றான்?

''நீ இன்னா யோசிக்கிறே, தம்பி! இஸ்டம் இல்லாட்டி சொல்லிடு. கண்ணப்பன்னு நம்ப தெருப் பையன் ஒருத்தன் என் பொண் மேலே வலைவீசிக்கிட்டிருக்கான். பஸ் கம் பெனியிலே, ஐந்நூறு ரூபா வாங்கறான். ஆனா உன்னைத் தனத்துக்குப் பிடிச்சுப் போச்சு! உனக்கு இப்ப இஸ்டம் இல்லாட்டி சொல்லிடு. அந்தப் புள்ளைக்கு என் பொண்ணைக் கட்டி வைச்சுடறேன்!''

மயில் சொல்லிவிட்டு, பீடியை வாயில் வைத்துக் கொண்டான். கை பாண்ட் பாக்கெட்டுக்குள் தீப்பெட்டியைத் தேடிக் கொண்டிருந்தது.

ரங்கனுக்கு வியர்த்தது.

தனம் இன்னொருத்தனுக்கா?

பல நாட்களாக ஒவ்வோர் இரவும் தனம் அவன் சொப்பனத்தில் வருகிறாள். சிரிக் கிறாள். அவன் அருகே உட்காருகிறாள். படுக்கிறாள். அப்படிப்பட்ட தனம் இன் னொருவன் கைக்குப் போவதா?

''இஷ்டம் இல்லேன்னு நான் எப்ப சொன் னேன், மயிலு? செலவுதான் அதிகமாயிடு மோன்னு பயமாயிருக்கு.''

''செலவே இல்லாம எப்படித் தம்பி, உன் னால ஒரு பெண் கழுத்திலே தாலி கட்ட முடியும்? செலவைக் குறைக்கணும். அவ் வளவுதானே? கந்தசாமி கோவில் பக்கத்தி லேயே இருக்கு. நடந்தே பூடலாம். அங்கே கட்டிடு தாலியை!''

வேறு வழி தோன்றாமல் ரங்கன் தலை யாட்டினான்.

**1986 — டிசம்பர் 7 — ஞாயிறு.**

பிடாரி அம்மன் கோவில் தெருவிலி ருந்து கிளைவிட்ட ஒரு சிறு சந்தில் கட்டிப் போட்ட எருமைகளுக்குத்தான் இடம் இருந் தது. சாணியும், எருமையின் கழிவுநீரும் சின்னாபின்னமாக்கப்பட்ட வைக்கோல் பிரிகளும் சந்தை அலங்காரம் செய்தன. தன் கிராமத்துக் கால்களுக்குச் செருப்பு அனா வசியம் என்று பட்டணத்துக்கு வந்த அன்று எடுத்த முடிவை, ரங்கன் இன்னும் மாற்றிக் கொள்ளவில்லை. ரமணி பர்மாபஜாரில் மலிவான விலையில் சிங்கப்பூர் செருப்பு வாங்கிக் கொடுத்திருந்தான். அதை ரங்கன் ஆபீசுக்குள் மட்டுமே உபயோகித்தான். இப்போது செருப்பு இல்லாமல் இந்தச் சந் துக்குள் நடந்து வரும்போது, தன்னைத் தானே பாராட்டிக் கொண்டான். செருப்பு இந்த அசுத்தத்தில் வீணாகியிருக்கும். கால் களை அலம்பிச் சுத்தம் செய்து விடலாம். செருப்பு அப்படியா?

ஓடு வேய்ந்த ஒரு சிறு வீட்டின் முன் பக்கத்து அறையில் தனம் அவனுக்காகக் காத்திருந்தாள்.

''வாய்யா... நீ பத்தரை மணிக்குத்தான் வருவேன்னு அப்பா சொன்னாரு. இப்ப மணி ஒம்பதே முக்கால்தானே ஆவுது?''

வலது கையில் கட்டியிருந்த கைக்கடிகா ரத்தைப் பார்த்துக் கொண்டே தனம் பேசி னாள்.

''என்னமோ வரணும் போலத் தோணிச்சு. அதான் வந்தேன். மயில்சாமி இல்லியா?''

''இருக்கிறது ஒரு ரூம்பு. இதிலே நான் ஒருத்திதான் இருக்கேன். அப்பா இல்லி யான்னு கேட்கிறியே?''

''ஒரு பேச்சுக்குக் கேட்டேன், தனம்!''

''உனக்கு என்னைப் பிடிச்சுப் போச் சுன்னு அப்பா சொன்னாரு.''

ரங்கன் பதில் சொல்லவில்லை.

''எனக்கும் ஒன்னைப் புடிச்சுப் போச் சுய்யா... நெசத்தைச் சொன்னா, உன் வழுக் கைத் தலை, குச்சி உடம்பு, கட்டை வெரல் உசரம் இதையெல்லாம் பார்த்து எந்தப் பொண்ணுக்கும் ஒன்னைப் புடிக்காது. ஆனா எனக்குப் புடிச்சுப் போச்சு! ஏன் சொல்லு, பார்ப்போம்!''

''தெரியலே, தனம்!''

''நீ சாது ஐயா... நல்ல ஆம்புளை. அப்பா சொன்னாரு. நீ காக்காசு அனாவசியமாச் செலவு செய்ய மாட்டேன்னு.''

தனம் அவனைத் தாண்டி வந்து, கதவைச் சாத்தினாள்.

''அப்பா வர்றதுக்கு இன்னும் ஒரு மணி நேரமாகும்...'' என்று சொன்னவள், அவன் அருகே வந்தாள்.

''குந்துய்யா.''

உட்கார்ந்தான்.

அவள் அவன் அருகே அமர்ந்தாள்.

''நீ நல்ல புள்ளை!''

சொன்னவள் அவனுடைய கன்னத்தை வருடினாள்.

ரங்கனுடைய உடல் பரபரத்தது. கூடவே

''இவ்வளவு பெரிய வீட்டைக் கட்டின ஜட்ஜ், நிலைப்படியை மட்டும் ஏன் இவ் வளவு சின்னதா வெச்சார்?''

''வர்றவங்க நீதிக்குத் தலைவணங் கணும்னுதான்!''

— நெய்வேலி. அ. கதிர்வேல்

ஒரு பயம் கவ்விக் கொண்டது. இவள் என்ன செய்யப் போகிறாள்?

"வேண்டாம்" என்று நடுக்கத்துடன் தலையாட்டினான்.

ரங்கன் தன் கையை மேலும் அவளிடமிருந்து விலக்கிக் கொள்ள, தனம் அவனுடைய இரு கைகளையும் பற்றி இழுத்து முகத்தின் மீது வைத்துக் கொண்டாள்.

"எனக்கு ஆசையா இருக்குதய்யா!"

தட்டுத் தடுமாறி, ரங்கன், "நமக்கு இன்னும் கல்யாணம் ஆகலே!" என்றான்.

"போய்யா நீ... இவ்வளவு நல்லவனாவும் இருக்கக் கூடாது!"

சொல்லிவிட்டுத் தனம் எழுந்தாள்.

சிரித்தாள்.

பற்களின் வெண்மை சூரிய ஒளியாக அவன் கண்ணைக் கூச வைத்தது.

**அ**ன்று ஆபீசுக்குத் திரும்புகையில் ரங்கனுடைய நடையில் அவன் உணர்ந்து அறியாத மிடுக்கு இருந்தது. வழியில் தென்பட்ட எல்லாப் பெண்களுமே தனமாகக் காட்சியளித்தார்கள்.

என்ன அழகான கறுப்பு!

என்ன வாளிப்பான உடல்!

இப்போதே அவன் மீதுதான் எவ்வளவு ஆசை!

தான் பிறந்த பிறவிக்கு ஓர் அர்த்தம் பிறந்துவிட்டதாக ரங்கனுக்குத் தோன்றியது.

**1986 — டிசம்பர் 8 — திங்கள்.**

ரங்கன் தலைதாழ்த்தி மிகவும் பணிவாக ரமணியின் முன் நின்றான்.

"என்ன ரங்கா, என்னாச்சு?"

உடனே ரங்கன் பதில் சொல்லவில்லை. மௌனம் சாதித்தான்.

"சொல்லு. பயப்படாம சொல்லு. நான் கோபிச்சுக்க மாட்டேன்."

"பணம்."

"உன் பணம். அதைப் பத்திப் பேச ஏன் இப்படி உடம்பை வளைச்சுக் குழையறே?"

"ஆயிரம் ரூபா!"

"எத்தனையானா எனக்கு என்ன? இந்தா பாஸ் புக்! நீயே போய் பாங்க்லேர்ந்து எடுத்துக்க! ரமணி வலதுபுற டிராயரைத் திறந்து பாஸ் புத்தகத்தை எடுத்து மேஜை மேல் போட்டான்.



"ரமணி சார் என் பேர்லே கோபமா இருக்கீங்க!"

"நான் யாரு உன் மேலே கோபிச்சுக்கிறதுக்கு?"

"நீங்கதான் எனக்கு எல்லாம், ரமணி சார்!"

"என் காதுலே பூ சுத்தாதே! நான்தான் எல்லாம்னா என் பேச்சுக்கு நீ மதிப்பும் மரியாதையும் கொடுத்திருக்கணும்! சரி, சரி, பாஸ் புக்கை எடுத்துக்கிட்டுப் போ! இனி மேல் அதை நீயே வைச்சுக்க..."

"ரமணி சார்!"

"என்னிக்குக் கல்யாணம்?"

"வர்ற வெள்ளிக்கிழமை!"

"எங்கே?"

"கந்தசாமி கோவில்லே!"

"நான் உண்டா?"

"நீங்க மட்டும்தான் உண்டு. மாலு அம்மா கூடக் கிடையாது."

"ஆழம் தெரியாமக் குட்டையிலே காலை வைக்கிறே! மயில்சாமி ஒரு முதலை. அவன் பொண்ணு அவனையே முழுங்கற பெரிய முதலை... இப்ப நான் சொல்றப்ப வேம்பாக் கசக்கும்! நாளைக்கு அனுபவிக்கிறப்ப இன்னிக்கு நான் சொல்றதெல்லாம் நினைவுக்கு வரும்... போ... பணத்தை எடுத்து மயில்சாமி தலையிலே கொட்டு."

கண்ணீர் மல்க ரங்கன் வங்கிப் புத்தகத்தை எடுத்துக் கொண்டான்.

அவன் நகரும் போது —

"ரங்கா!"

"என்ன ரமணி சார்."

"பாஸ் புக்கை இப்படிக் கொடு!"

"ஏன் சார்?"

"மொதல்லே கொடு."

ரங்கன் நீட்ட, 'லபக்'கென்று பறித்துக் கொண்டான்.

"ரமணி சார்... மறுபடியும் பிடிவாதமா என் கலியாணத்தை எதிர்க்கறீங்களே? இது உங்களுக்கே நல்லாயிருக்கா?"

"மத்தியானம் மூணு மணிக்கு என்னை வந்து பாரு!"

"அப்ப பாங்கு மூடியிருக்குமே!"

"சொன்னதைக் கேளு... போ!"

கோபமும், அழுகையுமாய் ரங்கன் ஹாலின் மூலையைத் தஞ்சம் அடைந்தான்.

டைப் அடிப்பதை நிறுத்திவிட்டு, "என்ன ரங்கா, என்னாச்சு? மாலுவைக் கொஞ்சறதை உட்டுட்டு ரமணி உன்கிட்ட சாடினானே, எதுக்கு?" என்று சுகந்தி கேட்டாள்.

தன் நிலையை யாரிடமாவது சொல்லி அழ வேண்டும் போலத் தோன்றியது, ரங்கனுக்கு.

சுகந்தி கிடைத்தாள். ஆனால் கல்யாணத்தைப் பற்றிப் பேசவில்லை. அது ரகசியம்.

(தொடரும்)

# கல்யாண ராஜா



கே. ஷிவப்ரசாத் என்று புதுமுக டைரக்டர் பேர் போட்டிருந்தாலும் எத்தனையோ எம்.ஜி.ஆர். களம் கண்டிருக்கும் இயக்குனர் கே. சங்கர், எடிட்டிங் என்ற பெயரில் இதில் பதுங்கியிருக்கிறாரே, அவரது ஆதிக்கம் தெரிகிறது. இருக்காதோ பின்னே? ஷிவப்ரசாத் அவருடைய வாரிசாமே!

அதற்காக ஆனாலும் அநியாயத்துக்கு இத்தனை கனவுக் காட்சிகளா? சீன் செட்டிங்குகளாகட்டும் காமெரா வித்தையாகட்டும் இந்தக் காட்சிகளில்தான் அள்ளிக் கொண்டு போகின்றன.

கார்த்திக்கிடம் ராணுவ அதிகாரியின் மிடுக்குக்கும் தோரணைக்கும் பஞ்சமில்லை. ரஞ்சனி தன்னைக் காதலிக்கிறார் என்ற உணர்வே இல்லாத, கல்மிஷமில்லாத நெருக்கம் காட்ட வேண்டிய நிர்ப்பந்தம். அதனால் ஒரு கிளுதான். இன்னொரு கிளு மிஸ்ஸிங்!

திரும்பவும் கிராமத்து ரஞ்சனி. கிராமத்து மருட்சியையும் வெகுளித்தனத்தையும் அப்படியே உணர்த்தும் அப்பாவி பிராண்ட் வதனம். இருந்தாலும் மழையில் நனைந்து காதலன் காய்ச்சல் வரவழைத்துக் கொண்டதற்காக ரஞ்சனி தானும் நனைந்து அந்தக் கஷ்டத்தை அனுபவிப்பதாய்ச் சொல்வது அதிகப்படி.

கார்த்திக்கின் தாயார் மனோரமா படா ஜீனியஸ். சுபாவத்தில் கேளாச் செவியரான அவர், லிப்ரீடிங் எக்ஸ்பர்ட்! உற்றுப் பார்த்து ஒரொரு சமயம் கரெக்டாய்ச் சொல்லி, 'எனக்குக் காது கேக்காதுன்னு பார்த்தியா? அப்பப்ப கேக்கும்,' என்று சமாளிப்பதும், தப்பாய்ப் புரிந்து கொள்வதற்குத் தானே சமாதானம் சொல்லிக் கொள்வதும் — சத்தியம் செய்யலாம், மனோரமாவால் மட்டும்தான் முடியும்!

மிலிட்டரி நம்பியார் மகனைத் தவறாகப் புரிந்து கொண்டு ஆர்ப்பாட்ட அதட்டல் எழுப்புவதென்ன; மகனைப்புரிந்துகொண்ட் பிறகு அந்த முகம் கனியும் விதமென்ன — சீனியர் இல்லையா?

கிராமப் பிரமுகர் ஜெய்கணேஷ் நெகிழ்த்தியிருக்கிறார்.

ரஞ்சனியின் தங்கை புதுமுகம் அபூர்வா— வடக்கத்திச் சரக்கோ? — படித்த மாடர்ன் மங்கையாய் இருக்கலாம். அதற்காகக் காபரே டான்ஸர் உணர்வை ஏற்படுத்தியிருக்க வேண்டாம். இருந்தாலும் கிளைமாக்ஸ் காட்சியில் உருக்கி விடுகிறார்.

ரஞ்சனி தன்னை வெறுப்பதற்கு, கார்த்திக்கிடம் கொண்ட காதல்தான் காரணம் என்பதைப் புரிந்து கொண்ட கணத்திலிருந்து ரஞ்சனியின் காதல் வெற்றி பெற முயற்சி மேற்கொள்கிறாரே, புதுமுகம் ஜோதி சந்திரா (ஷர்மிலி) அடக்கமாகவே சாதித்திருப்பதாய்ச் சொல்லலாம்.

தரகர் ஒருவிரல் கிருஷ்ணாராவ் ரொம்ப வித்தியாசமாய்த் திக்கியிருக்கிறார். இலுப்பைப் பூ சர்க்கரை.

இரண்டு குடும்பத்தினருக்கும் போட்டோ பிடித்துக் கொள்ளும் வழக்கமில்லை என்ற கதை, ஜாக்கிரதைக்காகச் சொன்னாலும் ஏற்றுக் கொள்கிற மாதிரி இல்லை.

உச்சகட்டத் திருப்பம் செயற்கைதான் என்றாலும் அது இல்லாதிருந்தால் படம் இயற்கை எய்தி இருக்கும்.

— பி. எஸ். எஸ்.

நாங்கள் தத்து எடுத்துக் கொள்ளுகிறோம்'' என்று வந்து விட்டார்கள். ஒவ்வொருவரையும் தீர விசாரித்துக் கடைசியாகக் கோத்தகிரி டீ எஸ்டேட்டில் வேலை பார்க்கும் கந்தய்யன், வேலம்மாள் தம்பதியிடம் குழந்தையை ஒப்படைத்தேன்.''

''ஏன் சார்! சில காலம் சென்று, குழந்தையின் நிஜமான தாய், குழந்தையைக் கேட்டுக் கொண்டு வந்தால் என்ன செய்வீர்கள்?'' என்றோம் இன்ஸ்பெக்டரிடம். ''அது போன்ற சூழ்நிலை ஏற்பட்டால், குழந்தையைத் திருப்பிக் கொடுத்து விடுவதாய் உறுதி மொழி எழுதி வாங்கிக் கொண்ட பின்னர் தான், அதைக் கந்தைய்யனிடம் கொடுத்திருக்கிறோம்'' என்றார் பெருமாள் சாமி.

கந்தையனின் முகவரியைப் பெற்றுக் கொண்டு புறப்பட்டோம். கோத்தகிரி தமிழ் நாடு தேயிலை வாரியத்தில் தேயிலை பறிக்கும் வேலை பார்க்கின்ற கந்தய்யன், வேலம்மாள் தம்பதியைச் சந்தித்தோம். நெற்றியில் பெரிய கறுப்புப் பொட்டுடன் ஒரு சின்ன ரோஜாப் பூப் போல வேலம்மாள் கையில் அந்தப் பிஞ்சு... முகத்தில் வெயில் பட்டதும் சுளித்துக் கொண்டு சிணுங்கிய அதனை வேலம்மாள் மார்போடு அணைத்துக் கொண்டே கூறினார்:

''நான் கால் வீக்கம் காரணமாய் அரசாங்க மருத்துவமனையில் அட்மிட் ஆகியிருந்தேன். அங்கே இந்தக் குழந்தை பற்றின விவரம் கேள்விப்பட்டேன். ஆஸ்பத்திரிக்கு அனுப்பப்பட்ட இந்தக் குழந்தையைப் பார்த்தவுடன் என்னையும் அறியாமல் என் தாய்மை உணர்ச்சி மேலிட்டது. உடனே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய், இன்ஸ்பெக்டரிடம் குழந்தையை நான் எடுத்துக் கொண்டு போய் வளர்க்க ஆசைப்படுவதாய்க் கூறினேன்.

''நான் ஏற்கெனவே நான்கு முறை பெண் குழந்தைகளாகவே பெற்றெடுத்தேன். ஆனால் நான்குமே பிறந்த சில நாட்களிலேயே இறந்து போய் விட்டன.

''இனியும் குழந்தை பெறும் தெம்பு என் உடம்புக்கு இல்லை என்பதால் நமக்குக் குழந்தை பாக்கியம் கிடையாது என்ற முடிவுக்கே வந்து விட்டேன். இந் நிலையில் தான் எதிர்பாராத இந்த நிகழ்ச்சி நடந்தது'' என்றார் வேலம்மாள்.

''எனக்கு இவள் குழந்தையை வாங்கிக் கொண்டு வந்து விட்ட விஷயமே முதலில் தெரியாது'' என்றார் கந்தய்யன்.

''என் அம்மாவும், இவளுமாய் என்னைக் கேட்காமலே எடுத்த முடிவு இது. மறுநாள் இவளைப் பார்க்க ஆஸ்பத்திரிக்குப் போன போதுதான் விவரம் தெரிந்தது. ஆனால் அதற்காக நான் வருந்தவில்லை; ரொம்ப சந்தோஷம்தான்!'' என்றார் கந்தய்யன்.

இப்போதைக்குக் குழந்தையைக் கண்டுபிடித்துப் போலீஸில் ஒப்படைத்த டீச்சர் பெயரை — சத்தியா தேவி குழந்தைக்குச் சூட்டியிருக்கிறார்கள். ''ஆனால் ராஜாத்தி என்றுதான் கூப்பிடுவோம்'' என்றார் வேலம்மாள்.

''ஒருவேளை நிஜமான தாயார் வந்து குழந்தையைக் கேட்டால், போலீஸில் உறுதி மொழி எழுதிக் கொடுத்துள்ளபடி குழந்தையைத் திருப்பிக் கொடுத்து விடுவீர்களா?'' என்று கேட்டதுதான் தாமதம்...

''அதெப்படிங்க கொடுப்போம்...? பெத்த குழந்தையை, ஈவு இரக்கமில்லாம போட்டுட்டுப் போனவ திரும்பி வந்து எப்படி கேட்பா? ஆண்டவனாப் பார்த்து, வரமாய்க் கொடுத்த புள்ளையை விட்டுப் பிரிய எப்படீங்க எங்களுக்கு மனசு வரும்?'' என்று உணர்ச்சி பொங்க, உரக்கவே கேட்டார் கந்தய்யனின் அம்மா வைராயி.

— எஸ். சந்திரமௌலி

படங்கள்: சோமு

## பிடித்த பாட்டு வருதா... போடு 'லீவ்' ஆபீசுக்கு....!

'........தேதியன்று காலையில் இன்னின்ன திரைப் படங்களிலிருந்து பாடல்களை ஒலிபரப்பப் போவதாக அறிவிப்பைக் கேட்டதுமே அலுவலகத்துக்கு விடுப்பு எடுத்துக் கொண்டு விட்டேன் என்றால் பாருங்கள்...! அன்று முழுவதும் வானொலியின் அருகிலேயே உட்கார்ந்து கொண்டு, ஒரு பாட்டு விடாமல் கேட்டேன்....'

— இப்படி ஒரு ரசிகர் சென்னை வானொலியின் வர்த்தக ஒலிபரப்புக்குக் கடிதம் எழுத, அக்கடிதத்தையும் அவர்கள் ஒலிபரப்பினார்கள்!

திரையிசை ரசிகர்தான் சினிமா பாட்டுக் கேட்க ஆபீஸுக்கு 'லீவ்' போட்டார் என்றால் அவர்கடிதத்தை ஒலிபரப்பி 'ஊக்கமளிக்க' வேண்டுமா, சென்னை வானொலி நிலையம்? ஒவ்வொருத்தரும் இப்படி 'லீவ்' போட ஆரம்பித்தால் இந்த நாடு என்ன ஆவது!

— அலமு



# 4

மயில்சாமி திருப்தியுடன் பீடியை நீண்ட தூரத்துக்கு இழுத்து, ஆர அமரப் புகையைக் கக்கினான். அவன் இருந்த நிலையில் பீடிப் புகை ஜவ்வாதாகக் கமழ்ந்தது. இனி அவனுக்குத் தனபாக்கியத்திடமிருந்து விடுதலை. எலிப் பொறியிலிருந்து அவன் தப்பி விட்டான். அந்த இடத்துக்கு ரங்கன் வந்து உட்கார்ந்து, மயில்சாமி இது நாள் வரை அனுபவித்ததையெல்லாம் அனுபவிக்கப் போகிறான். இனிமேல் மயில்சாமியின் பணம் பறிபோகாது. அவனுடைய நிஜார்ப் பையிலும் தொப்பிக்குள்ளும் ஒளித்து வைத்த பணம் தனத்தின் கைக்குப் போகாமல் பத்திரமாக இருக்கும். அவன் மேலும் நூறு மில்லி இருநூறு மில்லி குடிக்கலாம். இஷ்டம் போல் மிளகாய் பஜ்ஜி கடிக்கலாம்.

அன்று அவன் வழக்கத்துக்கு ஒரு மணி நேரம் முன்பாகவே ஆபீசுக்கு வந்து, சுகந்திக்கு எதிரே நின்றான். நாளைய மருமகன் ரங்கன் சோர்வாய் ஒரு மூலையில் தலை தாழ்த்தி உட்கார்ந்திருப்பது அவனுடைய கண்ணில் படவில்லை.

''என்னப்பா மயில்சாமி நாலே முக்காலுக்கே வந்துட்டே?'' என்று சுகந்தி கேட்டாள்.

''உன்னாலே ஒரு காரியம் ஆவுணம், சுகந்தி அம்மா!''

''எவ்வளவு தரம் சொல்றது அம்மா பாட்டினெல்லாம் என்னைக் கூப்பிடப் படாதுன்னு? என்ன வேணும்?'' அவன் அவளை அழைக்கும் விதத்திலேயே தன் வயது அதிகமாகி விடுவதாகச் சுகந்திக்குப் பட்டது.

''மன்னிச்சுக்க, கொயந்தே...''

சுகந்திக்குக் கோபம் வந்தது. அவள் என்ன மயில்சாமி கொஞ்சக் கூடிய குழந்தையா? பொறுத்துக் கொண்டாள்.

''என்ன வேணும்? அதைச் சொல்லு.''

''ஒரு அப்ளிகேசன்.''

''எதுக்கு?''

''அட்வான்சு!''

''எதுக்கு?''

''பொண்ணு கலியாணத்துக்கு. ஆயிரம் ரூபா.''

''அடப்பாவி!''

''ஏன் மிஸ்ஸு.''

''உன் பெண்ணுக்குத்தான் கல்யாணம் ஆயிடுத்தே? ஏற்கெனவே அட்வான்சு வாங்கியிருக்கியே?''

''அதையெல்லாம் கண்டுக்காதே, மிஸ்ஸு.''

''ரமணி கண்டிப்பா சிபாரிசு செய்ய மாட்டான்.''

''அப்ப இன்னா செய்யறது?''

''வேறே ஏதானும் காரணம் சொல்லு.''

''இன்னா சொல்றது?''

''பெண்ணுக்கு வளைகாப்பு, சீமந்தம்னு சொல்லு.''

''ஐயோ ஆத்தாடீ! அது வேணாம். வீடு ரிப்பேர் பண்ணன்னு எழுது'' என்றான் அவன்.

''முதலாளி கொடுப்பார்ன்னு எனக்குத் தோணலை.''

''நீ எழுதும்மா... டைப் அடிம்மா.''

''சரி போ.. நாளைக்குக் காலையிலே வந்து முதலாளியைப் பாரு. ரமணி பக்கம் போகாதே.''

''சரி மிஸ்ஸு.''

''மயிலு!''

''என்ன மிஸ்ஸு?''

''ரங்கனுக்குக் கல்யாணமாம். அவனும் சொல்லலே... நீயும் சொல்லலே.''

''இன்னத்தை அம்மா சொல்றது? அவனும் ஒரே புடியா நிக்கறான். என் பொண்ணும் ஒரே அடியா நிக்குது!''

''இது அடுக்குமா, மயிலு?''

''நான் இன்னா மிஸ்ஸு செய்வேன்? என் பொண்ணு... பொண்ணா அவ? பேயி... வேணாம்ன்னேன்.. சரிதான் போயாங்குது.''

''ரங்கன் மாட்டிக்கிட்டான்.'' என்றாள் சுகந்தி. பிறகு, ''என்னிக்கு?'' என்று கேட்டாள்.

''நீ யார் கையிலும் சொல்ல வேணாம்!''

''சரி.''

''இந்த வெள்ளிக் கிழமை.''

''நாலு நாள்தான் முழுசா இருக்கு. ஏன் இன்னும் நோட்டீசு வைக்கலே?''

''நோட்டீசெல்லாம் கெடையாது, சுகந்தி மிஸ்ஸு. நீ கூட வரத்தாவலே.''

''கடன் அப்ளிகேஷனுக்கு மட்டும் நான் வேணும், இல்லே?''



மயில்சாமி சிரித்தான்.

மூன்று மணிக்கு ரமணி ரங்கனை அழைத்தான். அவன் மௌனமாய் நின்றான்.

''வா என்கூட!''

எங்கே என்று ரங்கன் கேட்கவில்லை. ரமணியைப் பின்தொடர்ந்தான்.

இருவரும் தெருவுக்கு வந்தார்கள். அவர்களுடைய காரியாலயக் கட்டடத்துக்குப் பக்கத்துக் கட்டடம் ஏற்கெனவே முழுதும் இடிக்கப்பட்டு விட்டது. புதிதாக நவீன மவுசில் ஒன்று வரப் போகிறது. அதற்கான அஸ்திவார வேலை இன்னும் ஆரம்பமாகவில்லை. வெட்ட வெளியாகக் கிடந்தது. அங்கே ரமணி சென்றான். நிழலில் நின்றான்.

''ரங்கா!''

''சொல்லுங்க ரமணி சார்!''

''நான் உனக்கு ரொம்ப வேண்டியவன். உன் நல்லது, பொல்லாதது எல்லாத்திலும் அக்கறை காட்டறவன். நீ என்னன்னிக்கும் குறைவில்லாம வாழணும்னு ஆசைப்படறவன்... உனக்கு என்ன உதவி எப்பத் தேவைப் பட்டாலும் செய்யத் தயாரா இருக்கிறவன்... என்ன, இதையெல்லாம் நீ நம்பறியா?''

''சத்தியமா நம்பறேன், ரமணி சார்!''

''அப்ப மயில்சாமி பெண் தனத்தை மறந்துடு.''

''ஏன் சார்?''

''அவகிட்டே நல்ல குணம் எதுவும் கிடையாது. அப்பனோட தினமும் மல்லுக்கு நிக்கறவ. ஊர் சுத்தறதுதான் அவ வேலை.''

''எனக்கு அவளைப் பிடிச்சிருக்கு.''

''அதான் இப்படித் துடிக்கிறே!''

''அவளுக்கும் என்னைப் பிடிச்சிருக்கு...''

''பணத்தை நீட்டற எந்த ஆம்புளையையும் தனத்துக்குப் பிடிக்கும். கண்ட கண்டவனோட சிரிச்சுக் கும்மாளமடிக்கிற கழுதை அவள்.''

''அவளை நான் கட்டிக்கக் கூடாதுன்னு தானே, ரமணி சார் அவளைப் பத்தி இப்படியெல்லாம் பேசறீங்க? நீங்க சொல்ற மாதிரியே அவ இருந்திருக்கலாம்... ஆனா இப்ப அவ, என்னைப் பார்த்ததும் மாறிப் போயிருக்கா...''

''ஆமாம், நீ பெரிய மன்மதன்! மடையா, அவ உன்னைக் கட்டிக்கப் போறதில்லே... உன் பணத்தைக் கட்டிக்கப் போறா! உன் மாசச் சம்பளத்தை மட்டும் திம்பான்னு நெனைக்காதே! நீ சேர்த்து வைச்சிருக்கிற அத்தனை பணத்தையும் முழுங்கி ஏப்பம் விடுவா! நான் சொன்னதைக் கேளு. உனக்குக் கலியாணம் பண்ணிண்டுதான் ஆகணும்னு இருந்தா, நான் ஒரு நல்ல பெண்ணாத் தேடறேன். தனம் வேண்டாம்.''

முதல் முறையாக ரங்கனுக்குக் கோபம் வந்தது. ஆனால் பலவீனமான கோபம். உள்ளூரப் பொருமித் தீர்த்தான்.

''நான் சொன்னது எதுவும் உன் காதில் ஏறியிருக்காதே?'' என்றான் ரமணி.

''ரமணி சார், நீங்க தெய்வம் மாதிரி... எம்பேர்லே சாபம் போடாம என்னை வாழ்த்துங்க.''

''நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிட்டேன்.''

''இந்த ஒரு விஷயத்திலே உங்க பேச்சுக்கு எதிரா நடக்கிறேன்னு என்னை உங்க மனசிலேந்து ஒதுக்கிடாதீங்க, ரமணி சார்!''

''உனக்கு இப்ப பணம் தேவைப்படுது இல்லே?''

ரங்கன் மௌனமாய் அவனைப் பார்த்தான்.

''எவ்வளவு?''

''ஆயிரம்.''

''ஆபீசிலேந்து கடனா வாங்கித் தரேன். மாசா மாசம் அம்பது அம்பதாக் கழிச்சுக்கு வாங்க!''

''அப்ப...?''

''எதுக்கு இப்பவே உன் பாங்க் பணத்திலே கை வைக்கறே... இருக்கவே இருக்கு. தனம் வந்ததும்... அவ பார்த்துப்பா'' என்ற ரமணி, ''வா, ஆபீசுக்குப் போகலாம். ஒரு அப்ளிகேஷன் எழுதித் தரேன். அதிலே கையெழுத்தை மட்டும் போடு, போதும்...'' என்றான்.

''சரி ரமணி சார்.''

''இந்தக் கையெழுத்துக்கு அப்புறம் உன்




பி.வி.ஆர்.

தலையெழுத்து எப்படி மாறப் போறதோ!"

ரமணியின் வார்த்தைகளை ரங்கனால் சகித்துக் கொள்ள முடியவில்லை. இருப்பினும் வலு இழந்து போயிருந்த அவன், மௌனமாய் அவனுடன் நடந்தான்.

**1986 — டிசம்பர் 12 — வெள்ளி**

கந்தசாமி கோவிலில் பத்தே நிமிடங்களில் திருமணம் நடந்தது. பெண்ணும் பிள்ளையும் மாலை மாற்றிக் கொண்டார்கள். ரங்கன் மஞ்சள் கயிற்றை எடுத்தான். ரமணி அருகே சென்றான். சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். அவனுடைய கண்கள் கனத்தன.

தனபாக்கியம், முகத்தையே அடிக்கும் ஊதா நிறப் புடைவையில், பொறுமை இழந்தவளாய் ரங்கனைப் பார்த்தாள். ரமணி யார் என்று தந்தை மயில்சாமி மூலமாக ஏற்கெனவே தெரியும். ஆனால் ரங்கன் ஏன் ரமணியிடம் இவ்வளவு பக்தி செலுத்த வேண்டும்?

''போய்த் தாலியைக் கட்டு.. இனிமே இதை என்னால் நிறுத்த முடியாது!'' என்றான் ரமணி.

ரங்கன், 'கல்யாணமானவன்' என்ற நிலைக்கு உயர்ந்தான்!

அன்று இரவு எட்டு மணிக்கு மயில்சாமி, தன் பெண்ணையும் மருமகனையும், ஒட்டலுக்கு அழைத்துச் சென்றான்.

''மருமவப் புள்ளே, இது என் செலவு. வயிறு முட்டத் துன்னு!'' என்றான்.

ரங்கன் முயன்றான். சிறிது சாப்பிடுவதற்குள் வயிறு நிரம்பி விட்டதாகப் பட்டது. மயில்சாமி, யாரையும் லட்சியம் செய்யாமல் சாதத்தால் மேட்டூர் கட்டி, சாம்பார் ரசத்தை காவிரியாக்கினான்.

தனத்தால் எதுவுமே சாப்பிட முடியவில்லை. ரங்கனுக்குக் கவலையாக இருந்தது. அன்று மத்தியானமும் அவள் சாப்பாட்டில் பற்று இல்லாமல் இருந்தாள். இப்போதும் சாப்பிடாமல் இருக்கிறாள். ஏன்?''

''தனம்!'' என்று ரங்கன் ஆரம்பித்தான்.

''என்னா?''

''பசிக்கலையா?''

''பசிச்சா துன்னிருக்க மாட்டேன்? வா, நாம வூட்டுக்குப் போலாம்.''

''அப்பா?''

''அது இன்னிக்கெல்லாம் துன்னுக்கிட்டே இருக்கும். நீ வா, போகலாம்.''

இருவரும் வீட்டை நோக்கிப் புறப்பட்டார்கள்.

மயில்சாமி கண்டுகொள்ளவில்லை.

வீட்டை அடைந்ததுமே தனத்துக்குக் குமட்டிக் கொண்டு வந்தது. சுவரைப் பிடித்துக் கொண்டு, கண்கள் செருக நின்றாள். வயிற்றில் ஏற்பட்ட பிரளயம் வாய் வழியாகக் கொட்டியது.

ஒரு மாத கால நோன்பின் போது பசித்துன்பம் எத்தகையது, தாகத் துடிப்பு எப்படிப்பட்டது என்பதையெல்லாம் அனுபவித்து உணரும்போது, பசியாலும், தாகத்தாலும் வருந்தும் ஏழை, எளியவர்கள் மீது அன்பும், கருணையும் ஏற்படுவது இயல்பேயாகும். அவர்களின் துன்பத்தில் பங்கு கொள்ள மனம் விழைகிறது. எனவேதான் முஸ்லிம்கள் ரமளான் நோன்பு நாட்களில் ஏழை, எளியவர்களுக்கு வாரி வழங்கி

''தனம்... தனம்... என்னாச்சு... ஒடம்பு சரியில்லையா... சொல்லு, தனம்! டாக்டரைக் கூட்டியாரட்டுமா?''

அவள் 'வேண்டாம்' என்று தலையாட்டி விட்டு, நீண்ட நேரம் மௌனம் சாதித்தாள். பிறகு —

''நீ இப்ப என் புருசன் இல்லே?''

''ஆமாம். என்ன சந்தேகம், தனம்?''

''இதையெல்லாம் தண்ணி ஊத்தித் தள்ளி, தொடைச்சுடறியா?''

''நீ மொதல்லே அங்கே ஓரமா உட்காரு, தனம்.''

''சல்தியா தொடச்சாத்தான் நாம படுக்கலாம்!''

''இதோ!''

தலையணையில் தலை விழுந்ததும் தனம் தூங்கி விட்டாள். பல தடவை விரல் நடுக்கத்துடன், அவளுடைய முகத்தையும், இடையையும் ரங்கன் நெருடினான். அவள் உடம்பு அசையவுமில்லை.

அவனுடைய முதல் இரவு இப்படியா முடிய வேண்டும்?

மறுநாள் காலை எட்டு மணிக்கு மயில்சாமி வந்தான்.

''தம்பி!''

''என்ன மயிலு?'' ரங்கனுக்கு 'மாமா' என்று அழைக்க வரவில்லை.

''நீயும் என் பொண்ணும் இங்கே இருங்க.. நான் போறேன்.''

''எங்கே போறே?'' என்றாள் தனம்.

''இனிமே நான் ஆபீசுலேயே தங்கிக்கலாம்னு இருக்கேன்.''

''துட்டு குடுத்துட்டுப் போ!''

''இதோ உன்னைக் கட்டிக்கிட்ட புருசன் இருக்கான்... இனிமே அவன்கிட்ட வாங்கிக்க!''

சொன்ன மயில்சாமி, ஒரு சிறு பெட்டியை எடுத்தான்.

''அது எம் பொட்டி. தொடாதே'' என்றாள் தனம்.

''நீ புச்சா ஒண்ணு வாங்கிக்க! தம்பி, எம் பொண்ணுக்கு நல்ல பொட்டியா வாங்கிக் கொடு,'' என்று கூறிய மயில்சாமி, தனக்கு இருந்த ஓரிரு துணிகளைப் பெட்டியில் அள்ளிப் போட்டுக் கொண்டான்.

''போன மாசத்து கொடக்கூலியே



..கிழ்கிறார்கள். "நோன்புப் பெரு நாளை'யே 'ஈகைத் திருநாளாக'வும் கொண்டாடி மகிழ்கிறார்கள்.

தக்கோலம் அ. முஸ்தபா.

பாக்கி!" — தனம்.

"மருமவப்புள்ளை குடுப்பான்!" என்ற மயில்சாமி, "வர்றேன் தம்பி! எம் பொண்ணை நல்லாப் பார்த்துக்க... நான் அப்பப்ப வந்து அவளைப் பார்த்துக்க றேன்!"

அவன் போனதும், "போன மாசம் அறுபது ரூபா, இந்த மாசம் அறுபது ரூபா கொடக் கூலி கொடுக்கணும்" என்றாள் தனம்.

"கொடுத்துடலாம்."

"ஊட்லே தும்மாத்தூண்டு அரிசி இல்லே... ஒரு புட்டி கிஸ்னாயில் இல்லே... அல்லாம் வாங்கியாகணும்..."

"வாங்கலாம்."

"பணம் எவ்வளவு வைச்சுட்டிருக்கே?"

ரங்கன் கணக்குப் போட்டுப் பார்த்தான். ஆபிசில் கடனாக வாங்கிய ஆயிரத்தில் முப்பது ரூபாய் பாக்கியிருந்தது. வேட்டி, புடைவை, தங்க முலாம் பூசிய பித்தளை நகைகள், மாலை மற்றும் கோவில் செலவு கள் எல்லாமாகப் பணம் கரைந்து விட்டது.

"இப்பச் செலவுக்கு எவ்வளவு வேணும், தனம்?"

"ஐந்நூறு கொண்டா?"

"ஐந்நூறா?"

"ஏன் வாயைப் பொளக்கிறே? ரெண்டு வேளை நான் பொங்கிப் போடத் தாலே!"

"மாசா மாசம் ஐந்நூறு ஆகுமா, தனம்?"

"இன்னா சம்பளம் வாங்கறே, நீ?"

"நானூத்தம்பது கொடுக்கறாங்க."

"நெறையப் பணம் சேர்த்து வைச்சிருக் கேன்னு அப்பா சொல்லிச்சே!"

"கொஞ்சம் இருக்கு!"

"இப்ப நான் உன் பொஞ்சாதி! என் கையிலே நீ அல்லாம் சொல்லணும்."

"மூவாயிரம் ரூபா இருக்கு," என்ற ரங்கன், 'பிக்சட் டெபாசிட்' பற்றிக் கூற வில்லை.

"அப்ப ஒரு ஆயிரம் எடுத்து வா. எனக்குப் பொடவை, ரவிக்கை, பாடி, பாவாடை வாங்கணும்."

"ஆயிரமா?"

"ஆமாம், ஆயிரம்தான். பொண்டாட்டி கேட்டா புருசன் வாங்கித் தருவான்? ஒனக் காத் தோண வாணாம்?"

நேற்று இரவு முக்கி முனகிய தனமா இப்போது இப்படி முரட்டுத்தனமாகப் பேசு கிறாள்? போன ஞாயிற்றுக்கிழமை அவனு டைய உடலை வருடிவிட்ட தனமா இப்போது கன்னத்தில் அடிப்பது போல் சாடுகி றாள்.

"ஆபீஸ்லேர்ந்து திரும்பி வர்றப்ப கொண்டு வர்றேன்."

"எப்ப பணம் எடுப்பே?"

"பன்னிரண்டு மணிக்கு."

"நான் அங்கேயே வந்து வாங்கிக்க றேன்."

"ஏன் தனம்?"

"எனக்கு இன்னிக்கே பொடவை எடுத்தா கணும்."

ரங்கனுக்கு எதிர்த்துப் பேசத் தைரியம் முளைக்கவில்லை. அவளுடைய போக்கி லேயே சில நாட்கள் சென்றால், ஒரு வேளை அவனுடைய வார்த்தைக்குத் தனம் கட்டுப் படுவாள் என்ற நப்பாசை உண்டாகியது.

ஆயிரம் ரூபாயை அவள் கறந்து வாங்கிக் கொண்டாலும், தனம் வஞ்சனை செய்யாமல் வீட்டுக்கு வேண்டியவற்றையெல்லாம் வாங் கிப் போட்டாள். அவனுக்கு நல்ல சாப் பாடும் கிடைத்தது.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு அவன் அவளிடம் கேட்டான்.

"உனக்கு வயிறு கொஞ்சம் பெரிசா இருக்கு, இல்லே?"

"ஆமாம்."

"உன் அழகு இன்னும் அதிகமாத் தெரிய ணும்னா, உன் வயிறு குறையணும். சாப் பாட்டைக் குறைச்சுப் பாரு."

"வயிறு தானாக் குறைஞ்சுடும்."

"அப்படியா?"

"ஆமாம். நீயே அசந்து பூடுவே!"

"விளக்கை அணைச்சுடட்டுமா?"

"இன்னுமா அணைக்கலே?"

இருட்டில் அவளை அவன் அணைத்துக் கொண்ட போது, "யோவ், நீ நோஞ்சானா இருக்கேய்யா... ரெண்டு மாசத்திலே நீ கொழு கொழுன்னு ஆகணும்!"

"நீ போடற சோத்திலே வஸ்தாது கணக்கா ஆயிட மாட்டேன்?"

அவன் அவளை இறுகப் பற்றிக் கொண் டான்.

"எனக்குத் தூக்கம் வருது!"

அவன் தன் கைகளைத் தளர்த்தினான்.

அவள் மெல்லிய குறட்டையுடன் தூங்கிக் கொண்டிருந்த போது, ரங்கன் விழித்திருந் தான்.

ரமணி கண்ணெதிரே தோன்றினான்.

இவளைக் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது என்று ரமணி ஏன் உபதேசித்தான்?

கேள்வியே ஒரு பெரும் சுமையாக மார் பைத் தாக்கியது.

(தொடரும்)

# யாரோ ஒரு பெண்ணோடு ஸ்கூட்டரில்..!

பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்த தங்கம், எதிர்த்திசையில் சென்ற ஸ்கூட்டரைப் பார்த்துத் திடுக்கிட்டாள்.

சாட்சாத் நரேன்தான்!

கையை மலர்த்தி மணியைப் பார்த்தாள். மாலை ஐந்தேகாலை நெருங்கிக் கொண்டிருந்தது. கல்லூரி முடிந்து வீட்டுக்கு வராமல், மவுண்ட் ரோட்டில் எங்கே போகிறான்?

பளிச்சென்று மின்னலாய் ஏதோ தாக்கிற்று.

ஸ்கூட்டர் பின்னால் யாரோ பெண் உட்கார்ந்த மாதிரியில்லை?

அடிவயிற்றிலிருந்து ஒரு சதைக் கோளம் நெஞ்சுக்குழியை அடைக்க முயல, உடலின் நரம்பு மண்டலக் கேந்திரத்தை யாரோ உலுக்கி விட்டது மாதிரி வெலவெலத்து, ஸ்கூட்டர் சென்ற திசையைப் பார்த்தாள்.

நரேன்தான் பின்னால் ஒரு பெண்ணை அழைத்துக் கொண்டு போகிறான்! சல்வார் கமீஸ் அணிந்து, துப்பட்டா காற்றில் பறக்க, சுவாதீனமாய் அமர்ந்திருந்தாள். நல்ல வளர்த்தியான பெண்ணென்று பார்த்த மாத்திரத்திலேயே புரிந்தது.

மனம் கலங்கி வீட்டுக்கு வந்து சேர்ந்தாள் தங்கம்.

''ஏம்மா, எப்படியோ இருக்கே?'' என்று கேட்ட பூமாவிற்கு பி. காம். முதலாமாண்டு படிக்கிற பெண் — பதில் சொல்லாமல் சோபாவில் சாய்ந்து கொண்டாள். பத்தாம் வகுப்புப் படிக்கிறலதா, மும்முரமாய்வீட்டுப் பாடம் படித்துக் கொண்டிருந்தாள்.

பத்து வருடங்களுக்கு முன்னால் பதினோரு வயது நரேனையும் எட்டு வயது பூமாவையும் குழந்தை லதாவையும் விட்டு விட்டுச் சில நிமிட 'மாஸிவ் ஹார்ட் அட்டாக்'கில் கணவன் பளிச்சென்று முறிந்து விழுந்ததும், கணவனின் அலுவலகத்தில் கருணையின் பேரில் அவளுக்கு வேலை கொடுத்ததும்... அன்று முதல் இன்றுவரை அவள் வாழ்க்கையின் ஆதாரம் நரேனல்லவா? அவன் வளர்ந்து குடும்பச் சுமையை ஏற்கத் தோள் கொடுப்பானென்ற எதிர்பார்ப்புத்தானே அவளை இயக்கிற்று?

'...இன்னும் பத்துப் பன்னிரண்டு வருஷம். ஓடிப் போயிடும் தங்கம்! நரேன் படிச்சுட்டு வேலைக்குச் சேர்ந்துட்டான்னா, குடும்ப சாரத்யத்தை எடுத்துண்டுட்டுப் போறான்! பூமா, லதா, கல்யாணம் 'ஜாம், ஜாம்'னு நடக்கும்... நல்ல பெண்ணாய்ப் பார்த்து நரேனுக்கு முடிச்சுடு. அதுலேதான் உன் சாமர்த்தியமும் குடும்ப முன்னேற்றமும் இருக்கு...' என்று உறவினர்கள் கூறியது எவ்வளவு தெம்பாயிருந்தது!

அன்று முதல் இன்று வரை நரேனைக் கண்ணும் கருத்துமாக வளர்த்து வருகிறாள்! கம்ப்யூட்டர் என்ஜினியரிங் ஆசைப்பட்டானென்று, நாற்பதாயிரம் ரூபாயைக் கொடுத்துத் தனியார் என்ஜினீயரிங் கல்லூரியில் சேர்த்தது அவன் திருப்திக்காகத்தானே?

அவனா இப்படி? யாரந்தப் பெண்? ஸ்கூட்டரின் பின்புறத்தில் சர்வ உரிமையுடன்...? எத்தனை நாளாய்ப் பழக்கம்? இது என்ன பழக்கம்?

வயிறு கலகலத்து அச்சம் புரண்டது.

காதல், கீதல் என்று ஏதாவது மாயச் சுழலில் சிக்கியிருப்பானோ? கடைசி வருஷம். பரீட்சை சமயத்தில் கண்ட நினைவுகள் மனத்தை அலைக்கழித்தால், படிப்பு என்ன ஆகும்?

பார்த்த சினிமாக்களும், படித்த கதைகளும் அச்சுறுத்தின.

அழகாய் இருக்கிறான், என்ஜினீயரிங் படிக்கிறான் என்று அந்தப் பெண் வளைத்துப் போட்டுவிட்டதோ? அவ்வளவு பலவீனனா நரேன்? குடும்பப் பாசத்தை மீறி விடமுடியுமா, அவனால்?

....நம்ப முடியாது. இந்த வயதில் பெண் மோகம் அபூர்வ வலிமை மிக்கது. இப்படிப் பழகினால் மனம் எப்படி ஒரு நிலைப்படும்?

கல்லூரி விழாக்களில் எடுத்தது, உல்லாசப் பயணத்தில் எடுத்தது என்று அவ்வப்போது புகைப்படங்களைக் காட்டுவான் நரேன்.

''...அம்மா இது எஸ்தர்... இவபேரு கல்யாணி. இவன் ரகுநாத். சினிமா டைரக்டரோட பையன்... இவ நர்மதா... இதோ இவ பேரு ரூபா. வெரி இன்டலிஜென்ட்...'' என்று ஒவ்வொருவராய்க் காண்பிக்கிற போது இவனருகில் சிலபெண்கள் நிற்பது கண்டு உள்ளூரக் கலங்குவாள்....

'கொஞ்சம் தள்ளி நின்னாத்தான் என்ன? தோளோட தோள் உரசராப்பல நிக்கணுமா?' என்று உறுத்தும் மனத்தைக் காட்டாமல், புன்சிரிப்புடன் புகைப்படங்களைப்

பார்ப்பாள்.

அப்போதே நாசூக்காய்த் தடை விதித்திருக்கலாமோ? சகஜமாய் எடுத்துக் கொண்டது, இப்படி முற்றிப் போய்விட்டதோ?

தான் பள்ளியில் படித்த நாட்களில் அவ்வளவு கண்டிப்பாய் இருந்த காலத்திலேயே, விடுநிறைய மனிதர்கள் இருக்கும் போதே, ஒருவரும் அறியாமல் அடுத்தவீதி மளிகைக் கடைக்காரர் மகனைக் காதலித்து வீட்டை விட்டு ஓடிப்போன, எதிர்வீட்டு மணியக்காரர் பெண் மாதுரியின் நினைவு வந்ததும் நடுங்கிப் போனாள் தங்கம்.

இவ்வளவு கண்டிப்பையும் மீறி ஓர் ஆணும் பெண்ணும் கவர்ந்திழுக்கப்பட்டிருக்க முடியுமானால், அறையில் நடப்பது அம்பலத்தில் விவாதிக்கப படும் இந்தக் காலத்தில் எதுதான் சாத்தியமில்லை?

மனம் மறுகிற்று.

**மா**லை மயங்கிய, நேரத்தில் ஸ்கூட்டர் உள்ளே நுழையும் சத்தம் கேட்டது.

''....காலேஜிலே கொஞ்சம் லேட்டு. என் பிரண்டுக்கு மாரேஜ் செட்டிலாயிருக்கு. இன்விடேஷன் செலக்ட் பண்ண ப் போயிருந்தேன்....''

சொல்லிக் கொண்டே தனது அறைக்குச் சென்ற நரேனைக் கண்ணிமைக்காது பார்த்தாள் தங்கம்.

இன்விடேஷன் வாங்கப் போயிருந்தானாமே? ஒரு பெண்ணுடன் ஸ்கூட்டரில் போனதைச் சொல்லவில்லையே? மறைக்கிறானே? மனத்தில் கள்ளம் புகுந்துவிட்டதே? அந்தப் பெண்ணைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பிடிவாதம் பிடிப்பானோ? படிக்கிறபோதே பையனைக் கவர்ந்திழுத்து விட்ட பெண், திருமணத்திற்குப் பிறகு தன் குடும்பத்திற்கு உழைப்பதை அனுமதிப்பாளா, என்ன?

குமுறி அழவேண்டும் போல் துக்கம் எழுந்தது.

'யார்ரா அவ?' என்று நேருக்கு நேர் கேட்டு விட்டால் என்ன என்று தோன்றிற்று. சற்று நிதானித்தாள். தகப்பனில்லாத பிள்ளை. 'தான்தான் இந்த வீட்டின் முதல் புருஷன்' என்கிற ஈகோவுடன் வளர்ந்திருக்கிறவன். நேருக்குநேர் கேட்டு, அவன் ஈகோவைத் தாக்கி, அதனால் விளைவு ஏடாகூடமாகிவிட்டால்?

'இது முள்ளில் விழுந்ததுணி. கிழியாமல் எடுக்க வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டாள்.

ஆனாலும் அடிவயிறு கலங்கியதைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

**நா**ட்கள் கனமாய் ஓடின.

காலையில் சீக்கிரம் போவதும் மாலையில் தாமதமாய் வருவதுமாய் நரேன் பெரிதும் மாறிவிட்டிருந்ததாகத் தோன்றியது தங்கத்திற்கு.

இதற்கிடையில் நகைக்கடையில் ஒரு பெண்ணுடன் நரேனைப் பார்த்ததாக உடன் பணிபுரியும் சிநேகிதி கூறியதும் நடுங்கிப் போனாள். பணம் செலவு செய்யுமளவுக்கு வந்துவிட்டானா? ஒரேபிள்ளை கேட்கிறான் என்று சுணங்காமல் பணம் கொடுத்தது இப்படிச் செலவு செய்யவா? இதற்குமேல் முற்றவிட்டால் விபரீதமாகிவிடுமே? எப்படி நிறுத்துவது?' எங்கே விசாரணையைத் தொடங்குவது?

ஒருநாள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது, அவன் உள் மனத்தை அறிவதற்காக, கல்லூரி மாணவ, மாணவியர் காதலிப்பதை வன்மையாய் விமரிசித்த போது, அவன் சொன்ன பதில் அவளைக் கலக்கிற்று.

''... காதல், கல்யாணம் அப்படீங்கறதைப் பத்தின கான்செப்டிலே போன ஜெனரேஷனுக்கும் இந்த ஜெனரேஷனுக்கும் அடிப்படையிலேயே நிறைய, வித்தியாசம் இருக்கு. இந்த ஜெனரேஷனோட பிரச்னைகளை, போன ஜெனரேஷனைச் சேர்ந்தவங்களோட அனுபவங்களாலே அளவிடறதோ, மதிப்பிடறதோ தப்பு... லெவல்ஸ் ஆர் டிஃபரண்ட்...''

எவ்வளவு தெளிவாய், தீர்க்கமாய்ப் பேசினான்? அந்த அளவுக்கு மாற்றியிருக்கிறாளா அந்தப் பெண்?

முகம் தெரியாத அந்தப் பெண் மீது குரோதம் எழுந்தது.

"...**அ**ம்மா, அண்ணா யாரோ ஒரு பொண்ணோட ஸ்கூட்டரிலே வரான்....''
என்று லதா சொன்னதும், வாரிச்சுருட்டிக் கொண்டு எழுந்தாள் தங்கம்.

'.... இவ்வளவு தூரம் வந்துவிட்டதா? வீட்டிற்கே அழைத்துவரத்துணிந்து விட்டானா?'

''...அம்மா... இவ பேரு எஸ்தர். என் கிளாஸ்மேட்...''

நரேன் அறிமுகப்படுத்தியதும், முகத்தில் எந்த பாவமுமில்லாமல் தலையசைத்தாள். பூமாதான் சிரித்து வரவேற்றாள்.

சிறிதுநேர அசௌகர்யமான மௌனத்

திற்குப்பின் "நானே சொல்லட்டுமா?" என்று நரேன் அந்தப் பெண்ணிடம் கேட்கவும், "வேண்டாம் நரேன்... நானே சொல்லிடறேன்" என்று சிணுங்கிய எஸ்தரை ஆழமாய்ப் பார்த்தாள் தங்கம். எரிமலையாய் வெடிக்கத் தக்க தருணம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

".....ஆண்ட்டி! ஒரு ரிக்வெஸ்ட்... அடுத்த மாசம் எனக்குக் கல்யாணம். என் 'வுட்பி'க்கு ஒரு சஃபாரி செட் ப்ரசென்ட் பண்ணலாம்னு இருக்கேன்... நல்ல கலரா செலக்ட் பண்ணணும்... அதுக்காக ஷாப்பிங் போகலாம்னு நரேனைக் கூப்பிட்டா, வரமாட்டேங்கறான் ஆண்ட்டி! நரேனுக்கு எக்ஸலெண்ட் கலர் சென்ஸ் உண்டு... ஹைலி ஈஸ்தடிக்.... என் கல்யாணப்பத்திரிகை செலக்ட் பண்ணிக் குடுத்தது நரேன்தான்... மார்வலெஸ் டிசைன்!.... எல்லாரும் ரொம்ப அப்ரிஷியேட் பண்ணினாங்க... வெட்டிங் நெக்லெஸ் ஒண்ணு செலக்ட் பண்ணிக் குடுத்தான் பாருங்க.... சிம்ப்ளி ஃபண்டாஸ்டிக்!..... அதுனாலே கூப்பிட்டா, ரொம்ப அலட்றான். பரீட்சை இருக்காம். படிக்கா்மெயே சென்டம் வாங்குவான்... ப்ளீஸ் வரச் சொல்லுங்க ஆண்ட்டி..."

சின்னக் குழந்தைமாதிரிக் கையைப் பிடித்துக் கொண்டு அந்தப் பெண் கெஞ்சக் கெஞ்ச, பிரமிப்பின் உச்சத்தை விரைவாய் எட்டலானாள் தங்கம்.

".....அம்மா, நான் சொல்றதைக் கேளு... இவதுணி செலக்ட் பண்ண ஆறு மணி நேரம் ஆகும். நூறு கடை ஏறி எறங்குவா... எனக்கு நெக்ஸ்ட்வீக் 'எம்டெக்' என்ட்ரன்ஸ் எக்ஸாம் இருக்கு. நெறையப் படிக்கணும். ஏற்கெனவே இன்விடேஷனுக்கு மூணு மணி நேரம் அவுட்!..... அப்புறம் நகை செலக்ட் பண்ண நாலு மணி நேரம் க்ளோஸ்! ஈவினிங் பஜார் பக்கம் நான் போனாலே அடிப்பாங்கன்னு நெனைக்கறேன்... அவளுக்கு அவ கல்யாணம் முக்கியம். எனக்கு என் படிப்பு முக்கியம். இனிமே ஒரு நிமிஷம் கூட வேஸ்ட் பண்ண முடியாது, என்னாலே..... நீ சொன்னாத்தான் நான் கேப்பேன்னு, உன் சிபாரிசுக்கு வந்திருக்கா...."

நரேன் சொல்லச் சொல்ல, மனத்தை இறுக்கிய சந்தேகக் கட்டுக்கள் தெறித்து விழுந்தன. அலாதியான நிம்மதி அவளை ஆட்கொள்ள, மனத்தின் பழைய தலைமுறை அழுக்குகள் கரைந்து, உருகி, மறைந்து போயின.

".....கல்யாணம்னு சொல்றா.... போயிட்டுவா நரேன். நாளைக்குப் படிச்சுக்கலாம்..." என்று கண்கலங்கத் தங்கம் கூறியதும், கட்டை விரலை உயர்த்தி நரேனைப் பார்த்துக் கண் சிமிட்டினாள் எஸ்தர்.

அந்தச் சிமிட்டல் இதமாயிருந்தது தங்கத்திற்கு.



## அருள்வாக்கு

இத்தனை பாவம் பண்ணி விட்டோமே என்று அழவே வேண்டாம். பாபத்தை ஒரே க்ஷணத்தில் த்வம்ஸம் பண்ணும் வஸ்து இருக்கிறது. அதை எங்கேயோ போய்த் தேடிப் பெற வேண்டியதில்லை. நாமே உண்டு பண்ணிக் கொண்டு விடலாம். கஷ்டமே இல்லை. இரண்டே எழுத்து. தேஹத்தில் உயிர் போலவும், கோயிலில் மஹாலிங்கம் போலவும் வேதங்களின மத்தியில் ஜீவரத்னமாயிருக்கும் அதை நாம் என்ன பண்ண வேண்டும்? பெரிசாகத் திரவியம் சேர்த்து அபிஷேகம் பண்ணணுமா? தினுசு தினுசாய் நைவேத்யம் செய்யணுமா? மாலைகள், நகைகள் சாத்தணுமா? ஒன்றும் வேண்டாம். ஓயாமல் வேண்டாத விஷயங்களில் புரண்டு கொண்டிருக்கிற நாக்கைக் கொஞ்சம் அதற்காகப் புரட்டினால் போதும்.

பரமேச்வர ஸ்வரூபத்தை நாம் பார்க்க முடியுமா? விக்ரஹமாக வைத்தால் கூட எப்போதும் பார்க்க முடியுமா? இந்த நாமா இருக்கிறதே இதுவும் ஸாக்ஷாத் அவனேதான். இதை நினைத்த மாத்திரத்தில் நம்மிடம் வரும்படி பண்ணிக் கொண்டு விடலாம்.

அதனால் எப்பொழுதெப்பொழுது முடிந்தாலும் 'சிவ' என்ற இரண்டு அக்ஷரங்களைச் சொல்லி லோகமெல்லாம் சிவம், மங்களம், கல்யாணம் தழைக்கச் செய்ய வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

கவிதைக்குள் ஒரு கவிதை:

# பரட்சிக் கவிஞனின் புதுமை வானம்!

காலையில் அடிவானில் தோன்றிய கதிரவன் மெல்ல மெல்ல முடிவானுக்கு வருகின்றான்.

'பளிச்'சென்ற பகல் நேரம்.

வானம் தன் சூரிய விழியால் பூமியில் நடக்கும் நிகழ்வுகளை உற்று நோக்குகின்றது. கீழ்நோக்கி வானம் பார்ப்பதையும், அந்நேரத்தில் பூமியில் நடப்பதையும் ஒரு சேரக் கவனிக்கிறார் பாரதிதாசன்.

ஓடி ஆடிப் பணிபுரிந்து கொண்டிருக்கிறார்கள் உழைப்பாளர்கள். தன் வியர்வையில் உருவான இயந்திரங்களில் வியர்க்க வியர்க்க வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். உழைத்துழைத்தும் இவர்கள் உயரவே இல்லை. பணியை முடித்த தொழிலாளர்களுக்கு வேலைக்கேற்ற ஊதியம் வழங்கப்படவில்லை. உரிமைகள் மறுக்கப்படுகின்றன.

பகல் முழுவதும் இதைப் பார்த்துக் கொண்டிருந்தது வானம். பகல் முடிந்து, அந்தியும் முடிந்து இரவு வருகிறது. வானம் நெடுக நட்சத்திரங்கள். நமக்கு அவை நட்சத்திரங்கள். ஆனால், கவிஞருக்கோ... பாடலைப் பார்ப்போம்:

**......இதைத் தன்**
**கண்மீதில் பகலில் எல்லாம்**
**கண்டு கண்டு அந்திக்குப் பின்**
**விண்மீனாய்க் கொப்புளித்த**
**விரிவானம் பாராய் தம்பி!**

சமுதாயச் சீர்திருத்தத்தையும் அழகுணர்வையும் சங்கமமாக்கித் தம்பிக்கு வானத்தைக் காட்டும் பாவேந்தரின் தமிழ்தான் எத்துணை அற்புதம்! 'அழகின் சிரிப்பு' நூலில் உள்ள இப்பாடலில் 'கண்டு கண்டு' என்னும் தொடரிலும், 'விண்மீனாய்க் கொப்புளித்த' என்னும் தொடரிலும் அமைந்துள்ள கவிதைக்குள் ஒரு கவிதை கண்டு கண்டு களித்தற்குரியது.

பகலில் வானம் கொதிக்கிறது. அந்தியில் கோபப்பட்டுச் சிவக்கிறது. இரவில் எதிர்ப்பைக் காட்ட கறுப்பாகிறது. கடைசியில் தன் கொந்தளிப்பைக் கொப்புளங்கள் ஆக்குகிறது என்று சிந்திக்கச் சிந்திக்கத் தன் அகலத்தை அதிகப்படுத்துகிறது இந்த ஆகாயப் பாடல்!

நூற்றாண்டு காணும் பாவேந்தரின் கவிதைத் தொகுப்பில் இப்படிப்பட்ட நூதனங்கள் எண்ணிக்கையற்று ஏராளமாக உள்ளன. அவர் தமிழ் ஒரு பூக்காடு. நாம் அனைவரும் தும்பிகளாக ஆனால் தொடர்ந்து தேன் துய்க்கலாம்.

— மதிவண்ணன், சென்னை — 63.





# அதிர்ஷ்ட தேவதை

5

**1987 — ஜனவரி — 19 திங்கள்.**

மாலு,ரமணி அருகே வந்து நின்றாள். அவன் ஒரு ஃபைலில் மூழ்கிக் கிடந்தான். மிகவும் முக்கியமான விஷயமாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் ரமணி நிச்சய மாக மாலு வந்து நிற்பதை உணர்ந்திருப் பான்.

அவள் மௌனமாக நின்றாள். காதல் விஷயத்தில் அவள் எத்தனை நாட்கள் பொறு மையாக இருந்து வந்திருக்கிறாள்!

ரமணி ஃபைலில் ஏதோ எழுதிவிட்டு, எழுதியதை ஒரு தடவை படித்துவிட்டு, ''வெங்கி!'' என்று குரல் கொடுத்தான்.

அதிபருடைய அறைவாயிலில் வெற்றிலை யைக் குதப்பிக் கொண்டிருந்த வெங்கி மெது வாக எழுந்து, மெதுவாக நடந்து வந்தான். குதிரை விஷயத்தில் மட்டும்தான் அவனுக்கு விரைவும் வேகமும் பிடிக்கும்.''

''இன்னா சார்!''

''இந்த ஃபைலை முதலாளி மேஜை மேலே அவர் கண்ணில் படும்படியா வை.''

வெங்கி அலட்சியமாக ஃபைலை எடுத்துக் கக்கத்தில் செருகிக் கொண்டான்.

''ரமணி சார், விசயம் தெரியுமா?''

''என்ன?''

''மூந்தா நாள் பம்பாய் ரேசிலே முத லாளி ஜாக்பாட் அடிச்சார். லட்சத்துப் பத்தா யிரத்து மூந்நூத்து எழுபது ரூபா. ஐயாதான் ரெண்டு குதிரைங்களைக் கொடுத்தாரு! ஆனா நான்! ரெண்டு குதிரைங்களைத் தெரிஞ்சு வைச்சும் ஜாக்பாட் அடிக்கலே! எப்படி இருக்கு உலகம், பார்த்தியா?''

''உலகத்தை நான் அப்புறமா சாவகாச மாப் பார்த்துக்கறேன், இப்ப உள்ளே போய் இந்த ஃபைலை வை!'' என்றான் ரமணி.

''அடடா, மாலு அம்மா நிக்கறாங்க. அதான் நீ என்னை விரட்டறே!''

மாலு உட்கார்ந்து கொண்டாள்.

''நீ வந்ததை நான் உண்மையா உணரலே, மாலு. ஸாரி!''

''நீங்க ஒரு விஷயத்திலே இறங்கிட்டா முழு மூச்சா அதிலே லயிச்சுப் போயிடுவீங் கன்னு எனக்குத் தெரியும், ரமணி! ஆனா உங்க முழுமூச்சு ஒரு விஷயத்திலே மட்டும் அடிக்க மாட்டேங்குது!''

''புரியறது. மாலு. நான் என்ன செய்ய? உடனடியாக் கல்யாணம் பண்ணிக்கிட்டு, உன்னோடு வாழ்க்கையை ஆரம்பிக்க ணும்னு எனக்குக் கொள்ளை ஆசைதான். ஆனா வேளை வரமாட்டேங்கறதே!''

''வேளை தானாக வராது, ரமணி! நாம தான் கொக்கி போட்டு இழுத்துக் கொண்டு வரணும். கேவலம் இந்த ரங்கனுக்குக் கூடக் கல்யாணம் ஆயிட்டுது.''

''அவன் ஒரு முட்டாள். நான் படிச்சுப் படிச்சுச் சொன்னேன். மடையன் கேட் கலே. பிடிவாதமா, சகதியில்தான் விழு வேன்னு விழுந்தான். இப்ப அவதிப்பட றான்.''

''நீங்களும் நானும் நிச்சயமா சந்தனக் குழம்பிலேதான் விழுவோம், ரமணி. என் அக்காவுக்கு அடுத்த மாசம் பன்னிரண்டாம் தேதி கல்யாணம். அம்மாவோட ஆசை நிறைவேறாமப் போறது.''

''ஓ, ஓ, அதுவா? உனக்கும் உன் அக்கா வுக்கும் ஒரே நாள்ளே கல்யாணம் நடக்க ணும்னா ரெண்டே வழிதான் இருக்கு.''

''என்னவாம்?''

''நான் என்னிக்கு உன் கழுத்திலே தாலி கட்டறேனோ அந்த நாள் வரையில் உன் அக்கா காத்திருக்கணும்.''

''இது போகாத ஊருக்கு நீங்க காட்டற வழி. இன்னொண்ணு என்ன?''

''அக்காவுக்கு என்னிக்கு மாரேஜோ அன் னிக்கி அவகூட சேர்ந்து நீயும் மணமேடை யிலே உட்காரணும். ஆனா, இதிலே ஒரு சின்னச் சிக்கல்.''

''என்ன அது?''

''உன் பக்கத்தில் நான் இருக்க மாட்டேன். வேறு யாராவது ஒரு பிள்ளையை உன் அப் பாவோ, அல்லது நீயோ பார்த்து முடிக்க ணும்.''

''உங்ககிட்டே பேச வந்தேன் பாருங்க, என் புத்தியை...''

''என்ன நீ, அசடு மாதிரிப் பேசறே மாலு? நம்ப காதல் உண்மையானதுதான். ஆனால் அதுக்கு தெய்வீக மாலையைச் சூட்டாதே... பிராக்டிகலா நினைச்சுப் பாரு. என் தாத்தா அஞ்சாறு நாளா இருமறார். இந்த இருமல் நல்ல இருமல் இல்லைன்னு டாக்டர் சொல் றார். மூச்சு விடறப்ப கன்னாபின்னான்னு ராகங்கள் வர்றது. இன்னும் இரண்டு மூணு நாள்லே சுவாசக் குழாயில் இருக்கிற கப மெல்லாம் வெளியே வரலேன்னா, தாத்தா வோட கடைசி அத்தியாயத்தை எழுதத் தொடங்கிடலாம். அதுக்கு அப்புறம் பிரச் னையே இல்லே!''

''ஏன் ரமணி, பழுத்த பழம் காம்பு ஒடிஞ்சு விழப் போறதுன்னு கலகலப்பாச் சொல்றீங்க. அவர் கண் மூடறதுக்கு முன்

பி.வி.ஆர்.

ளாடி நாம தம்பதியாப் போய் நமஸ்காரம் செய்தால் அவருடைய ஆசீர்வாதம் கிடைக்குமே?''

''ஆசீர்வாதப் வைச்சுக்கிட்டு என்ன செய்யறது, மாலு? இது திரேதாயுகம் இல்லே, ஆசீர்வாதமும் சாபமும் பலிக்கிறதுக்கு! நாம கலியுகத்திலே இருக்கோம். நியாயமும் தர்மமும் விலை போகாத யுகம். பொய், பித்தலாட்டம், லஞ்சம், வஞ்சனை, தாண்டவமாடறது. கண்டகண்டவனெல்லாம் தன்னை ஒரு அவதார புருஷனா வெளிச்சம் போட்டுக்கிட்டு, இருட்டிலே எல்லா அக்கிரமங்களும் செய்யறான்.''

''உங்க உபன்னியாசம் எனக்குத் தேவை இல்லை. நான் வர்றேன். ஆனா ஒண்ணு, இனிமே என் கழுத்திலே தாலி கட்டுங்கன்னு நான் மண்டி போட்டுக் கெஞ்ச மாட்டேன். 'நான் ரெடி'ன்னு நீங்க வரணும்.''

''அதுவரையில் உன்னால் காத்திட்டிருக்க முடியுமா, மாலு?''

''முடியும். ஒருத்தனுக்கு மனைவின்னா அந்த ஒருத்தன் நீங்கதான்!''

ரமணி சிரித்தான்.

''என்ன சிரிக்கிறீங்க?''

''எனக்குஒருசினிமாடயலாக்நினைவுக்கு வந்தது. என்ன தெரியுமா?''

''எனக்குத் தெரிய வேண்டாம். சினிமாக் காதல் அளவுக்கு நான் இன்னும் தாழ்ந்து போகலே.''

''அது எனக்குத் தெரியாதா, மாலு? இருந்தாலும் சொல்றேன். 'மணந்தால் மகாதேவி, இல்லையேல் மரணதேவி! எப்படி?''

மாலு பதில் சொல்லாமல் தன் இருக்கையை நோக்கி நடந்தாள்.

தனம் நேற்றும் சோறு ஆக்கவில்லை. இன்றும் அடுப்புப் பக்கம் போகவில்லை. ரங்கனால் அவளை எதிர்க்கவும் முடியவில்லை. அவளுடைய வசைமொழிகளை அவன் தன்னுடைய வாழ்க்கை அகராதியில் படித்ததே கிடையாது. சென்னைத் தெருச் சண்டைகளில் கீழ்த்தரமான வசைச் சொற்களை அவன் கேட்டதுண்டு. வேடிக்கை பார்க்காமல் அவன் நகர்ந்து விடுவான்.

அன்று, திங்கட்கிழமை அவன் ஆபீசுக்குப் புறப்படுகையில், ''யோவ், நில்லுய்யா!'' என்று சொல்லி தனம் எதிரே வந்தாள்.

''என்ன தனம்?''

''நான் முந்தாநாள் ஒரு பொம்பளை டாக்டர்கிட்டே போனேன், இல்லே?''

''ஆமாம், போனே.''

''எனக்கு என்ன கோளாறுன்னு உனக்குத் தெரியுமா?''

''தெரியாது.''

''என்னடா இவ அடிக்கடி வாந்தி எடுக்கிறாளே, ச்ரியாச் சோறு தின்றதில்லையே, அடிக்கு அடி ஒடம்பு தாளாமப் படுக்கிறாளே, இன்னா விசயம்னு நீ என் கையிலே கேட்டிருக்கியா?''

''இப்ப சொல்லு தனம், உனக்கு என்ன உடம்பு? எதுக்கு டாக்டர் அம்மாகிட்டப் போனே?''

''ஹாங், இப்பக்கேளு. ஏன்யா, நீ அல்லாம் ஒரு புருசனா?''

சீறிப் பாய்ந்த தனம் திடீரென்று அழ ஆரம்பித்தாள். கேவிக் கேவி அழுதாள்.

ரங்கனிடம் இரக்க உணர்ச்சி பெருகவில்லை என்றாலும் அழுகையை அடக்க வேண்டும் என்று தோன்றியது.

''அழாதே தனம். டாக்டர் அம்மா என்ன சொன்னாங்க?''



தனம் கேவலை கீழ் ஸ்தாயிக்குக் கொண்டு போனாள்.

''இன்னும் ஏழெட்டு நாளுக்குள்ளே ஆபரேசன் செஞ்சாகணுமாம். இல்லாட்டி, இல்லாட்டி... நான் செத்துப் பூடுவேனாம். ஏன்யா, நான் ஒன் பொஞ்சாதி இல்லே? ஒனக்கு நான் ஒரு கொயந்தை பெத்துத் தர வேணாம்? நான் செத்துப் பூடணும்னு நீ நெனக்கிறியா?''

''இல்லே தனம், சத்தியமா இல்லே. என்ன ஆபரேஷன்னு டாக்டர் அம்மா சொன்னாங்க?''

''என் வவுத்திலே ஒரு சின்னக் கட்டி வளருதாம். அது பெரிசானா வவுறே வெடிச்சுடுமாம்.''

''ஐய்யோ... நீ சாகக் கூடாது தனம்... நான் இன்னிக்கே உன் அப்பாவைப் பார்த்து விசயத்தைச் சொல்லிடறேன்!''

''அந்தத் துப்புகெட்ட மனுசன் கையிலே எதுக்குய்யா சொல்லணும்? அது ஒரு செல்லாக்காசு குடுக்காது. காதும் காதும் வெச்சாப்பல ஆபரேசனை முடிச்சுப்போம்.''

''ரொம்பச் செலவாகுமா, தனம்?''

''டாக்டர் அம்மா நல்ல அம்மா, முந்தா நாள் என் கையிலே துட்டு கூடக் கேட்கலே. மத்த டாக்டர்னா ரெண்டாயிரம் ஆவும் பாங்க. அவங்க நல்லவங்க. ஆயிரம் ரூவா போதும்னாங்க. முந்தின நாள் ராத்திரி போவணுமாம். மத்தா நாள் சாயங்காலம் ஊட்டுக்கு அனுப்பிச்சுடுவாங்களாம்.''

''ஆயிரமா?''

''அதுக்கு மேலே நூறு இருநூறு ஆவலாம். மருந்துச் செலவு, ஆட்டோ செலவு இதெல்லாம் இருக்குதில்லே? யோவ், நீ இன்னா செய்யறே, ஒரு ஆயிரத்து இருநூறு ரூபா கொண்டா.''

ரங்கன் மௌனமாக நகர்ந்தான்.

''யோவ், பணம் இல்லாட்டி ஆபரேசன் இல்லே! ஆபரேசன் இல்லாட்டி ஒன் பொஞ்சாதி உசிர் இல்லே. இத்த மறந்துடாதே...''

ரங்கன் பதில் கூறாமல் வெளியேறினான்.

ரங்கன், குழைந்து குழைந்து தன்னை நோக்கி வருவதைக் கண்ட ரமணி தனக்குள் சிரித்துக் கொண்டான். தனம் அவனை என்ன பாடுபடுத்தி வருகிறாள் என்பதை ரங்கன் வாய் வார்த்தையாகச் சொல்லாமலே அவன் அறிவான்.

ரங்கனாகப் பேச்சை ஆரம்பிக்கட்டும் என்று ரமணி ஏதோ ஒரு ஃபைலை எடுத்துப் பிரித்தான்.

''ரமணி சார்!'' ரங்கனுடைய குரலில் சோகம் இல்லை. கெஞ்சல் ஒலித்தது.

''என்ன ரங்கா, என்ன வேணும்?''

''பணம்.''

''நெனைச்சேன்.''

''ஆயிரத்து இருநூறு.''

''போன மாசம் வரை பத்துப் பைசா இருபது பைசான்னு கணக்குப் பார்த்துச் செலவழிச்சவன் இப்ப ஆயிரம் ஆயிரமா எடுத்து வீசறே!''

''ரொம்ப முக்கியமான செலவு ரமணி சார்!''

''உன் பெண்டாட்டிக்குத்தானே?''

ரங்கன் தலையாட்டினான்.

''இதப்பாரு. போன மாசம் கல்யாணம் ஆன உடனே வீட்டு வாடகை, மளிகை சாமான், அப்புறம் தனத்துக்குத் துணி மணின்னு ஆயிரம் எடுத்தே... அப்புறம் தனம் காதுக்கு ஜிமிக்கி வேணும்னா, காலுக்குக் கொலுசு வேணும்னான்னு எழுநூறு, எடுத்தே... இப்ப ஆயிரத்து இருநூறு! எதுக்கு? உன் கணக்கிலே மூவாயிரத்துச் சொச்சம்தான் இருக்கு.''

''அவளுக்கு ஆபரேஷன் செய்யணும்.''

''ஆபரேஷனா? தனத்துக்கா?''

''ஆமாம்.''

''எங்கே, மூளையிலா?''

ரமணியின் நையாண்டியைப் பொருட்படுத்தாமல், ''வயித்திலே ஏதோ கட்டி வளர்ந்திருக்காம். அதை எடுத்துடணுமாம்,'' என்றான் ரங்கன்.

''அவ சொன்னாளா?''

''டாக்டர் அம்மா சொன்னாங்களாம்...''

''ஆபரேசன் செய்யாமப் போனா என்ன ஆகுமாம், ரங்கா? அதையும் தனம் சொல்லியிருப்பாளே?''

''சொன்னா. கட்டி வளர்ந்துட்டே போகுமாம். பெரிசாகும். அப்புறம் வயிறு வெடிச்சுச் செத்துப் போயிடுவாளாம்.''

ரமணி வாய்விட்டுச் சிரித்தான்.

''நீ வடிகட்டின முட்டாள் ரங்கா. உன்னை அவ நன்னா ஏமாத்திட்டு வர்றா.''

''இல்லீங்க ரமணி சார்... கொஞ்ச நாளாவே அவ அடிக்கடி வாந்தி எடுக்கறா... சரியாச் சாப்பிடறதில்லே... சுருண்டு சுருண்டு படுக்கறா. எனக்குப் பயமா இருக்கு.''

''என்ன பயம்? பெண்டாட்டி அம்பேல் ஆயிடுவாளோன்னா?''

''உங்களுக்கு எல்லாம் விளையாட்டா, இருக்கு, ரமணி சார்.''

''ஏண்டா ரங்கா, தெரியாமத்தான் கேக்கறேன். இந்த பஜாரி தனம் செத்துப் போனா உனக்கு என்ன நஷ்டம்? வேறே ஒருத்தி வருவா...''

''இப்படி எல்லாம் பேசாதீங்க, ரமணி சார். பாஸ் புக்கைக் குடுங்க, பணம் எடுத்து வர்றேன்.''

''தர்றேன்.''

''தனத்தைக் கட்டிக்கிட்டேன். இனிமே அவளுக்குச் செய்ய வேண்டிய கடமை

எனக்கு இருக்கு, இல்லியா?''

''ஓ, இருக்கு! நிறைய இருக்கு. உன் கடமையை நல்லாச் செய்... பாங்க்லே இருக்கிற பணமெல்லாம் கரைஞ்சப்புறம் எப்படி தனத்தோட முதலை வாய் தொறக்கறப்பவெல்லாம் நீ வாரி வாரிப் போட்டு உன் கடமையைத் தீர்க்கப் போறேன்னு நான் பார்க்கிறேன்... எனக்கென்ன, உன் பணம், உன் பெண்டாட்டி...''

ரமணி மேஜை டிராயரைத் திறந்து பாஸ் புத்தகத்தை எடுத்து வீசி எறிந்தான். அது மேஜையின் விளிம்பில் பட்டுக் கீழே விழுந்தது.

ரங்கன் குனிந்து எடுத்தபின், ரமணியைப் பார்த்தான்.

''உங்க கோபத்திலே நியாயம் இல்லே, ரமணி சார். நிஜமாலுமே தனத்துக்கு உடம்பு சரியில்லே... முந்தா நாள் அவ டாக்டர் கிட்டே போனா...''

''யாரு அந்த டாக்டர்?''

''பேரு... பேரு... ஹங்... அம்புஜம்.''

''எங்கே இருக்காங்க?''

''பிராட்வேயில கடைசியிலே சோத்துக் கைப் பக்கமா...''

''சரி போ... ஆமாம், என்னிக்கு ஆபரேஷன்?''

''இனிமேத்தான் தெரியும்.''

''வேறே என்ன உதவி வேணும்னாலும் கேளு. செய்யறேன். உன் கணக்கிலே பணம் தீர்ந்து போனாலும் கவலைப்படாதே. நான் இருக்கேன்.''

''நீங்க மகமாயி மாதிரி. கோவிச்சுப்பீங்க. மகமாயி மாதிரி கருணையும் காட்டுவீங்க, ரமணி சார்...''

ரமணி அன்று மாலையே பிராட்வேயில் கோடி வரை நடந்தான். வலதுபுறத்தில் ஒரு மூன்று மாடி வீட்டில், முதல் மாடியில் அம்புஜம் தன் சிகிச்சை நிலையத்தை அமைத்துக் கொண்டிருந்தாள்.

ஆபரேஷன் வெற்றிகரமாக முடிந்துவிட்டதாக ஜனவரி இருபத்தேழாம் தேதி ரங்கன் மகிழ்ச்சியுடன் தெரிவித்த போது, ரமணி எல்லாவற்றையும் கூட்டிக் கழித்துப் பார்த்தான்.

அன்று மாலை இரவு எட்டு மணி அளவில் டாக்டர் அம்புஜத்தை அவன் சந்தித்தான். இருவரும் சரளமாகப் பேசிக் கொள்ளும் அளவுக்கு ரமணி தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளவே, உண்மை வெளிவந்தது.

தன்னுடைய ஊகம் சரியாகி விட்டது என்று ரமணி தன் முதுகில் தானே தட்டிக் கொள்ளவில்லை.

இந்த தனத்திடமிருந்து ரங்கனை எப்படிப் பிரிப்பது என்ற யோசனையில் மூழ்கிப் போனான்.

(தொடரும்)

* ஆர். சாம்பசிவம், காஞ்சிபுரம்.

? "ஒட்டடைக்குச்சியைவெடுத்துக்கொண்டதால் சிலந்திப்பூச்சி சிம்மாசனம் ஏறி விட்டது" என்று காளிமுத்து வர்ணித்திருக்கிறாரே?

! ஆக, சிலந்திப்பூச்சி சிம்மாசனத்திலிருந்து விரட்டப்படுமானால் ஒட்டடைக் குச்சிதான் அதில் அமரப் போகிறது என்கிறார்! அவர் இன்னும் கொஞ்சம் எச்சரிக்கையாகப் பேசுவது நலம்.

* எஸ். யோகலிங்கம், சென்னை.

? இந்தியக் கிரிக்கெட் அணியின் சமீபத்திய சாதனை என்ன?

! ஷார்ஜாவிலும் தோல்வி!

* ஜே. சரவணன், வேலூர்.

? முதல்வர், விடுதலைப்புலிகளுடன் கொண்டுள்ள நட்பு?

! "கூடா நட்பு; ஆபத்தானது. புலிகளுக்கும் கொழும்பு மைய அரசுக்கும் இடையே இப்போது ஏற்பட்டுள்ள நெருக்கம் நீடிக்கப் போவதில்லை. மறுபடி புலிகள் போராட்டத்தைத் தொடங்க வேண்டியிருக்கும். அப்போது தமிழகத்தில் அவர்கள் ஒரு ராணுவத் தளம் அமைத்துக் கொள்ள முயற்சி செய்வார்கள். இப்போதே தமிழகத்தின் தெற்குக் கடற்கரையோரப் பகுதிகளில் புலிகளின் ஆதிக்கம் ஆரம்பமாகியிருக்கிறது. கருணாநிதியின் போக்கு கவலை தருகிறது" என்றெல்லாம் தேசிய நாளிதழான ஹிந்துஸ்தான் டைம்ஸ் தலையங்கம் எழுதியிருப்பதை அலட்சியம் செய்வதற்கில்லை.

* இளங்கவி, கள்ளி மந்தயம்.

? "மரத்தடிப் படிப்பே மகத்தானது" என்கிறாரே, அன்பழகன்?

! இப்போது பெரும்பாலான அரசுப் பள்ளிகளில் கட்டடத்துக்குள் நடக்கும் படிப்பே மரத்தடிப் படிப்பாகத்தான் இருக்கிறது. வெயிலில் காய்ந்தும் மழையில் நனைந்தும் புழுதியில் குளித்தும்தான் குழந்தைகள் படிக்கிறார்கள்.

* இரா. ஆதிநாராயணன், தஞ்சை.

? 'காவிரி நீர் பிரச்னை குறித்துக் கர்நாடகத்துடன் இனி பேசிப் பயனில்லை; பேசப் போவதுமில்லை' என்று கூறியுள்ளாரே, கலைஞர்?

! சரியான கணிப்பு. நடுவர் தீர்ப்புக்கு விட்டு முடிவை ஏற்பதுதான் நல்லது.

# சட்டசபையில் சாப்பாடு கேட்டது சரியா?



* தமிழ்க் காதலின் சோர்



* மரத்தடி மகாத்மியம்

* கே. வேல்சாமி, மதுரை.

? தான் சார்ந்திருக்கிற கட்சி எந்த அநீதி அக்கிரமங்களைச் செய்தாலும் அதற்கும் ஒரு நியாயம் கற்பிக்கும் அடிமட்டத் தொண்டன் பற்றி...?

! கட்சியில் உள்ள ஈடுபாட்டை விட கட்சித் தலைவரிடம் உள்ள ஈடுபாடுதான் அவனை இவ்வாறு நடந்து கொள்ளச் செய்கிறது. இந்த "ஹீரோ ஒர்ஷிப்" என்பது தொன்று தொட்டு நமது ரத்தத்தில் ஊறிப் போய் இருக்கிற விஷயம். 'தலைவர் தவறே செய்ய மாட்டார்' என்று எண்ணுகிறார்கள். அவரை 'இந்திரன், சந்திரன்' என்று விண்ணளாவப் புகழ்ந்து தள்ளுகிறார்கள். இதெல்லாம் முன்னாளைய மன்னர் ஆட்சியிலி

* பா. லெட்சுமிநாராயணன், சென்னை.

? சட்டசபையில் சாப்பாடு கேட்டது சரியா?

! கூப்பாட்டை விட சாப்பாடே தேவலாம்.



* கூறியது குற்றமே!



* புலிகளுடன் நட்பு...

# திடீர் அக்கறை

அகிலாவிற்குத் தன் கண்களையே தன்னால் நம்பமுடியவில்லை. நனவுதானா என்று கிள்ளிப் பார்த்துக் கொள்ளத் தோன்றியது. எல்லை மீறிய சந்தோஷத்தில் உடல் முழுவதும் படபடத்தது.

கையிலிருந்த கடிதத்தை மீண்டும் பிரித்துப் படித்தாள். நிதானமாக, ஒவ்வொரு வார்த்தையாகப் படித்தாள்.

இந்த அண்ணாவிற்கு எங்கிருந்து வந்தது இப்படியொரு அக்கறை? என்மீது.... என் கல்யாணத்தின் மீது....

'இருபத்து நான்காம் தேதி புதன்கிழமை மாலை பெண் பார்க்க வருகிறார்கள். எல்லா விவரமும் சொல்லியிருக்கிறேன். அனேகமாக அமைந்து விடும். புதன்கிழமை மதியம் போல நான் வந்து விடுகிறேன். ரெங்கநாதர் துணையிருப்பார். எல்லாம் நல்லபடி முடியும்'.....

கடைசி நான்கு வரிகளைத் திரும்பத் திரும்பப் படித்தாள். இன்றைக்குத் தேதி என்ன? இருபத்து மூன்று. அப்படியானால் நாளைக்குத் தான்....!

சந்தோஷச் செய்தியை அம்மாவுக்குத் தெரிவிக்க அவள் மனம் துடித்தது.

அம்மா இந்நேரம் வக்கில் வீட்டிலே இருப்பாள், பாத்திரம் தேய்த்துக் கொண்டு. சிங்கப் பெருமாள் கோவிலைத் தாண்டிப் போக வேண்டும். ஒரு மைல் இருக்கும். சரி அம்மா வந்துடட்டும். சின்னவன் எங்கே போனான்?.... அவன்கிட்டே சொல்லி என்னாகப் போகிறது?

ஆவலைக் கட்டுப் படுத்திக் கொண்டு நடுக் கூடத்துக்குப் போனாள். கடிதத்தைச் சுவாமி படத்தின் முன் வைத்துக் கை கூப்பினாள். கண்கள் கலங்கின. மனசு விம்மியது.

''இப்பவாவது எங்கண்ணாவுக்கு மனசைக் குடுத்தியே ரெங்கா... நாலு வருஷமா ஒரு லெட்டர் கூடப் போடாத வரை, எனக்கு வரன் பார்க்கிற அளவுக்குத் தூண்டி விட்டிருக்கியே... ரொம்ப நன்றிப்பா.....'' அவள் உதடுகள் முணுமுணுத்தன.

''என்ன விசாலம்?... உம்பொண்ணு அகிலாவுக்கு என்ன வயசு?''

''அவளுக்கென்ன!... வைகாசி வந்தா முப்பத்து மூணு முடியும்...'' குரலில் அலுப்பு நிறையவே வெளிப்பட்டது.

''உன் பெரிய மகன் ஏதாவது லெட்டர் கிட்டர் போடறானா இல்லையா? கொஞ்சம் கூட பொறுப்பே இல்லாம இருக்கானே?''

''ஹூம்!... அவனைச் சொல்லி என்ன செய்ய? அவனுக்கு வாய்ச்சவ அப்படி. இழுத்துக் கட்டிப் போட்டுட்டா!''

''லோகத்திலே இப்படியும் இருப்பாளோ?''

''இருக்காளே.... எனக்கு வந்து வாய்ச்சிருக்காளே மாட்டுப் பொண்.... என்னத்தைச் சொல்ல? எல்லாம் இந்த அகிலாவோட தலையெழுத்து. அதிர்ஷ்டம் கெட்டவள்....'

''சின்னவன் என்ன பண்றான்?''

''ம்... பண்றான் சட்டியும், பானையும்! ஊரைச் சுத்திச் சுத்தி வரான். ஊரு பூராக் கடன் வாங்கியிருக்கான். வேறென்ன செய்யறான். அவனைக் குற்றம் சொல்லி என்ன செய்ய? பி.ஏ. பாஸ் பண்ணி முழுசா எட்டு வருஷமாச்சு. வேலை கிடைச்ச பாடில்லே... பெரியவனைக் கேட்டா சின்னவனைக் கை காட்டுறான். 'நான் தான் பத்து வருஷம் இந்தக் குடும்பத்தை வைச்சுக் காப்பாத்தினேனே? அப்புறம் தானே கல்யாணம் பண்ணிட்டேன்? சின்னவன் கொஞ்ச நாளைக்கு உழைச்சுக் காப்பாத்தட்டுமே, தங்கைக்குக் கல்யாண ஏற்பாடு செய்யட்டுமே'ங்கிறான். 'எனக்கும் ரெண்டு பொண்ணாச்சு. அதைக் கரையேத்த வேண்டாமா'ன்னு என்னையே எதிர்க் கேள்வி கேட்கிறான்...'' விசாலம் ஒரு மூச்சு அழுது முடித்தாள்.

''சரி மாமி. அரிசியும் உளுந்தும் எடுத்துக் குடுங்க. ஊற வைச்சுட்டுப் போறேன். மதியம் வந்து அரைச்சுடறேன்...''

அகிலாவுக்கு ஐந்து வயது இருக்கும் போதே அப்பா பரமபதம் அடைந்து விட்டார். அப்போது பெரியவனுக்குப் பதினெட்டு வயதிருக்கும். வேலை கிடைத்து ரெண்டு மாதமே ஆகியிருந்த சமயம். சின்னவனோ மூன்று வயதுக் குழந்தை.

அடுத்த பத்து வருடத்துக்குப் பெரியவனின் வருமானம்தான் குடும்பத்துக்குச் சோறு போட்டது. அவனுக்குக் கல்யாணம் ஆகும் போது அகிலாவுக்குப் பதினைந்து வயது.

'அவளுக்கென்ன அவசரம்? இன்னும் நாலு வருஷம் போகட்டும். அப்புறம் வரன் பார்க்கலாம்...' என்று தள்ளிப் போட்டார்கள். அதற்குள் பெரியவனுக்கு அடுத்தடுத்து

'ராஜ்கோகுல்'



இரண்டு பெண் குழந்தைகள் பிறந்து விட்டன. கோயமுத்தூருக்கு மாற்றலும் வந்து விட்டது. அம்மாவையும் தம்பி, தங்கையையும் ஸ்ரீரங்கத்திலேயே விட்டு விட்டு, தனிக் குடித்தனம் போனான்.

தூரம் உறவையும் தூரமாக்கியது. ஆரம்பத்தில் கொஞ்ச வருஷம் அங்கே, இங்கே யென்று தங்கைக்கு வரன் தேடத்தான் செய்தான். பிள்ளை வீட்டார் கேட்ட சீரும், வரதட்சிணையும் அவனை அயரச் செய்தன. வாழ்க்கைத் துணையாய் வந்தவள் வெட்டிப் பிரித்தாள். 'நமக்கும் ரெண்டு பொண்ணுங்க இருக்கு. அதைப் பத்திக் கவலைப் படுங்க. உங்க தங்கையை உங்க தம்பி காப்பாத்துவாரு....' என்று தூபம் போட்டாள்.

போக்கு வரத்து குறைந்தது. கடித வரத்தும் குறைந்தது.

ஒரு முறை இவர்கள் மூவரும் கோயமுத்தூர் சென்ற போது, மருமகள் அடிக்காத குறையாகப் பேசித் திருப்பியனுப்பி விட்டாள்.

இன்றைய கணக்குப் படி விசாலம் பெரியவனைப் பார்த்தே மூன்று வருஷத்துக்கு மேலாகி விட்டது. பேத்திகளைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலைக் கூட மருமகளின் குணம் நினைத்து அடக்கிக் கொண்டாள்.

'பேத்திகளைப் பார்க்கணும் போலிருக்கு அகிலா....'

'ஓஹோ? அதான் குறையாக்கும் இப்போ?.... பேத்திகளாம் பேத்திகள்! எல்லாம் எனக்கு எமன்களாய் வந்தவை. அதுக மட்டும் இல்லேன்னா அண்ணா எனக்கு எப்பவோ கல்யாணத்தை முடிச்சிருக்கும்.... நந்திகள்... அதுகளைப் போய் பார்க்கணுமாக்கும்?' இப்படி எத்தனையோ முறை சொல்லியிருக்கிறாள் கோபமாக.

பெரியவன் கடிதம் போடுவதைக் கூட நிறுத்தி விட்டான். பெற்ற கடனுக்கு மாதா மாதம் இருநூறு ரூபா மணியார்டர் அனுப்புவான். மணியார்டர் பாரத்தில் எப்போதும் மெஷின் தனமாக 'அம்மா சௌக்கியமா? தங்கை சௌக்கியமா? சின்னவன் ஏதாவது வேலைக்குப் போகிறானா?' என்று ரப்பர் ஸ்டாம்ப் அடித்தது போல எழுதுவான்.

'இந்தப் பணத்தை ஏம்மா வாங்கறே? பேசாம திருப்பியனுப்பு அவங்களுக்கே. அங்கே பிறந்திருக்கே ரெண்டு சனியன்கள் அதுகளே அனுபவிக்கட்டும்...' என்று எத்தனையோ முறை கத்தியிருக்கிறாள் அகிலா.

விசாலம் வீட்டிற்குள் நுழைந்தும் நுழையாததுமாக எதிர் கொண்டாள் அகிலா.

''அண்ணா லெட்டர் போட்டிருக்கும்மா...'' என்றாள் உற்சாகமாக.

''அஞ்சாம் தேதி தானே வரும் மணியார்டர்?'' — புரியாமல் கேட்டாள்.

''அதில்லேம்மா. லெட்டர் போட்டிருக்கு. எனக்கு ஒரு வரன் பார்த்திருக்காம். நாளைக்குப் பெண் பார்க்க வர்றாங்களாம்...'

கடிதத்தைப் பிரித்து வேகமாகப் படித்துக் காண்பித்தாள் மகள். அம்மாவாலும் விஷயத்தை நம்ப முடியவில்லை. கண்ணீர் பெருகியது. சேலைத் தலைப்பால் ஒற்றிக் கொண்டாள். நின்ற இடத்திலேயே கை கூப்பி ரெங்கநாதனுக்கு நன்றி சொன்னாள்.

கொஞ்ச நேரம் கழித்து உள்ளே நுழைந்த சின்னவன், தடாலென்று அம்மாவின் காலில் விழுந்தான்.

''எனக்குச் செங்கிப்பட்டி செக் போஸ்டிலே டெம்ப்ரவரியா வேலை கிடைச்சுருக்கும்மா....'' சந்தோஷம் பீறிட்டது வார்த்

தைகளில்.

"சந்தோஷம்டா சின்னவனே! நடந்தா எல்லாம் நல்லதா நடக்கும்கிறது சரியாகத் தான் இருக்கு...." — அண்ணாவின் கடிதத்தைப் பற்றி கூறினார்கள்.

அவர்கள் சந்தோஷம் இருமடங்காகியது.

அடுத்த நாள் —

பெண் பார்க்கும் படலம் முடிந்து, பிள்ளை வீட்டார் சென்று விட்டார்கள்.

அவர்கள் மகிழ்ச்சியோடு பேசிக் கொண்டிருந்தார்கள்.

"எப்படியோப்பா! வந்தவாளுக்கு அகிலாவை ரொம்பப் புடிச்சுப் போச்சு. எல்லாம் நல்லபடியா முடிஞ்சாச் சரிதான்..."

"அது சரிண்ணா. இத்தனை வருஷமா அக்கறையே இல்லாத மாதிரி இருந்தே. இப்ப எப்படி திடீர்ன்னு அக்காவோட கல்யாண ஏற்பாட்டிலே இறங்கினே?...." சந்தேகம் கேட்பது போலக் கேட்டான் சின்னவன்.

பெரியவன் பதில் சொல்ல வில்லை. அவனது முகம் கொஞ்சம் சிறுத்தது. சுவரோரம் சாய்ந்து நின்றிருந்த தன் மனைவியை, 'சொல்லட்டுமா?' என்பது போலப் பார்த்தான்.

"நானே சொல்லிடறேங்க..." என்று ஆரம்பித்தாள் மருமகள்.

"எங்களை மன்னிச்சுடுங்க அத்தை. சொல்லப்போனா இதுவும் எங்க சுயநலத்துக்காகச் செய்யிறோம்னு தான் சொல்லணும். முதல்லே என் பெண் குழந்தைகளைக் காரணம் காட்டித் தான் அகிலாவோட கல்யாணத்துக்கு உதவுவதைத் தடுத்தேன். இப்ப அதே பெண்களுக்காகத் தான், அகிலாவுக்கு வரன் பார்க்க வேண்டியதாயிடுச்சு...."

மற்ற மூவரும் புரியாமல் பார்த்தார்கள்.

"ஆமா அத்தை.... எங்க மூத்த பொண்ணுக்கு வரன் பார்க்க ஆரம்பிச்சோம். பார்த்த மூணு வரனும் தட்டிக் கழிஞ்சது. சொல்லி வைச்சாற் போல எல்லோருமே, 'உங்களுக்கு ஒரு தங்கை இருக்காளாமே, கல்யாணமாகாமே. அவளுக்குக் கல்யாணம் முடிங்க முதல்லே. அந்தப் பாவத்துக்கு நாங்களும் துணைக்கு வந்ததா ஆயிடும்'னு சொல்லிட்டாங்க... இப்போ அகிலா கல்யாணம் முடிஞ்சாத்தான் எங்க பொண்ணு கல்யாணம் நடக்கும்கிற மாதிரி சூழ்நிலை ஏற்பட்டிருச்சு... அதனாலே தான்...."

கேட்டுக் கொண்டிருந்த அகிலாவுக்கு வியப்பாக இருந்தது. இத்தனை நாள் தனக்குத் தடையாக நினைத்து, 'சனியன் நந்தி' என்றெல்லாம் திட்டிக் கொண்டிருந்த குழந்தைகள் தான் நடக்கப் போகும் தன் திருமணத்திற்கே காரணம் என்று தெரிந்து ஆச்சரியப்பட்டாள். மனத்துக்குள் அக்குழந்தைகளை ஆசிர்வதித்தாள்!

# அதிர்ஷ்ட தேவதை

6

தனத்தைப் பார்த்த உடனேயே ரங்கன் இடிந்து போனான். அவனுடைய மனைவி தனமா இவள்? இரண்டே நாளில் அவள் எப்படி இளைத்துப் போய் விட்டாள்? ஏன் முகம் இப்படி வெளுத்துப் போய் விட்டது! வயிற்றுக் கட்டியை வெளியே எடுக்கும் போது உடம்பின் ரத்தமெல்லாமே வெளியேறி விட்டதா?

சைக்கிள் ரிக்ஷா நின்றது. தனம் மெதுவாக இறங்கினாள். அவள் மிகவும் சோர்ந்து போயிருக்கிறாள் என்பதை எளிதில் உணர்ந்த ரங்கன், அவளுக்கு உதவி செய்ய நெருங்கினான். அவள், ரங்கன் நீட்டிய கையை உதாசீனம் செய்து விட்டு, "அந்த ஆள் கையிலே அஞ்சு ரூபா குடுய்யா" என்று கூறி வீட்டினுள் சென்றாள்.

ரங்கன் வீட்டினுள் பிரவேசித்த போது, தனம் படுத்திருந்தாள்.

"தனம்..."

"........"

"தனம், என்ன செய்யறது இப்ப?"

"ஒண்ணும் செய்யலே... நீ தொணதொணக்காம இரு."

"டீ வாங்கியாரட்டுமா?"

"ரெண்டு நாளுக்கு டீ, காப்பி எதுவும் குடிக்கக் கூடாதுன்னு டாக்டர் சொல்லிச்சு."

"அப்ப?"

"ஆர்லிக்ஸ் குடிக்கச் சொல்லிச்சு."

"வாங்கியாரேன்."

"சொல்லிட்டு நிக்காதே!"

இரண்டு நாட்கள் ரங்கன் ஆபீசுக்குச் செல்லவில்லை. மூன்றாம் நாள், "நான் இன்னிக்கு ஆபீஸ் போலாம்னு இருக்கேன், தனம்..." என்றான்.

"யார் வேணாம்னு சொன்னாங்க?"

"ரெண்டு நாள்ளே ஒன் ஒடம்பு நல்லாத் தேறிட்டது."

"அதுக்கு இன்னா செய்யணுங்கறே?"

"ரொம்ப வலிக்குதா?"

"யோவ், இன்னா கேள்வியா கேக்கிறே... செத்துப் பொழைச்சு வந்திருக்கேன்யா...."

"எங்கே கத்தி வைச்சாங்க, அந்த டாக்டரம்மா? இங்கேயா...?" ரங்கன் அவளுடைய வயிற்றைத் தொடப் போனான்.

"கையை எடுய்யா...."

"என்ன தனம் இது, நான் ஒன் புருசன் இல்லே...."

"யார் இல்லேன்னா? அதான் கழுத்திலே தாலி கட்டியிருக்கியே... இதுக்குள்ளே இன்னா அவசரம் ஒனக்கு... நீ ஆபீசுக்குப் போ..."

அருகே உட்கார்ந்திருந்தவன் எழுந்தான்.

"யோவ்."

"என்ன, தனம்?"

"இன்னும் ரெண்டு மாசத்துக்கு நீ என் கிட்ட நெருங்கக் கூடாதுன்னு டாக்டர் அம்மா சொல்லிச்சு. அதனாலே..."

"அதனாலே?"

"நீ வேணும்னா ஆபீஸ்லேயே தங்கிக்க."

"ஒன்னை யாரு கவனிச்சுப்பா தனம்?"

"ஏன்யா கலியாணத்துக்கு முன்னாடி நீயா கவனிச்சுட்டிருந்தே?"

"அப்ப ஒன் அப்பா இருந்தாரு."

"இன்னாய்யா பினாத்தறே? அது எங்கேய்யா இங்கே இருந்திச்சு? மில்லி அடிச்சுட்டு ஆபீஸ்லே அல்ல தூங்கிச்சு?"

என்ன பதில் சொல்லுவது என்று ரங்கனுக்குப் புரியவில்லை. அவன் மௌனமாய் நகர்ந்தான்.

"யோவ்!"

திரும்பிப் பார்த்தான்.

"என் அப்பன் கையிலே இதைப் பத்தி சொல்லாதே..."

"சொல்லக் கூடாதா?"

"சொல்ல வேணாம்.. அது ஒரு மாதிரி... மறுபடியும் ஊட்டுக்கே வந்துடும்."

"சரி, சொல்லலே."

"சாயங்காலம் வருவே இல்லே?"

"நீதான் வர வேணாம்னியே..."

"யாரய்யா அப்படிச் சொன்னாங்க? ரெண்டு மாசம் நீ பொறுத்துக்கணும், அவ்வளவுதான்."

"சரி."

"ஆபீஸ்லேர்ந்து வரும் போது ஒரு ஐநூறு ரூபா பணம் எடுத்தா!"

"பணமா... இப்ப பாங்கில பணம் நூறோ இருநூறோதான் இருக்கும்."

"அப்ப கடன் வாங்கு."

"யார்ட்டே வாங்கறது, தனம்?"

"அதான் ஒரு அய்யரு நம்ப கலியாணத்துக்கு வந்து என்னைப் பார்த்து பல்லைக்

பி.வி.ஆர்.

சுடிச்சுதே... அது கையிலே கேளு.''

''அவர் பேரு ரமணி, தனம்!''

''என்ன எளவானா எனக்கு இன்னா?''

''அவர் ரொம்ப நல்லவரு, தனம். அவரு தான் என்னை ஒரு ஆளா மாத்தினவரு.. அவரு இல்லாட்டி நான் என்னிக்கோ...''

''சரித்தான் நிறுத்துய்யா, பொலம்பாதே... எனக்குப் பணம் வோணும்... ஹங் ஹாங், சொல்லிட்டேன், ஆமாட்''

ரங்கன் பதில் சொல்லாமல் வெளியேறினான்.

தனத்தை, அவன் தன் மனைவியாக நினைத்துப் பார்க்க அவனால் முடியவில்லை. ரமணி கூறிய அறிவுரைகள் இப்போது காலதாமதமாக மண்டையில் அடித்தன.

அவன் ஆபீசை அடைந்தான். நரகத்திலிருந்து சொர்க்கத்துக்கு வந்து விட்டதான பிரமை ஏனோ அவனுள் பிறந்தது.

**தி**ன்னை நோக்கிப் புன்முறுவலுடன் வரும் மாலுவைக் கண்ட போது ரமணிக்கு, அவள் சொன்ன வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. இரண்டாவது நல்ல செய்தியை அவள் கூறிய நாளிலிருந்து அசையாத நம்பிக்கை கொண்டிருக்கிறாள். விரைவில் அவனை மணம் செய்து கொண்டு வாழ்க்கையை ஆரம்பிக்கத் துடிக்கிறாள். ஆனால் அவன் தயாரில்லையே? அவனுடைய தாத்தா இன்னும் மண்டையைப் போடவில்லையே? அவர் தாமதம் செய்யச் செய்ய நிலத்தின் விலை ஏறிக் கொண்டே போகும். மூன்று பிள்ளைகளுக்கும் மூன்று பெண்களுக்கும் அவருடைய சொத்து பிரிக்கப்படும். வீட்டுக்கும் நிலத்துக்கும் ஒரு விலையை ரமணி நிர்ணயித்து, பணமாக அள்ளி விட்டால், அதன் பிறகு ஒரு பிரச்னையும் இராது. ஆனால் பணத்துக்கு அவன் எங்கே போவான்? நிறுவன அதிபர் ரமேஷ் சாண்டில்யாவிடம் லட்சம் லட்சமாகக் கொட்டிக் கிடக்கிறது. ஒரு வியாபார பிரேரணையாக அவன் ரமேஷிடம் பேசினால் பணம் கிடைக்க வாய்ப்பு இருக்கிறது. யோசிக்க வேண்டிய விஷயம். ஆனால் இப்போதே சிந்தித்துச் சிந்தித்து மண்டையைப் புண்ணாக்கிக் கொள்ளுவதில் என்ன புண்ணியம்? தாத்தாவுக்கு, அவன் நெய்ப் பந்தப் பிடித்த பிறகுதானே அவன் எதையும் சாதித்துக் கொள்ள முடியும்? எப்போது நெய் வாங்குவான், எப்போது பந்தம் பிடிப்பான்?

''என்ன, ஐயா ரொம்ப ஆழமா எதையோ நினைச்சுட்டிருக்கார் போலிருக்கு!''

''வா, மாலு. உட்கார்.''



''என்ன ரமணி, எது பத்தி யோசனை செஞ்சுட்டிருந்தீங்க?''

''நம்ப கலியாணம் பத்தி....''

''நிஜமாவா, ரமணி?''

''இதிலே கூடவா நான் பொய் சொல்லணும், மாலு?''

''அப்ப, என் அக்கா கலியாணத் தன்னிக்கே....''

''நோ, நோ.. அது முடியாது, மாலு. ரெண்டு பெண்களோட கலியாணமும் ஒரே நாளில் நடக்கணும்னு உன் அம்மா ஆசைப் படறதுக்காக, என்னால் அவசரப்பட முடியாது. கொஞ்சம் வெயிட் பண்ணு...''

''கொஞ்சம்னா?''

''நேத்து ராத்திரி கூட தாத்தா ரொம்ப இருமினார்...''

''புரியறது, ரமணி.''

''காப்பி சாப்பிடறியா... அதோ ரங்கன் வர்றான். வாங்கிட்டு வரச் சொல்லப் போறேன்.''

''ஆமாம், ஏன் ரெண்டு நாளா ரங்கன் வரலை? கலியாணமானதும் `ஹனிமூன்' போகலே... இப்பப் போயிட்டு வந்தானா?''

ரங்கன் எதிரே வந்து நின்றான்.

மாலு அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

''ஏம்மா சிரிக்கிறீங்க?'' என்று ரங்கன் கேட்டான்.

''ஏன் சிரிக்கப்படாதா, ரங்கா? அது சரி, உன் மனைவி எப்படி இருக்கா? உன் வாய்க்குப் பிடிச்சதை ஆக்கிப் போடறாளா?''

''ரமணி சார், காப்பி வாங்கியாரட்டுமா?''

''ரெண்டு கப்... ஸ்ட்ராங்.''

அவன் வெளியேறியதும், ''மாலு, இனிமே ரங்கன்கிட்ட அவன் பெண்டாட்டியைப் பத்தி எதுவுமே கேட்காதே!'' என்றான் ரமணி.

''ஏனாம்?''

''அவன் சோகமா இருக்கான்.''

''ஏனாம்?''

''மனைவி அமைவதெல்லாம்....''

''தெரியும். கடவுள் கொடுத்த வரம். ரங்கன் ஏன் சந்தோஷமா இல்லை?''

''சமயம் வர்றப்ப சொல்றேன்.''

காப்பி வந்தது.

ரமணியும் மாலுவும் குடித்தபின், ''மாலு ரெண்டு முக்கியமான லெட்டர் வந்திருக்கு. அது சம்பந்தமான ஃபைல்களை எடுத்து வை. நான் ஒரு பத்து நிமிஷத்திலே வந்துடறேன்,'' என்று சொல்லி ரமணி எழுந்தான்.

''எங்கே போறீங்க?''

அவன் பதில் கூறாமல் ஹாலை விட்டு வெளியேறினான். ரங்கன் உட்கார்ந்திருக்கும் இடத்தைக் கடக்கையில், ''ரங்கா, வெளியே வா!'' என்றான்.

இருவரும், ஆபீஸ் கட்டடத்துக்கு அடுத்தாற்போலுள்ள வெட்ட வெளியில் சந்தித்துக் கொண்டார்கள்.

''தனம் எப்படி இருக்கா?''

''ஆபரேஷன் முடிஞ்சு வீட்டுக்கு வந்தாச்சு.''

''தெரியும். இப்ப எப்படி இருக்கா?''

''தெம்பா இருக்கா. ஐநூறு ரூபா பணம் வேணும்னா.''

''எதுக்கு?''

''சொல்லலே.''

''கொடுக்கப் போறியா?''

''என் கணக்கிலே எவ்வளவு மிச்சம் இருக்குன்னு கூட எனக்குத் தெரியாது, ரமணி சார்.''

''அந்தக் கவலை உனக்கு எதுக்கு, ரங்கா? கொடுக்கப் போறியா?''

''வீண் செலவு செய்யறா, ரமணி சார். அடாவடித்தனமாப் பேசறா... என்னை மதிக்க மாட்டேங்கறா...''

''ஏன் தெரியுமா, ரங்கா?''

''தெரியாது சார்... ஒருவேளை நான் குள்ளமா, வழுக்கைத் தலையோட இருக்கிறது அவளுக்குப் பிடிக்கலையோ என்னமோ! ஆனா அப்படியும் படலே. பிடிக்காம இருந்தா என்னை ஏன் அவ கலியாணம் பண்ணிட்டிருக்கணும்?''

''நான் சொன்னப்ப உன் மண்டையிலே ஏறலே... பிடிவாதமா அவ கழுத்திலே தாலியைக் கட்டினே. அவ உன் பணத்துக்காகத் தாண்டா கட்டிக்கிட்டா.''

''இப்ப பணமும் இல்லே.''

''யார் சொன்னா...? உன் ஃபிக்சட் டெபாசிட்லே ஆறாயிரம் இருக்கு!''

''அதிலேர்ந்து கொஞ்சம் எடுக்க முடியுமா, ரமணி சார்?''

''ஓ, முடியும். கடனா வாங்கிக்கலாம்... என்ன சொல்றே? பணம் வாங்கித் தரட்டுமா! அவகிட்ட கொண்டு போய்க் கொடுக்கறியா?''

ரங்கன் யோசித்தான். உண்மையாகவே வாயைக் கட்டி, வயிற்றைக் கட்டிச் சேர்த்து வைத்த பணம். இது இருப்பது இதுவரையில் தனத்துக்குத் தெரியாது.

''ரங்கா.''

''என்ன ரமணி சார்?''

''உன் பெண்டாட்டி பணம் கேட்கறதை நிறுத்த மாட்டா. ஆனா உன்னாலே நிறுத்தாம கொடுத்துட்டே இருக்க முடியுமா? நல்லா யோசிச்சுப் பாரு!''

''ஒரே குழப்பமா இருக்கு, ரமணி சார்.''

''அப்ப நான் சொல்றதைக் கேளு.''

''சொல்லுங்க.''

''பணம் கொடுக்கிறதை நிறுத்து. வீட்டு வாடகை, மளிகை சாமான் இதுகளுக்கெல்லாம் நீயே மாசா மாசம் கொடு. அவ கைச் செலவுக்கு பத்தோ இருபதோ கொடு. நீ கண்டிப்பா இருந்தா நாளடைவிலே உன்னை அவ புரிஞ்சுப்பா.''

''அப்புறம்?''

''உன்னை விட்டே போயிடுவா!''

''சார், ரமணி சார், என்ன சொல்றீங்க?''

''எங்க கடைத் துணிக்கு ஒரு வருஷ நாங்கள் 'காரண்டி' தருவோம்!''

''அதுக்கப்புறம்?''

''பாத்திரக்காரர்கிட்டே கொடுங்க. காண்டி தருவார்.''

— எஸ். கணேஷ்.



''யார்ட்டே பணம் கறக்கலாம்னு அவ பறப்பான்னு சொல்ல வரேன்.''

''சார், ரமணி சார்... என் பெண்டாட்டி தனத்தைப் பத்தி இப்படிக் கேவலமாப் பேசறீங்களே, இது உங்களுக்கே அடுக்குமா?''

''அடுக்குமாங்கா, நல்லாவே அடுக்கும். சரி, இப்ப நீ ஆபீசுக்குப் போ, நான் ஒரு வேலையா ஒருத்தரைப் பார்க்கணும். நீ போ.''

சொல்லி விட்டு ரமணி நகர்ந்தான். ரங்கனுக்கு வாய் விட்டு அழ வேண்டும் போல இருந்தது. கால்கள் பின்ன, அவன் ஆபீசை நோக்கி மெதுவாக நடந்தான்.

அவனைக் கண்டதும் சுகந்தியின் வாய் சும்மா இருக்கவில்லை.

''என்ன ரங்கா, அழுதியா?'' என்று கேட்டாள்.

அவன் பதில் கூறவில்லை.

''எங்கிட்ட கூடச் சொல்லக் கூடாதா, ரங்கா?''

''நான் மனசு நொந்து போயிருக்கேன், சுகந்தி அம்மா.''

''அதான் உன் மொகமே சொல்றதே? என்ன பிரச்னை? சொல்லு. என்னால் முடிஞ்சா தீர்த்து வைக்கிறேன்.''

''தீரப் போற பிரச்னை இல்லே, சுகந்தி அம்மா.''

''அப்படீன்னா?''

''ரமணி சாருக்கு எம்பேர்ல கோவம். நான் செய்யறதெல்லாம் தப்புன்னு மண்டையிலே அடிக்கிறாரு.''

''ஏன் என்ன சொன்னார்? அவர்தானே உனக்கு எல்லாம்? உனக்குக் கஷ்டம்னா அவர் பொலபொலன்னு கண்ணீர் கொட்டுவாரே!''

''அது உண்மைதான். ஆனா என் பெண்டாட்டியைப் பத்திப் பேசினாலே அவருக்குப் பத்திக்கிட்டு வர்றது.''

''ஏன் என்னாச்சு?''

''என் பணமெல்லாம் கரைஞ்சு போச்சு சுகந்தி அம்மா... இப்ப ஐநூறு ரூபா கொண்டான்னு அவ சொல்றா.''

''எதுக்கு ஐநூறு ரூபா?''

''தெரியலே... நாலு நாள் முன்னாடிதான் ஆபரேஷனுக்குன்னு ஆயிரத்து இருநூறு ரூபா கொடுத்தேன்.''

''ஆபரேஷன். என்ன ஆபரேஷன்?''

''வவுத்திலே கட்டியாம்.''

''வயித்திலே கட்டியா?''

''ஆமாம்மா.''

''இந்த வயசிலயா?''

''ஆமாம். கலியாணமாகி முழுசா மூப்பது நாள் ஆவுலே. அதுக்குள்ளே ஆபரேஷன்.''

''வயித்து வலின்னு துடிச்சிருப்பாளே?''

''வலியிலே துடிச்சாளோ என்னமோ தெரியலே... ஆனா அடிக்கடி வாந்தி எடுத்தா... சோத்து ருசி கூட இல்லாமல் போச்சு.''

''ஓ, அதான் ஆபரேஷனா?''

''ஆமாம்மா.''

''இனிமே நீ கவலையேபட வேண்டாம். ரங்கன்... அவளுக்கு வாந்தி நின்று போயிருக்கும். நீயே பாரேன், கொஞ்ச நாள்ளே சோத்தையும் குழம்பையும் ஒரு பிடி பிடிப்பா!''

''அவ வயத்திலே கட்டி வந்தா, அது அவ தப்பா, சுகந்தி அம்மா?''

''யார் சொன்னா?''

''ரமணி சார் சொல்லலே.. ஆனா அவர் பேச்சிலே அப்படிப் படுது.''

''நீ கவலைப்படாதே ரங்கா. நீ இப்ப சொன்ன வயித்துக் கட்டி என்னன்னு எனக்குப் புரிஞ்சு போச்சு. இது பொம்பளைங்க சமாச்சாரம்... நீ கவலையை விடு.''

அவனுடைய புண்பட்ட நெஞ்சுக்குத் தேன் தடவுவது போல இருந்தன, சுகந்தியின் வார்த்தைகள். மனசும் ஒருவாறு தேறிற்று.

ஆனால் அன்று வீட்டை நோக்கிச் செல்லும் போது திடீரென்று பயம் கவ்விக் கொண்டது. ஐநூறு ரூபாய் பணத்துடன் அவன் செல்லவில்லையே?

தனம் சும்மா இருப்பாளா?

சீறி விழுவாளே?

குதறி எடுப்பாளே?

அவனுடைய அதிர்ஷ்டம், அவன் வீட்டை அடைந்த போது தனம் அங்கே இல்லை. தாற்காலிகமாக அவன் மனம் சமாதானம் அடைந்தது.

(தொடரும்)

"முத்துவேலு... டேஏஏய்... முத்து வேலு..."

பக்கிங்ஹாம் பிரபுவின் பெயர் வழங்கப் பட்ட கால் வாயைக் கடந்த சிறு பாலத்தின் மதில் சுவர் மேல் உட்கார்ந்து, பீடி பழகிக் கொண்டிருந்த முத்துவேலு, குரல் கேட்டுத் திரும்பினான்.

கல்லெறி தூரத்தில் டெல்லிபாபு ஓடி வந்து கொண்டிருந்தான். குட்டிகளோடு மேய்ந்து கொண்டிருந்த தாய்ப்பன்றி ஒன்று, டெல்லிபாபுவின் ஓடுபாதையில் தானும் தன் குழந்தைகளும் இருப்பது கண்டு, 'கிர்ரக்' 'கிர்ரக்' என அவசரமாக விலகிக் கொள்ள, பெட்டையைத் துரத்திக் கொண்டிருந்த சேவல் ஒன்று, டெல்லிபாபுவின் வேகத்தில், இடறிப் பறந்த கல்பட்டு, சட்டென்று இறக் கைகளை விரித்து 'கெக், கெக், கெக்' என்று பூமியிலிருந்து மேல் நோக்கிப் பறந்தது.

"என்னடா?" என்று கேட்டான் முத்து வேலு, கையிலிருந்த பீடியைக் கால்வாயில் எறிந்து விட்டு.

"முத்துவேலு.... முத்துவேலு" — டெல்லி பாபு நுரையீரல்களைக் காலி செய்து நிறைத் தான்.

"என்னடா ஆச்சி?"

"உங்கப்பா... உங்கப்பா..."

"எங்கப்பா... எங்கப்பா....?"

"உங்கப்பா சாக்கடையில எறங் குனப்போ...."

"டேய்... என்னடா ஆ ச் சி... சொல்லிட்டு அழுடா... எங்கப்பா வுக்கு என்னடா ஆச்சி... டில்லி பாபு... தப்பாச் சொல்லிடாதடா... டேய்.... டேய்...."

"ஆஸ்பத்திரிக்குக் கூட்டிட்டுப் போயிருக்காங்கடா...."

"ஒண்ணும் ஆவலியே?"

"வெஷவாயுவைச் சு வா சி ச் சி ட் டாருடா...."

"பெரியபாளையத்தா... கைவுட்டு டாதே.... எங்கம்மா கிட்டச் சொல்லி, உனக்குப் பொங்க வெக்கச் சொல்றேன்... கோழியடிக்கச் சொல்றேன்... வேப்பெலை கட்டிக்கறேன்.... காப்பாத்தும்மா... டேய்...



எந்த ஆஸ்பத்திரிடா?''
''ஜிஎச்தான்...''

ஆட்டோ 'ட்ர்ர்' என்று அதன் உச்ச பட்ச வேகத்தில் கதறிச் சென்றது.
''முத்து, பயப்படாதே... ஒண்ணும் ஆயிடாது....''
''அம்மா எங்கடா டெல்லி?''
''ஆஸ்பத்திரிக்குத்தான்.''
''வள்ளி?''
''வள்ளி, காவேரி அல்லாரும் அங்க தாண்டா போயிருக்காங்க... பெரிய பாளையத்தா மேல பாரத்தைப் போட்டுக்கினேல்ல... கம்னுவா.''
''எப்படிரா கம்னு வரது? எங்கப்பன்டா.. ஒரு குடி இல்ல, கூத்தி இல்ல, தம்மு கூட வெலிக்கத் தெரியாதுடா அந்த ஆளுக்கு..."
''தெரியும். பொட்டச்சி மாதிரி அயுவாதே....''
''இந்த மாதிரிப் பண்ணிட்டியேடா பாவி....''
''யாரைடா சொல்றே...?''
''எங்கப்பனைத்தான். வேணா நைனா, இந்தத் தொழிலே வேணாம்... கண்டவன் கஸ்மாலமும், கலந்துகட்டி, ஒரே கலீஜா இருக்கும். 'கப்'படிக்கும். இதுல போயா எறங்கறேன்னு ஒரைக்கிறா மாதிரி சொன்னேனே. கேட்டியா நீ... கேட்டியா நீ...?''
டெல்லிபாபு திரும்பி உட்கார்ந்து கொண்டு, சாலையை வெறிக்கத் தொடங்கினான். முத்துவேலுவின் வாய் மூடும் என்று தோன்றவில்லை. அடக்க அடக்க ஆறாகும். கழுக்கக் கழுக்கக் கடலாகும்.

முத்துவேலு கன்னத்தில் வழிந்த நீரைத்துடைக்கத் தோன்றாமல் சாலையைப் பார்த்தான். ஆஸ்பத்திரியில் நல்ல செய்தி காத்திருக்கும் என்று அவனுக்குத் தோன்றவில்லை. பெரிய இடிதான் தலையில் விழப் போகிறது. அம்மாவும், தங்கைகளும் சிவந்த கண்களும், நிறைந்த மூக்குகளுமாய்த்தான் அவனை எதிர் கொள்ளப் போகிறார்கள். பாலத்தின் இறக்கத்தில் ஒரு பல்லவன் படு வேகமாய் இறங்கிக் கொண்டிருந்தது. 'தெய்வமே. அந்த பஸ்ஸை அப்படியே இந்த ஆட்டோவின் மீது மோத விடு. வலி தெரியாமல் போய்விடுகிறேன். சோகம் புரியாமல் செத்துவிடுகிறேன்....'
தெய்வம் அவன் வேண்டுகோளுக்கு செவி சாய்க்கவில்லை. பல்லவன் பஸ் படு வேகமாகக் கடந்து அதன் வழியில் மிக ஜாக்கிரதையாகப் போய்விட்டது.
கொஞ்சம் ஏமாற்றமாக இருந்தது. உயிர் பிழைத்து இருந்ததில் கொஞ்சம் சந்தோஷமாக இருந்தது. நிறைய திகிலாக இருந்தது. இருபத்திரண்டு வயது தடிமாடு. இதற்குள் ஒரு நல்ல வேலை சம்பாதித்துக் கொண்டிருக்க வேண்டாமா? அதற்காவது அந்த



''சார் நாளைக்கு லீவு வேணும்.''
''எதுக்கு?''
''நாளைக்கு ஈட்டிக்காரனை வரச் சொல்லிட்டேன்...''
— ஜி. வாசுதேவன்.

நாளில் நன்றாகப் படித்திருக்க வேண்டாமா? படிக்க வேண்டிய நேரத்தில் துட்டு வைத்து கோலி, டப்—டிப், மங்காத்தா, வாத்தியார் படம்... பொறம் போக்குப் பன்னாடை. இன்றைக்கு, இந்த வினாடி வருத்தப்பட்டு என்ன பிரயோஜனம்? நல்ல வேலை வைத்துக் கொண்டு எவனாவது காத்திருப்பானா என்ன? 'முத்துவேலு, முத்துவேலு... குப்பைக் காயிதம் பொறுக்கற கோணியைக் கடாசிட்டு வந்துடு, நான் தரேன் ஒனக்கு வேலை' என்று சொல்லுவானா என்ன? கை நிறையச் சம்பளம் வருகிற ஒரு நல்ல வேலை மட்டும் இருந்திருந்தால், அப்பா இப்படி பாதாள சாக்கடையில் இறங்கி முக்குளித்து அடைப்பு எடுக்கிற தொழிலில் அவதிப் பட்டிருக்க வேண்டியதில்லையே!
முத்துவேலு தலையில் அறைந்து கொண்டான்.
''ஏம்ப்பா... அந்தாளைக் கொஞ்சம் புடிச்சிக்கப்பா... ஆட்டோலேர்ந்து குதிச்சிட, கிதிச்சிடப் போறான்'' என்றான் ஆட்டோ டிரைவர், பின்னால் திரும்பிப் பார்த்து.
''இன்னாடா... முத்து... ரோதனையா இருக்குடா.... சொன்னாக்கேளு... நீ கெடந்து அல்லாட்னா எல்லாம் சரியாப் பூடுமா?''
முத்துவேலு டெல்லிபாபுவின் தோளில் முகம் புதைத்துக் கொண்டான்.
'யப்பா....'
'........'
'யப்போவ்.'
'இன்னாடா?'
'இந்தத் தொழிலு வேணாம்பா. நேத்திக் கூட சிந்தாரிப்பேட்டையில ஒருத்தன் உள்ள எறங்கி மண்டையைப் போட்டான்னு சொல்லலை....?'
'அதுக்கின்னா இப்போ?'
'வேற தொழிலு தேடிக்கயேன்.'
'அக்காங். பெரீய கவுனர் வூட்டுப் புள்ள. மாசமானா ஆயிர ரூவா கொணாந்து நீட்டி, 'கறிக்கொயம்பு வைம்மே'ன்னு உங்கம்

## இப்படியும் ஓர் அதிசயம்!



திருவனந்தபுரத்தில் சப் இன்ஸ்பெக்டர் தேர்வுக்கான இண்டர்வியூ. அதில் ராஜ கோபாலன் நாயர் என்பவரும் வந்து கலந்து கொண்டார். இண்டர்வியூ முடிந்து வெளியே வந்த போது அவரைப் போலீசார் வந்து பாதுகாப்பாக அழைத்துச் சென்றனர்! அதைக் கண்ட அதிகாரிகள் திடுக்கிட்டு விசாரிக்க, ராஜகோபாலன் நாயர் ஒரு கொலைக் கைதி எனத் தெரிய வந்தது.

இண்டர்வியூவிற்கும் பரீட்சைகள் எழுதுவதற்கும் போலீஸ் காவலில் கைதிகளை அழைத்துப் போவதுண்டு எனச் சிறை அதிகாரிகள் கூறுகிறார்கள். இருந்தாலும் ஒரு சப்—இன்ஸ்பெக்டர் வேலை இண்டர்வியூவிற்கு ஜெயிலில் ஆயுள் தண்டனை அனுபவிக்கும் ஒரு கைதி வருவதும் அவரைக் கைதி எனத் தெரியாமல் பெரிய அதிகாரிகள் இண்டர்வியூ செய்வதும் இதுவே முதல் தடவையாகும்!

— எஸ். எஸ். மணி.

---

மாளை அதட்றே பாரு... அந்த ஜோரு... ஏண்டா... ஆட்டு மூளையாக் கீது ஒனக்கு... இல்ல கேக்கறேன்... ரெண்டு தங்கச்சிங்க வயசுக்கு வந்தே அஞ்சாறு வருசம் ஆவப் போவுது. கட்டிக் கொடுக்கறதுக்கு ஒரு ரெண்டு பவுனு, மூணுபவுனு போட்டாத் தானடா அந்தஸ்தா இருக்கும். நம்ம மான, மருவாதி தாராந்து போவாம இருக்கும்? என்னைப் போயி சாக்கட்ல இறங்காதே, எறங்காதேன்னு சொன்னா... இன்னா அர்த்தம்? இன்னா கைமேல வேற வேலையா வெச்சினுகீறேன், இந்த வேலை வேணாங்கறதுக்கு..... இதுல வர்ரதே பத்துமா, பத்தாதான்னுருக்குது. இவ்ளோ தூரம் ஒங்கொப்பன் மேல அக்கறை கீறவன் ஒரு நல்ல உத்யோகம் தேடிக்கோ. அப்பால பேசு. குப்பை பொறுக்கப் போவாத. இவரு உத்யோகம் பெரீய கவுருமென்ட்டு உத்யோகம். நம்பளை சொல்ல வந்துட்டாரு.... நால்ணாவும், எட்ணாவும் கொணாந்து குடுத்துட்டு.... மெக்கானிக்கு வரச் சொன்னானாமே... போய்ப்பாத்தியா?'

'ம்.'

''இன்னா சொன்னான்?''

'வேற ஆளைப் போட்டானாம்.'

'அதான் பாத்தேன். போடா... எதிர்ல நிக்காதே... சம்பாரிச்சிக்கினு வந்து எங்கைல சொல்லு உத்யோகத்துக்குப் போவாதேன்னு. ரைட்டுன்னு மூலைல குந்திக்கினு துன்றேன்...! இப்பப் பேசின எனக்குக் கெட்ட கோவம் வரும்.'

ஆட்டோ ஜி. எச். காம்பவுண்டில் நுழைவதற்கு முன்னால் முத்துவேலு குதித்து இறங்கினான்.

''யப்பா... யப்பா'' என்று கதறிக் கொண்டு புலியால் துரத்தப்படும் காட்டு மான் போல ஓடினான். டெல்லிபாபு அவன் பின்னாலேயே தொடர்ந்தான். ஜி. எச். எத்தனையோ உணர்ச்சி நெருப்புகளைக் கண்டிருந்ததால் முத்துவேலுவின் குமுறலை அலட்சியப் படுத்திவிட்டு, அதன் வேலைகளைத் தொடர்ந்து கொண்டிருந்தது. ஃபினாயில் நீர்த் துடைப்பு, ட்ராலியில் ரொட்டியும் பாலும், சக்கர நாற்காலியின் உருளல். முத்துவேலு முட்டியும், முட்டாமலும் போய்ச் சேர்ந்தபோது.....

''முத்து... முத்து... போட்டாண்டா... அந்த மனுஷன் நம்ம தலையில கல்லைத் தூக்கிப் போட்டுப் போய்ட்டாண்டா...''

'டண் டணக்கு, டண் டணக்கு' என்று மேளம் கொட்ட, பூப்பல்லக்கில் உட்கார்ந்திருந்த அப்பாவின் சடலம் தன் கடைசி பயணத்தைத் தொடங்கியது.

அம்மா சேற்றுத் தரையில் மயங்கி வீழ்ந்தாள். கல்யாணமாகாத கன்னித் தங்கைகள் மார்பில் அறைந்து கொண்டு தங்கள் துக்கத்தை இறைத்தார்கள்.

முத்துவேலு பல்லக்கிற்கு முன்னால் நடந்தான்.

''டேய்.... யாராண்டடா டப்பாசு... கொளுத்துங்களேண்டா...''

''ஆடுங்கடா... ஆடுங்கடா... போற மன்சன் சந்தோசமாப் போவட்டும். கருமாதிக்குக் கறிசோறு போடச் சொல்றேன்... ஆடுங்கடா.''

''ஐய.... முத்து, இதான உங்கூட. சும்மா இப்படியே குந்திக்கினுருந்தா ஒங்கொப்பன் எழுந்து வந்துடவாப் போவுது! இந்தா இந்த பன்னை சாப்ட்டு, டீகுடி ராஜா....

''எனக்கு வோணாத்தை.''

''யப்பா... நீதான் ஒங்கம்மாளுக்கு, தங்கச்சிங்களுக்கு எல்லாம் சம்பாரிச்சிக் கொணாந்து குடுக்கணும்... இப்படி மர மாட்டம் சாய்ஞ்சி குந்திக்கினுருந்தா பொயப்பு என்னா ஆவுறது? ஐய.... வயசுக்கு வந்ததுங்களைக் கட்டிக்குடுத்துக் கன்னி கழிக்கத்தாவலை... அதுங்களைப் பாரு. சரியா சாப்புடாம நெத்திலி மீனுங்க

மாதிரி ஆயிடிச்சிங்க பாரு... வஞ்சிரம் கணக்கா இருந்ததுங்க...! டில்லி... சொல் லேண்டா....''

''முத்து....''

''.......''

''முத்து டேய்.''

''இன்னா?''

''எழுந்துரு... சொல்றேன். வள்ளியை கஜபதிவூட்ல கேட்டுக்கினுதானே இருக் கறாங்க. சட்டு புட்டுன்னு அத்தை முடிச்சிப் போடு. அதான் உங்கொப்பன் போனதுக் குப் பத்தாயிரம் வந்துருக்குதே. அந்தத் துட்டை வெச்சி வேலையை முடி.... இப்ப பன்னு சாப்ட்டு வேலைக்குப் போ.''

''......''

''ஏய்... நான் பாட்டுக்குச் சொல்லிக்கினே இருக்கேன். நீ சீக்குக் கோழி மாதிரி தலையைத் தொங்கப் போட்டுக்கினு இருந்தா இன்னா அர்த்தம்? ஒன்னை இன்னா காயிதம் பொறுக்கற வேலைக்காப் போவச் சொல்றாங்க. உங்கப்பன் பூட்டான். அதால கண்டி ஒனக்கு உங்கப்பன் உத்யோகம் வந்திருக்கிறது. போடா. எல்லாம் சேத்து சம்பளம் கிட்டக்கிட்ட ஆயிரம் பக்கமா வரும். இன்னொரு தங்கச்சி இருக்குதுல்ல? எழுந்துருப்பா... பன்னு புடிக்கலைன்னா சொல்லு, நாயர் கடைக்குப் போலாம். ஆப்பம் பாயா அடிச் சிட்டுப் போலாம்...''

''ஏன் டில்லி?''

''இன்னாடா?''

''நான் செத்தாக்கூட பத்தாயிரம் கெடைக்குமல்லவா?''

''வேலைக்குப் போவச் சொல்லயே பேசற பேச்சடா இது. ஏண்டா கஸ்மாலம்? ஊர்ல எத்தினி பேர் சாக்கட்ல எறங்கறான். அத்தினி பேருமா பூட்றான்? நீ இருப்படா. ஒனக்கு ஒண்ணியும் ஆவாது. தங்கச்சிங் களைக் கட்டிக் குடுத்து, நீ கட்டிக்கினு, உங் கம்மாளுக்கு பிரியாணி வாங்கித் தரல்லாம். நீ போ மாட்டேடா...! பாரேன்... கொஞ்ச நாள்ல வேற நல்ல வேலை கட்ச்சா பூடலாம்... இன்னா சொல்றே?''

''இல்ல கேக்கறேன்.... நான் செத்தா இன் னொரு பத்தாயிரம் கெடைக்குமாடா?''

''கெடைக்குண்டா. கெடைக்கும். பெரிய பேஜாருப்பா இவங்கூட! பீடி வெலிக் கிறியா?''

''இப்ப ஒணாம். நாயர் கடைக்குப் போய்ட்டு வந்து தம்மடிச்சிக்கலாம்.''

**அ**ப்பா செத்த இருபதாம் நாள், முத்து வேலு, பெரியபாளையத்தாளை வேண்டிக் கொண்டு, திறந்திருந்த பாதாள சாக்கடை யில், ஒரே ஒரு ஜட்டி மட்டும் அணிந்து கொண்டு இறங்கினான்.

---



**அருள்வாக்கு**

''**பத்யம்**'' என்றால் ஒரு வழியில் போகப் பண்ணுவது. பாதை path என்ப தெல்லாம் 'பதி'யிலிருந்து வந்ததுதான். ஆரோக்கியப் பாதையில் செலுத்துவதற் காக ஏற்பட்டதே பத்தியம். மருந்து சாப் பிட்டால் மட்டும் போதாது. உடம்பு ஸரி யாவதற்கு இன்ன ஆஹாரங்களை நீக்கி விட்டு இன்ன மட்டுமே இன்ன அளவில் சாப்பிட வேண்டுமென்பது முக்கியம். இதுதான் பத்தியமாயிருப்பது. இந்தப் பத்தியங்களில் ஒன்றாக ஸகல ஜனங்க ளுமே பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை உபவாஸம் இருக்க வேண்டுமென்று வைத் திருக்கிறது. ஸகல ஜனங்களுமே அவ்வப் போது ஒருவேளை லங்கனம் போடுவது நல்லது. பக்ஷத்துக்கு ஒரு நாள் பூராவும் பட்டினியிருப்பது விசேஷம் என்று வைத்திய சாஸ்திரம் கருதுகிறது. இதையே ஏகாதசி என்று வ்ரதாநுஷ்டான மாகவும் பெற்றிருக்கிறோம். தர்ம சாஸ் திரமும், நம் பூர்வீக வைத்திய சாஸ்திர மும் கைகோத்துக் கொண்டு போகின்றன என்பதற்கு இதுவும் உதாரணம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...




ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

**உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்!**

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

# விவேகானந்தா கல்வி நிலையம்

**தபால் பெட்டி எண்: 4986, 9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17.**

# அதிர்ஷ்ட தேவதை

## 7

தனம் ஒரிரு வினாடிகள் ஆடிப் போனாள். ரமணி அவளுடைய வீட்டு வாயிலில் வந்து நிற்பான் என்று கனவில் கூட நினைத்துப் பார்த்ததில்லை. ரங்கன் ஆபீசில் இருக்கும் போது, இவன் என்ன காரணமாய் இங்கே வர வேண்டும்?

அவளுடைய நெஞ்சு, குற்ற உணர்வில் படபடப்பது போல படபடத்தாலும், இயல்பான முரட்டுத்தனத்தில், "வாங்கய்யா, உள்ளே வாங்க!" என்றாள்.

ரமணியின் புன்முறுவல் லேசான சிரிப்பாக மாறி ஒலித்தது.

"பிராட்வேயில் ஒரு கம்பெனிக்குப் போக வேண்டியிருந்தது. நான் பார்க்க வேண்டிய ஆள் வர இன்னும் அரை மணி நேரத்துக்கு மேலே ஆகும்னாங்க. திடீர்னு உன் ஞாபகம் வந்தது. அதான் வந்தேன்."

தனம் ஒரு பாயைப் போட்டாள்.

"நீங்க ஒக்கார நாற்காலி, ஏன் ஒரு முக்காலி கூட இல்லீங்க..."

"பரவாயில்லே... ஹங், உன் ஆபரேஷன் நல்லபடியா முடிஞ்சுதுன்னு ரங்கன் சொன்னான். ஆண்டவனுக்கு நன்றி சொன்னேன். நான் வேறு என்ன செய்ய முடியும்?"

"நீங்க இன்னும் உட்காரலீங்க..."

"விட மாட்டே போலிருக்கு!" ரமணி உட்கார்ந்தான்.

"ஒரு நிமிஷம் இருந்தீங்கன்னா, ஓடிப் போய் சோடா கலர் ஏதானும் வாங்கிட்டு வந்திருவேன்" என்றாள் தனம். இவனைப் பகைத்துக் கொள்ளக் கூடாது என்பதை அவள் அறிவாள்.

"ஓடறதா? நீயா? ஒரு மாசத்துக்கு நீ வேலையே செய்யக் கூடாதே? இதை உன் டாக்டர் சொல்லலியா?"

"மொதல் மொதலா நம்ம வூட்டுக்கு வந்திருக்கீங்க... ஏதாவது சாப்பிட[illegible]

---

பி.வி.ஆர்.

---

போனா எப்படி?"

"யார் சொன்னா, நான் முதல் தடவையா வர்றேன்னு? மயில்சாமியைப் பார்க்க ரெண்டு மூணு தடவை வந்திருக்கேனே? ஆனா அப்பவெல்லாம் நீ வீட்லே இருக்கலே."

"அப்பா சொன்னதே இல்லே."

"சரி, அதை விடு, தனம். ரங்கன் எப்படி இருக்கான்? உன்னைத்தான் கட்டிப்பேன்னு ஒத்தக் கால்லே நின்னான். உன் உடம்பிலே நன்னா சதை பிடிக்கட்டும், அப்புறம் பார்க்கலாம்னு புத்தி சொன்னேன். அவன் கேட்கலே. நீ ஆக்கிப் போடற சோத்திலே வஸ்தாது மாதிரி ஆயிடுவேன்னு மார் தட்டினான். ஆனா பாவம் நீ! ஒரு மாசத்துக்கு அவன்தான் உனக்குச் சோறாக்கிப் போடணும்."

"அவரு ரொம்ப நல்லவரு, ஐயா."

"எங்கிட்டேயே சொல்றியா?"

ரமணி சிரித்தான்.

"நான்னா உசிர்" என்றாள் தனம்.

"தெரியும். இத்தனை நாளா அவன் உசிர் பணத்து மேலே இருந்தது. இப்ப அது உன்கிட்ட வந்துடுத்து."

"அவர் பணத்தை நீங்கதான் பத்திரப் படுத்தி வைச்சிருக்கீங்களாம். அப்பா கலியாணத்துக்கு முன்னாடியே சொல்லிச்சு."

"ஆமாம். மொதல் மொதலா சம்பளம் வாங்கினதும் அதை என் கையிலேதான் கொடுத்தான். அவன் பேர்ல பாங்க்ல கட்டச் சொன்னான். இந்த நாலு வருஷத்தில ஒரு தடவை கூட எடுத்ததில்லே. கலியாணம் நிச்சயமானப்புறம்தான்..."

அவன் முடிக்கவில்லை.

"இப்ப எவ்வளவு இருக்கு, ஐயா?"

"மொதல்ல ஒரு ஆயிரம். அப்புறம் ஒரு ஆயிரம். போன வாரம் ஆயிரத்து இருநூறு. பாக்கி ஐந்நூறோ அறுநூறோ இருக்கும். ஏன் கேட்கறே?"

"இல்லே கேட்டேன்."

"இன்னிக்குக் கூட ஒரு ஐந்நூறு வேணும்னு வந்தான். நான் எதுக்குன்னு கேட்டேன். நீ கொண்டு வரச் சொன்னேன்னான்."

"குடுத்தீங்களா?"

"இல்லே."

தனத்தின் முகம் சுருங்கியது. ஆனால் கோபமும் கண்ணில் பிரதிபலித்தது.

"ஏன் குடுக்கலே?"

"என்ன செலவு ஐந்நூறுக்குன்னு தெரிஞ்சுக்கத்தான். அவன் சொல்லலே."

"அவரு பணம். அவரு கேட்டாக் கொடுக்க வேண்டியதுதானே?"

"இன்னிக்கு ஐந்நூறு கேட்டவன் நாளுக்கு அப்புறம் இன்னும் ஆயிரம் ரெண்டாயிரம்னு வந்து நின்னா?"

"பாக்கி ஐந்நூறோ அறுநூறோன்னு சொன்னீங்களே... எப்படி ஆயிரம்

ரெண்டாயிரம்னு கேட்க முடியும்?''

''முடியுமே? இந்தப் பணம் அவனுடைய சேவிங்ஸ் அகௌண்ட்ல இருக்கிற பணம். இது தவிர ஆறாயிரம் ரூபா மூணு வருஷத்துக்கு எடுக்க முடியாதபடி பிக்சட் டெபாசிட்ல போட்டு வைச்சிருக்கான்.''

''பாவி சொல்லவே இல்லியே?''

''அவன் சொல்லாமப் போனா என்னம்மா? நான்தான் சொல்லிட்டேனே!''

''இத்தனை நாளா அவருக்கு நீங்க ஆதரவா இருந்தீங்க. இப்ப நான் அவரோட ஒய்ப்பு. இனிமே நான் அவர் விவகாரங்களைக் கவனிச்சுக்கறேன். அதனாலே...''

''அதனாலே?''

''ஆறாயிரம் ரூபா கணக்குப் புத்தகத்தையும் என் கையிலே குடுத்துடுங்க.''

''அது புஸ்தகம் இல்லே. பாங்க் ரசீது!''

''அது என்னவா இருந்தா என்ன, என் கையிலே குடுத்துடுங்க.''

''அதான் முறை. ஆனா அவன் பேர்ல எனக்கு ரொம்ப அக்கறை இருக்கு.''

''என்ன சொல்றீங்க?''

''இந்தக் கம்பெனியிலே வேலை கொடுத்தவனே நான்தான், தனம்.''

''அதுக்காக?''

''ரசீது என் கையிலேயே இருக்கட்டும்.''

''குடுக்க மாட்டீங்களா?''

''நீ ஊதாரித்தனமா சிலவு செய்யாத பெண்ணா இருந்தா, கலியாணம் முடிஞ்ச கையோட நானே வந்து கொடுத்திருப்பேன்.''

''யோவ், மரியாதை கெட்டுப் பூடும். நீ யார்யா நான் ஊதாரின்னு சொல்றதுக்கு.''

ரமணி சிரித்தான்.

''உனக்கு ஆபரேஷன் பண்ணினாங்களே, டாக்டர் அம்புஜம், அவங்க எனக்கு உறவுக்காரி.''

''யோவ்!''

''இது உனக்கு முதல் ஆபரேஷன் இல்லே...''

''யோவ், யோவ்! உன்ன...''

''நீ முன்னேயும் சரி, இப்பவும் சரி, அவகிட்ட சொன்னதெல்லாம் ரிஜிஸ்டர்ல பதிவாயிருக்கு. உன் கையெழுத்தும் இருக்கு.''

''யோவ், நீ பயம் காட்றியா?''

ரமணி சிரித்தான்.

''நான் சலசலப்புக்குப் பயப்படாதவன் தனம். இனிமே நீ என் சிநேகிதன் ரங்கனை அழ வைச்சே, நானும் ரௌடிக்கு ரௌடியாயிடுவேன். இதை நினைவிலே வைச்சுக்க.''

''இன்னாய்யா செஞ்சுப்பூடுவே?''

வீராப்பாய்க் கேட்டாளே தவிர, தனத்தின் குரலில் நடுக்கம் தொனித்தது.

''நீ அவன்கூட ஒழுங்காக் குடித்தனம் செய்ஞ்சா, மாசா மாசம் உன் வீட்ல அடுப்பு எரிய பணம் வரும். ரங்கன்கிட்ட மோதினே, அது எங்கிட்ட மோதின மாதிரி. அடுத்தவாட்டி ஆபரேஷன் பண்ணிக்க உன் கையிலே சல்லிக்காசு இருக்காது... நான் வரேன்.''

''ஐயா!''

''என்ன?''

''அவர் கையிலே என்ன ஆபரேஷன்னு சொல்லிடாதே ஐயா... மனம் வெடிச்சுப் போய் கொளம் குட்டையிலே விழுந்துடும்.''

''நீ ஒழுங்கா இருந்தா சத்தியமாச் சொல்ல மாட்டேன். அது சரி, உனக்கு எதுக்கு ஐந்நூறு ரூபா?''

தனம் பதில் கூறவில்லை. திடீரென ஒரு பொய்யும் உதயமாகவில்லை





மானேஜர்: இந்த மாதிரி நீங்க நடந்துக்கு விங்கன்னு நான் எதிர்பார்க்கவே யில்லை. கேட்கவே வெட்கமா இருக்கு!

கிளார்க்: என்ன ஸார், சொல்றீங்க?

மானேஜர்: ஐம்பது ரூபாய் லஞ்சம் வாங்க வேண்டிய விஷயத்துக்கு வெறும் பத்து ரூபாய் வாங்கி இருக் கீங்களே!

— எஸ். முகம்மது யூசுப்.

---

''இந்தா... நூறு ரூபா.. டானிக் கீனிக் வாங்கிச் சாப்பிட்டு, ஒடம்பைத் தேத்திக்க.. ரங்கனையும் கவனிச்சுக்க.''

அவள் பதில் பேசாமல் பணத்தை வாங் கிக் கொண்டாள்.

இரவு எட்டு மணிக்குக் கதவு தட்டப் படும் ஓசை கேட்க, ரங்கன் பீதியுடன் எழுந்து கதவைத்திறந்தான். தனம் அவனைக் கிழிக்கப் போகிறாள் என்ற எண்ணம் பயமாக மோதி, கையை நடுங்க வைத்தது.

''யோவ், என்னாய்யா அப்படிப் பார்க் கிறே... அல்லாம் ஓட்டல்லேந்து வாங்கியாந் தேன். என்னாலதான் ஒனக்கு சோறாக்கிப் போட முடியலே... நீ என்னதான் தும்பே? இதைப் பிடி....''

அவள் கொடுத்த பையை ரங்கன் வாங் கிக் கொண்டான். தன் கண்களையும் காது களையும் கூட அவனால் நம்ப முடிய வில்லை. அவன் மனைவி தனமா இது?

''பிரியாணி, பரோட்டா, குர்மா அல்லாம் வாங்கியாந்திருக்கேன்.''

''உனக்கு?''

''அஞ்சாறு நாளுக்கு நான் ரொட்டியும் ஆர்லிக்ஸும்தான் சாப்பிடலாம்னு டாக்டர் அம்மா சொல்லியிருக்காங்க. அதான் ரொட்டி மட்டும் வாங்கியாந்தேன். குந் துய்யா, போடறேன்.''

அவன் உட்கார்ந்தான்.

''தனம்.''

''இன்னாய்யா?''

''என்னாலே, நீ கேட்ட ஐந்நூறு ரூபாப் பணம் கொண்டு வர முடியலே.''

''பணம் கெடக்குதய்யா, நீ துன்னு.''

''இதுக்கெல்லாம் ஏது பணம், தனம்?''

''ஏன்யா நீ எவ்வளவு என் கையிலே குடுத்திருக்கே? நான் அல்லாத்தையுமா சில வளிச்சேன். நூறு ரூபா இருந்திச்சு. ஹங், நீ ஆசையா புதன் கிளமை புதன் கிளமை பேப்பர் வாங்குவியே அதுவும் வாங்கியாந் தேன்.''

''பேப்பரை மொதல்ல பாக்கறேன், தனம்.''

''முடியாது. பரோட்டா ஜூடா இருக்கு. நீயும் நானும் சேர்ந்து சாப்பிடலாம்.''

ரங்கனால் அவளுடைய பேச்சைத் தட்ட முடியவில்லை. ஹரியானா, ராஜஸ்தான் லாட்டரி முடிவுகள் இன்றைய தினசரியில் வெளியாகியிருக்கும். அவனுக்கு எங்கே பரிசு விழுந்திருக்கப் போகிறது? சாப்பிட்ட பிறகு பார்த்துக் கொண்டால் போகிறது. அதை விடப் பெரிய அதிர்ஷ்டமாய், தனம் இதுவரையில் காட்டியிராத அன்பைப் பொழிகிறாள்! அவளுக்கு மட்டும் ஆபரேஷன் நடந்திரா விட்டால், இன்று இரவு எவ்வளவு ஆனந்தமாக இருந்திருக் கும்?

ஒரு பரோட்டாவைச் சாப்பிடுவதற்குள் வயிறு கனத்தது.

''தனம்!''

''என்னய்யா?''

''பிரியாணி கெட்டுப் போகாதில்லே? நாளைக்குச் சாப்பிடறேன்.''

''ஏன்யா?''

''இதைத் துன்னு தண்ணி குடிச்சதிலே, வயிறு 'கம்'னு ஆயிடுச்சு.''

''உன் இஷ்டம்'' தனம் ரொட்டியை ஹார்லிக்ஸில் முக்கி எடுத்துச் சாப்பிடலா னாள்.

அன்றைய மாலை தினசரியைப் பிரித்துப் பார்ப்பதற்கு முன், ரங்கன் தன்னுடைய பெட்டியைத் திறந்து டயரியை எடுத்தான்.

''இன்னாய்யா பாக்கறே?''

''ஒண்ணுமில்லே தனம், லாட்டரிச் சீட்டு நம்பரையெல்லாம் இதிலேதான் ரமணி குறிச்சுக் குடுப்பார்.''

''நீ லாட்டரிச் சீட்டு வாங்கியிருக்கியா?''

''அஞ்சு வருசமா வாங்கறேன்.''

''பிரைஸ் அடிச்சிருக்கியா?''

''ஒரு வாட்டி கூட ஒரு அம்பது ரூபா பரிசு கூட விழுந்ததில்லே.''

''நமக்கெல்லாம் விளாதுய்யா. அதுக்குத் தனி ராசி வோணும்.''

''அஞ்சு வருசம் முன்னாடி கும்பகோணத் திலே ஒரு கிளி சோசியன் சொன்னான் நான் பணக்காரன் ஆவேன்னு.''

''யோவ், நீ என்ன ஆளுய்யா. பத்துப் பைசா கொடுத்தா, அந்த ஆளு கிளிக்கு நெல்லையோ பொரியையோ குடுப்பான். அது பத்துப் பன்னண்டு சீட்லே ஒரு சீட்டை இழுக்கும். அதை இவன் ராகத்தோட படிப் பான். ஒரு எளவும் புரியாது.''

''எனக்குப் புரிய வைச்சான். கொஞ்சம் இரு, தனம்... ஹங், ராஜஸ்தான் லாட்டரி... நம்பர் AB 2987654 இரு, பேப்பரைப் பாக் கறேன்... ராஜஸ்தான் லாட்டரி... தனம்...


புத்துணர்ச்சியும் பொலிவும் வழங்கும்
ஹமாம்!
கண்டுகொள்வீர் ஹமாம் புரியும் ஜாலத்தை,
இதுவரை காணாத கூடுதல் புத்துணர்ச்சியும்
பொலிவும் உமக்கு. புதுமை குன்றாமல்
நீடித்துக் கமழும் நறுமணம், சொகுசான
நுரைவளம்—வழங்கும் என்றும் புதுமையான
ஹமாம். புத்துணர்ச்சியையும்
பொலிவையும் உணருவீர்.
ஹமாம்
குடும்ப சோப்
Hamam
THE FAMILY SOAP
हमाम
டாட்டா தயாரிப்பு

தனம்... இதப் பாரு... பாரு, தனம்... இருபத்தஞ்சு லட்சம் ரூபா விளுந்திருக்கு... மொதப் பிரைஸ் அடிச்சுட்டேன், தனம்!''

''யோவ் சரியாப் பாருய்யா.''

''நீயே பாரு... இதோ பேப்பர்ல வந்த நம்பர். AB 2987654... இங்க பாரு, டயரியிலே ரமணி சார் குறிச்சுக் குடுத்த நம்பர்!''

''ஆமாம். ரெண்டும் ஒரே நம்பரா இருக்கு. இப்ப டிக்கட்டை எடு. அதையும் பார்த்துடலாம்.''

''டிக்கட் ரமணி சார் கையில இல்ல இருக்கு.''

''அந்த ஆள் கையிலயா?''

''ஆமாம், தனம். நான் வாங்கற எல்லா டிக்கட்டையும் அவர்தான் பத்திரமா வைச்சுப்பாரு.''

''அடப்பாவி!''

''ஏன் தனம்?''

''அந்த ஆளு உன்னை ஏமாத்திட்டா?''

''என்ன பேச்சுப்பேசறே, தனம்? அவர் எனக்குக் கடவுள் மாதிரி.''

''கடவுள் கூடப் பணம்னா ஏமாத்திடும்யா. அதுசரி, இருபத்தஞ்சு லட்சம்னா எவ்வளவு?''

''எனக்கே தெரியலே, தனம். ரமணி சார் சொன்னாத்தான் புரியும். நாளைக்கு ஆபீஸ் போனதும் அவரை விட்டே லாட்டரிச் சிட்டைப் பணமாக்கிடலாம்.''

''யோவ், இன்னாய்யா நீ, வெவரங் கெட்ட ஆளா இருக்கே.. இப்பவே அந்த ஆள் வூட்டுக்கு ஓடுய்யா. டிக்கட்டை வாங்கியாய்யா!''

''வேணாம் தனம். அவர் ஏமாத்த மாட்டாரு. நல்லவரு.''

''யோவ் பேப்பரைப் பாருய்யா. அஞ்சு லட்சம், ஒரு லட்சம், அம்பதாயிரம் பத்தாயிரம் ஆயிரம்னெல்லாம் போட்டிருக்கு. அல்லாத்தையும் விட இருபத்தஞ்சு லட்சம் ஜாஸ்தின்னு உனக்குப் படலே!''

''படுது, தனம்.''

''யோவ், அந்த ஆள் முழியே எனக்குப் புடிக்கலே, ஓடுய்யா.''

''அவரு மயிலாப்பூர்ல அபிராமபுரத்திலே இருக்காரு.''

''எந்த டில்லியிலே இருந்தா உனக்கு இன்னாயா? போய் டிக்கட்டை வாங்கியா... மூணாவது வூட்ல மாணிக்கம்னு ஒருத்தரு இருக்காரு. ஸ்கோல் வாத்தியாரு. படிச்சவரு. நல்லவரு. அவர் கையில சொல்லி, நாம பணத்தை வாங்கிக்கலாம்.''

''மணி ஒம்பதுக்கு மேல ஆயிடுச்சு தனம். நாளைக்கு விடிஞ்சதும் போறேன்.''

''துப்புக்கெட்ட மனுசனாயிருக்கியே.. ஒரு ஆட்டோ பிடிச்சு ஓடுய்யா. நானும்கூட வரேன்.''

''வேண்டாம் தனம். உன் ஒடம்புக்கு ஆவாது. நானே போறேன்.''

''அந்த ஆளு கையில பிரைஸ் அடிச்ச விசயத்தைச் சொல்லிடாதே. அப்புறம் அது உஜாராயிடும். அவர்ட்ட குடுத்து வைச்சிருக்கிற அல்லா டிக்கட்டும் வோணும்னு சொல்லி வாங்கியா. அப்பத்தான் ஒன் பேர்ல சந்தேகம் வராது.''

ரங்கன் தயங்கினான். இந்த உலகமே ரமணியைத் தூண்டினாலும், அவன் ஏமாற்ற மாட்டான். இதுவரையில் நல்லதையே நினைத்து, நல்லதையே செய்து வரும் ரமணி துரோகம் செய்ய மாட்டான். இது சத்தியம்! ரமணியின் மனத்தின் பரிசுத்தத்தை உணர தனத்துக்கு ஏது வாய்ப்பு? அதுதான் இப்படிப் பேசுகிறாள்.''

''யோவ், நீ போக மாட்டே?''

வேறு வழியில்லாமல் அவன் ரமணியின் வீடு செல்லப் புறப்பட்டான். கடைசி பஸ் அவனுக்குக் கிடைத்தது.

இரவு அவனால் திரும்பி நடக்க முடியவில்லை. கண்கள் இருண்டன. கால்கள் பின்னின.

பணம் என்றால் கடவுள் கூட ஏமாற்றும் என்றாள் தனம்! எப்பேர்ப்பட்ட உண்மையை அவள் கூறி விட்டாள்?

ரமணி, திடீரென்று வெளியூர் சென்றிருப்பதாக அவனுடைய தாயார் மூலமாகத் தெரிய வந்தது. தான் கொடுத்து வைத்திருந்த லாட்டரி டிக்கட்டுகளை எடுத்துத் தருமாறு கெஞ்சினான் ரங்கன். ஏற்கெனவே ரங்கனை அறிந்திருந்த அவளும் அலமாரியைத் திறந்து, ஒரு நீண்ட உறையை அவனிடம் கொடுத்தாள்.

பழைய பழைய டிக்கட்டுகளெல்லாம் அழகாகக் கோர்த்து வைக்கப்பட்டிருந்தன. சமீபத்தில் வாங்கிய ஹரியானா டிக்கட்டும் இருந்தது. ஆனால் —

AB 2987654 இல்லை!

(தொடரும்)

**திருச்சி உச்சிப் பிள்ளையார் கோவிலுக்குச் சென்றிருந்தேன். சுவாமி தரிசனத்திற்கு வந்திருந்த ஒருவர், காலணியைக் கழற்றித் தன் தோள் பையில் செருகிக் கொண்டு கோவிலுக்குள் செல்வதைப் பார்த்து அதிர்ந்தேன். கோவிலுக்குள் காலணிகளை எடுத்துச் செல்லக் கூடாது என்றுதானே பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள்? காலணியை விட்டுச் செல்வதால் அப்படியென்ன பெருஞ்செலவு வந்து விடப் போகிறது? ஏன் இந்தக் கஞ்சத்தனம்?**

**— தாயு. ஆண்டாள்.**



# பரோபகாரி

சங்கரன் மெல்லத் தலையை உயர்த்திப் பார்த்தான். நிறையப் பேர் வந்து கூடி விட்டார்கள். எல்லாம் எங்கோ எப்போதோ பார்த்துப் பரிச்சயமான முகங்கள் — நிலம் குத்தகைக்குப் பார்த்தவர்கள், தாசில்தார் ஆபீஸ் மாஜி குமாஸ்தாக்கள், உள்ளூர்க்காரர்கள் என்று எல்லாமே அப்பாவுக்கு வேண்டியவர்கள். எப்படியோ செய்தி எட்டி விட்டது. வெளியூர் நண்பர்களுக்கும் உறவுக்காரர்களுக்கும்தான் சொல்லி விட வேண்டும். சங்கரனுக்கு அந்த க்ஷணம் எதுவும் ஓடவில்லை. இத்தனை சமீபத்தில் அப்பாவின் மரணத்தை எதிர்பார்க்கவேயில்லை. திடுமெனத் திரியை இழுத்து எண்ணெய்க்குள் போட்டது மாதிரி அணைந்து போவார் என்று எதிர்பார்க்கவில்லை. ரேழி தாண்டினதும் நடை வாசலில் அப்பாவைப் படுக்க வைத்திருந்தார்கள். அவரைப் பார்த்த மாத்திரத்தில் குபுக்கென்று பொங்கிவிட்டது. சுவரில் மோதிக் குலுங்கி அழுதான். சங்கரன் அழுவதைப் பார்த்ததும் தம்பி கண்ணனும் செல்வாவும் அழுது விட்டார்கள்.

பெரியவர் ஒருவர் வந்து சங்கரனை நெஞ்சில் சரித்துக் கொண்டு மெல்ல வாசலுக்கு அழைத்து வந்தார். காலை வெயில் முகத்தில் கூர்மையாகப் பாய்ந்தது.

''பந்தல் காரனுக்குச் சொல்லி அனுப்புங்க...''

''மேளக்காரனுக்கும் சொல்லணும். வெட்டியான் எல்லாம் எங்கே போயிட்டானுங்களோ? தேடிக் கொண்டாரணுமே! ஆள் அனுப்பினாத்தான் உண்டு. முன்ன மாதிரி அவனுங்களாத் தேடி வர மாட்டானுவ.''

''அவசரப்படாதீங்கப்பா.''

''வெயில் ஏறிட்டே போகுதேய்யா.''

திசைக்கொரு குரல் எழும்பிற்று. மூர்த்தி எங்கிருந்தோ வேர்த்துப் போய் வந்தான். இந்த மாதிரித் துக்க காரியமோ நல்ல காரியமோ மூர்த்தி கூப்பிடாமலே வந்து விடுவான். சகலத்தையும் வாரித் தலையில் போட்டுக் கொள்வான்.

''எங்கே போனே மூர்த்தி? நீ இல்லாம ஒரு காரியமும் ஓடலை. சட்டுப் புட்டுனு வேலையைப் பார்.''

மூர்த்தி இலேசாகச் சிரித்துக் கொண்டான். நேராகச் சங்கரனிடம் வந்தான். தோளில் கை போட்டுக் கொண்டு சங்கரனைத் தனியாகப் பிரித்துக் கொண்டு போனான்.

''அழுவாதே பிரதர். உன்னைப் பார்த்துத் தம்பிங்களும் அழுவுது பார். வெளியூருக்குச் சொல்லி விடணும். சிலதுக்குத் தந்தி கொடுத்திடலாம். ரொம்ப முக்கியமான ஆளுங்களுக்குச் சொல்லி அனுப்புவோம்.''

''ஸ்ரீரங்கம், சிதம்பரம்... தேனி இதுக்கு மட்டும் ஆள் அனுப்பினாப் போதும்.''

''செய்திடுவோம் பிரதர். கையில பணம் இருக்கா? பாவம் எதிர்பார்த்திருக்கவே மாட்டீங்க, திடீர்ச் செலவு. பந்தல்காரனை வரச் சொல்லிட்டேன். வெட்டியானுக்குக் கொய்யாத் தோப்புக்கு ஆள் அனுப்பிச்சுட்டேன். ஈவினிங் ஏதாவது பண்ணணுமே? சமையல்காரனுக்குச் சொல்லி விடணும். அவன் முதல்லேயே அட்வான்ஸ் கொடும்பான்...''

''எவ்வளவு வேணும் மூர்த்தி?''

''நாப்பது பக்க நோட்டு வாங்கியாந்து அப்பப்ப செலவு ஆகிறதை எழுதிடுவோம். எவ்வளவு செலவு ஆகும்னு நமக்கு எப்படித் தெரியும்? ஐயா ஜே... ஜேன்னு வாழ்ந்த மனுஷன். சிறப்பாக் கொண்டு போய்ச் சேர்க்காட்டி ஊர்லே நாலு விதமாப் பேசிடுவானுங்க...''

''சரி. எவ்வளவு தேவைப்படும்?''

''எப்படியும் அஞ்சு நோட்டுல கொண்டு போய் விட்டுடும்.''

சங்கரனுக்குத் திக்கென்றது. கண்களை இருட்டு அழுத்திற்று. ஐந்தாயிரத்திற்கு எங்கே போவது என்று பிசைந்தது. அப்பாவின் வைத்தியச் செலவுக்கே தண்ணீராய் ஓடிற்று! ஆபீஸில் அத்தனை லோன்களையும் உருட்டித் திரட்டி எடுத்தாயிற்று! தம்பி பணம் வைத்திருப்பானா? அவனிடம் எப்படிக் கேட்க முடியும்? தொட்டதுக்கெல்லாம் என் முகம் பார்க்கின்றார்களே!

''என்ன பிரதர் யோசிக்கிறீங்க?''

''ஒண்ணுமில்லை மூர்த்தி. முதல்ல பந்தல் போடுறதுக்கு ஏற்பாடு பண்ணு.''

''வந்துட்டான். எப்படான்னுதானே காத்துட்டிருக்கான். தெருவை அடைச்சு நீளமாப் போடச் சொல்லியிருக்கேன். அட்வான்ஸ் ஒரு நூறு ரூபா கொடுத்தனுப்புங்க...''

''முதல்ல பதினெட்டு நாள் பந்தல் வாடகை எத்தனைன்னு பேசிக்கலாம் மூர்த்தி. பிற்பாடு அட்வான்ஸ் பார்க்கலாம்.'' பந்தல்காரன் குறுக்கே நின்றான். மூர்த்தி அவனுடன் உரக்க விவாதித்தான். அவன் நூற்றி ஐம்பது ரூபாயை உள்ளங்கையில் அழுத்தி விட்டு வேலையைக் கவனி என்றான். மூர்த்தியின் பரபரப்பும் கோபமும் சங்கரனுக்கு வியப்பூட்டின. எதிராளியை மடக்குகின்ற திறனும் அவன் பேச்சும் எல்லோருக்கும் வியப்பாயிருந்தது. துக்க வீடு முழுக்க ஊதுபத்திப் புகை மாதிரி

பாரதிபாலன்

மூர்த்தி சுழன்றான்.

"பிரதர்! வெட்டியான் வந்துட்டான். காப்பிச் செலவுக்குக் கொடுத்து விடுங்க. போய் ஜோலியைப் பார்க்கட்டும். எரு, விறகு எல்லாம் அவனே ரெடி பண்ணிடுவான்."

சங்கரன் ஆயிரம் ரூபாயை எடுத்து மூர்த்தியிடம் கொடுத்தான்.

"என்ன பிரதர்!"

"நீயே செலவு பண்ணு மூர்த்தி. எது தேவையோ அதுக்குச் செலவு பண்ணிக்க. பொழுதுக்கும் என்கிட்டே வராதே! என்னாலே ஒண்ணும் முடியலே மயக்கமா வர்றது..."

மூர்த்தி சட்டென்று மண் தரையில் சங்கரனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். அவன் புஜத்தை அழுத்திப் பிடித்துக் கொண்டான். "என்னா செய்யுது பிரதர்? முடியலைன்னா கொஞ்சம் படுத்துக்கயேன். ஜூஸ் எதுனா வாங்கியாந்து தரட்டுமா?" மிகவும் வருடலாய்ப் பேசினான். மூர்த்தியின் உபசரிப்பு சங்கரனுக்கு அந்த இடத்தில் என்னவோ போல் இருந்தது. "இந்தா மூர்த்தி, இதுல ஆயிரம் ரூபாய் இருக்கு" என்று பணத்தைக் கொடுத்துவிட்டு, சங்கரன் தலையைக் கவிழ்ந்து உட்கார்ந்து கொண்டான்.

"எருவுக்கும் விறகுக்கும் எவ்வளவு ஆகும்?" மூர்த்தி பணத்தை எண்ணிக் கொண்டே வெட்டியானிடம் கேட்டான்.

"கொடு சாமி! இது என்னா புதுசாக் கேக்குற... உனக்குத் தெரியாதா?"

"ஐம்பது தர்றேன். சுத்தமா வேலையை முடிச்சுடுங்க."

"ஐம்பது போதாது சாமி. ரெண்டாள் வேலை. ராவு முழுக்க முழிச்சுக் கெடக்கணும்."

"சரி எவ்வளவு கேக்குற?"

"என்னத்த சாமி உன்கிட்டப் போய்க் கேக்கிறது. இருநூறு கொடுத்துடுங்க. ஐயா பேரைச் சொல்லி ரெண்டு நாள் சாப்பிட்டுக்கிறோம். மற்றபடி கோடி வேஷ்டி துண்டெல்லாம் தனி அதையெல்லாம் சொல்லணுமா?"

"புத்தியைக் காட்டிட்டியேப்பா! பட்டுனு இருநூறு கொடுன்றயே. வெறும் இருபது ரூபாய்க்கு ஓடியாந்தவன். இப்ப சம்பாதிச்சுக் கிட்டாத்தான்னு பாக்குறியா?"

"கடவுளே! அப்படியெல்லாம் பேசாதேய்யா. வயித்துக்குத்தானே கேட்கிறேன்."

"நூறு ரூபா தர்றேன். ஒழிஞ்சு போ. வேலை சுத்தமா இருக்கணும்."

"எங்க ரெண்டு பேருக்கும் தலைக்கு நூறாக் கொடுத்துடு சாமி" என்றான் வெட்டியான் உதவியாளனைச் சுட்டிக்



காட்டி.

''இதா பாரு என் கூட வம்பு பண்ணாதே! நம்மள விட்டா இந்தக் காரியத்தை யார் செய்வான்னு ஏறிக்கிறானுங்க. பாத்தியா நெத்தியில அடிச்ச மாதிரி இருநூறு கொடுன்றான்! அதான் அப்பவே நம்மூர் பிரஸிடெண்ட்டுட்டச் சொன்னேன். பேசாமல் ஊர் வரிப் பணத்துல ஒரு பிணம் எரிக்கிற மிஷின் வாங்கிடணும்னு..''

''அதுக்கும் மிஷின் வந்தாச்சா?'' யாரோ ஒருவன் மூர்த்தியிடம் ஆர்வமாகக் கேட்டான்.

''எப்பவோ வந்தாச்சு! அது ஒண்ணு செலவானாலும் பரவாயில்லைன்னு வாங்கிப் போட்டுட்டா, இந்தப் பயலுங்களைத் தொங்க வேண்டியதில்லை பாருங்க. அவசரம்னு கூப்பிட்டா ஏறிக்கிறானுங்களே..!''

''அப்ப நம்மூர் பஞ்சாயத்துலே முதல் வேலையா ஒரு பொணம் எரிக்கிற மிஷின் வாங்கிப் போடணும். மத்த ஊர்க்காரன் செய்யறதுக்குள்ள நாம முந்திடணும் மூர்த்தி.

''செய்திடலாம் பிரதர்.''

வெட்டியான் கண்களை மலர்த்தி மூர்த்தியையும் சுற்றியிருந்தவர்களையும் வியப்பாய்ப் பார்த்தான். அவன் கண்கள் ததும்பின. இப்படித்தானே தெருக் குப்பை அள்ளிக் கொண்டிருந்த ஒற்றை மாட்டு வண்டியைத் திடுமென ஒருநாள் நிறுத்தி விட்டுக் குப்பை அள்ளுவதற்கு டிராக்டர் வாங்கி விட்டார்கள் என்ற பயம். இப்படி எப்போதோ ஓர் அசுப காரியம் நடக்கின்ற போதுதானே கையில் பணம் கூடுகின்றது? இனி இதிலும் மண் விழுவா போகிறது! முகத்தில் இருள் படர்ந்தது.

''வேண்டாம்யா! பொணம் எரிக்கிற மிஷினெல்லாம் கொண்டாந்திடாதீங்க. தப்பிதமா நான் நடந்திருந்தா செருப்பைக் கழற்றி அடிச்சுடுங்க. அந்த மிஷினெல்லாம் வேண்டாம்!''—அவசரமாகச் சொன்னான் வெட்டியான். மூர்த்திக்குச் சிரிப்பு வந்தது. சிரிக்க முடியவில்லை. ''சரி, போ, நூற்றி ஐம்பது தர்றேன்'' என்று பேச்சை முடித்தான்.

''வேண்டாம்யா! எனக்குப் பைசா துட்டு வேண்டாம். காப்பித் தண்ணி மட்டும் வாங்கிக்கொடுங்க. ஐயா சொன்ன வேலையைச் சுத்தமாச் செய்திடறேன்'' என்றதும் மூர்த்திக்கு வியப்பாயிற்று. ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு சுவைத்தான். தெருக்கடையில் வெட்டியானுக்குக் காப்பி வாங்கிக் கொடுத்தான்.

''எதுவும் பேசுவதற்கு அவகாசமில்லை. போய் வேலையைக் கவனி, பிற்பாடு பேசுவோம்'' என்றான்.

''மிஷின் கொண்டாந்திட மாட்டீங்களே!''

''மாட்டேன்!''



''கடையிலே போய்ப் பத்து சாமான்கள் வாங்கிட்டு வரச் சொன்னேன்; ஒன்பதுதான் வாங்கிட்டு வந்திருக்கான்...''

''யாரு?''

''என் ஒன்றுவிட்ட தம்பி!''

— சுவீட் ரவி.

சமையல் பாத்திரங்கள் வாடகை வண்டியில் வந்து இறங்கின. மூர்த்தி நடு வெயிலில் நின்று கொண்டு பாத்திரங்களைச் சரிபார்த்துக் கொண்டிருந்தான். உடம்பெல்லாம் வியர்த்து ஊற்றியது. சங்கரன் மூர்த்தியைப் பிரமிப்பாய்ப் பார்த்தான். இப்படி வந்து நமக்காக உழைக்கிறானே என்ற பிரமிப்பு. இந்தத் தேசத்தில் பலனை எதிர்பார்க்காது பாடுபடவும் ஆள் இருக்கிறதே என்ற பிரமிப்பு. மூர்த்தி சங்கரனின் மனத்தில் பால் மாதிரி பொங்கினான்.

''வேலைக்குப் போவலையா?''

சட்டென்று மூர்த்தி நிமிர்ந்து பார்த்தான். அவன் மனைவி வந்து நின்று கொண்டிருந்தாள்.

''நீ எதுக்குடீ இங்கே வந்து தொந்தரவு பண்றே? வூட்டுக்குப் போ!''

''வேலைக்குப் போகாம இப்படி வந்து புழுக்கை வேலை செய்யுறீங்களே! வூட்டுலே இன்னும் அடுப்பு மூட்டலை! பிள்ளைங்க எல்லாம் திங்க ஆலாப் பறக்குதுங்க. வேலைக்குப் போனாலாவது முப்பது ரூபா கிடைக்குமே...?''

''வூட்டுக்குப் போ! நான் வர்றேன்.''

''வூட்டுலெ இருக்க முடியலை. பிள்ளைங்க எல்லாம் பறக்குதுங்க. ஏன் இப்படி அடுத்த வீட்டுல வந்து எடுபிடி வேலை செய்வானேன்?''

''போடீ! மிதிச்சுடுவேன்!''

''த்தூ! சம்பாதிக்கத் துப்புக் கிடையாது!''

மூர்த்திக்குத் திடீரென்று வெறிக்குணம் பிறந்தது. கையில் வைத்திருந்த பையிலிருந்து இரண்டு நூறு ரூபாய்த் தாள்களைத் தூக்கி அவள் மீது வீசினான். அவள் பூதமாய்ப் பார்த்தாள்.

மூர்த்தி நாற்பது பக்க நோட்டைப் பிரித்து, 'வெட்டியானுக்குக் கொடுத்த வகையில் இருநூறு' என்று எழுதினான்.

பார்த்துக் கொண்டிருந்த சங்கரனின் மனசு கத்திரித்துப் போட்டது மாதிரி துடிதுடிக்க ஆரம்பித்தது!

# அதிர்ஷ்டம்

ரங்கனால் விரைவாக நடக்க முடியவில்லை. மனம் அலறியது. தனக்குப் பைத்தியம் பிடித்துக் கொண்டு வருவதாக அவன் தனக்குத்தானே கூறிக் கொண்டான். எந்த வழியில் சென்றால் வீட்டை அடையலாம் என்ற பிரக்ஞை கூட அற்றுப் போய் விட்டது. ஆழ்வார்ப்பேட்டை சதுக்கத்தை அடைந்தவன் திசை தெரியாமல் விழித்தான். நெஞ்சை ரமணி இன்னும் பிழிந்து கொண்டிருந்தான். நம்பிக்கை துரோகம் பற்றி அவன் கேள்விப்பட்டிருக்கிறான். இப்போது அனுபவ ரீதியாக உணர்ந்த போது முதலில் தீராத கோபமும் அதன் பின்னர் அடங்காத துயரமும் உண்டாயின. மோபரீஸ் சாலை வழியாக நடக்காமல், மனத்தின் கொந்தளிப்பில், கால்கள் எல்டாம்ஸ் சாலையில் பிரவேசித்தன. நீண்ட தூரம் நடந்த பிறகுதான் புத்தி வந்தது. இனித் திரும்பிச் செல்வது, நடக்க வேண்டிய தூரத்தை அதிகரிக்கும் என்ற எண்ணம் பிறக்கவில்லை. திரும்பினான். எல்டாம்ஸ் சாலையின் எல்லை வந்து விட்டால், வலது புறமாக அண்ணா சாலையை அடைந்து நடக்கலாம் என்று தோன்றவில்லை.



மீண்டும் ஆழ்வார்ப்பேட்டை.

இப்போது திடீரென்று ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. ரமணியின் தாயார் எந்த ஊர் என்று சொல்லவில்லை. 'வெளியூர்' என்றுதான் கூறினாள். பஸ்ஸா, ரெயிலா, விமானமா என்றும் குறிப்பிடவில்லை.

என்ன முட்டாள் அவன்?

ரமணியின் வீட்டை நோக்கி நடந்தான். இப்போது கோபம் இல்லை. துயரமும் சற்றே விலகியிருந்தது. ரமணி நிச்சயமாக பரிசுச் சீட்டுடன் ஓடியிருக்க மாட்டான் என்ற நம்பிக்கை அரும்பாக முளைத்தது. அவனை ஆளாக்கியவன் ரமணி. அவனுக்கு வழிகாட்டியாக இருந்தவன் ரமணி. அவனுடைய மனம் துயரப்பட்ட போதும், பலவீனம் அடைந்த போதும் ஆறுதல் அளித்து, தைரியம் கொடுத்தவன் ரமணி. அவனுடைய பணத்தைப் பத்திரப்படுத்தி வைத்திருப்பது போல, பரிசுச் சீட்டையும் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறான். பரிசு பெற்றுள்ள செய்தியே ரமணிக்குத் தெரிந்திருக்காது. ரமணி எங்கே, மாலையில் வெளியாகும் தமிழ் தினசரிகளைப் படிக்கிறான்? நிச்சயமாக, வேறு ஏதோ அவசர வேலையாகத்தான் வெளியூர் சென்றிருக்க வேண்டும். ஆனால் வீட்டில் அவன் ஒப்படைத்த பரிசுச் சீட்டுகள் இல்லையே? ரமணியின் தாயார் தேடினாளே. ஒருவேளை வீட்டிலுள்ளவர்களுக்கும் தெரியாமல் எங்காவது ஒளித்து வைத்திருப்பானோ? ஊஹூம். இருக்க முடியாது. ரங்கன் மாதா மாதம் பணத்தைப் பரிசுச் சீட்டுகளில் விரயமாக்குவதைக் கண்டிக்கிறவன், ரமணி. புதையலைப் பத்திரப்படுத்துவது போல அவன் கொடுத்து வைத்த சீட்டுகளை ஒளித்து வைக்க வேண்டிய எண்ணமே ரமணிக்கு வந்திருக்காது.

## 8

பரிசுச் சீட்டு எங்கே?

ஒருவேளை ஆபீசிலேயே மேஜை டிராயரில் வைத்திருப்பானோ? பாங்க் புத்தகத்தை அங்கேதானே வைக்கிறான்?

அபிராமபுரம் வரை சென்றவன், ரமணியின் வீட்டை மறந்தான். இப்போது மண்டையில் ஒரு தெளிவு பிறந்தது. பரிசுச் சீட்டு ஆபீசில்தான் இருக்கிறது என்று மனம் உறுதி அளித்தது.

நடக்கலானான்.

என்ன மணி என்று தெரியவில்லை. மோபரீஸ் சாலை கேட்பாரற்று நீண்டது. ராயப்பேட்டையை அடைந்ததும், ஒளிப் பிழம்புடன் காட்சி அளித்த ஒரு ஓட்டலைக் கண்டான். வாயிலில் நின்று உள்ளே எட்டிப் பார்த்தான். தேடிய சுவர்க் கடிகாரம் கண்ணில் பட்டது. பன்னிரண்டரை.

மணியைத் தெரிந்து கொண்டு என்ன லாபம்? இந்த ஞானம் தாமதமாக, அதைத் தெரிந்து கொண்ட பிறகு பிறந்தது.

நடந்தான். நடந்தான். கால் வலிக்கவில்லை. இருபத்தைந்து லட்சம் ரூபாய் நிச்சயமாகக் கிடைக்கும் என்ற நம்பிக்கை ஊற்றெடுத்தது. சீட்டு நிச்சயமாக ரமணியின் மேஜையில்தான் இருக்கிறது; சந்தேகமே இல்லை! அவன் நாளைக்கு பெரிய பணக்காரனாக ஆகி விடுவான்.

போதை ஏற ஏற ரங்கன், பதினாறு வயது வாலிபனைப் போல ஓடினான். கால் வலி தெரியவில்லை. மன வலி மறைந்து விட்டது.

கட்டட வாசலில் கூர்க்கா இன்னொரு கூர்க்காவுடன் பேசிக் கொண்டிருந்தான். அவனுக்கு ஏற்கெனவே ரங்கனைத் தெரியும். மடக்கவில்லை, கேள்வி கேட்கவில்லை.

ஆபீஸ் கதவு உள் பக்கமாகப் பூட்டப் பட்டிருந்தது.

தட்டினான். திறக்கப்படவில்லை.

''மயிலு... மயிலு... கதவைத் தொற... ரங்கன் வந்திருக்கேன்.''

பதில் இல்லை.

கதவின் மீது காதை வைத்துப் பார்த்தான். பயங்கரமான குறட்டைதான் கேட்டது.

ரங்கனுடைய சோனிக் கைகளும் சோனிக் கால்களும், மயில்சாமியின் குறட்டையை உடைக்காமற் போகவே, ஒரு யோசனை தோன்றியது.

ஆபீஸ் வாயிலுக்கு வெளியே, இரண்டு மூன்று மரக்கட்டைகள் இருந்தன. ஒன்றை எடுத்தான். தூக்க முடியாமல் தூக்கினான். கதவை பலம் கொண்ட மட்டும் இடித்தான்.

''யார்டா அது சோமாறி!''

மயில்சாமி அரைத் தூக்கத்தில் கத்தினான்.

மீண்டும் ஒரு இடி.

''கஸ்மாலம், இந்த வேளையிலே எவண்டா இடிக்கிறான்.. கயதே, யாரடா அது?''

''மயிலு... மயிலு.. நான்தான் ரங்கன்... ரங்கன்!'' அவன் கத்தினான்

கதவு திறந்தது.

''யோவ், இன்னா நீ...? என் பொண்ணைத் தனியா வுட்டுட்டு இங்கே வந்து நிக்கறே? அவ ஒன்னை அடிச்சாளா?''

''இல்லே மயிலு. நான் மயிலாப்பூர்லேந்து ஓடி வர்றேன்.''

''அங்கே எங்கே போனே? இப்ப மணி ரெண்டு.''

''ரமணி சார் மேஜையைத் தொறக்கணும். மயிலு.''

''இன்னா சொன்னே? ரமணி சார் மேஜையைத் தொறக்கணுமா?''

''ஆமாம் மயிலு.''

''எங் கையிலே ஏது சாவி? அது அந்த ஆள்ட்டதான் இருக்கு.''

''அப்ப உடைச்சுடு...''

''யோவ், நீ என் மருமகப் புள்ளைதான். ஆனா அதுக்காக என் டூட்டியிலே கை வைக்க மாட்டேன்.''

''விவரமெல்லாம் அப்பாலே சொல்றேன்... மேஜையை உடைச்சுடு, மயிலு.''

''முடியாது. வெளியே போ... இல்லாட்டி, உன் வேலை பூடும்.''

''ஐயோ கடவுளே!''

ரங்கன் வெளியே புலம்பினாலும் உள்ளே ஒரு விவேகம் பிறந்திருந்தது. தனக்கு இருபத்தைந்து லட்சம் ரூபாய் பரிசு விழுந்திருக்கிறது என்று மயில்சாமியிடம் சொல்லி விட்டால் அவ்வளவுதான். பரிசுச் சீட்டைப் பறித்துக் கொண்டதோடு நிற்காமல், அவனை அங்கேயே தீர்த்துக் கட்டி, ஒரு கோணியில் போட்டுத் தைத்து சமுத்திரத்தில் எறிந்து விடுவான்.

என்ன செய்ய?

உண்மையைச் சொன்னால் நிச்சயமாக, பரிசுச் சீட்டு, அது மேஜையினுள் இருந்தாலும், அவனுடைய கைக்கு வராது.

''போய்யா வூட்டுக்கு... ஆபீஸ் தொறந்ததும் வா... எந்த மேசையை வோணும்னாலும் ஒடை'' என்றான் மயில்சாமி.

சூதுவாது தெரியாத ரங்கனுக்கு ஒரு நம்பக்கூடிய பொய்யை உதிர்க்க வரவில்லை. எந்த ஒரு மிருகத்திடமும் இயல்பாய் வரக்கூடிய பயமும் முன்ஜாக்கிரதை

பி.வி.ஆர்.

உணர்வும் அவனிடமும் தோன்றின.

அவன் மெதுவாக நகர்ந்தான்.

''யோவ், ரங்கா!''

''என்ன மயிலு?''

''இந்த நேரத்தில வந்து மேசையை ஒடைன்னியே அதுக்கு இன்னா அர்த்தம். அதுக்குள்ளாற இன்னா இருக்கு? ஹங்.. சொல்லுய்யா?''

ரங்கன் பதில் சொல்லாமல் அவசர அவசரமாக வெளியேறி, மாடிப்படியை அடைந்தான்.

**வீ**ட்டை அடைந்து அவன் கதவைத் தட்டிய போது, ''யாருய்யா அது?'' என்ற குரல் அதட்டியது.

''தனம், நான்தான்.''

''டிக்கட்டு கிடைச்சுதாய்யா?''

கதவைத் திறக்கையிலேயே கேட்டாள்.

''இல்லே, தனம்.''

''இன்னாய்யா சொல்றே, டிக்கட்டு கெடைக்கலியா? யோவ், எங் கையிலே பொய் சொன்னே, ஒன்னைக் கிளிச்சுடுவேன்.''

முதன் முறையாகத் தனத்தைக் கண்டு ரங்கனுடைய நெஞ்சம் அலறியது. அப்பனைப் போலத்தானோ பெண்ணும்? ஒரு ஆவேச வெறியில், அவன் தனக்கு லாட்டரியில் பரிசு கிடைத்திருப்பதை மனைவி என்ற உறவின் காரணமாக அவளிடம் சொல்லி விட்டான். இது அவனுக்கே ஆபத்தாகப் போகிறதா?

''சத்தியமாச் சொல்றேன், தனம். ரமணி சார் வீட்டுக்குப் போனேன். அவரு வெளியூர் போயிருக்காராம்.''

''பூட்டானா? ஒன் இருபத்தஞ்சு லட்சத்தை எடுத்துக்கிட்டு ஓடிட்டானா...''

''இப்படிப் பேசாதே, தனம்... ரமணி சார் நல்லவர்... ஏமாத்த மாட்டார்.''

''யோவ், சும்மாக் கிடய்யா... அந்த ஆளு உன்னை ஏமாத்திட்டான்.''

''இல்லே, தனம்... டிக்கட்டை ஆபீஸ் மேஜைக்குள்ளேதான் அவரு வைச்சிருப்பாரு.''

''அப்ப அங்கே போய் பாக்கறது.''

---

**''எதிர் வீட்டு ராமு சுத்த அல்பம்டா.''**

**''எப்படிச் சொல்றே?''**

**''சட்டையை 'அயர்ன்' பண்ணக் கொடுக்கிறதுக்கு முந்தி நல்லாக் கசக்கிட்டுத்தான் கொடுக்கிறான்னா பாரேன்!''**

**— வி. ரேவதி.**



''போனேன்... உன் அப்பா மேஜையை உடைக்க முடியாதுன்னு என்னை விரட்டிட்டார்.''

''என் அப்பன் கையிலே இன்னா சங்கதின்னு சொன்னியா?''

''இல்லே...''

''ஒனக்குக் கூட அறிவு இருக்குதய்யா. அந்த ஆளு பொல்லாத ஆளு.. பொண்டாட்டி கழுத்திலேந்து செயினைத் திருடின ஆளு.''

''மயில்சாமி உன் அப்பா.''

''அப்பன்காரனா இருந்தா என்னய்யா? ஏமாத்த மாட்டானா?''

''அப்ப அவர்ட்ட சொல்ல வேண்டாம்னு சொல்றியா தனம்?''

''டிக்கட்டு கைக்கு வரட்டும். அப்பாலே டமாரம் அடிப்போம்.''

''சரி.''

''யோவ்!''

''என்ன தனம்?''

''பணம் கெடைச்சதும் வளையலு, கம்மலு அல்லாம் வாங்கணும்.''

''வாங்கலாம்.''

''எனிக்கு நம்பிக்கை இல்லை. அந்த ரமணி, நான்தான் டிக்கட் வாங்கினேன்னு சாதிப்பான். ஒலகம் அவனைத்தான் நம்பும்.''

''இல்லே தனம். நீ நினைக்கிறது தப்பு. என் டயரியிலே நம்பர் எழுதியிருக்கும்.''

''யார் எழுதினாங்க?''

''ரமணி சார்தான்.''

''டயரியும் என் டயரிம்பான். நீ அதைத் திருடிட்டேம்பான்.''

அவளை எப்படி நம்ப வைப்பது என்று ரங்கனுக்குத் தெரியவில்லை.

''யோவ்!''

''என்ன தனம்?''

''பணம் கைக்கு வந்ததும் புச்சா ஒரு வூடு வாங்கணும்.''

''வாங்கலாம்.''

''காரு வாங்கணும்.''

''வாங்கலாம், தனம்.''

''நான் பட்டுப் பொடவைதான் கட்டிப்பேன்... வைரக் கம்மல் போட்டுப்பேன்.''

''இப்பத் தூங்கு தனம்.''

''யோவ், பணம் ஒன் கைக்கு வந்தப்புறம் என்னை விட்டு ஓடினே, நான் இன்னா செய்வேன் தெரியுமா?''

ரங்கன் பதில் கூறவில்லை.

''என்னைக் கைவுட மாட்டியே?''

''மாட்டேன்.''

''சத்தியமா? என் தலையிலே அடிச்சுச் சொல்லு... கப்பூரம் ஏத்திச் சொல்லு.''

''சத்தியமா, உன்னைக் கைவிட மாட்டேன், தனம். உன் மேல் ஆணைய்யா!''

அவளுடைய தலையை வலது கையால் தொட்டான்.

''யோவ்!''

''என்ன தனம்?''

பெண்ணின் அப்பா: பொண்ணு நன்னா பாடுவா, மாப்பிள்ளைக்கு ரேடியோ கேக்கற பழக்கமுண்டா...?

பிள்ளையின் அப்பா: ''அதெல்லாம் இந்தக் காலத்திலே எவன் கேக்கறான்... நகை, பணம், ஸ்கூட்டர், ஃபிரிட்ஜ், வி.சி.ஆர், டி.வி., இதைக் கேக்கறதோட சரி...''

— காஞ்சி எஸ். ஃபைசுதீன்.



''ஒரு மாசம் பல்லைக் கடிச்சுக்கிட்டுப் பொறுத்துக்க... அப்புறம் நீ என்கிட்ட ஆசைப்பட்டதையெல்லாம் நான் தரேன்.''

ரங்கனுடைய மனம் இப்போது அவளுடைய உடலில் லயிக்கவில்லை. அது சுற்றிச் சுற்றி இருபத்தைந்து லட்சத்திலேயே ஓடிக் கொண்டிருந்தது.

''சரி'' என்றான் இயந்திரமாக.

விடிந்தது.

''நானும் ஆபீசுக்கு வரப் போறேன்'' என்றாள் தனம்.

''எதுக்கு?''

''அந்த ஆள் கையிலே நீ கேக்கறப்ப நானும் கூட இருக்கணும்.''

''ரமணி சார்தான் வெளியூர் போயிருக்காரே. என்னிக்கு வர்றார்னு தெரியாதே!''

''அப்ப உன் முதலாளி கையில விசயத்தைச் சொல்லிடலாம்.''

''இப்ப யாருக்கும் தெரிய வேண்டாம், தனம்.''

''அதுவும் சர்தான். ஆனா அந்த ஆள் வந்ததும் என் கையிலே சொல்லு.''

''சொல்றேன்.''

''ஆனா அந்த ஆள் வருவான்னு எனக்குத் தோணல.''

''ரமணி சார் நல்லவரு. ஏமாத்த மாட்டாரு. நிச்சயமா வந்துடுவாரு.''

தனத்துக்கு ஆத்திரம் பீறிட்டது.

''யோவ், அந்த ஆள் நல்லவருன்னு என் கையில இன்னொருவாட்டி சொல்லாதே, ஹெங்ஹாங்... அந்த ஆளு முழியே சரியில்லே!''

பதில் கூறாமல் ரங்கன் வெளியேறினான்.

ஒவ்வொருவராக ஆபீசுக்கு வந்தார்கள். சுகந்தியின் டைப்ரைட்டர் மீது கிடந்த தூசியைத் தட்டிக் கொண்டே, மயில்சாமி அவளுடன் தாழ்ந்த குரலில் பேசிக் கொண்டிருந்தான். சுகந்தியை ஒரு தனிப்பட்ட முறையில் மயில்சாமி கவனித்துக் கொள்ளுவது ஆபீஸ் முழுதும் அறிந்ததுதான். ஆனால் இன்று அவன் தாழ்ந்த குரலில் பேசியது ரங்கனுக்குச் சங்கடமாக இருந்தது.

பத்து மணிக்கு மாலு வந்தாள்.

''வணக்கம், மாலு அம்மா.''

''என்ன ரங்கா, என்னிக்கும் இல்லாம, நான் வந்ததுமே என்கிட்ட வர்றே?''

''ரமணி சார் என்னிக்கு வராரு?''

''என்ன கேட்டே? ரமணி சார் என்னிக்கு வர்றாரா? ஆமாம் அவர் எங்கே போயிருக்கார்?''

''வெளியூர்னு வீட்ல சொன்னாங்க. உங்ககிட்ட சொல்லாம இருக்க மாட்டாரேன்னு கேட்டேன்.''

''எனக்குத் தெரியாது.''

''ஆபீஸ் விசயமா வெளியூர் போயிருப்பாரோ?''

''என்னைக் கேட்டா?''

''முதலாளியைக் கேட்கலாமா?''

''கேளேன்.''

''பயமாயிருக்கு.''

''அப்ப ஒண்ணு செய்.''

''என்ன, மாலு அம்மா?''

''கேட்காதே.''

காற்று இழந்த பலூனைப் போல ரங்கனுடைய முகம் சுருங்கியது.

நகர்ந்தான்.

''ரங்கா?''

சுகந்தியின் குரல்.

சென்றான்.

''என்ன ரங்கா எப்படி இருக்கே?''

''இருக்கேன்.''

''என்ன உன் முகம் எப்படியோ இருக்கு. கண் ரெண்டும் சிகப்பா, பொங்கிக்கிடக்கு. ராத்திரி முழுக்கத் தூங்கலையா?''

ரங்கன் மந்தனாக இருந்தாலும் கேள்வியின் அர்த்தம் புரிந்து விட்டது. மயில்சாமி முந்தின இரவு நடந்ததைச் சுகந்தியிடம் கூறியிருக்கிறான். அவள்தானே அவனுக்கு அவ்வப்போது, ஐந்தும் பத்தும் கைமாற்று கொடுக்கிறாள்?

''அதோ பாரு ரங்கா, மாலு டெலிபோன்ல சிரிச்சுச் சிரிச்சுப் பேசறா! நிச்சயமா ரமணியாகத்தான் இருக்கும்.''

மறுகணம் ரங்கன் ரமணியின் மேஜை அருகே, டெலிபோன் மூலமாக உறவாடிக் கொண்டிருக்கும் மாலுவிடம் ஓடினான்.

அவன் அவளை அடைவதற்கும், மாலு டெலிபோனை வைப்பதற்கும் சரியாக இருந்தது.

(தொடரும்)

# டீன் ஏஜ் பிரச்னைகள்

## -சமாளிப்பது எப்படி?

**டீன் ஏஜ் என்பது 'கனவுகள் மலரும் பருவம்.' பெற்றோருக்கோ, குழந்தைகளின் இந்தப் பருவமே 'சிம்ஹ சொப்பனமாக விளங்குகிறது! இதற்குக் காரணம் என்ன? அலசுகிறார் மனித இயல் நிபுணர் லில்லி நீலங்காவில்.**

'மகன் சிகரெட் பிடிக்க ஆரம்பித்திருக்கிறான் என்ற வலுவான சந்தேகம் ஏற்பட்டுள்ளது. சராசரி அம்மா இந்தப் பிரச்னையை எப்படி அணுகுவாள்? ஒரேயடியாக உணர்ச்சிவசப்பட்டுப் போய், கண்ணெல்லாம் நீர்மல்கப் பேசுவாள். ''உன்னை மலைபோல நம்பியிருந்தேனே... இப்படிப் பண்ணிட்டியே...! உனக்கப்புறம் ஒரு தங்கை இருக்காடா.— அவளுக்குக் கல்யாணம் பண்ணணும், நீ எங்களை வைச்சுக் காப்பாத்தலைன்னாலும் தங்கையைக் கரையேத்தணும், தம்பி வேறே இருக்கான்...''

அப்பா இப்படி வெடிப்பார்: ''நம்ம குடும்ப கௌரவம் என்ன ஆகிறது! நாளைக்கு உனக்கு ஏதாவது ஒண்ணு வந்து, நீ படுத்தா இங்கே வைத்தியம் பண்ண யாருக்கு வசதி இருக்கு... காசைக் கரியாக்கற இந்தப் பழக்கமெல்லாம் எப்படிக் கத்துக்கிட்டே...?''

அப்பாவும் சரி, அம்மாவும் சரி, 'மகனே! உன் ஆரோக்கியம் எங்களுக்கு முக்கியம், நீ எங்களுக்கு முக்கியம் என்பதைச் சொல்வதேயில்லை. குடும்ப கௌரவம், அதன் எதிர்காலம், செலவு என்பன்வற்றை மட்டுமே பெரிதாகக் கருதி, குறிப்பிடுகிறார்கள்.

டீன் ஏஜ் பருவம் என்பது சுதந்திரத்தை நாடும் பருவம். ஆனால் அதே சமயத்தில் எதிர்காலம் பற்றிய ஸ்திரமான நம்பிக்கைகள் வேரூன்றாத பருவம். இந்தப் பருவத்தில் தப்பு செய்யும் ஓர் இளைஞனிடம் எதிர்காலத்தைப் பற்றிப் பயமுறுத்தும் விதமாகப் பேசும் பெற்றோர்கள் அவனுடைய நெகடிவ் சிந்தனையைத்தான் வளர்க்கிறார்கள்.

'எனக்காகச் செலவு செய்வது இவர்களுக்குக் கசக்கிறது; தங்கையின் கல்யாணத்துக்கு மட்டும் செலவு செய்யத் தயாராய் இருக்கிறார்கள். என்னைப் பயன்படுத்தி இந்தக் குடும்பத்தின் எதிர்காலத்தை அமைத்துக் கொள்ள நினைக்கிறார்கள், ஆனால் என் மீது இவர்களுக்கு அக்கறை இல்லை' என்று சிந்தித்து முடிவுக்கு வந்து விடுவான். விரக்தி, அதன் பயனாக இன்னும் கொஞ்சம் முரட்டுத்தனம் என்று அவன் திசை திரும்பி



* சிகரெட் பற்றிய சந்தேகமிருந்தால் என்ன செய்வது...?

## ஊருக்கு உபதேசம்

இப்போதுள்ள பாராளுமன்ற உறுப்பினர்களிலேயே பேகராம் சௌகாலுக்கு ஒரு சிறப்பு விசேஷம் உண்டு. இந்த ஜனதா தள எம்.பி.க்கு மொத்தம் பத்து குழந்தைகள். 'அதிக குழந்தைகளின் அப்பா' என்ற பெருமை கொண்ட எம்.பி. இவர்தான். ஆறு பிள்ளைகள். நாலு பெண்கள்.

பாராளுமன்றத்தில் இருப்பவர்களில், ஒன்பது குழந்தைகளைப் பெற்ற உறுப்பினர்கள் ஐந்து பேர். எட்டு குழந்தைகளின் அப்பாக்கள் பதினோரு பேர். பத்தொன்பது பேருக்கு ஏழு குழந்தைகள். 28 உறுப்பினர்களுக்கு ஆறு குழந்தைகள். 53 எம்.பி.க்களுக்கு ஐந்து குழந்தைகள். எண்பத்தோரு பேருக்கு நான்கு குழந்தைகள். தொண்ணூற்று ஒன்பது பேருக்கு மூன்று குழந்தைகள். இரண்டு குழந்தைகள் பெற்றவர் எண்ணிக்கை முப்பத்து ஒன்பது. ஒரே குழந்தை பெற்றெடுத்தவர்கள் முப்பத்து ஒன்பது பேர்.

— ஜூலி.



ஒரே வீட்ல இருக்கோம். ஒரே குடும்பம். இதில் ஒவ்வொருவரும் தன் தேவைகளை மட்டுமே நினைச்சுக்கிட்டிருக்க முடியுமா? கொஞ்சம் மத்தவங்க தேவைகளையும் பாரு... புரிஞ்சுக்கோ. இப்போ எனக்குத் தேவை ஓய்வுதான். நான் கால் நீட்டிப் படுத்துட்டா எட்டரை மணிக்கு நம் எல்லாருடைய வயிறும் 'தேவை தேவை'ன்னு கேட்குமே... அப்ப என்ன பண்றது. உம்...?

பானு, அம்மாவின் இந்தப் பதிலைக் கேட்டுச் சிரித்து விடுவாள். வாக்குவாதம் வளராது. வடுக்கள் ஏற்படாது.

சசிகலாவின் அம்மாவுக்கு ஏக கவலை. 'அவள் எப்போது பார்த்தாலும் தனியாகப் படுத்துக் கொண்டு ஏதோ 'வெஸ்டர்ன் மியூசிக்' கேட்டுக் கொண்டிருக்கிறாள். கலகலப்பாகப் பேசுவதில்லை' என்று விசாரத்தோடு கூறுகிறார்.

பிரதீப்பின் அம்மாவுக்கு அவன் டிரெஸ் செய்து கொள்வதைப் பார்த்தால் 'பெற்ற வயிறு பற்றி எரிகிறது.' 'இப்படியா ஒரு பிள்ளை தலையைக் கலைத்து விட்டுக் கொண்டு, அழுக்குத் துணியோடு அலையும்? சதா வாயில் சூயிங்கம்; ஒரு காதில் டோலக்கு...!' — புலம்புகிறார் பிரதீப்பின் அம்மா.

இவ்வாறு தனிமையை நாடுவதும் மற்றவர்களினின்று தன்னை வேறுபடுத்திக் காட்டிக் கொள்ளும் வகையில் உடுத்திக் கொள்வதும் டீன் ஏஜுக்கு உரிய பழக்கங்கள். இதைப் பார்க்கும் பெற்றோர்களுக்குக் கவலையும் கோபமும் வந்தாலும் அவற்றைக் கொஞ்சம் கட்டுப்படுத்திக் கொண்டு, பொறுமை சாதிக்க வேண்டும். கிண்டலும், கேலியும் குத்தல் வார்த்தைகளும் இத்தருணங்களில் பிள்ளைகளுக்கு மிகுந்த வேதனையை அளிக்கும். தொடர்ந்து வேறுபட்டே நிற்கச் செய்யும். அவர்களிடம் ஏற்பட்டுள்ள மாற்றங்களை நீங்கள் கவனித்துள்ளதாக உணர்த்தும் அதே நேரத்தில் அதைப் பற்றி அதிகம் கோபத்தையோ கவலையையோ வெளிப்படுத்தாதீர்கள். உங்களுக்குப் பிடிக்கவில்லை என்பதை ஒளிக்காதீர்கள். அதே நேரத்தில் அவர்களுடைய தனிப்பட்ட ரசனைகளை உணர்வுகளைப் புரிந்து கொள்வதாகவும் மதிப்பதாகவும் காட்டிக் கொள்ளுங்கள். டீன் ஏஜினருக்கு உங்களிடம் மதிப்பு அதிகரிக்கும். நாளடைவில் தாற்காலிக மோகங்கள் மாறி விடும்.

டீன் ஏஜ் — குழந்தைகளுக்குக் கனவுகள் மலரும் பருவம் என்றால், பெற்றோரைப் பொறுத்தவரையில் அது பிடிகளைத் தளர்த்த வேண்டிய பருவம். உங்கள் குழந்தையைத் தனி மனிதனாக நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டிய காலம் வந்து விட்டது. அதற்கு உங்களை நீங்களே தயார் செய்து கொள்ள வேண்டும்:

- அவர்கள் எத்தகைய எதிர்காலக் கனவுகளைக் காண வேண்டும் என்பதை நீங்கள் நிர்ணயிக்காதீர்கள். அவர்களுடைய கனவுகளைப் புரிந்து கொண்டும் பகிர்ந்து கொண்டும் பேசி உதவுங்கள். யோசனை கூறுங்கள்.
- அன்பைப் பொழியுங்கள்.
- உணர்ச்சிகளை மறைக்காமல் மிதமாக வெளிப்படுத்துங்கள்.
- ஆனால் உணர்ச்சிவசப்பட்டு கடும் வார்த்தைகளை வீசாதீர்கள்.
- நட்போடு எடுத்துச் சொல்லுங்கள்
- முடிவுகளைத் திணிக்காதீர்கள்.
- உங்கள் குழந்தைகளை அவர்களின் நிறை — குறைகளுடன் முழுமையாக ஏற்றுக் கொள்ளுங்கள்.

— தொகுப்பு: **அலமேலு கணேசன்.**

வண்ணப்படங்கள்: **உத்ரா.**

நடிப்பு:

**வத்ஸ், விஷ்ணுமோகன், தீபா, ஜானகி கிருஷ்ணசாமி.**

# ஜாதி இரண்டொழிய...

ப்ரொபஸர் நரசிம்மன் அறைக்கு வெளியே எட்டிப் பார்த்தார். இண்டர்வியூவுக்காகக் காத்திருந்த இளைஞர்கள் இன்னும் இருந்தார்கள். ஆளுக்கொரு சான்றிதழ் கத்தை. ஆளுக்கோர் ஆர்வம். கிடைத்து விடும் என்கிற நம்பிக்கையுடன் நாற்காலியில் காத்திருந்தார்கள். சேதுராமன் ஒழுங்காக அமைத்த பெயர்ப் பட்டியலை அவரிடம் கொடுக்க, ''இன்னும் எத்தனை பேர்ப்பா?'' என்று கேட்டார் நரசிம்மன்.

''இருபத்து ஏழு ஸார். மத்தியானத்துக்குள்ளே முடிச்சுரணும். எஸ்ஸி எஸ்டி கோட்டா இண்டர்வியூ மத்தியானம். காலையிலே இவங்க ரெகுலர் காண்டிடேட்ஸ். முடிச்சுடலாம் ஸார்.''

''காலைல ஃபார்வர்டு கம்யூனிட்டி. சாயங்காலம் பாக்வர்டு கம்யூனிட்டியா? சாதி இரண்டொழிய வேறில்லைன்னு ஔவை யார் சொன்னது இப்பகூட பொருந்துது பார்த்திங்களா ப்ரேம்!''

அவர் சொன்னது கெட்ட வார்த்தை போல அத்தனை பேரும் அவரை ஒரு மாதிரி பார்க்க, ப்ரேம்நாத், ''அடுத்த ஆசாமியைக் கூப்பிடுப்பா... ஸார், 'ஹிண்டு' மாட்ரிமோனியல் காலத்தைப் பாருங்க, சாதி எங்கேயும் போயிரலை,'' என்றார்.

அந்த இளைஞன் உள்ளே வந்து ''குட்மார்னிங் ஸர்ஸ்'' என்று சொல்லிவிட்டு நின்று கொண்டிருக்க, ''சிட் டவுன்'' என்றார்.

''உன் பேர்?''

''ரமேஷ்.''

''லெட்மி ஸீ... டிஸ்டிங்ஷன் டிஸ்டிங்ஷன், டிஸ்டிங்ஷன், ஜிபிஏ த்ரீ பாயிண்ட் நைன், காலேஜ்லே எத்தனாவது ராங்க்?''

''இரண்டாவது ஸார்.''

''முதல் யாரு?''

''சுரேஷ்னு.''

''ஃபார்வர்டு கம்யூனிடி மொத்தமும் ரமேஷ் சுரேஷ்னு பேர் வெச்சுக்குது கவனிச்சிங்களா?'' என்றார் சித்தார்த்தன்.

''நரசிம்மன் வெங்கடாச்சாரின்னு வெச்சுக்கிட்டா வேலை கிடைக்கல்ல. அதனாலதான்'' என்றார் ப்ரேம்நாத். அந்தப் பையன் அவர்களை மாற்றி மாற்றிப் பார்த்து, மையமாகச் சிரித்துக் கொண்டிருந்தான்.

''அவனும் இண்டர்வியூவுக்கு வந்திருக்கானா?''

''ஆம்.''

''யுனிவர்ஸிட்டியில எத்தனாவது ராங்க்?''

''எட்டு அல்லது ஒம்பது. நாட் ஷ்யூர்.''

''வேற ஏதாவது வேலைக்கு அப்ளை பண்ணியா?''

''ஆம், ஸார்.''

''செலக்ட் ஆச்சா?''

''இன்னும் தெரியலை ஸார். பி எச் இ எல், ஐ டி ஐ, என் டி பி ஸி.''

''யு பி எஸ்ஸி எல்லாம் எழுதியிருக்கியா?''

''எழுதியிருக்கேன்.''

''கேட்?''

''அதுவும் எழுதியிருக்கேன் ஸார்.''

ப்ரேம்நாத் டெக்னிக்கலாக் கேட்பதற்கு முன், ''ரமேஷ், லெட்மி ஆஸ்க் யூ எ ஃப்ராங்க் கொஸ்சன். இத்தனை நல்ல மார்க் வாங்கியிருக்கே... ஏன் பாஸ் ஆகி ஒரு வருஷமா வேலையில்லே? வாட் வெண்ட் ராங்?'' என்றார் நரசிம்மன்.

ரமேஷை உன்னிப்பாகப் பார்த்தார். அவன் கண்ணாடியைக் கழற்றித் துடைத்துப் போட்டுக் கொண்டு, லேசாகப் புன்னகை புரிந்தாலும் அந்தக் கேள்வி அவனைத் தாக்கியிருக்க வேண்டும். ''ஐ ஜஸ்ட் டோண்ட் நோ ஸார்! லக் இல்லைன்னு நினைக்கிறேன்...''

''ப்ரேம்?''

ப்ரேம்நாத், ''ரமேஷ், உன் ஸ்ட்ராங் சப்ஜெக்ட் என்ன?''

''கம்யூனிகேஷன்.''

''அனலாக்? டிஜிட்டல்?''

''இரண்டும்.''

ப்ரேம்நாத்தின் கேள்விகளைக் கேட்டு, போர்டில் படம் வரைந்து பதில் சொன்ன ரமேஷின் வாழ்க்கைக் காகிதங்களைப் பார்த்தார் நரசிம்மன். சரித்திரமே சர்ட்டிபிகேட்கள் வடிவில் இருந்தது. காலேஜ் பேச்சுப் போட்டி, ட்ரெக்கிங், என்ஸிஸி, அனைத்துக் கல்லூரி விவாதம், கம்ப்யூட்டர் சொஸைட்டி மாணவப் பரிசு... ப்ரேம்நாத் முடித்ததும் தன்னருகில் உட்கார்ந்திருந்தவரிடம், ''எனி திங் சித்து?'' என்றார் சித்தார்த்தனைப் பார்த்து. அவர் தலையை ஆட்டினார். ''ரமேஷ் யூ கேன் கோ நௌ.'' போகு முன் ரமேஷ் சற்றுத் தயங்கி, ''ஸார் ஒரு விஷயம்...!'' என்றான்.

''என்ன?''

**சுஜாதா**

''இந்த இண்டர்வியூவில நான் நல்லா செய்தேனா? எனக்குச் சான்ஸ் இருக்கா?''

''யூல் ஹியர் ஃப்ரம் அஸ் ஸூன்! லெட்டர் போடுவம்பா. இப்பவே தெரியாது.'' அனைவரும் அவனை ஆயாசத்துடன் பார்த்தனர். அவன் உதடுகள் லேசாகத் துடித்தன.

''இது எனக்கு எட்டாவது இண்டர்வியூ ஸார். ஒருவிதமான எல்லைக்கு வந்துக்கிட்டு இருக்கேன். ஐ'ம் டெஸ்பரேட். குடும்பத்தைக் காப்பாத்த வேண்டிய பொறுப்பு இருக்குது. வி ஆர் வெரி புவர்.''

''குடும்பத்தைக் காப்பாத்த வேண்டிய பொறுப்பு எங்க எல்லார்க்கும்தான் இருக்குப்பா'' என்றார், சித்தார்த்தன். மற்றவர் சிரித்தனர். நரசிம்மன் சிரிக்கவில்லை.

''வாட்ஸ் யுவர் ஃபாதர் ரமேஷ்?''

''ரிட்டயர்டு எலிமெண்ட்ரி ஸ்கூல் டீச்சர் ஸார்'' என்றான்.

''ஒன்லி ஸன்?''

''ஆமா ஸார்.''

''வேறே?''

''நாலு சிஸ்டர்ஸ் ஸார்.''

''குட். செலக்ட் ஆச்சுன்னா லெட்டர் போடறோம், என்ன...?'' என்றார் சித்தார்த்தன். ''தாங்க்யூ ஸார்'' என்று அவன் திகைப்புடன் தன் காகிதங்களைச் சேகரித்துக் கொண்டு சென்றான். போனதும் சித்தார்த்தன், ''மிஸ்டர் சேர்மன், குடும்ப விவரங்களைச் கேக்கறதில அர்த்தமில்லைன்னு நினைக்கிறேன்,'' என்றார். அவர் ஷெட்யூல்ட் காஸ்ட் பிரதிநிதி.

''இல்லை, சித்தார்த்தன். இந்தப் பையன் அந்தச் சூழ்நிலையில் இருந்து கஷ்டப்பட்டுப் படிச்சு முன்னுக்கு வந்திருக்கான். இவனுக்கு வேலை கொடுக்க வேண்டாமா?''

''மற்ற கேண்டிடேட்டுகளையும் வேக்கன்ஸியையும் பார்க்கலாமா?''

''ப்ரேம்... பையன் எப்படி?''

''என் கேள்விகளுக்கெல்லாம் நல்லாவே பதில் சொன்னான். ப்ரில்லியண்ட்!''

''ப்ரைட் பாய்! அகடமிக்கலாகவும் நல்லா வாங்கியிருக்கான். பொதுவா செலக்ட் பண்ணி வெக்கலாம்.''

''மொத்தம் இருபத்தேழு பேர். இருக்கிறது நாலு வேக்கன்ஸி. ஃபைனல் ராங்க்கிங்கில வந்தா வி கன் க்வாலிஃபை ஹிம்.''

''ஒரு பள்ளி வாத்தியாரின் மகன், ஒரே மகன், நாலு பெண்கள்... சிஸ்டர்ஸ்.''

''இதெல்லாம் பத்தி நாம கவலைப்பட வேண்டாம்னு தோணுது.'' பர்ஸானல் சேதுராமனைப் பார்த்து, ''சேது, மொத்தமே நாலு வேக்கன்ஸிதானா?''

''ஆமா ஸார்.''

மீண்டும் காகிதங்களைப் பார்த்து, ''பின்ன பத்துன்னு போட்டிருக்கு.''

''ஆறு வேக்கன்ஸி ஷெட்யூல் காஸ்ட், ஷெட்யூல் ட்ரைபுக்கு ஸார்!''

''அது மத்தியானம்.''

''அப்ப இந்தப் பையனுக்குக் கிடைக்கிறது கஷ்டமா?''



> அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1990
>
> முடிவு தேதி: ஜூன் 15.
>
> விவரங்களுக்குச் சென்ற வாரக் கல்கி இதழைப் பாருங்கள்.
> அல்லது
> அடுத்த வாரக் கல்கி இதழை எதிர்பாருங்கள்.
>
> — ஆசிரியர்.

''ஆமா ஸார். ஏற்கெனவே அஞ்சு பேரை க்வாலிஃபை பண்ணி வெச்சிருக்கோம். எல்லாரும் 'டாப்பர்ஸ்!' ''

''ஷெட்யூல்ட் காஸ்ட் வேக்கன்ஸியைக் க்ன்வர்ட் பண்ண முடியாதா?'' சேதுராமன் பயந்து போய், ''ஸார்! அந்தப் பேச்சே வேண்டாம். நாம ஏற்கெனவே டிஃபால்ட்,'' என்றார்.

''டிஃபால்ட்டுன்னா?''

''சொல்றேன்'' என்றார் சித்தார்த்தன். ''மிஸ்டர் சேர்மன். இது மத்திய சர்க்கார் கம்பெனி. அதில் மொத்த வேலைகளில இத்தனை சதவிகிதம் எஸ்ஸி, எஸ்டிக்குன்னு ஒதுக்கீடு பண்ணிக் கோட்டா இருக்குது. அதை இவங்க ஃபில்அப் பண்ணாம, சரியா காண்டிடேட்ஸ் கிடைக்கலைன்னு கதை பண்ணிட்டு, இதுவரை பாயல் காட்டியிருக்காங்க. இந்த அம்பேத்கர் நூற்றாண்டு வருஷம் எல்லாத்தையும் நிரப்பி ஆகணும்னு சர்க்கார்லருந்து உத்தரவு வந்திருச்சு. அதனால் அந்தக் காலி இடங்களை ரெகுலர் காண்டிடேட்ஸ் வெச்சுக்கிட்டு நிரப்ப முடியாது.''

''சேதுராமன், அவங்க எத்தனை பேர் மத்தியானம் வர்றாங்க?''

''ஆறு பேர் ஸார்.''

''எத்தனை வேக்கன்ஸி?''

''ஆறு. அவங்களுக்கு நல்ல டிமாண்ட் ஸார்!''

நரசிம்மன் புரியாமல் ''அபத்தமா இருக்குது!''

''இதில அபத்தம் ஒண்ணுமில்லை ஸார் இவங்களுடைய கடந்த காலப் பாவங்களை இப்ப திருத்திக்கிறாங்க. கம்பெனியில மெத்தனமான போக்கினால இந்த நிலை. வருஷா வருஷம் நிரப்பாமலேயே இருந்திருக்காங்க. கமிஷன் இவங்களைப் பத்தி ரொம்பக் காட்டமாக் குறிப்பு எழுதியிருக்காங்க!''

''அப்ப அந்தப் பையனுக்குக் கிடைக்காதுங்கறீங்க?''

''கஷ்டம் ஸார்.''

''இட்ஸ் எ பிட்டி! பிராமணனாப் பிறந்ததினால அத்தனை கஷ்டப்படறானே!''

''ஹௌ டு யூ நோ ஹி இஸ் எ ப்ராமின்?''

''இல்லை, முதலியார், செட்டியார், பிள்ளை...!''

அனைவரும் சித்தார்த்தனைப் பார்க்க, ''நாம இதைப் பத்தி விவாதிக்காம இருக்கிறது நல்லதுன்னு நினைக்கிறேன். இந்தப் பையனை விசாரிச்சீங்க. அதே போல மத்தியானம் வர்றவங்களையும் விசாரிச்சுப் பாருங்க. அப்பா யாருன்னு. செருப்பு தைக்கிறவங்க, விவசாயிங்க, போர்ட்டர்ங்க இப்படி இருப்பாங்க. லெட்ஸ் நாட் கெட் எமோஷனல். இந்த விதிமுறைங்கள்ளாம் நூற்றாண்டுக் கணக்காக நிகழ்ந்த அநியாயங்களைத்திருத்தப் பெரியமனுசங்க அமைச்சது.''

''என்னதான் இருந்தாலும்...'' என்று ஆரம்பித்த நரசிம்மனைத் தடுத்து, ''நெக்ஸ்ட்'' என்றார் சித்தார்த்தன்.

**ம**ற்ற பேர்களைப் பேருக்கு மூணு நிமிஷம் என்று மேம்போக்காகத்தான் இண்டர்வியூ பண்ண முடிந்தது. அவசரமாக முடித்துவிட்டு இடைவேளையில் சாப்பிடச் சென்றார்கள். சித்தார்த்தன் தனிப்பட்டுச் சேதுராமனிடம் சற்றுக் கோபமாகப் பேசிக் கொண்டிருந்தார். ''என்னாய்யா சேர்மன்! இந்த ஆளு ரெக்ரூட்மெண்ட் விதிமுறைங்கள்ளாம் தெரியாம ஜாதி பத்திப் பேசிக்கிட்டு?''

சேதுராமன் சற்றே பதற்றத்துடன், ''ஸாரி ஸார்! அவரு அமெரிக்காவில் இருந்தவரு. இப்பத்தான் இந்தியா திரும்பியிருக்காரு. நம்மூரு நெளிவு சுளிவெல்லாம் தெரியலை.''

''அவன் எவனா இருந்தா என்னய்யா?''

**ம**த்தியானம் எஸ்ஸி எஸ்டிக்காகத் தனிப்பட்ட இண்டர்வியூ நடந்தது. சித்தார்த்தன் ''ப்ரொபஸருக்கு எல்லா விதிங்களையும் சொல்லிடுங்க சேதுராமன்,'' என்றார்.

''என்னப்பா?'' என்றார் நரசிம்மன்.

''இந்த இண்டர்வியூவை நடத்தற போது நாம ஸ்டாண்டர்ட்ஸ் கொஞ்சம் குறைச்சுக்கணும் ஸார். அவங்களுக்குக் கேள்வி புரியலைன்னா விவரமா விளக்கணும்.''

''எதுக்கு அப்படிச் செய்யணும்?''

''ரூல்ஸ் அப்படி மிஸ்டர் நரசிம்மன்,'' என்றார் சித்தார்த்தன்.

''அப்படியா?''

''தாழ்த்தப்பட்ட வர்க்கத்தில இருந்து வந்ததினால, அவங்களுக்கு அதிகம் வாய்ப்புக்கள் இல்லாததினால அவங்களை முன்னுக்குக் கொண்டு வர எல்லா முயற்சிகளும் செய்யணும். அதுக்காகத்தான் இந்த விதிகள்.''

''சரி, நீங்களே கேளுங்க. நான் ஏதும் கேக்கலை.''

"அப்படி இல்லை. தாராளமாக் கேக்கலாம். ஆனா அவனுக்கு என்ன தெரியும்னு கண்டுபிடிச்சுக் கேளுங்க. என்ன தெரியாதுன்னு கண்டுபிடிக்க அல்ல."

முதலில் வந்தது ஒரு பெண். "உக்காரும்மா, உன் பேர் என்னம்மா?"

"ஷீலா" என்றாள் ஷீலா. தலையைக் கச்சிதமாக வெட்டியிருந்தாள். பென்சிலை உருட்டிக் கொண்டு பெரிய பெரிய விழிகளால் மாற்றி மாற்றி அனைவரையும் பார்த்தாள். லேசாக மேல் நாட்டு ஸெண்ட் வாசனை அடித்தது.

"சேதுராமன், "ஷீலா! நீங்க நேத்திக்கு வர வேண்டியவங்கதானே?"

"எஸ் ஸார். ஸாரி ஸார். நேத்திக்கு வர முடியலை."

"அதனால் பரவாயில்லை."

ப்ரேம்நாத், "ஷீலா உனக்குப் பிடித்தமான சப்ஜெக்ட் எது?"

"ம்யூஸிக் ஸார்."

"பாடங்களில."

"ம்ம்... ஆஸ்க் மி..." என்று பென்சில் கடிக்க,

"எது வேணா கேக்கலாமா?"

சித்தார்த்தன் குறுக்கிட்டு "ஷீலா நீ எந்தப் பாடத்தில கேள்வி கேக்க, பதில் சொல்ல விரும்பறே?"

"ம்ம் எனிதிங்" என்று மோகனமாகச் சிரித்தாள்.

நரசிம்மன் "லுக் யங் லேடி! டூ யூ அண்டர்ஸ்டாண்ட் தி கொஸ்சன்?" என்றார். உடனே அவள் சிரிப்பு உறைந்து போய், "எஸ்" என்றாள், ஹீனமாக.

ப்ரேம் "ஆல் ரைட் உன் ப்ராஜெக்ட் என்ன?"

"அவள் தன் ப்ராஜெக்ட் ரிப்போர்ட்டை அவர்களிடம் நகர்த்தினாள்.

"ப்ராஜெக்ட் பேர் கூடவா தெரியாது?"

"ஃபில்டர் டிஸைன்" என்றாள்.

"அதைப் பற்றி நாலு வாக்கியங்கள் சொல்லு," என்றார் நரசிம்மன்.

மறுபடி சிரித்து, "ஸாரி ஸார், ஐ ஃபர்காட்." என்றாள்.

"இந்த ஸப்ஜெக்ட் எப்ப முடிந்தது?"

"மார்ச்சில்."

"யூ மீன், அதற்குள் இரண்டு மாதத்தில் மறந்து விட்டாயா?"

சித்தார்த்தன், "ஷீலா, டைட்டிலாவது ஞாபகமில்லை?"

"ஊருக்குப் போயிருந்தேன். என் அப்பாவுடன். இன்று காலைதான் திரும்ப வந்ததும் இண்டர்வியூவுக்கு வருகிறேன். அதனால் படிக்க முடியவில்லை." — அவள் ஆங்கில உச்சரிப்பில் கான்வெண்ட் கலந்திருந்தது.

"ஃபேர் இனஃப்."

"எனிதிங் எல்ஸ் ஜெண்டில்மன்?" என்றார் சித்தார்த்தன். பதிலுக்குக் காத்திராமல், "ஷீலா யு மே கோ."




## ஸ்டாண்டர்ட் மோட்டர்ஸ் ஸ்ட்ரைக்

ரொம்பக் காலமாக மூடிக் கிடக்கும் ஸ்டாண்டர்ட் மோட்டார் தொழிற்சாலையின் எதிர்காலம், ஜூன் 28 ஆம் தேதி தில்லியில் கூடவிருக்கும் போர்டு மீட்டிங்கில் முடிவு செய்யப்படும் என்று தெரிகிறது.

வருகின்ற இரண்டு வருடங்களில் கிட்டத்தட்ட 24 கோடி ரூபாய், இந்த நிறுவனத்துக்குக் கொடுக்கப்பட்டால்தான் தொழிற்சாலை மறுபடி மூச்சு விட முடியுமாம். 'பிரமோட்டர்' என்ற வகையில் தொழிலதிபர் ஏ.சி. முத்தையா 4.13 கோடியும், வங்கிகள் 4.06 கோடியும், நிதி நிறுவனங்கள் 11.09 கோடியும், தமிழக அரசு 3 கோடி ரூபாயும் கொடுக்க வேண்டும் என்று ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறது.

தொடர்ந்து நடத்துவதற்கான முதலீடு, சப்ளையர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய தொகை, அன்றாடத் தேவைகளுக்கு வேண்டிய நிதி — இவை போக, இப்போதைய தொழிலாளரின் எண்ணிக்கையை 999 ஆகக் குறைப்பதனால் விலகும் ஊழியருக்குக் கணிசமான நஷ்ட ஈட்டுத் தொகை தர வேண்டியிருக்கிறது. தமிழக அரசின் தொழிலாளர் நல ஆணையர் துணையுடன்தான், அதிகப்படி ஊழியர்கள் 'தாமாக முன் வந்து ஓய்வு பெறும்' திட்டம் உறுதி செய்யப்பட்டது. எனவே நஷ்டஈட்டுத் தொகையைக் கொடுக்க தமிழக அரசையும் இந்தத் திட்டத்தில் இணைத்திருக்கிறார்கள்.

இனி, தொழில் துறையில் அனுபவம் உள்ள ஒருவரை மானேஜிங் டைரக்டராகவும், நிர்வாக அனுபவம் உள்ள ஒருவரை டைரக்டராகவும் நியமித்து நடத்த வேண்டும் என்று நிதி நிறுவனங்கள் தீர்மானித்திருக்கின்றன.

மூடிக் கிடக்கும் இந்தச் சென்னைத் தொழிற் சாலையின் திறவு கோல், இப்போது தமிழக அரசின் கையில்தான் இருக்கிறது என்கிறார்கள். ஏனென்றால் அரசின் ஒப்புதல் மட்டும் இன்னும் கிடைக்கவில்லையாம்!

— எஸ். வி. என்.

## மத்யமர்: வாசகர் விமர்சனம்

'ஜாதி இரண்டொழிய...' — சுஜாதா எழுதிவரும் 'மத்யமர்' சிறுகதைகளுள் ஐந்தாவது. இக்கதையின் எந்த அம்சம் உங்களை மிகவும் கவர்ந்தது? ஏன்? என்பதைக் குறிப்பிட்டுத் தபால் கார்டில் எழுதியனுப்புங்கள். கடந்த சில வாரங்களில் வெளிவந்துள்ள விமர்சனங்களைப் படித்திருப்பீர்களே; அவற்றைப் போல் சுருக்கமாக நடை, கரு, பாத்திரப் படைப்பு போன்றவற்றுள் ஏதேனும் ஒன்றை மட்டும் விமர்சிக்க வேண்டும். குறையிருந்தாலும் சுட்டிக் காட்டலாம்.

பிரசுரமாகும் விமர்சனங்களுக்கு ரூ. 25 சன்மானம். சிறந்த விமர்சனத்துக்கு ரூ. 50 சிறப்புப் பரிசு.

தபால் கார்டில் விமர்சனங்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 5.6.90.

ஷீலா எழுந்திருக்க, நரசிம்மன், ''ஷீலா, உன் தந்தை பெயர் என்ன?''

அவள் தயங்கி, இதற்குப் பதில் சொல்லித் தான் ஆக வேண்டுமா என்பது போல் அனைவரையும் பார்த்தாள்.

''உன் தந்தை என்ன வேலையிலிருக்கிறார்?''

''டைரக்டராக...''

''எங்கே?''

''ஸி ஆர் எல் இ.''

''சரி, நீ போகலாம்'' என்றார் சித்தார்த்தன்.

''ஒன்மோர் கொஸ்சன் ஷீலா. உன் தந்தையுடன் எந்த ஊருக்குப் போயிருந்தாய்?''

''ஸ்விட்சர்லாந்து'' என்று சொல்லிவிட்டு அனைவரையும் வசீகரமாகப் பார்த்துப் புன்னகைத்துவிட்டு, ''குட்டே'' என்று சென்றாள்.

அவள் போனதும், ''வாட் டு யு ஸே மிஸ்டர் சித்தார்த்தன். இவளுக்கு வேலை கொடுக்க வேண்டுமா?'' என்றார் நரசிம்மன்.

''ஏன்? அதில் என்ன சந்தேகம்?''

''இந்தப் பெண் பாக்வர்டு கிளாஸா? தந்தை சென்ட்ரல் கவர்ன்மெண்ட் லாபில் டைரக்டர். ஸ்விட்சர்லாந்து எல்லாம் சுற்றிவிட்டு வருகிறாள்.''

சித்தார்த்தன், ''சேதுராமன், அந்தப் பெண்ணின் காஸ்ட் சர்ட்டிபிகேட்டைப் பாருங்கள்,'' என்றார்.

சேதுராமன் பார்த்து, ''சர்ட்டிபிகேட்டெல்லாம் ஒழுங்காகத்தான் இருக்கிறது. ஷெட்யூல் வகுப்பைச் சேர்ந்தவள்தான்.''

''என்னய்யா அநியாயம்? இவள் பிற்பட்டவளா?''

சித்தார்த்தன், ''அதில் என்ன அநியாயம்?''

''வாட் நான்சென்ஸ்!''

சித்தார்த்தன், ''இதையெல்லாம் வினவ நமக்கு உரிமையில்லை. ப்ரொபஸர் ஷி ஈஸ் எ பாக்வர்ட் க்ளாஸ் — சர்க்கார் அமைத்த ஷெட்யூல் அங்கீகரித்தபடி'' என்றார்.

''இந்தப் பெண்ணுக்கு வேலை கொடுக்கணுமா?''

''கட்டாயம்!''

''பதிலும் சரியாச் சொல்லலையே?''

''நீங்க சரியாக் கேக்கலையே! அவ அப்பா பிறப்பைப் பத்தியே கேட்டுக்கிட்டு இருந்தீங்க!''

''எனக்கு என்னவோ இந்தப் பெண்ணுக்குக் கொடுக்க வேண்டாம்னு தோணுது.''

சேதுராமன் கொஞ்சம் பதற்றத்துடன், ''சார், க்வாலிஃபை பண்ணிடுங்க ஸார். ஏற்கெனவே ஷெட்யூல்ட் காஸ்ட் கமிஷன்ல ஏன் நிரப்பலைன்னு காச்சறாங்க. இந்த வருஷம் நிரப்பியே ஆகணும்.''

''சித்தார்த்தன் நீங்களே சொல்லுங்க. இது அநியாயமா இல்லையா?''

''எது?''

''அந்தப் பையனுக்குக் கொடுக்காம இந்தப் பெண்ணுக்குக் கொடுக்கறது. ரெண்டு பேரும் கேள்விங்களுக்குப் பதில் சொன்னதைக் கேட்டீங்க.''

சித்தார்த்தன் ப்ரொபசரை நேராகப் பார்த்து, ''ஆமாம் ப்ரொபஸர். இது அநியாயம்தான்! ஆனா இதைவிட அநியாயம் ஒண்ணு இதுக்கு முன்னால் இழைக்கப்பட்டது ப்ரொபஸர்! ஆயிரம் வருஷங்களுக்கு முன்னால! அந்த அநியாயத்தையே இன்னமும் நாம நிவர்த்தி பண்ணலை...''

''அப்ப சேதுராமா, கொடுத்தே ஆகணுங்கறே?''

''ஆமாம்'' என்றார் சித்தார்த்தன் — லேசான புன்னகையுடன். ஷீலாவின் பெயருக்கு எதிரில் 'ஸூட்டபிள்' என்று எழுதிக் கையெழுத்திட்டார் நரசிம்மன்.

''யாரு பாக்வர்டு! யாரு ஃபார்வர்டு! என்னய்யா தேசம் இது!''

நரசிம்மன் இண்டர்வியூ முடிந்து, லிப்டில் வெளிப்பட்டு, காரில் கிளம்பும் போது அந்தப் பையன் ரமேஷை மறுபடி பார்த்தார். தெரு மூலையில் பெட்டி, தோள் பையுடன் பஸ்ஸைப் பார்த்து நின்று கொண்டிருந்தான். இன்னுமா நிற்கிறான்... பக்கத்துக் காலனியில் தெரிந்தவர்கள் யாரை யாவது பார்த்து விட்டு இப்போதுதான் கிளம்புகிறானோ?

அந்தப் பெண் ஷீலாவுக்கு ஸி ஆர் எல் இயிலிருந்து கார் வந்திருந்தது. அதில் அவள் ஏறிக் கொண்டு செல்ல, அந்தப் பையன் முனிசிப்பல் குழாயில் தண்ணீர் குடித்துக் கொண்டிருந்தான். நரசிம்மன் அவனைக் கூப்பிடுவதற்குள் பஸ் வந்துவிட, அதில் ஏறிக் கொண்டு சென்றான்.

# இளைஞர்களுக்குக் கொடுத்த ஊட்டச்சத்து!

* 'வில்லனாக மாறிய பல்லவன்' என்ற தலையங்கம் படித்தேன். பல்லவன் ஊழியர்களும் நிர்வாகத்தினரும் எப்படி நடந்து கொண்டிருந்தால் பொது மக்களுக்குப் பிரச்னை தரக்கூடிய சூழ்நிலைகளைத் தவிர்த்திருக்கலாம் என்பதை மிக அழகாகச் சுட்டிக் காட்டியிருந்தீர்கள். பாராட்டுக்கள்.

சென்னை — 83, வே. சு. ஸ்ரீதரன்.

* "போராடுவதில் தவறில்லை; ஆனால், அதற்கு உரிய முறைகள் இருக்கின்றன. முதலில் கோரிக்கை, பிறகு எச்சரிக்கை, அப்புறம் முன்னறிவிப்புடன் கூடிய வேலை நிறுத்தம்." — என்ற தங்களின் தலையங்க வரிகள் போராடும் ஊழியர்கள் அனைவரும் மனத்தில் கொள்ள வேண்டிய வரிகள்.

சேலம், பூங்குழலி.

* "அட்டையில் கொட்டிய சிற்றருவியின் படத்தைப் பார்த்த போது அதில் குளிக்க வேண்டும் போல் இருந்தது. அத்தனை தத்ரூபம்!

தக்கோலம், அ. முஸ்தபா.

* Land Scaping கிற்கு உள்ளே வந்த கட்டுரையில், மஞ்சுளா ராவ் பல வார்த்தைகளில் — பல வரிகளில் கூறிய விளக்கத்தை, அட்டைப் படத்தின் மூலம் மிக அழகாகப் படம் பிடித்துக் காட்டி விட்டீர்களே! அட்டைப் படம் மிக மிக அருமை.

சென்னை — 10, எஸ். தர்மா.

* 'கல்கியின் விமர்சனமும் கலைஞரின் ரசனையும்!' என்ற தங்கள் கட்டுரையைப் படித்தேன். எவருக்கும் அஞ்சாது உண்மையை எடுத்துரைக்கும் — உண்மைக்காக வாதாடும் — தங்கள் செயலை ஒரு சக பத்திரிகையாளன் என்ற முறையில் மிகவும் பாராட்டுகிறேன்.

சென்னை — 88, தி. சு. சிவசங்கரன்.

* ராஜாஜி — நரசிம்மன் அரசியல் உறவு பற்றி இன்னொரு முக்கியமான வரலாற்று உண்மையையும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். 1962 பொதுத் தேர்தலில் சி. ஆர். நரசிம்மன் காங்கிரஸ் வேட்பாளராக கிருஷ்ணகிரியில் போட்டியிட்டார். அப்போது ராஜாஜி தமது சுதந்திரக் கட்சியின் மூலம் காங்கிரஸ் எதிர்ப்புப் பிரசாரத்தைத் தீவிரமாகக் கொண்டிருந்தார். அப்போது ராஜாஜி என்ன செய்தார் தெரியுமா? கிருஷ்ணகிரித் தொகுதியில் மகனுக்கு எதிராகப் பிரசாரம் செய்தார். இது சரித்திரம். இப்படிப்பட்ட சரித்திரத்தை இந்தக் கால தேவிலால்களிடமும் கருணாநிதிகளிடமும் எதிர்பார்க்க முடியுமா என்பதுதான் கேள்வி.

சென்னை — 5, எஸ். வாணி சங்கர்.

* தாங்கள் வெளியிட்ட எட்டு இலவச இணைப்புகளும், எக்காலத்திற்கும், எல்லாத் தரப்பினருக்கும் பயனுள்ளதாக அமைந்த பொக்கிஷங்கள்.

திருநெல்வேலி — 2, பாளை. உதயம்.

* 'வெற்றிகளைக் குவியுங்கள்!' — இலவச இணைப்பு எங்களைப் போன்ற எண்ணற்ற இளைஞர்களுக்கு நிறைய ஊட்டச்சத்தை அளித்தது.

கடலூர் — 1, சாந்தன்.

* 'உழவாரம் அழைக்கிறது' படித்தேன். அவர்கள் ஆற்றி வரும் தொண்டினைப் படிக்கும் பலர், அவரவர் ஊரில் உள்ள கோவில்களில் இதுபோன்ற பணிகளைச் செய்ய இக் கட்டுரை தூண்டுதலாக அமையும் என்பது திண்ணம்.

மதுரை, இல. அமுதன்.

* ஒரே குடும்பத்தில் உள்ள




மூன்று விதவைகளின் வெவ்வேறு உணர்ச்சிப் போராட்டங்களை படித்து விட்டுப் பொங்கி வரும் அழுகையைக் கஷ்டப்பட்டு விழுங்கிக் கொண்டேன். மனச் சுத்தத்தைப் பார்க்காமல் மடி, ஆசாரம் என்று புற அழுக்கை மட்டும் பார்க்கும் அந்த 'மன்னி' போன்ற மனுஷிகள் இன்னும் இருக்கத்தான் செய்கிறார்கள் என்று நினைக்கும் போது, சமூகத்தில், விதவைகளுக்கு விடிவு பிறக்க இன்னும் பல தலைமுறைகள் ஆகும் போலிருக்கிறதே என்று வருந்தாமல் இருக்க முடியவில்லை.

சிறுமுகை, ஏ. ஜெகதாம்பாள்.

* வண்ணதாசனின் 'ஆலங்கட்டி மழை' சிறுகதை படித்தேன். கரைந்து நீராய் வழிகிற ஆலங்கட்டிகளின் சில்லிப்பு — மனத்தில் மட்டுமின்றி, உடலிலும்! மனத்தில் இவ்வளவு வலியை, நிறைவை, மகிழ்ச்சியை, குளிரை — எல்லா உணர்வுகளின் அடர்த்தியையும் ஒரு கதை ஏற்படுத்தவும் கூடுமோ? வண்ணதாசனின் கலைத்திறன் நிரூபணம் ஆகியிருக்கிறது!

வேலூர், கமலாலயன்.

* அபர்ணா நாயுடு எழுதிய, 'முடிவு.... அவள் கையில்...' சிறுகதை பெண்களின் தனித்துவத்தை எடுத்துக் காட்டியதோடு, 'பெண்மைக்கு நிகர் பெண்மையே' என்பதை 'லோசனி' பாத்திரம் நிரூபித்து விட்டது!

முத்துப்பேட்டை, தஞ்சைத் தரணியன்.

* 'உலகம் பிறந்தது எனக்காக' — சினிமா விமர்சனம் டு லேட்! இது போன்ற படங்களுக்கு வந்த உடனேயே விமர்சனம் எழுதினீர்களேயானால் காசையும், காலத்தையும் பயனுள்ள வகையில் செயல்படுத்த எங்களுக்கு வசதியாக இருக்கும்.

மதுரை — 1, பிரபாகர் ப்ரியன்.

* "சிக்கலான பிரச்னையை விடுவிக்க, எல்லா மதத் தலைவர்களும் மடங்களின் தலைவர்களும் அரசுக்கு ஒத்துழைப்புத் தர வேண்டுமே தவிர, பிரச்னையை மேலும் சிக்கலாக்கக் கூடாது" என்ற தராசுவின் பதில், கல்கி என்றுமே நடுநிலையான பத்திரிகை என்பதற்கு ஓர் உதாரணம்.

தக்கோலம், ஆ. புகாரி.

# 9

**மா**லு, டெலிபோனை வைத்தவள், பதற்றத்துடன் ஓடிவந்து அருகே நின்ற ரங்கனைப் பார்த்தாள்.

''என்ன ரங்கா, ஏன் இப்படிப் பதறிப் போய் நிக்கறே?''

''மாலு அம்மா, மாலு அம்மா...'' அவனுடைய தொண்டை கம்மியது. மனத்தில் உதித்த வார்த்தைகள் நாவில் புரளவில்லை.

மாலு தன்னுடைய இருக்கைக்கு வந்தாள். ரங்கன் பின்தொடர்ந்தான்.

மாலு அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

அவன் பசியில் துடிக்கும் சிறு பையனைப் போல் அவளைப் பார்த்து ஏங்கினான்.

''ரங்கா, உனக்கு என்னாச்சு? ஏன், இப்படி, எல்லாமே அழிஞ்சுட்ட மாதிரி பார்க்கிறே?''

''மாலு அம்மா... நான் உங்க காலைப் புடிச்சுக் கேக்கறேன்... உங்ககிட்ட இப்பப் பேசினது ரமணி சார்தானே?''

மாலு பதில் கூறவில்லை. சிரித்தாள்.

''சிரிக்காதீங்க, மாலு அம்மா.''

''யார்ட்டேயும் சொல்லப்படாது.''

''சத்தியமாச் சொல்ல மாட்டேன். எங்கிருந்து பேசினார், மாலு அம்மா?''

''தெரியலே... பாதி பேசறப்ப கட் ஆயிடுச்சு. ஒரு வேளை மறுபடியும் போன் பண்ணினாலும் பண்ணுவாரு.''

''அப்படிப் பண்ணினார்னா, எங்கிட்ட சொல்லுங்கம்மா, நானும் ஒரு விஷயம் பேசணும்.''

''முடிஞ்சாப் பார்க்கறேன். நீ இப்ப உன் இடத்துக்குப் போ.''

ஏழெட்டு நிமிடங்களுக்குப் பிறகு, முதலாளி ரமேஷ் சாண்டில்யாரின் பியூன் — குதிரை ஆலோசகர்,— அசுவஞானி — வெங்கி, மாலு அருகே வந்தான். முதலாளி இன்னும் ஆபீசுக்கு வரவில்லை. இவன் ஏன் அவளைப் பார்க்க வருகிறான்?

''போன் வந்திருக்கு, மாலு.''

''இதோ.''

ஏன் ரமேஷின் அறையிலுள்ள போனில் அழைப்பு வருகிறது?

''மாலு... நான்தான். போன் கட்டாயிடுத்து... யாரும் பக்கத்தில் இல்லையே?''

''இல்லே... பாஸ் இன்னும் வரலே!''

''நீ என்ன செய்யறே...?'' ஒரு இழுப்பு.

''சொல்லுங்க.''

''ராத்திரி ஏர்க்காடு எக்ஸ்பிரஸ்லே ஏறி சேலம் வர்றே... கூட ரங்கனையும் அழைச்

## அதிர்ஷ்ட தேவதை



கூக்கிட்டு வர்றே.''

''என்ன விஷயம்?''

''சேலத்துக்கு வந்ததும் தெரியும்.''

''அங்கே நாம ரிஜிஸ்தர் மாரேஜ் பண்ணிக்கப் போறோமா? சாட்சிக் கையெழுத்துப் போட ரங்கன் வரணுமா?''

''விளையாடாதே மாலு... இது ரொம்ப சீரியஸ். ரங்கன் என்ன கேட்டாலும் தெரியாதுன்னு சொல்லிடு. அவன் சேலம் வர்ற விஷயம் அவன் பெண்டாட்டிக்குக் கூடத் தெரியக் கூடாதுன்னு எச்சரித்து வை. நான் நாளைக்கு ஸ்டேஷன்லே மீட் பண்றேன்.''

மாலு மேலும் பேச முனைவதற்குள் ரமணி சேலத்தில் போனை வைத்து விட்டான்.

அரை மணி நேரத்துக்கு ஒரு முறை ரங்கன் அவள் அருகே வந்து ஏக்கமும் ஆர்வமுமாக நின்றான். தான் வேலையில் மூழ்கி விட்டது போல மாலு பாசாங்கு செய்தாள். அவள் ரமேஷின் அறைக்குச் சென்று போனில் பேசியது ரங்கனுக்குத் தெரிய வரவில்லை என்று ஊர்ஜிதமாயிற்று.

பன்னிரண்டே முக்காலுக்கு ரங்கன் ஏழாவது தடவையாக மாலு அருகே வந்து நின்றான். அவள் முதலாளியின் அறைக்குள் பிரவேசித்து, ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு வெளியே வந்ததை அவன் அறிவான். இதற்கான காரணத்தை அவன் விசாரிக்கவில்லை. மாலுவும் சரி, ரமணி சாரும் சரி, அடிக்கடி முதலாளியின் அறைக்கு, அவர் இருக்கிற போதும் இல்லாத போதும், ஆபீஸ் சம்பந்தமான காரியங்களைக் கவனிக்கவோ, ஃபைல்களை எடுக்கவோ, பார்க்கவோ செல்லுகிறவர்கள். இன்றும் மாலு அப்படித்தான் செய்திருக்கிறாள்.

''ரங்கா!''

''என்ன மாலு அம்மா?'' திடீரென ஒரு நம்பிக்கை தளிர் விட்டது.

''என் வீடு தெரியும், இல்லையா?''

''தெரியும்.''

''ராத்திரி ஒம்பது மணிக்கு நீ என் வீட்டுக்கு வர்றே.''

''எதுக்கும்மா?''

''இப்ப ஒண்ணும் சொல்ல மாட்டேன். நீ வந்தே ஆகணும்.''

''சரிம்மா.''

''முதலாளி ஒரு ஸ்பெஷல் வேலை மோட்டிருக்கார். அவரோட நான் போன்ல பேசினேன். ரமணி ஆபீசுக்கு வரலியா, அதனாலே அந்த வேலையை நான் செஞ்சு முடிக்கணும்னார். உதவிக்கு உன்னை எடுத்துக்கச் சொன்னார்.''

''சரிம்மா!''

பி.வி.ஆர்.



''என்ன அதிசயம்! இப்பல்லாம் உன் மாமியாரையும் தவறாமல் சினிமாவுக்குக் கூட்டிட்டுப் போறயாமே?''

''குழந்தை பிறந்திடுச்சே! அது அழுதா அவங்க வெளியே கொண்டு போய்ச் சமாதானம் செய்வாங்க. கதை விட்டுப் போகாமல் படம் பார்க்கலாமே!''

— கரம்.

''இன்னொரு விஷயம்.''

''சொல்லுங்க.''

''நீயும் நானும் நாளைக்கு ஒரு நாள் லீவு போடறோம்.''

''லீவா?''

''ஆபீஸ் வேலைதான். இருந்தாலும் லீவு போடச் சொல்லியிருக்கார் முதலாளி. உன் லீவு லெட்டரை நானே எழுதி வைக்கிறேன். நீ கையெழுத்து மட்டும் போடு.''

ரங்கனுக்குத் தலைசுற்றியது.

இவள் என்ன சொல்லுகிறாள்? இப்படிப்பட்ட ஒரு நிர்ப்பந்தம் ஆபீசில் இந்த நான்கு ஆண்டுகளாக ஏற்பட்டதில்லை. ஆபீஸ் வேலை. ஆனால் அதைச் செய்து முடிக்க லீவ் போட வேண்டும். இது என்ன விசித்திரம்? அவனுடைய மண்டை மரமண்டை. ஒன்றும் புரியவில்லை.

அவன் நகர்ந்தான்.

''ரங்கா.''

''என்ன மாலு அம்மா?''

''இதுபத்தி யார்கிட்டேயும் மூச்சுவிடக் கூடாது. ஏன், உன் மனைவி தனத்துக்குக் கூடத் தெரியக் கூடாது. தெரிஞ்சது, உன் வேலை போயிடும்.''

ஏற்கெனவே லாட்டரிச் சீட்டு அவன் கையிலிருந்திருந்தால், மாலுவின் இந்த பயமுறுத்தலுக்கு அவன் பணிந்திருக்க மாட்டான். பணமே வராதோ என்கிற பயம் அவனைக் கவ்விக் கொண்டாகி விட்டது. என்ன செய்ய?

''சொல்ல மாட்டேன், மாலு அம்மா.''

''ஒன்பது மணி! எதுக்கும் மாத்துச் சட்டை பாண்ட்டோட வா. தனம் கேட்டா ஆபீஸ் காரியமா வெளியூர் போறதாச் சொல்லிச் சமாளி.''

ரங்கன் தலையை மட்டும் அசைத்து விட்டு மௌனமாகத் தன் இருக்கைக்குத் திரும்பினான்.

டைப்பிஸ்ட் சுகந்தி அவனுக்காகக் காத்திருந்தாள்.

''என்ன ரங்கா, பேசறதுக்கு ரமணி இல்லையேன்னு மாலு உங்கிட்ட பேசிட்டிருந்தாளா?''




## ரஷ்யாவில் நடக்கும் பெயர் மாற்றம்!

தெருக்களுக்கும் மாவட்டங்களுக்கும் ஆண்டாண்டுக் காலமாக வழங்கிவரும் பெயர்களையெல்லாம் மாற்றி, சமீப காலத்துப் பெரிய புள்ளிகளின் பெயர்களைப் புதிதாகச் சூட்டி வருகிறோம் நாம்! ஆனால் ரஷ்யாவில் நிலைமை தலைகீழ்!

ஸ்டாலின் காலத்தில் புராதன நகரங்களுடைய பெயர்கள் எல்லாம் மாற்றப்பட்டு, அவற்றுக்குக் கம்யூனிஸ்ட் தலைவர்களின் பெயர்கள் சூட்டப்பட்டன. உதாரணமாக ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கின் பெயர் 'லெனின்கிராட்' என்று மாற்றப்பட்டது. இப்போது அவ்வூர் மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து, அப்பெயரை மீண்டும் ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க் என்று மாற்றுவதில் தீவிரம் காட்டி வருகின்றனர். பல ஊர்களில் இத்தகைய மாற்றம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது.

ஒரு மனிதனின் பெயரை மாற்ற நமக்கு எப்படி உரிமை கிடையாதோ, அவ்வாறே ஒரு நகரத்தின் பெயரை மாற்றவும் நமக்கு உரிமையில்லை என்கின்றனர் ரஷ்ய மக்கள்.

— நியூஸ்வீக்

---

ரங்கன் பதில் கூறாமல் மௌனமாய் உட்கார்ந்தான்.

''என்ன சொல்றா அவ?''

சுகந்தியை அவன் ஏறிட்டுக்கூடப் பார்க்கவில்லை. அவனுக்குச் சாதுரியமாகப் பேசவோ, பொய் சொல்லவோ வராது. உண்மையை வெளியிடவும் முடியாத நிலை. ரங்கன் என்ன செய்வான்? சிலைபோல உட்கார்ந்திருந்தான்.

**மா**லை ஐந்தரை மணிக்கு ஆபீஸ் காலியாகியது. மயில்சாமி வருவதைக் கண்ட ரங்கன், அவனுடைய பார்வையிலிருந்து ஒதுங்கி, சுகந்தியின் பீரோவுக்கு அருகே நின்றான். மயில்சாமி அவனைக் கவனிக்காமல், முதலாளியின் அறையைப் பூட்டச் சென்றான்.

அவசர அவசரமாக மாடிப்படியில் இறங்கி நடந்த ரங்கன் சாலையின் பிளாட்பாரத்துக்கு வந்ததும் நின்றான். வீட்டுக்குச் சென்று, மாற்று உடைகளுடன் புறப்பட்டு மாலுவை ஒன்பது மணிக்குச் சந்திக்க வேண்டும் என்று திட்டமிட்டிருந்தவன் இப்போது திடீரென மனம் மாறினான்.

வீட்டுக்குச் சென்றால், தனம் அவனைப் புரட்டிப் புரட்டி எடுப்பாள். லாட்டரிச் சீட்டை ஏன் கொண்டு வரவில்லை என்று அவன் மீது பாய்வாள். அவன் வெளியே செல்லுவதையும் தடுப்பாள். சரியாக ஒன்பது மணிக்கு அவன் மாலுவின் வீட்டில் இல்லை என்றால் என்னென்ன விபரீதங்கள் உண்டாகுமோ?

மனம் ரமணிக்குச் சென்றது. ரமணி சார் நல்லவர். அவருக்கு நிச்சயமாக லாட்டரியில் முதற் பரிசு விழுந்தது தெரிந்திருக்காது. தெரிந்திருந்தால் வெளியூர் புறப்படுவதை ஒத்திப் போட்டுவிட்டு, டிக்கெட்டுடன் அவனுடைய வீட்டுக்கு வந்திருப்பார்.

திடீரென்று ஒரு புதுவித நம்பிக்கையும் உண்டாகியது.

இது ஆபீஸ் வேலை இல்லை!

மாலு, ரமணியின் ஏற்பாடு காரணமாகத்தான் அவனை வரச் சொல்லியிருக்க வேண்டும். ரமணி சார்தான் அவளுடன் டெலிபோனில் பேசியிருக்கிறார். இதை அவளே சொல்லிவிட்டாள். இதுநாள் வரை மாலு ரங்கனை மனிதனாக மதித்துப் பேசியதில்லை. ஏளனம் செய்வதே அவளுடைய பொழுதுபோக்கு. அவனை நையாண்டி செய்வதில் ஒரு தனி உற்சாகம். இப்படிப்பட்ட பெண் அவனைத் தன் வீட்டுக்கு இரவு ஒன்பது மணிக்கு வரச் சொல்லுகிறாள் என்றால், என்ன அர்த்தம்? முதலாளி எப்படி ஒரு பெண்ணிடம் முக்கியமான வேலையை ஒப்படைப்பார்? உண்மையாகவே ஒரு முக்கியமான வேலை இருந்தால், ரமணி இல்லாத போது, 'நெய் ரோஸ்ட்' கிச்சாமியிடம்தானே ஒப்படைக்க வேண்டும்? உதவி செய்யப் போயும் போயும் ரங்கனையா முதலாளி தேர்ந்தெடுப்பார்? வெங்கி இருக்கிறானே? ஆபீஸ் வேலை என்றால் ஏன் லீவ்?

நிச்சயமாக இது ஆபீஸ் வேலை இல்லை. மாலு பொய் சொல்லுகிறாள்.

ரங்கன், தானே ஆச்சரியப்பட்டுப் போனான். அவனால் கூட, மனக் கொந்தளிப்புக்கிடையிலும், சுயமாகச் சிந்திக்க முடிகிறதே?

அவன் வீட்டுக்குச் செல்லவில்லை.

நிஜார் பாக்கெட்டில் ஐந்து ரூபாய் இருந்தது. இரண்டு பன் வாங்கி, விண்டு விண்டு போட்டுக் கொண்டான். உலர்ந்து போன துண்டுகள் லேசில் இறங்கவில்லை. ஒவ்வொரு துண்டையும் ஒரு வாய் தண்ணீரால் மூழ்கடித்துத் தொண்டையில் இறக்கினான். 'டீ'யைக் குடித்த பிறகுதான் ஆசுவாசம் ஏற்பட்டது.

தி. நகரில் வசிக்கும் மாலுவின் வீட்டை அடைந்த போது இரவு மணி எட்டே முக்கால்.

**அ**டிபட்ட புலியைப் போல தனம் தனக்குத்தானே உறுமிக் கொண்டிருந்தாள். ஏன் அவளுடைய சோனிச் சோப்ளாங்கி இன்னும் ஆபீசிலிருந்து திரும்பவில்லை? எங்கே போய்விட்டான்? அந்தப் பாழாய்ப் போகிற ரமணி வீட்டுக்கு லாட்டரிச் சீட்டை வாங்கப் போய்விட்டானோ? டிக்கெட் இருந்தாலும் அவன் கொடுக்கவா போகிறான்? இந்தச் சோப்ளாங்கியின் தலையில் மிளகாய்தான் அரைத்து அனுப்பப் போகி

றான். முட்டாள்! யாரை நம்புவது யாரை நம்பக் கூடாது என்று கூட இந்த செக்கு மாட்டுக்குத் தெரியவில்லையே! அவளுடைய முட்டாள் புருஷன் இருபத்தைந்து லட்சம் ரூபாய் லாட்டரிச் சீட்டை ரமணியிடம் ஒப்படைத்திருக்கிறானே!

ஆவேசத்துக்கிடையில் ரமணி அவளைத் தேடி வீட்டுக்கு வந்த காட்சியும் கண்முன் தோன்றியது. ஒரு கணம் பயத்தில் அடிவயிறு சுருங்கி வலித்தது. லேடி டாக்டர் அம்புஜம் தனக்கு உறவுக்காரி என்றான் அவன். என்ன ஆபரேஷன் என்று தனக்குத் தெரியும் என்று சொல்லாமல் சொன்னான். ரங்கனை மிரட்டிப் பணம் பறிக்க முயன்றால் தான் சும்மா இருக்கப் போவதில்லை என்று பயமுறுத்தினான். கடைசியில் செலவுக்கு நூறு ரூபாயும் கொடுத்துவிட்டுப் போனான். தனத்துக்கு எதிர்ப்பதா, பயப்படுவதா என்று கூடத் தெரியவில்லை.

இரவு முழுவதும் ரங்கன் வராமற் போகவே, அவளுக்கு நம்பிக்கையும் பீதியும் மாறி மாறி வந்தன. டிக்கெட்டுடன் வருவான்! டிக்கெட் கிடைக்காமல் மனம் நொந்து போய்க் குளம் குட்டையில், ஏன் சமுத்திரத்திலே கூட விழுந்திருக்கலாம்.

பொழுது விடிந்தது. ரங்கனைக் காணோம். என்ன செய்ய? ஆபீஸ் நினைவு வந்தது.

ரங்கன் வீட்டுக்கு வராமலிருக்கலாம். ஆனால் நிச்சயமாக ஆபீசுக்குச் செல்லாமல் இருக்க மாட்டான். லாட்டரிச் சீட்டு கிடைத்து விட்டதா இல்லையா என்ற விவரம் அங்கே சென்றால் தெரியும்.

**அ**வள் சரியாக ஒன்பதரை மணிக்கு ஒரு சில்க் புடைவையைக் கட்டிக் கொண்டு, ஒரு ரூபாய் வட்டத்துக்குக் குங்குமத்தை ஒட்டிக் கொண்டு, தலை நிறையச் சாமந்திப்பூவுடன் ஆபீசுக்குப் புறப்பட்டாள்.

நுழைவாயிலிலேயே, மயில்சாமி மடக்கினான்.

''ஏய் தனம், ஒன் புருசன் எங்கே?''

''அந்த ஆளைத் தேடிட்டுத்தான் நாயினா, நானே வர்றேன்.''

''இன்னா சொல்றேடீ, கய்தே?''

''வூட்டுக்கே வரலே.''

''மெய்யாலுமா?''

''பொய்யா சொல்றேன், நாயினா?''

''நீ பொய் சொல்ற பொறுக்கிதானே?''

''மயில்சாமி சத்தம் போடாமல் பேசு!'' என்றாள் சுகந்தி. பிறகு, ''ஓ, நீ ரங்கன் பெண்டாட்டி இல்லே?'' என்றாள்.

அப்பனை விட்டுவிட்டு தனம் சுகந்தி அருகே வந்தாள்.

''ஆமாம், கண்ணு... நீ சொகந்தி பொண்ணுதானே?''

''சொகந்தி இல்லே, சுகந்தி... ஆமாம், நீ எங்கே இங்கே வந்தே?''

''நேத்துலேந்து என் புருசன் வூட்டுக்கே வரலே, சொகந்தி.''

''ஏன்? உன் மேலே கோபமா?''

''ஹேங்... கோவமா? எம் புருசனுக்கு எப்படிக் கோவிச்சுக்கறதுன்னு தெரியாது.''

''உன் புருசனும் ரமணியும் தோஸ்து. ரமணியைக் கேட்டாத் தெரியும். ஆனா அவரும் ரெண்டு நாளா ஆபீஸுக்கு வரலே. ஏன் நிக்கறே, ஒக்காரு... இந்தப் பொடவை உனக்கு ரொம்ப அழகா இருக்கு.''

''மெய்யாலுமா?''

''ஆமாம். அது சரி, உன் அக்கா இப்ப எப்படி இருக்கா? புருசன் கூட சௌகரியமா இருக்காளா?''

தனம் சிரித்தாள்.

''எனக்கு அக்கா கெடையாது. நான் ஒரே பொண்ணு.''

சுகந்தி மௌனமாய் தனத்தைப் பார்த்தாள். தனம் ஒரே பெண்ணா? அக்கா இருப்பதும் அவளுக்குக் கலியாணமானதும்கூட ஒரு தங்கைக்குத் தெரியவில்லை என்றால் என்ன அர்த்தம்?

மயில்சாமி பலே ஆள்! ராஸ்கல், ரெண்டு சம்சாரம்னு ஒரு தடவை கூடச் சொன்னதில்லை. அடுத்த தடவை கைமாற்றுக் கேட்டு வரும்போது உண்மையைக் கக்க வைக்கலாம்.

தனத்துக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. ரங்கன் ஆபீசுக்கே வரவில்லை. அவனுடைய தோஸ்த்தும் இல்லை.

இருபத்தைந்து லட்சம் ரூபாய் பரிசு விழுந்திருக்கிறது என்று இப்போது பகிரங்கமாகச் சொல்லவும் அவளால் முடியவில்லை!

''சொகந்திக் கண்ணு, நான் வர்றேன்!'' என்று புறப்பட்டாள் தனம்.

''இனிமே ஆபீஸ் பக்கம் வந்தே, ஒன் காலை ஒடிச்சுப்புடுவேன். ஹாங் ஹாங்!'' என்றான் மயில்சாமி.

''சரித்தான் போய்யா!'' என்று சொல்லிவிட்டு, தனம் வெளியேறினாள்.

(தொடரும்)

''இவ்வளவு பழகிட்டு டெஸ்பாட்ச் பரந்தாமனை உன் கல்யாணத்துக்குக் கூப்பிடாம விட்டுட்டியே, நியாயமா?''

''அவனைப் பத்தி உனக்குத் தெரியாது... என்கிட்டேந்து பத்து ரூபாய் ஏகமாத்தா வாங்கி, எனக்கே மொய் ...''



# இடைவெளி

**யோ**சனையாய்ப் பார்த்தார் கிருஷ்ண மூர்த்தி. அந்த ஃபாக்டரியின் டெபுடி மானேஜர். தீர்க்கமான பார்வை. முப்பது வருட அனுபவம் தந்த முன் வழுக்கை. தன்னம்பிக்கையூட்டுகிற புன்னகை.

மேஜை மீதிருந்த பேப்பர் வெயிட்டை உருட்டியபடியே, தம் மூக்குக் கண்ணாடியைக் கழற்றி வைத்தவாறு தம் எதிரே இருந்த பரமேஸ்வரனைப் பார்த்தார்.

பரமேஸ்வரன் இளம் எஞ்ஜினியர். புதிதாய் ரெக்ரூட் ஆனவன். ஐ. ஐ. டி. யில் படிப்பு. பின், ஓர் உயர் கம்பெனியில் பயிற்சி என்று புத்தக அறிவோடு வந்து சேர்ந்திருக்கிறவன். சற்றே நிமிஷத்தில் சூடாகிற இள ரத்தம்.

''சொல்லுங்க பரமேஷ். என்ன விஷயம்? எங்கிட்ட தயக்கம் எதுவும் வேணாம். பீ ஃப்ராங்க்!''

பரமேஸ்வரன் ஏதோ பிரச்னையிலிருக்கிறான் என்பதை அவனது அலையும் விழிகளும், அவஸ்தையான முகமும் காட்டிக் கொடுத்தன.

சொல்ல ஆரம்பித்தான் பரமேஷ்.

''வ... வந்து... இட்ஸ் ரிடிகுலஸ் ஸார்... சுந்தரம் ஸார் எப்படி அப்படி ஒரு முடிவு எடுத்தார்னு தெரியலே. வர்ற வாரம் மத்திய அமைச்சர் வந்து திறந்து வைக்க வேண்டிய யூனிட்டுக்காகக் கொண்டு வந்து வைச்சிருக்கிற மெஷின். ஜப்பான் மேக். யாருக்கு அதோட டெக்னிக்கல் நோ ஹௌ தெரியும்? இவரென்ன என்ஜினியரா...? அந்தக் கால லைசென்ஸியேட். அப்புறமா டிப்ளமா படிச்சு வண்டியோட்டிட்டு இருக்கிறவர்...''

பிரச்னை இதுதான்:

அடுத்த வாரம் மத்திய அமைச்சரைக் கொண்டு முடுக்கிவிட வேண்டிய ஜப்பானிய இயந்திரம். கொஞ்சம் அட்வான்ஸ்ட் டெக்னாலஜி. சுந்தரத்திற்கு இத்தகைய விந்தைகள் பரிச்சயமில்லைதான். ஆர்வம் காரணமாய் அதை இயக்கிப் பார்த்திருக்கிறார். அன்று அனுமதி கேட்க, அவரது மேலதிகாரியான பரமேஷ் எங்கோ விடுப்பில் போயிருந்த சமயம்.

சரியாய் இயங்கிய மிஷினில் எங்கோ கோளாறு. மக்கர் பண்ண ஆரம்பித்து விட்டது! இப்போது ஒருவர் மீது ஒருவர் குற்றம் சுமத்திக் கொண்டு எதிரும் புதிருமாக நிற்கிறார்கள்.

கிருஷ்ணமூர்த்திக்கு மெல்லப் புரிந்தது. பிரச்னைக்குக் காரணம் இயந்திரமல்ல!

வயது!

இருவருக்குமிடையே இருக்கிற அந்தத் தலைமுறை இடைவெளி. எப்படித் தீர்க்கலாம் இந்தப் பிரச்னையை? சுந்தரத்திற்கு இருபது வருட சர்வீஸ். அந்தக் கம்பெனி சிறு குழந்தை போல நடை பயிலத் துவங்கியதிலிருந்தே இருந்து வருகிறார். அதிலும் அவர் இயந்திரங்களோடு பழகுவதைப் பார்க்கச் சுவாரஸ்யமாய் இருக்கும். காலையில் நுழைந்ததும், அதனைத் தொட்டு வணங்கி, மெல்லத் தடவிக் கொடுத்து, அப்புறமாய் இயக்கத் தொடங்கி...

பரமேஷ் குறியாய் இருந்தான்.

''உங்களுக்கு அவரைக் கண்டிச்சு வைக்க இஷ்டமில்லைன்னாச் சொல்லுங்க. ஒரு கால் கடுதாசு குடுத்துட்டுப் போயிடறேன். இந்தக் காலத்துல யங்கர்ஸ்னாலே இளப்பமாப் போச்சு. உசிரைக் குடுத்துப் படிச்ச படிப்பு ஸார்... யாருக்குப் புரியுது ச்சே...!''

''மிஸ்டர் பரமேஷ். உங்கள் எண்ணங்கள் புரியுது. இதைப் பத்தி நான் அப்புறமா முடிவெடுக்கிறேன். பை த பை, எனக்கு ஒரு பத்து நிமிஷம் கம்பெனி குடுக்க முடியுமா?''

ஆழமாய்ப் பார்த்தான். பின் சொன்னான்.

''வித் ப்ளஷர் ஸார்.''

''வாங்க போகலாம்.''

**இ**ருவரும் கேண்டீன் நோக்கி நடந்தார்கள். காதுகளுக்குப் பழகிவிட்ட இயந்திர இரைச்சல்கள். தேசபக்தனின் காதுகளில் படுகிற தேசிய கீதம் போல ஒவ்வோர் ஒலியும் ஒவ்வொரு டெஸிபலில் ஒரு ரகசியச்

விஜயாநிலா



சேதி சொல்லியது.

''நான் இப்ப ஓர் அதிகாரியா உங்க கூடப் பேசலை. என்னை உங்க ஃப்ரண்ட்டா நினைச்சுக்கிட்டு என் கேள்விக்குப் பதில் சொல்ல முடியுமா, ப்ளீஸ்?''

''ஷ்யூர் ஸார்!''

''நம்ம ஃபோர்மேன் சுந்தரத்துகிட்ட உங்களுக்குப் பிடிச்ச குணம் இருக்கா, சொல்லுங்க பார்ப்போம்.''

இப்படியொரு கேள்வியை எதிர்பார்க்கவில்லை அவன். குழப்பமாய்ப் பார்த்தான். யோசித்தான். சொன்னான்.

''இருக்கு ஸார்...''

''குட்... என்ன அது?''

''அவர்கிட்ட இருக்கிற மனிதாபிமான உணர்வுதான் அது. போன மாசம் கூட மிஷின் ஷாப்ல டிராலியில அடிபட்டுட்ட டேவிட்டை உடனே ஹாஸ்பிடலுக்கு அழைச்சுக்கிட்டுப் போய், கூடவே இருந்து கவனிச்சார். இன்ஃபாக்ட் யூனியன்ல இரண்டு பேரும் எதிரெதிர் ஆசாமிங்க.''

''வெல் செட் மிஸ்டர் பரமேஷ். இது போதும். வாங்க, போகலாம்.''

புரியாமல் பார்த்தான் பரமேஷ்.

சுந்தரம் கொஞ்சம் படபடப்பாய் உள்ளே வந்தார்.

''வாங்க சுந்தரம். உட்காருங்க.''

''உக்கார வரலை ஸார். வயசாயிடுச்சு பாருங்க... என் மாதிரி கம்பெனியைத் தெய்வமா நினைச்சு உழைக்கிற அசடுகளை எல்லாம் வெளியில கடாசிடுங்க ஸார். நான் நிறைய உழைச்சாச்சு. போறேன். எதுனா பொட்டிக்கடை வைச்சாக் கூட நாலு காசு பார்க்கலாம்.''

அவர் மனம் புரிந்தது.

அமைதியாய்ப் பார்த்தார் கிருஷ்ணமூர்த்தி.

''தெரியும் சுந்தரம். அந்தக் கண்ட்ரோல் ஸிஸ்டம் இன்ஸ்டாலேஷன்தானே...? தெரியும். பதற்றப்படாதீங்க.''

''ஆமாம் ஸார். என்னைச் சீட்டுக் கிழிச்சு அனுப்பிடுங்க. உங்களுக்குப் புண்ணியமாப் போயிடும். ஏன்னா நான் பழசாப் போயிட்டேனோல்லியோ...?''

''வெய்ட்... அவசரப்படாதீங்க சுந்தரம். இப்ப நான் ஆபீஸ் சம்பந்தமில்லாத ஒரு விஷயம் கேட்க ஆசைப்படறேன். உங்க மேல மதிப்பு வைச்சுக் கேட்கறேன். சொல்றீங்களா?''

''கேளுங்க ஸார்!''

''நம்ம பரமேஷ் பத்தி உங்க அபிப்பிராயம் என்ன?''

''ஸ... ஸார்...''

''இல்லை. ஆபீஸ் மேட்டரை விடுங்க. பொதுவான கருத்து என்ன? சொல்லுங்க...!''

''பர...மேஷ்... என்ன சொல்றது? பொதுவா ரொம்பத் துடிப்பான பையன். பெரிய படிப்பு எல்லாம் படிச்சிருக்காப்பல இருக்கு. ஆங்... அன்னிக்கி... இன்ஸ்டாலேஷன் அன்னிக்கி அந்த ஜப்பானிய எஞ்ஜினியர்ஸோட ரொம்பப் பொறுமையா இருந்து அந்த மெஷினை இன்ஸ்டால் பண்ணி, நைட் வரை இருந்து வேலை செஞ்சுட்டுப் போன தம்பி அது.''

புன்னகை செய்தார் கிருஷ்ணமூர்த்தி.

''குட். யு ஆர் கரெக்ட் சுந்தரம். இப்பக்கூட காலைல பரமேஷ்கிட்டப் பேசினப்ப உங்களைப் பத்தி ரொம்ப உயர்வாச் சொன்னாரு.''

நம்ப இயலாமல் பார்த்தார் சுந்தரம்.

''யெஸ். ஐ'ம் நாட் ஜோக்கிங். போன மாசம் அந்த மெஷின் ஷாப் ஆக்ஸிடண்ட்ல மாட்டிக்கிட்ட டேவிட்டைக் கண்ணும் கருத்துமாக் கவனிச்சுக்கிட்டீங்களாம். பரமேஷ் சொல்லித்தான் தெரியும்...''

'அவ்னையா... அவனையா கோபப்பட்டோம்? ச்சே... எத்தனை நல்ல பையன் அவன்?'

சுந்தரம் நெளிந்தார்.

''தப்பு யார் பேரில வேணும்னாலும் இருக்கலாம். ஆனா ஒண்ணு. ரெண்டு பேருமே மெஷினை ஒழுங்கா ஓட வைச்சு ட்ரயல் பார்க்கத்தான் முயற்சி செஞ்சீங்க. இப்ப பழையபடி ஓட வைக்கணும். அடுத்த வாரம் அமைச்சர் வரப் போறாரு. என்ன இருந்தாலும் உங்க எக்ஸ்பீரியன்ஸ் விலை மதிப்பில்லாதது சுந்தரம். ப்ளீஸ்.''

இளகிப் போய் விட்டார்!

அப்புறம்...

இண்ட்டர்காமில் பரமேஷை அழைத்துச் சொல்ல... ''இஸிட். என் மேலே அத்தனை நம்பிக்கையா ஸார் அவருக்கு? அப்படியா சொன்னார்? நான்தான் அவரை அனாவசியத்துக்கு ஹார்ஷாப் பேசிட்டேன் போலிருக்கு...?'' என்றான் பரமேஷ் பரவசமாக.,

அடுத்த வாரம்...

மத்திய அமைச்சர், அருகே ட்ரே ஏந்திக் கொண்டு நின்ற பெண்ணிடமிருந்து கத்திரிக்கோல் வாங்கி ரிப்பன் வெட்டிப் புதிய யூனிட்டைத் திறக்க, — அந்தப் புதிய கண்ட்ரோல் ஸிஸ்டம் முடுக்கி விடப்பட...

அங்கே...

சிநேக பாவத்துடன் அருகருகே சுந்தரமும், பரமேஷும்! கிருஷ்ணமூர்த்தி ஆர்வமாய்ப் பார்த்தார். அவர்கள் இருவருக்கும் இடையே இருந்த 'வயது' காணாமல் போயிருந்தது!



# சந்தனக் காற்று

முன் பாதி படு கிளுகிளு என்றால் பின்பாதி செமை விறுவிறு.

கிராமியப் பெண்ணை மணந்து கொள்ள முடிவு செய்து, அது தொடர்பாகக் கோயில் விழாவில் பத்துப் பன்னிரண்டு மல்யுத்த வீரர்களுடன் மோதி அவர்களை அடித்து வீழ்த்தும் போதும் சரி,

லீவு முடிந்து ராணுவ தளத்துக்குத் திரும்பிச் செல்வதற்கிருந்த அந்தச் சில நாட்களுக்குள் நொடிப் பொழுதையும் வீணடிக்க மனமின்றிப் புது மனைவியுடன் மகிழ்வலைகளில் முடிந்த மட்டில் மூழ்கித் திளைக்க முனைவதிலாகட்டும் சரி,

ராணுவ வீரர் விஜய்காந்த் ஒரே சுறுசுறு.

அதன்பின் காஷ்மீருக்குப் போகிறவர், ராணுவச் சூழ்நிலை காரணமாகத் திரும்பி வருவதற்குள் ஐந்தாண்டுகள் கடந்து விடுகின்றன. மகள் பிறந்து வளர்ந்து விடுகிறாள். விடுப்பில் வந்தவர் மகளைக் கான்வென்ட்டில் சேர்த்து, ஹாஸ்டலில் தங்கிப் படிக்க ஏற்பாடு செய்துவிட்டு மனைவியை மட்டும் தம்முடன் அழைத்துக் கொண்டு போக முடிவு செய்து, ஊட்டிக்கு வந்து நண்பன் வீட்டில் தங்க, அதுவே அவருடைய வாழ்வின் திருப்புமுனையாகி விடுகிறது.

கௌதமிக்கும் அதுவரையில்தான் வேலை.

'ராணுவத்தானைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன்' என்று கிராமியத்தனமாக முரண்டு பிடித்து, விஜய்காந்த் அவரை நெருங்க மேற்கொண்ட முயற்சிகளில் மருண்டு நின்று, திருமணத்துக்குப் பின் கணவனுடன் ஏற்படும் நெருக்க உறவில் தன்னை மறந்து சுருண்டு விழுந்து, பின்னர் அந்த ஊட்டி நண்பன் வீட்டில் தனிமையில் இருக்க நேரும் சூழ்நிலையில் மிரண்டு திகைத்து,

பாதிவரை மட்டுமே வந்தாலும் கௌதமி பளிச்.

என்றைக்கோ சினிமாக் கொட்டகையில் முன்பின் தெரியாத அந்தக் கிராமியப் பெண்ணிடம் சில்மிஷம் செய்யப் போய் அவளிடம் அடி வாங்கி அவமானப்பட்டது மாறாத வடுவாக அந்த ஊட்டி நண்பனின் நெஞ்சில் நிலைத்துவிட,

அதே சம்பவத்தின்போது உடனிருந்து பங்கேற்று அவமானத்துக்குள்ளாகியிருந்த அவனுடைய இரு சகாக்களும் அவனுமாக இப்போது கிடைத்துள்ள சந்தர்ப்பத்தைப் பழிவாங்கப் பயன்படுத்திக் கொள்ளக் குடிபோதையில் முடிவு செய்து, தனித்திருக்கும் கௌதமியைக் கெடுக்க முயல,

தப்பித்து வெளியே ஓடும் அவர் கொட்டும் மழையில் துரத்தி வருகிறவர்களுடன் போராடி, அதன் விளைவாக மேலாடை இழந்த நிலையில் தன் கற்பைக் காத்துக் கொள்ள வேறு வழியில்லாமல் போய், வசதியாகப் பக்கத்தில் ஊன்றப்பட்டிருந்த அம்மன் கோயில் திரிசூலத்தையெடுத்துக் குத்திக் கொண்டு உயிரை விட்டு விடுகிறார்.

அதன்பின் தலைமறைவாகிவிடும் அந்த மூன்று பேரையும் ஒவ்வொருவரையாகத் தேடிப் பிடித்துக் கொலை செய்துவிட்டு விஜய்காந்த் தூக்குமேடைக்குப் போவது மீதிக் கதை.

பழிவாங்கும் கொலைவெறி மிகுந்தவராகிப் பரபரப்பேற்படுத்தி விடுகிறார்.

முன் பகுதியில் நிகழ்ச்சிகள் குறைவு என்பதாலோ என்னவோ பாடல்கள் மிகுதி. பின் பகுதியில் தேடல், அடி, உதை, குத்து, ரத்தம், போலீஸ், தண்டனை.

விழித்திருக்கும் நேரமெல்லாம் போதையில் திளைத்திருக்கும் மாமன் எஸ். எஸ். சந்திரன் —

கடமையே உருவான கம்பீரக் கமிஷனர் கிட்டி —

சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் சட்டத்தைச் சாடும் டாக்டர் சரத்பாபு —

செய்தது மகனேயானாலும் குற்றம் குற்றமே என்று நிமிர்ந்து நிற்கும் பிரிகேடியர் வினு சக்கரவர்த்தி —

நினைவில் நிற்பவர்கள்.

அது சரி, படத்துக்கும் தலைப்புக்கும் என்ன சம்பந்தம்? ஒரு பாடலின் பல்லவியில் 'சந்தனக் காற்றில்' என்று வருகிறதே, அதுவா?

— சி. ஆர். கே.

கடந்த சில மணி நேரங்களாக ரங்கன் நடந்திருந்தான். இப்போது சாலையில் மாலுவின் வீட்டின் எதிரே நீண்ட நேரமாய் நின்று கொண்டிருக்கிறான். இருப்பினும் உடல் வலியோ, கால் வலியோ தெரியவில்லை. மனம்தான் வலித்தது. கடந்த சில நாட்களாக எதிர்பாராததெல்லாம் நடந்து கொண்டு வருகின்றன. அவனுடைய வாழ்க்கையைப் பாதிக்கும் சம்பவங்கள், நிகழ்ச்சிகள்.

அவனுக்கு இருபத்தைந்து லட்சம் ரூபாய் பரிசாக விழுந்திருக்கிறது. ஆனால் லாட்டரிச் சீட்டு அவனிடம் இல்லை. யாரை நம்பி அதை ஒப்படைத்திருந்தானோ அவன் ஊரிலேயே இல்லை. ரமணி ஏமாற்ற மாட்டான் என்ற நம்பிக்கை ஆரம்பத்தில் ஒரு தாம்புக் கயிறாகத்தான் இருந்தது. ஆனால், அது மெல்ல மெல்ல மெலிந்து நைந்து போய்க் கொண்டிருக்கிறது. ரமணி முழுதுமா அவனை வஞ்சிக்கப் போகிறான்? பாதித் தொகையாவது தரலாமே?

பற்பல விதமான மகிழ்ச்சி ஆரவார எதிர்பார்ப்புக்களுடன் அவன் தனத்தைக் கல்யாணம் செய்து கொண்டான். தாம்பத்தியம் என்ற வார்த்தைக்கு அர்த்தமே இல்லாத வாழ்வாக அமைந்துவிட்டது. தனத்துக்கு ஒன்றே ஒன்றுதான் தெரியும். ரங்கனிடமிருந்து பணத்தைக் கறப்பது. அவளுக்கு வயிற்றில் கட்டி என்று அறிந்த போது துடிதுடித்துப் போனான். ரண சிகிச்சை என்று வந்த போது, பணச் செலவினால் ஏற்பட்ட மனக்கஷ்டத்தை விட, அவளைப் பற்றிய பயம்தான் மேலோங்கி நின்றது. ஆனால் தனம் அவனுடைய மனத்தைப் புரிந்து கொள்ளவில்லை. அறிந்து கொள்ள இம்மியும் ஆசைப்படவுமில்லை. இப்படிப்பட்ட மண வாழ்க்கையையா அவன் எதிர்பார்த்தான்?

இன்னொரு விஷயமும் அவனை வாட்டியது. தனத்தின் வயிற்றுக் கட்டியைப் பற்றிச் சுகந்தியிடம் கூறிய போது, அவள் விஷமமாகச் சிரித்தாள்.

ஒரு பெண் வாந்தி எடுப்பதும், தலை சுற்றிக் கண்கள் செருகப் படுத்திருப்பதும், உணவே வெறுத்துப் போவதும் மிகவும் சாதாரண விஷயங்கள் என்பதைச் சொல்லாமல் சொல்லிச் சுகந்தி சிரித்தாள். சுகந்திக்கு ஏன் இந்த விஷயத்தில் ஒரு திருப்தி!

ரங்கன் துவண்டு போனான்.

எதிர்பார்த்த மணவாழ்க்கை கிடைக்கவில்லை.

அவன் வாங்கிய லாட்டரிச் சீட்டுக்கு இருபத்தைந்து லட்சம் ரூபாய் என்று அறிவிப்பு வந்திருக்கிறது. ஆனால் பணம் கிடைக்காது போலிருக்கிறது. ரமணி தன்னை ஏமாற்றி விட்டான் என்று அவனால் யாரிடம் சொல்ல முடியும், புகார் செய்ய முடியும்? 'டீ, காப்பி வாங்கி வரச் சொல்லுவது போல, லாட்டரிச்

# அதிர்ஷ்ட தேவதை

(10)



சீட்டும் வாங்கி வரச் சொன்னேன்' என்று ரமணி சொன்னால் ஊரும் உலகமும் அவனைத்தான் நம்பும். டயரியில் ரமணி தன் கைப்பட நம்பர்களை எழுதி வைத்திருக்கிறான். அந்த டயரியை ஆதாரமாகவோ சாட்சியாகவோ கொண்டு வரவும் முடியாது. 'என்னுடைய மேஜையைத் திறந்து ரங்கன் டயரியைத் திருடிவிட்டான்' என்று ரமணி கூறலாமே?'

இன்னோர் உண்மையும் அவனைத் தாக்கியது. சீட்டு வாங்கும்போதெல்லாம், கடைக்காரரிடம் ரமணியின் பெயரைத்தான் கூறியிருக்கிறான்.

ரமணி ஏமாற்றுகிறானா?

ரமணி ஏமாற்றக் கூடியவனா?

இருபத்தைந்து ரூபாய்க்கே ஒருவன் இன்னொருவனை ஏமாற்றும் இந்த நாளில் இருபத்தைந்து லட்சம் என்றால்...

ஆனால் ரங்கன் மனத்தில் ஒரு சிறு ஆசை பிறந்தது.

பாதிப் பணம் வேண்டாம்.

ஏன் ஐந்து லட்சம் கூட வேண்டாம்.

ரமணி ஒரு லட்சமாவது ரங்கனுக்குத் தர மாட்டானா?

திடீரென்று மாலுவின் குரல் கேட்டது.

''ரங்கா!''

இத்தனை நேரச் சிந்தனைகளையும் ரங்கன் ஒரு நொடியில் மறந்தான்.

''மாலு அம்மாவா?''

''ரொம்ப நேரமா நின்னுட்டிருக்கியா?''

''நான் அப்பவே வந்துட்டேன்.''

''ஏன் உள்ளே வரலே...? சரி, சரி, மணி ஒம்பதே முக்கால் தாண்டியாச்சு. வா, போகலாம்.''

அவள் கையில் ஒரு சிறு பெட்டி இருந்தது.

''அதைக் கொடுங்கம்மா. நான் தூக்கிக்கறேன்.''

''வேண்டாம். கனமில்லை. ரெயில் பத்தே முக்காலுக்குத்தான். பஸ்லே போனாக் கூடப் போதும்.''

''எங்கே மாலு அம்மா போறோம்?''

''சேலத்துக்குப் போறோம்.''

''ரமணி சார் அங்கேதான் இருக்காரா?''

''ஆமாம்... வா... அதோ பதினொண்ணாம் நம்பர் பஸ் வர்றது.''

மாலு விரைவாக நடந்து பஸ்ஸில் ஏற, ரங்கன் ஓடினான்.

**மா**லை மணி ஐந்து.

ஆபீஸ் ஹால் சின்னஞ் சிறிதாக ஒரு வட்டமாக மாறியது. அந்த வட்டத்தின் மையத்தில் ஒருவர் நின்று கொண்டிருந்தார். அவரைச் சுற்றிச் சுகந்தி, வெங்கி, நெய்

பி.வி.ஆர்.



''ஏங்க, சன்யாசம் போன நீங்க பழையபடி ஏன் சம்சாரியா மாறிட்டீங்க?''

''அவங்கவங்களும் வந்து குடும்பக் கஷ்டத்தை எங்கிட்ட சொல்றதைக் கேட்டுக் கேட்டு என் குடும்பக் கஷ்டமே தேவலைன்னு தோணிடுச்சு!''

— காயத்ரி.

ரோஸ்ட் கிச்சா, மற்றும் மயில்சாமி ஆகியோர் நின்று கொண்டிருந்தார்கள்.

''ரமணி என்கிறவர் இந்த ஆபீசில்தானே வேலை செய்யறார்?''

''ஆமாம். நீங்க யாரு?'' என்று கேட்டாள் சுகந்தி.

''நான் லிங்கிச் செட்டித் தெருவிலே, 'அதிர்ஷ்டலட்சுமி லாட்டரிச் சீட்டுக் கடை' அப்படீன்னு நடத்திக்கிட்டு வர்றேன். என் கடையிலிருந்துதான் அடிக்கடி ரமணி டிக்கெட் வாங்குவார்.''

''அந்த ஆளுக்கு ப்ரைஸ் விளுந்திருக்கா?'' என்று கேட்டான் மயில்சாமி.

''எவ்வளவு ரூபா?'' — வெங்கி.

''இருபத்தஞ்சு லட்சம்!''

''என்ன...! என்ன...!''

''இருபத்தஞ்சு லட்சமா?''

''ரமணிக்கா?''

''அவர் எங்கே?'' என்று கேட்டார் கடைக்காரர்.

''ரெண்டு நாளா லீவு!'' என்ற கிச்சா, ''ரமணிக்கே இந்த விஷயம் இன்னும் தெரியாது போலிருக்கு!'' என்றான்.

''யோவ் கடைக்காரரே, சரியாப் பார்த்துச் சொல்லுய்யா. ரமணிதான் அந்த டிக்கெட்டை வாங்கினாரா?'' என்று மயில்சாமி கேட்டான்.

''என் நோட் புத்தகத்திலே அவர் பேர்தான் இருக்கு.''

''நீ தப்பா எளுதியிருக்கேய்யா! டிக்கெட் வாங்கினது என் மருமகப் புள்ளே. பேரு ரங்கன். நீ ரங்கன் பேரை எழுதியிருக்கணும்!'' மயில்சாமி சீறினான்.

''இந்தாப்பா, நான் யார் என்ன டிக்கெட் வாங்க வந்தாலும் அவர் பேர் என்னன்னு விசாரிச்சுக் குறிச்சு வைச்சுப்பேன். இதுக்கு ரெண்டு காரணம். ஒண்ணு, பரிசுத் தொகை



''நாலு பேர் சேர்ந்து செய்யற காரியத்தை தான் மட்டுமே செய்ய வேண்டியிருக்குன்னு வருத்தப்படறார்.''

''அப்படி என்ன வேலை பாக்கறார் அவர்?''

''ஃபோர்மேனா இருக்கார்!''

— ஷோபனா வெங்கட்ராமன்.

யிலே பத்து சதவீதம் ஏஜென்ட்டுக்கு உண்டு. நான் ஒரு ஏஜென்ட். இரண்டாவது, நாளைக்கு கோர்ட்டு கேஸுன்னு வந்தா நான் கூண்டிலே ஏறிச் சாட்சி சொல்ல வேண்டி வரும். அஞ்சாறு வருஷம் முன்னாடி ஒரு கேஸ் வந்தது. அதிலே என்னாலே சரியாச் சாட்சி சொல்ல முடியலே... அதுதான் இப்பவெல்லாம் ரொம்பக் கவனமா எழுதிட்டு வர்றேன்.''

''அல்லாம் சரித்தான்யா.... லாட்டரிச் சீட்டு வாங்கினது என் மருமகப் புள்ளை ரங்கன்தான்.''

''நீ சொன்னாப் போதுமாய்யா. நீ சொல்ற ரங்கன்ங்கிற பேரு என் நோட்டுப் புத்தகத்திலேயே இல்லை. ஆனா ரமணி பேரு நிறைய இடத்திலே இருக்கு...'' என்றார் கடைக்காரர்.

''உன் கைகாலை ஒடிச்சு, உன் புஸ்தகத்தையும் கிழிச்சு நெருப்பிலே போட்டுடுவேன்!'' மயில்சாமி, கடைக்காரரின் கையைப் பிடித்தான்.

''டேய் மயிலு, அவர் கையை விடு... உன்னை அலாக்காத் தூக்கி இந்த மாடியிலிருந்து எறிஞ்சுடுவேன்!'' என்ற வெங்கி, ''நீ போ சார்... எதுக்கும் இந்த ஆள் பேர்லே பூக்கடைப் போலீஸ்லே கம்ப்ளெய்ண்ட் எழுதிட்டுப் போ... சாட்சி சொல்ல நான் வர்றேன்,'' என்றான்.

மயில்சாமிக்கு ஆத்திரம் பீறிட்டுக் கொண்டுவந்தது. ஆனால் அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. மௌனமாய்த் தன் இருக்கைக்கு நடந்தான்.

''ரமணி வந்ததும், முடிஞ்சா சொல்லியனுப்புங்க,'' என்றார் கடைக்காரர்.

''இது எங்க வேலை இல்லை. நீங்க தினசரி வந்து பாருங்க!'' என்றான் கிச்சா.

அவர் போன பிறகும் ஆரவாரம் அடங்கவில்லை.

ஒரே ஓர் ஆச்சரியம்தான் எல்லோர் மனத்திலும் ஏற்பட்டது.

இத்தனை வருடங்களாக லாட்டரிச் சீட்டு வாங்கியது ரமணியா?

சர்ச்சை பிறந்தது.

''இருக்கவே இருக்காது, கிச்சா. ரமணி வாங்கியிருந்தா, ஏன் நம்பரை ஒரு டயரியில் நோட் பண்ணி ரங்கன் கையில கொடுத்திருக்கணும்?'' என்றாள் சுகந்தி.

''நீ சொல்றதிலும் ஒரு பாயின்ட் இருக்கு, சுகந்தி... ஒருவேளை ஆளுக்குப் பாதியாப் போட்டிருப்பாங்களோ... டிக்கெட்டை ரமணியும் டயரியை ரங்கனும் வைச்சிருக்காங்க.''

''அடிச்சா அதிர்ஷ்டம் இப்படி அடிக்கணும்!'' என்ற வெங்கி, ''நான் அஞ்சு ரூபா கட்டினா குதிரை இருபத்தஞ்சு கூடத் தர்றதில்லே,'' என்று புலம்பினான்.

''ஆனா ஒரு விஷயத்தைப் பார்த்தீங்களா கிச்சா?'' என்றாள் சுகந்தி.

''என்ன?''

''நேத்து ரமணி வரலே. இன்னிக்கு மாலுவும் ரங்கனும் வரலே! இதிலே ஏதோ மர்மம் இருக்கு.''

''என்ன மர்மம் இருந்தா உனக்கும் எனக்கும் என்ன சுகந்தி... இருபத்தஞ்சு லட்சம் உனக்கும் எனக்கும் விழலேன்னு சந்தோஷப்படு... பணம் பாஷாணம்னு பெரியவங்க சொல்லியிருக்காங்க,'' என்றான் கிச்சா.

''உங்களுக்கு விழாத போது நீங்க வேறு எப்படி உங்களைத் தேற்றிக் கொள்ள முடியும்?'' என்றாள் சுகந்தி.

**அ**ன்று இரவு பத்து மணிக்கு மயில்சாமி தன் வீட்டை நோக்கி நடந்தான். அவன் அதை நெருங்குவதற்கும், ஒருவன் வீட்டை விட்டு வெளியேறி, எதிர்த் திசையில் நடந்து செல்லுவதற்கும் சரியாக இருந்தது. அவன் யார் என்று மயில்சாமிக்குப் புரிந்து விட்டாலும், அதைப் பற்றிப் பேச இது சமயமில்லை என்று தன்னை அடக்கிக் கொண்டான்.

''என்னப்பா, எதுக்கு இப்ப இங்கே வந்திருக்கே?'' என்று தனம் கேட்டாள். அவள் குரலில் எரிச்சல் ஒலித்தது.

''உனக்கு விசயம் தெரியுமாடீ?''

''இன்னா விசயம்?''

''உன் புருசன் வாங்கின லாட்டரிச் சீட்டுக்கு இருபத்தஞ்சு லட்சம் ரூபா விளுந்திருக்கு.''

''அதுக்கு இன்னா இப்ப?''

''அப்ப? உனக்கு முன்னாடியே தெரியும்னு சொல்லு.''

''ஆமாம் தெரியும். ஆனா, நான் ஏன் உன் கையிலே சொல்லணும்? நீ சாராயக்

கடையையே வாங்கிடுவியே!''

''துப்புக் கெட்டக் கழுதே... விசயம் புரியாம பினாத்தாதே... அந்தச் சீட்டை வித்த கடைக்காரன் சொல்றான், ரமணி தான் டிக்கெட்டை வாங்கினான்னு. புஸ்தகத்திலே வேறே அவன் பேரைக் குறிச்சு வைச்சிருக்கான்.''

''அடப்பாவி!''

''இப்ப இன்னா சொல்றே?''

''என் புருசன்தான் டிக்கெட்டு வாங்கினான். முந்தா நாள் ராத்திரி ரமணி வூட்டுக்குக் கூடப் போனான். அந்த ஆளு ஊர்லேயே இல்லேன்னு திரும்பி வந்தான்.''

''இதெல்லாம் ஏன் என்கிட்ட சொல்லலே, நீ?''

''உன் கையிலே சொல்லத் தாவலேன்னு சொல்லலே... சொல்லியிருந்தா நீ இன்னா கிளிச்சிருப்பே?''

''இன்னிக்கு ரமணி ஆபீசுக்கு வரலே... உன் புருசனும் வரலே... மாலுன்னு ஒரு பொண்ணு இருக்கு... ரமணிக்கும் இந்தப் பொண்ணுக்கும் ரொம்ப நாளா சிநேகம். கல்யாணம் கட்டிக்கப் போறாங்க. இந்தப் பொண்ணு மாலுவும் இன்னிக்கு ஆபீசுக்கு வரல்லே.''

''இத்தையெல்லாம் ஏன்யா என் கையிலே சொல்றே? என் புருசன் டிக்கெட்டு வாங்கியிருக்கான். அதுக்கு இருபத்தஞ்சு லட்சம் வுளுந்திருக்கு. வேற எவனாவது இந்தப் பிரைஸ்லே கை வைக்க வந்தான், அவன், எவனா இருந்தாலும் சரி, என் கையிலே மாட்டிப்பான். அவனை நான் கொன்னுடுவேன்!'' என்றாள் தனம்.

''அப்பாலே, ஜெயில்லே இருபத்தஞ்சு லட்சத்தை எண்ணிப் பாப்பியாக்கும்... கழுதைக்கு ஒடம்புதான் வளந்து கிடக்கு. மூளை இல்லே.''

''சரி, நீ போ ஆபீசுக்கு. நான் தூங்கணும்,'' என்றாள் தனம்.

''போறேண்டீ கழுதே... எதுக்கு மறுபடியும் அந்த ஆள் இங்கே வர்றான்?''

''உன் கையிலே சொல்லத் தாவலே!''

தனம் கதவை அறைந்து சாத்த, மயில்சாமி உறுமிக்கொண்டே நடக்கலானான்.

ரயிலில் மாலு நிம்மதியாக உறங்க, ரங்கன் பித்துப் பிடித்தவனைப் போல உட்கார்ந்திருந்தான்.

எதற்காகச் சேலம் போகிறான்?

ஏன் மாலு அழைத்துச் செல்லுகிறாள்?

ரமணிக்குச் சேலத்தில் என்ன வேலை?

பரிசு விழுந்த விஷயமே ரமணிக்குத் தெரியாதோ? அப்படி என்றால் இந்தப் பிரயாணத்துக்கும் பரிசுக்கும் சம்பந்தமில்லையா?

திடீரென்று ரங்கனுக்கு, அவனுடைய அண்ணனுடைய கல்யாணம் நினைவுக்கு வந்தது. அவன் பதிவுத் திருமணம் செய்து கொண்டான். ஓர் அதிகாரிக்கு முன்பு அண்ணனும் அண்ணியும் ஒரு ரிஜிஸ்தரில் கையெழுத்துப் போட்டார்கள். ரங்கன் ஒரு சாட்சிக் கையெழுத்துப் போட, அண்ணியின் உறவுக்காரன் ஒருவன் இன்னொரு சாட்சிக் கையெழுத்துப் போட்டான்.

இப்போது எல்லாம் புரிந்தது ரங்கனுக்கு.

சேலத்தில் ரமணியும் மாலுவும் பதிவுத் திருமணம் செய்து கொள்ளப் போகிறார்கள்.

அவன் சாட்சிக் கையெழுத்துப் போடப் போகிறான்!

திடீரென்று மனத்தில் ஒரு தெளிவு பிறந்தது. நிச்சயமாக ரமணிக்குப் பரிசு விழுந்த விஷயம் தெரியாது.

ரங்கன் நிம்மதியாய், ஆனந்தமாய்த் தூங்கினான்.

சேலம் வந்தது கூட அவனுக்குத் தெரியாது.

''எழுந்திரு, ரங்கா... எத்தனை தடவை தான் ரங்கா, ரங்கான்னு கத்தறது!''

மண்டையில் ஏதோ இடிப்பதை உணர்ந்து திடுக்கிட்டு ரங்கன் கண் விழித்தான். மாலுவின் பெட்டி முனை, தன் முன் மண்டையை வேண்டுமென்றே இடித்திருக்கிறது என்பதை அவன் புரிந்து கொள்ளவில்லை.

மாலு ரெயிலிலிருந்து இறங்க, அவன் அவசர அவசரமாய்ப் பின் தொடர்ந்தான்.

(தொடரும்)

---

''அவர் ரொம்பத்தான் வேலையோடு ஒன்றிட்டார்...''

''எப்படிச் சொல்றே?''

''முன்னே, பஞ்சவர்ணம்னு இருந்த அவரோட பெயரை லஞ்சவர்ணம்னு மாத்திக்கிட்டார்னா பாரேன்!''

— வி. சி. கிருஷ்ணரத்னம்.



# கல்வெட்டில் பெயர்

''ஏழெட்டு வருஷமாப் பேசிக்கிட்டுத்தான் இருக்கோம். ஒண்ணுலயும் நடப்பு இல்லே. இந்த வருஷமும் அது மாதிரிதான். அம்மன் கோவில் கொடைன்னு பேச்சு வர்றப்ப எல்லாம், இப்படி மண்டபம் கட்டுற பேச்சும் தவறாமதான் வந்துருது. அப்புறம் கொடை முடிஞ்சு ஆரவாரம் போன கையோட, இந்தப் பேச்சும் ஓஞ்சு போயிடுது'' என்றார் பெரிய பாட்டா.

'கணீர்' என்று ஒலிக்கின்ற மணிக் குரல். அந்தக் காலத்து வலுவான கட்டை அல்லவா!

''பெரிய பாட்டா, இந்த வருஷம் அப்படி இல்லே. எப்படியாச்சும் வசூல் பண்ணி மண்டபம் கட்டிப்பிடவேண்டியதுதான். கர்ப்பக் கிருகத்தையும் விருத்தியாக் கட்டி, தென்புறம் கிடக்கிற திடல்லே பெரிய கல்யாண மண்டபமும் கட்டிட்டால் வசதியாய்ப் போயிடும். இப்படி அம்மன் கொடை கொடுக்கிறப்ப, கூட்டமெல்லாம் தங்கிக்க இடம் கிடைச்சிடும். வெயிலோ, மழையோ... ஜனங்க கஷ்டப் பட வேணாம். நம்ப ஊர்ல மட்டும் இல்லே, சுத்துப்பட்டி ஏழூர்ச் சனமும்...., ஒரு கல்யாணம் காட்சி பண்ணணும்னால், டவுன்ல்ல இருக்கிற மண்டபத்தைத் தேடில்லா ஓடுவாங்க. நம்ப ஊர்லயே வசதியாய் ஒரு மண்டபம்னு கட்டிட்டால்சனங்களுக்கும்வசதி.கோவிலுக்கும் வருமானம் கூடிரும். கொடை கூடக் குறைச்சுப் போட்டுக்கலாம்'' என்றார் மாரிமுத்து.

''கல்யாண மண்டபம் கட்டுறது லேசில் நடக்குமா? எம்புட்டுத் தொகை வேணும் அதுக்கு? இருக்கிற பணம் பத்தாது. வரி போட்டாலும் காணாது'' என்றார் தெய்வநாயகம்.

''தெய்வநாயகம் சொல்றது சரிதான். ரூபாய் நிறையத்தான் ஆயிரும். ரூபாய்க்கு என்ன பண்ணப் போறீங்க?'' என்று கேட்டார் மாடசாமி.

ஒரு நிசப்தம் உண்டாகிப் பிறகு கலைந்தது. கூடியிருந்தோர் ஆளுக்கொரு யோசனை கூறினார்கள். ஆனால் எதுவும் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இல்லை.

''பெரிய பாட்டா, கோவில் மண்டப முகப்பிலே ஒரு கல்வெட்டுப் பதிப்போம். நன்கொடை தந்தவங்க பெயரை எல்லாம்

## உமா கல்யாணி

அதிலே எழுதி வச்சிறலாம். அப்போதாவது நிதி தரமாட்டாங்களா?'' என்றார் பெரியநாயகம்.

''சரிதான் பெரியநாயகம். ஒருத்தன் அஞ்சு தருவான். ஒருத்தன் பத்துத் தருவான். ஒருத்தன் நூறு தருவான். இவங்க பெயரை எல்லாம் எழுதணும்னால், மண்டபச் சுவர் பூராவும் கல்வெட்டுப் பதிக்க வேண்டியதுதான்.'' என்றார் பெரியபாட்டா.

''அப்படி எல்லார் பெயரையும் போட முடியுமா? ஓரளவு பெரிய தொகையாய்த் தர்றவங்களோட பெயரை மட்டும் போடணும்'' என்றார் பெரியநாயகம்.

''பெரிய தொகைன்னா எவ்வளவு?'' என்று கேட்டார் மாடசாமி.

''ஆயிரம் ரூபாயும் அதுக்கு மேலேயும் யாரெல்லாம் தர்றாங்களோ, அவங்க பெயரைக் கல்லிலே எழுதிடலாம்.''

''ஆமாம், இப்படியே வச்சுக்கலாம். அப்பத்தான் பெயர் வரணும்னு ஆசைப்படுறவங்க நிறையத் தர்றதுக்கு முன் வருவாங்க., ஏதோ நூறு, இருநூறு தந்து ஒப்பேத்த எண்ணுறவங்க கூட ஆயிரம் தர முன் வருவாங்க. அதனாலே அப்படி ஒரு ரூலை வச்சுக்கலாம்'' என்றார் பெரிய பாட்டா.

இதனை ஏகமனதாக அனைவரும் ஏற்றுக் கொண்டு தீர்மானமாகவும் போட்டு விட்டனர்.

''பாருங்க, வசூலை இப்பவே ஆரம்பிச்சிடலாம். நாளை பிறகுன்னு தள்ளிக்கிட்டே போனால் அப்புறம் அது தள்ளலாவே போயிடும்'' என்றார் மாரிமுத்து.

''அப்படின்னா, முதமுதல்ல முருகேசம் பிள்ளையைப் போய்ப் பார்க்கலாம். அவர்தான் இதுக்குப் பிள்ளையார் சுழி போட்டு ஆரம்பிச்சு வைக்கட்டுமே...'' என்றார் தெய்வநாயகம்.

''அவரென்ன கைராசிக்காரரா?'' என்று கேட்டார் ராஜநாராயணன்.

ராஜநாராயணன் இப்போது இங்கு புதிதாய் வந்திருக்கிற ஸ்கூல் டீச்சர். அதனால்தான் முருகேசம் பிள்ளையின் இயல்பை அறியாதவராய்க் கேள்வி கேட்கிறார்.

''ஆமாம், அப்படியே வச்சுக்கலாம். ஏன்னா, நாம் முதல்ல போய்க் கேட்கிற நபரே அட்டி எதுவும் கூறாமல் தாராள மனசுடையவராய் இருந்தார்ன்னால் நல்லது இல்லியா! அவர் உடனே ஒப்புக் கொண்டு பணமும்தர்றஆள்'' என்றார்தெய்வநாயகம்.

''அந்த் ஆளுக்கு அப்படி ஒண்ணும் வாரி

வழங்குற தாராள மனம்னு சொல்லிட முடியாது. சுத்தமான விளம்பரப் பிரியர். தன்னோட பெயரைக் கல்லிலே பொறிச்சுக்க அத்தனை ஆசை. அதுக்காக மட்டும் தன்னோட இரும்புப் பெட்டியைத் திறக்கிற ஜாதி அவர்" என்றார் மாரிமுத்து.

"அந்தக் கவலை நமக்கேன் மாரிமுத்து? நமக்கு அவர் தரப் போகிற பணத்தோட அளவுதான் முக்கியம்..." என்று சிரித்தார் பெரியபாட்டா

"நானும் வேறென்ன சொன்னேன், அந்த ஆள் ஒரு விளம்பரப் பிரியர்னு சொன்னேன். ஏன்னா, இந்த வட்டாரத்திலே எங்கெங்கே கல்வெட்டு இருந்தாலும், அதிலே அவரோட பெயரும் கண்டிப்பாய் இருக்கணும்னு எண்ணுகிறவர். அவரோட இந்த ஆசையை வச்சு, யார்... எங்கே.... என்ன காரியம் பண்ண ஆரம்பிச்சாலும் அவர்கிட்டே போய், அவரோட இந்தக் கல்வெட்டிலே பெயர் இருக்கணும்கிற ஆசையை வச்சுப் பெரிய தொகையாய் வாங்கிக்கிட்டுப் போயிடறாங்க..." என்றார் மாரிமுத்து.

"இப்ப நாமும் அதைத்தானே பண்ணப்போகிறோம்?" என்று சிரித்தார் பெரியபாட்டா.

"கல்லிலே பெயரைக் காணும் ஆசையில் கண்ணை மூடிக்கிட்டே நிதியை அள்ளி வீசுகிறவர் அவர். போய் நல்லாப் பேசி, ஆளைக் குளிப்பாட்டி, பெரிய தொகையை வாங்கிட்டு வந்துருங்க," என்று சிரித்தார் ராஜநாராயணன்.

"அவரோட பட்டப் பெயரே கல்வெட்டுப் பைத்தியம் முருகேசம் பிள்ளைதானே!" என்று சிரித்தார் மாரிமுத்து.

"பொருத்தமான பெயர்தான்" என்று சிரித்தார் ராஜநாராயணன்.

அனைவரும் சிரித்தனர்.

"எப்படியோ அவர் பணம் நமக்கு வரணும். அவர் எந்த வகைப் பைத்தியமானால் என்ன! எல்லோரும் கிளம்புங்க!



இப்ப நல்ல நேரம். ராகு காலம் வர்றதுக் குள்ளே முதல் வசூலைப் பண்ணிட வேணும்.''

பெரியபாட்டா கூற, அதை ஆமோதிக்கும் விதமாக அனைவரும் எழுந்து புறப்பட்டனர்.

பலித்தது.

„ஏதோ ஆயிரம் ரூபாய் மட்டுமே டொனேஷனாய்த் தருவார் என்று போனவர்கள் அப்படியே அசந்து போனார்கள்.

ஆறாயிரம் ரூபாயைக் கட்டுக் கட்டாகத் தூக்கிக் கொடுத்தாரே!

ஆயிரம் ரூபாய் ரசீதுகளில் ஆறினைப் பெற்றுக் கொண்ட அவர், ''என் பிள்ளைங்க பேர்ல அத்தனை நல்லெண்ணம் கிடையாது எனக்கு. ஒரு பயலாவது நேரான பாதையிலே வரமாட்டேன்றானுக. ஏன், நான் மட்டும் யோக்கியனா என்ன? நானும் என்னோட வாலிப வயசிலே இப்படித்தானே! துளுத்துக் கிடந்த பணத்தை அள்ளிக்கிட்டுப் போய் வம்பைத்தானே விலைக்கு வாங்கிட்டு வந்தேன்! ஆனால், என் முன்னோர் செய்த தர்ம காரியங்களை எல்லாம் அங்கங்கே கல்வெட்டுக்களில் பார்த்ததும்தான் எனக்கு விழிப்பு வந்துருச்சு. மனச்சாட்சி உறுத்த ஆரம்பிச்சிடுச்சு. இப்படிப்பட்ட மேலான நற்காரியங்களை எல்லாம் பண்ணிய மேற்குடிப் பிறப்பில் பிறந்த நானா, இத்தனை மோசமான செயல்களில் ஈடுபட்டிருக்கிறேன்னு எண்ணி வெட்கப்பட்டேன். வேதனைப்பட்டேன். குடும்பத்தின் நற்பெயரை அழிச்சிருக்கேனேன்னு தவிச்சு மனம் மாறிட்டேன். இப்படிப்பட்ட கல்வெட்டுக்களால்தானே என்னாலே திருந்த முடிஞ்சுதுன்னு சந்தோஷப்பட்டேன். அதனாலே, துட்டுக் கெட்டுத் திசைமாறி அலைகிற என்னோட பிள்ளைகளும், என்னோட பெயரை இப்படிப்பட்ட நல்ல காரியங்கள் பண்ணினதாகக் கல்வெட்டுக்களிலே பார்த்தால், அதனாலே என்னைப் போல மனசு மாறித் திருந்தலாம் அல்லவா? அதனாலேதான் கல்லிலே பெயர் பொறிக்கிறதானால் முதல் ஆளாய் நின்னு டொனேஷன் கொடுக்கிறேன். அதுவும் இப்ப ஒரு படி மேலே போய், பிள்ளைங்க பெயரையும் கல்வெட்டில் போடும்படி அவங்க பேர்லயும் டொனேஷன் கொடுத்திட்டேன். தங்கள் பெயரைக் கல்வெட்டில் பார்க்கிறப்ப, இந்த நல்ல காரியத்துக்கு உதவின நாம், தப்பு எதுவும் பண்ணக் கூடாதுன்னு எண்ணித் திருந்தலாம் இல்லையா? ஊர்ல என்னைக் கல்வெட்டுப் பைத்தியம்னு சொல்றாங்களாம். சொல்லிட்டுப் போறாங்க. கெட்டவன்கிற பேரைவிட இது பெட்டராச்சே! இந்த அளவு கருத்து மாறியிருக்கே! இது எனக்கு வெற்றிதானே...!'' என்று கூறிச் சிரித்தார் முருகேசன் பிள்ளை.

வசூல் பண்ண வந்தவர்கள் பிரமித்துப் போனார்கள்.

---

# இருக்கவா—பறக்கவா?



உடன்பிறப்புமில்லாத உடம்பு பாழ் என்றவ்வை
ஓதிவைத்தாள் அந்நாளிலே!
ஒன்றோடு நிறுத்தென்றே ஓதுகின்ற அரசாங்கம்
உயிர்வாங்குதிந்நாளிலே!

கடனெதுவுமில்லாமல் கணக்கறிந்து வாழென்று
கழறிவைத்தார் அந்நாளிலே!
கலர் டீவி டெக்கென்றும் காத்ரேஜு ப்ரிட்ஜ் கேட்பாள்
கடைச்செல்வி இந்நாளிலே!

புடைவைநகை வாங்குதற்கும் புதுப்படங்கள் பார்ப்பதற்கும்
போய்விடுவாள் இந்நாளிலே!
பொருள்சேர்த்து வைத்ததனைப் புருஷனுக்கே தந்திடுவாள்
பெண்டாட்டி அந்நாளிலே!

அடலெருது போல் நானும் ஆலையிலே சுழன்று வரும்
அல்லலென்று தீருமப்பனே!
ஆண்டியாகிச் சுற்றுதற்கும் அடர்காடு தமிழகத்தில்
ஆண்டவனே எங்குமில்லையே!

— எச். ரமணிக்லால்.

# அதிர்ஷ்ட தேவதை

## 11

தினம் தூங்கவில்லை. தூக்கம் வராமல் ரமணியும் மயில்சாமியும் ரங்கனும் தடுத்தார்கள். அவள் மேற்கொண்டு என்ன செய்வாள்? செய்ய முடியும்! இருபத்தைந்து லட்சம் ரூபாய் என்றால் எவ்வளவு என்று நிர்ணயமாக அவளால் அறிந்து கொள்ள முடியவில்லை என்றாலும், அது ஒரு பெரிய தொகை. அதன் மூலம் தான் ஒரு பணக்காரியாகிவிடலாம் என்பதைப் புரிந்து கொண்டாள். ரங்கனுடைய கைக்குப் பணம் வந்துவிட்டாலே போதும். அவளுடைய கைக்கு வந்த மாதிரிதான்.

ஆனால் வராது போலிருக்கிறதே?

சீட்டுக் கடைக்காரன் ரங்கனுடைய பெயரை எழுதி வைத்துக் கொள்ளாமல் ரமணியின் பெயரை அல்லவா எழுதி வைத்திருக்கிறான்? சீட்டும் ரமணியின் பெயரில் இருக்கிறது. அவளுக்குத் தெரியும், ரங்கன் தான் வாங்கியிருக்கிறான், ரமணியிடம் ஒப்படைத்திருக்கிறான் என்றெல்லாம். இவ்வளவு முட்டாள்தனமாக யாராவது இருப்பார்களா?

திடீரென்று அவளுடைய குறுக்குப் புத்தி சிந்திக்க ஆரம்பித்தது.

அவள் பணத்தின் மீது உரிமை கொண்டாட வேண்டும். எப்படி? ரங்கன் ஒருவன் மூலமாகத்தான் உரிமையின் கொண்டாட்டம் ஆரம்பிக்க முடியும்.

ரங்கன் அவள் மீது அபரிமிதமாக ஆசை கொண்டிருக்கிறான். ஆனால் அதுவரைக்கும் அவள் அவனை அலட்சியம் செய்திருக்கிறாள். அவனிடம் தான் இதுவரை கையாண்டிருக்கும் அணுகுமுறையை மாற்றிக் கொள்ள வேண்டும். ஆனால், இதனால் எப்படி ரங்கனால் ரமணியிடமிருந்து, பரிசுச் சீட்டைப் பெற முடியும்? ரங்கன் — ரமணி இருவருக்கிடையே அவள் எப்படிப் பாய்வாள்?

அவளுக்கு இன்னொரு யோசனையும் பிறந்தது. பேட்டை ரௌடிகள் சில பேர்களை அவளுக்குத் தெரியும். மம்மட்டி கோவிந்து இருக்கிறான். பிக்பாக்கெட் காசி இருக்கிறான். இருவரில் யாராவது ஒருவனுக்கு ஆயிரமோ, இரண்டாயிரமோ தள்ளினால், பரிசுச் சீட்டு என்ன, ரமணியின் குடலையே உருவி எடுத்து வந்து அவள் கழுத்தில் மாலையாகப் போடுவார்கள். ஆனால் அவர்களுக்கு விஷயம் தெரிந்துவிடும். பரிசுச் சீட்டே அவளுடைய கைக்கு வராமலும் போய்விடலாம். மேலும் ரமணியைத் தாக்குவதோ, அவனிடமிருந்து சீட்டைப் பறிப்பதோ அவ்வளவு எளிதாக இருக்காது. அவன் நேரே போலீசுக்குப் போவான். போலீஸ் என்று வந்தால், நிச்சயம் தோல்வி அவளுக்குத்தான். அவள் ஒரு தடவை பூக்கடை போலீஸ் ஸ்டேஷனில் ஒரு நாள் முழுதும் அடைக்கப்பட்டிருக்கிறாள்.

என்ன செய்ய?

அடிதடி முறை உதவாது என்றால் வேறு என்ன வழி?

பரிசுச் சீட்டிலிருந்து மனம் ரங்கனுக்கு வந்தது. நேற்றுக் காலை ஆபீசுக்குப் புறப்பட்டவன் இன்னும் வரவில்லை. அவன் அன்று ஆபீசுக்கே செல்லவில்லை, ரமணியும் அவனுடைய சிநேகிதிப் பெண்ணும் கூட வரவில்லை என்று மயில்சாமி சொன்னான். அப்படியானால் என்ன அர்த்தம்? மூன்று பேருமாகப் பணத்தைப் பங்கு போட்டுக் கொள்ளுகிறார்களா? இந்தப் பட்டணத்தில் ரங்கனை எங்கே என்று தேடுவது?

மறுபடியும் ஆபீசுக்குச் செல்வது என்று முடிவு எடுத்து, மீண்டும் இரண்டு மூன்று தம்ளர் தண்ணீர் குடித்துப் படுக்கையில் வீழ்ந்தாள்.

ரமணி சேலம் ரயில் நிலையத்தில் நின்று கொண்டிருந்தான்.

அவனைக் கண்டதும் ரங்கன், "ரமணி சார்... ரமணி சார்... இப்படிப் பண்ணிட்டீங்களே, ரமணி சார்!" என்று அலறி அழுதான். ஒரு சிலர் அவனுடைய குரலைக் கேட்டு, நின்று வேடிக்கை பார்க்கத் தயாரானார்கள்.

"டேய் மடையா, ஏண்டா ஊளையிடறே? உனக்கு என்னாச்சு? மாலு, இவன் இப்படித் தான் ரயிலிலே அலறிட்டு வந்தானா?"

"இல்லையே... கும்பகர்ணன் மாதிரி தூங்கிட்டு வந்தானே...! ரங்கா, என்ன நீ, யாரோ செத்து விட்ட மாதிரி அழறே? இது பிளாட்பாரம். பேசாமல் வா...

"இன்னொரு வாட்டி கத்தினே, உன்னை ஏர்க்காடு மலைக்காட்டிலே மரமோடு மரமாக் கட்டிப் போட்டுடுவேன், வா பேசாம!" என்றான் ரமணி. பிறகு "மாலு, மொதல்ல லாட்ஜுக்குப் போகலாம். குளிச்சு, டிபன் சாப்பிட்டப்புறம் மத்த வேலைகளைப் பார்க்கலாம்," என்றான்.

என்ன வேலை என்று மாலுவுக்கு இன்னமும் தெரியாது. இருந்தாலும் தலை ஆட்டினாள்.

நாலு ரோடு அருகே ஒரு பெரிய ஓட்டலின் முன் ஆட்டோ நின்றது.

"இறங்கு, ரங்கா!" என்றான் ரமணி.

ரங்கன் மௌனமாய் இறங்கி, அவர்களைப் பின்தொடர்ந்தான். மாலு ஒரு தனி அறைக்குச் செல்ல, ரங்கனை அழைத்துக் கொண்டு ரமணி தன் அறைக்குள் பிரவேசித்தான்.

''ரங்கா, பல் தேய்ச்சியா?''

''இல்லே.''

''மொதல்ல பல் தேய்ச்சுக் குளி... அது சரி... குளிச்சப்புறம் போட்டுக்க கையிலே பாண்ட் ஷர்ட் கொண்டு வரலியா?''

''இல்லே!'' என்ற ரங்கன், ''ரமணி சார் எதுக்கு என்னை இந்தச் சேலத்துக்கு வரச் சொல்லியிருந்தீங்க? நீங்க ரெண்டு பேரும் ரிஜிஸ்ட்ரார் ஆபீசில் கல்யாணம் செய்து கொள்ளப் போறீங்களா? அதுக்கு நான் சாட்சிக் கையெழுத்துப் போடணுமா?'' என்றான்.

ரமணி சிரித்தான்.

''நீ ஒரு முட்டாள்னு உலகம் பூரா நினைக்கிறது. ஆனால் நீ முட்டாள் இல்லே! மூளை நன்னா வேலை செய்யறது... ஆமாம் நீ ஏன் ரயில்வே ஸ்டேஷன்லே அழுதே?''

''ஏன்னு உங்களுக்குத் தெரியாதா, ரமணி சார்...? எனக்கு... எனக்கு...''

''சரி, சரி, கொஞ்ச நேரம் பேசாம இரு. மொதல்ல இந்த பாண்ட் ஷர்ட்டை சோப் போட்டுத் தோய்ச்சு, ஃபேனுக்கு அடியிலே காயப் போடு. ரெண்டு மணி நேரத்திலே காய்ஞ்சுடும். அதுவரையில்என்வேஷ்டியைக் கட்டிக்க,'' என்றான்.



''அதுக்கு முன்னாடி ஒரு முக்கியமான விஷயம் பேசணும், ரமணி சார்.''

''எதைப் பத்தி?''

''ராஜஸ்தான் லாட்டரிச் சீட்டு! என் டிக்கெட்டுக்கு இருபத்தைஞ்சு லட்சம் ரூபாய் விழுந்திருக்கு ரமணி, சார்!''

அப்படியா,ரொம்பசந்தோஷம்.போய்ப் பல் தேய்.''

''டிக்கெட் உங்க கையிலே இருக்கு ரமணி சார்.''

''அதுக்கு இப்ப என்ன, நான் சொன்னதைச் செய்... போ!''

ரமணியை எதிர்த்துப் பேச ரங்கனுக்குத் தைரியம் வரவில்லை. ரமணியின் விரோதத்தைச் சம்பாதித்துக் கொண்டால் அவன் டிக்கெட்டையே கண்ணில்காட்டமாட்டான்.

குளியலறைக்குள் சென்ற ரங்கன் குழம்பிப் போனான். ஷர்ட்டைக் கழற்றுகையில் கை நடுங்கியது. அவன் ரமணியிடம், ராஜஸ்தான் லாட்டரியில் இருபத்தைந்து லட்சம் ரூபாய் பரிசு விழுந்திருக்கிறது என்கிறான். அதற்கு எப்படிப்பட்ட உணர்ச்சியையும் காட்டாமல் ரமணி, 'அப்படியா, ரொம்ப சந்தோஷம்' என்கிறான். டிக்கெட்டைப் பற்றிப் பேசும் பொழுது 'அதுக்கு இப்ப என்ன?' என்று லட்சியமில்லாமல் பேசுகிறான். இதற்கெல்லாம் என்ன அர்த்தம்? எதற்குச் சேலத்துக்கு அவனை இந்த ரமணி அழைத்திருக்கிறான்? ஏர்க்காடு காட்டினுள் துரத்தி அடிக்கவா? ஏர்க்காடு எங்கே இருக்கிறது?

காடு என்றால் அதில் புலி, கரடி, யானை எல்லாம் இருக்குமே?

அவன் குளியலறையிலிருந்து திரும்பிய போது ரமணி இல்லை. ஒரு டீப்பாயின் மேல், இட்லி, வடை, பொங்கல் எல்லாம் இருந்தன. ஒரு பிளாஸ்க்கில் காப்பியும் இருந்தது.

துணிகளைக் காயப் போட்ட ரங்கன், கட்டிலின் மீது கிடந்த வேட்டியைக் கட்டிக் கொண்டான்.

இட்லியும் வடையும் லேசில் இறங்கவில்லை. ஆனால் வயிறு பசியில் இறைந்தது.

ரமணி எங்கே போய்விட்டான்?

பக்கத்து அறையில் மாலு இருக்கிறாள். இருவருமாக அங்கே டிபன் சாப்பிடுகிறார்களோ?' ரங்கன் எழுந்து கதவைத் திறக்க முயற்சி செய்தான். அது வெளியே பூட்டப்பட்டிருப்பது தெரிந்தது. ரமணி ஏன் அவனை இந்த அறையில் வைத்துக் கதவைப் பூட்ட வேண்டும்?

திடீரென்று ஒரு யோசனை தோன்றியது.

ரமணி நடிக்கிறானா அல்லது உண்மையி

பி.வி.ஆர்.

லேயே லாட்டரிப் பரிசு பற்றித் தெரியாதா? பணத்தின் மீது எழுந்த வெறியில் இப்போது மூளை சுறுசுறுப்பாக வேலை செய்தது. ரமணியின் பெட்டியைக் குடைந்து பார்த்தால் என்ன?

கதவின் உள் தாழ்ப்பாளைப் போட்டு விட்டுப் பெட்டிக்கு வந்தான். துணிமணிகள் தான் இருந்தன. பெட்டியின் அடிப்பாகம் வரை துழாவினான்.

பரிசுச் சீட்டு இல்லை.

'ரமணி சார் தன் மணி பர்சிலேயே வைத்திருக்க வேண்டும்.'

சரியாகப் பத்து மணிக்கு ரமணி அறைக்கு வந்தான்.

''ஷர்ட்டும் பாண்ட்டும் காய்ஞ்சுடுத்தா ரங்கா?''

''ஷர்ட் காய்ஞ்சுடுத்து. பாண்ட் ஈரமா இருக்கு.''

''பரவாயில்லே. அதையே போட்டுக்க. வெயில்ல கொஞ்ச நேரம் நடந்தால் காய்ஞ்சுடும். வா, போகலாம்.''

''எங்கே ரமணி சார்?''

''நீ எங்கிட்டே கேள்வி கேட்கப்படாது. வாயை மூடிட்டு வரணும்.''

''எதுக்கு ரமணி சார் என்னை இப்படிப் பயமுறுத்தறீங்க? நீங்க இது மாதிரி எப்பவுமே என்கிட்டப் பேசினதில்லே?''

''இப்பத்தானே சொன்னேன், நீ கேள்வி கேட்கப்படாதுன்னு. நீ ஒரு முட்டாள். நான் எவ்வளவு முட்டிண்டும் நீ அந்த பஜாரி கழுத்திலே தாலியைக் கட்டினே. அதுக்கு அனுபவிக்கறே. இப்ப நான் அவகிட்டேர்ந்து உன்னைக் காப்பாத்தப் போறேன்.''

''அவ என் பெண் ஜாதி, ரமணி சார். அவளுக்கு வாய் கொஞ்சம் அதிகம்தான்... அதுக்காக...''

''பேசாமல் வா!'' என்ற ரமணி, ஒரு கணம் நின்று, ''இப்ப நீ, நான், மாலு மூணு பேரும் ஒரு இடத்துக்குப் போகப் போகிறோம். அங்கே நீ அனாவசியமாப் பேசப்படாது. பேசினா காரியமே குட்டிச்சுவராகிவிடும்.''

---

''நம்ம பெண்ணுக்கு உன் அப்பா மாப்பிள்ளை பார்க்கிறதை ஏன் வேணாங்கறே?''

''அவர் மாப்பிள்ளை செலக்ட் பண்ற இலட்சணம் எனக்குத் தெரியாதா?''

— சி. பன்னீர் செல்வன்.



---

''என்ன காரியம், ரமணி சார்?'' ரங்கனால் கேள்வி கேட்காமல் இருக்க முடியவில்லை.

ரமணி பதில் பேசாமல் கதவைப் பூட்டினான். தன் அறை வாயிலின் முன் மாலு முகமெல்லாம் சிரிப்பாய் நின்று கொண்டிருந்தாள். ரங்கனை அவள் பார்த்த போது, அவனுக்கு அது ஏளனச் சிரிப்பாகப் பட்டது.

ஆட்டோவிலிருந்து இறங்கிய பிறகுதான், ரங்கன், தான் பாரத ஸ்டேட் வங்கியின் முன் நிற்பதை உணர்ந்தான்.

''வா, ரங்கா'' என்றான் ரமணி. இப்போது அவனுடைய குரலில் கடுமை இல்லை.

வங்கி மேலாளர் அறைக்குள் மூவரும் பிரவேசித்தார்கள்.

''வாடா ரமணி... சொன்னபடி ரெண்டு பேரையும் அழைச்சு வந்துட்டே... மிஸ் மாலு, ஐ'ம் சிவா. மானேஜர் ஆஃப் திஸ் பிராஞ்ச். ரமணியின் மாமா பிள்ளை. உன்னைப் பத்தி ரமணி சொல்லியிருக்கான். உட்கார்ப்பா ரங்கா, உட்கார்.''

மாலு சிரித்தாள்.

ரங்கனுக்குத் தலை சுற்றியது. அவன் இந்தச் சிவாவை முன்பின் பார்த்ததில்லை. ஆனால் அவர் அவனைப் பல நாள் பழகியது போல பெயர் சொல்லி அழைக்கிறார்...

''ரங்கா, உட்கார்,'' என்றான் ரமணி.

பயம் எப்போதோ போய் விட்டது. ரங்கன் உட்கார்ந்தான்.

''ரமணி, நீ சொன்னபடியெல்லாம் செய்துடறேன். அதுக்கு முன்னாடி ரங்கனுக்கு என் வாழ்த்தைத் தெரிவிச்சுடறேன்.''

''அதெல்லாம் ஒண்ணும் தேவை இல்லை, சிவா... இந்த லாட்டரி டிக்கெட் மெட்ராஸ்லே இருந்தா அதைப் பெண்டாட்டி, மாமனார் ரெண்டு பேருமாச் சேர்ந்து சுக்கு நூறாக் கிழிச்சுப் போட்டுடுவா. நான் சொன்னபடி, இவன் பேர்ல ஒரு அகௌண்ட்டை ஓபன் பண்ணு. நூத்து ஒண்ணு ரூபாயோட அகௌண்ட் ஆரம்பிக்கட்டும். அப்புறம், இந்த லாட்டரிச் சீட்டு மூலமா வர்ற பணத்தை அதிலே சேர்த்துடு.''

ரங்கன் தான் ஏன் இன்னும் மயங்கி விழவில்லை என்று தன்னையே கேட்டுக் கொண்டான்.

'சே, என்ன மனிதன் அவன்? சுத்தமான பாலில் விஷம் இருக்கிறது என்று ரமணியை எடை போட்டானே?'

''இதிலே ஒரு கையெழுத்துப் போடு, ரங்கன். அப்புறம் கீழே ரெண்டு 'X' மார்க் பென்சில்லே போட்டிருக்கே, அங்கே ரெண்டு கையெழுத்துப் போடு,'' என்றார் மானேஜர்.

ரங்கன் கை நடுங்காமல் கையெழுத்துப் போட்டுக் கொண்டிருக்கையில், ''ரமணி, நான் இன்னிக்கே டிக்கெட்டை ஜெய்ப்பூ

பம்பாய் வி. டி. ஸ்டேஷன் அருகேயுள்ள நியூ எக்ஸல்ஸியர், நியூ எம்பயர் போன்ற தியேட்டர்களின் வாசலில் கிருஷ்ணன் ஒரு சிறு கூட்டத்தைக் கூட்டி, உயிரோடு சில பாம்புகளையும், தவளையையும் விழுங்கிக் காண்பிக்கிறார்! பிறகு அவற்றை உயிரோடு வெளியே கொணர்ந்தும் காண்பிக்கிறார். இதற்கு வேண்டிய தண்ணீர் பாம்புகளை, இங்கிருந்து சில மைல்கள் தூரத்திலுள்ள 'வாசி'யில் சென்று பிடித்து வருகிறார்! இந்தத் தொழிலில் ஒரு நாளைக்கு ரூ. 100 முதல் 200 வரை கிடைக்கிறது என்கிறார் கிருஷ்ணன்!

— 'ராஜீவி நரசிம்மன்'.



னுக்கு அனுப்பிடறேன். இன்கம்டாக்ஸ் நாப்பது சதவீதம் கழிப்பாங்க. பத்து சதவீதம் ஏஜெண்ட் கமிஷன்னு குறைப்பாங்க. ரங்கன் கணக்கிலே கிட்டத்தட்ட பதிமூணரை லட்சம் வரும். அது வந்தப்புறம் என்ன செய்யணும்னு சொல்லு, அப்படிச் செய்யறேன்!'' என்றார் மானேஜர்.

''பதிமூன்றரை லட்சம்தானா, ரமணி சார்?'' என்றான் ரங்கன்.

ரமணி பதில் கூறாமல் விறைத்துப் பார்த்தான். சிவா, ''ஆமாம் ரங்கா, வருமானவரி, ஏஜெண்ட் கமிஷன்னு நிறையப் போயிடும். ஆனா மீதி இருக்கே! அதுவே பெரிய தொகையாச்சே!'' என்றார்.

''இந்தப் பணத்தை நான் சொல்றபடிதான் நீ முதலீடு செய்யணும், சிவா. உங்க பாங்க்லே பிக்சட் டெபாசிட்டுக்கு என்ன வட்டி கொடுப்பீங்க? பதினோரு சதவீதம். நேஷனல்சேவிங்ஸ், ஐ டி பி ஐ, யூனிட்ட்ரஸ்ட் இதிலெல்லாம் அதிக டிவிடெண்ட் கிடைக்கிறது. அதனாலே...''

''ஒரு நிமிஷம் ரமணி!'' என்ற சிவா, இந்த வருஷம் மார்ச் முப்பத்தொன்றுக்கு முன்னாடி பணம் வந்துடும். அதுக்குச் சொத்து வரி உண்டு. இதை மறந்துடாதே!'' என்றான்.

''நான் எதையும் மறக்கலேடா சிவா. இந்த ரங்கன் அஞ்சாறு வருஷமா மாசம் தவறாம அம்பது நூறுன்னு செலவழிச்சு லாட்டரி டிக்கெட் வாங்கிட்டு வர்றான். இப்ப அதிர்ஷ்ட தேவதை இவனைப் பார்த்துச் சிரிச்சிருக்கா. ஒவ்வொரு சிரிப்பிலும் ஒவ்வொரு அர்த்தம் இருக்கு, இல்லையா? இப்ப தெய்வம் சிரிக்கிற சிரிப்புக்கு என்ன அர்த்தம்னு எனக்கு முழுமையா விளங்கல்லேன்னாலும் அது விபரீதமா இவனைத் தாக்கிடுமோங்கற பயம் எனக்கு இருக்கு. இந்த ரங்கனுக்குப் பணத்து மேலே ஆசை இருக்கிற அளவுக்கு, அதை அனுபவிக்கத் திறமை கிடையாது. ஏன்னா இவனாலே, தன்னிச்சையா எதையும் சிந்திக்க முடியாது. அதனாலதான் நான் இங்கே வந்து இவனுக்காக பிளான் போட வேண்டியிருக்கு.''

''நீ என்ன சொல்றியோ, அப்படிச் செய்யறேன், ரமணி.''

''அப்ப குறிச்சு வைச்சுக்க.''

''சொல்லு.''

''சொத்து வரி எவ்வளவுன்னு தெரியாது. நீ அப்புறமாக் கணக்குப் போட்டு அதைத் தனியா வை. ஏப்ரல் மாசத்திலே யூனிட் ட்ரஸ்ட்டோட ஒரு திட்டம் அமுலுக்கு வரும். அதிலே மூணு லட்சம் போடலாம் மாசா மாசம் மூவாயிரம் இவன் செலவுக்கு வரும். அப்புறம் உன் பாங்க்லே ரெண்டு லட்சம் அஞ்சு வருஷத்துக்குப் போடு. வருஷா வருஷம் வர்ற வட்டியும் அதிலேயே இருந்து வளரட்டும். அஞ்சு வருஷத்துக்கு அப்புறம் மூணே முக்கால் லட்சத்துக்கும் அதிகமா வரும். அஞ்சு லட்சமாச்சா? பாக்கியை நேஷனல் சேவிங்சில் போடு.''

''ஜாயின்ட் அகௌண்ட் இல்லையே?'' என்று கேட்டார் சிவா.

''இல்லை. எல்லாம் இவன் பெயரில். விலாசம், ரங்கன், கேர் ஆஃப் ரமணி, என் வீட்டு விலாசம்தான் உனக்குத் தெரியுமே...?''

''ஓகே... என்ன சாப்பிடறீங்க?''

''எல்லோருக்கும் ஜில்லுன்னு கொண்டு வரச் சொல்லு,'' என்ற ரமணி, ரங்கன் பக்கம் திரும்பி, ''உன் பரிசுப் பணம் இங்கே பத்திரமா இருக்கும். டெபாசிட் ரசீது, அப்புறம் நேஷனல் சேவிங்ஸ் பத்திரம் எல்லாம் இந்த பாங்க் லாக்கர்லே இருக்கும். லாக்கர் அகௌண்ட் மட்டும் நம்ப ரெண்டு பேர் பேர்லேயும் இருக்கும். சாவி என்கிட்டதான்! பயப்படாதே, உன் கையெழுத்து இல்லாம யாராலும் பணத்தைத் தொட முடியாது!''

அங்கேயே அவன் கால்முன் சாஷ்டாங்கமாய் விழுந்து ரமணியின் கால்களைத் தன் கண்ணீரால் கழுவ வேண்டும் என்று தோன்றியது ரங்கனுக்கு. ஆனால் இடம் சரியாக இல்லை.

தன்னையும் மீறி, ''தனத்துக்கு?'' என்ற அவன், ''அவ கேட்டால் என்ன சொல்றது?'' என்றான்.

''பளாரென்று கன்னத்தில் அறை! பணம் வந்தால் கூடவே பலமும் வந்துடும்!'' என்றான் ரமணி.

(தொடரும்)

# விரிசல்

நண்பர் வீட்டில் விருந்து முடிந்து, நாராயணன் வீடு வந்து சேர்ந்தபோது இரவு மணி பத்து ஆகிவிட்டிருந்தது. விசாலத்தை எழுப்ப மனம் இன்றித் தம்மிடமிருந்த மாற்றுச் சாவியால் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனார். ஒரு தம்ளர் தண்ணீரைக் குடித்துவிட்டு, படுக்கை அறைக்குள் சப்தம் எழுப்பாமல் நுழைந்தார். மங்கலான ஜீரோ வாட் வெளிச்சத்தில் விசாலம் படுத்திருந்த கோலம் வழக்கத்துக்கு விரோதமானதாக இருந்தது. மல்லாந்து படுத்துக் கொண்டு, இரு கைகளையும் தலைக்கு மேல் அகலமாக விரித்து வைத்துக் கொண்டிருந்தாள்.

''விசாலம்!'' மெல்லிய குரலில் அழைத்தபடி விளக்கைப் போட்டார்.

''ஓ! நீங்க வந்தாச்சா?'' என்று பொட்டுத் தூக்கக் கலக்கம் கூடத் தென்படாமல் சொன்ன விசாலத்தை வெளிச்சத்தில் பார்த்ததும் நாராயணனுக்கு மேலும் அதிர்ச்சி.

கை விரல்களில் தவில்காரர் அணிவது போல் பச்சைத் தொப்பிகள். உள்ளங்கைகளிலும் மருதாணி வட்டங்கள். இது போதாதென்று கால்களில் வேறு மருதாணி இட்டுக் கொண்டு... இது என்ன கணுக்காலில் பளபள வென்று...! புத்தம்புது வெள்ளிக் கொலுசு!

நாராயணனுக்குச் சிரிப்பு வந்தது. ''இதென்ன மருதாணி, கொலுசு...!'' என்று சிரிப்பை அடக்கிக் கொண்டு 'சீரியஸாக'க் கேட்டார்.

''நாளை மறுநாள் என் பிள்ளைக்குக் கல்யாணம் இல்லையா? கல்யாணத்துக்கு மங்களகரமா மருதாணி இட்டுக்கணும். அது தான் சாஸ்திரம்'' என்றாள் விசாலம்.

நாராயணனுக்கு அவளுடைய வயசுக்கு மீறிய ஆசை பைத்தியக்காரத்தனமாகப் பட்டது. நாளை குழந்தைகள் அவளைப் பார்த்தால் எப்படியெல்லாம் கேலி செய்வார்கள் என்று நினைத்தால் வேதனையாக இருந்தது. விசாலமோ 'சஹானா' ராகத்தை முணுமுணுத்தபடி விட்டத்தைப் பார்த்துப் படுத்திருந்தாள்.

தம்மையும் அறியாமல் ''சபாஷ்!' போட்டார் நாராயணன்.

''ஏன்னா! பாட்டு நன்னாயிருக்கா?''

''உன்னையே நீ வருத்திண்டு, உடம்பு, கை, கால்களை அசைக்க முடியாத நிலையிலும் நன்னாவே பாடறே விசாலம். அதுக்குத்தான் சபாஷ்.''

''நான் பாடினது ஸஹானாதான்னு கண்டுபிடிச்சேளே, அதுக்கு உங்களுக்குத் தான் சபாஷ் போடணும்.''

''ஆமாம், இப்ப என்ன; அர்த்த ராத்திரியில் ஸஹானா சாதகம்...?''

''நான் ஒரு பாட்டு போட்டிருக்கேன்னா... நம்ம பிள்ளை கல்யாணத்துல பாட...''

''ஐயோ! எதுக்குப் புதுப் பாட்டெல்லாம்? நீதான் எனக்கு நினைவு தெரிஞ்ச நாள்லேருந்து 'பாலாலே காலலம்பி...'ன்னு கிறல் விழுந்த கிராமபோன் பிளேட் மாதிரி பாடுவியே!''

''அது சாதாரண கல்யாணத்துக்கு. இது ஸ்பெஷல் கல்யாணம் இல்லையா? பாலாஜி எனக்கு ஸ்பெஷல் பிள்ளை இல்லையா?'' என்று மீண்டும் ஸஹானாவை இழுக்க ஆரம்பித்தாள் விசாலம்.

''ஆமாமாம்! இப்ப நீ தூங்கு!'' என்று சொல்லிவிட்டு மறுபுறம் திரும்பிப் படுத்துத் தூங்கிவிட்டார் நாராயணன்.

விசாலம் ரொம்ப நேரம் தூங்காமல் வார்த்தைகளைப் பார்த்துப் பார்த்துச் சேர்த்துக் கவிதை இயற்றிக் கொண்டிருந்தாள்.

விசாலம் கல்யாணம் ஆகி வந்த பொழுது சின்னப் பெண். பெரிய குடும்பத்தில் கடைசி மருமகள். மருண்டு மருண்டு நிற்பாள். நாராயணனின் அண்ணா குழந்தைகள் விசாலத்துக்கு மூன்று நான்கு வயதே சிறியவர்கள். அதனால் அந்தக் குழந்தைகளின் தோழமை விசாலத்துக்குப் புக்ககத்தில் நிறைய தெம்பைக் கொடுத்தது. அவர்களும் 'சித்தி சித்தி' என்று இவளிடம் ஒட்டிக் கொண்டார்கள்.

பெரியவர்களெல்லாம் தூங்கும் போது, விசாலம் வந்து மச்சினர் பெண்ணுடன் ஸ்கிப்பிங் ஆடுவாள்; மச்சினர் பிள்ளையுடன் காரம் ஆடுவாள்.

''விசாலம்! நீ கல்யாணம் ஆன பொண்ணு! குழந்தைகளுக்குச் சமமாகத் 'தொம் தொம்'முன்னு குதிச்சு விளையாடாதே! அம்மாவுக்குப் பிடிக்காது'' என்று ஓர்ப்படி கிசுகிசுப்பாள். விசாலத்துக்குச் சப்தநாடியும் ஒடுங்கிப் போகும். ஆனால் சீக்கிரமே அந்தக் கண்டிப்பு மனசிலிருந்து விலகி விளையாட்டு ஞாபகம் வந்துவிடும்.

ஒரு நாள் யாருக்கோ உடம்பு சரியில்லை. ''விசாலம்! முன்னறையிலிருந்து தர்மாமீட்டர் கொண்டு வா!'' என்று மாமியார் அவளை அனுப்பினார். முன்னறையில் மச்சினர் குழந்தைகள் இருவரும் 'செஸ்' ஆடிக் கொண்டிருந்தார்கள். விசாலத்துக்கு எல்லாவற்றிலும் ஆர்வம் அதிகம். தர்மாமீட்டர் எடுக்கப் போனவள் ஆட்டத்தில் லயித்து விட்டாள். மச்சினர் பெண் செல்லு ஒரு தவறான 'மூவ்' செய்ததும் பதறிப்

ராமப்ரியா

போய், தர்மாமீட்டர் இருப்பதை மறந்து, கையை ஓர் உதறு உதறினாள் விசாலம். தர்மாமீட்டர் விழுந்து நொறுங்கிவிட்டது!

விசாலத்துக்குப் பயத்தில் ஜுரம் வரும் போல் ஆகிவிட்டது. ''ஐயையோ! அம்மா திட்டுவார்களே! நான் என்ன செய் வேன்?'' என்று அழுதுவிட்டாள். அவ ளுக்கு மூன்றே வயது இளையவனான பாலாஜி, ஆட்டத்தைப் பாதியில் விட்டு விட்டு எழுந்தான். கீழே விழுந்த தர்மாமீட் டரின் ஒரு துண்டைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு விசாலத்தையும் கறகறவென்று இழுத்துக் கொண்டு தன் பாட்டியிடம் போனான்.

''பாட்டி! இந்தத் தர்மாமீட்டர் உடைஞ் சது சித்தியாலதான்! செல்லுவும் நானும் செஸ் விளையாடிண்டு இருந்தோமா...? அப்ப சித்தி வந்து செல்லுவுக்கு 'சப்போர்ட்' பண்ணினா. எனக்கு ரொம்பக் கோபம் வந்து, சித்தி கையிலேயே ஒரு போடு போட் டேனா, தர்மாமீட்டர் கீழே விழுந்து உடைஞ் சுடுத்து,'' என்று கம்பீரமாகப் பொய் சொல்லி விசாலத்தைக் காப்பாற்றி விட் டான்.

''குழந்தைகள் விளையாடற இடத்துல உனக்கென்ன வேலை...!'' என்று மாமியார் இலேசாக அதட்ட, ''அவளும் குழந்தை தானே, கிழவியில்லையே!'' என்று மச்சி னர் பரிந்து கொண்டு பேசி, அந்த தர்மா மீட்டர் உடைந்து போனது மறக்கப்பட்டது.

இதைப் போல் எத்தனையோ சம்பவங் கள் அந்தக் குழந்தைகளிடையே பந்தத்தை வளர்த்து வலுப்படுத்தின. அவரவர்களுப் வளர்ந்து, தனித்தனியே குடும்பம் நடத்த ஆரம்பித்த பின்னரும், ஏதாவது விசேஷம், கல்யாணம், கார்த்திகை என்றால் ஒருவர் பாக்கி இல்லாமல் ஒன்று சேர்வார்கள். பழைய கதைகளைப் பேசிப் பேசி மகிழ் வார்கள். அன்னியோன்னியம், பற்று, பாசம் வளர்ந்தே வந்தது. சகோதரர்களின் குழந்தைகளிடையே உள்ள ஒற்றுமையைப் பார்த்துத் திருஷ்டி போட்டு விடுவார்களோ என்று விசாலத்தின் பேதை உள்ளம் பயப் படுவது கூட உண்டு.

பாலாஜிக்கு அறுபதாம் கல்யாணம்! தான் பார்த்து வளர்ந்த பிள்ளை; வளர்த்த பிள்ளை. விசாலம் மட்டற்ற மகிழ்ச்சியில் பூரித்துப் போயிருந்தாள். தான் பெற்ற பிள்ளைக்கு இந்த விழா வர இன்னும் இரு பது ஆண்டுகள் ஆகும். அதுவரை தான் இருப்பது நிச்சயமில்லை. எனவே தன் பிள் ளைக்குச் செய்ய ஆசைப்பட்டதையெல்லாம் பாலாஜிக்குச் செய்து பார்க்கத் துடித்தாள்.





நரகர் (பெண்ணின் தந்தையிடம்): மாப்பிள்ளைப் பையனுக்கு எந்தக் கெட்ட பழக்கமும் கிடையாது. வேலை உண்டு லஞ்சம் உண்டுன்னு இருப்பார்!

— எஸ். முகம்மது யூசுப்.

முதலில் மருதாணி இட்டுக்கொண்டு, காலுக்குப் புது கொலுசு வாங்கிப் போட்டுக்கொண்டு, தன்னை அலங்கரித்துக் கொண்டாள். ஸஹானாவில் பாலாஜிக்கென்றே பாட்டு இயற்றினாள்.

மறுநாள் காலை காப்பியுடன் வந்த விசாலத்தின் கைகளைப் பார்த்தார், நாராயணன். செக்கச் சிவக்க மருதோன்றி பற்றிக் கொண்டிருந்தது. ''எப்படி இருக்கிறது?'' — கண்களை விரித்துக் கொண்டு கேட்டாள்.

''நன்னாத்தான் இருக்கு — ஆனால், நீ ஏன் இப்படி தேவைக்கதிகமா அலட்டிக்கறேன்னுதான் புரியலை...''

''பாலாஜி நம்ம பிள்ளை! நாம் பெற்ற குழந்தைகள் எங்கெங்கேயோ இருக்கும் போது அவன்தானே பிள்ளைக்குப் பிள்ளையாய் நம்மைப் பார்த்துக் கொள்கிறான்? அவன் கல்யாணத்தின்போது நான் ரொம்பச் சின்னவளாக இருந்தேன். பெரியவர்கள் சொல்வதைச் செய்யும் எடுபிடியாக இருந்தேன். இப்போது நான்தான் இருப்பவர்களிலேயே பெரியவள். அவன் அறுபதாம் கல்யாணத்திலே சிறியவர்களை வேலை வாங்கி என் இஷ்டப்படி செய்யப் போகிறேன். ஒரு கவிதைகூட எழுதி இருக்கிறேன். இப்போது சொல்ல மாட்டேன். அன்றைக்கு எல்லாரும் மூக்கின் மேல் விரலை வைக்கப் போகிறார்கள்!'' என்றாள் மிதமிஞ்சிய சந்தோஷத்தில்!

பாலாஜியின் அறுபதாம் கல்யாண நாள். விசாலம் எல்லாவற்றையும் இழுத்துப் போட்டுக் கொண்டு ஓடி ஓடிச் செய்தாள். லாலி பாடினாள். சீதா கல்யாணம் பாடினாள். கன்னூஞ்சல் பாடினாள். நாதஸ்வரம் வாசிக்கிறவர்களுக்கும் குஷி பிறந்துவிட்டது. ஊஞ்சல் பாட்டை விசாலம் பாடி நிறுத்தியவுடன் அதே அடியை அவள் மாதிரியே திருப்பி நாதஸ்வரத்தில் வாசிக்க ஒரே அமர்க்களம். ஆனந்தம்.

மாங்கல்யதாரணம் முடிந்தது. கூட்டத்தினரைப் பார்த்துச் சற்று அமைதியாக இருக்கும்படி கையை அமர்த்தினாள். மந்திரத்தில் கட்டுப்பட்ட மாதிரி அனைவரும் அமைதியானார்கள்.

விசாலம் ஸஹானாவில் கணீரென்று, தான் இயற்றிய பாட்டைப் பாடினாள். ஆதி நாளில் தன்னோடு விளையாடியவன் இன்று பெரிய அந்தஸ்துடன் இருப்பது வரை கோவையாகச் சொல்லிப் பாடினாள். ஒரே கரகோஷம்.

விசாலத்துக்குக் கல்யாண அலுப்பு தீர இரண்டு நாட்களாயின. போனில் பாலாஜியைக் கூப்பிட்டாள். ''எப்படி கல்யாணமெல்லாம்!'' என்று மகிழ்ச்சி ததும்பக் கேட்டாள். ''நீ முன்னே நின்று நடத்தும் போது எப்படி இருக்க முடியும்?'' என்றான் பாலாஜி. விசாலத்துக்கு ஜிவ்வென்று உடம்பெல்லாம் குதூகலம் பொங்கி வழிந்தது.

''நான் என்னத்தைச் செய்து விட்டேன்! உன் குழந்தைகள் உன் கூடப் பிறந்தவர்கள் ஜமாய்த்தார்கள். நான் பார்த்து மகிழ்ந்து ஏதோ ஒரு கவிதை பாடினேன். அது உனக்குப் பிடித்ததோ?'' என்றாள் மிக ஆவலுடன்.

''கவிதையா சித்தி? எல்லாரும் நன்றாக இருந்ததென்றுதான் சொன்னார்கள். யார் சித்தி எழுதிக் கொடுத்தா?'' என்றான் குரலில் யாதொரு சலனமும் இல்லாமல்.

விசாலத்துக்கு இதயம் ஒரு வினாடி நின்று இயங்கியது. ''என்ன பாலாஜி! இப்படி ஒரு சந்தேகமா? நான்தான் எழுதினேன்...''

''என் சித்தியின் அன்பு, பாசம், சாமர்த்தியம் எல்லாம் தெரியும். ஆனால் நீ கவிதை எழுதும் திறமை படைத்தவள் என்பதை நான் நம்பத் தயாராக இல்லை,'' என்றான். குரலில் சூடு வைக்க ஆரம்பித்தது.

''பாலாஜி! நீ என்னை ரொம்ப இன்ஸல்ட் பண்ணிவிட்டாய். கையில் மருதாணியுடன் ராத்திரி பூரா யோசிச்சு யோசிச்சு வார்த்தைகளைக் கோத்துக் கோத்துச் செய்ய எத்தனை சிரமப்பட்டிருப்பேன் தெரியுமா? நம்ம சின்ன வயசிலே அடித்த கொட்டமெல்லாம் எழுதியிருக்கிறேனே? என்னைத் தவிர வேறு யாருக்குத் தெரியும், அதெல்லாம்?'' விசாலத்தின் குரல் சுருதி ஏறியது.

பாலாஜிக்கும் சூடேறியது.

''இல்லை, இல்லை! உனக்குக் கவிதை எழுதத் தகுதியும் திறமையும் போதவே போதாது! உன்னை மதிக்கிறேன். உன்னைத் தாயாக, சகோதரியாக நேசிக்கிறேன். ஆனால் இன்னமும் அந்தக் கவிதை நீ எழுதியது என்பதை நம்ப மாட்டேன்!'' என்றான் ஒரே அடாவடித்தனமாக.

விசாலத்துக்கு இத்தனை பாடுபட்டதும் ஒரு வினாடியில் சுண்ணாம்பு தெளித்த மாதிரி ஆகிவிட்டது. இத்தனை வருடம் தான் குடும்பம் ஒன்றாக இருக்கப் பாடுபட்டதெல்லாம் வீண் என்று தோன்றியது. வெறுப்புடன் போனை வைத்துவிட்டுப் படுக்கையில் படுத்துக் கொண்டாள். கடைக் கண்ணில் வழிந்த நீர் கன்னம் வழியே கீழிறங்கித் தலையணையை நனைத்தது.

# தொடரும் பட்டியல்கள்

சுப்ர பாரதிமணியன்

சிவராமனின் சைக்கிள் சாமிமேட்டிலிருந்து வேகமாய் இறங்கி வீட்டின் முன் நின்றபோது அப்பாவும், சண்முகமும் எங்கோ போய்விட்டு வந்து ஆசுவாசப் படுத்திக் கொள்வது தெரிந்தது. அம்மாவும், அக்காவும் ரொம்பவும் சந்தோஷத்துடன் எதையோ எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்கள் போல் அவர்களின் முகங்களைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

''என்ன மாப்பிளே! அரை மணி நேரத்துக்கு முந்தி வந்திருக்கலாமில்லையா? எம்.எல்.ஏ.வை ஒரு முகம் பார்த்திருக்கலாம்,'' என்றார் சண்முகம்.

''காலையிலே எட்டு மணிக்குப் போனா ராத்திரி ஒம்பது பத்துன்னு ஆகுது... அவன் பொழப்பு அப்படி...''. அம்மா வருத்தப் பட்டுக் கொண்டு தண்ணீர் கிளாஸை நீட்டினாள்.

''இனி சிவராமனுக்குக் கஷ்டம்னு ஒண்ணுமிருக்காது. இனிதான் அரசாங்க



உத்தியோகஸ்தன் ஆகப் போறானே...?'' —

சிவராமன் பரபரப்படைந்தான். என்ன நடந்திருக்கும் என்று அறிந்து கொள்ளும் ஆசை சட்டென்று அவனை ஆக்கிரமித்துக் கொண்டது.

''அப்பா... எம். எல். ஏ. என்ன சொன்னார்?''

''கண்டிப்பா ஆர்டர் வந்திடும்னார். பணமும் மொத்தமாக் குடுத்தாச்சு... அவர் கையிலேயே குடுத்தாச்சு... இனி கவலையில்லை.''

''அப்பா மிச்சப் பணத்துக்கு என்ன பண்ணினீங்க?''

''என்னவோ பண்ணினோம்...''

''சொல்லுங்க...?''

''இருக்கிற வீட்டை அடமானம் வெச்சோம்...''

சிவராமனுக்கு வருத்தமாயிருந்தது. தனக்காக வீட்டை அடமானம் வைத்துப் பணம் பெற்றிருக்கிறார்கள் என்பது சற்று வேதனையளித்தது.

''சட்டுன்னு அடமானம் வெச்சிட்டீங்களேப்பா... மீட்கறதுங்கறது சாமான்யமா?''

''உனக்கு அரசாங்க உத்தியோகம் கிடைச்சுட்டா அது போதும்.''

சிவராமன் பட்டப்படிப்பை முடித்து ஐந்து வருடங்கள் ஆகிவிட்டன. வேலை கிடைக்கவில்லை. பனியன் கம்பெனியில் கணக்குப் பிள்ளை என்ற பெயரில் அவனுக்கு ஐந்நூறு ரூபாய் வருமானம் வந்து கொண்டிருந்தது. பன்னிரண்டு மணி நேர உழைப்பைத் தரவேண்டியிருந்தது. மூன்று வருடங்களில் அதில் சேமித்து வைத்ததில் பத்தாயிரம் இருந்தது. அக்காவின் திருமணத்திற்கு அது இருக்கட்டுமே என்பது அவனின் மனத்தில் இருந்தது.

அரசாங்கவேலைக்கும்முயன்றுகொண்டுதான் இருந்தான். சமீபத்தில் ஓர் எழுத்துத் தேர்வில் பாஸாகி இண்டர்வியூ கார்டு வந்திருந்தது. அவன் அப்பா அவனின் சேமிப்புப் பணத்தை வேலைக்கான லஞ்சமாகக் கொடுத்து இந்த வேலையைப் பெற்று விடுவது என்ற உறுதியில் இருந்தார். சண்முகத்திற்கு ஆளும் கட்சி நபர்களுடன் தொடர்பிருந்தது, எம். எல். ஏ.யைப் பார்க்க முயன்று ஒரு வாரத்துக்குப் பின் சந்தித்தார்கள். குறைந்தது இருபதாயிரம் கொடுத்தால் முடித்துவிடலாம் என்றார். மீதி பத்தாயிரத்துக்கு வீட்டை அடமானம் வைத்துக் கொடுத்து விடலாம் என்று முடிவு செய்தார்.

''சிவராமன்... எம். எல். ஏ. கூட பையனைக் கூட்டிட்டு வரலியான்னார்.''

''போகணுமா?''

''பரவாயில்லை. முடிச்சிடறேன். ஒரு மாசத்திலே ஆர்டர் வரும்னார்.''

''மாமா... எம். எல். ஏ. இன்னிக்கு நல்ல மூட்லே இருந்தார்னு நினைக்கிறேன். உக்காரச் சொன்னார். எவ்வளவு நிதானமாப் பேசினார். வர்றப்போ கொஞ்சம் தீர்த்தம் சாப்பிட்டுட்டுப் போங்கோன்னு பாட்டிலைக் காட்டினாரே கவனிச்சீங்களா...?'' என்றார் சண்முகம்.

''ஆமா...''

''அப்பவிருந்து எனக்கு வாய் நமநமங்குது... போயிட்டு வந்துடலாம் வாங்க... சாவடிக் கடைக்குப் போயிரலாம்...''

இருவரும்எழுந்தார்கள். அம்மா, ''கொஞ்சம் சீக்கிரம் வந்துருங்க!'' என்றாள். அக்காவும், அம்மாவும் அவனருகில் வந்தார்கள். பிரகாசத்துடன் அவனைப் பார்த்தார்கள். சிவராமனுக்குச் சந்தோஷமாயிருந்தது. வேலைகிடைத்துவிட்டால் அப்பாவையும், அம்மாவையும், அக்காவையும் அவனுக்கு வேலை கிடைக்கிற ஊருக்கு அழைத்துப் போய்விட வேண்டும். அடமானம் வைத்த வீட்டை மீட்கணும். அக்காவுக்குக் கல்யாணம். அப்பா அம்மாவைக் கஷ்டப்படாமல் வைத்திருக்கணும். ஐந்து வருஷக் கவலையை இந்த ராத்திரி எவ்வளவு வேகமாய் அடித்துக் கொண்டு போய்விட்டது என்றிருந்தது. இன்றைக்கு ராத்திரி தூக்கம் வராது என்பதைத் திரும்பத் திரும்ப நினைத்துக் கொண்டான்.

எப்படித் தூங்கினான் என்பது தெரியவில்லை. எதை எதையோ நினைத்துக் கொண்டே தூங்கி விட்டோம் என்றிருந்தது. அவனை உலுக்குவது யார் என்று பார்த்தான். அம்மாதான்.

''என்னம்மா...?''

''உங்கப்பனைப் பாருடா...'' — அம்மா அழ ஆரம்பித்து விட்டாள். அப்பா மார்பைப் பிடித்துக் கொண்டிருந்தவர், ''மீனாட்சி... கண்ணு மசமசன்னு இருக்கு... உன்னோட உருவம் கூடத் தெரியல்லே... சிவராமா எங்கிருக்கே...?'' என்றார் அழுகிற குரலில். அம்மா மார்பில் கைகளை அறைந்து அழ ஆரம்பித்தாள்.

''அப்பா என்னைப் பாருங்கப்பா... எதுக்கத்தான் இருக்கேன்...''

''தெரியலைடா... ஒண்ணும் தெரியலை... மகனே... என்னாச்சுடா?''

மார்பைப் பிடித்துக் கொண்டவர் சுருண்டு விழுந்து கால்களை விசிறிக் கொண்டு அலறினார்.

'அய்யோ' என்று அலறியபடியே சிவராமன் இரண்டு வீடுகள் தள்ளியிருந்த சண்முகம்வீட்டிற்கு ஓடினான். சண்முகம்வீட்டுக் கதவு திறந்திருக்க அவரைத் தூக்கியபடி வாசலுக்கு வந்தனர்.

''வண்டி ஏதாச்சும் புடிங்க... மொதல்ல ஆஸ்பத்திரி போகணும்...''

''என்னாச்சு...?''

''மார் வலிக்குதுன்னார். கண்ணு தெரிய மாட்டேங்குதுங்கறார்...''

அவன் வீட்டிற்குத் திரும்பி வரும்போது

செல்லையா வீட்டிலும் அழுகுரல் கேட்டது... அப்பா இயக்கத்துடன் இருக்கிறாரா என்று கண்டு கொள்ள முடியவில்லை. அம்மாவும், அக்காவும் அழுது கொண்டிருந்தார்கள்.

''வண்டி புடிச்சுப் போக நேரமாயிடும். எம். எல். ஏ. வீடு ரெண்டு தெரு தள்ளித் தானே...? அவர் வீட்டிலே, ஏதாச்சும் கெடைக்குமான்னு பாக்கறேன்.. சண்முகம் மாமா கூட அலர்றார்... செல்லையா வூட்லயும்...''

**எம்**. எல். ஏ. வீட்டில், அவனின் குப்பத்தைச் சேர்ந்த கருப்பண்ணன்தான் அப்போது வாட்ச்மேன் டூட்டியில் இருந்தார்.

''என்னாச்சு?''

''எல்லாரும் கண்ணு தெரியலங்கறாங்க... மார் வலிக்குதுங்கறாங்க... சாவடிக் கடைக்குப் போயிட்டு வந்தாங்க...''

''சாராயத்திலே மிஷ்டேக் இருக்கும்.'' — எம். எல். ஏ.யை எழுப்பச் சென்று சோர்ந்து திரும்பி வந்தான் கருப்பண்ணன்.

''நல்லாத் தூங்கறார்...''

''ஜனங்க சுருண்டு சுருண்டு விழுறாங்கன்னு சொன்னியா...?''

''சொன்னேன்...''

''டவுனுக்கு போன் பண்ணி ஆம்புலன்ஸ் வரவழைக்கச் சொன்னியா...?''

''எம். எல். ஏ. காலையில பார்த்துக்கலாம், போடான்னார்...''

''ஜனங்க சாகக் கிடக்கிறாங்கன்னு சொன்னியா?''

''சொன்னேன்ப்பா... எல்லாம் காலையிலே பார்க்கலாம்ங்கறார்...''

''வேறே ஒண்ணும் பண்ண முடியாதா?''

''என்ன பண்றது. உட்கார்ந்து உன்னோட சேர்ந்துக்கிட்டு அழலாம்...''

**அ**வன் திரும்பும்போது குப்பத்தின் பல வீடுகளில் அழுகைச் சப்தம் கேட்டது. எல்லா வீடுகளிலும் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. வண்டிக்காகப் பரபரத்தார்கள். சிவராமன் அவன் அப்பாவை சைக்கிள் கேரியரில் உட்கார வைக்க அவர் துவண்டு சரிந்தார். அம்மா அவரைப் பிடித்துக் கொண்டாள். கிடைத்த மாட்டு வண்டியில் சண்முகமும், இன்னும் பத்துப் பேர்களும் கிடத்தப்பட்டு உள்ளூர் ஆஸ்பத்திரிக்குக் கிளம்பினார்கள். ஆஸ்பத்திரியைச் சேர்வதற்கு முன்னமே சிவராமனின் அப்பாவும், சண்முகமும் இன்னும் சிலரும் உயிரை விட்டிருந்தனர்.

உள்ளூர் ஆஸ்பத்திரியில் இடம் பற்றாமல் போகவே பக்கத்து டவுனுக்குப் பிணங்களை ஏற்றுவது போல் கள்ளச் சாராயம் குடித்துப் பாதிக்கப்பட்டவர்களை, ஆம்புலன்ஸ் ஒன்றில் ஏற்றிச் சென்றார்கள். பாதி வழியில் பலர் சாக, உயிர் பிழைத்த பெரும்பான்மையோர் கண் பார்வை இழந்தனர். பிரச்னை பெரிதாகி, எம். எல். ஏ. வீட்டைக் கல்லெறிந்து, நாசப்படுத்தினர். எம். எல். ஏ. தலைநகருக்குப் போய்விட்டார் — குடும்பத்துடன்.

**தி**னமும் பனியன் கம்பெனியிலிருந்து இரவு பத்து மணிக்கு வீடு திரும்புகையில் சிவராமனின் சைக்கிள் எம். எல். ஏ.யின் வீடுமுன் நிற்பது வழக்கமாகிவிட்டது. எம். எல். ஏ. வீடு எப்போது திறக்கும், அவர் எப்போது காணக் கிடைப்பார் என்று தினமும் எதிர்பார்த்தான். இருபதாயிரத்தைத் திருப்பி வாங்கிவிட்டால் அக்காவின் கல்யாணத்திற்காவது பயன் படும் என்றிருந்தது.

கம்பை ஊன்றிக் கொண்டு வந்த செல்லையா, சிவராமனின் சைக்கிளைத் தொட்டான்.

''யாரது?''

''நான்தான் சிவராமன்...''

''சிவராமனா...? எதுக்கு நிக்கறே...?''

''சும்மாதான்...''

''எம். எல். ஏ. வூட்டு முன்னாலே தினமும் நின்னுட்டுப் போறவங்கன்னு நிறையப் பேர் இருக்காங்க. எப்ப எம். எல். ஏ. வூடு தொறக்கும்... எப்ப பார்க்கலாமுன்னு...''

''ஆமா செல்லையா...''

''உன்னது என்னாச்சு? இருபதாயிரம் போச்சா?''

''உச்...''

''கேட்டுப் பார்த்தியா?''

''மெட்ராஸ் போன வட்டச் செயலாளர் கிட்டே சொல்லி வுட்டேன். எம். எல். ஏ. கிட்டச் சொன்னாராம். காசு குடுத்தவனைக் கூட்டிட்டு வான்னாராம்...''

''செத்துப் போனவங்க திரும்ப வர மாட்டாங்கங்கிற தைரியம்...''

**சை**க்கிள் எம். எல். ஏ. வீட்டைக் கடக்கிற போதெல்லாம் நின்று வெறித்துப் பார்ப்பதைக் கூட சிவராமன் விட்டுவிட்டான். வேறு யாருக்கோ எம். எல். ஏ., வீட்டை விற்றுவிட, அந்த வீட்டிலிருந்து அவ்வப்போது வரும் புதுக் குழந்தைகளின் விளையாட்டுக் கூச்சலை ரசித்துப் புன்னகை புரியவும், மனத்தைத் தேற்றிக் கொண்டான்.

இப்போதெல்லாம் அவனுடைய சைக்கிளின் கேரியரில் அவன் அம்மாவும் உட்கார்ந்து அவனுடன் பனியன் கம்பெனிக்குப் போகிறாள். கூட்டிப் பெருக்கும் வேலையை நாலைந்து கம்பெனிகளில் செய்கிறாள்.

வேலை கிடைத்து விட்டால் அக்காவின் கல்யாணம், அடமானம் வைத்த வீட்டை மீட்பது என்பது அவனின் தாற்காலிக இலட்சியமாக அப்பா சாவதற்கு முன் இருந்தது. தாற்காலிக இலட்சியத்தில் இப்போதும் மாற்றமில்லை அவனுக்கு.



நாற்பத்தைந்து லட்சம் ரூபாய் செலவில் தெலுங்கு, மலையாளம், தமிழ் ஆகிய மொழிகளில் 'டப்' செய்யப்பட்டு வருகிறது ஒரு ஹிந்தி திரைப்படம். தெற்கே பெங்களூர், மைசூர், ஹைதரபாத் ஆகிய இடங்களில் மட்டுமே ஹிந்தி பதிப்பு ஓடியிருப்பதால் தமிழ் வடிவம் அமோக வெற்றி அடையும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

* சல்மான் கான்



* பாக்யஸ்ரீ

**"எ**த்தனை முறை?'' என்று நம்மை யாராவது அணுகிக் கேட்டால், அக் கேள்விக்கு அர்த்தம் விளங்காமல் விழிப்போம். ஆனால் பம்பாய்வாசிகள் இப்படி விழிக்க மாட்டார்கள். ''ஐந்து'', ''பத்து'', ''பதினைந்து'' என்று ஆளுக்கு ஆள் பளிச் சென்று வெவ்வேறு எண்களைப் பதிலாகக் கூறுவார்கள். ''எத்தனை முறை?'' என்பது ''எத்தனை முறை 'மை நே பியார் கியா' திரைப்படத்தைப் பார்த்தாய்?'' என்ற கேள்வியின் சுருக்கமே!

'ஆராதனா', 'பாபி', 'கையாமத்ஸே கையாமத்' போன்ற மாபெரும் வெற்றிப் படங்களின் வரிசையில் இடம்பெறும் இன்னொரு திரைப்படம் 'மை நே பியார் கியா' 'ஆராதனா' சென்னையிலே கூட ஓர் ஆண்

[illegible] மேலாக ஓடியது. ஆராதனா ஹேர் ஸ்டைல், ஆராதனா பொட்டு, ஆராதனா ஸ்லீவ், ஆராதனா கிளிப் என்று ஆராதனா மோகம் எல்லோரையும் ஆட்டிப் படைத்தது. இப்போது மைநே பியார் கியா தொப்பிக்கும், பனியன்களுக்கும் பம்பாயில் எக்கச்சக்க கிராக்கி!

திரும்பத் திரும்பப் பார்க்கும் அளவுக்கு அப் படத்தில் அப்படி என்னதான் இருக்கிறது? இத்தனைக்கும் அரைத்த மாவையே திரும்ப அரைக்கும் கதைதான் – இனிமையான பாடல்களுடன் கூடிய சுபமான காதல் கதை. ஆட்டுக் கல்லில் அரைப்பதற்குப் பதில் நவீன தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி 'கிரைண்டரில்' அரைத்திருக்கிறார்கள் என்று வேண்டுமானால் சொல்லலாம்! படத்தைத் தயாரித்த ராஜ்ஸ்ரீ புரொடக்ஷன் நிறுவனத்தினரை அணுகிப் பேசினோம். அவர்கள் சொன்னார்கள்:

"இராமாயணமும் மகாபாரதமும் தெரிந்த கதைகள்தானென்றாலும் பார்க்கப் பார்க்கத் திகட்டுகிறதா? அதுபோல்தான் காதல் கதையும். எத்தனை முறை பார்த்தாலும் கதையின் அடிப்படை உணர்ச்சிகளோடு ரசிகர்களால் ஒன்ற முடிகிறது. மேலும், வன்முறை வஞ்சம் தீர்த்தல், அரசியல் ஊழல், ஏழைமை, கொலை, கற்பழிப்பு போன்ற 'நெகடிவ்' கதைக் கருக்களையுடைய சினிமாக்களிடையே, இந்த இனிமையான காதல் கதை கடும் வெயிலுக்குப் பின் வரும் பருவக் காற்றைப் போல ரசிகர் மனங்களைக் குளிர்வித்திருக்கிறது.

"வெற்றிக்குக் காரணமான மற்றொரு விஷயம்... இப் படம் இளைஞர்களுக்காக, இளைஞர்களால் நடிக்கப்பட்டு, இளைஞர்களால் உருவாக்கப்பட்டது. இயக்குனர் சூரஜ் பாரஜத்யா இருபத்தோரு வயது இளைஞர். தயாரிப்பாளர் தாராசந்த் பாரஜத்யா தமது பேரன் சூரஜிடம் டைரக்ஷன் பொறுப்பை ஒப்படைத்தபோது, பலர் வியந்தனர்; சிலர் பயந்தனர்! ஆனால் சூரஜ் சின்னச் சின்ன விஷயங்களில் கூட கவனம் செலுத்திப் படத்தின் வெற்றிக்கு அடிகோலியிருக்கிறார்.



* முதலும் கடைசியுமாக...

"கண்டதும் காதல் என்ற வழக்கமான சினிமா யுக்தியிலிருந்து மாறுபட்டு, ஓர் ஆண் – பெண் சினேகம் படிப்படியாக வளர்ந்து நெருக்கமான உறவாக மலர்வதை ஆழமாக, கவனமாகச் சித்திரித்திருக்கிறார் இயக்குனர். வெளிப்புறக் காட்சிகளில் ஊட்டியைப் புதிய கோணத்தில் படம்பிடித்துக் காட்டியிருக்கிறார். படத்திற்கான செட்டிங்குகள் பிஜான் தாஸ் குப்தா என்ற புகழ்பெற்ற கலைஞரின் உதவியுடன் தயாராயின. மொத்தத் தயாரிப்புச் செலவான சுமார் ஒன்றே முக்கால் கோடி ரூபாயில் கணிசமான பகுதி செட்டிங்குகளுக்குச் செலவிடப்பட்டுள்ளது. மலை மீது அமைந்த பாக்யஸ்ரீயின் வீட்டுக்கு மட்டும் பத்து

# இளமைத் திரைப்படத்தின் இமாலய வெற்றி!





காஷ்மீரா பாரீக்

## பலமுறை பார்த்த சிலரது கருத்துக்கள்

**அபர்ணா ஐயர் (பத்தாவது படிக்கும் மாணவி):**

இந்தப் படத்தில் சுவாரஸ்யமான காரெக்டர் ''சூதர் (புறா) தான்! இது சரியான 'சர்ப்ரைஸ் பாக்கெட்'; பாக்யஸ்ரீயின் கடிதத்தைத் தப்புத் தப்பாக ஸல்மான் கானின் அப்பாவிடம் கொடுத்துக் கலாட்டா செய்யப் போகிறது என்று நினைப்போம். அது சமர்த்தாக ஸல்மானிடமே கொடுத்துவிட்டு, பதிலை வேறு வாங்கி வரும்! கடைசியில் ஹீரோவுக்காக உயிரை விடப் போகிறதென்று நினைப்போம்! சாமர்த்தியமாக வில்லனின் கண்ணைக் குத்தி விட்டு, கில்லாடித்தனமாகக் கதையையே மாற்றி விடுகிறது!

**காஷ்மீரா பாரீக் (பி.காம். மாணவி):**

இதில் வரும் அம்மா காரெக்டர்தான் எனக்கு ரொம்பப் பிடித்தது. பிள்ளை தன்னிடம் வந்து, மினி ஸ்கர்ட், பாப் தலை கொண்ட 'செக்ஸி' யான மணப்பெண் வேண்டும் என்று கேட்பதைச் சகஜமாக எடுத்துக்கொண்டு, அதே போல் பெண் பார்த்திருப்பதாக அவனைக் கிண்டல் பண்ணுவதும், அவன் காதலை வாழ்த்துவதும்... நல்ல ஜாலியான மாடர்ன் மம்மி!

நான் ரசித்த மற்றொன்று 'ஐ லவ் யூ' என்ற வார்த்தைகளை பாக்யஸ்ரீயின் வாயிலிருந்து வரவழைக்க ஸல்மான் துடிக்கும் காட்சி! கடைசியில் அந்தாக்ஷரி விளையாடி அவர்கள் காதலைப் பிரகடனப்படுத்துவது புதுமையாகவும் நன்றாகவுமிருக்கிறது!

லட்சம்; ஸல்மான் கானின் அலுவலக அறைக்குச் சில லட்சங்கள் என்று பட்டியல் நீள்கிறது... எல்லாவற்றையும் இளம் இயக்குனர் சூரஜ் பார்த்துப் பார்த்துத் திட்டமிட்டுச் செய்தார்.

“கதாநாயகன் ஸல்மான் கானுக்கு 24 வயதுதான்! சூரஜின் நம்பிக்கை நட்சத்திரம் இவர். டிரைவரைக் கூட 'ஜீ' போட்டு அழைக்கும் அளவுக்கு நிஜ வாழ்வில் பந்தா இல்லாதவர். இவர் 'பீவி ஹோ தோ ஐஸா' என்ற படத்தில் அறிமுகமானார். அப் படம் படு தோல்வியடைந்ததால் சூரஜ்ஜின் பிரும்மாண்ட தயாரிப்பில் வேடம் ஏற்கத் தயங்கினார். ஆனால் சூரஜுக்கு அவரிடம் நம்பிக்கை இருந்ததால் வலியுறுத்தி நடிக்கச் செய்து விட்டார். ஒப்புக் கொண்ட பிறகு பொறுப்பை ரொம்ப 'சீரியஸா'க எடுத்துக் கொண்டு விட்டார் ஸல்மான். மலை மேலிருந்து குதித்து வில்லன்களுடன் சண்டை போடும் காட்சியைக் கூட 'டூப்' போடாமல் தாமே நடித்து விட்டார்.

''சல்மானை ஒப்பந்தம் செய்வதை விட, கதாநாயகியாக பாக்யஸ்ரீயை ஒப்பந்தம் செய்வதுதான் பெரும்பாடாய் இருந்தது. அமோல் பலேக்கர் தயாரித்த டெலிவிஷன் தொடரில் குழந்தை நட்சத்திரமாக இவர் தோன்றியிருந்தும் இந்தப் படத்தில் நடிக்க மிகவும் தயங்கினார். போதாக்குறைக்கு அரச பரம்பரையைச் சேர்ந்த இவருடைய குடும்பத்தினர் — முக்கியமாகப் பாட்டி — இவர் சினிமாவில் நடிப்பதைக் கடுமையாக எதிர்த்தனர். ஆனால் சூரஜ் கதையை அவரிடம் விவரித்த போது அதில் லயித்துப் போய்த் தன் நினைவேயின்றி நடிக்க ஒப்புக் கொண்டு விட்டார் பாக்யா!

''இதற்கு ஒரு ஸ்பெஷல் காரணமும் இருந்தது: பதினெட்டே வயது நிரம்பிய பாக்யாவின் நெஞ்சில் காதல் பூத்திருந்தது. மூன்றாம் வகுப்பிலிருந்தே தம்முடன் சேர்ந்து படித்த சக மாணவரிடம் மனத்தைப் பறிகொடுத்திருந்தார். எனவே படத்திலும் காதல், வெட்கம், ஏக்கம் ஆகிய எல்லாவற்றையும் தத்ரூபமாகக் காட்ட அவரால் முடிந்தது.

''எதிர்ப்புக்களை வென்று, காதலனை மணந்து, ஓர் ஆண் குழந்தைக்கும் தாயாகி விட்ட பாக்யஸ்ரீ, பிறகு நடிப்புக்கே முழுக்



சென்னை மாநகரில் சுமார் 25 கி. மீ. வட்டாரத்தில் 800,000 மக்கள் கிட்டத்தட்ட 855,000 சிகரெட்டுகளை ஒவ்வொரு நாளும் புகைக்கிறார்கள். அதாவது ஒரு கண் சிமிட்டும் நேரத்திற்கு 150 சிகரெட்டுகள் புகைக்கப்படுகின்றன. ஒரு நாளைக்கு இவர்கள் ஊதித் தள்ளும் சிகரெட்டின் மதிப்பு ரூ. 35 லட்சம்! ஒரே ஒரு நாள் மட்டும் இவர்கள் புகைக்கும் வழக்கத்தை நிறுத்தினால், அந்தப் பணத்தைக் கொண்டு 45,000 ஏழைக் குழந்தைகளுக்குத் தலா அரை லிட்டர் பால் தினசரி, ஒரு மாத காலத்துக்கு வழங்க முடியும் அல்லது தமிழகம் முழுவதும் உள்ள ஏழைப் பள்ளிச் சிறுவர்களுக்கு ஒரு வேளை இலவச உணவு அளிக்கலாம்!

நன்றி: பிசினஸ் இண்டியா.

தகவல்: கிருஷ்ணவேணி ரங்கநாதன்.





**ராஜன். கே. (இஞ்சினியரிங் மாணவன்):**

பாக்யஸ்ரீக்காகவே இந்தப் படத்தை ஏழு முறை பார்த்தேன். சினிமா ஃபார்முலா படி பணக்கார ஹீரோயின்தான் ஏழை ஹீரோவைக் காதலித்து அவனைப் பண வெறியனாக்க வேண்டும்; இதில் மாறுதலுக்கு, ஹீரோ பணக்காரன், காதலி ஏழை. ஹீரோ உழைத்துச் சம்பாதித்துக் காதலியை அடைய வேண்டுமென்ற குறிக்கோளுடன் லாரி டிரைவராக மாறுவது மனசுக்கு இதமளிக்கிறது. தான் உழைத்த காசில், பணக்கார அப்பாவுக்கு 'டீ' வாங்கித் தருவதும், 'இந்தா உன் காரின் சாவி' என்று அவர் சுக வாழ்க்கைக்கு அழைக்க, 'என்னிடம் வேறு சாவி இருக்கிறது அப்பா' என்று அவன் அவரிடம் லாரியின் சாவியைக் காட்டுவதும்... மறக்க முடியாத காட்சி!

**சுனில் பராஷர் (பாங்க் ஆபீசர்):**

இப்போதெல்லாம் பெண்கள் வெட்கப்படுவதே அபூர்வமாகி விட்டது! இதில் பாக்யஸ்ரீ அழகாக வெட்கப்படுகிறார். காதலியின் தந்தை அலோக்நாத் வைத்த கெடுவின்படி, கடைசி நாளன்று, தான் உழைத்துச் சேமித்த பணத்துடன் ஸல்மான் கான் வருகிறார். வழியில் வில்லனின் ஆட்கள் அடித்து உதைக்க, பணமெல்லாம் சேறிலும் தண்ணீரிலும் விழ, அதைக் கஷ்டப்பட்டுப் பொறுக்கி எடுத்து வந்து அலோக்நாத்திடம் கொடுக்க, அவர் அதை உதாசீனப்படுத்துகிறார். நமக்கே கோபம் வரும் போது, ஸல்மான்கான் பரிதாபமாக மீண்டும் ஒரு சந்தர்ப்பம் கேட்டு மன்றாடுவதும், அதுவரை பொறுமையாயிருந்த பாக்யஸ்ரீ கண்ணீருடன் பொங்கி எழுவதும்... அப்பப்பா...

லக்ஷ்மிகாந்த் பெட்டேவின் காமெடியும் மிதமாக இதமாக இருந்தது.

...குப் போட்டு விட்டார் என்று கேள்விப் பட்டிருப்பீர்கள். மைனே பியார் கியாதான் பாக்யாவின் முதலும் முடிவுமான படம் என்பதால் அவரைத் திரையில் பார்க்கும் ஆவலில் ரசிகர்கள் இப் படத்துக்கு மீண்டும் மீண்டும் படையெடுக்கிறார்கள்.

"**நா**ன்கு டிராக் ஸ்டீரியோஃபோனிக் ஸிஸ்டத்தில் ஒலிப்பதிவு செய்துள்ளதால் இப் படத்தின் எளிமையான வசனங்களும், தேனொழுகும் இசையும் 'கும்' மென்று செவி புகுந்து நெஞ்சை நிரப்புகின்றன. படத்தின் வெற்றிக்குப் பெரும்பகுதி காரணம் சிறந்த ஒலிப்பதிவு என்று சொல்லலாம்.

"லதா மங்கேஷ்கர் ராஜஸ்ரீ புரொடக்ஷன்ஸுக்கு சுமார் பதினைந்து வருட கால இடைவெளிக்குப் பிறகு பாடியிருக்கிறார். ஒன்பது இனிய பாடல்களுள் நான்கினை ஒரே நாளில் ஒலிப்பதிவு செய்து கொடுத்து விட்டார். பீஹார் பாடகி சாரதா ஸின்ஹாவும், தமிழகத்து எஸ். பி. பி.யும் கூட 'ஹிட்' பாடல்களைப் பாடியிருக்கிறார்கள்.

"கலைஞர்கள் மட்டுமல்ல, சென்ஸார் கூட ஒத்துழைத்திருக்கிறது! கண்டிப்பாகக் கத்தரித்து விடுவார்கள் என்று எதிர்பார்க்கப் பட்ட ஒரு காட்சியைக் கண்டு கொள்ளாமல் விட்டு விட்டார்கள்."

**கா**தலையும் பாடல்களையும் நம்பி ஏராளமான பணத்தைக் கொட்டி ஒரு படத்தை எடுத்து வெற்றியும் அடைந்து விட்ட சூரஜ் பாரஜத்யா, அடுத்த படத்திலும் இதே ஃபார்முலாவைக் கையாள்வாரா....?

"நிச்சயமாக!" என்கிறார் சூரஜ். ஒவ்வொரு மனிதனின் மனத்திலும் ஒரு ரகசியமான காதல் கதை ஆழமாகப் பொதிந்திருக்கிறது. அதை வெவ்வேறு கோணங்களில் அலசி, ரசிப்பது எனக்குப் பிடித்திருக்கிறது... காதலில் வார்த்தைகள் பொய்க்கும் போது கைகொடுப்பது இசை. எனவே என் அடுத்த படமும் இசைமயமான காதலோவியம்தான்."

— ஜெயஸ்ரீராஜ்



*அரசாங்க வேலை என்பது என்ன? 75% அரசாங்கக் கோப்புக்கள். ஊழியரின் விடுப்பு, மாற்றல் உத்தரவு, வேலை உயர்வு போன்றவற்றைப் பற்றியது. 20% நடந்த தவறுகளைத் திருத்தவும், விளக்கவும் ஏற்பட்டவை. மீதி 5% வேலையும் கோப்புக்களும்தாம் பொதுமக்கள் பற்றியது! இந்தத் திடுக்கிடச் செய்யும் உண்மையை, மத்தியப்பிரதேச நிர்வாகச் சீர்திருத்தக் குழுவின் தலைவர் டி. ஸி. ஏ. ராமானுஜாச்சாரியார் தமது அறிக்கையில் வெளியிட்டு உள்ளார்!*

ஆதாரம்: ஹிந்து.

தகவல்: கிருஷ்ணவேணி ரங்கனாதன்.



ரமணியும் மாலுவும் தங்களுக்குள் சிரித்துப் பேசிக் கொண்டு வெளியேற, ரங்கன் வங்கியை விட்டு வெளிவர மனம் இல்லாமல் பித்துப் பிடித்தவனைப் போல் நின்றான். ரமணி அவனுக்காக, அவனுடைய நலனை உத்தேசித்துச் செய்திருந்த ஏற்பாடுகளில் திருப்தி இருந்தாலும், உள்ளூர பயம் கவ்வியது. லாட்டரிச் சீட்டை இந்த மானேஜர் ஜெய்ப்பூருக்கு அனுப்புவாரா? இன்னும் சில வாரங்களில் பல லட்சம் ரூபாய் நிச்சயமாக வந்துவிடுமா? அவனுக்கு லாட்டரிப் பணம் முழுவதையும் கரென்சி நோட்டுகளின் உருவத்தில் பார்க்கக் கொள்ளை ஆசை. அது இப்போது சாத்தியமில்லை.

திடீரென்று ரமணியின் குரல் கேட்டது.

''ரங்கா!''

''என்ன ரமணி சார்?''

''என்ன இங்கேயே நின்னுட்டிருக்கே...? நானும் மாலுவும் நடந்து போய்க்கிட்டிருக்கிறப்ப, திரும்பிப் பார்த்தா, உன்னைக் காணோம்... வா, ஓட்டலுக்குப் போகலாம்.''

ரங்கன் வேறு வழி தெரியாமல் மௌனமாக நடந்தான்.

''லாட்டரிச் சீட்டைப் பத்தியே நினைச்சுக்கிட்டிருக்காதே! உனக்குப் பைத்தியம் பிடிச்சுடும்.''

''பாதிப் பிடிச்சாச்சு. ரமணி சார்.''

''ஏன் என்னாச்சு?''

''பாங்க் மானேஜர் ஏதானும் தில்லு முல்லு பண்ணிடுவாரோன்னு பயம்.''

''அறைஞ்சேன்னா... ஏண்டா, சீட்டைப் பாங்க்லே கட்டினதுக்கு ரசீது இருக்கு இல்லே?''

''இருக்கா சார்?''

''எங்கிட்ட இருக்கு. பேசாம வா.''

மூவரும் ஓட்டலை அடைந்தார்கள்.

''ரங்கா. நாம ஏன் ஒரு நாள் ஏர்க்காடு போகப் படாது? ஜிலுஜிலுன்னு இருக்கும். மலை முகட்டிலேந்து கீழே பார்க்கறப்ப நீ உன்னையே மறந்துடுவே.''

ரமணி சொல்லியிருந்த ஏர்க்காடு மலையும் காடுகளும் நினைவுக்கு வர, ரங்கன், ''வேணாம் சார். நாம மெட்ராஸ் போயிடலாம்,'' என்றான்.

''உன் இஷ்டம்... நீ இப்ப ஒரு லட்சாதிபதி... என்னைவிட எல்லா விதத்திலும் உசந்தவன்... மெட்ராசுக்கே போயிடுவோம். மாலு பக்கத்து அறையிலே இருக்கா... ஏர்க்காடு ட்ரிப் கிடையாதுன்னு சொல்லிடறேன்.''

''நான் என்னிக்கும் உங்களை விட உசந்தவன் இல்லே ரமணி சார்... இனிமே அப்படிப் பேசாதீங்க... ஏதோ அதிர்ஷ்டம் அடிச்சுது. அவ்வளவுதான்.''

''அப்ப நீ என்னை உதறித் தள்ள மாட்டேன்னு சொல்லு.''

''உங்க பேச்சே எனக்குப் பிடிக்கலே, ரமணி சார்.''

''இனிமே நான் பேசப் போகிற பேச்சுக்களும் எடுக்கப் போகிற நடவடிக்கைகளும் கூட உனக்குப் பிடிக்காமல் போகலாம், ரங்கா.''

''என்ன சார் செய்யப் போறீங்க?''

''போகப் போகத் தெரியும்,'' என்ற ரமணி, மெட்ராஸ் போனதும் நீ உன் ஆபீஸ் வேலையை ராஜினாமா செய்துடு,'' என்றான்.

''சார்... சார்...''

''நான் சொன்னபடி செய்... நீ இப்ப ஒரு மிலியனர்... அதாவது பத்து லட்சத்துக்கும் அதிகமாச் செல்வம் உள்ளவன்... முதலாளி ரமேஷுக்குச் சமம்.''

''வேலை இல்லாம நான் எப்படி...?''

''முட்டாள். இப்போதைக்கு உன் செலவுக்கு ரெண்டாயிரம்னு மாசாமாசம் வரும். அது போதாதா?''

''தனம் என்னைக் குதறி எடுப்பா, ரமணி சார்.''

''மாட்டாள்.''

''சார்!''

''உன்னைப் பார்க்கணும்னா, அவ என் வீட்டுக்குத்தான் வரணும். என் வீட்டுக்குள்ளே அவளை யாரும் அனுமதிக்க மாட்டாங்க.''

''புரியலே, ரமணி சார்.''

''என் வீட்டு மாடியிலே ஒரு சின்ன ரூம் இருக்கே. நீதான் பார்த்திருக்கியே. அதிலே தட்டுமுட்டுச் சாமானெல்லாம் கொட்டிக் கிடக்கு. நாளைக்கு ரூமை ஒழிச்சு, சுவருக்கெல்லாம் சுண்ணாம்பு பூசி, ஒரு ஃபேனையும் வாங்கிப் போட்டுடறேன். நீ அங்கேதான் தங்கப் போறே. பக்கத்திலே நல்ல நல்ல ஓட்டலெல்லாம் இருக்கு. வேளா வேளைக்கு அங்கே போய்ச் சாப்பிட்டுக்கலாம்.''

''அப்ப தனம்?''

''இனிமே அவ உனக்குக் கிடையாது.''

''ரமணி சார்!'' ரங்கனுடைய மென்மையான குரல் பலமடைந்து கத்தியது.

ரமணி சிரித்தான்.

''மடையா... நீ அங்கே மறுபடியும் போனே, உன் பணத்துக்காக அவ உன்

சோத்திலேயே விஷம் வைச்சுடுவா. அவ வைக்கிறதுக்கு முன்னாடி, மயில்சாமி தயாரா நிப்பான்.''

''தனம் என் பெண்டாட்டி, சார்.''

''இனியும் அவளைப் பத்திப் பேசாதே... எனக்கு அவ யார்னு தெரியும்.''

''ஆரம்பத்திலிருந்தே உங்களுக்குத் தனம்னா ஒரு வெறுப்பு, சார்!''

''கரெக்ட் ரங்கா... ரொம்ப கரெக்ட். நான் தனத்தை லவ் பண்ணினேன். நீயும் லவ் பண்ணினே. அவ என்னை உதறி எறிஞ்சுட்டு, உன்னைத்தான் லவ் பண்றதாச் சொல்லி உன் கழுத்திலே மாலையைப் போட்டா... அதனால் எனக்கு அவ பேர்ல வெறுப்பு. நீ ரொம்பக் கரெக்டா என் மனசைப் புரிஞ்சுக்கிட்டுப் பேசறே?''

''ஆபீஸ் வேலையை ராஜிநாமா பண்ணித்தான் ஆகணுமா, சார்? கிடைக்கிற சம்பளம் கிடைச்சுட்டு வரட்டுமே?''

திடீரென்று மாலு பிரவேசித்தாள்.

''இங்கே என்ன தர்க்கம், ரமணி?''

''ஐயா சொல்றார். நான் வேலையை ராஜினாமாச் செய்யணும்னு. இது நியாயமா மாலு அம்மா?''

''ஓகே ரங்கா... நீ இப்போதைக்கு ராஜிநாமா செய்ய வேண்டாம். ஆனா, நீ என் வீட்டு மாடியில்தான் தங்கறே.''

ரங்கன் என்ன சொல்லுவது என்று புரியாமல் மாலுவையே பார்த்தான்.

''நீ உன் வீட்டிலே தங்கினா உனக்கு ஆபத்து வரும் ரங்கா!'' என்றாள் மாலு. பிறகு, ''உங்க வீட்ல ஏது இடம்; ரமணி?'' என்றாள்.

''மாடியிலே ஒரு லம்பர் ரூம் இருக்கு, மாலு... அதை ஒழிச்சுட்டாக் காலியாயிடும்.''

''எங்க வீட்ல நிறையப் பேர் இருக்கா... நாம தனியாப் படுத்துக்கக் கூட ஒரு தனி ரூம் கிடையாதுன்னு சொல்லி நம்ப கல்யாணத்தையே ஒத்திப் போடறீங்களே, ரமணி! இப்ப எப்படிப் புதிதாக ஒரு ரூம் பிறந்தது?''

''லம்பர் ரூம், மாலு. எட்டு அடிக்கு எட்டு அடி.''

''எட்டடிச் சதுரம் நமக்குப் போதாதாக்கும்!''

''இது பத்தி அப்புறம் பேசலாம்,





சமீபத்திய ஆந்திரப் புயல் — வெள்ளத்தில் எஸ். கொல்லப் பள்ளிவாசிகள் தாங்கள் காப்பாற்றப்படும்வரை சாலையில் இடுப்பளவு தண்ணீரில் 18 மணி நேரம் நின்று கொண்டிருந்தனர். அப்பொழுது பிரசவித்திருந்த தாயையும் சேயையும் ஒரு கட்டிலில் படுக்க வைத்து, பலசாலிகள் கட்டிலை உயரத் தாங்கிக் கொண்டு நின்றனர்.

— தி விக்.

— என். ஆறுமுகம்.

மாலு.''

''எனக்கு இப்பப் பசிக்கிறது.''

''ரங்கா, மூஞ்சியை அலம்பிட்டு வா... எல்லாரும் போய்ச் சாப்பிடுவோம்,'' என்றான் ரமணி.

தனத்துக்கு இருப்புக் கொள்ளவில்லை. ஓர் அறை வீட்டுக்குள்ளேயே நடந்தாள். ரங்கன் எங்கே இருக்கிறான்? லாட்டரிச் சீட்டு என்ன ஆயிற்று?

திடீரென்று கதவைத் தட்டும் ஒலி கேட்டது.

முன்பின் பார்த்திராத ஒருவரும், அவருக்குப் பின்னால், தோளில் காமிராவைத் தொங்கவிட்டபடி ஒருவனும் நின்று கொண்டிருந்தார்கள்.

''யார்ங்க நீங்க?''

''ரங்கன் வீடு இதுதானே?''

''உன் புருஷனுக்கு ராஜஸ்தான் லாட்டரியிலே இருபத்தஞ்சு லட்சம் ரூபா விழுந்திருக்கு.''

''தெரியும். அதுக்கு இன்னா இப்ப?''

''லாட்டரிச் சீட்டை வித்த கடைக்காரர் நான்தான்.''

''லாட்டரிச் சீட்டை என் புருசன் பணம் குடுத்துத்தானே வாங்கினாரு?''

''ஆமாம்மா.''

''அப்ப என்ன? ஏன் இப்ப வந்து நிக்கறீங்க?''

''அவரை போட்டோ எடுக்கணும். இதோ இவரு அவரைப் பேட்டி கண்டு போட்டோ எடுத்து நாளைக்கு வர்ற பேப்பர்லே போடுவாரு.''

''அவர் வீட்லே இல்லே.''

''எப்ப வருவாரு?''

''தெரியாது.''

''எங்கே போயிருக்காரு?''

''தெரியாது.''

''இருபத்தஞ்சு லட்சம் ரூபா பரிசு விழுந்திருக்குன்னு தெரிஞ்சதும் உங்க மனசு என்ன நினைச்சுது?'' என்று கேட்டார் நிருபர்.

''அத்தனை பணத்துக்கும் புண்ணாக்கு வாங்கி, பட்டணத்துத் தெருவிலெல்லாம் கொட்டணும்னு என் மனசு நினைச்சுது... ஏன்யா வெறுப்பு ஏத்தறீங்க? ரெண்டு நாளாப் புருசனைக் காணலியேன்னு நான் கண்ணீர் வுட்டுட்டிருக்கேன்.''

''உங்க முகத்தைப் பார்த்தா கண்ணீர் விட்ட முகமாத் தெரியலியே?'' என்றார் நிருபர்.

''எல்லாம் வறண்டு போச்சு.''

''ஏம்மா, தயவு பண்ணி போட்டோவுக்கு நிக்கறீங்களா?''

தனம் ஒரு நிமிடம் யோசித்தாள்.

அவள்தான் ரங்கனுடைய மனைவி என்று இந்தச் சென்னை முழுவதும் தெரிந்தால் என்ன? மறுநிமிஷமே ஒரு பயம் அவளைக் கலக்கியது.

''அவர் மொதல்ல வரட்டும். அப்புறம் போட்டோ எடுத்துக்கலாம்,'' என்றாள்.

''இன்னிக்கு நான் ஆபீசுக்குப் போயிருந்தேன். ரங்கன் லீவுன்னு சொன்னாங்க!'' என்றார் கடைக்காரர்.

''ஆபீஸ்ல அல்லார்க்கும் தெரிஞ்சு போச்சா?''

தனம் அலறினாள்.

''ஏன் தெரியக் கூடாதா?'' என்று கேட்டார் பத்திரிகை நிருபர்.

''தெரிஞ்சா என்ன? தெரியாமயாப் போகப் போவுது?''

''அதுசரி, அந்த ஆபீஸ்ல மயில்சாமின்னு ஒருத்தர் இருக்காரே... அவர் உங்க அப்பாவா?''

''ஆமாம். அவர் என்ன சொன்னாரு?''

''என்னைக் கொஞ்சம் மிரட்டினாரு, அவ்வளவுதான்.''

இருவரும் வெளியேறிய பிறகு தனத்தை ஒரு புது பயம் தாக்கியது. அப்பா மயில்சாமி முரடன். அவனை அவளாலேயே எளிதில் சமாளிக்க முடியாது. பயந்த சுபாவமுள்ள ரங்கன் என்ன செய்வான்?

அன்றைய இரவும் தூக்கமில்லாமல் முடிந்தது.

முதலாளி ரமேஷ் சாண்டில்யா ரங்கனைத் தம் அறைக்கு அழைத்தார்.

''வணக்கம் சார்.''

''உனக்கு லாட்டரியிலே இருபத்தைந்து லட்சம் விழுந்திருக்கு. டிக்கெட்டை எடுத்துட்டுச் சேலம் போறதாக ரமணி போன் பண்ணினார்.''

''ஆமாம் சார். நானும் சேலம் போயிருந்தேன்.''

''தெரியும். மாலு உன்னை அழைச்சுட்டுப் போனா...''

''ஆமாம் சார்.''

''நடந்ததையெல்லாம் ரமணி சொன்னார். அவர்தான் உனக்கு இங்கே வேலை வாங்கிக் கொடுத்தவர். உன் டிக்கெட்டைப் பத்திரமா வைச்சுட்டிருந்தவரும் ரமணிதான். இன்னொருத்தரா இருந்திருந்தா,

இவ்வளவு பெரிய தொகை புத்தியை வக்கிர மாக்கியிருக்கும். ஆனால் ரமணி நேர்மையா னவர். உன்னை ஏமாத்தலே.''

''ஆமாம் சார். ரமணி சார் ரொம்ப நாணயமானவர்.''

''நீ அவருக்குக் கைம்மாறா எதுவும் செய்ய வேண்டாமா?''

''சார், நான் படிப்பில்லாதவன். அனு பவமில்லாதவன். எப்படிக் கைம்மாறு செய் யறதுன்னுகூட தெரியாதவன்.''

''ஏன் ஒரு லட்சம் ரூபாயை ரமணிக்குக் கொடேன்!''

''கொடுக்கறேன் சார்... சத்தியமாக் கொடுக்கறேன்.''

''ஆனா அவர் வாங்கிப்பாரோ என் னமோ...? இப்போதைக்குக் கொடுக்க வேணாம். அவர் மனசைத் தெரிஞ்சுக் கிட்டுக் கொடு.''

''சரி, சார்.''

''ரங்கன், நீ இப்ப ஒரு பெரிய பணக் காரன். நீ இனிமே இந்த ஆபீஸ்லே வேலை செய்யறது உனக்கும் அழகு இல்லே. உன்னை வைச்சுக்கறது எனக்கும் நல்லது இல்லே!''

''சார் அப்படிச் சொல்லக் கூடாது! எனக்குப் பணம் வந்திருக்கு சார். ஆனா நிம்மதி போயிடுத்து. ஏன் பயமாக் கூட இருக்கு. நான் இந்த ஆபீஸ்லே தொடர்ந்து இருக்க ஆசைப்படறேன். அது கொஞ்ச மாவது நிம்மதியைக் கொடுக்கும்.''

''இருக்கலாம் ரங்கன். ஆனா, நீ ஒரு ப்யூன். இத்தனை நாளா உன்னை விரட்டி வேலை வாங்கினவங்க உன்னைக் காப்பி வாங்கி வரச் சொல்ல முடியாமத் தவிப் பாங்க... அதனாலே, நீ நாளையிலிருந்து வரவேண்டாம். ஒரு மாசச் சம்பளத்தை வாங் கிக்கிட்டுப் போயிடு.''

ரங்கனுடைய கண்கள் கலங்கின.

''சார்... சார்...''

''இதைப் பார் ரங்கன். நான் உன் வயத் திலே அடிச்சிருந்தா, நீ கண்ணீர் விடறதுக்கு நியாயமிருக்கும். நீ இனிமே வேலை செய்து தான் வாழணும்னு இல்லை. அதுவுமில் லாம, ஒரு லட்சாதிபதியை நான் என் ஆபீசிலே பியூனா வைச்சுட்டிருந்தா, பல விதமான பிரச்னைகள் வரும்.''

''பிரச்னை வராம...''

''நீ போகலாம், ரங்கன். உனக்கு என்னு டைய வாழ்த்துக்கள்.''

ரங்கன் முதலாளியின் அறையை விட்டு வெளியே வந்தான்.

''ஏண்டா ரங்கா அழறே?'' என்று டீப் பாயின் மேல் உட்கார்ந்திருந்த வெங்கி கேட் டான்.

பதில் சொல்லாமல் ரமணி அருகில் வந் தான் ரங்கன்.

''என்ன ரங்கா, என்ன ஆச்சு?''

ரங்கனால் பதில் சொல்ல முடியவில்லை. தேம்பித் தேம்பி அழுதான்.

''மொதல்ல அழுகையை நிறுத்து. நீ என்ன பச்சைக் குழந்தையா?''

''யோவ், அந்த ஆளு பச்சைக் குழந்தை இல்லேய்யா! அவன் என் மருமகப் புள்ளே... அவனை நீதான்யா அழ வைக்கிறே!'' என்று மயில்சாமி பாய்ந்து வந்தான்.

''இப்ப நீ சிரிக்க வைக்கப் போறியா...? மொதல்ல இடத்தைக் காலி பண்ணு!''

''பண்ணாட்டி?''

''ராத்திரி வாட்ச்மேன் நீயா இருக்க மாட்டே...''

''பயம் காட்றியா? என் பொண்ணுக்கும் என் மருமகப் புள்ளைக்கும் இருபத்தஞ்சு லட்சம் ரூபா பிரைஸ் விளுந்திருக்கு... உனக்குக் கைமாத்து வேணும்னா எங்கிட்ட வா...''

''இருபத்தஞ்சு லட்சமா? பிரைஸா? உன் மருமகப் புள்ளைக்கா? யார் சொன்னா?''

''ஊரே சொல்லுது... ஏன் அந்தலாட்டரிக் கடைக்காரனே இங்கே வந்து சொன் னான்!''

''நீயும் நம்பினியாக்கும். பிரைஸ் வந்தது எனக்கு... இதோ இந்த ரங்கனை டிக் கெட்டை வாங்கி வரச் சொன்னதும் நான் தான்... இப்ப நீ உன் நடையைக் கட்டு... கைமாத்து வேணும்னா சுகந்திகிட்டே வாங் கிக்க...'' ரமணி சிரித்துக் கொண்டே சொல்லச் சொல்ல மயில்சாமியின் ஆத் திரம் தலைக்கு ஏறிக் கொண்டே போயிற்று. மாலுவின் மேஜையிலிருந்த உருண்டையான கழியை எடுத்தான். ரமணியின் தலையைத் தாக்க ஓங்கினான். ரங்கன் நடுநடுங்கிப் போனான்.

(தொடரும்)




மக்களின் அறிவு வளர்ச்சிக்காக அரசு, பட்டி தொட்டிகளில் எல்லாம் நூலகங்களைத் திறந்திருக்கிறது. ஆனால் மக்கள் அதை முழுமையாகப் பயன்படுத்த வேண்டுமெனில், அரசு விடுமுறை நாட்களிலும் நூலகம் இயங்கி னால்தான் உண்டு. ஆனால் நூலகங்களுக்கு வாரத்தில் ஒரு நாள் பொது விடுமுறை இருக்கிறது. அத்துடன் இரண்டாவது சனிக்கிழமையானால் விடு முறை. இது போதாதென்று அரசு விடுமுறை நாட்களிலும் விடுமுறை. இப்படி இருந்தால் வேலை பார்க்கும் அன்பர்களால் எப்படி நூலகங்களை முழுமை யாகப் பயன்படுத்திக் கொள்ள முடியும்?

அரசு இதைக் கவனிக்குமா?

— தாயு. ஆண்டாள்.



ஒரு காலத்தில் யாரும் நான்கு விரற்கடை அளவுக்கு மேல் நீளமுள்ள தாடி வளர்க்கக் கூடாது என்று இந்தியாவை ஆண்ட ஓர் அரசன் உத்தரவு போட்டிருந்தான். அவனுடைய காவல் வீரர்கள் கையில், கத்திரிக்கோலும், அளவு கோலும் இருக்கும். தெருவில் போகிறவர்களின் தாடிகளை அளவுகோல் கொண்டு அளந்து பார்ப்பார்கள். அது நான்கு விரற்கடை நீளத்துக்கு மேல் இருந்தால் கத்திரிக்கோலால் கத்திரித்து விடுவார்கள்.

'இப்படியும் ஓர் அரசர் நம் நாட்டை ஆண்டாரா?' என்று ஆச்சரியப்படாதீர்கள். அவர் வேறு யாருமில்லை, அவுரங்கசீபுதான்!

— ஆதாரம்: 'டெகின்கெஸ்டு' எழுதிய "மாபெரும் புரட்சி வீரன்"

தகவல்: 'தக்கோலம் அ. முஸ்தபா.'



"நூறு ரூபாய் நோட்டைச் சுருட்டிக் காதில் வெச்சுக்கிட்டு டிபன் சாப்பிடறீங்களே, ஏன் சார்?"

"நான் மூணாவது மசால் ரோஸ்ட் ஆர்டர் பண்ணினப்ப சர்வர் பார்த்த பார்வை சரியில்லீங்க!"

— ஞா. ஞானமுத்து.



"தலைவருக்கு எப்பவும் லஞ்சத்தைப் பற்றித்தான் நினைப்பு!"

"என்ன விஷயம்?"

"நேற்று பழனியில் மீட்டிங் முடிஞ்சதும் மறக்காமல் நாலு டின் லஞ்சாமிர்தம் வாங்கிக் காரில் வைக்கச் சொல்றார்!"

— ஞா. ஞானமுத்து

"டாக்டர்! உடம்பு இளைக்கறதுக்காக நீங்க எழுதிக் கொடுத்த ஆயிரம் மாத்திரையையும் நான் எப்படிச் சாப்பிடறது?"

"இது சாப்பிடறதுக்கில்லே. தினமும் இந்த மாத்திரையைத் தரையில் கொட்டிட்டு, ஒவ்வொண்ணாக் குனிந்து பொறுக்கி எடுத்துப் பெட்டியில் போட்டால் போதும்!"

— ஞா. ஞானமுத்து.






உயிரின் வேரில் உரமென வெடியைத்
தூவிய பொழுதும்; தூரிகைக் கிளையை
நீக்குயில் அலகால் தீண்டிய பொழுதும்;
மௌனம் உடைந்து மனத்தின் சன்னலில்
வழிந்த பொழுதும்; வாசம் படரும்
மல்லிகைக் கனவுகள் மரித்த பொழுதும்;
நாட்களின் கரையில் நைட்ரிக் நதிகள்
பெருகிய பொழுதும்; வீணை மேனியை
ஊமை விரல்கள் உழுத பொழுதும்;
இரும்புப் பாலை இதயம் குடிக்கும்
நம்பிக்கை எனக்குள் நாற்காலி போடும்
சோழிகள் கீறியா சூரியன் தேயும்?

— மானா. பாஸ்கரன்

இதுவரையில் ரமணியின் பேச்சையும் மயில்சாமியின் முரட்டுத்தனத்தையுமே பார்த்து ரசித்துக் கொண்டிருந்த வெங்கி, மயில்சாமி கழியை எடுத்து ரமணியைத் தாக்க ஓங்கினதும் மின்னலாகப் பாய்ந்தான். மறுகணம் கெட்டியான மர உருளை அவனுடைய கைக்கு வந்தது.

''டேய் மயில்சாமி, உன்னை இங்கேயே தீர்த்துப் புடுவேன்... ரமணி சாரை அடிக்கவா பார்க்கறே?''

''தாங்க்ஸ் வெங்கி!'' என்ற ரமணி, ''பட்டை அடிச்சுட்டு வந்து நிக்கறான். அவனை மொதல்லே ஆபீசுக்கு வெளியே தள்ளிட்டுப் போ... நான் போலீசுக்குப் போன் பண்றேன்'' என்றான்.

''யோவ் குமாஸ்தா, என் மருமகப் புள்ளையை ஏமாத்திட்டே இல்லே... நான் இப்ப போறேன்யா... நேரே பொண்ணையும் அழைச்சுட்டுப் போலீசுக்குப் போறேன். வக்கீல்ட்டே போறேன்.''

மயில்சாமி கத்தி விட்டு நகர்ந்தான்.

''ரமணி சார், நீங்க அந்த ஆளைக் கண்டுக்காதீங்க.. நாய் குரைக்கிறது'' என்ற வெங்கி, ''ஏண்டா லட்சாதிபதி, உனக்கு ஊர்ல வேறே பொண்ணா கிடைக்கலே... போயும் போயும் ஒரு சாக்கடையின் பொண்ணைக் கட்டினியே!'' என்று ரங்கனிடம் சீறினான்.

இன்னும் பயத்தில் வெலவெலத்துப் போய் நின்ற ரங்கன் பதில் ஏதும் கூறவில்லை. என்ன சொல்லுவது?

அவனுக்கு லாட்டரியில் முதல் பரிசு விழுந்திருக்கிறது. என்ன புண்ணியம்? மயில்சாமி அதில் உரிமை கொண்டாடத் தொடங்கி விட்டான். நேரே தனத்திடம் போவான். அவளையும் மூட்டி விடுவான். இந்த லாட்டரிப் பணம் இன்னும் என்னென்ன அனர்த்தங்களையும் விபரீதங்

13

# அதிர்ஷ்ட தேவதை



களையும் கொண்டு வரப் போகிறதோ!

ஒன்று மட்டும் அவனுக்குத் தெளிவாகப் புரிந்தது. பரிசு தனக்குத்தான் கிடைத்திருக்கிறது என்று ரமணி மயில்சாமியிடம் அழுத்தத்துடன் கூறியிருக்கிறான். இது அவனை தனத்திடமிருந்தும் மயில்சாமியிடமிருந்தும் காப்பாற்றத்தான். இத்தகைய உள்ளம் படைத்த ஒரு நல்ல மனிதனை மாலு கோடுகள் வரைய உபயோகிக்கும் கழியால் மயில்சாமி தாக்க இருந்தானே! ரமணியின் மண்டை பிளந்து போயிருக்குமே! அப்புறம் இந்த உலகத்தில் உதவி செய்ய யார் இருக்கிறார்கள்? அவனுடைய லாட்டரிப் பணத்தை யாரால் சுச்சிதமாக நிர்வாகம் செய்ய முடியும்?

''ரங்கா!''

ரமணியின் குரல் கேட்கவே, அவன் தலை நிமிர்ந்து பார்த்தான்.

''நீ ஏன் உன் மூஞ்சியைத் தொங்கப் போட்டுட்டு நிக்கறே... நான் நாசுரீகமாப் பேசினேன். வெங்கி நாக்கைப் பிடுங்கிக்கற மாதிரிக் கேட்டான். அவ்வளவுதான்.''

''எல்லாம் என் தப்புத்தான், ரமணி சார்... நீங்க சொல்லியும் கேளாம ஆபீசுக்கு வந்தேன்'' ரங்கன் கேவினான்.

''உனக்குப் போக வேற இடம் இல்லே. அதான் வந்தே... சரி, முதலாளி என்ன சொன்னார்?''

மறுபடியும் அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. ரங்கனால் அடக்கிக் கொள்ள முடியவில்லை.

''நாளையிலிருந்து நான் ஆபீசுக்கு வர வேண்டாம்னு சொல்லிட்டார்.''

ரமணி சிரித்தான்.

''எப்படி ரங்கா, ஒரு லட்சாதிபதி ப்யூனா தொடர்ந்து இருக்க முடியும்?''

''என்ன ரமணி சார், சும்மா சும்மா லட்சாதிபதி லட்சாதிபதின்னு கேலி செய்யறீங்க...''

''நான் சொல்றது கேலியாப் படறதா? சரி சரி, நீ கிச்சாமிகிட்ட இந்த மாசத்துச் சம்பளத்தை வாங்கிக்கிட்டு வீட்டுக்குப் போ!''

''நீங்க போறப்ப நான் கூட வர்றேன்... மயில்சாமி என்னை என்ன செய்வானோ, பயமா இருக்கு.''

''உன் கையிலே பணம் வர்ற வரைக்கும் அவன் ஒன்றும் செய்ய மாட்டான்.''

''ரமணி சார்!''

''என்ன ரங்கா?''

''என் பெட்டியை எடுத்துட்டு வரலாமா?''

''ஏன் சாக்கு சொல்றே? 'என் மனைவி தனத்தைப் பார்த்துட்டு வரேன்'னு சொல்லேன்.''

ரங்கன் தலை குனிந்தான்.

''கடைசியா ஒரு தடவை பார்த்துட்டு வா... தப்பு இல்லை. ஆனா அவ ஏதானும் வம்பு பண்ணினா, இல்லே மிரட்டினா பயப்படாதே... நீ சோனிதான். ஆனா பணம்கற பலம் இருக்கு.. அவ கத்தினா நீ திருப்பிக் கத்து... சேலம் போன விஷயத்தை மட்டும் சொல்லிடாதே... அப்புறம் அவ நேரே அங்க போய் பாங்க் மானேஜரையே பார்த்துடுவா.''

''சரி, ரமணி சார்.''

தனத்துக்குப் பசித்தது. ஆனால் வாய்க்கு எதுவும் பிடிக்கவில்லை. ரங்கன் என்ன ஆனான்? லாட்டரிப் பணம் என்னாயிற்று? ரமணி என்னென்ன தில்லு முல்லுகள் செய்கிறான்? அவனை எப்படிச் சமாளிப்பது?

''தனம்.... தனம்''

மெல்லிய குரலை உடனே அடையாளம் கண்டு கொண்ட தனம், அவசர அவசரமாக எழுந்து கதவைத் திறந்தாள்.

''தனம், நான்தான்... நான்தான் வந்திருக்கேன்!''

''அதான் தெரியுதே... ஆமாம் நீ எங்கே திடீர்னு சொல்லாம கொள்ளாம அம்பேலாயிட்டே...?''

''முதலாளி அவசர வேலையா வீட்டுக்கு வரச் சொன்னாரு.''

''ஏன்யா எங்கிட்டேயா ரீல் வுடறே நீ... ஆபீசுக்குப் போனா, அங்கே நீ இல்லே... அந்த ரமணி அய்யரு இல்லே, அந்த மாலுப் பொண்ணு இல்லே... அல்லாரும் சேர்ந்து என்னாய்யா சதி செய்ஞ்சீங்க?''

''சதி எதுவும் செய்யலே, தனம்.''

''லாட்டரிப் பணம் என்னாய்யா ஆச்சு? கொணாந்திருக்கியா?''

''இல்லே!''

''ஏன்.... ஏன் கொணாரலே?''

''லாட்டரி டிக்கட்டுக்கு உடனே பணம் கெடைக்காது தனம்... ஒரு மாசம் ரெண்டு மாசம் ஆகும். ஜெய்ப்பூர்னு ஒரு ஊரு வடக்கே இருக்கு. டிக்கட்டை அங்கே அனுப்புவாங்க. வரி, அப்புறம், கமிஷன் எல்லாம் கழிச்சுட்டு, பாக்கிப் பணத்தை அனுப்புவாங்க...''

''ஏன்யா அந்த ஆளு சொல்லிக் கொடுத்த பாடத்தை எங்கிட்டே ஒப்பிக்கிறியா?''

''சத்தியமா இல்லே தனம். பிரைஸ் விழுந்தா முழுப் பணமும் தர மாட்டாங்களாம். இன்கம்டாக்ஸ் பிடிச்சுப்பாங்களாம். அப்புறம் டிக்கட்டு ஏஜெண்ட்டுக்கு வேறே கமிஷன் கொடுக்கணுமாம்.''

''மெய்யாலுமா? இல்லே கதை வுட்றியா?''

''முருகன் மேல ஆணையா!''

''அப்ப எவ்வளவுதான் ஒன் கைக்கு

பி.வி.ஆர்.

வரும்.''

''பதிமூணு லட்சத்துக்குக் கொஞ்சம் அதிகம்.''

''பூ இவ்ளவுதானா... ஆமாம் அதை இன்னா செய்யப் போறே?''

''மொதல்ல பணம் வரட்டும், தனம்.''

''நான் ஒன் பொஞ்சாதி... கந்தசாமி கோவில்ல என் கழுத்தில தாலி கட்டி யிருக்கே. பணம் வந்திருக்கேன்னு, என்னை வுட்டுட்டு வேற ஒரு சிறுக்கி பின்னாடி ஓடினே, ஒன் எலும்பை ஒடைச்சுடுவேன்.''

''நீ உடைக்காமப் போனாலும் மயில்சாமி விட மாட்டான், தனம்.''

''இன்னாய்யா சொல்றே நீ?''

ரங்கன் அன்று ஆபீசில் நடந்ததை விவரித்தான். மயில்சாமியிடமிருந்து அவனைக் காப்பாற்ற ரமணி எப்படி ஒரு பொய் சொல்லிச் சமாளித்தான் என்பதையும் கூறினான்.

''இப்ப என் கையில துட்டு இல்லே....!''

''என் கையிலும் பணம் இல்லே தனம்!''

''கடன் வாங்கு.''

''முடியாது தனம்!''

''இன்னாய்யா சொன்னே?''

''கடன் வாங்க முடியாதுன்னு சொன்னேன்!''

''யோவ்!'' தனம் சீறினாள்.

''இதப் பாரு தனம்... இனிமே உன்னால என்னை விரட்ட முடியாது. நீ என் பேச்சுக்கு அடங்கிப் போனா என் பணத்திலே நீ சுகமா இருக்கலாம். ஏறு மாறாய்ப் பேசினே உனக்குச் சல்லிக் காசு கிடைக்காது... இதப் புரிஞ்சுக்க மொதல்ல...''

தனம் வாயடைத்துப் போய் நின்றாள். ரங்கனா இப்படிப் பேசுகிறான். இந்தத் துணிச்சல் எப்படி வந்தது? எங்கேயிருந்து வந்தது? ரமணி இவனுக்கு ஏதானும் ஊசி போட்டு விட்டானோ? பணம் பேச ஆரம்பிக்கிறதா?''

''இந்தாய்யா, நீ இப்பப் பணக்காரன் தான். ஒத்துக்கறேன். அம்பது நூறுன்னு கைமாத்து வாங்கினா அது ஒனக்கு அவமானம்தான். நீ கடன் வாங்கத் தாவலே. நான் வீட்டைச் சமாளிச்சுக்கறேன்... பணம் வர்றப்ப வரட்டும்... நாம் ரெண்டு பேர் தானே! சோத்துக்கா கஸ்டம்?''

''நீ ஒருத்திதான் தனம்!''

''இன்னா சொன்னே நீ?''

''தனம், நான் ஆசைப்பட்டு உன்னைக் கட்டிக்கிட்டது என்னமோ நிசம்தான். ஆனா நீ எதுக்கு இந்தக் குள்ளனை, இந்த நோஞ்சானைக் கட்டிக்கத் தயாரா இருந்தேன்னு எனக்கு அப்பப் புரியலே... ஆனா கலியாணமான அன்னிலிருந்தே நீ என்னை ஒரு புருசனா மதிக்கலே. பணம் காய்க்கிற மரமாத்தான் என்னை உலுக்கி எடுத்தே. இனிமே நீயும் நானும் ஒரே வீட்லே இருந்து வாழறது என்னைப் பொறுத்தவரைக்கும் முடியாத காரியம்.. நான் எங்கே இருந்தாலும் நீ தாராளமாச் செலவு செய்ய மாசா மாசம் பணம் வரும். இப்ப நான் என் பெட்டியை எடுத்துட்டுப் போறேன்.''

ரங்கன் நகர்ந்தான்.

''யோவ், நில்லுய்யா!''

இத்தனை காலமும் கண்களைத் தாழ்த்தியே பார்த்துப் பழக்கப்பட்ட ரங்கன் முதன் முறையாக அவளை ஏறிட்டுப் பார்த்தான். பிறகு விறைப்பாக —

''என்ன வேணும்?''

''நீ என் புருசன். நான் ஒன் பொண்டாட்டி!''

''அதுக்கென்ன இப்ப?''

''ஒனக்கு ஏதானும் ஆச்சுன்னா பணம் அவ்வளவும் எனக்குத்தான் வரும். அதான் சட்டம்.''

''நான் செத்தப்புறம் என் பணம் யார் கைக்குப் போனா எனக்கு என்ன?''

''ஏன்யா, எங்கிட்ட இப்படியெல்லாம் பேச எப்படிய்யா ஒனக்குத் தைரியம் வந்தது? நான் ஏதோ ஒரு பேச்சுக்குத்தான்யா சொன்னேன். நீ சாகணும்னு நான் ஆசைப் படுவேனாய்யா?''

ரங்கன் மேலும் நின்று பேச விருப்பமில்லாமல் பெட்டியை எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

''யோவ் நீ நாலு நாளுக்கு ஒரு வாட்டி என்னைப் பார்க்க வராட்டி, நான் கிணத்துலே வுளுந்துடுவேன்... அங்காளம்மன் மேல ஆணையாச் சொல்றேன்.''

மறுநாள் எல்லாத் தமிழ்த் தினசரிகளிலும் அவனுடைய பெயர் வந்தது. ஓரிரு பத்திரிகைகள் அந்த ஞாயிற்றுக் கிழமையன்று, பரிசு பெற்றவருடன் நடத்திய சிறப்புப் பேட்டி வெளிவரும் என்று உறுதி அளித்திருந்தார்கள். முதற் பரிசுச் சீட்டை ரங்கனுக்கு விற்ற கடைக்காரருடைய போட்டோ பிரசுரமாகியிருந்தது.

''ரங்கா, பேப்பரைப் பார்த்தியா?'' என்று கேட்டுக் கொண்டே அறைக்குள் ரமணி பிரவேசித்தான்.

''பார்த்தேன்.''

''சிறப்புக் கட்டுரை வரப் போறதுன்னு எழுதியிருக்காங்க.''

''பார்த்தேன்.''

''பத்திரிகைக்காரங்களுக்கு நீ இப்ப இருக்கிற இடம் தெரியாதே!''

''தெரியாது ரமணி சார்.''

''அப்ப எப்படி பேட்டி காண வருவாங்க?''

''அதான் புரியலே.''

''ஒரு முக்கியமான காரியம் நீ செய்ய வேண்டியிருக்கு, ரங்கா.''

''அது என்ன ரமணி சார்!''

''விடுதலை வாங்கிக்கணும்.''

''அப்படீன்னா?''

''தனம் சும்மா இருக்க மாட்டா... அவ அப்பன் மயில்சாமி கருவிட்டிருக்கான்.

அதனாலே, நீ தனத்தை விவாகரத்து செய்தாகணும்.''

''விவாகரத்தா? அது தப்பில்லியா ரமணி சார...''

''ஒழுங்காக் குடும்பம் நடந்தா விவாகரத்து தப்புத்தான்... நீதான் குடும்பத்தை ஒழுங்கா நடத்தலியே...''

''கலியாணம் ஆகிக் கொஞ்ச காலம்தான் ஆகியிருக்கு ரமணி சார்.''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது, ரங்கா... நீ நிம்மதியா, உயிருக்கு பயமில்லாம வாழணும்னா, லாட்டரிப் பணம் பாங்க்ல வந்து சேர்றதுக்கு முன்னாடி விவாகரத்துக்கான நோட்டீசை நீ அனுப்பியாகணும். நான் உனக்காக வக்கீலைப் பார்க்கிறேன்.''

''என்ன காரணம்னு கேட்டா நான் என்ன சொல்லுவேன், ரமணி சார்?''

''அதை நான் பார்த்துக்கறேன்.''

சொல்லி விட்டு ரமணி வெளியேறினான்.

சுகந்தியைப் பொறுத்தவரை ஆபீஸ் வெறிச்சோடியது.

மயில்சாமிக்குப் பதிலாக ஒரு கூர்க்கா காவலாளியாக வந்தான். அவனுடன் ஒரு நிமிடம் கூட அவளால் பேச முடியவில்லை. ரங்கன் இருந்தால் அவனை வம்புக்கு இழுக்கலாம். அவனும் இல்லை. எங்கே வசிக்கிறான் என்று கூடத் தெரியவில்லை. ரமணி எங்காவது அவனை ஒளித்து வைத்திருக்கிறானோ?

நெய் தோசை கிச்சா என்றுமே அவளுடன் அனாவசியமாகப் பேச மாட்டான். மிச்சம் யார் இருக்கிறார்கள். வெங்கி. அவனுக்கு குதிரை பாஷைதான் தெரியும். அப்புறம் மாலு. அவளுக்கு ரமணியுடன் சிரித்துப் பேசவே நேரம் போதவில்லை.

என்ன செய்ய?

திடீரென்று ஒரு குரல் கேட்டது.

''குட்மார்னிங் மேடம்... என் பெயர் சிவலிங்கம். எஸ். லிங்கம்னுதான் கும்பகோணத்திலே எல்லாருக்கும் தெரியும்.''

''இப்ப எனக்கும் தெரிஞ்சுட்டுது. உங்களுக்கு என்ன வேணும்?''

''என் தம்பி ரங்கன் இந்த ஆபீஸ்ல வேலை செய்யறான்.''

''அதோ, அங்கே கண்ணாடி போட்டுட்டு, சிவப்பா ஒருத்தர் உட்கார்ந்திருக்கிறாரே அவரை விசாரியுங்க'' என்றாள் சுகந்தி.

எஸ். லிங்கம் ரமணியை அணுகினான்.

''குட்மார்னிங் சார். என் பெயர் எஸ். லிங்கம். சிவலிங்கம்.''

''கும்பகோணத்திலேந்து வர்றீங்க... அங்கே ஒரு பல சரக்குக் கடை நடத்தறீங்க'' என்றான் ரமணி.

''ஆமாம் சார்... எப்படி சார் தெரியும் உங்களுக்கு... நீங்களும் கும்பகோணம் தானா? என் கடைக்கு வந்திருக்கீங்களா?''



''இன்னிக்கு என் திறமையைப் பாராட்டி ஆபீஸ்ல எல்லாரும் என்னைத் தட்டிக் கொடுத்தாங்க டாக்டர்.''

''அதுக்கு ஏன் இப்படி வேதனைப் படறீங்க?''

''ஒரே முதுகுவலி, டாக்டர்!''

— மேல்மங்கலம் பத்ரா.

''நீங்க யாருன்னு தெரிஞ்சுக்க நான் ஏன் கும்பகோணம் வரணும், லிங்கம்? உங்க தம்பி ரங்கனைத்தான் ஆறு வருஷம் முன்னாடி அடிச்சு விரட்டிட்டீங்களே!''

லிங்கத்தின் முகம் சுருங்கியது.

''சரி, என்ன விஷயமா நீங்க வந்திருக்கீங்க?''

''எனக்கு என் தம்பியைப் பார்க்கணும்.''

''தம்பியைத்தான் நீங்க என்னிக்கோ கை கழுவி விட்டாச்சே, மிஸ்டர் லிங்கம்.''

''அது எங்க குடும்ப விஷயம். ரங்கன் இப்ப எங்கே இருக்கான்?''

''என் பாதுகாப்பிலே!''

''அப்படீன்னா?''

''அவனை நான் ஜாக்கிரதையாப் பார்த்துக்கறேன்னு அர்த்தம்...''

''நாங்க சந்திக்க நீங்கஉதவி செய்யணும்.''

''செய்யறேன்.''

''எப்ப எங்கே பார்க்கலாம்?''

''மயிலாப்பூர்லே லஸ்னு ஒரு இடம் இருக்கு. அந்த லஸ்லே நாகேஸ்வர ராவ் பார்க் அப்படீன்னு ஒரு பார்க் இருக்கு. இன்னிக்குச் சாயங்காலம் சரியா ஆறு மணிக்கு நீங்க அங்கே வந்தீங்கன்னா ரங்கனைப் பார்க்கலாம்.''

''ரொம்ப தாங்க்ஸ்..''

''ஒரு விஷயம் தெரியுமா, மிஸ்டர் லிங்கம்?''

''என்ன சார்?''

''உங்க தம்பி ரங்கனுக்கு ராஜஸ்தான் லாட்டரியிலே முதல் பரிசா இருபத்தஞ்சு லட்சம் விழுந்திருக்கு.''

''அது தெரிஞ்சுதான் நான் கும்பகோணத்திலிருந்து வந்திருக்கேன், சார். என் தம்பி படிப்பறிவு இல்லாதவன். ரொம்ப சாது. சாமர்த்தியம் போதாது. அவனுக்கு நல்லது பொல்லாதது சொல்ல யார் இருக்காங்க?'' என்றான் லிங்கம்.

''அதான் நீங்க வந்துட்டீங்களே!'' என்றான் ரமணி, சிரித்துக் கொண்டே.

(தொடரும்)

# அ.தி.மு.க.வில் யார் கை ஓங்கியிருக்கிறது?

* என். அருண், ஈரோடு.

? மரணம் பற்றிய பாரதி பாடலுக்கு வலம்புரி ஜானின் விளக்கம் என்ன என்று கூறியிருக்கலாம்; அல்லது அது இடம்பெற்றுள்ள புத்தகத்தையாவது குறிப்பிட்டிருக்கலாமே?

! ஸாரி, நான் குறிப்பிட்டது மேடைப் பேச்சு. அதைக் கேட்டு அனுபவிப்பதில் தான் ரசனை!

* என். ஆர். சுப்பிரமணியன், பூனாம் பாளையம்.

? 'பத்திரிகைகளின் கடமை செய்தியைத் தெரிவிப்பதுதான்; கருத்தை அல்ல' என்று தேவிலால் கூறியிருக்கிறாரே?

! 'பத்திரிகையைப் படிப்பதுதான் தேவிலாலின் வேலை. அதுபற்றிக் கருத்துத் தெரிவிக்கக் கூடாது' என்று நாம் சொன்னால் கேட்பாரா? செய்தி வெளியிடுவதுடன், செய்தி விமர்சனம் செய்து கருத்துத் தெரிவிப்பதும் ஜனநாயகத்தில் பத்திரிகைகளின் தலையாய கடமை. 'பல்வேறு கருத்துக்கள் வருமே, எதை ஏற்பது?' என்றால், 'இப்படி செய்தி கடையப்படும் போதுதான் உண்மை திரண்டு வரும்' என்பதே பதில். பலவிதக் கருத்துக்களையும் அலசிப் பார்க்கும் போது உண்மை எதுவென்று வாசகனுக்குப் புரிந்து போகும்.

* வண்ணை கணேசன், சென்னை — 11.

? அ. தி. மு. க. வில் இப்போது யார் கை ஓங்கியிருக்கிறது?

! காங்கிரஸின் 'கை.'

* மேலை. பழ. நாகப்பன், சென்னை.

? செப்டம்பர் 30 க்குள் மாநகராட்சித் தேர்தலாமே, நம்பலாமா?

! ஆள் காட்டி விரலில் புள்ளி வைத்த பிறகுதான் நம்புவேன்!

* மேஜர் தாசன், ஈரோடு.

? மம்முட்டி நடித்த தமிழ்ப்படம் எப்படி?

! தமிழ் ஹீரோக்கள் பலருக்கு உள்ளூர இலி ஏற்படுத்தியிருக்கிறது!

* மு. பாரக், தக்கோலம்.

? திட்டக் கமிஷனை ரயில் இஞ்சினுக்கும் மாநிலங்களை ரயில் பெட்டிகளுக்கும் ஒப்பிட்டுப் பேசியுள்ளாரே, கலைஞர்?

! இந்தியாவில் நாளுக்கு நாள் ரயில் விபத்துக்கள் அதிகரித்து வருவதால் முதல்வரின் உவமை-கவலை அளிக்கிறது!

* கிஷோர், திருச்சி..

? 'மத்திய மாநில அரசுகளுக்கிடையே உள்ள நல்லுறவைக் கெடுப்பதற்குப் பத்திரிகைகள் முனைகின்றன' என்று கருணாநிதி கூறுகிறாரே?

! இவர்கள் வாசிப்புக்கு ஏற்ற மாதிரி நாம் 'ஜிங் சக்' போட வேண்டும். 'சரியான தாளத்துக்கு ஏற்பச் சிறப்பாக வாசியுங்கள்' என்று சொல்லக் கூடாது! உடனே, 'என்னைக் கெடுக்கச் சதி; நல்லுறவைக் கெடுக்கச் சூழ்ச்சி' என்று ஆரம்பித்து விடுவார்கள்! இந்த விஷயத்தில் தேவிலால், ராஜீவ், கருணாநிதி எல்லாரும் ஒன்றே!

* பா. வேங்கடேசன், போரூர்.

? ஈரானை இவ்வளவு பெரிய சோகம் தாக்கியுள்ளதே?

! "ஈழத்தின் சோகம் நம்மை அதிகமாக வருத்தமடையச் செய்வது நம்மவர் என்ப



* வி. ஐ. பி. விளக்கம்...



* 'இருபது வருஷம் போதும்!'



* கவலை தரும் உவ



"அப்பா போதையில இருக்கும் போது, மார்க் ரெண்டு ரெண்டாத் தெரியும்; சுலபமாக் கையெழுத்து வாங்கிடலாமனு பார்த்தா அதுலேயும் ஒரு இடைஞ்சல்!"

"என்னடா...?"

"நாலு சப்ஜெக்ட்ல, ஏன் ரெண்டு ரெண்டு சைபர் வாங்கியிருக்கேன்னு கேட்பாரே!"

— சீர்காழி வி. ரேவதி.

"சியாமளா மகாபாரதம் முடியப் போறதேன்னு ஒரேயடியாக் கவலைப் படறா!"

"அவ்வளவு ஈடுபாடா?"

"ஆமா, அவ மாமியாருடன் சண்டை போட அதிலே புதுப் புது யுக்திகள் கிடைச்சுதாம்."

— திலகவதி.





"லீவில் இருந்தபோது நேரத்தை வீணக்காம நிறையப் படிச்சேன்...."

"ரெண்டு..... மூணு புத்தகத் தலைப்புச் சொல்லுங்களேன்....."

"அடடா, தலைப்பைப் படிக்க மறந்துட்டேனே!"

— ராஜிராதா.

கல்லூரி முதல்வர்: நம்ம காலேஜோட மதிப்பையும் பெருமையையும் நீங்க தான் காப்பாத்தணும்...

மாணவர் தலைவன்: சரி சார். சீக்கிரமா ஸ்டிரைக் பண்ண ஆரம்பிச்சுடறோம், கவலைப்படாதீங்க!

— ஆர். ரத்தினசாமி.





கிளார்க்: என்ன சார், இது? அர்ஜென்ட் ஃபைலோட, பத்து ரூபா வெச்சுக் கொடுக்கிறீங்க...?

மானேஜர்: இருக்கட்டும்பா... எனக்கு இந்த வேலை இன்னிக்கே முடிஞ்சாகணும்...!

— ஆர். அப்துல் சலாம்.

# மற்றொருத்தி

ஒரு விதத்தில் அந்தத் தகவலைச் சாரதா எதிர்பார்த்துக் கொண்டிருந்ததால் சுப்புராஜு சொன்ன போது அதற்குண்டான அதிர்ச்சி ஏற்படவில்லை. ஆனால் ரொம்ப வருத்தமாக இருந்தது.

சுப்புராஜு அவளை நேராகப் பார்க்காமல் ஒருவாறு கண்ணைச் சுருக்கிக்கொண்டு சிறிதே அவமானத்துடன்தான் சொன்னான்.

''அவரு, நிச்சயம் தவறாம தினம் அந்த வீட்டுக்குத்தான் அக்கா போறாரு. ஆபீஸ்லேருந்து பெரும்பாலும் மூணு மணிக்குக் கிளம்பிட்டு அங்கே போயிடறாரு. ராத்திரி எப்ப வீட்டுக்கு வர்றாரு?''

''ஒம்பது ஒம்பதரை.''

''அதுவரைக்கும் அங்கதான் இருக்காரு. ஒப்பனாக் கார்ல போய் வர்றாங்க. தினம் வீடியோ காஸெட்டு வாங்கிட்டு வர்றாங்க. பாக்கறாங்க போலே.''

''அவளைப் பார்த்தியாடா சுப்பு?''

''பார்த்தேன் அக்கா.''

''எப்படி இருக்கா?''

''உன்னைவிடச் சின்னவ.''

''கறுப்பா, சிவப்பா, அழகா, குண்டா, எப்படிடா இருக்கா?''

''எனக்கு என்னவோ அப்படி ஒண்ணும் பெரிய ரூபவதின்னே சொல்ல முடியலை. கொஞ்சம் ரெட்டை நாடியாப் பெரிசாப் பொட்டு வெச்சுக்கினு... பார்த்தாலே அப்படியே ரெண்டு கன்னத்தையும் பிடிச்சுக் கிழிக்கலாம்னு ஆத்திரம் வருதுக்கா! அத்தானுக்கு எப்படிப் புத்தி இப்படிப் போவுது...? உனக்கு என்ன குறை?''

''விதிடா!''

''ரமேஷுக்குத் தெரியுமா?''

''தெரியாது. தெரிஞ்சாலும் அவன் மனசுக்குள்ளேதான் வச்சுப்பான். பன்னண்டு வயசுக்கு அவனுக்கு எத்தனை அழுத்தம்!''

''அக்கா, நான் மாப்பிள்ளைகிட்டே நேராக் கேட்டுடவா?''

''இல்லை சுப்பு. கேட்க வேண்டியது நான்!''

''அத்தானை நீ துரத்திடுக்கா! இல்லை விட்டு விலகிடு!''

''விலகி வந்தால் நீ என்னை வைச்சுக்கிட்டுச் சோறு போடுவியா? சுப்பு, உன் பெண்சாதி சம்மதிப்பாளா? சுப்பு, எனக்குப் போக்கிடம் இருக்குதா, சுப்பு?'' சுப்புவிடம் இதற்கு நேரடியான பதில் இல்லை.

''அப்பா, அம்மா இருந்திருந்தால் இந்த மாதிரி நடந்திருக்குமா? அப்பா இருக்கிற வரைக்கும் எத்தனை பயந்துக்கிட்டு மரியாதையா இருந்தாரு மாப்பிள்ளை? தான் பண்றது தப்பு, அநியாயம்னு முதல்ல அவரு உணர்றா மாதிரி பளிச்சுன்னு சொல்லிடு.''

''சொல்லி?''

சுப்புராஜு மௌனமாக இருக்க, சாரதா அவனுக்குக் காப்பி கொண்டு வரச் சென்றாள். அவளுடன் வந்த சுப்புராஜு ''நாலு ஆளை வச்சு அந்தப் பொம்பளையை உண்டு இல்லைன்னு அடிச்சுப் போட்டுடுவோமா?''

''தப்பு நம்மாளுகிட்ட இருக்கிறப்ப, அவளை எதுக்கு அடிக்கணும்?''

''கல்யாணம் ஆன ஒரு ஆள் கூடச் சகவாசம் வெச்சுக்கறது தப்புன்னு தெரிய வேண்டாமா அந்த முண்டைக்கு?''

''இவர் புத்தி எங்கே போச்சு ராஜு! ஒரு ஆம்பிளைன்னா என்ன வேணாச் செய்யலாமோ?''

''கேட்டுடு அக்கா, தயங்காதே.''

''கைல வளையல்லாம் போட்டிருக்காளாடா நகை?''

''சரியாப் பார்க்கலை.''

''என்ன மாதிரி சேலை கட்டிட்டிருந்தா?''

''சரியாப் பார்க்கலை அக்கா. பாண்டி பஜார்ல பாத்திரக்கடை இருக்குது பாரு, அங்க ஒரு முறை கார்ல பார்த்தேன். ரெண்டு பேரும் பழரசம் பருகிட்டு இவரு அவ தோள் மேல கை! சே... சொல்றதுக்கே அசிங்கமா இருக்குது.''

காப்பி கலக்கையில், ''அக்கா, நீ என்ன செய்யணும்னு சொல்றியோ, அப்படிச் செய்யறேன். இந்தாளுகிட்ட ஏதும் இரக்கம் காமிக்காதே. எனக்கு ராபர்ட்ஸன் பேட்டையில ரெண்டு ரவுடிங்களைத் தெரியும். நாலு தட்டுத் தட்டிப் பல்லைப் பேத்துரச் சொல்றேன்.''

சாரதாவுக்கு அவன் பேசுவது மனத்தில் பதியவில்லை. மணப்பந்தலில் எரிந்த நெருப்பும், தேனிலவுக்குச் சென்றிருந்த போது, ஜகதீஷ் சிகரெட் குடிப்பார் என்று தெரிந்த

சுஜாதா

அதிர்ச்சியும்... அப்போதே அவர் கண்கள் அலைந்ததும்... வேலைக்காரி, எதிர்வீட்டு ராயசுவாமியின் மனைவி, அக்கா பெண் காஞ்சனா தன் தங்கை காமாட்சி இவர்கள் பேரில் அவர் செலுத்திய கவனங்களும்... வழிந்த அசடுகளும்.

ரத்தத்தில் சோரம் ஊறிப் போயிருந்த மனுஷன். அடிப்பதாலோ பல்லைத் தட்டுவதாலோ, மோகம் மறையாது. ஏனோ அவனுக்கு அந்த ஆசை தோன்றியது. 'என்னைப்



> **மத்யமர் — வாசகர் விமர்சனம் உடனே எழுதுங்கள்!**
>
> 'மற்றொருத்தி' மத்யமர் வரிசையில் சுஜாதா எழுதி வரும் எட்டாவது கதை இது. இந்தக் கதையைப் படித்து முடித்ததும், இக்கதை பற்றிய ஏதோ வொன்றைச் சொல்ல வேண்டும் போல் இருக்கிறதல்லவா! அந்த ஏதோ ஒன்று எதைப் பற்றி? கதையின் கருவைப் பற்றியா அல்லது கதையின் நடையோட்டம் பற்றியா, இல்லை பாத்திரப் படைப்புக் களைப் பற்றியா? 'மற்றொருத்தி' கதை பற்றி நீங்கள் சொல்ல நினைப்பது எதுவானாலும் அதை உடனே ஓர் அஞ்சலட்டையில் எழுதி எங்களுக்கு அனுப்புங்கள்.
>
> பிரசுரமாகும் ஒவ்வொரு விமர்சனத்துக்கும் ரூ. 25 பரிசு. சிறந்த விமர்சனத்துக்கு ரூ. 50 பரிசு.
>
> உங்கள் விமர்சனங்களை 19.7.90க்குள் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேரும்படி அனுப்பி வையுங்கள்.
>
> — ஆசிரியர்

பதவி நீக்கியவள் எப்படி இருப்பாள்?'

''நான் அவளைப் பார்க்கணும் ராஜு. ஒரு முறையாவது பார்க்கணும். வீட்டு விலாசம் சொல்லு.''

''வேண்டாங்கா. அங்கேல்லாம் போகாதே. மரியாதை கெட்டுப் போயிடும். அந்த மாதிரி பொம்பளை என்ன வேணாப் பேசுவா! எத்தனை நாளா இந்த மாதிரி நடக்குதுக்கா?''

''தெரியாதுப்பா. ஓர் ஆம்பிளை வெளியே போனா, வீட்டில இருக்கிறவ பொந்தில இருக்கிற மாதிரி, அவன் திரும்பி வர்ற வரைக்கும் மனைவிக்கு விசுவாசமா இருக்காருன்னு நம்பிக்கைதான். இந்தாளு வீட்டுக்குள்ளேயே விசுவாசமில்லாம இருந்தவரு. வேலைக்காரி, சேலையை உருவுறதைக் கண்ணால பார்த்திருக்கேன்.''

''அப்பவே பளிச்சுன்னு பல்லில் போட றாப்பலச் சொல்லியிருக்கணும்!''

''சொன்னேண்டா!''

''என்ன சொன்னார்?''

''இனிமே பண்ண மாட்டேன், மன்னிச்சுடுன்னாரு. உடம்பு பூராப் பொய்யி! ஒரு மாதம் அவர் கூடப் பேசாம இருந்தேன். என்ன செய்ய? வீட்டில இருக்கிற சகிக்க முடியாத தனிமை. பேசித் தொலைக்க வேண்டியிருக்குது.... மற்ற பேருங்களுக்காகவாவது சப்பைக்கட்டுக் கட்ட வேண்டியிருக்குது. ரமேஷ் கேக்கறானில்லை, ஏம்மா அப்பா கூடப் பேச மாட்டேங்கறேன்னு?''

''இந்தாளை எப்படி வழிக்குக் கொண்டு வர்றது?''

''அதான் யோசிக்கிறேன்'' என்றாள்.

கண்களில் நீர் தன்னிச்சையாக வடிய, ''அழாதே அக்கா!'' என்றான் சுப்புராஜு.

சாரதா நிறைய இதைப் பற்றி யோசித்திருக்கிறாள். கண்ணுக்கு முன்னால் நடக்காத வரை ஏன் கவலைப்பட வேண்டும்? வீட்டுக்கு வெளியே, ஏதோவொரு மாலையில், ஏதோ ஒரு வீட்டில் என் கணவன் யாரோ ஒரு சிறுக்கியுடன் பேசுகிறான் என்பதால் நான் எவ்விதம் பாதிக்கப்படுகிறேன்? எனக்கு என்ன வலியா, காயமா? இல்லை, மனத்தில் காயம். மனம் எப்படிக் காயப்படும்? தம்பி வந்து சொன்னதால்தானே வம்பு? சொல்லாமலே இருந்தால் அல்லது கேட்காமலே இருந்தால், துரோகம், மனவலி என்பதெல்லாம் மனசைப் பொறுத்தது. 'மனசைக் கல்லாக்கிக் கொள்' என்று அம்மா எத்தனை தடவை அறிவுரை சொல்லியிருக்கிறாள்.

யோசித்தால் அது அல்ல அவள் வருத்தம்... அவளுடைய பெண்மைக்கு, ஆதாரமான பெண் தன்மைக்கு இழைக்கப்பட்ட அநீதி இது. அவள் அழகில்லை. மற்றொருத்தி அவளைவிட விரும்பத்தக்கவள் என்கிற சித்தாந்தம்தான் ஜீரணிக்க முடியாதது.

கணவன் கல்யாணம் செய்து கொள்ளும் போது அவன் எழுதப்படாத பல விதிகளுக்கு இசைகிறான். அவைகளில் முக்கியமானது உன்னை விரும்புவேன், உன்னையே நாடுவேன் என்பது. இந்த விதி மீறப்படும்போது தான் மனைவி மிகவும் பாதிக்கப்படுகிறாள். காரணம் பொருளாதாரம்.

இந்திய மனைவிக்குக் கணவனை விட்டால் வேறு புகல் இல்லை. கணவன்தான் அவளுக்குச் சோறு, நிழல், உடை எல்லாம். இந்த அஸ்திவாரம் கலையும் போது அவள் மிகவும் அடிபடுகிறாள்.

தனியாக வாழ முடியுமா என்னால்? என் கைவளைகளை விற்று ஜீவனாம்சம் கோரி... வேலைக்குச் சென்று ரமேஷைப் படிக்க வைத்து அவன் சம்பாதிக்கும்வரை... அதற்கெல்லாம் மனோ திடம் அவளிடம் இல்லை. தனியாக ஒரு பஸ் விசாரித்துப் போனதில்லை. தனியாக ஒரு சினிமா இல்லை, மற்ற ஆண்களுடன் கணவன் இல்லாத போது பேசியதில்லை. கணவன் இல்லாத போது அலங்காரம் கூட இல்லை.

இந்த மாதிரியான வீட்டு மனைவிகளின் மந்தையில் ஒருத்தி நான்!

**If you can't cure it endure it!**

ஜெகதீஷ் வழக்கம் போல ராத்திரி ஒன்பதரைக்கு வந்தான். சட்டையைக் கழற்றி

ஹாங்கரில் மாட்டும் போது சுவாசத்தில் ஆல்கஹால் வாசனை இருந்தது. நேராகப் படுக்கை அறைக்குச் செல்ல, —

''சாப்பிடலை?''

''சாப்பிட்டாச்சு.''

''வெளியே சாப்பிடறதா இருந்தா முன்னமே சொல்லக் கூடாதா? நான் பைத்தியம் மாதிரி முழுச் சோத்தையும் வடிச்சு வைச்சு...

நிமிர்ந்து பார்த்து, ''இப்ப என்னங்கறே? நான் சாப்பிடணும்; அவ்வளவுதானே? போடு இலையை.''

அவனையே ஆழ்ந்து பார்த்து, ''நீங்க பண்றது நல்லா இருக்கா?''

''என்ன?''

''அந்தப் பொம்பளை வீட்டுக்குத் தினம் போய்ட்டு வர்றீங்களே?''

''எந்தப் பொம்பளை?''

''அதான்... அவதான்.''

''பேர் சொல்லு.''

''நீங்க பண்றது நியாயமா சொல்லுங்க.''

''இல்லாததும் பொல்லாததும் எல்லாரும் சொல்வாங்க. எந்தப் பொம்பளை? என்ன பேரு? சாரதா நீ மத்தவங்க சொல்றதை நம்பாதே...''

''கண்ணால பார்த்ததை...?''

''எங்கே பார்த்தே? எப்பப் பார்த்தே?''

''நான் பார்க்கலை. தம்பி பார்த்தான்.''

''என்ன பார்த்தான்?''

''கேக்கவே நல்லால்லை.''

''சாரதா, உன் தம்பியைப் பாண்டி பஜார்ல வெச்சு, நானும்தான் பார்த்தேன். பின்னாடி ஒரு பொம்பளை கூட!''

''அது அவன் மனைவி!''

''தினம் ஒரு மனைவியா? முக ஜாடை மாறுதா?''

''இல்லாததும் பொல்லாததும் சொல்லாதீங்க.''

''அதேதான் நானும் சொல்றேன். உன் தம்பி சொன்னது அத்தனையும் நிஜம்னு நம்பாதே. நடந்தது இதுதான். அந்தப் பொண்ணு என் ஆபீஸ் கலிக் ஒருத்தருடைய சிஸ்டர் இன்லா. இந்த ஊருக்குப் புதுசா வந்திருக்கா...''

வழக்கம் போல விவரமாகப் பொய் சொல்ல ஆரம்பித்தான். தேதி, பேர், இடம், பஸ் நம்பர், போன்ற பல்வேறு விவரங்களுடன் ஜோடனை. அவளுக்கு மிகவும் பழகிப் போய்விட்ட பொய்ப் பந்தல்!

''இப்ப க்ளியர் ஆச்சா?''

அவள் மௌனமாக இருக்க, ''அந்தப் பொண்ணு ஊருக்குப் போயாச்சு. இனிமே அந்தச் சந்தேகத்துக்கும் இடமில்லை.''

''உங்களை விட்டு எப்பவோ ஓடியிருப்பேன். ரமேஷுக்காகப் பொறுத்திருக்கேன்.''

''இப்ப என்ன நடந்துச்சுன்னே தெரியலையே?''

''எல்லாம் தெரியும். உங்களுக்கு எல்லாம் பாசாங்கு!''

''அதெல்லாம் ஒண்ணுமில்லை, தூங்கு!''

அருகே ஜகதீஷ் குறட்டை விட்டுத் தூங்க, ராத்திரி தூக்கமின்றி இருட்டில் கண் விழித்துப் படுத்திருந்த போது சட்டென்று அவளுக்கு அந்த யோசனை ஏற்பட்டது.

'எனக்குத்தான் அப்பா இல்லை; அம்மா இல்லை. ஜகதீஷுக்கு இருக்கிறார்களே. அம்மா, அப்பா. அவர்களிடம் போய்ச் சொல்வோம். முறையிடுவோம். உங்கள் பிள்ளை செய்கிறது சரிதானா? கண்டித்துச் சொல்லக் கூடாதா? அதற்கு முன் தம்பி ராஜு சொன்னது சரிதானா என்று ஒரு முறை பார்த்துவிட வேண்டும். எப்படி?

**ம**றுதினம் பிற்பகல் ராஜுவின் அலுவலகத்துக்குச் சென்று, அவனையும் கூட்டிக் கொண்டு சென்றாள். டாக்ஸியிலேயே அவர்கள் வீற்றிருக்க, சரியாக மூன்றரைக்கு ஜகதீஷ் காரில் வந்து இறங்க, மாடியில் பழக்கப்பட்டவன் போல் நடந்து சென்று மணிப் பொத்தானை அமுத்த, கதவு திறக்க, இரண்டு கரங்கள் அவனைத் தோளில் மாலை போட்டு உள்ளே இழுத்துச் செல்வது தெரிந்தது. மொட்டை மாடியில் அவன் சட்டைகள் உலர்ந்து கொண்டிருந்தன.

''பாம் வெச்சு வெடிச்சுரலாம் போல வருது அக்கா. இப்பவே போய் இடிச்சுத் திறந்து அத்தானை வெளியே இட்டாந்து...''

---

**பிரச்னைகள் கண்டு**
**பீதி ஏன் மானிடரே?**

**பிரச்னைகள் எல்லாம்**
**நாற்காலி போலத்தான்!**

**நாற்காலி தன்னைத்**
**தலைமீது தாங்கித்**
**தள்ளாடு வாருண்டோ!**

**தரையிலே போட்டு**
**மேலேறி நில்லுங்கள்!**

**உயரமாகத் தெரிவதற்கு**
**உதவியாகும் பிரச்னைகள்!**



''இல்லை ராஜு. இதை வேறு விதமாத் தீர்த்து வைக்கணும்!''

**சா**யங்காலம் அசோக்நகரில் இருந்த சொக்கலிங்கம் வீட்டுக்குச் சென்றாள். தனி வீடு கட்டிக் கொண்டு காம்பவுண்டு சுவரும் தோட்டமுமாக இருந்தது வீடு. நாய் அவளைப் பார்த்து ஒரு முறை குரைத்து விட்டு வாலாட்டியது. மரகதவல்லிதான் கதவைத் திறந்து அவளைப் பார்த்ததும் புன்னகை செய்து, ''வா, சாரதா, என்ன, அவன் வரலையா? எம் மகன்?''

''அவரு ஆபீஸிலிருந்து இன்னும் வரலைங்க.''

''ரமேஷ்?''

''அவன் இன்னும் பள்ளிக்கூடத்திலே இருந்து வரலைங்க.''

''ரெண்டு பேரையும் விட்டுட்டுத் தனியா வந்திருக்கே, ஏதும் முக்கியமான விஷயமா?''

''ஆமாம்மா!''

''உக்காரு. காப்பி சாப்பிடறியா?''

''சாப்பிடறேங்க. மாமா எப்படி இருக்காரு?''

''அப்படியேதான். மாறுதல் இல்லே... என்ன விஷயம் சொல்லு...''

''உங்க மகனைப் பத்தித்தான்.''

அவள் முகத்தில் சற்று கவலை தெரிந்தது. ''என்ன, ஏதாவது உடம்பு கிடம்பு சரியில்லையா?''

''அதில்லைங்க! உங்க மகன் மற்றொருத்தி சகவாசம் வெச்சிருக்காருங்க. அம்மா, நான் ரொம்ப யோசிச்சு என்னால பிரச்னையைச் சமாளிக்க முடியாததாலதாங்க பெரியவங்க உங்ககிட்டே வந்திருக்கேன். எனக்கு உங்களை விட்டா யாரும் இல்லைங்க.''

''மற்றொருத்தின்னா ஆபீஸ்லயா?''

''இல்லைங்க. ரெகுலரா சின்ன வீடும் பாங்களே... அந்த மாதிரி. தினம் ஆபீஸ் விட்டா அங்கேதான் போறாரு. ராத்திரி பத்து மணிக்குத்தான் வீட்டுக்கு வர்றாரு. ஞாயிற்றுக்கிழமைங்களில் காலைலயே போயிடறாரு...''

''யார் அந்தச் சிறுக்கி?''

''பேர் விவரம் எல்லாம் விசாரிக்கிறதுக்கு முன்னாடி உங்ககிட்ட புத்தி கேட்க வந்திருக்கேன், அம்மா.''

மாமியாரின் கைகளைப் பிடித்துக் கொண்டு, ''அம்மா, எனக்கு ஒரு வழி சொல்லுங்கம்மா! ரொம்பக் குழப்பத்தில இருக்கேன். பைத்தியம் பிடிச்சுடும் போல இருக்குது. வயித்தில ஸ்திரமா ஒரு கனம் ஒரு பயம் வந்துருச்சு. அம்மா உங்க வீட்டுக்கு மருமகளா வர்றப்ப பதினைஞ்சு வருஷங்களுக்கு முன்னால, 'என் மகன் ரொம்ப நல்லவன், தப்புத் தண்டா கிடையாது; பொய் கிடையாது; ஒரு கெட்ட பழக்கம் கிடையாது'ன்னீங்க... எல்லாமே தப்பும்மா! உடம்பு பூராப் பொய்யிம்மா. உங்களுக்கு இது ஒரு மாதிரி அதிர்ச்சியா இருக்கலாம். ஆனா உண்மை இதுதான். வீட்டிலேயே பாட்டில், சிகரெட்டு எல்லாம் வெச்சிருக்காரு. எல்லாம் ஒளிச்சுத்தான் வெச்சிருக்காரு! எல்லாமே ஒளிவு!''

''நீ கேக்கக் கூடாதோ?''

''கேட்டா விஸ்தாரமாப் பொய் சொல்வாரு. 'என் ஃப்ரெண்டு ஒருத்தன் வெச்சுக்கன்னு கொடுத்தான். அது இதுன்னு...' இதெல்லாம் விடுங்க. சின்ன விஷயங்க! பொம்பளை சபலம்!! கல்யாணமான மறு தினத்திலேருந்து கவனிக்கிறேன்! இதுவரைக்கும் எட்டு அல்லது ஒன்பது முறையாவது பல்வேறு சம்பவங்களை என்னால விவரிக்க முடியும். வேலைக்காரி, பக்கத்து வீட்டுல புதுசாக் கல்யாணம் பண்ணிக்கிட்டு வந்தவங்க, என் தங்கச்சி இப்படி... ஒழிஞ்சு போகட்டும்னு எத்தனை முறைதான் விட்டு வெச்சாலும் கடைசில இப்ப மனைவி என்கிற என் ஸ்தானத்துக்கே ஆபத்து வந்துடுச்சும்மா! மன்னிச்சுக்குங்க. உங்க மகனைப் பத்திப் பொறுக்க முடியாமத்தான் இந்தப் புகார்! என்கிட்ட நல்லவர்னு சொன்னீங்கம்மா... ஒண்ணு, உங்க மகனையே உங்களுக்குத் தெரியலை. இல்லே, நீங்களும் சேர்ந்து பொய் சொல்லியிருக்கீங்க! நெஞ்சில கைவெச்சுச் சொல்றேன்! நிராகரிப்பில இருக்கிற கொடுமை வேற எதிலும் இல்லைம்மா. ஒரு பெண் என்கிற ஆதாரமான அந்தஸ்து கலைஞ்சு போறப்ப எனக்கு எங்க நடுத்தெருவில விட்டுடுவாரோன்னு பயமா இருக்குது.''

''என்னை என்னம்மா செய்யச் சொல்றே?''

''உங்க மகனைக் கூப்பிட்டுப் புத்தி சொல்லுங்க முதல்ல. இல்லை, என்னையும் உங்க பேரனையும் இந்த வீட்டில ஏத்துக்குங்க. எனக்கு அந்தப் பொய் மனுசரோட குடித்தனம் செய்ய விருப்பமில்லை!''

**ம**ரகதவல்லி, யோசித்தாள். அவள் நெற்றிப் புருவங்கள் வில்லாக வளைந்து உதடுகள் துடிக்க ஆரம்பித்தன.

''இதைப் பத்தி ஏதாவது உங்கிட்ட ஆரம்பிச்சானா?''

''இல்லைங்க. அவரு எதுவும் சொல்லவே மாட்டாரு!''

''கிட்ட வா!''

அவள் அருகில் செல்ல அவளை அணைத்துக் கொண்டு ''என்னை மன்னிச்சுடு சாரதா!'' என்றாள். அவள் கண்களைத் துடைத்துக் கொண்டு, ''இப்படியெல்லாம் இருக்க மாட்டான்னு எதிர்பார்த்துத்தான் கல்யாணம் செய்து கொடுத்தேன். என் மேலே குற்றமில்லை. நல்லது நினைச்சுத்தான் செய்தேன். உங்கிட்டப் பொய் சொல்

வலை! உன்னைப் போல நானும் நம்பினேன்!''

''என்னவோ, ஏதோ எனக்கு ஒரு வழி சொல்லுங்க!''

''சொல்றேன். உனக்கு ஒரே ஒரு வழி தான் இருக்குது. உள்ளே வா.''

அடுத்த அறையில் — மாமனார் படுத்திருந்த அறைக்கு அழைத்துச் சென்றாள். பக்கத்தில் ஸ்டூலில் நிறைய மருந்து மாத்திரைகளும் பெட்பானும் ட்ரான்சிஸ்டரும் கொசு வலையுமாக மாமனார் படுத்திருந்தார். கண்கள் கலங்கிப் போய், ஒரே திசையில் பார்த்திருந்தன. முகத்தில் முள் தாடி. அருகில் சென்று மார்பைத் தட்டினாள்.

''எழுந்திருங்க, சாரதா வந்திருக்கால்ல.''

சாரதாவை அவர் மெதுவாகப் பார்த்துக் கைகூப்ப முயல, பார்கின்ஸன் தனமாக கைகள் உதற ஆரம்பித்து அடங்குவதற்கு ஒரு நிமிஷம் ஆயிற்று.

''இந்த மாதிரித்தான் எல்லாம் ஆடிப் போயிருச்சு! அடங்கிப் போயிருச்சு!''

''மாமா எப்படி இருக்கீங்க?''

''ஜகதீசு வள்ளியா...?'' என்றார் பிரயத்தனமாக.

''வரலை.''

அந்தப் பதிலுடன் திருப்தி அடைந்தவர் போலக் கண்மூடிக் கொண்டார்.

''இவரைப் பார்த்தே இல்லை? அடிபட்டு விழுந்தவர் போல! நீ என் மவனைப் பத்தி விவரிக்கும் போது எனக்குத் திக்குன்னுச்சு! நீ விவரிச்சது அத்தனையும் இவருக்கும் பொருந்திச்சு! அதே வம்பு, அதே மச்சினி சகவாசம், அதே நப்பாசை, அதே பொய்யி! எட்டு வருஷம் ஒரு குசினிக்காரியோட தனி வீடு வெச்சுண்டு குடித்தனம் நடத்தினாரு! அம்மா சாரதா, இந்த வம்சத்திலேயே இந்தப் பழக்கம் இருக்குதும்மா. இப்ப எப்படிக் கிடக்கிறார் பாரு. அந்தப் பொய் சுமக்கிறவங்க நாங்க! சாரதா, 'எனக்கு ஒரு வழி சொல்லு'ன்னு கேட்டே. நமக்கெல்லாம் ஒரே ஒரு வழிதாம்மா!''

சற்று நேரம் மௌனத்துக்குப் பிறகு, ''காத்திருக்கிறது! என் மகனும் இவரைப் போல ஆடி அடங்கி ஒடிஞ்சு போய் இளமை கரைஞ்சு நரை வந்து, டயபடிஸ், டென்ஷன், பிரஷர் எல்லாம் வந்து அவனை விழ்த்தி உன் காலடியில் வந்து விழுவான் பாரு. அப்பத்தான் உன் புருசன் உனக்கு முழுசாக் கிடைப்பான். அதுவரைக்கும் காத்திருக்கணும். வேற வழி இல்ல. நம்மால எதிர்நீச்சல் போட முடியாது.'' — சாரதாவை வாத்ஸல்யத்துடன் அணைத்துக் கொண்டாள்.

''என்னங்க, பாத்ரூம் போகணுமா?''

''ஆமாம்,'' என்று சொக்கலிங்கம் அவளைக் கைகூப்பி வணங்கினார்.



## மாதம் ஒரு தொகுதி

**பட்டுக்கோட்டைத் தொகுதியைப் பார்க்க வருகிறோம்!**

கல்கியின் 'மாதம் ஒரு தொகுதி' என்ற திட்டத்தின் கீழ் நடந்த ஆறாவது குலுக்கலில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள தொகுதி பட்டுக்கோட்டைத் தொகுதி!

இத் தொகுதியில் தமக்கு அடுத்தபடியாக வாக்குகள் பெற்ற இ. காங்கிரஸ் வேட்பாளரை விட 14,681 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி பெற்றிருப்பவர் தி. மு. க. வைச் சேர்ந்த கே. அண்ணாதுரை.

இப்படித் தம்மை வெற்றி பெறச் செய்த பட்டுக்கோட்டைத் தொகுதி மக்களுக்கு, எம். எல். ஏ. என்ற முறையில் கே. அண்ணாதுரை என்ன செய்திருக்கிறார்? வாக்குறுதிகளை நிறைவேற்றுகிறாரா இல்லையா? பட்டுக்கோட்டைத் தொகுதியைச் சேர்ந்த அனைவரும் தங்கள் எம். எல். ஏ. வான கே. அண்ணாதுரையிடம் கேட்க விரும்பும் கேள்விகளை எங்களுக்கு எழுதியனுப்பலாம். அவர் செய்யும் பணிகளைப் பற்றியும் விவரமாக எழுதலாம். கூடவே உங்கள் தொகுதி வளர்ச்சிக்காக என்ன செய்யலாம் என்கிற உங்கள் ஆலோசனைகளையும் எழுதலாம்.

நீங்கள் எழுதும் ஒவ்வொரு விஷயத்தையும் எம். எல். ஏ. கவனத்திற்குக் கொண்டு வந்து, அவருடன் எல்லா விஷயங்களையும் விவாதிப்போம். நேரடியாக வந்து சுற்றிப் பார்த்து உண்மைகளை ஆராய்வோம்.

கடைசியாக எங்கள் அனுபவங்களையெல்லாம் செப்டம்பர் மாதக் கல்கியில் கட்டுரையாக வெளியிடுவோம்.

**பட்டுக்கோட்டைத் தொகுதியிலுள்ள வாசகர்களின் கடிதங்கள் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 3.8.90.**

உறையின் மேல் 'மாதம் ஒரு தொகுதி' என்று குறிப்பிட்டு உடனடியாக எழுதியனுப்புங்கள்.

— ஆசிரியர்

# அதிர்ஷ்ட தேவதை

## 14

எட்டு அடிச் சதுர அறைக்குள் சிறைப்பட்ட ரங்கனுக்கு ஒவ்வொரு நிமிடமும் ஒவ்வொரு யுகமாக அலுத்தது. ரமணி நல்ல எண்ணத்துடன்தான் அவனைத் தன் வீட்டு மாடியில் தங்க வைத்திருக்கிறான். இதை அவன் உணர்ந்திருந்த போதிலும், ரமணி மீது அவனுக்குக் கோபம் வந்தது. அவன் ஏன் சுதந்திரமாக வெளியே நடமாடக் கூடாது? யார் அவனை என்ன செய்து விட முடியும்?

அறையில் ரமணி ஓர் அலாரம் கடிகாரத்தை வைத்திருந்தான். முக்கால் மணி நேரம் வேகமாக ஓடும் கடிகாரம். இப்போது அது நான்கு மணி என்று அறிவிக்க ரங்கன் சரியான நேரத்தைக் கணக்கிட்டுப் பார்த்தான். மூன்றே கால். பிற்பகல் ஒரு மணிக்கு ஆழ்வார்ப்பேட்டை ஒட்டலில் சாப்பிட்டு விட்டு வந்த அவனுக்குப் பசிக்கவில்லையென்றாலும், ஒரு 'ஸிங்கிள்' டீயாவது குடித்து வர வேண்டும் என்று தோன்றியது. சிறைக் கைதியைக் கூட அவ்வப்போது வெளியே உலாவ விடுவார்கள். ஏதானும் வேலை கொடுப்பார்கள். சுவாசிக்க நல்ல காற்று கிடைக்கும். லாட்டரியில் இருபத்தைந்து லட்சம் ரூபாய் பரிசு பெற்ற ஒரு பெரிய பணக்காரன் இப்போது சூழ்நிலை காரணமாக ஓர் அறையில் அடைக்கப்பட்டிருக்கிறான். ரங்கனுக்கு இதை நினைத்துப் பார்த்த போது அழுகையே வந்தது.

திடீரென்று கதவைத் தட்டும் ஓசை கேட்டது. ரமணி நேரத்துக்கு முன்னாலேயே வந்து விட்டானா? இருக்காது. ரமணி என்றால், 'ரங்கா' என்று குரல் கொடுத்திருப்பான். பின் யார் கதவை இடிக்கிறார்கள்?

அச்சத்துடன் அவன் கதவை லேசாகத் திறந்தான்.

**பி.வி.ஆர்.**

''நான்தான் ரங்கா!''

''வாங்கம்மா.''

ரமணியின் தாயார் கோமதி புன்முறுவலுடன், ''ஏம்ப்பா பயந்துட்டியா?'' என்று கேட்டாள்.

''ஆமாம்மா. ரமணி சார் சொல்லியிருக்கார், நான் ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணும்னு...''

''ரமணி எல்லா விவரத்தையும் எங்கிட்ட சொல்லியிருக்கான். கவலைப்படாதே... உன்னைப் பார்க்க ஒருத்தன் வாசல்லே நிக்கறான்.''

''யார் அம்மா?''

''பேர் கேட்டேன். வெங்கின்னான். இங்கே வரச் சொல்லட்டுமா... இல்லே நீ இறங்கிப் போய்ப் பார்க்கறியா?''

''நானே போறேம்மா.''

''வெங்கி நல்லவன்தானே?''

''ரொம்ப நல்ல மனுசன் அம்மா.''

ரங்கன் அவசர அவசரமாய் வெளியேறினான்.

காம்பவுண்டு கேட் அருகே போன பிறகுதான் அதிர்ச்சி அவனைத் தாக்கியது. அவனுக்காக மயில்சாமி காத்துக் கொண்டிருந்தான். ரமணியை மரக் கழியால் அடிக்க வந்தவன், எப்படி அவன் இருக்கும் இடத்தைத் தேடிக் கண்டுபிடித்திருக்கிறான்?

''வா, மாப்ளே... எம்மாம் நேரம் நான் காத்துட்டிருக்கிறது?'' என்றான் மயில்சாமி.

ரங்கன் அவனிடமிருந்து தப்பி ஓட நினைத்து விரைவாய்த் திரும்ப, மயில்சாமி ஒரே எட்டில் பாய்ந்து ரங்கனுடைய கையைப் பிடித்தான்.

''ஏன் பயந்து சாகறே.. நான் என்ன உன்னைக் கொலை செய்யவா வந்திருக்கேன்?''

ரங்கனுக்கு ஒருவிதமான அசட்டு தைரியம் திடீரெனப் பிறந்தது.

''ரமணியை நீ தாக்கினதுக்கு போலீஸ்லே புகார் கொடுத்திருக்காங்களே? நீ எப்படி இங்கே வந்தே?''

''எவனுக்கு தில்லு இருக்கு, எம் பேர்ல கம்ப்ளெயிண்ட் கொடுக்க... விசயம் தெரியுமா மாப்ளே, எனக்கு வேலை பூட்டுது.''

ரங்கன் மௌனமாக அவனையே பார்த்தான்.

''ஏன் அப்படிப் பாக்கறே... எனிக்கு இன்னாத்துக்கு இனிமே வேலை? என் மருமகப் புள்ளைதான் லட்சாதிபதியாயிட்டானே!''

''உனக்கு என்ன வேணும், மயிலு? நான் இங்கேதான் இருக்கேன்னு உனக்கு யார் சொன்னாங்க?''

''இதொரு கேள்வியா, மாப்ளே? ரமணி கையில நீ இருக்கே... அவன் உன்னை எங்கே உட்கார்த்தி வைப்பான்? பெரிய ஒட்டல்லேயா... மயில்சாமின்னா நீ வர மாட்டேன்னு, வெங்கின்னேன்... அந்த

அம்மாவும் ஏமாந்திடுச்சு...''

''உன்னோடு நின்னு பேச எனக்கு இஷ்டம் இல்லே.''

''எனிக்கு இருக்குதே!'' மயில்சாமி சிரித்தான்.

''என்ன வேணும்?''

''நான் எதுக்கு வருவேன், மாப்ளே? மொதல்ல நீ வேணும். அப்பாலே உன் பணம் வேணும்.''

''நான் தனத்துகிட்டே சொல்லிட்டே வீட்டை விட்டு வந்துட்டேன் மயிலு... நீ என்னைத் தொந்தரவு செய்யாதே.''

''தனம் என் மவ. அவ உன் பொண்ஜாதி.''

''எனக்கு அவளோட வாழ இஷ்டமில்லே... அவ செலவுக்கு மாசா மாசம் பணம் அனுப்பிடறதாச் சொல்லிட்டேன். நீ போயிரு.''

''நீ சொன்னாப் போயிடுவேனா, மாப்ளே... அவளோட வாழ உனக்கு விருப்பம் இல்லாட்டி என்ன, அவளுக்கு உன்னோடு வாழ ஆசை இருக்கே.. வா வூட்டுக்கு.''

''முடியாது.''

''உனக்கு ஒரு விசயம் தெரியுமா, ரங்கா?''

முதன் முதலாக 'மாப்பிள்ளை' சொந்தத்தைக் கை விட்ட மயில்சாமியின் குரல் இறுகியது.

'என்ன?' என்று ரங்கன் கேட்கவில்லை.

''நீ செத்தா உன் பணமெல்லாம் என் பொண்ணுக்குத்தான் வரும். நீ சாக ஆசைப்படறியா?''

சிலிர்த்தெழுந்த பயத்துடன் ரங்கன் மயில்சாமியைப் பார்த்தான். பிறகு மெல்லிய குரலில், ''என்னைக் கொலை செய்யப் போறியா?'' என்றான்.

''என் கையாலே செய்ய மாட்டேன்.. பயப்படாதே. ஆனா அப்படி உனக்கு ஒரு முடிவு வந்துட்டா, பணத்தை அனுபவிக்காமயே நீ பூடுவே. நீ இந்த ஆளை நம்பி இந்த வூட்லே ஒளிஞ்சுட்டு என்ன சுகத்தைக் காணுவே... வா, என் கூட வா... தனத்தோட வாழ்ந்தா வாழ்ந்துகிட, வாழாமப் போனாலும் சரி. அது உன் இஷ்டம். பணத்தால உலகத்தில என்னென்ன சொகமெல்லாம் கெடைக்குமோ அதெல்லாம் நான் வாங்கித் தாரேன். ஒரு காலத்தில நான் மிலிட்டரியிலே இருந்தப்ப விஸ்கியும் ரம்மும்தான் குடிப்பேன். இப்ப பணம் இல்லே. பட்டைக்கு வந்துட்டேன்... அந்தக் காலத்திலே என் கூடச் சுத்தின குட்டிங்க எவ்வளவு பேர் தெரியுமா? அவங்களுக்கெல்லாம் இப்ப வயசாகியிருக்கும்... ஆனா இப்பவும் புதுப் புதுக் குட்டிங்களெல்லாம் இருக்காங்க.''

மயில்சாமி பேசிக் கொண்டே போனவன், ரங்கன் மீது இருந்த பிடியைத் தளர்த்தினான். இடது கையால் பாக்கெட்டிலிருந்து பீடியை எடுத்து, ரங்கனை முழுதும் விடுவித்து வலது கையால் வத்திப் பெட்டியை எடுக்கப் போனான்.

அவன் பீடியைப் பற்ற வைக்கவும் ரங்கன், அசுர வேகத்துடன் வீட்டை நோக்கிப் பாய்ந்து ஓடவும் சரியாக இருந்தது.

அவன் வேகமாக வருவதைக் கண்ட கோமதி, பதற்றத்துடன் தன் கணவரை அழைத்தாள்.

அவர் வராந்தாவுக்கு வர, ரங்கன் மூச்சு இரைக்க ஓடி வந்து நின்றான்.





''ஏன் சார், இப்படி அநியாயத்துக்கு லஞ்சம் கேட்கிறீங்களே... யாராவது மாட்டிவிட்டு வேலை போயிட்டா என்ன செய்வீங்க?''

''அதுக்காகத்தானே முன்னேற்பாடா நான் அதிகமா லஞ்சம் வாங்கறதே!''

— சீர்காழி வி. ரேவதி.

''என்ன ரங்கா, என்ன நடந்தது?'' என்று கேட்டாள் கோமதி.

''அந்த ஆளு வெங்கின்னு பொய் சொல்லியிருக்கான் அம்மா. அவன் பேரு மயில்சாமி. அவன் கொலை செய்யவும் பயப்பட மாட்டான்.''

''நீ மொதல்ல மாடிக்குப் போய் உன் ரூமிலே இரு,'' என்றாள் கோமதி. பிறகு கணவரைப் பார்த்து, ''அவன் உள்ளே வந்தா என்ன செய்யறது?'' என்று கேட்டாள்.

''வரட்டும், பார்க்கலாம்'' என்றார், ரமணியின் தகப்பனார் சுந்தரம்.

அவர்கள் இருவரும் எதிர்பார்த்தது போல மயில்சாமி வீட்டை நோக்கி வரவில்லை. மாறாகத் திரும்பிச் சென்று கொண்டிருந்தான்.

''இந்த ரங்கனுக்கு ஆபத்து வருமோ வராதோ, இவனாலே நம்ப ரமணிக்கு நிச்சயமா ஏதானும் ஆபத்து வரும்!'' என்றாள் கோமதி.

''உன் புள்ளைக்கு இந்த வீட்டைப் பத்தி லட்சியம் கிடையாது. ஊரார் பிரச்னையைத் தலை மேல் போட்டுக் கொண்டு கூத்தாடுவான்.''

''இப்ப என்ன செய்யறது?''

''மொதல்ல ரங்கனை வேற எங்கானும் ஓர் இடத்திலே போய்த் தங்கச் சொல்லு... இந்த வீடு என்ன அகதிகள் முகாமா?'' என்றார் சுந்தரம்.

''ரமணி வரட்டும். இதுக்கு ஒரு முடிவு கட்டுவோம்,'' என்றாள் கோமதி.

ரங்கனுடைய அண்ணன், பெயர் சிவலிங்கம் என்று சொல்லிக் கொண்டு வந்தவன் வெளியேறியதும், மாலு ரமணி அருகே வந்து உட்கார்ந்தாள்.

''யார் அந்த ஆள், ரமணி?''

''இன்னொரு கழுகு!''

''புரியும்படியாச் சொல்லுங்களேன், ரமணி.''

''அனாதைப் பொணம் கிடந்தா அஞ்சு மைல் உயரத்திலேந்து கழுகுகள் பாய்ந்து வந்து கொத்தித் தின்னும். ஓர் அனாதைக்குப் பணம் வந்துட்டா, சொந்த பந்தத்தை மறந்து போனவங்களெல்லாம், மறுபடியும் சொந்தம் கொண்டாடி அவனைப் பிய்ச்சுத் திங்க வருவாங்க... இவன் அவர்களிலே ஒருத்தன். ரங்கனுக்கு அண்ணாவாம். பேர் எஸ். லிங்கமாம். அதாவது சிவலிங்கம்... கும்பகோணத்திலே உப்பு, புளி, மிளகாய் விக்கறவன்.''

''என்ன வேணுமாம்?''

''இவ்வளவு சொல்லியும் கேள்வி கேட்கிறியே மாலு? நாளைக்கு நீ என் மனைவியா வர்றப்ப, உன்னை நான் எப்படிச் சமாளிப்பேன்?''

''உங்களை லவ் பண்றப்பத்தான் என் புத்தி மழுங்கறது, ரமணி! கலியாணமாகி, நீங்க என் கைக்குள்ளே அடங்கிட்டா, என் புத்தி கூர்மையாகி விடும்.''

தாழ்ந்த குரலில் பேசிய மாலு சிரித்தாள்.

ரங்கனுக்குப் பரிசு வந்ததில் கஷ்டத்தை அனுபவிக்கிறவன் நான்தான், மாலு.''

''உங்க இடத்தில வேறு ஒரு ஆள் இருந்திருந்தா, நடக்கிற கதையே வேறே!''

''ஏன்? என்ன கதை நடந்திருக்கும்?''

''ரங்கன் சல்லிக்காசு பார்த்திருக்க மாட்டான். எந்தக் கோர்ட்டுக்குப் போயிருந்தாலும் அவன் ஜெயிக்க மாட்டான். ஏன்னா லாட்டரிச் சீட்டை வித்தவன் அவன் பேரை எழுதி வைக்கவில்லை. சீட்டும் ரங்கன் கையில் இல்லை.''

''அதாவது ரங்கன் தலையில் மிளகாய் அரைச்சிருப்பான்னு சொல்றே!''

''நீங்க சந்தனம் அரைச்சிருக்கீங்க, ரமணி. நேர்மையின் உச்சாணிக் கொம்புக்கே போயிட்டீங்க!''

''நேர்மைக்கு நீளமும் இல்லே, உயரமும் இல்லே மாலு. ரங்கனை ஒரு ரூபாய்க்கு ஏமாத்தறதும் ஒண்ணுதான், பல லட்சங்களுக்கு ஏமாத்தறதும் ஒண்ணுதான். நான் நினைச்சிருந்தா அவனை ஏமாத்தியிருக்கலாம். ஆனா அந்த எண்ணமே வரலே... அன்னிக்குத் தற்செயலா ஒரு 'மாலைப்' பத்திரிகையைப் பார்த்தேன். அப்பாவைப் பார்க்க ஒருத்தர் வந்திருந்தார். பெரிய கொட்டை எழுத்தில், '25 லட்சம் ரூபாய் யாருக்கு?' என்று எழுதி, கீழே நம்பரும் போட்டிருந்தது. அப்ப எனக்கு ரங்கன் ஞாபகமே வரலே. ஆனா வந்தவர், பேப்பரை மறந்து போய் வைச்சுட்டுப் போயிட்டார். மறுபடியும் படிக்கறப்ப முதல் பரிசிலிருந்து கடைசி பரிசு வரை நம்பரெல்லாம் போட்டிருக்கிறதைப் பார்த்தேன். அப்பத்தான் ஏதானும் ஒரு பரிசாவது ரங்கனுக்கு விழுந்திருக்குமான்னு பார்த்தேன்.''

''முதல் பரிசுன்னு தெரிஞ்சதும் உங்களுக்கு என்ன தோணித்து?''

''ஏது, பத்திரிகை நிருபர் கேட்கிற மாதிரிக் கேட்கிறே! சரி, சொல்றேன். ஒரு தடவைக்குப் பத்துத் தடவையா டிக்கட்டையும் நம்பரையும் மாறி மாறிப் பார்த்தேன். நடுவிலே சிவாவின் நினைவு வந்தது. டிக்கட்டைப் பத்திரப்படுத்தறதுதான் முதல் வேலைன்னு தோணித்து. உள்ளூர் பாங்க்கை விட வெளியூர் பாங்க்தான் நல்லதுன்னு பட்டது. அம்மாகிட்டக் கூட எந்த ஊர்னு சொல்லாம சேலத்துக்கு ரெயில் ஏறினேன்... ரங்கனுடைய பணத்தை மத்தவங்க நார் நாராக் கிழிக்கக் கூடாதுங்கற எண்ணம்தான் இருந்தது.''

''இப்படிப்பட்ட நேர்மைக்கு என்ன பரிசு கிடைச்சுது உங்களுக்கு? வெங்கி மட்டும் சமயத்திலே பாய்ஞ்சு வந்து காப்பாத்தியிருக்கா விட்டால் உங்க மண்டையை மயில்சாமி ரெண்டாப் பிளந்திருப்பான்.''

''இப்படிப்பட்ட அனர்த்தத்தை நான் நிச்சயமா எதிர்பார்க்கலே, மாலு. ஆனா அதிலேர்ந்து ஒண்ணு புரிஞ்சுக்கிட்டேன்.. ரங்கனுக்கு வரக் கூடிய ஆபத்து எனக்கும் உண்டுன்னு...''

''பணத்திலே பாதி இல்லேன்னாலும், ஆபத்திலே பாதி இருக்கு ரமணி. நான் ஒண்ணு சொன்னா கேட்பீங்களா?''

''என்ன மாலு?''

''படிப்போ புத்தியோ இல்லாத ஒரு ரெண்டுங்கெட்டானுக்கு நீங்க மகத்தான உதவி செய்ஞ்சுட்டீங்க. எல்லாப் பணத்தையும் அவன் பேர்லேயே போட ஏற்பாடும் செய்துட்டீங்க.. இனிமேலும் ரங்கனை உங்க வசம் வைச்சுப்பானேன்...? அவனை அவிழ்த்து விட்டுடுங்களேன்.''

''அதுக்கு இன்னும் நேரம் வரலே, மாலு. வந்ததும் நானே ஒதுங்கிடுவேன்.''

''நீங்க மட்டும் ரங்கனை மோசம் செய்திருந்தா... சரி சரி... ஒண்ணுமில்லே!''

''சொல்ல வந்ததைச் சொல்லு, மாலு. ஏன் தொண்டைக்குள்ளேயே நிறுத்திட்டே!''

''நீங்க இமயத்தின் உச்சியிலிருந்து விழுந்திருப்பீங்க... என் காதலே சுக்குநூறா வெடிச்சுச் சிதறியிருக்கும்.''

''நான் என்னைச் சத்திய சந்தன்னு சொல்லிக் கொள்ளலே மாலு. பணத்தைத் துச்சமா மதிக்கிறவனும் இல்லே... சொல்லப் போனா நான் ஒரு மனக் கோட்டை கட்டி வைச்சிருக்கேன். லட்சம் லட்சமா சம்பாதிக்கத் திட்டம் போட்டிருக்கேன்... நான் நினைச்சிருந்தா இந்த ரங்கனை ஏமாத்தியிருக்கலாம் மாலு. இந்த லட்சங்கள மூலமா மேலும் பல லட்சங்களைச் சம்பாதிக்க வழி ஏற்படுத்தியிருக்கலாம். ஆனா எனக்கு அப்படிச் செய்யத் தோணலே... ஏன்னும் சொல்லத் தெரியலே.''

''யூ ஆர் ரியலி க்ரேட், ரமணி.''

''யாருமே க்ரேட்டும் இல்லே. யாருமே ஸ்மாலும் இல்லே மாலு. எனக்கு என்ன கிடைக்கணுமோ அது நிச்சயம் கிடைக்கும்.. இதிலே எனக்கு நம்பிக்கை இருக்கு.''

''ஆனா பணம் காசு எல்லாத்துக்கும் மேல, எனக்கு ஒரே ஒரு ஆசைதான் இருக்கு ரமணி. அது என்னன்னு நான் சொல்லித்தான் தெரியணும்னு இல்லே.''

''எனக்கு மட்டும் அந்த ஆசை இல்லியா, மாலு? நாம் ஏன் இன்னும் கொஞ்ச காலம் பொறுமையாக் காதல் உலகத்திலேயே வாழப்படாது!''

''வேற வழிதான் இல்லியே! அப்படியே வாழ்ந்துட்டும் போவோம்!''

**அ**ன்று மாலை வீட்டை அடைந்ததும், ரமணி நடந்ததையெல்லாம் அம்மா மூலம் அறிந்து கொண்டான். மயில்சாமி ஒரு சாதாரண முள் அல்ல, விஷ முள் என்று தனக்குள் முணுமுணுத்தபடி ரங்கன் இருக்கும் அறைக்கு விரைந்தான்.

ரங்கன் கதவைத் திறந்தான். முகம் பயத்தில் வெளிறிப் போயிருந்தது.

''எதுக்கும் பயப்படாதே, ரங்கா! நான் இருக்கேன்!''

''ரமணி சார்... அந்த மயில்சாமி வந்தான்...''

''எல்லாம் அம்மா சொன்னா. இப்ப மணி அஞ்சரை. நான் உனக்காகக் கொஞ்சம் சீக்கிரமே ஆபீசை விட்டு வந்தேன்... ஆறு மணிக்கு நீ ஒருத்தரைச் சந்திக்கப் போறே!"

''யார் ரமணி சார்!''

''நீயே பார்த்துத் தெரிஞ்சுக்க! நீ அசந்து போயிடுவே! பணம் வந்தாலே மதிப்பும் மரியாதையும் தானா வந்துடறது! இன்னிக்கு உன்னை வாழ்த்த ஒருத்தன் தலை தெறிக்க வர்றான். ஆறு மணிக்கு நீ வருவேன்னு சொல்லியிருக்கேன். ஒரு கிழிசல் பாண்ட்டும் கிழிசல் சட்டையும் போட்டுக்கிட்டு ரெடியா இரு!''

சொல்லி விட்டு ரமணி வெளியேற, ரங்கன் மேலும் குழம்பிப் போனான்.

(தொடரும்)

''பெண்களின் கூந்தலில் உள்ள மணம் எந்தப் பூவுடையது எனக் கண்டுபிடித்தாயிற்று, அரசே!''

''மகிழ்ச்சி... என்ன பூ அது!''

''ஷாம்பூ!''



# எதிர் வீட்டில் சில இளைஞர்கள்



"வாங்களேன், வந்து பாருங்களேன்! எதிர் வீட்டு மாடியிலே நடக்கிற அநியாயத்தை..." என்று தனது கணவரின் கையைப் பிடித்து இழுக்காத குறையாக அவரைப் புழக்கடைக்கு அழைத்து வந்து நிறுத்தினாள் ரங்கநாயகி.

"எதிர்வீட்டு மொட்டை மாடியிலே என்னடி அநியாயம்? எவனாவது கொள்ளை அடிக்கிறானா?" என்றார் அவள் கணவர் பரஞ்சோதி, கொட்டாவியுடன்.

"கொள்ளைதான் போகப் போகிறது, கொஞ்ச நாளிலே. அதுவும் நம்ம வீட்டிலே!"

எதிர் மாடியைப் பார்த்தார் பரஞ்சோதி. நிறையத் தலைகள் தென்பட்டன. டிஸ்கோ கட்டிங் வெட்டிய கலைந்த தலை இளைஞர்கள்.

"என்னடி ரங்கம், இத்தனை கூட்டம்?"

"கூட்டம் மட்டும்தான் உங்க கண்ணுக்குத் தெரிஞ்சுதாக்கும்? நல்லாப் பார்த்துத் தொலையுங்களேன்."

"அடடே! பசங்க உடற்பயிற்சி பண்றாங்க!"

"மேலே சட்டையோ இடுப்பிலே வேஷ்டியோ இல்லாம வெறும் ஜட்டிகளோடு தடிமாடுக கணக்காத் திரியறானுங்களே!"

"அவன் வீட்டு மாடியிலே அவன் எப்படியும் இருந்திட்டுப் போறான். நமக்கென்ன?"

"கல்யாண வயசிலே குதிர் குதிரா மூணு பொண்ணுகளை வைச்சிருக்கோம்கறது உங்களுக்கு நினைவு இருக்கா இல்லையா?"

"சித்ரா, ஜெயந்தி, காயத்ரினு மூணு



பெத்திருக்கோம்..." என்று கூறிய பரஞ்சோதிக்கு, அப்போதுதான் மூளைக்குள் உதறல் எடுத்தது.

"ரங்கம்! நம்ம பொண்ணுகளை இந்தப் பயல்கள் ஏதாவது பண்ணிடுவானுக... அப்படித்தானே!"

"அப்பாடி! உங்க குருவி மூளைக்கு இப்போதாவது விஷயம் எட்டிச்சே, சந்தோஷம்!" அவர் மனைவி நொடித்தாள்.

"இதுக்கு என்னடி பண்றது?"

"என்ன பண்றதா! சட்டியும் பானையும் பண்ணுங்க. எதிர் மாடியிலே அவனுக சதா காலமும் அரை நிர்வாணமாத் திரியறானுக. தண்டால், பஸ்கினு மாரை நிமிர்த்திண்டு வளைய வர்றானுக. பின் வாசல் பக்கம் வரவே முடியலைம்மானு மூணும் அழுவுதுக. அநுமந்தராயர் கோயில் விதானம் மாதிரி மேலே திறந்து கிடக்கிற பாத்ரூமுக்குள்ளே போய் எப்படி அந்தக் குழந்தைகள் குளிக்கும்? துணி துவைக்கக் கிணற்றடிப் பக்கம் வரவோ, மல்லிகைப் பந்தலடியிலே கொஞ்ச நேரம் அக்கடானு உட்காரவோ... ஒண்ணுக்கும் வழியில்லே!"

"அதற்கு என்ன செய்யணும்ங்றே? அவனுகளோடு போய்ச் சண்டை போடச் சொல்றியா? ஒவ்வொருத்தனும் கரணை கரணையாக் கையும் காலும் பீமசேனன் போல இருக்கானேடி?"

"இந்தத் தொகுதி எம். எல். ஏ. உங்க நண்பர்தானே. அவர்கிட்டே சொல்லி இந்தப் பயல்களை விரட்டியடிக்கச் சொல்லுங்க."

"அவனுக வீட்டை விட்டுப் போவானுகளா?"

"இத்தனை நாள் வரைக்கும் பிள்ளையார் கோயில் திடல்லே உடற்பயிற்சி பண்ணிட்டுக் கிடந்தவனுகதானே! இப்போ ஆளுக்குக் கொஞ்சம் பணம் போட்டு இந்த வீட்டை வாடகைக்குப் பிடிச்சிருக்காங்க. விரட்டுகிற ஆள் விரட்டினால் தலை தெறிக்க ஓடிட மாட்டானுகளா?"

"சரிடி. நாளைக்கே நான் எம். எல். ஏ. கார்வேந்தனைப் போய்ப் பார்க்கிறேன்."

"உங்களுக்குச் சமர்த்துப் போதாது. நானும் கூட வர்றேன்."

ஒகே! ரெண்டு பேரும் போகலாம்.

மறுநாள் காலையில் பரஞ்சோதியும் ரங்கநாயகியும் அந்தத் தொகுதி எம். எல். ஏ. கார்வேந்தனைச் சந்திக்க, அவரது இல்லத்திற்குச் சென்றார்கள். வீட்டு வாசலில் வழக்கம் போல கார்கள், ஆட்டோக்கள், கட்சித் தொண்டர்கள்... என்று சகலரும் அலைமோதிக் கொண்டிருந்தார்

கள்.

கேட் அருகே இருந்த வாட்ச்மேன் பரஞ்சோதியைப் பார்த்ததும் "வணக்கம் ஐயா!" என்றான்.

"எம். எல். ஏ. இருக்காரா, முனுசாமி?"

"இருக்காரு. உள்ளே போங்க" என்று கொஞ்சமாய்க் கதவு திறந்து, பரஞ்சோதியை யும் ரங்கநாயகியையும் மட்டும் அனுமதித் தான்.

தமது பி. ஏ.வுடன் ஏதோ விவாதித்துக் கொண்டிருந்த எம். எல். ஏ. கார்வேந்தன், தலைநிமிர்ந்து பார்த்தார்.

"வாங்க பரஞ்சோதி. வாங்கம்மா! துரை, ரெண்டு காப்பி கொண்டு வரச் சொல்லு!" என்றார்.

"அதெல்லாம் ஒண்ணும் வேண்டாங்க! உங்ககிட்டே ஓர் உதவி... அவசரமா வேணும்" என்றார் பரஞ்சோதி.

"உங்க பெரிய பொண்ணு சித்ராவுக்கு வேலை வேணும்னு சொன்னீங்களே! தொழிலதிபர் திருமூர்த்திகிட்டே சொல்லி யிருக்கிறேன்."

"அவர் போன மாதமே சித்ராவைக் கூப் பிட்டு வேலை போட்டுக் கொடுத்திட்டார்."

"அப்புறம் வேறே என்ன உதவி வேணும் பரஞ்சோதி? பணம் ஏதாவது தேவையா?"

"ஒரு நியுஸென்ஸ் கேஸ் கார்வேந்தன். என்னோட எதிர் வீட்டு மாடியிலே உடற் பயிற்சி கிளப் ஒண்ணை வச்சுக்கிட்டு வாலி பப் பசங்க ஒரே ரகளை!" என்று அனைத்து விவரத்தையும் கூறினார்.

அவர் மனைவி ரங்கம் கண்ணீர் விடாத குறையாக ஒப்பாரி வைத்தாள்.

"ஐயா நீங்கதான் எப்படியாவது அந்தத் தடியனுங்களை விரட்டியடிக்க உதவி செய்ய ணும்!" என்றாள்.

"என் செல்வாக்கைப் பயன்படுத்தி அவர்களை விரட்டிட முடியும். ஆனால் உங்கள் பெண்களை எப்போதும் வீட்டுக் குள்ளேயே பூட்டிப் பாதுகாக்க உங்களால் முடியுமா?"

"என்னங்க சொல்றீங்க?"

"கடை கண்ணிக்கோ, கோயிலுக்கோ சினிமாவுக்கோ போகும் போது வீதியில் இருந்தபடி அவர்கள் கலாட்டாப் பண்ணினா என்ன செய்வீங்க?"

"போலீஸ் எதுக்கு இருக்கு கார்வேந்தன்? ரிப்போர்ட் கொடுத்து அவனுகளை உள்ளே தள்ளிட மாட்டேனா?" என்றார் பரஞ் சோதி.

"போலீஸ் ஸ்டேஷன் படியேறிச் சந்தி சிரிக்க வேணுமா? அப்புறம் நம்ம பெண் களை எவன் கட்டுவான்? புரியாம உளறா தீங்க!" என்று அதட்டினாள் ரங்கநாயகி.

"அதுதாம்மா சொல்றேன். உங்க பெண் களுக்குப் பாதுகாப்பு வேணும்னா உங்க பெண்களை ஜாக்கிரதை பண்ணி வச்சுக் கங்க! அதை விட்டுட்டு, அவனுகளை விரட்ட நினைக்கிறது சரியான அணுகு முறையில்லை. எதிர்ப்பு ஏற்படும் போது தான் இளைஞர்கள் மனம் முரண்டு பிடிக் கும். இதுவரை உங்க வீட்டுப் புழக்கடை யைச் சரியாப் பார்க்காதவன் கூட, ஆர்வ மாப் பார்க்க ஆரம்பிப்பான். உங்க வீட் டிலே மூணு வயசுப் பெண்கள் இருப்பது அந்த இளைஞர்களுக்கே கூட இதுவரை தெரியாமல் இருக்கலாம். வீணா விஷயத் தைப் பெரிசுபடுத்தித் தலைவலியைத் தேடிக்க வேண்டாம் பரஞ்சோதி! எப்போதும் போல இயல்பா அந்தப் புழக் கடையிலே பெண்களைப் புழங்க விடுங்க. இளைஞர்களின் கண்களுக்கு அது பழக்கப் பட்டுப் போயிடும். அப்புறம் எட்டிப் பார்க்க மாட்டார்கள்" என்றார் கார்வேந்தன்.



# கல்கி

1990 ஜூலை 22
மலர் : 48 இதழ் 51
பிரமோதூத ஆடி 6

## ரூ. 4000 கோடி சிக்கனம்! — எங்ஙனம்?

'மத்திய அமைச்சகங்கள் எல்லாம் பத்து சதம் செலவைக் குறைக்க வேண்டும்' என்று நிதி அமைச்சர் மது தண்டவதே கேட்டுக் கொண்டிருக்கிறார். இதன் மூலம் நாலாயிரம் கோடி மிச்சமாகும் என்பது கணிப்பு. பின் விளைவாக, பட்ஜெட்டில் விழுந்த பற்றாக்குறை பெருமளவு குறையும்; எனவே பண வீக்கம் இராது; விலைவாசி உயராது! காகிதக் கணக்கு சரிதான். ஆனால் நடைமுறையில் 4000 கோடி என்ன, 400 கோடி கூட மிச்சம் பண்ண மாட்டார்கள்.

''விமான நிலையத்துக்கு வழி அனுப்பவும் வரவேற்கவும் பட்டாளம் பட்டாளமாக வரவேண்டாம்'' என்று முன்பு மொரார்ஜி கூறினார். யார் கேட்டார்கள்? இப்போது வாரத்தில் அரை நாள் பெட்ரோல் பங்குகளை மூடி வைத்துப் பொருளாதாரத்தையே புரட்டிவிட எண்ணுகிறார்கள்! அபத்தம். இவையெல்லாம் யானைப் பசிக்குச் சோளப் பொரி.

சிக்கனம் பற்றிப் பேசு முன்னர், 'எங்கே கோளாறு?' என்று சிந்திக்க வேண்டும். கடந்த நாற்பது ஆண்டுகளில் இலவசங்களுக்கு எல்லாரையும் பழக்கப்படுத்தி விட்டது தான் அடிப்படைத் தவறு. 'இலவசம்' என்னும் போது நாம் தமிழக அரசின் லட்டு திட்டத்தையோ வேட்டி — புடைவை விநியோகத்தையோ மட்டும் குறிப்பிடவில்லை. பகாசுர இலவசங்கள் — கண்ணுக்குத் தெரியாமல் — உள்ளன! உதாரணமாக, விவசாயிக்குக் குறைந்த விலையில் ரசாயன உரம் தர வேண்டும் என்பதால் ரசாயன ஆலைகளுக்கு ஆண்டுதோறும் அரசு பல கோடிக் கணக்கில் பணம் தந்து நஷ்டத்தை ஈடு செய்கிறது. இப்போது தேர்தல் வாக்குறுதிப்படி கடன் ரத்து — அதை நெசவாளிக்கும் விரிவாக்க உத்தேசம். அரசாங்க உத்தியோகங்களில் சம்பளம் தவிர 'பெர்க்ஸ்' எனப்படும் இலவசங்கள் ஏராளம். போதாக்குறைக்குப் பதின்மூன்று மாதச் சம்பளம் கட்டாயம். இப்படி எத்தனை எத்தனையோ! அநேகமாக எல்லா அரசுத்துறை நிறுவனங்களும் நஷ்டத்தில் நடக்கின்ற போது, நஷ்டத்தில் இயங்கும் தனியார் நிறுவனங்களையும் தொழிலாளர் நலன் கருதி அரசு ஏற்பது என்பது வேறு நடைமுறையாகி விட்டது!

இப்படியெல்லாம் சலுகைகளுக்குப் பழக்கப்படுத்திவிட்ட பிறகு, இப்போது இந்தச் சலுகைகளை வாபஸ் பெறுவதென்றால் எதிர்ப்புக் கூக்குரல்தான் எழும். மார்கரெட் தாட்சர் முன்பு கல்வி அமைச்சராக இருந்த போது, ''பள்ளிக் குழந்தைகளுக்குப் பால் தருவது அரசின் பணி அல்ல, அது பெற்றோர் கடமை'' என்று கூறினார். அவ்வளவுதான், ''Thatcher, Milk Snatcher!'' என்று கோஷமெழுப்பி அவரைப் படாதபாடு படுத்தி விட்டார்கள்! இங்கிலாந்திலேயே அப்படி என்றால் இங்கே கேட்க வேண்டுமா?

நவீனங்களை வரவேற்க நாடு தயாராகு முன்னரே நவீனப்படுத்துவதால் ஏற்படும் நஷ்டம் பல நூறு கோடி. உதாரணமாக ஏர் பஸ் 320 க்கு ஏற்ப விமான நிலையங்கள் தயாராகு முன்னரே அவற்றை வாங்கியதில் என்ன நடந்தது? கடந்த சில மாதங்களில் அவை பறக்காததால் எவ்வளவு நஷ்டம்? கரையோரக் கடல் பகுதிகளில் எரிவாயு கிடைக்கிறது என்று குடைந்து விட்டார்கள். அதைப் பயன்படுத்திக் கொள்ள முன்னேற்பாடுகளைச் செய்யவில்லை. இதனால் எத்தனை எரிவாயு வீணே எரிக்கப்படுகிறது? எத்தனை கோடி நஷ்டம்? கணக்குப் பார்த்தால் தலை சுற்றும்!

இவ்வாறெல்லாம் முன் யோசனை இன்றி நடந்து கொண்டு விட்டு, இப்போது ''சிக்கனம், சிக்கனம்'' என்று அடித்துக் கொண்டால் என்ன பயன்? ராணுவச் செலவுகளைக் குறைக்க முடியாது. வேண்டுமானால் திட்டச் செலவினங்களைக் குறைத்து, நாட்டின் முன்னேற்றத்தை மேலும் தாமதப்படுத்தலாம்!

சிக்கலிலிருந்து மீள வழி இல்லாமல் போகவில்லை. முதலாவது சோஷலிஸக் கொள்கையை ருஷ்யாவே கைவிட்டு விட்டது என்பதை உணர்ந்து, நாமும் அதனை உடைப்பில் போட வேண்டும். பிரிட்டனில் தாட்சர் செய்தது போல், அரசுத் துறை நிறுவனப் பங்குகளைப் பொது மக்களுக்கு விற்று, அவற்றைத் தனியார் துறையாக்க வேண்டும். அரசாங்கத்தில் புதிதாக யாரையும் அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு வேலைக்கு எடுப்பதில்லை; புதிய வாகனங்கள் வாங்குவதில்லை; அரசுத் துறையில் இனி புதிய நிறுவனங்கள் தோன்றாது என்றெல்லாம் முடிவெடுத்து, அவற்றில் உறுதியாக நிற்க வேண்டும். வரிகளைக் குறைத்தும், பர்மிட் — லைசென்ஸ் முறையை ஒழித்தும் கறுப்புப் பணப் பொருளாதாரத்துக்கு இடமில்லாமல் செய்துவிட வேண்டும். சுருங்கச் சொல்வதெனில், ''குறைந்தபட்ச அரசு; அதிகபட்ச மக்கள் சுதந்திரம்.''

இந்தக் கொள்கையைப் படிப்படியாக அமுலாக்கினால், அரசுக்குப் பிரச்னைகள் கொஞ்சம் கொஞ்சமாகக் குறையும்; மக்களுக்கோ சுபிட்சம் வேகம் வேகமாகப் பெருகும்!

# கதை பிறந்த கதை!

நீல வானத்திலிருந்து பூரண சந்திரன் அமுதக் கிரணங்களைப் பொழிந்து கொண்டிருந்தான். பூவுலகம் மோகன நிலவிலே மூழ்கி அமைதி குடிகொண்டு விளங்கியது. எதிரே எல்லையின்றிப் பரந்து கிடந்த வங்காளக் குடாக் கடலில் சந்திரக் கிரணங்கள் இந்திர ஜால வித்தை செய்து கொண்டிருந்தன. கரையோரத்தில் சின்னஞ்சிறு அலைகள் அதிக ஓசை செய்து அமைதியைக் குலைக்க விரும்பாதவை போல் இலேசான சப்தத்துடன் எழுந்து விழுந்து கொண்டிருந்தன.

கடல் ஓரத்து வெண் மணலில் நாங்கள் உட்கார்ந்திருந்தோம். ரஸிக மணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களும் இன்னும் இரு நண்பர்களும் நானும் இருந்தோம். வேறு மனிதர்களோ பிராணிகளோ கண்ணுக்கெட்டிய தூரம் காணப்படவில்லை.

மாமல்லபுரத்துக் கடற்கரை. பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னால் நடந்த சம்பவம். ரஸிகமணி அவர்கள் வழக்கம் போல் கவிதையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.

'விதியின் எழுத்தைக் கிழித்தாச்சு! — முன்பு
விட்டகுறை வந்து தொட்டாச்சு!'

என்ற ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதியாரின் பாடல் வரிகளை அழுத்தந் திருத்தமாக எடுத்துரைத்தார்.

'முன்பு — விட்டகுறை வந்து தொட்டாச்சு!' என்னும் வரி ஒரு சக்தி வாய்ந்த மந்திரத்தைப் போல் என்னை மதிமயங்கச் செய்தது. அந்தக் கடற்கரை மணலில் அதே மாதிரி வெண்ணிலவில் இதற்கு முன் எத்தனையோ தடவை நான் உட்கார்ந்திருந்ததாகத் தோன்றியது. முந்தைய பிறவிகளில் விட்ட குறைதான் இங்கே என்னைக் கொண்டு வந்து சேர்த்து இன்று இந்தக் கடற்கரை ஓரத்திலே உட்காரச் செய்திருக்கிறது என்றும் தோன்றியது.

கடலிலே ஆயிரமாயிரம் படகுகளும் கப்பல்களும் திடீரென்று காட்சி அளித்தன. கரையிலே கூட்டங் கூட்டமாக ஆடவரும் பெண்டிரும் நடமாடிக் கொண்டிருந்தார்கள். சற்றுத் தூரத்தில் மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் எழுந்தன. அவற்றின் உச்சியில் ரிஷபக் கொடிகளும் சிங்கக் கொடிகளும் உல்லாசமாகப் பறந்தன. இனிமை ததும்பிய இசைக் கருவிகளிலிருந்து எழுந்த சங்கீதம் நாற்புறமும் சூழ்ந்து போதையை உண்டாக்கிற்று. கண்ணுக்குத் தெரிந்த பாறைகளில் எல்லாம் சிற்பிகள் கையில் கல்லுளியை வைத்துக் கொண்டு வேலை செய்தார்கள். எங்கேயோ யாரோ காலில் கட்டிய சதங்கை ஒலிக்க நடமாடிக் கொண்டிருப்பதை உணர முடிந்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் அந்த அகக் காட்சிகள் தெளிவடைந்தன. உருவங்களும் முகங்களும் இனந்தெரியுமாறு எதிரே தோன்றின.

ஆயனரும் சிவகாமியும் மகேந்திர பல்லவரும் மாமல்லரும் பார்த்திபனும் விக்கிரமனும் அருள்மொழியும் குந்தவியும் பொன்னனும் வள்ளியும் கண்ணனும் கமலியும் புலிகேசியும் நாகநந்தியும் என்னுடைய மனக்கண் முன்னால் பவனி வந்தார்கள். அப்படிப் பவனி வந்தவர்கள் என் உள்ளத்திலேயே குடிபுகுந்து விட்டார்கள்.

இரண்டு தினங்கள் மாமல்லபுரத்தில் தங்கியிருந்தோம். அற்புதச் சிற்பங்களைத் தாங்கிய கற்பாறைகளைப் பார்த்தோம். குன்றில் குடைந்தெடுத்த கோயில்களையும் விமானங்களையும் பார்த்தோம். ஒவ்வொரு கல்லும் ஒரு கதை சொல்லிற்று. ஒவ்வொரு சிற்பமும் ஓர் இதிகாசத்தை எடுத்துரைத்தது. பார்க்கப் பார்க்க வியப்பு மிகுந்தது; கேட்கக் கேட்கப் பரவசமாயிற்று. கையிலே பிடித்த கல்லுளிகளையே மந்திரக் கோல்களாகக் கொண்டு எந்த மகா சிற்பிகள் இத்தகைய மகேந்திர ஜாலங்களைச் செய்தார்களோ என்று நினைத்தபோது அவர்களைக் கையெடுத்துக் கும்பிடத் தோன்றியது; அந்தச் சிற்பிகளிடம் தோன்றிய பக்தியினால் தலை தானாகவே வணங்கிற்று.

*— சிவகாமியின் சபதம் நூலுக்கு 1948 — இல் எழுதப்பட்ட முன்னுரையிலிருந்து சில பகுதிகள்.*

# அதிர்ஷ்ட 15 தேவதை

"ரமணி சார், எதுக்கு என்னை இந்தப் பார்க்குக்கு அழைச்சுட்டு வந்திருக்கீங்க?'' என்று ரங்கன் கேட்டான், சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே.

''அதோ குழந்தைங்களெல்லாம் விளையாடறாங்களே, அதை நீ பார்த்து ரசிக்க வேண்டாமா? அதுக்குத்தான்.''

''ரமணி சார், நான் மனசு இடிஞ்சு போயிருக்கேன். என்னிக்கு எந்த வேளையிலே மயில்சாமி கத்தியும் கையுமா எம் பேர்ல பாய்வான்னு பயந்து சாகறேன். நீங்க என்னைக் கேலி செய்யறீங்க!''

ரமணி பதில் கூறவில்லை. கடிகாரத்தின் பெரிய முள் பன்னிரண்டில் நிற்க, அவன் பூங்காவின் நுழைவாயிலைப் பார்த்தான். இருபத்தைந்து லட்சத்தைச் சூறையாட வருகிறவன் நிச்சயமாகக் காலதாமதம் செய்ய மாட்டான் என்று அவனுக்குத் தெரியும்.

சிவலிங்கம் நுழைவாயிலைக் கடந்து முன்னேறி நடந்து வந்து கொண்டிருந்தான்.

''அதோ ஒரு ஆள் வேட்டியும் மஞ்சள் கலர்லே அரைக்கை ஜிப்பாவுமா தொந்தி வழிய நடந்து வர்றானே, அவன் யார்ன்னு தெரியுமா, ரங்கா உனக்கு?''

ரங்கன் ஓரிரு வினாடிகள்தான் அந்த உருவத்தைப் பார்த்தான். பார்த்தவன் காலில் தேள் கொட்டியது போல,

''என் அண்ணன். அவர் எதுக்கு இங்கே வர்றார்?'' என்று அலறினான்.

''மயில்சாமி எதுக்கு வந்தான்?''

''பணத்துக்கு.''

''இவனும் அதுக்குத்தான்.''

''எனக்கு அண்ணனைப் பார்க்க வேண்டாம், ரமணி சார்.''

''நான் இருக்கேன், பயப்படாதே.''

சிவலிங்கம் பூங்காவின் மற்ற பகுதிகளில் தேடிக் கொண்டிருக்கையில் ரங்கன் பயத்தில் சிலிர்த்துக் கொண்டிருந்தான்.

பலசரக்குக் கடையில் அவன் பட்ட அடி உதைகள். அவன் வீட்டில் சரியாக மாவாட்டவில்லை என்ற காரணத்துக்காக அண்ணி கொட்டிய வெந்நீர், ஒரு மாதம் ஓட்டலில் கிடைத்த பத்து ரூபாய்க்கும் லாட்டரிச் சீட்டு வாங்கியதற்காக, அண்ணன் அடித்த செருப்பு. ஏதோ ஒரு கோபத்தில் அண்ணி அவனைக் கிணற்றடியில் இரவு முழுதும் உட்கார வைக்க; அப்போது அவனுடைய தலையில் கொட்டித் தீர்த்த மழை...

எல்லாம் இப்போது இமைக்கும் நேரத்தில் ரங்கன் கண்முன் டி.வி. விளம்பரங்கள் போல வந்தன.

மீண்டும் அவன் தலைநிமிர்ந்த போது ''தம்பீ...'' என்ற குரல் கேட்டது.

'அண்ணா!' என்று மறுகுரல் கொடுக்க அவன் நா அசையவில்லை.

''தம்பி, எப்படி இருக்கே...? சுகமா இருக்கியா...? அண்ணி உன்னை ரொம்ப விசாரிச்சா.''

ரங்கன் பதில் பேசவில்லை. என்னதான் வெகுளியாய், அப்பாவியாய் இருந்தாலும், இருபத்தைந்து லட்சம், இறந்து போன சொந்த பந்தங்களை உயிர் மூட்டி எழுப்புகிறது என்பதை உணர்ந்தான்.

''சார், என் தம்பி என் கூடப் பேசக் கூச்சப்படறான். ஆட்சேபணை இல்லேன்னா, அவனை நான் லாட்ஜுக்கு அழைச்சுட்டுப் போறேன்,'' என்றான் சிவலிங்கம் புன்முறுவலுடன் அமர்ந்திருந்த ரமணியைப் பார்த்து.

ரமணி இப்போது வாய் விட்டுச் சிரித்தான்.

''என்ன எஸ். லிங்கம் இப்படிக் கேக்கறீங்க? நீங்க இவனுக்கு அண்ணன். உங்களுக்கு இவன் தம்பி. நீங்க அழைச்சுட்டுப் போறதுக்கு நான் ஏன் ஆட்சேபணை செய்யணும்?''

''நீங்கதானே சொன்னீங்க, ரங்கன் உங்க பாதுகாப்பிலே இருக்கிறதா?''

''இப்பவும்தான் சொல்றேன். ரங்கனுக்கு உங்ககூட நீங்க தங்கியிருக்கிற லாட்ஜுக்குப் போகச் சம்மதம்னா போகலாமே!''

''வா, தம்பி போகலாம்.''

''நீங்க யார்ன்னு எனக்குத் தெரியாது'' என்றான் ரங்கன். இப்படிப் பேசத் தனக்கு எப்படிச் சாதுரியம் பிறந்தது என்று அவன் தனக்குள்ளேயே வியந்து போனான்.

''ரங்கா, என்னை யார்னு உனக்குத் தெரியலையா... பாவம் நீ, சின்ன வயசிலேயே மந்தனா இருப்பே.. ஆனா இப்ப மறதியுமா வந்துட்டுது? நான் உன் அண்ணன்டா.. லிங்கம்டா.. நானும் உன் அண்ணி மரகதமும் ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ்லே கலியாணம் செய்ஞ்சுக்கிட்டப்ப நீதானே ஒரு சாட்சிக் கையெழுத்து போட்டே. அதையும் மறந்துட்டியா?''

''சரி, நீங்க என் அண்ணனாவே இருங்க.. இப்ப எதுக்கு என்னைப் பார்க்கக் கும்ப

பி.வி.ஆர்.

கோணத்தி லேர்ந்து வந்திருக்கீங்க!

''பாத்தாயா, நீயே நான் எங்கேருந்து வந்திருக்கேன்னு சொல்லிட்டே. இவர்தான் சொல்லியிருக்கணும்.''

''அவர் என்னோட ரமணி சார். இங்கே வந்து சேர்ற வரைக்கும் அவரு உங்களைப் பத்தி ஒரு வார்த்தைப் பேசலை.''

''சரி, அப்படியே இருக்கட்டும். நாம ஒரே தாயோட வயத்தில் பொறந்தவங்க.''

''அம்மா சாகறதுக்கு முன்னாடி என்னையும் தம்பி கோவிந்துவையும் உங்க கையில ஒப்படைச்சுட்டு என்ன சொல்லி அழு தாங்க?''

''என்ன சொன்னாங்க, ரங்கா?''

''ஹாங், அம்மாவையும் அம்மா செத்ததையும் நீங்க உங்க சௌகரியத்துக்கு மறந்து போயிடுவீங்க... 'டேய் லிங்கம், இந்த ரங்கன் சாதுடா.. படிப்பு வரலே அவனை நீதான் உன் புள்ளை மாதிரிப் பார்த்துக் கணும்... கோவிந்து யார் சொல்லையும் கேக்காத முரடனா வளர்றான். அவனை நீதான் ஒரு வழிக்குக் கொண்டு வரணும். இவங்க ரெண்டு பேரையும் ஆளாக்கி விட்டுட்டுத்தான் நீ ஒரு பெண்டாட்டியைத் தேடிக்கணும்...' இப்படி அம்மா உங்ககிட்ட சொல்லலே? நீங்களும் சரின்னு அம்மாவுக்குச் சத்தியம் பண்ணிக் கொடுக்கலே?

''இதையெல்லாம் ஏன் ரங்கா, இப்ப எனக்கு ஞாபகப்படுத்தறே?

''நீங்க என்னை அடிச்சீங்க, உதைச்சீங்க. மூணு நாள் சோறு தண்ணி இல்லாம பட்டினி போட்டீங்க. அண்ணி வெந்நீரை எம் மேலே கொட்டறப்ப, நீங்க அவளைத் தடுக்காம வேடிக்கை பார்த்தீங்க... எனக்குப் புத்தி மந்தம்தான். நான் அஞ்சாங் கிளாசுக்கு மேல் படிக்காதவன்தான். ஆனா ஆண்டவன் எனக்குன்னு ஒரு தெய்வத்தைக் கொடுத்திருக்கான்... இந்த ரமணி சார்தான் அந்தத் தெய்வம். இப்ப நான் எதுக்கு உங்களோட வரணும்?''

**சி**வலிங்கம் ஓரிரு நிமிடங்கள் வாயடைத்துப் போய் நின்றான். பிறகு மெல்ல—

''இப்படியெல்லாம் பேச உனக்கு யார் சொல்லிக் கொடுத்தாங்க, ரங்கா?'' என்றான்.

''அனுபவம் பேசறது!'' என்றான் ரமணி, இன்னும் சிரித்துக் கொண்டே. பிறகு, ''லிங்கம் நீங்க எதுக்கு உங்க தம்பியைப் பார்க்க இப்ப வந்திருக்கீங்கன்னு சொல்





# வேடிக்கை ஏன்

மத்யமர் பிரச்னைகள், சிக்கல்களைப் போலித்தனமற்ற யதார்த்த உணர்வோடு அணுக இன்றைய திரையுலகில் விசுவைத் தவிர இன்னொருத்தர் இனிமேல்தான் வெளிப்பட வேண்டும்.

மனிதர் பார்வையாளர் கவனத்தைப் பறித்து வைத்துக் கொள்ளும் தந்திரத்தை என்னமாய்க் கற்றிருக்கிறார்! கதை ஏதோ கன்னா பின்னாவென்று நானா திசைகளில் சிதறினாலும் அத்தனைக்கும் ஊடே முதுகெலும்பாய் நிற்கும் அந்த சஸ்பென்ஸ்? கல்யாண வயசில் நிற்கும் பெண்ணும் பிள்ளைகளும் வைத்துக் கொண்டு, பெற்றோர் இருவரிடையேயும் பேச்சு வார்த்தை இல்லாதது மட்டுமல்ல; பெண்டாட்டி கையால் பச்சைத் தண்ணீரும் வாங்கிப் பருகாத அளவுக்கு அப்படியொரு பகைமை நிலவுகிறதே, காரணம் என்னவாயிருக்கும்? அந்த ஒரு கொக்கியில் தொங்கிக் கொண்டு தானே மற்றதையெல்லாம் வேடிக்கை பார்க்க வேண்டியிருக்கிறது?

வெற்றுப்பார்வையிலும் உதட்டு முறுக்கலிலுமே அத்தனை பேரையும் கிழித்துப் போட்டுக் கொண்டிருக்கிறார் கிஷ்மூ. அந்த முறைப்பிலே வெரைட்டி காட்ட வராததால் ஒரு கட்டத்துக்கு மேல் அதற்கு வேல்யூ அம்பேல்.

சிரிப்பு மூட்டுவதையே பிரதான நோக்கமாய்க் கொண்ட் படத்தில் சில யதார்த்த அத்துமீறல்களும் உண்டு. உதாரணம்: எப்படியும் வீட்டை விட்டு வெளியேறுவது என்ற முடிவுக்கு வந்து விட்ட மகள் அடியெடுத்து வைத்தாயிற்று. அப்புறம் கிஷ்மூ குறுக்கிட்டு, தம் மேல் துண்டைத் தூக்கிப் போட்டு, 'அந்தத் துண்டைத் தாண்டிப் போனே, அப்புறம் கொலை விழும்,' என்று பூச்சாண்டி காட்ட, மகள் கொஞ்சம் தயங்கிய பிறகு சாவதானமாய் அந்தத் துண்டைத் தாண்டி நடைப்பக்கம் நகர, அங்கே தம் வேட்டியை அவிழ்த்துப் போட்டுக் கால் சட்டையோடு நின்று அதே மிரட்டலை மீண்டும் பிரயோகிக்க, மகள் அதையும் தாண்டிப் போனதும் அவர் கால் சட்டைப் பக்கம் கைவைக்க, மூத்த மகன் சேகர் ஓடோடி வந்து அவர் கையைப் பற்றிக் கொண்டு தடுத்து அலறுவது ஏக கலகலப்பு.

லிட்டா ஒரு வேளை ரங்கன் மனசு இளகி மாறலாம், இல்லியா?'' என்றான்.

ரமணியின் கேள்வியின் உள்ளர்த்தத்தைப் புரிந்து கொள்ளாமல், யதார்த்தமாக எடுத்துக் கொண்ட லிங்கம், ''நீங்க சொல்றதும் சரிதான்'' என்று கூறி விட்டு, தம்பியைப் பார்த்து, ''ரங்கா, உன் உடம்பு துரும்பாப் போயிடுத்து. நீ நல்லாச் சாப்பிட்டு நிறைய நாள் ஓய்வு எடுத்துக்கணும்.. நல்ல இடத்தில் பெண் எடுத்து உனக்குக் கட்டி

சேகர் — ரேகா முதல் தனிமைச் சந்திப்பில் காதல் மலரும் கட்டத்தில் திரையுலகக் காதல் தேவதைகள் சில சுற்றிவர, சேகர் அவர்களிடம் கேட்கிறார். ''ஆமா, சினிமாவிலே காதல் மலரும் போது வழக்கமா பத்து இருபது பேர் வருவாங்களே'' என்று. அதற்கு ஒரு காதல் தேவதை சொல்கிறது: ''உங்கமூஞ்சிக்குநாங்கநாலுபேர்போதும்னு தான்!'' குபீர்ச் சிரிப்பு எழுகிறது அரங்கில்.

திலீப்பின் ஒன்றுக்கும் உதவாத தந்தை வெ. ஆ. மூர்த்தி. அவர் தந்தை சுதந்திரப் போராட்டத்தியாகிபூரணத்தைச்சரிக்கட்டப் பத்தமடை பரந்தாமன் என்று ஒரு பெயரை விசு சொன்னாலும் சொன்னார், பூரணம், 'அந்தப் பத்தமடை பரந்தாமன் யாரு?' என்று கேட்டு அழ மாட்டாத குறையாய்ப் படுகிற அவஸ்தை இருக்கிறதே, ஏக அமர்க்களம். அந்தக் கிழவரைக் கடத்திப் போய் அடைத்து வைத்து, பழியை மைத்துனர் கிஷ்மூ. மூர்த்தி மேல் சுமத்தித் திசை திருப்பி நாடகமாடுவதும் பூரணம் மனம் மாறி விசுவுக்கு ஒத்துழைப்புத் தருவதும் சுவையான கதைத் திருப்பங்கள்.

மானாவாரிநடிகர்கள்—நடிகைகள். சர்க்கஸில் தேர்ந்த ரிங் மாஸ்டரைப் போல் அத்தனை பேரையும் அளவோடு ஷோ காட்டி உறும விட்டிருப்பதைப் பாராட்டாமல் இருக்க முடியாது. 'விசு படமா? ஏதேனும் மெஸேஜ் இருக்குமே!' என்று கேட்கிறவர்களுக்குச் சரியான பதில் சொல்ல முடியுமா? குறிப்பாய் ஒன்று அல்ல; சின்னச் சின்ன

ர்டிக்கை

தாய்ப் பலது. கட்டின புருஷனிடம் கடந்த காலக் காதல் கதையை உளறி வைக்காதே; கல்யாணமாகுமுன் கட்டிலுக்கு அழைத்தால் போகாதே; கலப்புக் கல்யாணம் பண்ணிக் கொண்டு... மன்னிக்கனும், இந்த அறிவுரை என்னமோ இடிக்கிற மாதிரி இருக்கிறது.

டாக்டர் விசு தயாரித்துள்ள சிரிப்பு டானிக்.

— பி. எஸ். எஸ்.

வைக்கணும். நம்ப அம்மா சொன்ன வாக்கை நான் அப்பக் காப்பாத்தலே... இப்பவாவது காப்பாத்திடறேன்... வா, நாம திருக்கோணத்துக்குப் போவோம்.''

''ரமணி சார் நம்ம கூட வந்தால் நான் வரோன்''

ரமணி வாய் விட்டுச் சிரித்து விட்டுச் சொன்னான்: ''ரங்கா, உனக்குச் சமர்த்தும் சாமர்த்தியமும் வந்துட்டுது. உன்னை யாராலும் இனிமேல் அசைக்க முடியாது!''

சிவலிங்கத்துக்கு ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது.

''என்ன சார் நீங்க பக்கவாத்தியம் வாசிக்கிறீங்களா? இவன் என் தம்பி. இவன் மேலே எனக்கு உரிமை உண்டு.''

''அதை நிலைநாட்ட உங்களுக்கு இப்பத்தானே வேளை வந்தது? இந்த ஆறு வருஷத்தில் தம்பி எங்கே இருக்கிறான், வேலையிலே இருக்கானா இல்லே பிச்சை எடுக்கிறானான்னு ஒரு தடவையாவது விசாரிச்சிருக்கீங்களா? ஒரு பொங்கலுக்கு ஒரு தீபாவளிக்குக் கூப்பிட்டிருக்கீங்களா? எப்படிக் கூப்பிடுவீங்க? இவன் விலாசமே நேத்துப் பேப்பர் பார்த்துத்தானே தெரியும்?''

''வாயை மூடுங்க!'' என்றான் சிவலிங்கம். பிறகு, ''வாடா ரங்கன்,'' என்றான்.

''நீங்க என்னை வாடான்னு கூப்பிடறீங்களா இல்லே என் லாட்டரிப் பணத்தை வரச் சொல்லிக் கூப்பிடறீங்களா?'' என்றான் ரங்கன்.

''சபாஷ் ரங்கா!''

''நான் போலீசுக்குப் போவேன்... 'ரமணிங்கற ஒரு ஆள் என் தம்பியைத் தன் பிடியில் வைச்சிருக்கான்னு கம்ப்ளெய்ன்ட் கொடுப்பேன்!''

''ஏன் நின்னுட்டே இருக்கீங்க, லிங்கம். இதே ரோட்லே நேரே போனா வாய்க்கால் வரும். வாய்க்காலைத் தாண்டி ஒரு நிமிஷம் நடந்தா இடது பக்கமா போலீஸ் ஸ்டேஷன் இருக்கு. அங்கே துரைசாமின்னு இன்ஸ்பெக்டர் இருக்கார். வில்லியம்ஸ்னு சப் — இன்ஸ்பெக்டர். ஸ்டேஷன் ரைட்டர் பேரு கோதண்டராமன். போய் மொதல்லே கம்ப்ளெய்ன்ட் கொடுங்க. அப்புறம் நாங்க ரெண்டு பேரும் வர்றோம்.''

சொன்ன ரமணி எழுந்தான்.

''வா ரங்கா... நீ மனுஷன். ஒரு லட்சாதிபதி. தலைநிமிர்ந்து நடந்து வா...''

**வீ**ட்டை அடைந்ததும், ரமணி ரங்கனைத் தன் தாயாரிடம் அழைத்துச் சென்றான்.

''என்னடா ரமணி?'' என்று கேட்டாள் கோமதி.

''அம்மா, நீ எனக்காக ஓர் உபகாரம் செய்யணும்.''

''என்ன? அதுக்குத்தானே நான் பிறந்திருக்கேன்!''

''விளையாடாதே அம்மா... மூணு பேருக்குத் தினமும் சமைக்கிற நீ இன்னி ராத்திரியிலிருந்து இவனுக்கும் சேர்த்துச் சமைச்

சுடு...''

''ரமணி சார்... வேண்டாம் சார். வேண்டாம் ரமணி சார்... அம்மாவுக்கு என்னாலே ஒரு சிரமமும் இருக்கப்படாது.''

''இப்ப நிலைமை மோசமாயிட்டு வர்றது, அம்மா. கொஞ்ச நாள்லே எல்லாம் சரியாப் போயிடும். அதுவரைக்கும் இவன் வெளியே வாசல்ல போகப்படாதுன்னு எனக்குப் படறது.''

''ஆமாமாம்! இன்னிக்குக் கூட ஒரு ரௌடி பேரை மாத்திச் சொல்லி ஏமாத்தி இவனைத் தாக்க வந்தான். நாளைக்கு யார் வருவாங்களோ? மொதல்ல போலீஸ்ல சொல்லி, ஓர் ஆளை நம்ப வீட்டு வாசல் வராந்தாவில் உட்காரச் சொல்லு. போலீஸ் உடுப்பு இல்லாம இருக்கட்டும்.''

''இந்த ஐடியா எனக்கு வரவே இல்லே அம்மா.... இன்னிக்கே துரைசாமியைப் பார்த்துடறேன்.''

''ரமணி சார்!'' என்றான் ரங்கன்.

''என்னடா, ரங்கா?''

''மெட்ராஸ் வந்த புதுசிலே உங்க வீட்ல தான் ரெண்டு மூணு மாசம் தங்கினேன். தாத்தாவுக்கு ஒத்தாசையா இருந்தேன். நான் ஏன் உங்க வீட்டுக்கும் தாத்தாவுக்கும் வேலை செய்யக் கூடாது?''

''ஏன்னா, நீ இப்ப லட்சாதிபதி! மத்தவங்ககிட்ட வேலை வாங்கறதுதான் உன் வேலை!''

''அப்ப நான் இங்கே தண்டச் சோறு சாப்பிடணும்னு சொல்றீங்களா?''

''யார் சொன்னா... ரூம் வாடகை நூறு ரூபா. அதைத் தாத்தாகிட்டக் கொடு. சாப்பாட்டுச் செலவுக்கு மாசம் ஐந்நூறு ரூபா. அதை என் அம்மாகிட்டக் கொடு. என் அம்மா சமையல் நாக்குக்கு அமிர்தமா இருக்குன்னு இங்கேயே டேரா போட்டுடாதே... கொஞ்ச நாள்லே நானே உன்னை வேறு ஒரு வீட்டிலே குடி வைச்சுடப் போறேன்!''

கோமதி சிரித்தாள்.

மறுகணம் வாசலில் ஒரு பெண்ணின் குரல் கூரையைப் பிய்க்கும் ஓசையில் கேட்டது.

''யார்டா அது ரமணி?''

''தனம்!'' என்றான் ரங்கன்.

''வா ரங்கா அவளை வாசல்லேயே நிக்க வைச்சுப் பேசி அனுப்பிடுவோம். நீ இப்பத்தான் ரொம்ப தைரியமா இருக்கணும்!'' என்றான் ரமணி.

சொன்னவன் வாசலை நோக்கி நடக்க, ரங்கன் பயத்தில் இதயம் துடிக்கப் பின் தொடர்ந்தான்.

கோமதிக்கும் சுவாரஸ்யம் ஏற்பட, அவளும் திண்ணைக்குப் புறப்பட்டாள்.

(தொடரும்)

## அருள்வாக்கு

**தூ**க்கத்திலே அத்தனை ஸௌக்கியம், சாந்தி. ஆசையின் பிடுங்கல், மனஸின் அரிப்பு இல்லாமல் நாம் நிம்மதியாயிருப்பது தூக்கத்தில்தான். நமக்குத் தகுதி இல்லாவிட்டாலும் பகவான் பரம கருணையால் தினமும் ஏழெட்டு மணி இந்தச் சாந்த நிலையை அநுக்ரஹம் பண்ணுகிறார். ஒருகால் பிறரிடம் கருணையால் நாம் அவர்களுக்கு இந்த ஏழெட்டு மணியாவது உபத்ரவம் பண்ணாதிருக்கவே நம்மைத் தூங்கப் பண்ணுவதாகவும் இருக்கலாம்.

அப்படியானால் மனஸ் இல்லாமல் அதிலிருந்து முளைக்கும் ஆசை இல்லாமல் நாம் சாந்தமாக இருக்க வழி தூங்கிக் கொண்டேயிருப்பதுதானா? நிறையத் தூக்க மாத்திரை வாங்கி வைத்துக் கொண்டு முழித்துக் கொள்ளும் போதெல்லாம் போட்டுக் கொண்டு மறுபடி தூங்கி விடலாமா?



அது ஸரியில்லை.

ஜட நிலைமைக்கு அப்புறம் ஓரறிவிலிருந்து ஆறறிவு என்று ஸ்ருஷ்டி கிரமம் உயர்ந்து கொண்டே போவதில் மநுஷ்யன் உச்சாணியில் இருக்கிறான். இந்த ஆறறிவால் இவனுக்கு ஏகப்பட்ட உபத்ரவங்கள், ஹிம்சைகள் ஏற்படுவது வாஸ்தவந்தான். ஆனால் அதற்காகப் பேடி மாதிரி ஒருவன் தன்னை நபும்ஸகனாக்கிக் கொள்கிற மாதிரி, இதுகள் எல்லாவற்றையும் சக்தியிழக்கப் பண்ணி ஜடமாக்குவது கொஞ்சங்கூட அழகில்லை. ஆறறிவுகளால் ஹிம்ஸை உபத்ரவம் வந்தாலும் எத்தனையோ நல்லதும் பண்ண முடிகிறதோ இல்லையோ? உசந்த தத்துவ விசாரணை, ஸங்கீதம், சில்பம், பொதுஜன ஸேவை, அன்பு, தியாகம், இப்படி எத்தனையோ நல்லவற்றிலும் கர்மேந்திரிய ஞானேந்திரியங்களையும் மனஸையும் செலுத்த முடிகிறதோல்லியோ? இப்படிச் செய்ய முயல வேண்டும். அப்புறம் ஆறறிவுக்கு மேலே ஒரே அறிவாக ஆக, ஞான விசாரம் செய்ய வேண்டும்; ஆறறிவுக்குக் கீழே ஜட நிலைக்குப் போகப் படாது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.



# அஞ்சலி..

ரேவதி, ரகுவரன், பிரபு, வி. கே. ஆர்., பூர்ணம், சாருஹாசன், சார்லி என்று விரிவடைகிறது நட்சத்திரப் பட்டியல். ஆனால், அனைவருமே, ஏதோவொரு வகையில் அவர்களை இணைக்கும், அந்த இரண்டு வயதுக் கதாநாயகியைச் சுற்றி இயங்கும் துணைக் கோள்கள்தான்!

வானளாவிப் பரந்து நிற்கும் அடுக்கு மாடிக் கட்டடம். அதில் வசிக்கும் முப்பது குடும்பங்கள். அவர்களுக்கு நேரும் சின்னச் சின்ன நிகழ்ச்சிகள். கோபதாபங்கள். மனப் போராட்டங்கள் —

இடையிடையே மெலிதாக இழையோடும் காதல். எதிர்ப்பு. அதனை மீறி வெளியேறும் மன உறுதி —

தனித்தனியே மனத்தை நெருடும் சம்பவங்கள்.

அனைத்தும் ஒருங்கிணைவது அந்தக் குடும்பங்களைச் சேர்ந்த நாற்பது – ஐம்பது குழந்தைகளின் ஒருமித்த பார்வையில். கபடமில்லாத, வெளிப்படையான பேச்சுக்களில்.

கூடவே ஸ்பீல்பெர்க்கை நினைவுபடுத்தும், குழந்தைகள் சம்பந்தப்பட்ட இரண்டு விண்வெளிப் பயணப் பாடல் காட்சிகள். அவற்றில் வெளியாகும் தொழில்நுட்பத்திறன்.

ரகுவரனின் கற்புநிலை பற்றிய சந்தேகத்தை உருவாக்கும் நிகழ்ச்சிகள். அதன் விளைவாகக் குமுறிக் கொந்தளித்து வீட்டை விட்டு வெளியேற முனையும் ரேவதி. சம்பிரதாயமாகச் செல்லவிருக்கும் கதை என்கிற எண்ணத்தை ஏற்படுத்தி, அதன் முடிவில், எதிர்பாராத அதிர்ச்சித் திருப்பமாக அறிமுகமாகும் – மனநிலை சரியில்லாத – இரண்டு வயது ஷர்மிலி.

அதன் பின் —

''ஆண்டவன் படைப்பில் மனநிலை பாதிக்கப்பட்ட பிறவிதான் புனிதமானது. தூய்மையானது என்பது போப்பாண்டவரின் வாக்கு. அதனை வலியுறுத்துவதுதான் நோக்கம்'' என்கிறது அறிமுக உரை.

நிறைவேற்றியிருக்கிறார்கள். துணை நிற்பது குழந்தைகளின் நடிப்பு – மணியான ரத்தினங்கள்.

— சி. ஆர். கே.

பத்ரகாளியாக நின்ற தனம், ரங்கன் தனியாக வராமல் ரமணியுடன் வருவதைக் கண்டு மேலும் ஆவேசமானாள்.

''யோவ், இந்த ஆளு யார்யா ஒனக்கு, மாமனா மச்சானா...? வாய்யா வூட்டுக்கு!''

ரங்கன் பதில் பேசாமல் ரமணியைப் பார்க்க, ரமணி நிதானத்தின் இலக்கணமாய், ''தனமா, வா. ஏன் வாசல்லே நின்னுக்கிட்டுப் பேசறே, படி ஏறி வா!'' என்றான்.

''எனிக்கு இன்னாத்துக்கய்யா ஒன் வூட்டுக்குள்ளார வரணும்? நான் என் புருசனை என் வூட்டுக்கு அழைச்சுட்டுப் போக வந்திருக்கேன். ஹங் ஹங்...''

ரமணி பதில் கூறுவதற்குள் அவனுடைய அம்மா கோமதி முந்திக் கொண்டாள். விரைவாக நடந்து, படி இறங்கித் தனத்தின் அருகே போய் நின்று புன்முறுவலுடன், ''ஏம்மா நீ ரங்கனுடைய பெண்டாட்டியா?'' என்று கேட்டாள்.

''ஆமாம்மா... நான் பொய் சொல்றேனான்னு அந்த ஆளையே கேளுங்க,'' திடீரென்று தனத்தின் குரல் இறங்கியது.

''முதன் முதலா நீ இந்த வீட்டுக்கு வந்திருக்கே... வாசல்ல நின்னு கத்தக் கூடாது. உனக்கு என்ன கஷ்டம் இருந்தாலும் சொல்லு, நான் தீர்த்து வைக்கிறேன்... வா, உள்ளே வா...''

திடீரென்று என்ன மர்மமோ மாயமோ தனம் வாயடைத்து நின்று விட்டாள். கண்கள் கனத்து, கண்ணீர் இமைகளை உடைத்துக் கசிய ஆரம்பித்தது.

கோமதி தனத்தின் கையைப் பற்றி மெதுவாக இழுத்தாள்.

தனம் அடங்கிவிட்ட மிருகமாய்ப் பின் தொடர்ந்தாள்.

உள்ளே போனதும் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு, ''உன் பேர் என்ன?'' என்று கேட்டாள் கோமதி.

''தனபாக்கியம். தனம்னு கூப்பிடுவாங்க.''

''என்ன சாப்பிடறே? இப்ப ராத்திரி எட்டு மணி. காப்பி டீ சரிப்படாது. ஜூஸ் தரட்டுமா? இல்லே சாப்பாடே சாப்பிடறியா?''



# அதிர்ஷ்ட தேவதை

''ஒண்ணும் வேணாம்மா.''

''சரி, இப்ப வந்த விஷயத்தைச் சொல்லு...''

''என் புருசன் என்கூட இருக்க மாட்டேன்னு சொல்லி ஊட்டை வுட்டு இங்கே வந்துட்டாரும்மா.''

''இங்கேதான் வந்தான்னு யார் உன்கிட்ட சொன்னா?''

''என் அப்பன்காரன் இன்னிக்கு இங்கே வந்தாரு. ஊட்டுக்கு வரச் சொன்னாரு. என் புருசன் அவர்கிட்டே வர முடியாதுன்னு சொல்லிட்டானா...? என் அப்பா இதை என் கையிலே சொன்னாரு... அதான் நான் ஓடியாந்தேன்.''

''சரி, புரியறது. ரங்கன் பண்ணினது தப்புத்தான். ஏன் அப்படிச் செய்ஞ்சான்னு நான் விசாரிக்கிறேன். ரங்கா, ரங்கா இங்கே வா, ரமணி, நீ அங்கேயே இரு.'' என்றாள் கோமதி.

ரங்கன் தயங்கித் தயங்கி உள்ளே வந்து, கோமதியின் எதிரே நின்றான்.

''ஏண்டா, உன் பெண்டாட்டி சொல்றதெல்லாம் உண்மையா?''

'தைரியமாயிரு' என்று ரமணி ஏற்கெனவே கூறியிருந்த அறிவுரை இப்போது ஞாபகத்துக்கு வர, ''நான் ஓடி வரலே, நீ தனியா இரு. மாசா மாசம் செலவுக்குப் பணம் அனுப்பறேன்னு சொல்லிட்டுத்தான் வந்தேன்'' என்றான் ரங்கன்.

கோமதி சிரித்தாள்.

''ஏண்டா ரங்கா, இவ உன் பெண்டாட்டி தானே? அவளோட குடும்பம் நடத்தாம மாசா மாசம் பணம் அனுப்பிச்சிட்டிருந்தா உன் கடமை முடிஞ்சிடுமா?''

ரங்கன் பதில் சொல்ல முடியாமல் திணறினான்.

''அப்படிக் கேளுங்கம்மா... மாசா மாசம் பணம் வாங்கிக்கத்தானா நான் இவரைக் கட்டிக்கிட்டேன்?''

''ரங்கா நீ இப்ப என்ன செய்யறே, உன் பெட்டியை அழைத்துக்கிட்டு உன் வீட்டுக்கே போறே... மூணு நாலு மாசம் கழிச்சு நீங்க ரெண்டு பேரும் மறுபடியும் இங்கே வர்றப்ப, இவ பிள்ளைத்தாய்ச்சியா இருக்கணும்.''

''நீங்க மகாலட்சுமி மாதிரி இருக்கீங்கம்மா... ஒங்களாலதான் எனிக்கு விடியப் போவுது வாய்யா, போலாம்.''

''அம்மா. நான் இந்த வீட்ல இருக்கக் கூடாதுன்னு சொல்லுங்க, நான் இப்பவே போயிடறேன். ஆனா அவளோட நான் போக மாட்டேன். என் லாட்டரிப் பணம் என் கைக்கு வந்த மறுநாளே இவ அப்பனும் இவளுமாச் சேர்ந்து கொன்னுடுவாங்க!''

''என்னடா ரங்கா உளர்றே? ஒரு பெண்டாட்டி தன் புருஷனைக் கொலையா செய்வா...? நீ அரண்டு போயிருக்கே.''

''இல்லேம்மா, இவ அப்பன் மோசம் செய்ஞ்சு, இவளைக் காட்டி மயக்கிக் கட்டி வைச்சான். லாட்டரிப் பணத்திலே அவருக்கும் பங்கு தரணுமாம். தராட்டி ஆளை வைச்சுக் கொன்னு சமுத்திரத்திலே போட்டுடுவேன்னான். எனக்கு ஏதாச்சும் திடீர்னு ஆயிட்டா, எல்லாப் பணமும் பெண்டாட்டிக்குத்தான் வரும்னு இவளே சொன்னா... என்கூட சந்தோஷமா வாழணும்னு இவளுக்குத் தோணியிருந்தா அப்படிப் பேசியிருப்பாளா, அம்மா?''

''ஏம்மா, தனம், நீ இப்படிச் சொன்னியா...?''

''தப்புத்தாம்மா... காரு வேணும், புச்சா ஊடு வேணும், நகை, புடைவை அல்லாம் வேணும்னு சொல்லியிருக்கேம்மா. இவரு என் புருசரு. இவர் உசிரோட இருந்தாத் தானேம்மா நான் பூவும் பொட்டுமா வாழ முடியும்?''

''சரியாச் சொன்னே, தனம்!'' என்ற கோமதி, ''ஏண்டா, ரங்கா, லாட்டரிப் பணம் எப்பக் கையிலே கிடைக்கும்?'' என்று கேட்டாள்.

''ஒண்ணு ரெண்டு மாசம் ஆகும்னு சொன்னாங்க.''

கோமதி தனத்தைப் பார்த்தாள்.

''தனம், இந்த ரங்கனுக்கு இன்னும் பணம் கையிலே கிடைக்கலே. இப்ப வேலையும் போயிட்டுது. பணம் வர்ற வரைக்கும் என்ன செய்வீங்க...? பாங்க்லே கடன் தரலாம்... அதில் குடித்தனம் நடத்துவீங்களா?''

''நீங்க இருக்கிற வரைக்கும் எனக்குக் கவலையே இல்லேம்மா.''

''அப்ப நான் சொல்றதைக் கேப்பியா? கேட்கிறதானா சொல்றேன்.''

''சொல்லுங்கம்மா. நீங்க என்ன சொன்னாலும் அது நல்லதுக்காகத்தான் இருக்



"என் பேரைச் சொல்லி என் சினேகிதன் கிட்டே யாரோ ஒருத்தன் இரு நூறு ரூபாய் வாங்கிட்டுப் போயிட்டான்!"

"ஆச்சரியமா இருக்கே. உங்க பேரைச் சொன்ன பிறகுமா அவர் பணம் கொடுத்தார்?"

— ஆர். ஆர். பூபதி

கும்மா!"

"மாரியம்மன் மேலே ஆணையாக் கேட்பேன்னு சொல்லு."

"மாரியம்மன் மேல ஆணையாக் கேப்பேன்."

"பணம் இன்னும் ரெண்டு மாசத்திலே வந்துடும். அதுவரையில் நீ உன் வீட்லயே இரு. இவனை நான் பார்த்துக்கறேன். நீ வேணும்னா அடிக்கடி வந்து பார்த்துட்டுப் போ. உன் செலவுக்கு மாசாமாசம் ஐந்நூறோ அறுநூறோ நானே அனுப்பி வைக்கிறேன்... ஆனா இப்ப அவன் அங்க வர வேண்டாம். ஏன்னா, அவன் உன் அப்பனைக் கண்டு பயப்படறான்."

"எனக்கும் என் அப்பனைக் கண்டா பயமாத்தான் இருக்கும்மா..."

"அதான் சொல்றேன். இவன் இங்கே இருக்கட்டும்னு. நீ இவனோட பெண்டாட்டி. இவன்கிட்ட உனக்கு இருக்கிற உரிமை உன் அப்பனுக்கோ, இவனோட சொந்தக்காரங்களுக்கோ இல்லை. அவங்க கிட்டேர்ந்து உன் புருசனை மொதல்ல காப்பாத்தணும்."

"இவரு உயிருக்கு ஆபத்துன்னு நீங்களும் சொல்றீங்களா, அம்மா?"

"சந்தேகம் என்ன தனம்? ரங்கனுக்கு லட்சம் லட்சமாப் பணம் வரப் போறது. அதை நீங்க ரெண்டு பேருமாச் சந்தோஷமா அனுபவிக்கணும் இல்லையா? நானே அஞ்சாறு லட்சத்துக்கு ஒரு பங்களா வாங்க ஏற்பாடு செய்யறேன். நல்லி, குமரன் கடைக்கெல்லாம் அழைச்சுக்கிட்டுப் போய் உனக்குப் பட்டுப்புடவையெல்லாம் செலக்ட் பண்றேன். உன் இஷ்டத்துக்கு நகை வாங்க உம்மிடியார், பாபலால் கடைகளுக்கெல்லாம் அழைச்சுக்கிட்டுப் போறேன்..."

"காரு?" தனம வெகுளியாய்க் கேட்டாள்.

"ஓ, காரை மறந்துட்டேன் இல்லே... அம்பாசிடர்... பியட், மாருதின்னு காரெல்லாம் இருக்கு. இப்ப எல்லோரும் மாருதி, மாருதின்னு ஓடறாங்க. பணம் கைக்கு வந்ததும் அதையும் வாங்கிடலாம். அதுக்கு முன்னாடி ரங்கன் கார் ஓட்டக் கத்துக்கட்டும்."

"ரெண்டு மாசத்துக்கு அப்பாலே லாட்டரிப் பணம் இவரு கைக்கு வந்தவுடனே இவரை அனுப்பிச்சுடுவீங்களா, அம்மா?"

"மாட்டேன்."

"என்னம்மா நீங்க? பால் மார்றீங்க? இப்பத்தானே சொன்னீங்க...?"

"நீ அவசரப்படறே தனம். இவனை உன் வீட்டுக்கு அனுப்ப மாட்டேன். நீ இவனோட புது வீட்டுக்குக் குடிவருவே! நானே வந்து உன்னை அழைச்சு இவன் கையிலே ஒப்படைப்பேன்! போதுமா?"

"நிசமாலுமா?"

"சத்தியம் பண்ணித் தரணுமா?"

"வேணாம்மா."

"சரி, நீ இப்பப் புறப்படு. மணி ஒன்பது அடிச்சாயிடுத்து."

"சரிம்மா."

"குங்குமம் வாங்கிக்கிட்டுப் போ!"

"நீங்க என்னைப் பெத்த அம்மா மாதிரி இருக்கீங்க... உங்க புள்ளைதான் ராங் பண்ணிக்கிட்டே இருக்காரு...!"

"இனிமே ராங் பண்ணவே மாட்டான்!" சொன்னவள், "ரமணி!" என்று அழைத்தாள்.

"டேய், மணி ஒம்பது அடிச்சாச்சு. இவ இங்கேருந்து பஸ் ஸ்டாண்டுக்குத் தனியாப் போகக் கூடாது. அவளை பஸ் ஸ்டாண்டிலே விட்டுட்டு வா... அவ பஸ்லே ஏர்ற வரைக்கும் காத்திரு. ரங்கா நீயும் ரமணி கூடப் போ!"

சொல்லிவிட்டுக் கோமதி குங்குமத்தை நீட்ட, தனம் ஆள்காட்டி விரலால் எடுத்து, அம்பது பைசா நாணய அளவில் இருக்கும் நெற்றிப் பொட்டின் மீது இட்டுக் கொண்டாள்.

இரவு வீட்டை அடைந்த போது பத்துக்கு மேலாகிவிட்டது. தனம் கனவுலகில் மிதந்து கொண்டே வீட்டினுள் பிரவேசித்தாள்.

"கய்தே, நீ தனியாவா வந்தே?" என்று வரவேற்ற மயில்சாமி, அவள் எதிரே கண்கள் சிவக்க நின்றான். சாராய நெடி அறையெல்லாம் வீசியது.

"ஆமாய்யா, நான் தனியாத்தான் வந்தேன். என் புருசன் வந்தா அந்த ஆளை ?

வெட்டிப் போட்டுடுவியே? அவரைக் காப் பாத்த வேணாம்? அதான் அவரை அங்கேயே வுட்டுட்டுத் தனியா வந்தேன்!''

''என்னடீ காது குத்தறே?''

''யோவ், நீ அப்பன்காரன்னு கூடப் பார்க்க மாட்டேன்...''

''இன்னா செய்வே?''

''வம்பு தும்பு பண்ணாம இருந்தே, பணம் வந்ததும் உன் கையிலே ஐயாயிரமோ, ஏழா யிரமோ தடுப்பேன்...என் புருசனை அடிச்சே உதைச்சே, நானே பூக்கடை போலீஸ் ஸ்டே சனுக்குப் பூடுவேன். ஹங், ஹாங்.''

ஒரு நீண்ட நிமிடத்துக்கு மௌனமாய் நின்ற மயில்சாமி யோசித்தான். ரமணி கெட்டிக்காரன். வார்த்தைகளால் இவளை மயக்கி அனுப்பியிருக்கிறான்.

''நான் உங்கிட்ட கத்தினது தப்புத்தான் கண்ணு. ஏன் என் மருமகப் புள்ளை வரல்லே?'' நான் மருமகப் புள்ளையைக் கொல்லுவேன்னு நீ கூட நம்பறியா? இம்மாம் பணம் வந்திருக்கிறப்ப அவனைக் கொன்னுட்டா நான் மட்டுமா மாட்டிப் பேன்? நீயுமில்ல ஜெயிலுக்குப் போவே? அப்பால அந்தப் பணத்தை நீயும் நானும் கண்ணால பார்ப்பமா?''

''சரி நயினா. நீ கொல்ல மாட்டே. நீ இப்ப இங்கேர்ந்து போயிடு... பணம் கைக்கு வர ரெண்டு மாசம் ஆகும்னாங்க... அப்பாலே நான் புச்சா ஒரு வூட்டுக்குப் பூடுவேன்... நீ அப்ப அங்கே வந்து பாரு. எதனாச்சியும் தர்றேன்!''

''புச்சா வீடா? யார் கட்டித் தர்றாங்க ளாம்?''

''அஞ்சாறு லட்சத்திலே ஒரு வூடு வெலைக்கு வர்றதாம்.''

''யார், அந்த ரமணிக் களுதை சொல் லிச்சா?''

''இல்லை... அந்த ஆளு இப்ப ஒதுங்கி நின்னுட்டான்... என் கையில இனிமே ராங் பண்ண மாட்டான்னு அவனோட அம்மாவே சொல்லிச்சு... நல்ல அம்மா, மகாலட்சுமி கணக்கா இருக்காங்க... என்னை அவங்களே அளைச்சுக்கிட்டுப் போய், நகை, பட்டுப் புடைவை அல்லாம் வாங்கித் தர்றேன்னு சொன்னாங்க. ஒரு கார் கூட வாங்கப் போறேன். அதுக்குள்ளாற என் புருசன் கார் ஒட்டக் கத்துக்கிடுவாரு.''

''அப்ப மருமகப் புள்ளே இப்போதைக்கு வர மாட்டான்னு சொல்லு. பணம் வர்ற வரைக்கும் நீ சோத்துக்கு என்ன செய்வே பொண்ணு?''

''அத்தைப் பத்தி ஒனக்கென்ன? மாசாமாசம் டாண்ணு பணம் இங்கே வந்து நிக்கும்... அல்லாம் ரெண்டு மாசம் தானே?''



குழந்தைகளுக்கிடையே இடைவெளி வேண்டும் என்ற சிம்பாப்வே அரசின் திட்டத்தை ஆதரித்துப் பேசினார் அந்நாட்டுப் பெண் எம். பி. மார்கரெட் டோங்கோ. அத்திட்டத்தின் வெற்றியை, ஓர் ஆண் பல பெண்களை மணப்பதை அரசு ஆதரிப்பதானது எவ்வாறு பாதிக்கிறதென்று எடுத்துக்காட்டினார். 24 பெண்களை மணந்து (இதில் ஐவர் தற்பொழுது கர்ப்பவதிகள்) 136 குழந்தைகளைப் பெற்றுள்ள ஓர் ஆணைப் பற்றிய நாளிதழ்ச் செய்தியைக் குறிப்பிட்டு, ஆண்கள் பல தாரங்களைத் திருமணம் செய்து கொள்வதைக் கட்டுப்படுத்தச் சட்டம் இயற்ற வேண்டுமென்று அவர் விளாசிய போது, அவையில் அதிகச் சிரிப்பும் கேலிக் கூச்சல்களும் ஆண் எம். பிக்கள் பகுதியிலிருந்து எழுந்தன.

தகவல்: அ. சிங்காரவேலு.
ஆதாரம்: 'இந்து'

''உன் தலையிலே அவங்க நல்லா மொளகா அரைச்சுட்டாங்க, தனம்! நீ ஒரு அறிவுகெட்ட பொண்ணு! மினுக்கிக்கிட்டு ஊர் சுத்தத்தான் தெரியும்!''

''யோவ், இன்னா சொன்னே?''

''பின்னே என்னடீ? இந்த ரெண்டு மாசத் திலே என்னென்னவெல்லாம் நடக் குமோ...? ரெண்டு மாசத்துக்கு உன் வாயை அடைச்சு வைச்சுட்டாங்க. உன் புருசன் ஒரு ஏமாளி... ரமணி சொல்றதுதான் சரிம்பான். அவன் சொல்ற இடத்திலெல்லாம் கையெ ழுத்துப் போடுவான். இப்பச் சொல்றேன் பாரு, நீ இந்தத் தெரு முழுக்க, கோவிந்தா, கோவிந்தான்னு கத்திக்கிட்டு அலையப் போறே!''

''யோவ், நீ அந்த அம்மாவைப் பத்தி எதுனாச்சியும் பேசினே. ஒன் வாய் வெந்து பூடும். ஜூஸ் குடிக்கிறியான்னு கேட்டாங்க. நான் பொறப்படறப்ப குங்குமம் கொடுத்தாங்க... அந்த ஆளையும் என் புருச னையும் பஸ் ஸ்டாண்டுக்குத் தொணையா அனுப்பிச்சாங்க.''

''எனக்கு இவ்வளவு நல்ல அம்மாவைப் பார்க்கணும் போல இருக்கு. நாளைக்கே போறேன். எனக்கு விபூதி குடுப்பாங்க!'' என்றான் மயில்சாமி.

''யோவ் அங்கே போனே, நான் சும்மா இருக்கமாட்டேன்...என் புதுவூட்டுவாசப்படி மிதிக்க விடமாட்டேன். என் கார்ல ஏறவிட மாட்டேன். சும்மாக் கெட... ஹங் ஹாங், சொல்லிட்டேன்.''

(தொடரும்)



* பரிமாறும் கரண்டி கூடத் தூய்மையாய் இருக்க வேண்டும்.

# ஐஸ்க்ரீம்: ரூ.400 கோடி வியாபாரம்!

விதவிதமான நிறங்களில் எட்டு அடுக்கு ஐஸ்கிரீம். ஒவ்வொன்றும் ஒவ்வொரு சுவை. ஓர் உயரமான கண்ணாடி டம்ளரில் இட்டு, அலங்காரத் தோற்றத்துடன் இதைப் பரிமாறுகிறார்கள். 'Earthquake' என்ற பெயர் வழங்கும் இந்த ஐஸ்கிரீமின் விலை 125 ரூபாய்! பொருத்தமான பெயர்தான்! விலையைக் கேட்டால் மனத்துக்குள் பூகம்பம் ஏற்படுகிறது. சாப்பிட்டால் வயிற்றுக்குள் பூகம்பம் வந்து விடுமோ?

''இல்லவே இல்லை!'' என்று மறுக்கிறார் Earthquake ஐஸ்கிரீம் தயாரித்து விற்கும் தாஸ பிரகாஷ் நிறுவனத்தின் உரிமையாளர்களுள் ஒருவரான சீதாராம ராவ். ''இந்தத் தயாரிப்புக்கு நாங்கள் எதிர்பார்த்ததை விட அதிகமாகவே வரவேற்பு இருக்கிறது'' என்கிறார்.

குளுகுளு அறையில் அலங்காரச் சூழலில் அமர்ந்து பணத்தைப் பற்றிய கவலையின்றி earthquake சுவைப்பவர்களானாலும்; சம்பளம் வாங்கிய அன்றைக்கு மட்டும் குடும்பத்தோடு தெருமுனை ஐஸ்கிரீம் கடைக்குப் போய் நாற்பது — ஐம்பது ரூபாய்க்கு ஐஸ்கிரீம் வாங்கிக் கொடுப்பவர்களானாலும் ஐம்பது பைசா 'குச்சி ஐஸ்' வாங்கிச் சுவைக்கும் ஏழைப் பள்ளிச் சிறுவர்களானாலும் எல்லோர் முகத்திலும் தவழ்வது ஒரே ரகமான சந்தோஷம்தான்!

இந்த ஐஸ்கிரீம் மோகம் இன்று நேற்று ஏற்பட்டதல்ல. அந்தக் கால எகிப்தியர்களும், பாபிலோனியர்களும் உறைய வைத்த இனிப்புப் பண்டங்களை உண்டதாகவும், கி. மு. முதல் நூற்றாண்டில் ரோமானிய மன்னன் நீரோவின் அரண்மனையில் பழச்



* காசிராஜன்



* அருண் ஐஸ்கிரீம் தொழிற்சாலை.

# ஓடாத ரயிலுக்கு ஒரு டிக்கெட்!

கடந்த 15.5.90 அன்று திருமதி மேதா கார்னிக் என்ற லேடி டாக்டர் திருச்சியிலிருந்து புறப்படும் மலைக்கோட்டை எக்ஸ்பிரஸில் டிக்கெட் வாங்கியிருந்தார். 16.5.90 அன்று சென்னையிலிருந்து பம்பாய்க்குப் புறப்படும் சென்னை எக்ஸ்பிரஸிலும் அவருக்கு பெர்த் ரிசர்வ் ஆகியிருப்பதாகத் திருச்சியில் உறுதி செய்தார்கள். அவரும் அதை நம்பிப் புறப்பட்டுச் சென்னை சென்றார்.

சென்னையில் விசாரித்த போது, 16.5.90 அன்று சென்னை எக்ஸ்பிரஸ் புறப்படாத நாள் என்று தெரிய வந்தது. அதாவது வாரத்தில் ஐந்து நாட்களே ஓடும் அந்த எக்ஸ்பிரஸ் ஓடாத இரண்டு நாட்களில் 16.5.90ம் ஒன்று. இந்த நிலையில் கையில் கைக் குழந்தையோடு தனியாகச் சென்ற மேதா கார்னிக் என்ன செய்வார்?

எப்படியாவது தாதர் எக்ஸ்பிரஸிலாவது பெர்த் கொடுங்கள் என்று சென்ட்ரல் ஸ்டேஷனில் பல அதிகாரிகளையும் பார்த்துக் கெஞ்சியிருக்கிறார். யாரும் அவரை மனிதாபிமானத்தோடு பார்த்து உதவ முன்வரவில்லை. வேறு வழி தெரியாத அவர் தாதர் எக்ஸ்பிரஸில் அன் ரிசர்வ்ட் பெட்டியில் ஏறிப் படாதபாடுபட்டுப் பம்பாய் சென்று சேர்ந்திருக்கிறார்.

இதற்கிடையில் இவர் கைக் குழந்தையோடு வருகிறார் என்று தெரிவிக்கப்பட்ட தகவல்படி பம்பாயிலுள்ள உறவினர்கள் ஸ்டேஷனுக்கு வந்து பார்த்திருக்கிறார்கள். அன்று சென்னை எக்ஸ்பிரஸே இல்லை என்றதும் என்னாயிற்றோ என்று அனைவரும் பயந்து போய் உறவினர்களுக்கெல்லாம் எஸ். டி. டி. போட்டுக் கேட்க, அவர்கள் திருச்சியிலிருந்து புறப்பட்டு விட்டாரே அவர் என்று பதில் சொல்ல... ஒருவழியாக இவர் தாதர் எக்ஸ்பிரஸில் போய்ச் சேரும் வரை அனைவரும் தவித்துத் தடுமாறிப் போய் விட்டார்கள்.

''இத்தனை குழப்பங்களுக்கும் அனாவசிய டென்ஷன்களுக்கும் யார் காரணம்? ஓடாத ரயிலுக்குப் பெர்த் ரிசர்வ் செய்து கொடுத்த ரயில்வேதான் முழுக் காரணம். எனவே, இது எங்கள் கன்ஸ்யூமர் கவுன்சிலுக்கு வந்ததும், ஆதாரங்களைத் திரட்டிச் சேர்த்து, டாக்டர் மேதா கார்னிக்குக்குத் தகுந்த நஷ்ட ஈடு தர வேண்டுமென்று எங்கள் கவுன்சில் மூலம் ரயில்வேக்குக் கடிதம் எழுதியிருக்கிறோம்.''

இந்த வேதனைக் கதையைக் கூறிய தமிழ் நாடு உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழுவின் செயலாளர் புஷ்பவனம், இதை விடவும் வேதனை தரும் இன்னொரு விஷயத்தையும் குறிப்பிட்டார்:

''நியாயம் எங்கள் பக்கம் இருப்பதால் ரயில்வே நிர்வாகம் உடனடியாக நஷ்ட ஈடு வழங்கி விடும் என்று நம்புகிறோம். ஒரு வேளை ர்யில்வே நிர்வாகம் மறுத்து விட்டால் என்ன செய்வது? மாவட்ட உபயோகிப்பாளர் குறைதீர்க்கும் கமிஷனிடம் தான் முறையிட வேண்டும். ஆனால் மாவட்ட அளவிலும் சரி, மாநில அளவிலும் சரி உபயோகிப்பாளர் குறைதீர்க்கும் கமிஷனே தமிழகத்தில் கிடையாது. இந்தியாவிலுள்ள மற்ற எல்லா மாநிலங்களிலும் இந்தக் கமிஷன்கள் இருக்கிற போது, தமிழகத்தில் மட்டும் ஏன் இல்லை? உபயோகிப்பாளர்களான மக்கள் நலனில் தமிழக அரசு கொண்டுள்ள அக்கறைக்கு இதுவே சான்று என்று வைத்துக் கொள்ளலாமா?

''நல்ல வேளையாக டாக்டர் மேதா கார்னிக் சென்ற ரயில், மகாராஷ்டிர மாநிலத்திலும் ஓடியிருப்பதால் அவருடைய கேஸை மகாராஷ்டிர மாநிலத்திலுள்ள கமிஷன்களில் முறையிட்டுக் கொள்ளலாம். ஆனால் மற்ற கேஸ்களில் என்ன செய்வது? தமிழக அரசை மக்கள்தான் தட்டிக் கேட்க வேண்டும்.''



• புஷ்பவனம்

சந்திப்பு: ப்ரின்ஸ்

படம்: சுபா

# ஸ்பெஷல் வார்டு



"ஸார்... நீங்க சுதந்திரப் போராட்ட தியாகியா சார்...! அட்மிஷனப்ப சொல்ல வேயில்லையே... 'சி.எம்.ஓ.' கிட்டே சொல்லியிருந்தா உங்களுக்கு உடனடியா 'இலவச ஸ்பெஷல் வார்டு' ட்ரீட்மெண்ட்டுக்கு ஆர்டர் போட்டிருப்பாரே...!"

அந்த ஜெனரல் ஆஸ்பத்திரியின் 'ஏ' பிளாக் வராந்தா செக்ஷனை மேற்பார்வையிட வந்த கம்பவுண்டர் ரங்கசாமி வெற்றிலை குதப்பின வாயை ஒருசேரக் குவித்து ஆச்சர்யம் மேலோங்கக் கேட்ட போது, தோல் சுருங்கி உடல் மெலிந்து போய் ஒரு பழம் பாயில் பரிதாபமாய்ப் படுத்துக் கிடந்த அந்தப் பெரியவர், தம் காதுகளில் 'இன்பத் தேன் வந்து பாய்ந்த' உற்சாகத்தில் சட்டென்று எழுந்து உட்கார்ந்து விட்டார்.

"உண்மையாகவா தம்பீ சொல்றே... நிச்சயமா எனக்கு ஸ்பெஷல் வார்டு கிடைக்குமா...?"

"நல்ல கேள்வி கேட்டே போ... நீ ஒரு சுதந்திரப் போராட்ட தியாகியா இருந்துட்டு,

கீ. சு. வேலாயுதன்

இந்த அடிப்படை விஷயம் கூடத் தெரியாம இருக்கியே! நீ உண்மையிலேயே சுதந்திரப் போராட்டத்துல கலந்துட்ட ஆள்தானா... இல்லே...?"

— சந்தேகமாக குரலை இழுத்தான் கம்பவுண்டர்.

"ம்... தியாகின்னு பொய் சொல்ல எங்களுக்குத் தலையெழுத்தா என்ன...? அவரு அந்தக் காலத்துல எத்தனை ரயில் பாலத்துக்கு வெடிகுண்டு வச்சிருக்கார்ன்னு உனக்குத் தெரியுமா...? இல்லே, ஆகஸ்டு புரட்சியில கலந்துட்டு ஏழு வருஷம் கடுங் காவல் தண்டனை அடைஞ்சதுதான் பொய்யாப் போயிடுமா...? இல்லாமலா மாசா மாசம் மத்திய சர்க்காரு... ஐந்நூறு ரூபா பென்சன் பணத்தைத் தவறாம அனுப்பீட்டு வருது...?"

— சற்று முன் வரை தன் கணவன் சுதந்திரப் போராட்டக் காலத்தில் நிகழ்த்திய வீர தீர பராக்கிரமச் செயல்களை அவனிடம் பிரஸ்தாபித்துக் கொண்டிருந்த பெரியவரின் மனைவி, மீண்டும் விறுகொண்டு அதை எடுத்தியம்பவும், கம்பவுண்டர் வெகு வேகமாகத் தன் முகத்தில் படர்ந்த சந்தேகக் குறியை விலக்கிக் கொண்டு,

"சரி... சார். உங்களுக்கு 'ப்ரீ ஸ்பெஷல்

வார்டு அட்மிஷனுக்கு' மேலிடத்துல சொல்லி ஏற்பாடு செஞ்சு கொடுத்தா என்னைக் கொஞ்சம் கவனிப்பீங்களா...?''

— அவன் தன் காரியத்தில் கண்ணாயிருப்பவனாக விஷமத்துடன் கண் சிமிட்டிக் கொண்டு கேட்க, இந்த வயோதிகர்கள் அதைப் புரிந்தும் புரியாதவர்கள் போல் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

''ஏழைங்க நாங்க.. உனக்குன்னு நாங்க என்ன தம்பீ தர முடியும். இருந்த ரெண்டு பொண்ணுகளைக் கரையேத்தி விட்ட கடன்லயிருந்தே மீள முடியாம இருக்கிற பாவிங்க நாங்க. ஏதோ திடீர்னு இவருக்கு 'ஜன்னி' கண்டு பிதற்றினப்ப வழிச் செலவுக்கு மட்டுமே பணத்தைக் கொண்டு வந்து இந்த 'நாத்தத்துல' அல்லல்பட்டுட்டுக் கிடக்கோம்... ஏதோ நீ பார்த்து உன் வாயால எங்களுக்கு ஸ்பெஷல் வார்டு கிடைக்கும்னு சொன்னே. அதே போல கடவுள் மாதிரி வழியும் காட்டிட்டேன்னா கோடி புண்ணியமாப் போகும்...!''

— பெரியவரின் மனைவி கண்கலங்கச் சொல்லச் சொல்ல அந்தக் கம்பவுண்டர் ரங்கசாமியின் முகம் சுருங்கி எண்கோணலாகிப் போனது!

சிறிது நேரம் அவர்களிருவரையுமே வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டிருந்தவன், 'இவர்களிடமிருந்து மருந்துக்குக் கூட காசு பெயராது' என்று எண்ணம் கொண்டவன் போலவும், 'அதே சமயம் தன்னை அவர்கள் மத்தியில் ஒரு 'பரோபகாரி' போல் காட்டிக் கொள்ளும் உத்வேகத்தோடும்...

''ஆமா... நீங்க சுதந்திரத்துக்கும் முன்னால தண்டனை பெற்றதற்கான அத்தாட்சி, இப்ப பென்சன் வாங்கற 'ரெசிப்ட்' எல்லாம் கைவசம் வச்சிருக்கீங்களா?''

''ஓ... அதெல்லாம் வச்சிருக்கேங்க. ஏதாவது இப்படி அவசர ஆத்திரத்துக்கு உதவட்டும்னு நான்தாங்க எடுத்துத் துணிப் பையில வச்சுட்டு வந்தேன்...!''

— தியாகியின் மனைவி உற்சாகத்துடன் சொல்லியபடி பரபரவென துணிப் பையைப் பாயில் கொட்டி, சில பழுப்பு நிறக் காகிதங்களைப் பொறுக்கி எடுத்து அவனிடம் நீட்டினாள்.

அதை அசுவாரசியமாய் வாங்கிப் பார்த்த கம்பவுண்டர் ரங்கசாமி,

''இதைக் கொண்டு போய் அந்த அரசமரத்துக்குப் பக்கத்துல இருக்கிற அடுக்கு மாடிக் கட்டடப் பெரிய டாக்டர்கிட்டே கொடுத்து விஷயத்தைச் சொல்லுங்க. அவர் நிச்சயம் உங்களுக்கு ஸ்பெஷல் வார்டு ஏற்பாடு பண்ணுவார். ஏதாவது கேட்டா கம்பவுண்டர் ரங்கசாமி சொன்னதாச் சொல்லுங்க...!''

— கடகடவென அவசர கதியில் சொல்லியவன் காகிதங்களைத் திரும்பவும் அவள் கைகளிலேயே திணித்து விட்டு, தான் அதற்கு மேலும் அங்கு நிற்பது 'பாவம்' என்பது போல் வெகு வேகமாக அடுத்த அறைக்குத் தாவினான். பெரியவருக்கு மனசு இறக்கை கட்டிக் கொண்டு பறந்தது...

மேலோட்டமாக அந்தப் பழுப்பு நிறக் காகிதங்களைப் பிரித்துப் பார்த்து விட்டுத் திரும்பவும் அதை டேபிளில் போட்டார் சி.எம்.ஓ. — சீஃப் மெடிகல் ஆபீஸர்...

''மிஸ்டர் முத்தண்ணன் நீங்க தியாகிதான். அதை நான் ஒப்புக்கறேன். இந்த பென்சன் வாங்கின 'ரெசிப்ட்'களை எல்லாம் பார்த்தா அப்படியே ஒப்புக்கணும்தான். ஆனா இதை வச்சு — இந்த 'ஜி.ஹெச். சோட ரூல்ஸ் அண்ட் ரெகுலேஷன்ஸ்படி உங்களுக்கு 'ஸ்பெஷல் வார்டு' டிரீட்மெண்ட் தர முடியாதே....!''

''டாக்டரய்யா... நீங்க, என்ன சொல்றீங்க...? ஸ்பெஷல் வார்டு எனக்குக் கிடைக்காதா...?''

''கிடைக்காதுன்னு ஒண்ணுமில்லே... எங்க 'ரூல்'படி உங்ககிட்ட இப்ப இருக்கிற ஆதாரங்களை வச்சு நான் ஸ்பெஷல் வார்டு ஏற்பாடு பண்ண முடியாது!''

''அதுக்கு நான் என்ன செய்யணும் டாக்டர்...?'' என்று பெரியவர் கேட்டார்.

''அதுக்கு நீங்க உங்க ஏரியா தாசில்தார் கிட்டே இருந்து நீங்க தியாகிதான்ற ஒரு 'அத்தாட்சி சர்டிபிகேட்' வாங்கிட்டு வரணும். அப்பத்தான் உங்களுக்கு ஸ்பெஷல் வார்டு ட்ரீட்மெண்ட் தர முடியும். இல்லேன்னா முடியாது...!'' என்று அவர் உறுதிபடக் கூற பெரியவரின் முகம் கூம்பிப் போனது.

அழுக்குத் துண்டை இடுப்புக்கு அரணாக வைத்திருந்தவர், அதைக் கைகளில் தாங்கி டாக்டர் டேபிளில் கிடந்த தம் காகிதங்



''நாடு ரொம்பத்தான் முன்னே றிடிச்சு...''

''எதை வெச்சுச் சொல்றீங்க?''

''வேலைக்கு ஆள் தேவைங்கிற விளம்பரத்திலேயே 'லஞ்சத்துக்கு முன்னுரிமை உண்டு'ன்னு எழுதியிருக்காங்களே!''

— சீர்காழி வி. ரேவதி

களை பவ்யமாக எடுத்துக் கொண்டு ஏதும் பேசாமல் தம் அருகில் நின்றிருந்த மனைவியின் முகத்தை ஏறிட்டார்.

''கமலம் கையிலே காசு எவ்வளவு இருக்கு...?''

''என்ன பத்துப் பதினைஞ்சு ரூபா தேறும். ஏன் கேட்கறீங்க...?''

''இல்லே... நாம தாலூக்கா ஆபீஸ் வரைக்கும் போயிட்டு வந்துட்டாத்தான் என்ன?''

— புருஷனிடம் 'ஸ்பெஷல் வார்டு' ஆசை அட்டையாக ஒட்டிக் கொண்டது; அது இனி அவ்வளவு லேசில் விடாது என்று உணர்ந்து கொண்ட அவரின் மனைவி அதற்கு மறுப்பு ஏதும் சொல்லவில்லை.

இவர்கள் சென்ற போது தாசில்தார் அலுவலகம் முன்பு 'மலைப் பாம்பு' போல் 'கியூ' நீண்டிருந்தது.

''என்னுங்க... இந்தக் கூட்டத்துல போய் எப்ப அத்தாட்சி வாங்கி, எப்போ ஆஸ்பத்திரிக்குப் போறது... அதுக்குள்ளே நாம ஒரு வழியாயிடுவோம்!'' என்றவள் அப்படியே ஒரு மரத்தடியில் போய் உட்கார்ந்து விட்டாள்.

பெரியவர்தான் அவளை உசுப்பி விட்டார்.

''இதுக்குப் போய் இப்படிச் சோர்ந்து உட்கார்ந்துட்டா எப்படிக் கமலம்...? பிரிட்டிஷ்காரன்கிட்டேயிருந்து நம்ம நாட்டுக்குச் சுதந்திரம் வாங்கறதுக்கே துவளாம போராடினவண்டி நான்! இதுக்கா மிரள்றது? நீ வேணும்ன்னா இங்கேயே உட்கார்ந்திரு. நான் இதோ நிமிஷத்துல வந்துடறேன்!''

— என்றபடி நீண்டு கிடந்த 'கியூ' வரிசையைத் தவிர்த்து தாசில்தார் அலுவலக வராந்தாவை நோக்கி நடந்தார்.

யாரையும் கண்டுகொள்ளாது தாசில்தார் அறையினுள் அவர் நுழைய, தன் இரும்புக் கரங்களால் தடுத்து நிறுத்தினான் ஆபீஸ் பியூன்.

''என்னய்யா பெரியவரே, இத்தனை பேர் வெயில்ல காத்துக் கிடக்கிறது தெரியலை... போய் வரிசையில நின்னு வாய்யா...!''

அவன் அடிக்குரலில் உறும, பெரியவர் சற்றே தயங்கி, ''நான் சுதந்திரப் போராட்ட தியாகிப்பா... ஜி. ஹெச்சுல ஸ்பெஷல் வார்டு அட்மிஷனுக்காக வேண்டி ஒரு சர்ட்டிபிகேட் தேவைப்படுது... அது தான்...!'' என்று இழுத்தார்.

''நீ யாராயிருந்தா எனக்கென்னய்யா? உன்கிட்ட பத்து ரூபா இருந்தாக் கொடுத்துட்டு உள்ளே போ. இல்லே, போய் வரிசைக் கடைசியில நின்னு வா...!''

அதிகாரத் தொனி கொஞ்சமும் மாறாது அவன் இரைய, இவர் வேறு வழியில்லாது வரிசையின் கடைக்கோடியில் போய் நின்று கொண்டார்.

பெரியவரின் உள் மனம் புழுங்கியது.

வரிசையில் நின்று தாசில்தாரின் ஹெட் கிளார்க்கை அணுகுவதற்கே மாலை மணி மூன்றாகி விட்டது.

விஷயத்தைச் சொன்னதும் அந்த இள வயது கிளார்க் தன் சோடா புட்டிக்

## ஒரு கோன் ஐஸ்க்ரீம் 45 ரூபாய்!

இத்தாலியில் நடைபெற்ற 'கால் பந்து'ப் போட்டிகளை உலகமே பார்த்துக் கொண்டிருந்த பரபரப்பான சூழ்நிலையில், ஜெர்மனி, அயர்லாந்து, இங்கிலாந்து நாடுகளிலிருந்து வந்து குவிந்த ஃபுட்பால் ரௌடிகளின் தொல்லைகளைத் தாங்க முடியாமல், ஏராளமான இத்தாலியக் காவல் துறையினர் இரவு பகலாக உழைத்தார்கள். தினந்தோறும் பலர் நாடு கடத்தப்பட்டார்கள். தினந்தோறும் தெருச் சண்டைகள்.

போட்டிகள் நடைபெற்ற இத்தாலிய நகரங்களில், திருவிழாதான். ஹோட்டல்கள், 'பார்'கள், எல்லாமே — ஹவுஸ் ஃபுல்! உணவுப் பண்டங்களின் விலை மூன்று மடங்கு ஏற்றம்! உதாரணமாக... ஒரு கப் 'டீ' அல்லது காப்பி ரூ. 35; ஒரு கோன் ஐஸ்கிரீம் ரூ. 45; ஒரு 'பேண்ட்' சலவை செய்ய ரூ. 120... இத்தாலி நாட்டுக்குக் கோடிக் கணக்கில் வரும்படி... ஒரே மாதத்தில் பலர் லட்சாதிபதிகள்!!




போட்டிகளில் 'ஃபௌல்' செய்த விளையாட்டு வீரர்களுக்கு ரூ. ஐம்பதாயிரம் முதல் ஒரு லட்சம் வரை அபராதம். அடுத்த உலகக் கோப்பை — அமெரிக்காவில்! 1994 — இல்.

ஐக்கிய அரபு நாடுகள் தோற்றாலும் ஆட்டத்துக்கு அந்நாட்டில் அமோக வரவேற்பு. இவர்கள் 'டீமை' கோச் செய்ய அமர்த்தப்பட்டிருக்கும் பிரேசில் நாட்டைச் சேர்ந்த 'கார்லோஸ் ஆல்பர்ட்டோ'வுக்கு ஒரு வருடத்திற்கு அளிக்கப்படும் சம்பளம் ரூ. 62 லட்சம். வருமான வரி கிடையாது! மற்ற வசதிகள் எல்லாம் இலவசம்! ஒரு வியாபாரி ஒரு 'ரோல்ஸ் ராய்ஸ்' காரைக் குழுத் தலைவருக்குப் பரிசாக அறிவித்துள்ளார்!

— அனிதாவின் அப்பா.

கண்ணாடி வழியே விழி பிதுங்க விழித்தார்.

இவர் நீட்டின காகிதக் கற்றைகளை ஒருமுறை ஆராய்ந்து விட்டு, ''உங்க 'ரிகார்ட்ஸ்' எல்லாம் சரியாத்தான் இருக்கு பெரியவரே... ஆனா நீங்க கேட்கிற அந்த தாட்சி சர்ட்டிபிகேட்டுக்கான 'டி. பாரம்' இங்கே இப்ப மருந்துக்குக் கூட இல்லையே... அவசியம் வேணும்ன்னா போயிட்டு ஒரு வாரம் கழிச்சு வாங்க... அதுக்கான 'டி பாரம்' வந்ததும் முதல் வேலையா உங்களுக்கு சர்ட்டிபிகேட்டைப் போட்டுத் தர்றேன்...!''

அவர் இப்படிச் சொன்னதுதான் தாமதம். பெரியவர் பதறிப் போய் விட்டார்.

''ஐய்யோ... சடால்னு நீங்க இப்படிச் சொல்லக் கூடாது தம்பீ... ஏற்கெனவே ஒடம்புக்கு முடியாமதான் பெரிய ஆஸ்பத்திரியில அட்மிட் ஆகியிருந்தேன். அங்கே என்னடான்னா பெட் இல்லேன்னு சொல்லி வராந்தா வார்டுல பாயை விரிச்சுப் படுக்கச் சொல்லிட்டாங்க. டாக்டர்க, நர்ஸுக கவனிப்பும் சரியில்லை. ரெண்டு நாளைக்கொருக்காத்தான் டாக்டரே வர்றார். ஏதோ தியாகிகளுக்கெல்லாம் ஸ்பெஷல் வார்டு சலுகை இருக்குன்னு எனக்கே இப்போதான் தெரிஞ்சுது. அதுதான் கையில வெண்ணெயை வச்சுட்டு நெய்க்கு அலைவானேன்னு உடனே ஓடி வந்தேன். தம்பீ... ஏதோ நீங்கதான் பெரிய மனசு பண்ணி எனக்கு இதுக்கு ஒரு வழி பண்ணணும்...!''

— கையெடுத்துக் கும்பிட்டபடி பரிதவிப்புடன் சொல்லி நிறுத்த, அந்தக் கிளார்க் அதுவரை உள்ளூர அடக்கி வைத்திருந்த எரிச்சலை வெளிக்கொணரும் விதமாய் நிமிர்ந்தார்.

''ஆமாய்யா... எல்லோருமே சுடு தண்ணியைக் கால்ல ஊத்தினா மாதிரி வந்து நில்லுங்க! எல்லோருக்குமே அவசரம்... அவசரம்... காலேஜ், ஸ்கூல் பசங்களுக்கு, கம்யூனிட்டி, இன்கம் சர்டிபிகேட் அவசரம்ன்னா உங்களை மாதிரி ஆளுங்களுக்கு இப்படி அவசர, அவசியங்கள்... ஓர் ஆபீஸ் ஸ்டாப்புக எத்தனை வேலையைத்தான் பார்க்கறது...?''

— நுனி மூக்கும், காது மடல்களும் ஒரு சேர சிவந்து துடிக்க, அவசியமேயில்லாது இரைந்து கத்தினார் சோடா புட்டிக் கண்ணாடி.

''என்ன வேதாச்சலம்... என்ன சப்தம்...? ஏன் திடீர், திடீர்ன்னு 'பப்ளிக்குக' கூட எரிஞ்சு விழறீங்க...?''

ஐந்தாறு ஃபைல் கற்றைகளைக் கொண்டு வந்து ஹெட்கிளார்க் டேபிளில் போட்ட மற்றொரு இளைஞன் சிரித்தபடி கேட்டான்.

''அவரு சுதந்திரப் போராட்டத் தியாகியாம். ஜி. ஹெச்ல ஸ்பெஷல் வார்டு அட்மிஷனுக்கு டி பாரம் சர்டிபிகேட் வேணும்ன்னு ஒற்றைக் கால்ல நிற்கிறார். போயிட்டு அடுத்த வாரம் வரச் சொன்னாக் கேட்க மாட்டேங்கறார்...!''

இளைஞன் பெரியவரை மேலும் கீழுமாய் ஒருமுறை பார்த்தான்.

''என்ன... இந்தக் கிழத்துக்கு ஸ்பெஷல் வார்டு சுகம் கேட்குதோ...?''

''அதுதான் பாரேன்... மீசை நரைச்சாலும் ஆசை நரைக்காதுங்கறது சரியாத்தானே இருக்கு? எங்கேயோ ஒரு மூலையில கிடந்து நிம்மதியாப் போறதை விட்டுட்டு, சாகப் போற காலத்துல போய் ஸ்பெஷல் வார்டு அட்மிஷனுக்கு அலையா அலையுது போல...! நாட்டுக்குச் சுதந்திரம் வாங்கறதுக்காக உயிரைக் கூட துச்சமா மதிச்சேன்னு வாய் கிழியப் பேசற இவங்களுக்கு பென்சன் பணம், ரயிலுக்கு இலவச பாஸ், ஸ்பெஷல் வார்டுன்னு இந்த அல்ப ஆசைக கூட அட்டையா ஒட்டிக்கிட்டிருக்கிறது பார்க்க வேடிக்கையா இல்லே...?''

— அவனின் கிண்டல் வார்த்தைகள் முழுமையும் பெரியவரின் மனத்துக்குள் அனலாய், தீக்கங்குகளாய்... நெஞ்சத்தின் ஒரு மூலையில் எங்கோ வலியெடுத்தது.

''தம்பி! நான் என்னோட தியாகங்களையெல்லாம் பதவியாக மாற்றி, காசும் சேர்த்திருந்தால் நீ இப்படிப் பேச மாட்டே. நானும் இங்கே வந்து நிற்க நேராது. ஸ்பெஷல் வார்டு நான் கேட்காமலே கொடுத்திருப்பாங்க. ஆனா, தியாகத்துக்கு விலை பேசாம, அல்ப் பென்சனோட திருப்தி அடைஞ்சேன் பாரு, அதுதான் உங்களை இப்படிப் பேச வைக்குது'' என்று கூறிவிட்டு ஓர் உறுதியோடு கமலத்தைக் கூட்டிக் கொண்டு பேசாமல் திரும்பி நடந்தார் பெரியவர்.

ஜி. ஹெச்.சின் வராந்தாவிலேயே பழையபடி போய்க் கிழிந்த பாயில் படுத்துக் கொண்டார்.

''என்னங்க, போன காரியம் என்னாச்சு? ஒன்றும் நடக்கலியா?'' என்று அவருக்கு தம்ளரில் கஞ்சி ஊற்றிக் கொடுத்தவாறே கேட்டாள் அவர் மனைவி.

''கமலம்! எனக்கு இப்ப ஒரு புதிய தெளிவு பிறந்திருக்கு. நான் தியாகி. பென்சன் வாங்கியதே தப்பு. ரயில் பாஸ் கேட்டதும் தப்பு. ஸ்பெஷல் வார்டுக்கு ஆசைப்பட்டதும் தப்பு. சின்னச் சின்ன இலவசங்களைப் பெறுவது கூட தியாகத்துக்கு விலை பேசியதாகத்தான் ஆகும். அப்புறம் தியாகம் என்ற சொல்லுக்கும் அர்த்தமில்லாமப் போகும். அதனால, எல்லாருக்கும் நடக்கறது நமக்கும் நடக்கட்டும்கிற முடிவோட இருக்கேன்'' என்றார்.

சுதந்திரப் போராட்ட காலத்தில் அவர் கண்களில் இருந்த ஒளி, இப்போது இந்த முதிர்ந்த வயதில் மீண்டும் அதில் குடி கொண்டிருப்பதைப் பார்த்து அதிசயித்தாள் கமலம்.

# அதிர்ஷ்ட தேவதை

### இதுவரை நடந்த கதை...

ரமேஷ் சாண்டில்யாவின் அலுவலகத்தில் வேலை பார்ப்பவன் ரமணி. உடன் வேலை பார்க்கும் மாலு அவன் காதலி. நிராதரவான நிலையில் சொந்த ஊரை விட்டு வந்த ரங்கனைத் தனது அலுவலகத்திலேயே பியூனாக வேலைக்குச் சேர்த்து விடுகிறான் ரமணி. ரங்கன் ஓர் அப்பாவி. ரமணியின் வார்த்தைகளை வேதமாய் மதிப்பவன்.

அலுவலக வாட்ச்மேன் மயில்சாமியின் மகள் தனம். தனத்தைப் பற்றி ரமணிக்கு ஏனோ நல்ல அபிப்ராயம் இல்லை. ஆயினும் இவ் விஷயத்தில் ரமணியின் எச்சரிக்கையையும் மீறி, தனத்தை மணக்கிறான் ரங்கன்.

திடீரென்று ரங்கனுக்கு லாட்டரியில் இருபத்தைந்து லட்சரூபாய் விழுகிறது. பரிசு பெற்ற ரங்கனுக்கு, தனத்தாலும் மயில்சாமியாலும் ஆபத்து வரக்கூடும் என்று கருதிய ரமணி, ரங்கனைத் தன்னுடைய வீட்டிலேயே தங்க வைக்கிறான். தனத்தை விவாகரத்துச் செய்து விட வேண்டும் என்று ரங்கனுக்கு அறிவுரை கூறுகிறான். தனம் வந்து ரங்கனை அழைத்த போது, பரிசுப் பணம் கைக்கு வந்ததும் ரங்கன் வருவான் என்று அவளைச் சமாதானப்படுத்தி அனுப்பி வைக்கிறாள் ரமணியின் தாய்.

கோமதி வாசற்படியில் நின்று கொண்டிருந்தாள். தனத்துக்குத் துணையாகச் சென்றிருக்கும் பிள்ளை ரமணி, இன்னும் திரும்பி வரவில்லை. கடிகாரத்தில் மணி பத்தேகால் காட்டியது. வழக்கமாக ரமணி எட்டரைக்குச் சாப்பிட்டு விடுவான். நிச்சயமாக அவன் பசியில் துடித்துக் கொண்டிருப்பான். ஒரு கேடு கெட்ட பெண்ணுக்கு அவள் தன் பிள்ளையைத் துணை அனுப்பியதே தப்பு. அவள் எப்படிப் போனால் என்ன என்று இருந்திருக்க வேண்டும். ஆனால் ரங்கன்? ரங்கனுக்காக ரமணி சிரமப்படுகிறான். அந்தச் சிரமங்களில் ஒரு சிரமம்தான் அவனுடைய பசியும் பட்டினியும். இதெல்லாம் இன்னும் கொஞ்ச நாட்களுக்குத்தானே? அதன் பின்னர் ரமணி எங்கேயோ, ரங்கன் எங்கேயோ?

திடீரென்று கேட் திறக்கப்படும் சப்தம் கேட்டது. பார்த்தாள். இருளில் கூட ரமணியின் உயரமும் ரங்கனின் குள்ளமும் தெரிந்தன.

அவர்கள் அருகே வந்ததும், ''என்னடா இவ்வளவு லேட்டு?'' என்றாள் கோமதி.

''இதோ இவனைக் கேளு அம்மா! நாங்க போன உடனேயே அஞ்சாம் நம்பர் பஸ் வந்தது. அதுவும் ஏறிடுத்து. ஆனா இவன்? பசிக்கிறதுன்னான். இத்தனூண்டு வயத்திலே அப்படி என்னதான் பசி ஏற்படுமோ? ஒரு ஓட்டலுக்கு அழைச்சுட்டுப் போனேன்,'' என்றான் ரமணி.

''நீ?''

''நான் என்னிக்காவது அனாவசியமா ஓட்டல்லே சாப்பிட்டு நீ பார்த்திருக்கியா, அம்மா?''

''சரி வா, தட்டு வைக்கிறேன். ரங்கா, நீ உன் ரூமுக்குப் போய் உன் பொண்டாட்டியைச் சொப்பனத்திலே பாரு.'' என்றாள் கோமதி.

''போறேம்மா!'' என்று சொல்லிவிட்டு மாடியை நோக்கி நடந்தான்.

•

''அம்மா, நீ ரொம்ப அபாரமா இன்னிக்கு நிலைமையைச் சமாளிச்சே!''

''வாயாலே சொல்லாதே, ரமணி! ஒரு சர்ட்டிபிகேட்டா எழுதிக் கொடு, பிரேம் போட்டு மாட்டறேன்.''

''குசும்புக்கும் ஒரு எல்லை உண்டு அம்மா. அது சரி, தனத்தை இப்படித்தான் கையாளணும்னு உனக்கு எப்படித் தோணித்து?''

''சூர்ப்பனகை ராவணன்கிட்டே ஓலமிட்டுக் கத்திண்டே போன மாதிரி, இவ ஓலமிட்டுண்டு வந்தா. என்ன செய்யறது? நீயானா திருப்பிக் கத்தியிருப்பே... ஏன் போலீசுக்குப் போகத் துணிஞ்சிருப்பே... எப்பவும் முள்ளை முள்ளாலேயே எடுக்கப்படாதுன்னு தோணித்து. அதான் அவளைப் படி ஏறி வரச் சொன்னேன். எடுத்த எடுப்பில அவளுக்குச் சாதகமாப் பேசினேன். அதுக்கு அப்புறம் எல்லாம் எளிசாப் போயிடுத்து.''

''தற்காலிகமா ஒரு தலைவலி தீர்ந்து போச்சு.''

''ஒண்ணு ரெண்டு மாசத்துக்கு ஆயிரமோ, ரெண்டாயிரமோ அவகிட்டத் தள்ளினா அவ வாய் மூடிடும். அவ அப்பனையும் அப்பப்ப கவனிச்சுக்கோ,'' என்றாள் கோமதி.

''அதுக்கு அவசியமே இருக்காதும்மா. அவளுக்கு அடுத்த மாசம் பணம் போய்ச் சேர்ந்ததுமே மயில்சாமி தனத்தோட ஒட்டிப்பான். ரங்கன் மேல கை வைக்கவும் அவனால முடியாது. ஏன்னா தனத்தின் மனசிலே

ஒரு கோட்டையின் அஸ்திவாரத்தை நீ போட்டிட்டே, அம்மா!''

''இப்ப உன் தட்டிலே சாதம் பரவிக் கிடக்கு. அதைக் குழிச்சு வை. குழம்பு போடறேன்.''

''அம்மா.''

''என்னடா?''

''நாளையிலிருந்து ரங்கன் எப்பவும் மாதிரி ஓட்டல்லேயே சாப்பிட்டுக்கட்டும்.''

''தனம் வர்றதுக்கு முன்னாடி வேறே எப்படியோ பேசினியே?''

''அப்ப நிலைமை வேறே. மயில்சாமி என்ன செய்வானோங்கிற கவலை.''

''என்னைப் பொறுத்தவரை ரங்கனுடைய நிலைமை மாறலேடா. மயில்சாமி நிச்சயமாத் தொந்தரவு கொடுத்துக்கிட்டுத்தான் இருப்பான். நான் அவனுக்கும் சேர்த்துப் பொங்கிப் போடறேன்.''

''உன் இஷ்டம்.''

''அது சரி, விவாகரத்து வாங்கிக் கொடுக்கணும்னியே, அது சாத்தியமா? கலியாணமாகி முழுசா ஒரு வருஷம் ஆகலியே!''

''சாத்தியம்தான் அம்மா! ஆனா இப்ப ஒரு விவரமும் கேட்காதே... நானே இது விஷயமாக் கொஞ்சம் அலையணும்.''

''சரி, பேசிக்கிட்டே இருக்காதே தட்டைப் பார்த்துச் சாப்பிடு,'' என்றாள், கோமதி.

**ம**றுநாள் ஆபீசில் ரமணி வந்ததும், மாலு தன் இருக்கையை விட்டு எழுந்து, அவன் அருகே போய் உட்கார்ந்தாள்.

''என்ன ரமணி முகமெல்லாம் ஒரு மாதிரியா இருக்கு, சரியாத் தூங்கலியா?''

''நன்னாத் தூங்கினேன் மாலு. நீதான் அடிக்கடி வந்து தொந்தரவு பண்ணினே.''

''இதுக்கு நான் ஸாரி சொல்ல மாட்டேன் ரமணி. நீங்களும்தான் இதே தப்பை நான் தூங்கறப்பவும் செய்யறீங்க. அதுவும் தினமும்.''

''ஓகே. நான் இப்ப சுகந்தியோட பேச



ப.ஏ.கிர்.



''ஏண்டா கண்ணா! இப்படி எட்டு மணிக்கெல்லாம் தூக்கம் வருதுன்னு சொல்றியே, அப்புறம் எப்படிப் படிப்பே?''

''போங்கப்பா! நீங்க ஆபீஸ்லகுறட்டை விட்டுத் தூங்கிடறீங்க, உங்களுக்குத் தூக்கம் வரலை... எனக்கு அந்த மாதிரி இல்லையே!''

— சீர்காழி வி. ரேவதி.

ணும். நீ இடத்தைக் காலி பண்ணு.''

''அது வந்து உட்கார்ந்தா லேசிலே எழுந்திருக்காதே! ஈஷிக்குமே?''

''ப்ளீஸ், மாலு. தயவு பண்ணேன்.''

''ஓகே. இவ்வளவு கெஞ்சறீங்க. எழுந்திருக்கிறேன்.''

மாலு தன் இருக்கைக்கு வந்தாள். ஆபீஸ் ஹாலில் எதிர்க் கோடியில் இருந்த சுகந்தியை நெய்தோசை கிச்சா மூலமாகத் தன்னைப் பார்க்கும்படி கூறினான் ரமணி.

சுகந்தி ஆச்சரியப்பட்டுப் போனாள். இந்த இரண்டு மூன்று மாதங்களில் ஒரு தடவை கூட ரமணி தன்னை எந்த விஷயத்துக்குமே அழைத்ததில்லை. இப்போது எதற்காக அழைக்கிறான்? அவள் டைப் அடித்த விஷயத்தில் ஏதேனும் பெரும் தவறு நேர்ந்திருக்கிறதோ? திடீரென பயமும் பிறந்தது.

அவள் எழுந்து, புடைவையைச் சரி செய்து கொண்டு ரமணியை நோக்கி நடந்தாள்.

''குட்மார்னிங், ரமணி சார்.''

''குட்மார்னிங் சுகந்தி. உன்கிட்ட நான் கொஞ்சம் அந்தரங்கமாப் பேசணும்.''

''அந்தரங்கமாகவா?''

''ஆமாம். இங்கே ஹால்லே உட்கார்ந்து பேச முடியாது. பாஸ் இன்னும் வரலே. பன்னிரண்டு மணிக்குத்தான் வருவார்னு வெங்கி சொன்னான். நாம அவர் ரூம்ல உட்கார்ந்து பேசலாம்.''

''ஓகே சார்.''

இருவரும் ரமேஷ் சாண்டில்யாவின் அறைக்குள் சென்றார்கள். ''வெங்கி, யாரையும் உள்ளே விடாதே'' என்றான் ரமணி.

சுகந்தி உட்கார்ந்ததும், ரமணி, ''உன்னாலே எனக்கு ஒரு உதவி தேவைப்படறது சுகந்தி. அந்த உதவியாலே ஒரு நல்ல மனுஷனுடைய வாழ்க்கை பாதிக்கப்படாம ஒடப் போறது. உதவி செய்வியா?'' என்றான்.

ரமணி இந்த மாதிரி பணிவாகக் கேட்டறியாத சுகந்தி ஒரு கணம் திகைத்துப் போனாள். கேள்வியிலே யாரைப் பற்றி அவன் குறிப்பிடுகிறான் என்பதும் புரிந்தது.

''ரங்கனோட வாழ்க்கைதானே சார்?''

''கரெக்ட்.''

''சொல்லுங்க ரமணி சார்.''

''மயில்சாமி எப்பவும் உன்கிட்டதான் கைமாத்து வாங்குவான். என்ன அப்ளிகேஷன் போடறதா இருந்தாலும், அதை நீதான் டைப் அடிச்சுக் கொடுப்பே. அவன் எந்தப் பிரச்னை வந்தாலும் உங்கிட்டதான் வருவான்.''

''நீங்க சொல்றதெல்லாம் கரெக்ட் ரமணி சார்.''

''என்னுடைய வேலை பெர்து நிர்வாகம் னாலும்; சிப்பந்திகளோட சம்பளம், அலவன்ஸ், ஓவர்டைம், லோன்ஸ் இதையெல்லாம் நான் கவனிச்சுக்கிறதில்லே. கிச்சா பார்த்து அதெல்லாம் நேரே பாஸுக்குப் போறது. ஏன், என் லீவ் அப்ளிகேஷன் கூட கிச்சா மூலமாத்தான் மேலே போறது.''

''ஆமாம் சார்... நீங்க சேல்ஸ் பர்ச்சேஸ் இதெல்லாம்தான் பார்த்துக்கிறீங்க.''

''எனக்கு மயில்சாமியைப் பத்தி சில விஷயங்கள் தெரியணும்.''

''குறிப்பா எதைப் பத்தின்னு சொல்ல முடியுமா, சார்?''

''போன வருஷமோ, இல்லே அதுக்கு நாலஞ்சு மாசம் முன்னாடியோ அவன் வீட்ல ஒரு கலியாணம் நடந்தது இல்லே?''

''ஆமாம் சார். அவனோட பொண்ணுக்கு. பாஸ் லோனா ஆயிரம் கொடுத்தார். அன்பளிப்பா ஐந்நூறு கொடுத்தார். மயில்சாமிக்கு ஒரே பெண் அப்படீன்னுதான் இத்தனை நாளும் நினைச்சுட்டிருந்தேன். ரங்கனுக்கும் அவனுடைய பெண் தனத்துக்கும் கலியாணம் ஆனப்புறம்தான் ரெண்டு பேர் இருக்கணும்னு பட்டது. ஆனா நிச்சயமா ரெண்டு பெண்களும் ஒரே தாய் வயத்தில பொறந்தவங்களா இருக்க முடியாது.''

''எப்படி அவ்வளவு உறுதியாச் சொல்றே?''

''தனம் அன்னிக்கு வந்தா இல்லியா? அப்ப அவ அக்கா எப்படி இருக்கான்னு விசாரிச்சேன். தான் ஒரே பெண் அப்படீன்னா... பல தடவை மயில்சாமியும் தனக்கு ஒரே பெண்தான்னு சொல்லியிருக்கான். தனத்தோட கலியாணம் விஷயமா மறுபடியும் லோன் அப்ளிகேஷன் டைப் பண்ணித் தரச் சொன்னான். அப்ப அவனை நான் மடக்கினேன். எப்படி ஒரே பெண்ணுக்கு ரெண்டு வாட்டி கலியாணம்

## அருள்வாக்கு



ஈசுவரன் வேணுமா? அதற்கு அவனைத்தான் நேரில் உபாஸிக்கணுமென்றில்லை. அவனைப் பிடித்துக் கொண்டுவர நம்முடைய உபாஸனா சக்தி போதவே போதாது. அதனால் ஒரு குருவைப் பிடித்துக் கொண்டு விட்டால் போதும். நமக்காக அவர் பிரார்த்தித்தோ, சண்டை போட்டோ அவனை இழுத்துக் கொண்டு வந்து விடுவார்.

இப்படி, தனக்குக் கிடைத்த ஈச்வர தர்சனம், தன்னுடைய சிஷ்யர்களுக்கு, அல்லது தன்னைச் சேர்ந்த மற்றவர்களுக்கும் கிடைக்கும்படியாகப் பலமஹான்கள் பண்ணியிருக்கிறார்கள்.

ஸோமாசி மாற நாயனார் கதையில் இப்படித்தான் பார்க்கிறோம். அவர் தம்மால் நேராக ஈச்வரனை வருவித்துக் கொள்ள முடியாதென்று ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளிடம் போய் வேண்டிக் கொள்ள, ஸுந்தரமூர்த்தி அப்படியே வரவழைத்து விட்டாரென்று கதை. இவர்களை குரு சிஷ்யர்களென்று சொல்ல முடியாது. ஆனாலும், இதிலிருந்தே ஈச்வரனோடு நெருங்கியிருக்கிற குரு, அவனைச் சிஷ்யனுக்கும் நெருக்கமாகக் கொண்டு வந்துவிட முடியுமென்று தெரிகிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

நடக்க முடியும்னு கேட்டேன். லோனுக்கான காரணத்தை மாத்திடறேன்னான்.''

''கெடைச்சுதா?''

''இல்லே. கிச்சாவே சிபாரிசு செய்யலே.''

''அந்த முதல் கலியாணத்துக்கு அவன் லோன் அப்ளை பண்ணினானே அந்த அப்ளிகேஷன் கிச்சாகிட்ட இருக்கிற ஃபைல்லதானே இருக்கும்.''

''ஆமாம் சார்.''

''நம்ப ஆபீஸ்லேர்ந்து யாரானும் அந்தக் கலியாணத்துக்குப் போனாங்களா?''

''இல்லே சார். கலியாணம் திருநீர் மலையில நடந்தது. நான் போகலாம்னு இருந்தேன். தனியாப் போகத் தெரியலே. என் அப்பா அழைச்சுட்டுப் போறேன்னு சொல்லிக் கடைசி நிமிஷத்திலே கை விட்டுட்டார்.''

''நீ ஒரு உதவி செய்யணும்.''

''நிச்சயமா.''

''அந்த ஃபைலை எடுத்து லோன் அப்ளிகேஷனைத் தேடிப் பிடிக்கணும். மயில்சாமி அச்சடிச்ச பத்திரிகை வைச்சிருந்தா அதை என்கிட்ட கொடுக்கணும். நான் ஜெராக்ஸ் காப்பி எடுத்துட்டு உங்கிட்டத் திருப்பிக் கொடுத்துடறேன்.''

''சரி சார். எதுக்கும் நீங்க கிச்சாகிட்ட ஒரு வார்த்தை சொன்னீங்கன்னா எல்லாம் எளிசாப் போயிடும்.''

''கண்டிப்பா. இப்பவே சொல்லிடறேன்... அது சரி, சுகந்தி, இந்த விஷயம் பத்தி நீ என்ன நினைக்கிறே?''

''மயில்சாமி தன் பொண்ணைப் பத்தி நல்லதா ஒரு வார்த்தை சொல்லி நான் கேட்டதில்லே. அவளாலே ரெண்டு பொறுக்கிகள் சூளைமேட்ல சண்டை பிடிச்சுட்டாங்களாம். ஒருத்தனுக்கு கத்திக் குத்து வேறே. ரெண்டு பேரையும் போலீஸ் அழைச்சுட்டுப் போச்சுன்னு மயில்சாமி சொல்லிட்டு, அவன் பெண்ணையும் பூக்கடைப் போலீஸ் ஸ்டேஷன்லே ஒரு நாள் பூரா அடைச்சு வைச்சிருந்ததாகச் சொன்னான்.''

''மயில்சாமிக்கு ரெண்டு பெண் இருக்கும்னு உனக்குத் தோணலே, இல்லியா?''

''ஊஹூம்... தோணலை. ஃபைலைப் பார்த்தா எல்லாம் வெட்ட வெளிச்சமாயிடும்.''

''இப்ப நான் இருட்லே இருக்கேன், சுகந்தி.''

''உங்களுக்கும் மாலுவுக்கும் எப்ப சார் கலியாணம்?''

''மொதல்ல ரங்கனுடைய பிரச்னை தீரட்டும்.''

''உங்களை மயில்சாமி தாக்க வந்தப்ப நான் அலறிட்டேன்.''

''தாங்க்ஸ். போலாமா?''

ரமணி எழுந்தான்.

சுகந்தியும் எழுந்தாள்.

''ஞாயித்துக் கிழமை கார்த்தாலே நான் உன் அப்பாவைப் பார்க்க வரப் போறேன்.''

''எதுக்கு சார்?''

''உன் ஜாதகத்தை வாங்கிக்க. எனக்குத் தெரிஞ்ச இடங்கள் நிறைய இருக்கு.''

சுகந்தி பதில் கூறவில்லை. ஆனால் ரமணியின் வார்த்தைகள் மனத்துக்கு இதமாக இருந்தன.

ஏழு நாட்களுக்குப் பிறகு —

வெள்ளிக் கிழமை.

ஒரு சைக்கிள் ரிக்ஷாவில் வந்த கோமதி, பிடாரி அம்மன் தெருவிலிருந்து கிளை விட்ட ஒரு சந்தின் முனையில் இறங்கினாள். ரிக்ஷாக்காரனை நிறுத்தி விட்டு, சந்தினுள் நடந்து தனத்துடைய வீட்டின் கதவைத் தட்டினாள்.

(தொடரும்)

# செஸ்: ஒரு 'செக்'லிஸ்ட்!



சரிதா

●● ஒரு காலத்தில் செஸ்ஸில் புகழ் பெற்றிருந்த நாடு ருஷ்யா. இன்று அந்தத் தனித்தன்மை மலையேறி விட்டது.

●● பாபி பிஷ்ஷர்தான் செஸ் விளையாட்டில் சட்ட திட்டங்களுக்கு எதிராகக் குரல் எழுப்பிப் பிரச்னைகளைக் கிளப்பினார். அதனால் 'யார் இவர்' என்று உலக மக்களின் பார்வை திரும்ப, செஸ் விளையாட்டிலும் ரொம்ப ஆர்வம் ஏற்பட்டது.

●● நமது ஆனந்த் இன்று உலகப் புகழ் பெற்ற செஸ், கிராண்ட் மாஸ்டராக விளங்கி இந்தியாவுக்கே பெருமை சேர்த்திருக்கிறார்.

●● உலக சாம்பியனான காஸ்பரோவ் பல செஸ் வீரர்களுக்கு எதிராக மட்டுமின்றி, கம்ப்யூட்டருக்கும் சவால் விட்டு வெற்றி பெற்றுள்ளார். கம்ப்யூட்டர் என்றால் பி. ஸி. அல்ல. பல லட்சங்கள் பெறுமானமுள்ள, முதல் தரமாகப் புரோகிராம் செய்யப்பட்ட ஸூப்பர் கம்ப்யூட்டர். இந்த வெற்றி மூலம் மனித மூளைக்கு நிகரான கம்ப்யூட்டர் இல்லை என்று நிரூபித்திருக்கிறார்.

●● இந்தியாவில் பல இளைஞர்கள் செஸ் ஆர்வம் மிகுந்து சக்கைப் போடு போடுகிறார்கள். உதாரணமாக விநோத் என்ற சிறுவன் செஸ் சூரனாக விளங்குகிறான். இவன் இன்னொரு ஆனந்தாக வளர வாய்ப்புண்டு. மதுரை மாநகராட்சியில் கார் டிரைவராக உள்ள இப்ராஹிமின் மகன் சையத் அன்வர் இன்று உலக சிறுவர் சதுரங்கப் போட்டியில் ஆட அமெரிக்கா சென்றுள்ளான்!

●● தமிழகத்தில்தான் செஸ் வீரர்களும் வீராங்கனைகளும் அதிகம். கிராண்ட் மாஸ்டர் ஆனந்த் தவிர, ஆறு இன்டர்நேஷனல் மாஸ்டர்கள் உள்ளனர்: ஆரன், ரவிகுமார், ரவிசேகர், பரமேஸ்வரன், லங்கா ரவி, முருகன். இன்டர்நேஷனல் பெண் மாஸ்டர்: என். சரிதா.

●● தேசிய அளவில் இருபத்தேழு முறைதான் இதுவரை போட்டி நடந்துள்ளது. இதில் தமிழக செஸ் விளையாட்டு வீரர்கள் 15 தடவை வென்று தேசிய சாம்பியன்களாகியுள்ளனர்.

●● சென்னையிலிருந்து விஜி, மீனு என்ற இரு பெண்கள் செஸ் ஆட அமெரிக்கா சென்றுள்ளனர். வயது பன்னிரண்டுக்கும் குறைவு.

காமேஸ்வரன்



அன்வர்



தகவல்கள்: தமிழ்நாடு செஸ் சங்கப் பொருளாளர் **வி. காமேஸ்வரன்**

தொகுப்பு: **அசோக்**



''என்னைக் கட்சி மாறச் சொல்லி, தலைவரே வற்புறுத்துறார்!''

''ஏங்க?''

''நான் கட்சியில் பண்ற ஊழலைத் தாக்குப் பிடிக்க முடியாமத்தான்...!''

— மணியன் தர்மலிங்கம்.

''படத்தைத் தயாரிச்சதோட நடிச்சும் இருக்கும் உங்களுக்கு, உங்க நடிப்பு நிச்சயமாக் கைகொடுக்கும்னு எல்லாரும் பாராட்டினதாச் சொல்றீங்களே, என்னவா நடிச்சீங்க?''

''பிச்சைக்காரனா...?''

— வி. ரேவதி.



''ஏங்க, வரும்போது ஒரு கார்டு வாங்கிட்டு வாங்க, எதிரொலிக்கு எழுதணும்...''

''என்ன எழுதப் போறே?''

''நேத்து ஷோபனா ரவி கட்டியிருந்த புடைவைநல்லாயிருந்திச்சு.எங்கேவாங்கி வாங்கன்னு கேட்டு எழுதணும்.''

— டி. என். பாலகிருஷ்ணன்.





''என் மவன் ரொம்பப் பெரிய சினிமாப் பைத்தியமா இருக்கான்; எவ்வளவு மோசமான படமா இருந்தாலும், மூணு தடவை பார்த்துடுறான்!''

''அவன் எவ்வளவோ தேவலாம்; என் மவன் வால் போஸ்டரையே ஒண்ணரை மணி நேரம் பார்த்துக்கிட்டு நிற்கிறான்!''

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.

''தலைவர் மேடைக்கு வந்ததும் நாற்காலியில் உட்காராமல் தரையில் உட்காருகிறாரே, ஏன்?''

''தமக்கு நாற்காலி ஆசை கிடையாதுன்னு சிம்பாலிக்காச் சொல்றாராம்!''

— எஸ். முகம்மது யூசுப்.






ஓர் இயல்பான ஞாயிற்றுக் கிழமையின் சந்தோஷத்தைக் கூட்டுவதாக இருந்தது வைதேகியின் வருகை. அப்பா வீட்டில் இல்லை என்றால் எல்லோருக்கும் சுதந்திரச் சிறகுகள் முளைத்து விடுகின்றன என்றாலும் ஞாயிற்றுக் கிழமைக்கு உண்டான சுகம் யாராலும் குறைக்கப்படுவதில்லை. சங்கரும், ரமாவும் தூக்கி எறிந்த புத்தக பைகள் ஷெல்ஃப் மூலைகளில். சங்கர் வாசலில் பம்பரத்துக்கு அபீட் எடுத்துக் கொண்டிருந்தான். உமா ஹால் சுவரில் சாய்ந்து கொள்ள, மடியில் வளர்ப்புப் பிராணி மாதிரி டிரான்ஸிஸ்டர். 'விடியும் வரை தூங்குவோம்' என்று பாடிக் கொண்டிருந்தது.

''அய்ய் வைதேகி'' என்ற சங்கரின் குரல் தான் சகலத்தையும் கலைத்தது. அம்மா அடுப்பைச் சின்னது பண்ணி விட்டு, வாசலுக்கு ஓடினாள். ரமா கையிலிருந்த புத்தகத்தை வைத்து விட்டு வாசலுக்கு ஓடினாள். உமா ட்ரான்ஸிஸ்டரை மூலையில் சாய்த்து விட்டு வாசலுக்கு ஓடினாள்.

வாசலில் வைதேகி. அதே சிரிப்பு. கையில் இரண்டு சூட்கேஸ்கள். முகத்தில் பயண அசதி.

அம்மா கண்டுபிடித்து விட்டாள்.

''அவர் வரலியாடி?''

ஒரு தலையசைப்பு. இல்லை. கூடப் பிறந்தவர்களுடன் பேசிக் கொண்டே உனக்கும் பதில் அளிக்கிறேன் என்பது போல் ஒரு பாவனை. இயல்பாக இருப்பதாக

நினைப்பு மட்டும்.

''அப்பா எங்கே?''

''இது என்ன புதுக் கேள்வி? எந்த ஞாயித்துக் கிழமை அவர் வீட்டில் தங்கி இருக்கார்?''

''எப்பவும் போலத்தானா?''

''என்னிக்கு மாறும்?''

அவள் கொண்டு பரப்பிய சாமான்களில் ஒரு பதற்றம் இருந்தது. பிரஷ் கொண்டு வரவில்லை அவள். இரண்டு நாள் தங்கல் இல்லை. மொத்தமாக வந்து விட்டது போல இரண்டு பெரிய ஸூட்கேஸ்கள் முழுவதும் புடைவைகள்.

புழக்கடையில் தனியான சந்தர்ப்பம் அமைய அம்மா கேட்டாள்.

''ஏன் அவர் வரலை வைதேகி?''

வைதேகி அம்மாவை விடாமல் கண்ணுக்குள் பார்த்தாள்.

''அவர் வர மாட்டார்மா.''

''என்ன வைதேகி?''

''சொல்றேன். இப்பவே எல்லாருக்கும் தெரிய வேண்டாம். ஆனா ஒண்ணு நிச்சயம். நான் குழம்பிப் போயிருக்கேன். ஓர் இருபத்தஞ்சு வருஷ வாழ்க்கையின் அனுபவத்தோட நீ இருக்கே. பதில் அல்லது ஆறுதலாவது கிடைக்கும்னு நினைக்கறேன். அதுவரைக்கும் மத்த எல்லாருக்கும் ஒரு பொய். அவர் ஆபீஸில் ட்ரெயினிங்னு வெளியூர் போயிருக்கார். நான் பொறந்த வீடு சீராட வந்திருக்கேன். சரியா?''

**அ**ம்மாவின் வாழ்க்கை இருபத்தைந்து வருஷத்துக்கு முந்தைய கதை. அனுபவங்கள், வார்த்தைகள், சொற்கள் எல்லாமே தேய்ந்து போன நிலையில் தேடக் கிடைத்தாலும் மொத்தமாக ஒரு கணிப்பு இருக்கும். வைதேகி அந்தக் கணிப்பை அறிய வந்திருக்கிறாள்.

''வைதேகிக்குக் கல்யாணம் பண்ணலாம்னு இருக்கேன்!'' அப்பாவின் கட்டளை வாக்கியம். அம்மா பணியவில்லை.

''அவளுக்கு வயசாகலை!'' மாறுபட்ட பதில். அதுவும் அம்மா சொல்லும் பதில்.

''இந்த ஆனி வந்தா இருபத்தி மூணு முடியறது.

''நல்ல வேலையில் அவள் ஸ்திரமாகட்டும்.''

''பெண்களுக்கு வேலை முக்கியமில்லை.''

''என் காலத்தில்.''

''அவள் உன் பெண்.''

''காலம் என்னுடையதில்லை.''

அம்மா சாதித்து விட்டாள். மூத்தவள் பெண். அப்பாவுக்கு வருமானம் போதாது. கூடவே சீட்டுப் பழக்கமும். இரண்டு நாள் வீடு முழுவதையும் பட்டினி போட்டு காலேஜ் ஃபீஸ் கட்டிய காலங்கள் உண்டு.

''ஏம்மா இவ்வளவு கஷ்டப்பட்டு என்னைப் படிக்க வைக்கறே?''

''சொல்றேன்.''

''எப்போ?''

''சமயம் வரட்டும்.''

''உத்தியோகத்துக்கு அனுப்பப் போறியா?''

''ஆமாம்.''

''ஏன்? அப்பன் உருப்படியில்லாத குடும்பத்தில் பெண் வேலைக்குப் போவது வறுமை நிர்பந்தங்கறதுனாலயா?''

''புரியலை.''

''பச்சையாச் சொல்லட்டா? சோத்துக்கு வழியில்லாமத்தானே என்னை வேலைக்கு அனுப்பணும்னு படிக்க வைக்கறே?''

''மூண்டம். பசி எனக்கும் என் பிள்ளைகளுக்கும் புதுசு இல்லை.''

''பின்னே எதுக்கு என்னை வேலைக்குப் போகணும்னு சொல்றே?''

''சொல்றேன்.''

அம்மா சொல்லவில்லை. வைதேகி புரிந்து கொண்டாள். பாங்க் உத்தியோகம் கல்யாணத்தில் பெண்களுக்குக் கண்ணுக்குத் தெரியாத வரதட்சணை என்பது தெரிந்தது. அப்பாவின் ஈகோ பயம்— பெண்களுக்குக் கல்யாணம் பண்ணக் கூட முடியாதவர் என்பதால் வரும் அவமானம்— வைதேகிக்கு வரன் தேடச் சொன்னது. வேலை பார்க்கும் பெண் என்னும் சலுகையில் வைதேகிக்கு முன்னுரிமை வழங்கப்பட்டது. இதற்காகவா படிக்க வைத்து வேலைக்கு அனுப்பினாள். ''இல்லை'' என்றாள் அம்மா. ''சமயம் வரும் போது சொல்கிறேன்'' என்றாள்.

**''எ**ன்ன காரணம்?'' என்றாள் அம்மா.

எல்லோரும் தூங்கிப் போய் விட்டார்கள். அப்பாவிடமும், மற்றவர்களிடமும் பொய் முழு வீச்சுடன் சொல்லப்பட்டதால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அப்பாவின் பொறுப்பின்மை இன்னும் ஒரு கரும்புள்ளியாக ஒட்டிக் கொண்டிருக்கிறது. புயலடித்துச் சிதிலமான கிராமம் போல் மாறிப் போன வீடு. விருப்பத்திற்கு ஏற்ற படிப்பு இங்கே யாருக்கும் அமையவில்லை. வைதேகிக்கு பியூஸியும் டைப்ரைட்டிங் ஹையரும், உமாவுக்கு பிளஸ்டூவும், டைலரிங்கும். ரமா மட்டும் பி.காம். பொருளியல் தொடர்புடைய படிப்பு. தலைவனின் பொறுப்பின்மை பிள்ளைகளின் மேல் கவிழ்ந்த வீடு.

அம்மா திரும்பவும் கேட்டாள். ''என்ன காரணம்?''

''எதுக்கு?'' என்றாள் வைதேகி.

''நீ மட்டும் தனியா வந்ததற்கு?''

''பெண்கள் அவர்களுக்குரிய இடத்தை ஆடவர்களிடமிருந்து இன்னும் பெற

சத்தியப்ரியன்



அருள்வாக்கு

குரு எப்படி இருக்கிறார்? நாம் தப்புப் பண்ணினால் உடனேயே எடுத்துச் சொல்லிக் கண்டிக்கிறார். நமக்கு உறைக்கும் படி கரித்துக்கூடக் கொட்டுகிறார். நாம் ஒரு தப்பு பண்ணக் கூடிய நிலைமை ஏற்படும் போது, "இது குருவின் காதுக்குப் போய் விட்டால் என்ன ஆவது?" என்ற பயம் ஏற்பட்டு நம்மைக் கட்டிப் போடும். அவர் ஆத்மசக்தி நிறைந்த குருவாயிருந்தால் நாம் எங்கே என்ன தப்புப் பண்ணினாலும் அவர் தாமாகவே தெரிந்து கொண்டு விடுவார். அவ்வளவு சக்தியில்லாவிட்டாலும், அல்லது சக்தி இருந்தும் அதை வெளியில் காட்டாதவராக இருந்தாலும் — மனுஷ்ய விளையாட்டு விளையாடுவதில் பல குருக்கள் இப்படி (த்தெரிந்தும் தெரியாத மாதிரி) இருப்பதுமுண்டு. இப்படி இருந்தாலும் — வேறே யாராவது சொல்லி நம் தப்பு அவருக்குத் தெரிந்து விட்டால் அப்புறம் நம் கதி என்ன என்ற பயம் இருந்து கொண்டேயிருக்கும். அது நம்மைத் தப்பிலிருந்து தடுக்கும்.

இதே போல நாம் ஒரு நல்லது பண்ணினாலும் குரு அதை உடனே தாமாகவேயோ, இன்னொருத்தர் சொல்லியோ தெரிந்து கொண்டு — அல்லது இது நாம் பண்ணிய நல்லதல்லவா? அதனால் நாமே எப்படியாவது அது அவர் காதில் விழுகிற மாதிரி செய்து விடுவோம்! இப்படி ஏதோ ஒரு விதத்தில் அவர் தெரிந்து கொண்டு — நம்மை மெச்சி, விசேஷமாக ஆசீர்வாதம், அநுக்ரஹம் பண்ணி, மேலும் மேலும் உத்ஸாஹப்படுத்துவார். ஒரேயடியாகமெச்சினால் நமக்கு மண்டைக்கனம் ஏற்படுமென்பதால், 'தப்புக்காக சிஷ்யனை வெளிப்படக் கண்டிக்கிறது போல அவன் செய்யும் நல்லதற்காக வெளிப்படச் சிலாகிக்கக் கூடாது', என்று வைத்துக் கொண்டிருக்கும் குரு கூட ஸூக்ஷ்மமாக, ஆனாலும் சிஷ்யனுடைய மனஸுக்கு நிச்சயமாகத் தெரிகிற விதத்தில் ஏதோ ஒரு மாதிரி தம்முடைய ஸந்தோஷத்தைக் காட்டி அதற்காக ஓர் அநுக்ரஹம் செய்யத்தான் செய்வார்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

வில்லை என்னும் ஒரே காரணம்."

"புற அளவில் அவர் உன்னை பலாத்காரம் பண்ணுகிறாரா?"

"எந்த அர்த்தத்தில் இதைச் சொல்கிறாய்?"

"அடிப்பது, உதைப்பது இது போன்று?"

"இல்லை."

"பின்?"

"கருத்துச் சுதந்திரமின்மை கூட ஒருவகை பலாத்காரம்தான்மா. தன் கருத்தை அடுத்தவர்கள் மீது திணிப்பது கூட பலாத்காரம் தான்."

"அவர் சொல்வதை ஏற்றுக் கொள்வதில் உனக்குச் சிரமமிருக்கிறதா?"

"இல்லை. ஆனால் மறு பக்கத்திலிருந்தும் இதைப் பார்க்க வேண்டாமா?"

"எப்படி?"

"அவர் சொல்படிதான் எல்லாம் நடக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார். எப்படி இது சாத்தியமாகும்? பணிதல் என்பதை நான் அவமரியாதையாக நினைத்ததில்லை. அதே பணிதலை அவரிடமும் நான் எதிர்பார்க்கிறேன். அவர் சௌகரியத்திற்கு நான் மதிப்பளித்து நடந்து கொள்வதைப் போலவே அவரிடமும் எதிர்பார்க்கிறேன். கிடைக்கவில்லை. உள்ளே வைத்து மருகுவது ஒருநாள் வெடிக்கிறது. சண்டை. நான் பெரிசா? நீ பெரிசா? ஒரு வாரம் முழுக்கப் பேச்சுக் கிடையாது. சமாதானமாகும். திரும்பியும் வேதாளம் முருங்கைமரம்."

வைதேகி பதில் சொல்லாமல் அழுதாள்.

"அழாதே வைதேகி. கூடத்தில் படுத்திண்டிருக்கறவா முழிச்சிண்டுடப் போறா!"

"நான் என்னம்மா செய்யட்டும்?"

"போய்த் தூங்கு. தூங்கினாத் தெளிவு வரும்."

"நீ எப்படி அப்பாவுடன் உனக்கு உண்டான வலியையும், வேதனையையும் தாங்

கிண்டேன்னு சொல்லு. இருபத்தஞ்சு வருஷம் கூடவே இருந்ததால் ஏற்படும் பரிச்சயம் மட்டுமே நம் திருமணங்களை இன்னும் பிரிக்காமல் இருக்கிறதா?''

''தூங்குன்னு சொல்றேனில்ல? கார்த்தால பேசிக்கலாம்.''

வைதேகி எழுந்து போனாள்.

அம்மாவுக்குத் தூக்கம் வரவில்லை. தனக்குத்தானே வருவதுதானே தெளிவு? இதில் அடுத்தவர்கள் என்ன? பார்வை நம்முடையதுதானே? அடுத்தவர் சொல்லிக் கொடுத்துப் பார்ப்பது எப்படிப் பார்வை யாகும்? வைதேகிக்கு இது புரிய வேண்டாமா?

சிம்மாசனம் நல்ல சிம்மாசனம் இல்லை என்பது சபைக்கு வந்த பிறகுதானே தனக்கும் தெரிந்தது. குடியாலும், சிட்டாலும், ஆணவத்தாலும் செல்லரித்துப் போன சிம்மாசனம்.

இருபத்தைந்து வருஷ வாழ்க்கை. அதே முகம். உடல் முழுவதும் பரிச்சயம். இடது காது நுனியில் சின்னதாக வளைவு ஒன்று உண்டு. வலது மார்பில் சிவப்பு, சிவப்பாக இரண்டு மச்சம். அகலமான பாதங்கள். காலம் இளமையை வாங்கிக் கொண்டது என்பதைத் தவிர வேறு எதுவும் மாற வில்லை. முக்கியமாக ஆண் என்னும் தன்மை.

வைதேகி சொன்னது நினைவுக்கு வந்தது.

இருபத்தஞ்சு வருஷம் கூடவே இருப்பதால் ஏற்படும் பரிச்சயம் மட்டுமே நம் திருமணங்களை இன்னும் பிரிக்காமல் இருக்கிறதா? நிஜமா?

பதில் கிடைக்கும் முன் அம்மாவும் தூங்கிப் போனாள்.

மறுநாள் அப்பாவிடம் விஷயம் சொல்லப்பட்டது. தாமே சுமைகளைத் தாங்கும் தேவதூதர் போல சபையில் கத்தி, விஷயத்தை அம்பலமாக்கினார். மொத்தமாக அவள் திரும்பி வந்ததற்குக் கத்தினார்.

''மத்தியான பஸ்ஸுக்குக் கிளம்பு நீ. அது என்ன மனஸ்தாபம்னா பொட்டியைத் தூக்கிண்டு பொறந்த வீட்டுக்கு வர்றது? விட்டுக் கொடு. பொம்பளைங்க விட்டுக் கொடுக்கறதில் தப்பில்லை. அப்பத்தான் வீடு உருப்படும்!'' அப்பா இரைந்தார்.

''நான் என்னம்மா செய்ய...''

''மத்யான பஸ்ஸில் மதுரை கிளம்பு.''

''அம்மா...''

''அப்பா சொன்னதைத்தான் நானும் சொல்றேன். ஆனா உன் புருஷன் வீட்டுக்கு இல்லை. மதுரையில் லேடீஸ் ஹாஸ்டல் இருக்கா?''

''இருக்கு.''

''அதில் போய்த் தங்கு.''

''ராஜேஸ்வரி...'' அப்பா கத்தினார்.

''எனக்குச் சரின்னு படறதைச் சொல்றேன். இது என் உத்தரவு இல்லை. யோசனை. ஆண்கள் மத்தியில், அவர்கள் இயற்றிய தர்ம நெறிகளின்படி, அவர்கள் இயற்றிய சட்டத்தின்படி கல்யாணம் ஆன பெண்களுக்குப் பேசும் வாய் கூட புருஷன் தான். ஆண்களுக்குப் பெண்ணும் சமம். அவள் ஒரு காதல் உயிர் என்னும் நினைப்பு வராத வரையில், எந்தக் கல்யாணமும் சந்தோஷம் தரக்கூடியதல்ல. முதல் இரண்டு வருஷத்தில் புருஷ குணம் புரிந்து விடும். அடி, வலி எல்லாம் மனசில் தங்கி விடும். பயம் வரும். எப்படி இந்த மிச்ச வருஷத்தை ஓட்டப் போறோம்னு தோணும். குழந்தை பிறக்கும். நேசம் பண்ண வேற்று முகம் கிடைத்த சந்தோஷத்தில் புருஷனை மறக்கும். நம் தேசத்தில் எழுபத்தைந்து சதவீதத்துக்கு மேற்பட்ட குழந்தைகள் அம்மாக்களால் உருவாவதற்கு இதுதான் காரணம். பின்னால் புருஷ முகம் பழகிப் போகுமே தவிர, பிரியமாய்ப் போகாது. வைதேகி இப்போது முதல் மூணு வருஷத்தில் இருக்கா. இரண்டு தலைமுறை மாறியிருக்கு. ஆண்கள் மாறலை. ஆணவம் மாறலை.''

அப்பா அம்மாவை எல்லோருடைய முன்னாலும் ஓங்கி அடித்தார். அம்மா அழவில்லை.

''என் இருபத்தஞ்சு வருஷ அனுபவத்தை வச்சு ஒரு பதில் சொல்லச் சொல்லி அவதான் கேட்டா. எனக்குப் பொய் சொல்லத் தெரியலை.''

''இருபத்தஞ்சு வருஷம் முன்னால் ஏண்டி இதைச் சொல்லலை?''

''எனக்கு வேலை இல்லை.''

வைதேகி அம்மாவின் கைகளைப் பற்றி அழுத்தினாள். அம்மா தன்னை உத்யோகம் பார்க்க நிர்ப்பந்தித்த காரணம் புரிந்தது. மத்யானம் மதுரைக்குக் கிளம்பத் தயாரானாள்.

---

''பரீட்சையில் எல்லாக் கேள்விகளுமே சுலபமாகத்தானே இருந்திச்சு. நீ ஏன் சரியா எழுதலை?''

''நான் கஷ்டமான கேள்விகளை மட்டும்தான் படிச்சுட்டுப் போயிருந்தேன்!''

— ஞா. ஞானமுத்து.



# அதிர்ஷ்ட தேவதை

## 18

கதவைத் திறந்த தனம், கோமதியின் சிரித்த முகத்தைக் கண்டதும் ஆச்சரியப் பட்டுப் போனாள்.

''உள்ளே வரலாமா, தனம்?''

''வாங்கம்மா...'' என்று ஒரு பாயை எடுத்துப் போட்ட தனம் பரபரப்போடு சென்று முகத்தைக் கழுவிப் பொட்டிட்டுக் கொண்டு வந்தாள்.

தனம் பூவும் பொட்டுமாய்த் திரும்பி வருவதற்குள், கோமதி பையிலிருந்து ஒரு பிளாஸ்டிக் தட்டை எடுத்து அதன் மீது பூ, வெற்றிலைப் பாக்கு மஞ்சள் பழமெல்லாம் அடுக்கி வைத்து விட்டாள். ஒரு சோளித் துண்டு வேறு.

அயர்ந்து போய் நின்று, தன்னையே பார்த்துக் கொண்டிருக்கும் தனத்திடம்,



''உட்கார் தனம், உட்காரு. இன்னிக்கு வெள்ளிக்கிழமை. நீ சுமங்கலிப் பொண்ணு. நான் உன்னை விட வயசிலே ரொம்பப் பெரியவ. என் கையாலே மஞ்சள் குங்குமம் கொடுத்து நீ அதை வாங்கிக்கணும்னு எனக்கு ஆசை. நீ நன்னா இருக்கணும்னா ரங்கனும் நன்னா இருக்கணும். இல்லியா?'' என்றாள்.

தனம் தட்டைப் பார்த்தாள். பூ பழம் மஞ்சளெல்லாம் இருந்தன. ஆனால் பணம் இல்லையே? முதல் தேதிக்கு இன்னும் நான்கு நாட்கள் இருக்கின்றன. இவள் மீண்டும் பணம் கொடுக்கவென்று வருவாளோ?

அவளுடைய முகமாற்றத்தைக் கோமதி புரிந்து கொண்டாள்.

''மொதல்ல உட்கார் தனம்.''

தனம் உட்கார்ந்தாள். பணம் வரவில்லை என்ற எண்ணம் பிறந்த போது அலுப்புத் தட்டியது.

''நீ இப்ப இந்தத் தட்டை வாங்கிக்கோ.''

தனம் வாங்கிக் கொண்டாள்.

''வெத்திலைக்கு அடியிலே என்ன இருக்குன்னு பாரு.''

பார்த்தாள்.

ஒரு சிறு காகித உறை.

தனம் எடுத்தாள்.

''பத்து நூறு ரூபா நோட்டை நாலா மடிச்சு சின்னக் கவர்ல போட்டேன்'' என்றாள் கோமதி.

தனம் பரபரப்புடன் நோட்டுகளை எண்ணினாள்.

''ஆயிரம் இருக்கா?''

''இருக்கும்மா.'' சொன்னவள் எழுந்து நமஸ்கரித்தாள்.

''நன்னாயிரு!''

கோமதி எழுந்தாள்.

''நான் போய்ட்டு வரேன்.''

''பாங்க்லேர்ந்து லாட்டரிப் பணம் வந்திருச்சாம்மா?''

''வரல்லேன்னு ரங்கன் சொன்னான். இன்னும் ஒரு மாசம் ஆகுமாம்.''

''வந்ததும் புச்சா வீடு பார்த்துக் கொடுத்துடுவீங்க இல்லே?''

''நிச்சயமா.''

''ஏம்மா, ஒங்க காதில மின்னுதே கம்மலு, அது வைரம்தானே?''

''ஆமாம். என்ன சந்தேகம் உனக்கு, தனம்?''

''இதே மாதிரி கம்மலு எனக்கும் வாங்கிக்

கொடுங்கம்மா.''

''லாட்டரிப் பணம் வந்ததும் என்னோட மொதல் வேலையே அதுதான் தனம்!''

கோமதி நகர்ந்தாள்.

''ஏம்மா, லாட்டரிப் பணம்தான் இன்னும் வரலியே... இந்த ஆயிரம் ரூபாய் என் புருசனுக்கு எங்கேர்ந்து கெடைச்சுது?''

''என் புள்ளை ரமணிகிட்டேர்ந்து கடன் வாங்கினான்.''

''நான் எப்பம்மா உங்க வூட்டுக்கு வரலாம்?''

''எப்ப வேணும்னாலும் வா. ஆனா இந்த வாரம் வேண்டாம். நானும் ரமணியோட அப்பாவும் நாலஞ்சு நாளுக்கு ஊர்ல இருக்க மாட்டோம். ரமணியும் ரங்கனை அழைச்சுக்கிட்டு வெளியூர் போனாலும் போவான்.''

''எதுக்கு மா?''

''லாட்டரிப் பணம் எப்பத்தான் நிச்சயமா வரும்னு தெரிஞ்சுக்கத்தான்.''

''பணம் வந்ததும் எனக்குத் தகவல் குடுக்கச் சொல்லுங்கம்மா!''

''ஓ, தகவல் கொடுக்காம? அதை விட எங்க யாருக்கும் என்ன வேலையும் இல்லியே, தனம்?''

கோமதியின் நெக்கலை தனம் புரிந்து கொள்ளவில்லை.

**கோ**மதி ரிக்ஷாவை நோக்கிச் செல்லுவதையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கையில் திடீரென்று மயில்சாமியின் குரல் கேட்டது.

''கண்ணு அந்த அம்மாவைத்தான் நான் பார்க்கணும்னு சொல்லிட்டிருந்தேன். இன்னிக்குப் பார்த்துட்டேன்.''

''நயினா! நீயா?''

''ஏன் என்னைப் பார்த்தா பக்கத்து வூட்டு ஆள் மாதிரித் தெரியுதா? நான்தான் ஒன் அப்பன் மயில்சாமி.''

''நீ வர வேண்டாம்னு சொல்லியிருக்கேனே?''

''நீ சொன்னா என்ன தங்கம்? தெருவிலே வந்துட்டிருந்தேனா? ஒரு சைக்கிள் ரிக்ஷாவிலே ஒரு அம்மா வந்ததைப் பார்த்தேன். நம்ப சந்து மொனையில நின்னுதா, எனக்கு கபால்னு ஆச்சு. யார்டா இவள்னு யோசிச்சேன். அம்மா எறங்கி நம்ப வூட்டுக்குப் போச்சா, உடனே ஜகா வாங்கிக் கொஞ்ச நேரம் நின்னேன். அவ உள்ளாரப் போனப்புறம்தான் நானும் நைஸா வந்து, சுத்தவண்டை நின்னுக்கிட்டேன்.''

''அடப்பாவி!''

''எனக்கு அந்தப் பூ பழமெல்லாம் வேணாம். ஒரு ஐந்நூறு ரூபா கொடு.''

தனம் வீட்டினுள் பின்வாங்க, மயில்சாமி முன்னேறி உள்ளே புகுந்தான்.

**பி.வி.ஆர்.**

''உள்ளார வராதேய்யா!''

''வாசல்ல நின்னு பணத்தை வாங்கிக்கச் சொல்றியா கயிதே... நான் ஒன் அப்பன்டீ, பிச்சைக்காரன் இல்லே!''

''ஐந்நூறு ரூபா ஏது... அந்த அம்மா குடுத்ததே இருநூறு ரூபாதான்!''

''கயிதே பொய்யா சொல்றே? நான் அல்லாத்தையும் கேட்டுக்கிட்டுத்தான் இருந்தேன். பத்து நூறு ரூபா நோட்டு இல்லே. அதை அந்த அம்மா கவர்ல போட்டு வெத்திலைக்கு அடியிலே வைக்கலே?''

''இன்னாய்யா பெரிய ரோதனையாப் போச்சு!''

''இதப்பாரு தனம் இப்பவே சொல்லிட்டேன்... உனக்கு எம்மாம் பணம் வந்தாலும் சரி, அதில பாதி எனக்கு...''

''தராட்டி?''

''உனக்குச் செல்லிக்காசு வராம நானே செய்ஞ்சுடுவேன்.''

''யோவ் மிரட்டறியா?''

''நான் ஏண்டீ மிரட்டணும்? உன் கதை பூராவையும் அந்த ரமணி கையில சொல்லிடுவேன். அந்த ஆளு, நிச்சயமா பத்தாயிரமோ இருபதாயிரமோ எனக்குக் கொடுப்பான்... ஏன்னா உனக்கு லட்சம் லட்சமாப் பணம் தரத் தாவலே இல்லே?''

மயில்சாமி அவசரப்படாமல் அழுத்தமாகப் பேசப் பேச, தனம் உள்ளூர நடுங்கினாள்.

''இருநூறு வாங்கிக்கிட்டு நடையைக் கட்டு, நயினா.''

''அதான் முடியாது. ஐந்நூறு ரூபா... அஞ்சு நோட்டு. எடுத்து மொதல்ல கீழே வை!''

மயில்சாமி வெற்றியுடன் வீட்டை விட்டு வெளியேற, தனம் தோல்வியில் அவனை எழுத்தில் வடிக்க முடியாத வார்த்தைகளால் தாக்கினாள்.

**நா**ட்கள் ஓடின.

மீனாட்சி கலியாண மண்டபத்தில் மாலுவின் அக்கா சுமதியின் கலியாணம் கூட நடந்து முடிந்தது.

ஒருநாள் சனிக்கிழமை அதிகாலையிலேயே புறப்பட்டு, நாலாம் நம்பர் பஸ்ஸில் ஏறின ரமணி வால்டாக்ஸ் சாலையில் ட்ரெவெல்யான் பேசின் நிலையத்தில் இறங்கினான்.

பல சந்துகள் வழியாக நடந்து நடந்து, ஒரு சிறு வீட்டின் முன் அவன் நின்றான். அவனைக் கண்டதும் ஒரு நடுத்தர வயதுக்காரி, முகமெல்லாம் புன்னகையாக, ''யார் வேணுமுங்க?'' என்று கேட்டாள்.

''வடிவேலு வீடு இதானே?''

''இது என் வீடு. வடிவேலு என் புள்ளை. பாக்டரிக்குப் புறப்பட்டுட்டிருக்கான். உங்களுக்கு என்ன வேணும்?''

''வடிவேலுவைப் பார்க்கலாம்னு



* நேரடியாகவே சென்று பிரச்னைகளைக் கேட்டறிகிறார்...

# அரசியல் சாதிக்காததை ஆன்மிகம் சாதிக்கிறது!

**வா**னைப் பிளக்கும் கோஷங்கள் இல்லை; காதுகளைக் கிழிக்கும் வாக்குறுதிகள் இல்லை. எல்லாச் சாதனைகளும் அமைதியாகவே நடந்து கொண்டிருக்கின்றன. எல்லாக் கிராமங்களும் நகரங்களின் பளபளப்பில் ஒளி மங்கிக் கொண்டிருக்கும் போது, குன்றக்குடி மட்டும் தனித்து நிற்கிறது. எதனால்?

''எல்லாம் எங்கள் சாமி (குன்றக்குடி அடிகளார்)யின் வழிகாட்டுதலால்தான்'' என்கிறார் குன்றக்குடி கிராமத் திட்டக் குழுவின் உறுப்பினரான மருது பாண்டியன்.

''அரசாங்கத்திடமிருந்து உதவிகளைத் தான் எதிர்பார்க்க வேண்டுமே தவிர, இலவசங்களை அல்ல என்பதை சாமி எங்களிடம் சொன்னார். எங்களுக்கு என்ன தேவை என்பதை எங்களைக் கொண்டே திட்டமிடச் செய்தார். அதற்காகத்தான் எங்கள் கிராமத் திட்டக் குழு. அதன்படி ஒவ்வொரு மாதத்தின் நான்காவது சனிக்கிழமைகளில் எங்கள் திட்டக் குழு கூடுகிறது. திட்டமிடுகிறது. திட்டமிடப்பட்டவற்றுக்கெல்லாம் ஓர் இலக்கு நிர்ணயித்துக் கொண்டு, அந்த இலக்குக்குட்பட்ட காலத்திற்குள் அந்தத் திட்டங்களைச் செயலாற்றுகிறது. அவற்றில் ஏதாவது பிரச்னைகள் ஏற்பட்டால் சாமி முன்வந்து பிரச்னைகளைத் தீர்க்க உதவுகிறார்.

''கடந்த 77–ம் ஆண்டு சாமியின் முயற்சியால் எங்கள் கிராமத் திட்டக் குழு ஏற்பட்ட பிறகுதான், குன்றக்குடி பாரதி தொழிற் கூட்டுறவு குளோரேட் தொழிற்சாலை, பெரியார் முந்திரி தொழிலாளர் தொழிற் கூட்டுறவுச் சங்கம், பெரியார் முந்திரி ரெட் ஆக்ஸைடு பெயிண்ட் தொழிற்சாலை, குன்றக்குடி பசுமைப் பண்ணை, அறிஞர் அண்ணா லெட் ஆசிட் பாட்டரி தொழிற்சாலை, ஷெனாய் அலுமினிய கட்டடப் பொருள் தொழிற்சாலை, காமராசர் பாலிதீன் ஓவன் சாக்ஸ் தொழிற்சாலை... என்று பல்வேறு கூட்டுறவு நிறுவனங்கள் எங்கள் கிராமத்தில் துவங்கப்பட்டன. கால்நடை மருந்தகம், திருவளர் சோலை பழத்



* வனிதா



* பாலிதீன் பை தொழிலகம்: ஒவ்வொரு தொழிலாளியும் பங்குதாரர்...



* அரசு தோட்டக்கலைப் பண்ணையால் முப்பத்துமூன்று பேருக்கு வேலை...



* மருது பாண்டியன்

தோட்டம், அன்னை இந்திரா நேபாளித் தறிக் கூடம், பட்டுப் புழு வளர்ப்பு மாதிரிப் பண்ணை, பனைநார் பிரஷ் தொழிற்சாலை, தேசிய ஆராய்ச்சி வளர்ச்சிக் கழகம்... போன்ற அரசு நிறுவனங்களும் ஏற்பட்டன.

"இந்த நிறுவனங்களெல்லாம் ஏற்பட்ட பிறகுதான், எங்கள் கிராமத்திலுள்ள ஒவ்வொரு குடும்பத்திலும் ஒருவருக்கு வேலை என்கிற எங்கள் இலக்கு பூர்த்தியானது. இப்போது இரண்டாவது நபருக்கு வேலை என்கிற இலக்கில் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம்!" என்கிறார் மருது பாண்டியன்.

"எங்களுக்கு அரை ஏக்கர் நிலம்தான் உண்டு. அதுவும் மானாவாரி பூமி. மழை இல்லாவிட்டால் அதிலிருந்து சுத்தமாக ஏதும் விளையாது. வீட்டுக்காரர் கூலி வேலைக்குச் சென்றால்தான் உண்டு. இந்த நிலையில்தான் எங்களுக்குச் செம்மறியாடுகள் வாங்க பேங்க் லோன் கிடைத்தது. நாற்பது ஆடுகள் வாங்கினோம். இப்போதுதான் குடும்பத்தில் பிரச்னையில்லாமல் சாப்பிட முடிகிறது..." என்கிறார் ஆண்டாத்தாள் என்கிற பெண்மணி.

"இவரைப் போல் குன்றக்குடியைச் சுற்றியுள்ள இருபதுக்கும் மேற்பட்ட கிராமங்களிலிருக்கும் இருநூற்று எண்பத்தைந்து பேருக்கு ஆட்டு லோன் வாங்கிக் கொடுத்திருக்கிறோம்!" என்கிறார் மருது பாண்டி

யன்.

"அது சரி, கடன்களைத் திருப்பிக் கட்டும் விஷயத்தில் உங்கள் கிராம மக்கள் எப்படி?"

"எங்கள் சுற்று வட்டாரக் கிராமங்களில் கொடுத்த கடன் வசூலாகவில்லை என்கிற பேச்சுக்கே இடமில்லை. அரசாங்கமே கடன்களைத் தள்ளுபடி செய்த போது கூட, எங்கள் கிராம மக்கள் அந்தக் கடன்களைத் திருப்பிக் கொடுத்துத்தான் ஆக வேண்டும் என்றார் சாமி. அதன்படியே அனைவரும் திருப்பிக் காட்டினார்கள். நான் முன்பே சொன்னபடி, முதலில் மக்களிடமிருந்த இலவச மனப்பான்மையைச் சாமி ஒழித்தார். உழைப்பவர்களுக்குத்தான் எதையும் பெறுகிற உரிமை என்கிற மனோநிலையை வளர்த்தார். அதனால்தான், பெரிதாக ஒரு வேலையும் செய்யத் தெரியாதவர்களுக்குக் கூட 'ஒப்பந்தத் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கம்' என்ற ஒரு சங்கத்தை உருவாக்கிக் குறைந்தபட்சம் மண் வெட்டுகிற வேலையாவது செய்தாக வேண்டும் என்கிற நிலையை உருவாக்கினார் சாமி.

"இதோ பாருங்கள்... உழைப்பால் எதையும் சாதிக்கலாம் என்பதற்கு இந்த அரசு தோட்டக்கலைப் பண்ணையே ஒரு சாட்சி. இந்தத் தொண்ணூறு ஏக்கர் நிலமும் முன்பு ஒன்றுமில்லாத தரிசாகத்தான் கிடந்தது. சாமியின் ஆலோசனை மற்றும் முயற்சியின் பேரில்தான் அரசு பழத் தோட்டம் உருவானது. கூடவே, எங்கள் கிராமத்தைச் சேர்ந்த முப்பத்து மூன்று பேருக்கு இந்தத் தோட்டத்தின் மூலமாக நிரந்தர வேலையும் கிடைத்திருக்கிறது.

"இப்படி ஒருபுறம் நாங்கள் தொழில்களைப் பெருக்கிக் கொண்டே சென்றாலும் மறுபுறம் இயற்கைச் சமநிலையும் பாதிக்கப் படாமல் பார்த்துக் கொள்கிறோம். அதற்காகச் சமூகநலக் காடுகள் வளர்ப்பில் தீவிரமாக இருக்கிறோம். அதன் முதல் கட்டமாக இப்போது எட்டாயிரம் புளியங் கன்றுகளை நட்டுள்ளோம். எங்கள் கிராமத்திலுள்ள யாரும் தங்கள் சொந்த நிலத்திலுள்ள மரங்களைக் கூட ஊரின் அனுமதியில்லாமல் வெட்டக் கூடாது என்று ஒரு கட்டுப்பாடு. வெட்டித்தான் ஆக வேண்டும் என்கிற கட்டாயம் ஏற்படுகிற போது, ஒன்றுக்கு இரண்டு மரக் கன்றுகளை அவர்கள் புதிதாக நட்டுப் பாதுகாத்து வளர்க்க வேண்டும் என்பது எங்கள் ஊரின் நடைமுறை. இது போன்ற அறிவியல் பூர்வ நடவடிக்கைகளுக்கெல்லாம் 'சிக்ரி' என்று சொல்லப் படும் காரைக்குடியிலுள்ள 'சென்ட்ரல் எலக்ட்ரோ கெமிகல் ரிசர்ச் இன்ஸ்டிடியூட்' விஞ்ஞானிகளும் மற்ற அரசு அதிகாரிகளும் எங்களுக்கு ஆலோசனை வழங்கி ஊக்குவிக்கிறார்கள்..." என்றார் மருது பாண்டியன்.

"எங்கள் கிராமங்களிலுள்ள வீடுகளின் புழக்கடைகள் வெறுமனே இருக்கக் கூடாது என்பது சாமியின் கண்டிப்பான வேண்டுகோள். அவற்றிலெல்லாம் வீட்டுக்குத் தேவையான காய்கறிச் செடிகளை வளர்க்க வேண்டும். அப்படி என்னென்ன காய்கறிகளை வளர்க்கிறார்கள் என்பதைக்

---

"குன்றக்குடியில் எங்கு திரும்பினாலும் 'எங்கள் சுவாமியால் இந்தத் தொழிலைத் துவங்கினோம்; அந்தத் தொழிலைத் துவங்கினோம்...' என்று தொழிலகங்களைக் காட்டுகிறார்கள். ஆதீனகர்த்தரான தாங்கள் சமயப் பணியிலிருந்து சமூகப் பணிக்கு எப்படி மாறினீர்கள்?"

"மனித நேயத்தை மறந்தால் சமயமே கிடையாது. மனித நேயத்தை வளர்த்து மக்களிடையே உள்ள வித்தியாசங்களை அகற்றுவதுதான் சமயப் பணி. மனிதனுக்கு மனிதன் சமமாக வேண்டுமானால் பொருளாதார வளர்ச்சி அவசியம் வேண்டும். மனிதர்களின் வறுமைக்கு ஊழ்வினை காரணமாக இருக்கலாம். ஆனால் அந்த ஊழ்வினையைப் போக்குவதற்காகத்தானே இந்தப் பிறவியை எடுத்திருக்கிறோம். ஆக, வறுமை என்னும் ஊழ்வினையிலிருந்து உய்வுபெறுவதற்குச் சமயம் உதவ வேண்டுமே தவிர, ஊழ்வினையைக் காரணம் காட்டி யாரையும் வறுமையில் வாட விடக் கூடாது. சொல்லப் போனால் பாதிக்கப்பட்ட மக்களுக்குத்தான் சமயத்தின் உதவி அவசியமாகிறது. இந்த வகையில் நான் சமயப் பணி செய்து கொண்டிருப்பதாகத்தான் உணர்கிறேன்."

"சமயப் பணியும் சமூகப் பணியும் வேறு வேறானவை அல்ல என்கிறீர்கள்..."

"ஆமாம். நான் சோவியத் ரஷ்யாவுக்கும் சீனாவுக்கும் சென்று வந்த பிறகு மார்க்ஸிய சித்தாந்தங்களை ஆழ்ந்து படித்தேன். அதனால் எனது சமயப் பார்வையில் ஒரு மாற்றம் நிகழ்ந்தது. நமது மிகப் பெரிய செல்வமான மக்கட் செல்வத்தை நாட்டின் முன்னேற்றத்துக்கு உதவுமாறு நாம் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லை என்று உணர்ந்தேன். உதாரணமாக, டூத் பிரஷ், டூத் பேஸ்ட், சோப்பு வகைகள் போன்ற எத்தனையோ அம்சங்களைக் குடிசைத் தொழில்களாகவே செய்ய முடியும். அப்படிச் செய்தால் பல லட்சக்கணக்கான கிராம மக்களுக்கு வேலை வாய்ப்பும் உபரி வருமானமும் கிட்டும். வாழ்க்கைத் தரமும் உயரும். எனவே இவை போன்ற சில பொருள்களைக் குடிசைத் தொழிலுக்கு மட்டுமே என்று ஒதுக்கிவிட அரசு சட்டம் கொண்டு வரலாம். அப்போது தேசத்தின் பொருளா

# "சமய வாழ்க்கைதான் சமூகப் பணிக்கு உற்சாகம் அளிக்கிறது..."



— குன்றக்குடி அடிகளார் கூறுகிறார்!

தாரமே பிரமிக்கத்தக்க ஆரோக்கியமான மாற்றத்தை அடையும். ஆனால் மத்திய, மாநில அரசுகள் பரிசோதனை முயற்சியாகக் கூட தொழில் — பொருளாதாரக் கொள்கைகளை உருவாக்கி அமுல்படுத்திப் பார்க்க முன்வராத போது நாமே நம்முடைய முயற்சியில் நம்மால் இயன்றதைச் செய்து பார்க்கலாமே என்ற எண்ணம் தோன்றியது. அதற்குக் கிராம மக்களை ஒன்று திரட்டிச் செயல்படச் செய்தாக வேண்டும் என்று நினைத்தேன். அதன் விளைவாகத்தான் குன்றக்குடி கிராமத் திட்டக் குழு உருவானது. 'உங்களுக்கு என்ன தேவை என்பதை நீங்களே திட்டமிடுங்கள்; நான் ஆலோசனை வழங்குகிறேன்' என்றேன். அதன்படியே அந்தத் திட்டக்குழுவும் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.''

''இந்தக் கிராமத் திட்டக்குழுவுக்கு விஞ்ஞானிகளின் ஒத்துழைப்பை எப்படிப் பெற்றீர்கள்?''

''ஒரு சமயம் கொரட்டி என்கிற கிராமத்தில் திடீர் திடீரென்று வீடுகள் தீப்பற்றி எரிந்தன. கிராம மக்களெல்லாம் அது தெய்வ குற்றத்தாலும், துஷ்ட தேவதைகளாலும் ஏற்படுவதாகவே நம்பினார்கள். நான் அவ்வாறு நம்பவில்லை. அதற்கு ஓர் அறிவியல்காரணம்இருக்கவேண்டுமென்றே நம்பினேன். அதற்காக அந்தச் சாம்பலை எடுத்து வந்து ஆராயச் சொன்னேன். ஆயினும் காரணம் கண்பிடிக்க முடியவில்லை. விஞ்ஞானிகளெல்லாம் 'கண்டுபிடிக்க முடியவில்லை' என்றார்கள். அப்போது நான், 'இன்றைக்குக் கண்டுபிடிக்க முடியவில்லை என்பது உண்மைதான். ஆயினும் இதற்கான காரணத்தை ஒருநாள் கண்டுபிடித்தே தீருவோம்' என்றேன். சமயவாதியான நான் விஞ்ஞானத்தின் பால் கொண்டுள்ள நம்பிக்கையைக் கண்ட காரைக்குடி 'செக்ரி' விஞ்ஞானிகள் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். அதன் பிறகு எங்கள் கிராமத் திட்டக்குழுவுக்கு அவர்களே முன்னின்று செயல்படத் துவங்கி விட்டார்கள்!''

''ஆக, சமயத்துக்கும் மூட நம்பிக்கைக்கும் சம்பந்தமில்லை என்கிறீர்கள்...''

''நிச்சயமாக. மூட நம்பிக்கை கூடாது என்பதோடு எங்கள் கிராம மக்களிடம் அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை வைக்கக் கூடாது; உழைப்பில்தான் நம்பிக்கை வைக்க வேண்டும் என்றும் சொல்லியிருக்கிறேன். அதனால் குன்றக்குடி கிராமத்திற்குள் எங்கும் லாட்டரி விற்பனையைப் பார்க்கவே முடியாது. அதேபோல்தான் சோதிடமும். யாராவது ரகசியமாகச் சென்று வெளியூரில் பார்த்துக் கொள்கிறார்களோ என்னவோ, உள்ளூரில் யாரும் பார்க்க மாட்டார்கள்! இன்னும் சொல்லப் போனால் இருக்கிற கோயில்களைச் சிதிலமாகாமல் பேணிப் பாதுகாப்பதற்குப் பதில் புதிய கோயில்களை உருவாக்கிக் கொண்டு போவதில் கூட எனக்கு நம்பிக்கை இல்லை.''

''குன்றக்குடி மற்றும் அதன் சுற்று வட்டாரக் கிராமங்களுக்குத்தான் தாங்கள் வழிகாட்டுதல் செய்கிறீர்களா அல்லது மற்ற கிராமங்களுக்கும் செய்கிறீர்களா?''

''இப்போது பசும்பொன் தேவர் மாவட்டம் முழுவதிலுமாக நூற்று மூன்று கிராமங்களை எடுத்துக் கொண்டு, கிராம ஏற்புத் திட்டப் பணியைத் துவங்கியுள்ளோம்.''

''தங்களின் சமய வாழ்க்கை இந்தச் சமூகப் பணிக்கு எந்த வகையில் உதவுவதாகக் கருதுகிறீர்கள்?''

''எனது சமய வாழ்க்கைதான் எனது சமூகப் பணிகளுக்கான உற்சாகத்தையும் ஆன்ம பலத்தையும் தருகிறது.''

''தங்களின் சமய வாழ்க்கையைப் பிறருக்கும் வலியுறுத்துகிறீர்களா?''

''இல்லை. விருப்பப்பட்டவர்களுக்கு மட்டுமே நான் சமய வகுப்புகள் நடத்துகிறேன். நான் வலியுறுத்துவதெல்லாம் உழைப்பையும் மனித நேயத்தையும் மட்டும் தான்!''

---

கண்காணித்துத் தினந்தோறும் சாமியிடம் போய்ச் சொல்ல வேண்டியது எங்கள் இசைஞானியார் மகளிர் மன்றத்தின் அன்றாடக் கடமைகளுள் ஒன்று'' என்கிறார் அம்மன்றத்தின் செயலாளர் என். லலிதா.

''இது மட்டுமல்ல; எந்தக் குடும்பத்திலுள்ள குழந்தைகளும் பள்ளிக்குச் செல்லாமல இருக்கக் கூடாது. இரண்டு குழந்தைகளுக்குப் பிறகு கணவன் — மனைவி இருவரில் ஒருவர் குடும்பக் கட்டுப்பாடு செய்து கொண்டே தீர வேண்டும். ஒவ்வொரு குடும்பத்திற்கும் சிறு சேமிப்பு என்பது

கட்டாயம். அதே போல் ஒவ்வொரு குடும்பத்துப் பெண்களும் கைத் தொழில்களைக் கற்றுக் கொள்ள வேண்டும். இவற்றை யாராவது கடைப்பிடிக்கவில்லையென்றால் எங்கள் மகளிர் மன்றத்தினர் சாமியிடப் போய்ப் புகார் சொல்லுவோம். அவர் உடனடியாகச் சம்பந்தப்பட்ட குடும்பத்திற்கு நேரடியாகவே சென்று காரணங்களைக் கேட்டறிந்து பிரச்னைகளைத் தீர்க்க உதவுவார்'' என்கிறார் லலிதா.

குன்றக்குடியைச் சுற்றிப் பார்த்தோம். சிறுதொழில்கள் இல்லாத இடமே இல்லை. சுற்று வட்டாரக் கிராமங்களிலுள்ள பள்ளிகளுக்கான சாக்கட்டிகள் வேண்டுமா? அவற்றைக் குன்றக்குடியிலேயே தயாரித்து அனுப்புகிறார்கள். டீ.வி. ஆண்டனவா? கடைகளில் கிடைப்பதை விடக் குறைந்த விலையிலேயே குன்றக்குடியில் தயாராகிறது. பஸ் — லாரி — கார் பாட்டரிகளா? பெரிய கம்பெனிகளின் பாட்டரிகளை விடக் குறைந்த விலைகளில் தரமான பாட்டரிகள் தயாரிக்கிறார்கள். குன்றக்குடிக்குத் தேவையான பாலை அங்குள்ள கூட்டுறவுச் சங்கமே உற்பத்தி செய்கிறது. அந்தக் கூட்டுறவுச் சங்கம் பால் மட்டுமே விற்பனை செய்யவில்லை. நாற்பதே பைசாவுக்குத் தரமான டீயையும் விற்பனை செய்கிறது. பாலிதீன் பைகள் வேண்டுமா? தேவையான அளவுகளில் குன்றக்குடியில் உற்பத்தி செய்யப்படுகிறது!

''இங்குள்ள பல தொழில்களும் கூட்டுறவு முறைகளிலேயே செய்யப்படுகின்றன. அதில் உழைக்கும் ஒவ்வொரு தொழிலாளியும் அந்த நிறுவனத்தின் பங்குதாரர். எனவே இங்கு சுரண்டலுக்கு இடமில்லை; சுரண்டலுக்கு இடமில்லாத போது தொழில் தகராறுகள் எங்கிருந்து வரும்? அதோடு ஒவ்வொருவருக்கும் இவை அவரவர் நிறுவனங்களாகவே இருப்பதால் அவரவரும் தமது முழுத் திறமையையும் பயன்படுத்தி உழைக்கிறார்கள்'' என்கிறார் குன்றக்குடி அடிகளார்.

பொதுச் சொத்துத்தானே, எப்படிப் போனால் என்ன என்கிற எண்ணம் குன்றக்குடியில் கிடையாது. இதற்குச் சரியான உதாரணம், குன்றக்குடியிலுள்ள காமராஜர் சிறுவர் பூங்கா. அங்கு ஒரு சிறிய நூலகமும் உண்டு. அதில் பொழுது போக்குவதற்குச் சிறிய டீ.வி. பெட்டி, செஸ், கேரம் போன்ற விளையாட்டுப் பொருள்களும் இருக்கின்றன. மாலையில் அங்கு வருகிற சிறுவர், சிறுமியர் இவற்றைப் பயன்படுத்துவதற்காக மட்டுமே வருவது கிடையாது.

பூங்காவுக்குள் நுழையும்போதே குப்பைகள் தென்பட்டால் அதைப் பெருக்கிச் சுத்தப்படுத்துகிறார்கள். செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுகிறார்கள். சிறுமியர் ஆங்காங்கே கோலமிட்டு அழகுபடுத்துகிறார்கள். யாராவது வந்து செய்யட்டுமே என்று யாரும் சும்மா இருப்பதில்லை. 'இது நம்முடைய இடம்; நாம்தான் எல்லாவற்றையும் செய்ய வேண்டும்' என்கிற எண்ணம் அவர்களிடையே வேரூன்றி வளர்ந்திருக்கிறது. சிறுவர், சிறுமியர் முதல் பெரியவர்கள் வரை அனைவரிடமும் வளர்ந்திருக்கிற இந்த எண்ணம்தான் குன்றக்குடியை ஒரு குட்டி ஜப்பானாக உருவாக்கிக் கொண்டிருக்கிறது. எத்தனையோ கிராமங்களைப் போல் சோர்ந்து கிடக்காமல், ஒரு துருவ நட்சத்திரம் போல் தனித்து நின்று, மற்ற கிராமங்களுக்கெல்லாம் வழிகாட்டியாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது குன்றக்குடி. அதனால்தான் குன்றக்குடியைப் பார்த்து, **"This is what I would like for all other villages"** என்றார் மறைந்த பிரதமர் இந்திரா காந்தி.

**— இளங்கோவன்**

அட்டை வண்ணப்படமும் மற்ற படங்களும்: **சுபா**



''மன்னா! நாட்டில் விலைவாசி எல்லாம் ஏறிவிட்டது! மக்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள்.''

''அப்படியா! அமைச்சரே, உடனே, 'இளவரசுப் பட்டம் யாருக்கு?' என்ற வாரிசுப் பிரச்னையைக் கிளப்பிவிடும். மக்கள் கொஞ்சம் தங்கள் கவலையை மறக்கட்டும்!''

— அ. நந்தகுமார்.

# அதிர்ஷ்ட தேவதை

## 22

முதல் தேதி பிறக்க இன்னும் சில நாட்கள்தான் இருக்கின்றன. அதற்குள் கோமதி இன்னொரு ஆயிரம் ரூபாயுடன் வந்து விடுவாள் என்று தனம் தனக்குள் கணக்குப் போட்டாள். அதே சமயம் மயில்சாமியின் உருவமும் கண்முன் நின்று பயமுறுத்தியது. எவ்வளவு பணம் வந்தாலும் அதில் பாதி தன்னைச் சேர வேண்டும் என்று அவளைப் பெற்ற தகப்பனாரே மிரட்டும் போது அவளால் என்ன செய்ய முடியும்? மயில்சாமியிடமிருந்து விடுதலை பெற ஒரே வழி, மீண்டும் ரங்கனுடன் வாழ்வதுதான். கோமதி சொல்லியிருக்கிறாள். மயிலாப்பூரிலேயே ஒரு பங்களா வாங்கி அவளையும் ரங்கனையும் குடியேற்றப் போவதாக. கோமதி அம்மா நல்லவள். அவளுடைய மனத்தை அறிந்து செயல்படுகிறவள்.

திடீரென்று ஏன் இன்னும் லாட்டரிப் பணம் வரவில்லை என்ற கேள்வி எழுந்தது. ஒருவேளை அந்த வந்த பிறகு ரமணி ஏதாவது சூழ்ச்சி செய்கிறானோ? ரங்கன் சாது என்று அவளுக்கும் தெரியும். அவளுடைய மிரட்டலுக்கு நடுங்குபவன்! இப்படிப்பட்டவன் ரமணியின் கையில் சிக்கிக் கொண்டு பட்டபாடெல்லாம் அனுபவிப்பான்.

ரங்கனை ரமணியிடமிருந்து மீட்க வேண்டும். எப்படி? ரங்கனுடைய முழுப் பணத்தையும் அவள் ஆட்சி செய்ய வேண்டும். எப்படி? எப்படி என்றுதான் புரியவில்லை. தந்தை மயில்சாமியைப் பகைத்துக் கொள்ளக் கூடாது. குடிவெறியில் எல்லா உண்மைகளையும் நடுத் தெருவில் நின்று ஓலமிடுவான். அதன் பிறகு அவ்வளவுதான். ரமணியையும் விரோதித்துக் கொள்ளக் கூடாது. அவன் நடுத் தெருவில் கத்த மாட்டான். ஆனால் மூளையை உபயோகித்து அவளை மடக்குவான்.

காலையில் சாப்பிட்ட இடியாப்பம் இன்னும் ஜீரணமாகவில்லை. அரை மணி நேரம் வேகமாக ஓடிக் கொண்டிருக்கும் கடிகாரத்தைப் பார்த்தாள். ஒன்பது காட்டியது. திடீரென்று வாசலில் நிழலாட்டம் தெரிந்தது.

கோமதி அம்மாதானோ?

கதவைத் திறந்தாள்.

''குட்மார்னிங் தனம்!'' ரமணி புன்முறுவலித்தான்.

''மிஸஸ் ரங்கனை எனக்கு அறிமுகம் செய்து வையுங்க, ரமணி!'' என்றாள் அங்கே நின்ற மாலு.

தனத்தின் வரவேற்பு இல்லாமலே ரமணி படி ஏறி வீட்டினுள் பிரவேசித்தான். தனம், தன்னையும் அறியாமல் வழி விட்டாள்.

''தனம், இவதான் மணிமாலா. மாலுன்னுதான் நான் கூப்பிடறது. இவளும் நானும் கொஞ்ச நாள்ளே கலியாணம் பண்ணிக்கப் போறோம். மாலு, இவ யார்னு நான் சொல்ல வேண்டியதில்லே.. ரங்கனுக்கும் இவளுக்கும்தான் கந்தசாமி கோவில்லே சில மாசங்கள் முன்னாலே கலியாணமாச்சு. இவ வேறு யாருமில்லே. நம்ப ஆபீஸ் வாட்ச்மேன் மயில்சாமி இருக்கானே, அவனுடைய பெண்!''

''வணக்கம் தனம்!'' என்ற மாலு, ''ரமணி, நமக்குச் சீக்கிரம் போகணும். கொடுக்க வேண்டியதைக் கொடுத்துட்டுச் சொல்ல வேண்டியதைச் சொல்லிட்டுப் புறப்படுங்க!'' என்றாள்.

''இந்தா தனம். இந்தக் கவர்லே ஆயிரம் ரூபாய்க்கு செக் இருக்கு. ரங்கன்தான் கையெழுத்துப் போட்டிருக்கான். உனக்கு பிராட்வேயில் பாங்க் கணக்கு இருக்குன்னு அவன் சொன்னான்'' என்றான்.

''இதை இன்னிக்குக் கட்டினா பணம் கிடைக்க ரெண்டு நாள் ஆகுமே. பணமாக் கொடுத்தா செளகரியமா இருக்கும்'' என்ற தனம், ''பரிசுப் பணம் வந்திட்டதா?'' என்று கேட்டாள்.

''ஓ, வந்துட்டுதே... பதின்மூன்றரை லட்சம். வந்துட்டுது. ஆமாம் நீ ஏன் திருநீர்மலைக்கு வரலே? அபிஷேகம் ரொம்பப் பிரமாதமா நடந்தது.''

''பதின்மூன்றரை லட்சத்தை அவர் என்ன செய்யப் போறார்?''

''உன் பெயரில் பத்து லட்சத்தை மூணு நாலு வருஷத்துக்கு, உன்னைத் தவிர வேறு யாரும் தொட முடியாதபடி பாங்க்லே போடுடா ரங்கான்னு புத்திமதி சொன்னேன். ஆனா அவன் கேட்கலே. திடீர்னு ரத்த பாசம் பந்த பாசம் ஏன் சிநேகித பாசம் எல்லாம் வந்துட்டுது அவனுக்கு.''

தனத்துக்கு ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது.

''முடியாதுன்னுட்டாரா?''

''நல்லவேளையா இன்னும் யாருக்குக் கொடுக்கலே, தனம்! பயப்படாதே! நான்

பி.வி.ஆர்

இப்ப உன் பக்கம்!''

''என்ன செய்யப் போறாரு? உங்க அம்மா ப்ச்சா வீடு வாங்கித் தரேன். நகை, அப்புறம் வைரக் கம்மலு. அப்புறம் புடைவை எல்லாம் வாங்கித் தரேன்னு சொன்னாங்களே?''

''ஏன், மாருதி காரை மறந்துட்டே?''

''ஹாங்... கார் வாங்கித் தாரேன்னு சொன்னாங்க...'' என்ற தனம், ''அவர் உங்க சிநேகிதரு. உங்க வார்த்தையைத் தட்ட மாட்டாரு. நீங்க உறுதியாச் சொன்னீங்கன்னா கேட்பாரு.''

''உஹூம்... அதெல்லாம் அப்போ தனம்! பணம் வந்த உடனே ஆளே மாறிட்டான். இன்னும் கொஞ்ச நாள்ளே அவனை, வேற எங்கானும் போயிடுன்னு சொல்லப் போறேன்.''

''ஏன் என்னாச்சு?''

''என் பணம், என் இஷ்டம்னு எங்கிட்டேயே பேச ஆரம்பிச்சுட்டான்.''

''மெய்யாலுமா?''

''ஆமாம், தனம். நான் ஆபீஸ்லே ரங்கனை பியூனாகத்தான் பார்த்திருக்கேன். ரொம்ப நல்லவன், சாது. பயந்த சுபாவம். இப்ப எல்லாம் மாறிட்டுது. பணத்தைத் தாம்தூம்னு தெரிஞ்சவங்க, தெரியாதவங்களுக்கெல்லாம் வாரி வழங்கறதிலே தீவிரமாயிருக்கான்.''

''இங்கே அனுப்பிச்சுடுங்க. நான் அவர் பெண்டை எடுத்துச் சரியாக்கிடறேன்'' என்றாள் தனம்.

''ரங்கன் இனிமே இந்த வீட்டுப் படி ஏற மாட்டான், தனம்!'' என்றான் ரமணி.

''ஏன்... ஏன்... ஏனாம்?''

''கும்பகோணத்துக்குப் பக்கத்திலே பட்டீசுவரம்னு ஒரு ஊர் இருக்கு. அங்கே ரங்கனுடைய மாமா இருக்காரு. விவசாயம் பண்ணிட்டிருக்காரு.''

''இவரும் விவசாயம் பண்ண அங்கே போகப் போறாரா?''

''விவசாயம் பண்ணப் போனால் பரவாயில்லையே... அது நாட்டுக்கு நல்லதாச்சே.. மாமா பொண்ணு முறைப் பொண்ணாம். அவளை....''

''கட்டிக்கப் போறாரா?''

''நாங்க என்ன சொல்லியும் ரங்கன் கேட்கலே, தனம்!'' என்ற மாலு, ''இன்னும் நாலஞ்சு நாள்ளே அவன் ஊருக்குப் போறான்!'' என்றாள்



## கைகள் பேசும் வியாபாரம்!

நீங்கள் பம்பாய் தலால தெருவிலுள்ள ஸ்டாக் மார்க்கெட்டுக்குச் சென்றால், அங்கு புரோக்கர்கள் பலரும தங்கள் விரல்களையும் கைகளையும் பலவிதங்களில் ஆட்டிக் கொணடிருப்பதைப் பார்க்கலாம். புரியாதவர்களுக்கு இவை மலைபபாக இருக்கும். சுணடு விரலைத் தூக்கினால் 25 ரூ என்று அாததம. 'மூடிய முஷடி பதது ரூபாயைக் குறிக்கும். ஒரு விரலை வட்டமாகக் காடடினால் 60 ரூ. இரு விரல்களை அப்படி அசைத்தால் 70 ரூ. ஆள்காட்டி விரலையும் கடடை விரலையும் வட்டமாக்கிக் காட்டினால் 'விற்பனைக்கு சமமதம' என்று பொருள். உள்ளங் கையைக் காட்டுபவர் விற்பவர். புறங் கையைக் காடடுபவா வாஙகுபவர். இவைகளெல்லாம் தெரியாமல் அங்கு போய நின்றால் திருதிருவென விழிக்க வேண்டியதுதான்!



— ராஜீவி நரசிம்மன்.

''அதெப்படி அவரு இன்னொரு கலியாணம் கட்டிக்கலாம்? நான் ஒருத்தி இருக்கறப்ப?''

''கேட்டேனே தனம்! நான் பல வாட்டி கேட்டேன். அதுக்கு அவன் என்ன பதில் சொல்றான் தெரியுமா? சொல்றதுக்கே நா கூசறது!'' என்றான் ரமணி.

''என்ன சொல்றாரு?''

''என் வாயாலே எப்படிச் சொல்றதுன்னு தெரியலே தனம். மனசு கஷ்டப்படறது!''

''அந்த ஆளு என்ன சொன்னாரு?'' தனம் உறுமினாள்.

''பழைய வாட்சு, சைக்கிள், ரேடியோ இதையெல்லாம் வாங்கினா, செகண்ட் ஹாண்ட்னு சொல்லுவாங்க, இல்லியா?''

''ஆமாம் அதுக்கென்ன இப்ப?''

''நீ ஒரு செகண்ட் ஹாண்ட் பெண்ணாம். நீயும் உன் அப்பாவும் சூழ்ச்சி செய்து, கந்த சாமி கோவில்ல தாலி கட்ட வைச்சிங்களாம்!''

அடுத்த வினாடி தனம் காற்று இழந்த பந்து போலச் சுருங்கிப் போனாள். அவளால் ரமணியின் கண்களைச் சந்திக்க முடிந்தாலும் வாய் திறந்து பேச முடியவில்லை.

ரமணியே அவளுடைய உதவிக்கு வந்தான்.

''நீ எதுக்கும் கவலை படாதே, தனம்! அவன் மாமா பெண்ணைக் கலியாணம் பண்ணிக்காம இருக்க நான் முயற்சி செய்கிறேன்.''

தனம் இதற்கும் பதில் சொல்லவில்லை.

ரமணி தொடர்ந்தான்.

''நான் கேட்டேன் ரங்கன்கிட்டே. 'ஏண்டா ஆம்பிளைங்க ஒரு பெண்டாட்டி உசிரோட இருக்கறப்ப இன்னொருத்தி கழுத்திலே தாலி கட்டறது நியாயம்னா, ஒரு பெண் தன் புருஷன் உசிரோட இருக்கறப்ப இன்னொருத்தன் நீட்டற தாலிக்குக் கழுத்தைக் காட்டக் கூடாதா, இதிலே என்னடா பொல்லாத தப்பு இருக்கு'ன்னு.''

மாலு இடைமறித்தாள்.

''ரமணி, ரங்கன் சொன்னதையெல்லாம் இவகிட்டச் சொன்னா, பாவம் தனம் மனசு உடைஞ்சு போயிடுவா. வாங்க, நாம போகலாம். பணத்தைத்தான் கொடுத்தாச்சே!''

தனம் திடீரென்று சீறி எழுந்தாள்.

''யோவ், புரியுதுய்யா.. அல்லாமே புரியுது! நீ ஒரு ஆளா நின்னுக்கிட்டு என்னைத் தீர்க்கப் பார்க்கறே!''

''இல்லே தனம், நீ நினைக்கிறது, தப்பு! நான் ஒரு ஆளா நின்னு எதையும் செய்யலே.. எனக்குத் துணையா முருகன், ஆறுமுகம், செந்தில் வேலன் இருக்காங்க!''

''இவங்களெல்லாம் யாருய்யா?''

''இவங்களுக்கெல்லாம் இன்னொரு பேரும் இருக்கு, தனம். அதுதான், வடிவேலு. நான் வரட்டுமா?''

''யோவ்... யோவ்...''

''வால்டாக்ஸ் தெரு வழியாப் போனா, வடிவேலு இருக்கிற கோவில் எங்கேன்னு தெரியும்! நான் வரேன்!''

''அந்த ஆயிரம் ரூபாய்ச் செக்கை இன்னிக்கே பாங்க்லே கட்டிடு, தனம். எதுக்கும் சரியாயிருக்கான்னு ஒரு வாட்டிப் பார்த்துடு!'' என்றாள் மாலு, ஏற்கெனவே நகர்ந்து விட்ட ரமணியைப் பின்தொடர்ந்தவளாய்!

தனத்தால் கத்த முடியவில்லை. அவர்கள் மீது சீற முடியவில்லை. இடிந்து போய் உட்கார்ந்தாள்.

திடீரென்று இதுவரை அவள் உணர்ந்தறியாத பயமும் அவளைத் தாக்கியது.

போலீசே வந்து விடுமோ?

அவள் ரங்கனைச் சபிக்கவில்லை.

ரமணியை மனமாரத் திட்டித் தீர்த்தாள்.

இது நடந்த பத்தாம் நாள் அவளுக்கும் மயில்சாமிக்கும் வக்கீல் நோட்டீசுகள் வந்தன.

**அ**ன்று மொட்டைமாடியில் ஈர அரிசியை உலர வைக்கப் போன கோமதி திரும்பி வரும் போது, ரங்கனுடைய அறைக்குள் தலைநீட்டினாள்.

கட்டிலில் உட்கார்ந்திருந்த ரங்கன் திடுக்கிட்டு எழுந்து நின்றான்.

''ஏம்ப்பா நிக்கறே. உட்காரு!'' என்றாள் கோமதி. பிறகு, ''என்ன அது பெரிசா

கட்டில்லே கிடக்கு. ஓ, ரமணி கட்டப்போற கட்டடத்தோட பிளானா?'' என்றாள்.

''ஆமாம்மா... ரமணி சார் சொன்னாரு. இந்தப் பழைய வீட்டை இடிச்சுத் தள்ளிட்டு, முப்பது ஃப்ளாட் கட்டப் போறதா.''

''நீ கூட மூணு ஃப்ளாட் வாங்கப் போறியாமே... ஆமாம், எதுக்கு உனக்கு மூணு ஃப்ளாட்?''

''சொன்னாத் தப்பா எடுத்துக்க மாட்டீங்களேம்மா?''

''உனக்குத் தப்பாப் பேசவே வராதே, ரங்கா!''

''அன்னிக்குப் பேசிக்கிட்டிருந்தப்ப, கட்டடத்தை இடிக்கறதுக்கு அப்புறம் ஆரம்ப வேலைகளுக்கெல்லாம் ரொம்பப் பணம் தேவைப்படும். அதுக்கு வெளியிலே கடன் வாங்கறதைத் தவிர வேறு வழி இல்லைன்னு ரமணி சார் சொன்னாரு.''

''தெரியும்.''

''வெளியிலே கடன் வாங்க வேணாம், வட்டி குடுக்க வேணாம், என் பணத்தை எடுத்துக்குங்கன்னு நான் ரமணி சார் கிட்டச் சொன்னேன். அதுக்கு அவரு சம்மதிக்கலே.''

''இதுவும் தெரியும்.''

''ரெண்டு நாள் முன்னாடி மாலு அம்மா வந்தாங்க இல்லியா?''

''ஆமாம் வந்தா. அதுக்கென்ன?''

'''கடனாக் கொடுத்தா ரமணி வாங்கிக்க மாட்டார். ஆனா நீதான் ஒரு ஃப்ளாட் வாங்கப் போறியே, அதனோட விலையை இப்பவே அட்வான்சாக் கொடுத்துடு'ன்னு மாலு அம்மா சொன்னாங்க!''

''அப்படியா, இது எனக்குத் தெரியாது.''

''ஆமாம்மா... மாலு போனப்புறம் யோசிச்சேன். ரமணி சாருக்கு உடன்டியா எவ்வளவு பணம் தேவைன்னு எனக்குத் தெரியாது. அதான் மூணு ஃப்ளாட் வாங்கறது, அதுக்கு உண்டான முழுப் பணத்தையும் கொடுக்கிறதுன்னு முடிவு செய்ஞ்சேன்... தப்பா, அம்மா?''

''ரங்கா, உன் பேச்சைக் கேட்கக் கேட்க என் மனசு புல்லரிச்சுப்போறதுடா. நீ சாது, பித்துக்குளி, சாமர்த்தியம் போதாதவன், ஏன் ஒரு மந்தன்னு எல்லாரும்சொல்றாங்க... ஆனா நீ மந்தன் இல்லேடா. பணம் வந்த வேளையோ என்னவோ உனக்குச் சுயமாச் சிந்திக்கிற சாமர்த்தியம் வந்துட்டுது. நீ நன்னா இருக்கணும்!''

''அம்மா, எனக்கு ஒரு சின்ன ஆசை!''

''என்னடா ரங்கா!''

''இன்னும் ஒரு வருஷத்துக்குள்ளே கட்டடம் வந்துடணும். முப்பது வீட்லேயும் ஒரே சமயத்தில விழா எடுக்கணும். வீட்டுப் பெரியவர் மொதல்ல உள்ளே வரணும். அவருக்குப் பின்னாடி நீங்களும் ஐயாவும் ரமணி சாரும் மாலு அம்மாவும் விளக்கு, பூ, பழமெல்லாம் எடுத்துட்டு வரணும். இதையெல்லாம் பார்த்து நான் சந்தோஷப் படணும்!''

''உன் நல்ல மனசுக்கு, நீ நினைக்கிற படியே நடக்கும்டா, ரங்கா.. சரி, சாப்பிட்டியா? நீதான் ஓட்டல்லதான் சாப்பிடு வேன்னு பிடிவாதமா இருக்கியே!''

''ஒரு மணிக்கு மாலு அம்மாவும் ரமணி சாரும் வரேன்னாங்க. அவங்க வந்தப்புறம் தான் சாப்பாடு.''

''ரமணி ஓட்டல்லே சாப்பிட மாட்டான்.''

''இல்லேம்மா. இன்னிக்கு ஓட்டல்லே சாப்பிடப் போறாரு.''

''என்னடா விசேஷம்?''

''என்னோட பொறந்த நாளு!''

''அட மடையா இதை ஏண்டா முன்னாடியே சொல்லலே.. வீட்லே வடை பாயசத்தோட உனக்கு நான் விருந்து வைச்சிருப்பேனே?'' என்றாள் கோமதி.

''நான் இதுவரையிலே என் பொறந்த நாளையே கொண்டாடினதில்லே அம்மா... இந்த வருஷம்தான் மொதல் மொதலாக் கொண்டாடறேன்!''

''அதை வீட்லே கொண்டாடலாம் இல்லியா? சரி சரி. இப்ப மாலுவும் ரமணியும் எங்கே போயிருக்காங்க?''

''நீங்க கோபிச்சுக்கக் கூடாது.''

''எங்கே, சொல்லு.''

''மாம்பலத்துக்கு. அம்மாவுக்குப் பட்டுப் புடைவை, ஐயாவுக்கு ஒரு ஜோடி ஜரிகை வேட்டி இதெல்லாம் எடுக்கப் போயிருக்காங்க. ரமணி சார் கோபிச்சுப்பார்னு மாலு அம்மாகிட்ட வாங்கியாரச் சொன்னேன். ஆனா அவங்க ரமணி சாரைச் சமாதானப் படுத்தி அழைச்சுக்கிட்டுப் போயிருக்காங்க.''

கோமதி வாயடைத்துப் போய் நின்றாள். கண்கள் கனத்தன.

''ரங்கா. நீ ஆயிரம் காலம் நன்னா ஒரு குறைவும் இல்லாம வாழணும்டா. நான் மனசார உன்னை வாழ்த்தறேன்!'' என்றாள் கோமதி.

அவள், அவனுடைய பதிலுக்கும் காத்திராமல் வெளியேறினாள்.

ரங்கனுக்கும் கண்கள் கனத்தன. கண்களை மூடிக் கொண்டான். திடீரென்று மூச்சு அடைத்துக் கொண்டு விட்டது போலத் தோன்றியது.

ஏற்கெனவே டாக்டர் திருமலை கொடுத்திருந்த மாத்திரைகளை அவசர அவசரமாக எடுத்து வாயில் போட்டுக் கொண்டான்.

தனக்கு என்ன வியாதி வந்திருக்கிறது என்று அவனுக்குத் தெரியவில்லை.

சிறிது நேரத்தில் மூச்சு சிரமமின்றி உள்ளே புகுந்து வெளியேறலாயிற்று.

அவன் ரமணி — மாலுவின் வருகைக்காகக் காத்திருந்தான்.

(தொடரும்)


வாலாஜா ரோடு
பாண்டி பஜார்
புரசைவாக்கம்
பகவான்
எங்கும்
இருக்கிறார்
ஆனால்
இப்போது
வாலாஜா ரோடு,
பாண்டி பஜாரில்
மட்டும்
காட்சி தருகிறார்
10%
தள்ளுபடி
ஸ்ரீ பகவான் கட் பீஸ் ஜங்ஷன் (TM)
21, பாண்டி பஜார், சென்னை.
போன் : 443642, 445777
123, வாலாஜா ரோடு, சென்னை.
போன் : 846966

ஆறு மாதங்கள் ஜெட் விமானம் போல பறந்தன. இந்தக் கால இடைவேளையில் முக்கியமான பிரச்னைகள் ஒவ்வொன்றாகத் தீர்ந்தன.

வடிவேலு தாக்கல் செய்த புகாரின் மீது போலீஸ் நடவடிக்கை எடுக்க, தனமும் அவளுடைய தந்தை மயில்சாமியும் மாட்டிக் கொண்டு குற்றத்தை ஒப்புக் கொண்டார்கள். ரங்கனுக்கும் தனத்துக்கும் இனிமேல் எந்த சம்பந்தமும் இல்லை என்பதைக் கோர்ட்டே ஆணை இட உதவி செய்தார் வக்கீல்.

ரமணி தாத்தாவுடன் ரங்கனையும் உடன் வைத்துக் கொண்டு ஒரு குடியிருப்பில் இருக்க, பெற்றோர்களும் பெரியப்பா சித்தப்பாக்களும் தனித் தனியாக வாழ ஆரம்பித்தார்கள்.

ஈவு இரக்கமின்றிப் பழைய வீடு இடிக்கப் பட்டது. கட்டடக் கலைஞர் தொள்ளாயிரம் சதுர அடியில் இருபது ஃப்ளாட்டுக்கான பிளானை வரைய, ரமணி எம்.எம்.டி.ஏ. மற்றும் கார்ப்பரேஷன் அலுவலகங்களை முற்றுகை இட்டான்.

காண்ட்ராக்டர் குஞ்சிபாதத்தை ரமணிக்குப் பல ஆண்டுகளாகத் தெரியும். நல்ல மனிதர். பிறரை ஏமாற்றினால் தம்மை இன்னொருவன் ஏமாற்றுவான் என்று பயப்படுகிறவர். ரமணி அவருடைய உதவியை நாடிய போது, அவர் மறுமொழி பேசாமல் ஒப்புக் கொண்டார்.

''ரமணி நீ சாமான்களை வாங்கிக் கொடு. நான் என் ஆட்கள் படையை அழைச்சுட்டு வந்துடறேன். அஸ்திவாரம் போடற அன்னிக்கே மர வேலையும் ஆரம்பிச்சுடணும். என்னிக்கு நாள் பார்த்திருக்கே?'' என்றார் குஞ்சிபாதம்.



# அதிர்ஷ்ட தேவதை

''குஞ்சு சார், மொத்தம் இருபது பிளாட் தான் கட்ட முடியும்னு எம். எம். டி. ஏ. சொல்லிட்டாங்க. இதிலே எங்க குடும்பத்துக்கே நாலு. ரெண்டை என் சிநேகிதன் புக் பண்ணி அட்வான்சா முழுத் தொகையையும் கொடுத்துட்டான். பாக்கி பதினாறு தான் வெளியாருக்கு விக்க முடியும்.''

''இப்ப நாம 1987லே இருக்கோம் ரமணி... நாளுக்கு நாள் எல்லாத்துக்கும் விலை ஏறிட்டே போறது. உலகத்திலே முளைக்க முடியாதது நிலம் ஒண்ணுதான். அதனாலே நான் என்ன சொல்றேன், ஒரு சதுர அடிக்கு நானூத்தம்பது ரூபான்னு விலையை நிர்ணயம் செய். பதினாறு ஃப்ளாட்டுக்குக் கிட்டத்தட்ட அறுபத்தஞ்சு லட்சம் வரும். இப்ப சதுர அடிக்கு இருநூறு இருநூத்துப் பத்துன்னு வாங்கறேன். மத்தவங்களை விட சீப்தான். பதினெட்டாயிரம் சதுர அடிக் கட்டடத்துக்கு இன்னிக்கெல்லாம் ஆனா எவ்வளவு ஆகும்? எல்லாச் செலவுமாகச் சேர்ந்து நாப்பது லட்சம் உன் தாத்தாவுக்கு ரொக்கமாகக் குறைஞ்சது இருபது இருபத்திரண்டு லட்சம் கிடைக்கும். என்ன? சொல்றது புரியறதா?''

''நல்லாவே புரியறது குஞ்சு சார். ஆனா யாரு வீடு வாங்க முன்வருவாங்கன்னுதான் யோசனையா இருக்கு!''

''பூ, இதுக்காக் கவலைப்படறே? என் ரெண்டு பெண்களுக்கே ரெண்டு தேவைப்படறது. பாக்கிக்கு நானே நல்ல மனுஷங்களா ஏற்பாடு பண்றேன். வீட்டின் மொத்த கிரயத்திலே முப்பது சதவீதம் உடனடியாக் கொடுக்கணும்னு நிபந்தனை போடு. அப்பத்தான் திடீர் திடீர்னு பணக் கஷ்டம் வராது.''

''சரி சார்!''

ரமணி நிம்மதியுடன் செயல்பட ஆரம்பித்தான்.

பல வேலைகள் அவனை நெருக்கியும் கூட, அவன் தன் வேலையை ராஜினாமா செய்யவில்லை. ரமேஷ் சாண்டில்யா அவன் மீது அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருக்கிறான். எத்தனையோ வேளைகளில் விதம் விதமான சிக்கல்கள் பிறந்திருக்கின்றன. அப்போதெல்லாம் ரமேஷும், ரமணியும்தான் கலந்தாலோசித்து பிரச்னைக்கு முடிவு காண்பார்கள். திடீரென்று அவன் வேலையை உதறி விட்டால், ரமேஷ் சிறிது காலம் திண்டாடிப்போவான். இருப்பினும் தொடர்ந்து நீடிக்கவும் அவனால் இயலாது என்று தோன்றியது. ஏன் ரமேஷிடமே இது பத்திப் பேசக் கூடாது?

அவன் முதலாளியின் அறையினுள் பிரவேசித்த போது ரமேஷ் டெலிபோனில் பேசிக் கொண்டிருந்தான். சைகையால் அவனை உட்காரச் சொல்லி விட்டு ரமேஷ் பேசிக் கொண்டே போனான்.

ரமணி யோசனை செய்தான். எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது? எப்படி முதலாளியின் மனம் நோகாமல் காரியத்தை முடித்துக் கொள்ளுவது?

திடீரென்று ரமேஷின் குரல் கேட்டது.

''என்ன ரமணி பெரிசா யோசனையில் மூழ்கியிருக்கே? என்ன விஷயம்?''

''கொஞ்ச நாளா உங்ககிட்ட என்னுடைய குழப்பத்தைச் சொல்லி அதுக்கு ஒரு தீர்வு காணணும்னு நினைச்சுட்டிருந்தேன்.''

''இன்னிக்குத்தான் வேளை வந்ததாக்கும்? அது சரி, உன் மனசு எப்பவும் கிளியரா இருக்குமே... அது எப்படிக் குழம்பலாச்சு...? ரங்கனோட ப்ராப்ளம் ஓவர். மாலுவோட ப்ராப்ளம் ஓவர்.''

''அது இன்னும் ஓவராகலே சார். அவ கழுத்திலே நான் தாலி கட்டினாத்தான் அவ ப்ராப்ளம் தீரும்.''

''கட்டாமலா இருக்கப் போறே! நானும் உங்க கலியாணத்துக்கு வராமலா இருக்கப் போறேன்!''

''நான் சொல்ல வந்தது....''

''சொல்லு...''

''நான் திடீர்னு சொல்லாம கொள்ளாம வேலையை விடறது தப்புன்னு படறது.''

''என்ன வேலையை விடப் போறியா? இப்படி ஓர் எண்ணம் வேறே உன் மனசிலே இருக்கா?''

''இப்பவே இல்லை சார்.''

''எப்பவா இருந்தா என்ன, ரமணி? நினைச்சுப் பார்த்ததே சரி இல்லே... ஆமாம், என்ன காரணம்? அதையாவது சொல்லு.''

ரமணி தன் நிலைமையை விவரமாகக் கூறினான்.

''ஸில்லி! இது ஒரு காரணமா? காண்ட்ராக்டர் குஞ்சிதபாதம் கட்டடம் கட்டிக்கிட்டிருக்கறப்ப நீ என்ன குடையைப் பிடிச்சுக்கிட்டு மேற்பார்வை செய்யப் போறியா...

பி.வி.ஆர்

பேத்தல்!''

''இல்லே சார்... மணல், சிமெண்ட், ஜல்லி....''

''தெரியும்ப்பா... இதெல்லாம் நீதான் வாங்கிக் கொடுக்கப் போறே... அதுக்காக ராஜினாமாவா? நீ எப்ப வேணும்னாலும் வா. எப்ப வேணும்னாலும் போ... இல்லே நடுவிலே போய் வர வேண்டியிருந்தாலும் பரவாயில்லே.''

''என்னாலே யாருக்கும் சிரமம் இருக்கக் கூடாது சார்... சம்பளத்தை வாங்கிக்கிட்டா அது ஜீரணமாக வேண்டாமா?''

''நீ இப்பப் போகலாம், ரமணி. உன் ராஜினாமாவை நான் ஏத்துக்க மாட்டேன். அதுக்கு இன்னொரு காரணமும் இருக்கு.''

''என்ன சார்....''

''நான் இன்னொரு ஏஜென்சிக்காகக் காத்துக்கிட்டிருக்கேன். அது கிடைக்க மூணு நாலு மாசம் ஆகும். அதுக்கு அப்புறம் என் முழு மூச்சும் அதிலே போயிடும்.. ஏன் தெரியுமா? ஆல் இண்டியாவுக்கு நான்தான் ஒரு அமெரிக்கக் கம்பெனிக்கு ஏகபோக விற்பனையாளன். நான் அதிலே மூழ்கிட்டா, இதை யார் பார்த்துப்பா?''

ரமணியால் பதில் சொல்ல முடியவில்லை.

''நீ வெறும் குமாஸ்தாவா இருக்க மாட்டே.. இதே ரூம்லே, இப்ப நான் உட்கார்ந்திட்டிருக்கிற நாற்காலியிலே நீ உட்கார்ந்திருப்பே... லாபத்திலே உனக்கு மூணுலே ஒரு பங்கும் வரும்...''

ரமணி அயர்ந்து போனான்.

ரமேஷ் பேச்சின் திசையைத் திருப்பினான்.

''உன் கட்டடம் எப்ப முடியும்?''

''இன்னும் எட்டு மாசத்துக்குள்ளே.''

''அதுக்கு அப்புறம் என்ன செய்வே?''

''அது பத்தி நான் இன்னும் யோசனை செய்யலே!''

''எல்லாருக்கும் வழிகாட்டற நீ, உனக்கே ஒரு வழியை வகுத்துக்க யோசனை பண்ணலையாக்கும்! ரொம்ப நல்லாத்தான் இருக்கு... அது சரி, எல்லா ஃப்ளாட்டும் வித்துப் போயாச்சா?''

''ரெண்டு பாக்கி இருக்கு சார்.''

''என்னுடைய புது ஏஜென்சி வந்துடும். எனக்கும் ரெண்டு ஃப்ளாட் தேவைப்படும்.''

''சரி சார்.''

''இன்னும் ஒரு வாரத்திலே அட்வான்ஸ் தர்றேன். வேறே யாருக்கும் அலாட் பண்ணிடாதே!''

''சரி, சார்.''

''மாலுவையும் ரிஸைன் பண்ணக் கூடாதுன்னு சொல்லிடு.''

**அ**ன்று மாலை ரமணிக்கு டெலிபோன் வந்தது. அம்மா விஷயத்தைக் கூறினாள். ரமணி பதறிப் போகவில்லை என்றாலும், கவலையில் முகம் வாடியது.

''என்ன ரமணி, யார் பேசினாங்க?'' என்று கேட்டாள், மாலு.

''அம்மா. ரங்கனுக்கு உடம்பு சரியில்லையாம். நான் இப்பவே போகணும், மாலு.''

''நானும் வரேன்.''

''நோ... நீ உன் வேலையைக் கவனி. நான் பாஸ்கிட்டச் சொல்லிட்டுப் போறேன்.''

**நா**லரை மணிக்கு அவன் தன் வீட்டில் இருந்தான்.

அம்மா அவனுக்காகக் காத்திருந்தாள்.

''என்னம்மா ஆச்சு?''

''புதுசா ஒண்ணும் ஆகலேடா. டாக்டர் படிச்சுப் படிச்சுச் சொல்லியிருந்தார், தூசி நிறைய இருக்கிற இடத்தில ஒரு நிமிஷம் கூட நிக்கப்படாதுன்னு. இவன் ரெண்டு நாளா கட்டட வேலை நடக்கிற இடத்தில் ஆணி அடிச்ச மாதிரி நின்னிருக்கான்.''

''அப்புறம்?''

''அப்புறம் என்ன அப்புறம்? டாக்டர் திருமலைக்கு போன் பண்ணினேன். அவர் வந்தார். ரங்கனைத் தன்னோட கார்லேயே அழைச்சுட்டுப் போனார்.''

''இஸபல் ஆஸ்பத்திரிதானே?''

''ஆமாம்... இந்த ஆறு மாசத்திலே இது

## இரட்டைக் குரல்!



மிலன்சிங் என்ற 'பாப்' இசைப் பாடகர் ஆண் அல்ல. நீலம் படோரியா என்ற பெண்தான் அப்படி ஆண் பெயரில், ஆணைப் போன்ற குரலில் பாடுகிறார். இப்படி ஆணைப் போலவும், பெண்ணைப் போலவும் மாறி மாறிப் பாடுவதில் அதுவும் பிசிறில்லாமல் பாடுவதில்தான் தமக்கு மிகவும் விருப்பம் என்கிறார் படோரியா. பல இசைத் தட்டுக்கள், டேப்கள் வெளியிட்டு இருக்கிறார். இப்போது இரு குரலில் பாட சினிமாவிலும் ஒப்பந்தம் ஆகியிருக்கிறது.

— 'இல்லஸ்டிரேட்டட் வீக்லி'யிலிருந்து

'சேலம் சக்திக்கொடி'

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...




ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.

**"நேர்முகப் பயிற்சியும் உண்டு"**

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

*உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்!*

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

## விவேகானந்தா கல்வி நிலையம்

**தபால் பெட்டி எண் 4986, 9. மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17.**

# ஹேர் ஸ்டைலுக்கு ஒரு கம்ப்யூட்டர்!



'நம் தலைக்கு எந்தவிதமான 'முடி ஸ்டைல்' பொருந்தும்?' என்று குழம்பிக் கொண்டிருப்பவர்களுக்கு உதவுவதற்காக பம்பாயில் ஒரு சலூனில் கம்ப்யூட்டர் சாதனத்தைப் பொருத்தியிருக்கிறார்கள். இந்தக் கம்ப்யூட்டர், வீடியோ காமிராவில் உங்கள் புகைப்படத்தை எடுத்து, வெவ்வேறு 'ஹேர் ஸ்டைலையும்' தலையில் பொருத்தி, திரையில் 'ஃபோகஸ்' செய்து காட்டுகிறது! இதற்கு முந்நூறிலிருந்து ஐநூறு ரூபாய் வரை கட்டணம்!

— எஸ். ராமன்.

---

மூணாவது வாட்டி.''

இரண்டு நாட்கள் தொடர்ந்து பிராண வாயுவைச் செலுத்தினார்கள். மூன்று மணி நேரத்துக்கு ஒரு தடவை ஊசி போட்டார்கள். ரங்கன் கண் திறவாமல் படுத்திருந்தான்.

மூன்றாம் நாள் தெளிவு பிறந்தது. பிராண வாயுக் குழாயை அகற்றியாகி விட்டது.

''ரமணி சார்...'' ரங்கனுடைய குரல் கேவியது.

''உணர்ச்சிவசப்படாம இரு, ரங்கா.''

''இன்னிக்கு என்ன கிழமை, ரமணி சார்?''

''வெள்ளி'' என்ற அவன், ''இனிமே நீ வேலை நடக்கற இடத்துக்குப் போகக் கூடாது, ரங்கா.''

''சரி சார்... நான் ஒண்ணு கேட்டா திட்டாம பதில் சொல்லுவீங்களா?''

''நீ எது கேட்டாலும் நான் திட்டுவேன்னு உனக்கு நினைப்பா?''

''நீங்க என்னைக் கோவிச்சுக்க மாட்டீங்கன்னு தெரியும், ரமணி சார். ஆனா என் கேள்வி முட்டாள்தனம்னு படறப்ப உங்களுக்கு எரிச்சல் வருது.''

''சரி, சொல்லு.''

''நான் ரெண்டு வீட்டுக்குப் பணம் கட்டிட்டேன் இல்லியா, ரமணி சார்?''

''ஆமாம். 'கட்டிட்டே!... அக்ரிமென்ட்லேயும் கையெழுத்துப் போட்டுட்டே... அதுக்கு இப்ப என்ன?''

''பணமும் பாங்க்ல என் பேர்ல இருக்கு இல்லே?''

''ஆமாம். அதுக்கென்ன?''

''எனக்கு ஏதானும் ஆயிடுச்சுன்னா.''

''சும்மாப் பேத்தாதே ரங்கா. நீ ரொம்ப நாளைக்கு உசிரோட இருப்பே.''

''அப்படி இருக்கணும்னுதான் எனக்கும் ஆசை ரமணி சார். ஆனா என்னோட ஆசை எதுவுமே இதுவரையிலே நிறைவேறினதில்லே!''

''ஏன் லாட்டரியிலே பணம் வரலையா?''

''நான் எதுக்காக நிறையப் பணம் கிடைக்கணும்னு ஆசைப்பட்டேன், ரமணி சார்! அது கிடைக்கலியே... இப்ப என் உடம்பிலே வலுவில்லே... ஆனா மனசு எதுக்கெல்லாமோ ஆசைப்படுது. எதுவும் நிறைவேறாமலே நான் போயிடுவேன்... ஆனா கடைசி ஆசைன்னு சொல்லுவாங்களே... அது இப்ப வந்துடுத்து.''

''நீ இந்த ரீதியிலேயே பேசிட்டிருந்தா, நான் இங்கிருந்து போயிடுவேன், ரங்கா... உன் கடைசி ஆசை என்னவா இருந்தாலும் அது என் காதிலே விழ வேண்டாம்.''

''சரி, ரமணி சார்.''

''இப்ப தூங்கு.''

''தூக்கம் போயிடுத்து சார்... படுத்துப் படுத்து முதுகெல்லாம் வலிக்குது.''

''உட்கார்ந்து, தலைகாணியிலே சாய்ஞ்சுக்கோ. இதமா இருக்கும்.''

ரங்கன் அவன் சொன்னபடி உட்கார்ந்து கொண்டான்.

''ரமணி சார், உயில் உயில்னு சொல்றாங்களே... சினிமாவிலே பார்த்திருக்கேன். பணக்காரக் கிழவன் எழுதுவான். சுற்றிலும் பெண்டாட்டி பிள்ளைங்க நிப்பாங்க. இல்லாமப் போனா ஒரு வக்கீல் மட்டும் இருப்பாரு. அவரு எழுதுவாரு. பணக்காரன் கையெழுத்து மட்டும் போடுவான்.''

''உனக்குத்தான் பெண்டாட்டி பிள்ளைங்க யாரும் இல்லையே... பேசாம இரு!''

''இல்லே ரமணி சார், நான் செத்துப் போயிட்டா, என் அண்ணன் வந்துடுவான்.. ஓடிப் போன தம்பி வந்துடுவான்.''

''நியாயமா அவங்கதான் வரணும்.''

''நான் உயில் எழுதிட்டா அவங்களுக்கு ஒரு பைசா கிடைக்காம வழி செய்துடலாம் இல்லியா?'' என்றான் ரங்கன்.

ரமணி எழுந்தான். மெதுவாக நகர்ந்தான்.

''என்ன சார் கோவமா?''

''ஆமாம்.''

''இனிமே நான் உயிலைப் பத்தி உங்ககிட்டப் பேச மாட்டேன் சார். இது சத்தியம்.''

நான்கு நாட்களுக்குப் பிறகு ரங்கன் வீடு திரும்பினான்.

(தொடரும்)

# நஷ்ட ஈடு

**"ய**ம்மா'' சுந்தர் கண்மூடி இரண்டு கைகளாலும் கன்னங்களைப் பொத்திக் கொண்டான். நான் மெல்ல நகர்ந்து அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு அந்த நியூஸ் பேப்பரை என் பக்கம் திருப்பினேன்.

''கடவுளே! என்னைக்குத்தான் இங்கே விடியப் போகுதோ! இப்படி மனுஷனை மனுஷன் தாக்குகின்ற கொடூரம் ஒழியாதா சம்பத்? திடீர் திடீர்னு ஜாதிக் கலவரங்கள். இது யார் மூட்டின தீ? நிஜமாவே மனுஷங்க கிட்ட இன்னும் அந்த மிருகக் குணம் போகலைடா...''

நிறையச் சிந்திக்கின்ற சுந்தருக்கு இந்தத் தாங்க முடியாதுதான். இந்த ஒரு மாத கால கோர யுத்தத்தில் எத்தனை உயிர்கள், மாட்டுத் தொழுவம், குளம், கிணறு நடுச் சந்து என்று பாராமல் பிரிந்து போயிருக்கின்றன! குரூரமான கொலைகள், தாக்குதல்கள் கொடூரமான சாவுகள் காயங்கள்!

நான் பேசாது குனிந்து செய்திகளை வாசித்தேன்.

''பாத்தியா சம்பத், எத்தனை சேதம்!''

''கஷ்டம்டா, பேப்பர்லெ கட்டம் கட்டிப் போட்டிருக்கான் பாரேன்.. உயிர் போனது எத்தனை, காயமானது எத்தனைன்னு... நாம போய்க் கலவரப் பகுதியை நேரடியாப் பார்த்து நம்ப பத்திரிகையிலே ஏன் ஒரு கட்டுரையா எழுதக் கூடாது? ப்ளீஸ் எடிட்டர்கிட்டே கேளேன்.''

''டெய்லி பேப்பர்ஸ்லேதான் பக்கம் பக்கமா எழுதித் தள்ளிட்டாங்களே! கலவரமெல்லாம் அடங்கின பிற்பாடு வீக்லிலெ நாமும் எழுதணுமா?''

''தப்பு சம்பத்! டெய்லீஸ்ல வந்தது வெறும் செய்தி மட்டும்தான். பாதிக்கப் பட்டவங்களைச் சந்திக்கணும். இந்த வேதனை அவங்க மனசுல எந்த அளவுக்கு இறங்கியிருக்குன்னு ஆழம் பார்த்துச் சொல்லணும். இன்னும் பதற்றமாவும், படபடப்பாகவும் ஏதோ ஒரு பீதியோடதான் இருப்பாங்க. அவங்க மனசைப் படிச்சு அப்படியே எழுதினா மற்ற மக்களையும் யோசிக்க வைக்கலாம்.''

''ஓ.கே. எடிட்டர்கிட்ட கேட்போம்.''

எடிட்டரிடம் தெளிவாக எடுத்துச் சொன்னவுடன் சம்மதித்து விட்டார். மௌண்ட் ரோட்டிற்குப் போய் பிளாக் அன்ட் ஒயிட் கலர் என்று பிலிம் ரோல்களை வாங்கி நிரப்பிக் கொண்டோம்.

**அ**ந்த ஊரின் விளிம்பைத் தொட்ட போது பலபலவென்று விடிந்திருந்தது. கருவேல மரங்களின் அடர்த்திக்கு உள்ளே ஊர் நீண்டு கிடந்தது. பதினைந்து நிமிட நடைக்குப் பின் ஊரின் அடையாளம் நேற்றுப் போட்ட கோலம் மாதிரி அழிந்து போய்த் தெரிந்தது. ஒன்றிரண்டு நாய்களும் எருமை மாடுகளும்தான் சுதந்திரமாக உலாவிக் கொண்டிருந்தன. நாங்கள் வளைந்து மெல்ல ஒரு தெருவிற்குள்ளே நுழைந்தோம்.

''ஏய் மிஸ்டர் யாரது?''

போலீஸ் விசில் ஊதி எங்களை மடக்கிற்று. தெருவை ஒட்டியிருந்த பள்ளிக்கூடம் பிதுங்க, போலீஸ் அடைகாத்துக் கொண்டிருந்தார்கள். ''நாங்க மெட்ராஸ்ல இருந்து வர்றோம். ரிப்போர்டர்ஸ்.. நியூஸ் எடுக்கணும்...'' என்றேன். சிறிது யோசித்தார்கள்.

''சித்த முன்னாடி வந்திருக்கப்படாது? இப்பத்தான் மினிஸ்டர் வந்துட்டுப் போனாரே.. சி.எம். கூட வந்தாலும் வரலாம். பக்கத்துல ஒன்றியச் செயலாளர் வீட்டுல மாரேஜ்.''

''அப்படியா?''

''ஜாஸ்தி போட்டோஸ் எடுக்கக் கூடாது. சிலதைத்தான் எடுக்கணும். நீங்க பாட்டுக்குத் தட்டித் தீத்துடாதீங்கப்பா. அப்புறம் எஸ். பி. எங்க முட்டியைத் தட்டிடுவார்...''

நாங்கள் முன்னேறி நடந்தோம். மெல்லத் திரும்பிப் பார்க்க, பத்தடி தூரத்தில் எங்களைத் தொடர்ந்து ஒரு போலீஸ்காரர் வருவது தெரிந்தது. ஆனால் எதையும் கண்டு கொள்ளாமல், சுந்தரின் காமிரா தகர்க்கப்பட்ட ஊர்ச் சாவடி, தீக்கிரையான குடிசைப் பகுதிகள், முறிக்கப்பட்ட மின்சாரக் கம்பங்கள்.. கை கால்கள் போய் மாமிச மலை மாதிரிக் குவிந்து கிடக்கும் கால்நடைக் கூட்டங்கள் என்று ஒவ்வொன்றையும் படம் பிடித்துக் கொண்டேதான் வந்தது.

''என்ன சம்பத் இங்கே நுழையறே? தெருவெல்லாம் ஒரே கும்பலா இருக்கு...!''

கருத்து: பானுகுமார்

கதை வடிவம்: பாரதிபாலன்

''இருக்காதா பின்னே? மந்திரி வந்துட்டுப் போயிருக்கார். போதாதுன்னு எல்லாக் கட்சிக்காரர்களும் போட்டி போட்டு வந்து ஆறுதல் சொல்லிட்டு ஏதோ முடிஞ்சதைக் கொடுத்துட்டு விளம்பரம் தேடிக்கிறாங்க! சமூகத் தொண்டர்கள்னு ஒரு கோஷ்டி.. ஏரியா டெவலப்மெண்ட் டிபார்ட்டுமெண்டு ஆளுங்க வேற கேம்ப் போட்டிருக்காங்க போல...''

''ப்சு! எத்தனை பணம் கொடுத்தாலும் அவங்களுக்குப் பழைய சந்தோஷம் வந்திடுமா சம்பத்?''

பேசிக் கொண்டே நடந்தோம். திடுமெனப் புழுதி கிளம்ப எங்களை உரசிக் கொண்டு ஒரு ஜீப் வந்து நின்றது. அரசாங்க வண்டி போல் தெரிந்தது.

''சார் உங்க இரண்டு பேரையும் ஒன்றியம் டி.பி.க்குக் கூப்பிட்டுட்டு வரச் சொன்னார். ஏறுங்க போகலாம்...''

''எதுக்கு? டி.பி.க்கா!''

''ஏதோ பேசணுமாம். பக்கம்தான் சார். ஜீப்ல ஏறினீங்கன்னா ஐந்து நிமிஷத்துல போயிடலாம்.''

ஏறினோம். ஒரு மைல் தூரப் பயணம். ஊருக்கு வெளியே அந்த டிராவலர்ஸ் பங்களா ஒரு தோட்டத்துக்குள் கிடந்தது. எல்லா அறைகளிலும் ஆளும் கட்சிக் கும்பலே அடைந்து கிடந்தது.

''வணக்கம் தம்பி! மெட்ராஸ்ல இருந்து வந்திருப்பதாக் கேள்விப்பட்டோம். என்னா எழுதப் போறீங்க? உங்ககிட்ட தெளிவாச் சொல்லிடுறேன். கலவரத்துக்குக் காரணமே எதிர்க்கட்சி ஆளுங்கதான். இதை யார்ட்டக் கேட்டாலும் சொல்லுவாங்க. ஆச்சா, இத்தனை கலவரம் நடந்துருக்கே ஆளும் கட்சி என்னா பண்ணுச்சுன்னு கேட்பானுவ, இறந்தவங்களுக்கு 25,000 ரூபாயும் காயம் பட்டவங்களுக்குத் தலைக்கு ரூபாய் 5000 மும் தருவதாகத் தலைவர் அறிவிச்சிருக்கார். அமைச்சர் வந்தப்ப உறுதியாத் தகவல் சொன்னார். வேற எதுனாக் கேக்குறீங்களா?''

''தேவைப்பட்டா வந்து கேட்கிறோம்.''

''அண்ணனோட போட்டோ வேணுமா?'' பக்கத்தில் இருந்த ஜால்ரா ஜிங்கென்று தட்டினான். வேண்டாம் என்று கிளம்பி விட்டோம்.

**ஊ**ருக்குள் நுழைந்ததும் வயதான பாட்டி ஒருத்திதான் எங்கள் கண்களில் பட்டாள். எதுவுமே எனக்குத் தெரியாது என்ற பாவனையில் காலை நீட்டி முதுகைப் பந்தல் காலில் சாய்த்துக் கொண்டு அந்தக் குடிசை வாசலில் வெற்றிலையைக் குதப்பிக் கொண்டிருந்தாள். மெல்லப் பேச்சுக் கொடுத்தேன்.



''கலி முத்திப் போச்சு ராசா. இப்படிக் கண்மண் தெரியாது அடிச்சுக்கிறாங்களே? யார் என்னத்தத் தூக்கிட்டுப் போவப் போறாகளோ. என் பேரனைக் கொன்னுட்டாங்க பாவி மக்கா! பிள்ளைங்கள் எல்லாம் தெருவிலே நிக்குதே. ராசா நீங்க சர்க்கார் ஆளுங்களா...''

அதற்குள் யாரோ என் முதுகைச் சுரண்ட மெல்லத் திரும்பினேன். தொடைக்கு மேல் லுங்கியைத் தூக்கிக் கட்டிக் கொண்டு ஒருவன் நின்று கொண்டிருந்தான். அவசர மாய்ப் பக்கத்து வீட்டிற்குக் கூப்பிட்டுப் போனான். என்னைப் பார்த்ததும் ஒரு நடுத்தர வயது அம்மாள் குபீரென்று பொங்கி அழுது விட்டாள். அந்த அம்மாள் அழுது கொண்டே பேசியது எனக்குப் புரியவே இல்லை. என்னைக் கூப்பிட்டு வந்தவன்தான் பேசினான்.

''சார் இந்தம்மா புருஷனை வெட்டிக் குளத்துல தூக்கிப் போட்டுட்டாங்க! பாவம் மகளுக்குக் கல்யாணம் கூட வெக்கிறதாப் பேசியிருந்தாங்க. இன்னும் ரெண்டு பொட்டைங்க இருக்கு. பாவம் இந்தம்மா... ஏதாவது சர்க்கார்ல கூடுதலாக் கிடைக்கிற மாதிரி எழுதுங்க...''

எனக்கு அப்படியே ஆடிப் போயிற்று! சுந்தர் விழி அகட்டி என்னைப் பார்த்தான். நான் பேசாது எழுந்து இடதுபுறம் திரும்பி ஒரு சந்துக்குள் நுழைந்து நடந்தேன். சுந்தரும் காமிராப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு வந்தான். அந்தப் பகுதியில் திரும்பிய பக்கமெல்லாம் அழுகையும் புலம்பலுமாகத் தான் இருந்தது. குழந்தையும் கையுமாக இருந்தாள் ஓர் இளம் பெண். அவளிடம் போய் ''நாங்கள் பத்திரிகைக்காரங்க...'' என்றதுதான் தாமதம். நெஞ்சின் குமுறலை எல்லாம் கொட்டித் தீர்த்தாள்...

''வாங்க! இப்ப வந்து எழுதுங்க. கண்ணீர்க் கதைன்னு போடுங்க; மந்திரியும் எம்.எல்.ஏ.வும் ஐயாயிரம் ஆறாயிரம்னு துட்டு தரேம்பாங்க; இந்தப் புள்ளைக்கு அப்பனை யாராலய்யா குடுக்க முடியும்...! வெட்டிப் போட்டாங்களே! போன உசுரு வருமா...'' குழந்தையைக் கட்டிக் கொண்டு 'ஹோ' வென்று கதறினாள்.

அவள் துக்கத்தின் பரிமாணம் எங்களை உலுக்கியெடுத்தது. ஒப்பற்ற மனித உயிருக்கு நிர்ணயித்து விலை பேசும் மடத்தனம் உறுத்தியது. அழுது கொண்டிருந்தவளைச் சமாதானப்படுத்த வழி அறியாது அடுத்த குடிசை நோக்கி நடந்தோம். திண்ணையில் முதியவர் ஒருவர் மிகவும் பரிதாபமாக உட்கார்ந்திருந்தார். கூரை ஒரு பக்கமாக எரிந்து போயிருந்தது. வாசலில் மண்பாண்டச் சில்லுகளின் சிதறல். சப்பையாக நசுங்கிய அலுமினியப் பாத்திரம் வன்முறைக்கு சாட்சி சொன்னது.

''தாத்தா நாங்க பத்திரிகைக்காரங்க...'' என்று எதிர்பார்ப்புடன் அவரை நெருங்கினோம்.

''நான் என்னத்தத் தம்பி சொல்லட்டும். இத்தனை பேருக்கு அடிச்ச யோகம் எனக்கு வரல்லியே! சாக வேண்டாம். ஏதோ அடி கிடி பட்டிருந்தாலாவது கொஞ்சம் பணம் கிடைச்சிருக்கும். ஐயாயிரம்! லேசுப்பட்ட காரியமா? ப்சு அவ்வளவுதான் நமக்குக் கொடுத்து வெச்சது...'' என்றார் அந்தக் கிழவர்.

---

## பாதை மாறிய பயணம்

வே. கண்ணன்

போதை அரக்கிக்கு
இதயத் துடிப்பை
இரையாகப் போடும்
இளைஞனே!

அந்தோ!
இருபதிலே
அறுபதின் தளர்ச்சியா?

இடுகாட்டின் நடுவில் நின்று
இன்பராகம் தேடும்
அன்புச் சகோதரனே!
நீ
இருட்டு இராஜ்யத்தின்
இளவரசனாவதற்கு
அறிவுக் கண்களையல்லவா
அடகு வைத்திருக்கிறாய்?

பாதை மாறிய பயணத்தில்
உனது காலடியில்
மாறி மாறி இடறுவது
மானுடமும், பண்பாடும்
அல்லவா?

ஊசி முனைகள் உன்
உடலில் எழுதுவது
மகிழ்ச்சிக் கோலமல்ல
சகோதரனே!
மரண சாசனம்!

தீப்பொறியைத்
தீண்டியா பார்க்கவேண்டும்!

சாக்கடையில் சந்தன மணமா?
யார் உனக்குச் சொன்னது?

போதும்! போதும்!
போதைப் புழுதியிலே
புரண்டது போதும்!
பாதைமாறிப்
பட்ட துயர் போதும்!

மனிதப்பிறவியைப்
புனிதப்படுத்த வா!
மரணத்தீவை விட்டு
மானுட பூமிக்குவா!

டாக்டர் பதில்கள் :



# தலைவலி மாத்திரைகள் தரும் 'தலைவலிகள்'!




**● இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்:**

**தலைவலி, உடல்வலி, காய்ச்சல் போன்றவற்றிற்குக் கடைகளில் விற்கப்படும் சில ரெடிமேட் மாத்திரைகளை, சில டாக்டர்கள் சிபாரிசு செய்கிறார்கள். சில டாக்டர்களோ, 'அதையெல்லாம் யாரைக் கேட்டுச் சாப்பிட்டீர்கள்?' என நம்மைக் கேட்கிறார்கள். இதில் எது சரி?**

**● டாக்டர் ரேவதி அனந்த், ஏ. வி. ஹாஸ்பிடல், சென்னை—18.**

தலைவலி, உடல் வலி, காய்ச்சல் போன்றவற்றிற்குக் கடைகளில் விற்கப்படும் சில ரெடிமேட் மாத்திரைகளை டாக்டர் ஆலோசனை இன்றிச் சாப்பிடுவது தவறு. உதாரணமாக, ஆஸ்பிரின் போன்ற மாத்திரிரைகளை அதிகமாக எடுத்துக் கொள்ளுவதால் வயிறு புண்ணாகி, இரத்தக் குழாய் வெடிப்பு ஏற்பட்டு **acute gastric bleeding** ஏற்படலாம். அளவுக்கு அதிகமாக பாரசிடமால் மாத்திரைகளைச் சாப்பிடுவதால் சிறுநீரகம் பாதிக்கப்படப் கூடும். மேலும் இம்மாதிரி மாத்திரைகளை மருத்துவரின் ஆலோசனையின்றிச் சாப்பிடுவதால், காய்ச்சலின் காரணமும், தன்மையும் மாறுபட்டு, பிறகு சிகிச்சைக்கு இடையூராகவும் ஆகலாம்.

**● எஸ். சங்கிலியாண்டி, காமய கவுண்டன்பட்டி:**

**மூளை வளர்ச்சியின்றி—Mentally Retarded— உடல் உறுப்புக்கள் செயல் திறனற்றுக் குழந்தைகள் பிறப்பதற்குக் காரணங்கள் யாவை?**

மூளை வளர்ச்சியின்றி உடல் உறுப்புக்கள் செயல் திறனற்றுக் குழந்தைகள் பிறப்பதற்குக் காரணங்கள் பல. 1. நெருங்கிய உறவிலேயே திருமணம் செய்து கொள்ளுதல். 2. வயதாகி, பெண் திருமணம் செய்து கொள்ளுதல்: உதாரணமாக, பெண் 35 வயதுக்கு மேல் செய்து கொள்ளும் திருமணத்துக்குப் பிறகு உண்டாகும் குழந்தைப் பேறு. 3. **Chromosomal abnormality** தம்பதியரில் யாரேனும் ஒருவருக்கு இருத்தல். 4. தாயார் கர்ப்பமாக இருக்கும் போது ஏற்படும் சில பாக்டீரியா, வைரஸ் கிருமிகளின் தாக்குதல். 5. கதிர் வீச்சுச் சிகிச்சைக்கு, கர்ப்பமாக இருக்கையில், உட்படுதல். 6. கர்ப்பமாக இருக்கும் போது போதைப் பொருட்களை உட்கொள்ளுதல். (கணவன் உட்கொண்டாலும், இந்தப் பாதிப்பு ஏற்படும்.) 7. ஆயுத பிரசவம் செய்யும் போது குழந்தையின் மூளைக்குப் பாதிப்பு ஏற்படுதல். 8. பிரசவத்தின் போது, அது கடினமானதாகி, குழந்தைக்குப் பிராணவாயு குறைந்து அதனால் குழந்தையின் மூளை பாதிக்கப்படுதல்.

தொகுப்பு: **எஸ். வி. என்.**

# அதிர்ஷ்ட தேவதை

## 24

**தா**த்தாவுக்கு அன்றைய தினசரியில் வெளியாகியிருந்த செய்திகளைப் படித்துக் கொண்டிருந்தான் ரமணி. திடீரென்று அவருக்கு அலுப்பு உண்டாயிருக்க வேண்டும்.

''போதும்டா...'' என்றார்.

''அப்ப நான் கிளம்பறேன், தாத்தா.''

''ரெண்டு காலும் வலிக்கறதுடா. ரத்தம் கட்டிப் போனாப்ல இருக்கு...''

''ஏன் தாத்தா சுத்தி வளைக்கறீங்க? பிடிச்சு விடுன்னு சொல்லுங்களேன்.''

''இதெல்லாம் நான் சொல்லித்தான் உனக்குத் தெரியணுமா...?''

''காலை நீட்டி ஸ்டூல்லே வைச்சுக்குங்கோ தாத்தா!''

அவர் கால்களை, அவன் சொன்னது போல, வைக்கவும் ரங்கன் அறையினுள் பிரவேசிக்கவும் சரியாக இருந்தது.

''என்ன ரங்கா?'' என்று ரமணி விசாரிக்க, தாத்தா, ''யார்டா, முதலாளி ரங்கனா... வா உட்காரு. அப்பப்ப ஆஸ்பத்திரிக்குப் போயிட்டு வந்துட்டிருக்கியா?'' என்றார்.

''ரமணி சார்... நீங்க நகருங்க. தாத்தாவுக்கு நான் கால் பிடிச்சு விடறேன்'' என்றான்.

''நீ இப்ப நாப்பது ரூபாய் வேலைக்காரன் இல்லேடா ரங்கா.. லட்சாதிபதி. ரெண்டு வீட்டுக்குச் சொந்தக்காரன். கம்பீரமா அந்தச் சேர்ல உட்காரு'' என்றார் தாத்தா.

ரமணி சிரித்தான்.

''எதுக்குடா சிரிக்கிறே?''

''நீங்க பேசின விதம் என்னைச் சிரிக்க வைச்சது... அது எப்படி ரங்கனாலே கம்பீரமா உட்கார முடியும்... ஏழாவது தடவையா அவன் இஎஸ்ஐ ஹாஸ்பிடல்லேர்ந்து முந்தா நாள்தான் திரும்பி வந்தான். அமைதியாப் படுத்துக்கிட்டு ரெஸ்ட் எடுத்துக்கன்னு சொன்னாலும் கேக்கறதில்லே. நேத்திக்கு மட்டும் அவன் ரெண்டு வாட்டி பில்டிங்கைப் போய்ப் பார்த்து வந்தாச்சு.''

''நீ பேசிண்டே இரு... காலைப் பிடிச்சு விடாதே...''

''ஓ, அதை மறந்துட்டேன் இல்லே!''

''ஹாஹா.... ரமணி... ரொம்ப சுகமா இருக்குடா... உன் அப்பன் பெரியப்பன் யாரும் இதுவரை இப்படி சிசுருஷை செய்ஞ்சதில்லே...

''காரணம் என்ன தெரியுமா, தாத்தா?''

''என்னடா..?''

''அவங்க கால்களையே இப்ப யாராவது பிடிச்சு விடணும். அவ்வளவு வயசாயிடுத்து.''

''சரி, பில்டிங்கிலே இன்னும் என்னென்ன வேலை பாக்கி இருக்கு?''

''முக்காலே மூணு வீசமும் முடிஞ்சுட்டுது தாத்தா. மொஸாய்க்குக்கு ஆஸிட் பாலிஷ் போட்டுட்டிருக்காங்க. லைட் கனெக்ஷன் வந்தாச்சு. எல்லா வீட்டுக்கும்.''

''அப்ப சீக்கிரமே குடிபோயிடலாம்னு சொல்லு.''

''ஆனா காண்ட்ராக்டர் குஞ்சு சொன்னபடி எட்டு மாசத்துக்குள்ளே முடிக்கலே. 87 முடிஞ்சு 88 பிறந்துட்டுது.''

''பொங்கல் முடிஞ்சு ஒரு நல்ல நாள் பார்த்துக் கிரகப்பிரவேசம் செய்யலாமாடா?''

''செய்யலாம் தாத்தா.''

''பில்டிங்குக்கு என்ன பேர் வைக்கலாம்? ஒரு நல்ல பேராச் சொல்லு.

''வேங்கடரமணி அபார்ட்மென்ட்ஸ்ன்னு பேர் வைக்கலாம்னு நினைச்சுட்டிருக்கேன்.''

''என்னடா என் பேரா... எனக்கு என்ன நினைவுச் சின்னமா கட்டியிருக்கே?''

''இது உங்க ஐடியாதானே தாத்தா?''

''என் ஐடியா எப்படியடா வந்தது? எல்லாம் உன் நச்சரிப்பு... முன்னெல்லாம் அடிக்கடி, ஃப்ளாட் கட்டலாம்; ஃப்ளாட் கட்டலாம்னு எங்கிட்ட வந்து தொண தொணப்பே... நான் கண்ணை மூடின மறுநாளே அதுக்காகப் பிரயத்தனம் செய்வேன்னு எனக்குப் புரிஞ்சுது. இவன் யார், நான் செத்தப்புறம் கட்டறதுக்கு, நான் உசிரோட இருக்கறப்பவே இவனுடைய ஆசை நிறைவேறட்டுமே அப்படீன்னு தோணித்து. ஆமாம், நிகரமா எவ்வளவு மிஞ்சும்?''

''கணக்கெல்லாம் சரியா எழுத மூணு பேரைப் போட்டிருக்கேன் தாத்தா... நான் தினசரி எல்லாத்தையும் சரிபார்த்துட்டுத்தான் தூங்கப் போறேன்.''

''நீ என்ன செய்யறேன்னா இப்பக்கேட்டேன்...? நன்னாப் பிடி... முழங்காலுக்குக் கீழே, ஆடு சதையில் கை வை.''

''குஞ்சு சொன்னார், குறைஞ்சது இருபது இருபத்திரண்டு லட்சமாவது உங்களுக்கு லாபமா வரும்னு. எனக்கு என்னமோ அது குறைவாப் பட்டது.''

பி.வி.ஆர்.

''என்னடா சொன்னே, இருபது இருபத்திரண்டு லட்சம் தறைவாப் பட்டதா...''

''ஆமாம் தாத்தா... இருபத்தஞ்சாவது தேற வேண்டாமா? அதுக்கு ஒரு வழி செய்ஞ்சேன்.''

''என்னடா செய்ஞ்சே?''

''எம். எம். டி. ஏ., கார்ப்பரேஷன், அப்புறம் செக்ரடேரியட்னு எல்லா இடங்களுக்கும் நடையா நடந்து ஒரு ஸ்பெஷல் பர்மிட் வாங்கினேன்.''

''எதுக்கு?''

''வாசப் பக்கத்திலே கேட்டுக்கு ரெண்டு பக்கத்திலேயும் நாலு நாலு கடைகள். மாடியிலே ஒண்ணு, கீழே ஒண்ணுன்னு. ஒவ்வொண்ணும் நூத்தம்பது சதுர அடி. ஒரு டிபார்ட்மெண்ட்டல் ஸ்டோர்ஸ் வைக்க, ஒருத்தா ஒரு பக்கத்து நாலு கடைகளையும் வாங்கிக்கிட்டார். இன்னொரு பக்கத்திலே ஒரு வீடியோக் கடை, ஒரு ஐஸ்க்ரீம் பார்லர். ரெண்டு பேரும் சேர்ந்து நாலு கடைகள். அப்புறம் என்ன?''

''மாடியிலே இன்னும் நாலு கடைகள் இருக்கேடா?''

''சித்தப்பா பிள்ளை ரங்கு இந்த வருஷம் சி.ஏ. எழுதறான். அவன் சொந்தமாத் தொழிலை ஆரம்பிக்கிறதானா நல்ல இடம் வேண்டாமா? அவனுக்கு ரெண்டு கொடுத்துடலாம், நீங்க சரின்னு சொன்னா.''

''சரி...''

''மீதி ரெண்டு இருக்கு இல்லியா? பெரியப்பாவோட பேரன் பேத்தி ரெண்டு பேரும் இன்னும் ஒண்ணு ரெண்டு வருஷத்திலே டாக்டர்களா திரும்பி வருவாங்க... அவங்க ரெண்டு பேருக்கும் சின்னதா கன்சல்டிங் ரூம் அமைச்சுக்கச் சௌகரியமா இருக்கும். இதுக்கும் நீங்கதான் தாத்தா அனுமதி கொடுக்கணும்.''

''எழுதியே கொடுத்துடறேன் போறுமா'' என்ற தாத்தா, ''ஏண்டா, உனக்குன்னு எதுவும் தனியா நீ வைச்சுக்கலையா?'' என்றார்.

''நான் எப்படி தாத்தா உங்க பணத்திலே கை வைக்க முடியும்? ஒண்ணரை வருஷமா உழைச்சிருக்கேன். அதுக்கு நீங்க சரியா



ஏதானும் கொடுத்தா சந்தோஷமா வாங்கிக்கறேன்.''

''ரங்கா, நீ கொஞ்சம் வெளியே போய் இரு!'' என்றார் தாத்தா.

''வேண்டாம் தாத்தா. அவன் இங்கேயே இருக்கட்டும்...''

''நான் போயிடறேன், ரமணி சார்!''

''போயிடு'' என்ற தாத்தா ரங்கன் வெளியே செல்லும் வரை காத்திருந்தார்.

''நான் சொல்லப் போறது உன் அம்மா அப்பாவுக்குக் கூட இப்பத் தெரியப்படாதுடா, ரமணி... விஷயம் அப்படி இருக்கிறப்ப, ரங்கன் மட்டும் இருக்கலாமா... அது ஓர் அசத்து. அசமஞ்சம்... தத்துப்பித்துன்னு வெளியே சொல்லி வைச்சா?''

''சரி சொல்லுங்க, தாத்தா.''

''இப்ப எவ்வளவு லாபம் வர்றது? சுமாராச் சொல்லு, போறும்.''

''நாலு கடைகளையும் பத்து லட்சத்துக்கு வித்தேன் தாத்தா... ஆனா எட்டு கடைகளையும் கட்டி முடிக்க எனக்கு லட்சம் ரூபாய் கூட ஆகலே... நிறைய மணல், சிமெண்ட், மரம், கம்பி எல்லாம் மிஞ்சியிருந்தது. நம்ப பழைய வீட்டோட தேக்கு மரமெல்லாம் உபயோகமாச்சு.''

''மொத்த லாபத்தைச் சொல்லுடா படவா!''

''கிட்டத்தட்ட முப்பது லட்சம்!''

''இதை வைச்சுட்டு என்ன செய்யலாம்டா?''

''எனக்கு என்ன தெரியும், தாத்தா.''

''மூணு பெண்களுக்கு, ஆளுக்கு லட்சம்னு கொடுக்கறேன். அம்பதாயிரம்னு மொதல்லே நினைச்சுட்டிருந்தேன். பாக்கியை நம்ப ரெண்டு பேர் பேர்லேயும், ஜாயின்ட் அகௌண்ட்லே பாங்க்லே போட்டுடுவோம். நான் ஒருநாள் இல்லாட்டா ஒரு நாள் கண்ணை மூடாம இருக்க மாட்டேன். அப்ப ஜாயின்ட் அகௌண்ட் சிங்கிள் அகௌண்ட்டா உன் பேர்ல வந்துடும். இதுக்கு நான் என்ன எழுதித் தரணுமோ அதை எழுதிக் கொடுத்துடறேன்...''

''தாத்தா, உங்களுக்கு நிறைய பேரன் பேத்திகள் இருக்கிறப்ப எனக்கு மட்டும் இப்படிச் செய்தா.....''

''மூடுடா வாயை... எனக்கு இருக்கிறது ஒரு பேரன்தாண்டா.. அது நீதான்.. நீ ஏமாத்த மாட்டே. பொய் சொல்ல மாட்டே.. வாயாலே எல்லாருடைய வயத்தெரிச்சலையும் நீ கொட்டிக்கிறவன்தான்.. ஆனா உன் மனசு சுத்தம்டா. இனிமேல் இதைப் பத்தி என்கிட்டப் பேசாதே, ஆமாம்!''

ரமணி நீண்ட நேரம் பதில் பேசவில்லை. சிறு வயதிலிருந்து அவன் ஒருவன்தான் தாத்தாவுடன் நெருங்கிப் பழகியிருக்கிறான். ஆனால் இத்தனை ஆண்டு காலமாகத் தாத்தா தன் மனத்தில் அவனுக்காக ஒரு பிரத்யேக இடத்தை வைத்திருக்கிறார். அதில் என்னென்ன வைரங்களையும் முத்துக்களையும் கொட்டி மூட வேண்டும் என்று யோசித்து வந்திருக்கிறார். அகஸ்மாத்தாக, பல குடியிருப்புகளைக் கொண்ட கட்டடம் கட்டினால் நன்றாக இருக்கும் என்று ஒரு தடவை அவன் அவரிடம் கூறியிருக்கிறான்.

அப்போது அவர் அலட்சியமாக இருந்தார். ஆனால் எண்ணம் உள்ளே பதிந்து போயிருக்கிறது. எண்ணத்தை அவர், பிரத்தியேகமான இடத்தில் பூட்டி வைத்து, போன வருடம்தான் வெளியே கொட்டியிருக்கிறார்.

ஏன் போன வருடம்?

திடீரென்று, ''தாத்தா!'' என்றான்.

பாதிக் கண் அயர்ந்து போயிருந்த தாத்தா, கண் திறவாமலே, ''என்னடா?'' என்றார்.

''நான் யாரையும் ஏமாத்த மாட்டேன். என் மனசு சுத்தம்னு எப்படித் தாத்தா நீங்க கண்டுபிடிச்சீங்க? நான் வேஷம் போட்டுட்டே வாழ்ந்து கொண்டிருக்கலாம், இல்லியா?''

''ராஸ்கல், என்னைக் கேள்வியா கேட்கிறே?''

''ஆமாம் தாத்தா!''

''சரி நான் கேக்கறேன், பதில் சொல்லுடா!''

''கேளுங்க.''

''இந்தச் சோனிப் பயல் யாரு?''

''ரங்கன்தானே... அவன் என் சிநேகிதன்.''

''சரி, இதுக்குப் பதில் சொல்லு.''

''நீங்க யக்ஷன்.. நான் தர்மபுத்திரர்னு எண்ணமா தாத்தா?''

''ஆமாம்டா, படவா... சொல்லு... அவனோட லாட்டரி டிக்கட்டையெல்லாம் நீதானே பத்திரப்படுத்தி வைச்சிருந்தே?''

**'ஓ.ஸி' பேப்பர் கேட்கும்போதெல்லாம் 'நான் படிக்கப் போறேன்' என்று சாக்கு சொல்லி வந்த பக்கத்து வீட்டுக்காரனை ஏமாற்ற...**

***''சார், கொஞ்சம் மண்வெட்டி கிடைக்குமா?''***

***''அடாடா! இதோ தோட்ட வேலை ஆரம்பிக்கப் போறேன்!''***

***''ஓ! தோட்ட வேலை செய்யப் போறீங்களா? அப்போ பேப்பர் படிக்கமாட்டீங்க! கொஞ்சம் பேப்பர் தாங்களேன்! படிச்சுட்டுத் தர்றேன்!''***

**— சம்பத்குமாரி**






— ஆர். ரத்னசாமி

''ஆமாம்.''

''டிக்கெட் கடைக்காரன் உன் பேரைத் தானே எழுதி வைச்சிருந்தான்?''

''ஆமாம்.''

''நீ நினைச்சிருந்தா, அது என் டிக்கெட், நான் வாங்கின டிக்கட்டுன்னு சாதிச்சிருக்க லாம் இல்லியா?''

''ஆமாம்.''

''பணம்னு வர்றப்ப சொந்தம் பந்தம் சிநேகம் எல்லாம் காத்தாப் பறந்துடும்டா படவா! உனக்கு நிறையப் பணம் சம்பாதிக் கணும்னு பேராசையா இருக்கு. ஆனா அந்தப் பணத்தைக் குறுக்கு வழியிலோ, இன்னொருத்தரை ஏமாத்தியோ சம்பாதிக்க உன் மனசு சம்மதிக்கலே... இப்பச் சொல்லு, உன் மனசு சுத்தம்தானே?''

''தெரியாது, தாத்தா.. என்னைப் பத்தி நானே இன்னும் தெரிஞ்சுக்கலே...''

''இன்னொரு விஷயம்!''

''என்ன தாத்தா?''

''தை பொறந்ததும், கிரகப் பிரவேசம். அது முடிஞ்சதும் கலியாணம். மாலுவுக்கும் உனக்கும் என் கண் முன்னாடி நடக்கணும். நீங்க ரெண்டு பேரும் ஊஞ்சல்லே உட்கார்ந் ததும், நான் பாட ஆரம்பிப்பேன்.''

''அதான் பல தடவை சொல்லியாச்சே, தாத்தா.... சகிச்சுக்கறேன்...''

''படவா... நான் நன்னாப் பாடுவேன்டா.. மாலுவுக்கு அவா என்ன போடறாளோ போடட்டும். நான் வைர நெக்லஸ் போடப் போறேன். அவகிட்ட இப்பவே சொல்லித் தொலைக்காதே!''

''நான் வரேன் தாத்தா.. எனக்கு நிறைய வேலையிருக்கு.''

''மறுபடியும் வர்றப்ப, பாங்க் டெபாசிட் ஃபாரத்தோட வரணும். இல்லாமப் போனா தொலைச்சுப்புடுவேன்...''

''சரி தாத்தா.''

ரமணி நகர்ந்தான்.

''நம்ப கட்டடத்துக்கு என்ன பேர் வைக் கிறதுன்னு கேட்டேனே...''

''நான் சொன்ன பேர்தான் வேண் டாம்னு சொல்லிட்டீங்களே, தாத்தா!''

'''அதிர்ஷ்ட தேவதை'ன்னு வைச்சுடு. அதான் பொருத்தமான பெயர்!''

''என்ன தாத்தா, இப்படி ஒரு பெயரா?"

''ரங்கனுக்கு ஓர் அதிர்ஷ்டம் அடிச்சது. எனக்கும் போற வயசிலே ஓர் அதிர்ஷ்டம் அடிச்சு முப்பது லட்சமும் வீடும் கிடைக் கிறது. என் மூணு பிள்ளைகளும் இப்படித் தனித்தனி வீடு கிடைக்கும்னு எதிர்பார்க் கலே. அவங்களுக்கும் அதிர்ஷ்டம்.''

''எனக்கும் அதிர்ஷ்டம்னு சொல்லுங் களேன்....''

''அதான் மாட்டேன்... உனக்கு ஒரு சான்ஸ் கிடைச்சுது. ராட்சசன் அதிர்ஷ் டத்தை ஒரு லாட்டரி டிக்கெட் மூலமா உன் மடியிலே போட்டான்... நீ? அதைத் தூக்கி எறிஞ்சே... உனக்குக் கிடைக்கறதெல்லாம் உன் உடம்போட உழைப்புக்கு ஊதியம்! மனசோட சுத்தத்துக்குப் பரிசு... சரி சரி, நடையைக் கட்டு... எனக்குத் தூங்கணும்.''

ரமணி வெளியே வந்தான்.

அறைக்குச் சற்று அப்பால் சுவரோடு சுவராய் ஒட்டிக் கொண்டு ரங்கன் நின்று கொண்டிருந்தான்.

''என்னடா ரங்கா இங்கே நிக்கறே?''

''உங்களுக்காகத்தான், ரமணி சார்!''

''என்ன வேணும்?''

''சொன்னாக் கோவிச்சுக்க மாட்டீங் களே?''

''கோபம் வர்ற நிலையிலே நான் இல்லே, ரங்கா! சொல்லு.''

ரங்கன் சொன்னான்.

கோபம் வராத நிலையில் இருந்த ரமணிக் குக் கோபம் வரவில்லை. ஆத்திரமும் ஆக்ரோஷமும் பீரிட்டு வந்தன.

''ராஸ்கல்... உனக்கு என்னடா புத்தி மழுங்கியா போச்சு?'' என்றான்.

ரங்கன் பதில் கூறவில்லை.

(தொடரும்)



# சந்தோஷப் பூக்களில் சிறிய முள்

ஸௌமுகன்

அவர் போய்ச் சேர்ந்து ஒரு வருஷம் ஆகி விட்டது...

வருஷாப்திகம் முடிந்து வீட்டிற்குச் செய்ய வேண்டிய சாந்தியெல்லாம் முடித்தாகி விட்டது. காலையில் நவக்கிரஹ ஹோமம் விமரிசையாக நடந்து முடிந்திருந்தது.

என்னுடைய மூன்று பெண்கள் மாப்பிள்ளைகளுடன், பேரன் பேத்திகளைக் கூட்டிக் கொண்டு வந்திருந்தார்கள். இந்த மாதிரி சமயங்களில் தானே எல்லோரும் சேர்ந்து இருக்க முடிகிறது.

பாவம், கோபி... என்னுடைய ஒரே பிள்ளை.

எல்லாக் காரியங்களையும் சிரத்தையாக, இந்த ஒரு வருஷமாகச் செய்து முடித்திருந்தான். இந்த வருஷம் எம்.பி.ஏ. கடைசி வருஷப் படிப்பு. பரீட்சை எழுதி முடித்திருந்தான்.

அவன் எதிர்காலத்தைப் பற்றிக் கவலையில்லை. அவன் அப்பா பணிபுரிந்த தொழிற்சாலையிலேயே அவனுக்கு ஓர் இடம் காத்திருந்தது. அடுத்த மாதம் வேலையில் சேர வேண்டும்.

வாணி, கவிதா, காயத்ரி பிறந்து பத்து வருஷங்களுக்குப் பிறகு இவன் எங்களுக்குக் கிடைத்தான்.

அவனுக்கு ஏழு வயது ஆன போது வாணிக்குக் கல்யாணம் ஆயிற்று. அவன் பூணலும், அவள் கல்யாணமும் ஒன்றாக நடந்தன. வாணியின் கணவர் பெரிய வக்கீல். எக்கச்சக்கமான சொத்து.

பத்தாயிரம் ரூபாய் ரொக்கமாகக் கையில் கொடுத்து, ஐம்பது பவுன் நகை செய்து போட்டுக் கல்யாணம் செய்து கொடுத்தோம். அவள் கல்யாணத்துக்கும் அதைத் தொடர்ந்து வந்த வைபவங்களின் போதும் செய்த சீர்வரிசைகளைக் கணக்குப் பார்த்த போது எங்கள் கிராமத்து வீடும், மூன்று போகம் விளையும் நான்கு ஏக்கர் நஞ்சை நிலமும் எங்கள் கைகளை விட்டுப் போயிருந்தன.

கோபிக்குப் பத்து வயது முடிந்த சமயம் கவிதாவுக்குக் கல்யாணம். மாப்பிள்ளை மோகன் தஞ்சாவூரில் பெரிய ஜவுளிக் கடை வைத்திருக்கிறார். நல்ல வியாபாரம். ராசியுள்ள கடை. பரம்பரைச் சொத்தும் இருந்தது.

அவர்கள் வரதட்சணை ஏதும் கேட்கவில்லை. ஆனால் தஞ்சாவூர் வடக்கு ரத வீதியில் உள்ள எங்கள் பூர்வீக வீட்டைக் கேட்டார்கள். அதைப் புதுப்பித்து, தன் கடைக்கு ஒரு

கிளை ஆரம்பித்துக் கொள்வதாகச் சொன்னார் மாப்பிள்ளை. நாங்கள் தலை அசைத்துச் சம்மதம் கொடுத்தோம்.

வழக்கம் போல் ஒரு வருஷம் கழித்துக் கணக்குப் பார்த்த போது, என் மாமியார் எனக்கு வைத்திருந்து போன அறுபது பவுன் நகைகளை அடக்கிக் கொண்டிருந்த "பாங்கி" பெட்டகம் காலியாகிப் போயிருந்தது. போன வருஷம் தஞ்சாவூருக்குப் போயிருந்த போது கேள்விப்பட்டோம். எங்கள் தஞ்சாவூர் வீடு இப்போது பதினைந்து லட்சம் பெறும் என்று.

கோபி 'பிளஸ்–டு' முடித்த வருஷம் காயத்திரிக்குக் கல்யாணம் நடந்தது. மாப்பிள்ளை வீட்டில் ரொம்பவும் நல்லவர்கள். நகை, பாத்திரம், சீர், செனத்தி எதுவுமே கேட்கவில்லை. அதற்காக நாம் சும்மா இருக்க முடியுமா? பந்தலில் நம் பெண்ணை மூளியாக நிறுத்த முடியுமா? என் நகைகள் அத்தனையும், தாலிக் கொடி, இரண்டு ஜோடி வளையல்கள் தவிர, விற்றுத்தான் ஆக வேண்டியிருந்தது.

மாப்பிள்ளை வீட்டில் ஒரே ஒரு 'கண்டிஷன்' போட்டார்கள். 'நிபந்தனை' என நினைக்கக் கூடாது. வேண்டுகோளாக மதிக்க வேண்டும் என்றார்கள்.

அவர்களுக்குச் சென்னையில்தான் எல்லாச் சொந்தக்காரர்களும் வேண்டப்பட்டவர்களும் இருந்தார்கள். "ஒரே பிள்ளையின் கல்யாணம். கல்யாணத்தை மட்டும் மெட்ராஸில் ஏற்பாடு செய்யுங்கள்" என்றார்கள்.

நாங்கள் யோசிப்பதற்குள் அவர்களே பெரிய கல்யாண மண்டபத்தை நாள் ஒன்றுக்கு எட்டாயிரம் ரூபாய் வாடகையில் பேசி, 'அட்வான்ஸ்' கொடுத்த பிறகு, எங்களுக்கு விவரம் சொன்னார்கள். மண்டபம் மூன்று நாட்களுக்குத் தேவைப்பட்டது.

கல்யாணம் முடிந்த நான்காம் மாதம் இந்த வீட்டிற்குக் குடி வந்தோம். கல்யாணச் செலவு மட்டும் ஐந்து லட்சம்!

கடைசிப் பெண்ணிற்குப் பிறந்த பெண்ணையும், பிள்ளையையும் தூக்கிக் கொஞ்சி விட்டுத்தான் அவர் கண் மூடினார்.

தான் உயிர் பிழைக்க முடியும் என்ற நம்பிக்கை படுக்கையில் விழுந்த நாள் முதல் அவருக்கு இல்லை. அப்போதுதான் ஒரு நாள் என்னைத் தனியாக அழைத்து என்னிடம் ஒரு சத்தியப் பிரமாணம் வாங்கிக் கொண்டார்.

அதைப் பற்றி நான் யாரிடமும் சொல்லவில்லை. அநாவசியமாக ஏதாவது விமரிசிப்பார்கள்.

அது மட்டும் அல்ல. என்னால் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற முடியும் எனத் தோன்றவில்லை.

ஆயிற்று. பெண்கள் எல்லோரும் ஊருக்குக் கிளம்பும் நாள் வந்து விட்டது. நான் படுக்கையை விட்டு எழுந்திருக்கும் போதே வாணி என் கால்மாட்டில் உட்கார்ந்திருந்தாள். வேறு யாரும் இன்னும் எழுந்திருக்கவில்லை.

"அம்மா! கோபிக்கும் வயசாகிறது. அப்பா காரியங்கள் எல்லாம் குடும்பஸ்தனாக இருந்து செய்தால்தான் நல்லது என்று சொல்வார்கள். உனக்குத் தெரியாததையா நான் சொல்லப் போகிறேன். உன் மாப்பிள்ளையின் மாமா பெண் இருக்கிறாள். ராஜேஸ்வரி என்று பெயர். ராஜாத்தி மாதிரி இருப்பாள். நீ கூட அவளைப் பார்த்திருக்கிறாய். நன்றாகச் செய்வார்கள். இந்த ஜாதகம் கீதகம் இவற்றில் எல்லாம் அவர்களுக்கு நம்பிக்கை கிடையாது. என்ன சொல்கிறாய்?"

"உம்.. பார்க்கலாம்!" என்றேன்.

காலை வேளையில் படுக்கையில் உட்கார்ந்தபடி நானாக முடிவு செய்ய வேண்டிய சமாசாரமா இது?

அன்று புழக்கடையில் நான் துணிகளைப் பிழிந்து உலர்த்திக் கொண்டிருந்த போது கவிதா வந்தாள். எனக்கு உதவுகிற சாக்கில் பேச்செடுத்தாள்.

"இன்னும் எத்தனை நாளைக்குத்தான் நீ சிரமப்படப் போகிறாய்? உனக்கும் வயசாகவில்லையா? கோபிக்குப் படிப்பு முடிந்து விட்டது. வேலைக்குப் போகப் போகிறான். இனிமேல் அவன் கல்யாணத்தைப் பற்றி யோசிக்க வேண்டாமா!"

"அதற்கு என்னடி அவசரம்? இப்போதானே அவனுக்கு இருபத்து நாலு வயதாகிறது?"

"காலாகாலத்தில் கல்யாணம் செய்து கொள்வதுதான் நல்லது. அப்பாவைப் பார். தன் பொறுப்புகளை எல்லாம் சீக்கிரமாக முடித்து விட்டுக் கடைசிக் காலத்தில் எத்தனை நிம்மதியாக இருந்தார்?"

நான் மனத்திற்குள் சிரித்துக் கொண்டேன். நிம்மதியாக எங்கேடி இருந்தார்? அவர் பட்ட வேதனை எனக்குத்தான் தெரியும். பிள்ளைக்கு ஒன்றுமே வைக்காமல் எல்லாவற்றையும் துடைத்து விட்டுப் போகிறோமே என்று எத்தனை ஆதங்கப்பட்டிருப்பார்!

அவள் சொல்லிக் கொண்டே போனாள்.

"நீ மட்டும் சரி என்று சொல் அம்மா. என் நாத்தனார் பெண்ணிற்குப் பார்க்கலாம். நல்ல சிவப்பு. 'மாமி.. மாமி' என்று

என்னிடம் உயிராக இருப்பாள். பிரமாதமாகப் பாடுவாள். ஒரே பெண். எனக்கு நீங்கள் செய்ததை வட்டியும் முதலுமாகக் 'கறக்கலாம்'. என்ன சொல்கிறாய்?''

''பார்க்கலாம்!'' என்றேன் சுருக்கமாக.

கடைசிப் பெண் காயத்ரி எப்பவுமே சுற்றி வளைத்துப் பேச மாட்டாள். ஒரு பெண் 'போட்டோவை' என்னிடம் காண்பித்தாள்.

''இவள் பெயர் டாக்டர் வாசுகி. இவள் அப்பா இவளுக்குத் தனியாக ஒரு நர்ஸிங் ஹோம் கட்டிக் கொண்டு இருக்கிறார். நல்ல கௌரவமான குடும்பம். நம்ம கோபிக்கு இவளைத்தான் நான் பார்த்திருக்கிறேன். அடுத்த வாரம் அவர்கள் கல்யாணம் பேச இங்கே வருவார்கள்.''

''என்னம்மா இப்படி திடுதிப்பென்று. கோபியை ஒரு வார்த்தை கேட்க வேண்டாமா?''

''அவனுக்கு என்னம்மா தெரியும்? நாம் சொல்றபடி சொன்னால் சரி என்கிறான்.''

''இதெல்லாம் என்னிடம் ஏன் சொல்கிறாய்? உன் தம்பியிடம் நீயே சொல்லிப் பார். நான் என்ன குறுக்கே பேசப் போகிறேனா?'' என்றேன்.

''அவனை எங்கே தனியாகப் பார்க்க முடிகிறது? எப்போது பார்த்தாலும் யாராவது பேசப் பிடித்துக் கொண்டு விடுகிறார்கள்'' என அலுத்துக் கொண்டாள் காயத்ரி.

**வா**ணியும், காயத்ரியும் பாண்டியனில் சென்னை போகிறார்கள். கவிதா இரவு பத்து மணி பஸ்ஸில் தஞ்சைக்குப் புறப்படுகிறாள்.

மாலை ஐந்து மணிக்கு எல்லோருமாக உட்கார்ந்து, சிரித்து அரட்டை அடித்தபடி பேசிக் கொண்டிருந்தார்கள். கோபியை மட்டும் காணோம். காயத்ரி சொன்னது போல ஓர் இடத்தில் சேர்ந்தாற்போல் ஐந்து நிமிடம் இருக்காமல் என்ன ஓட்டம்!

நான் பக்கத்து அறையில் அவர்கள் பேசுவதைக் கவனித்துக் கொண்டு வாசலைப் பார்க்க உட்கார்ந்திருந்தேன்.

வாசலில் ஒரு 'டாக்ஸி' வந்து நின்றது.

முதலில் இறங்கியது கோபி. டாக்ஸியின் பின் கதவைத் திறந்து விட்டான். அறுபது வயது மதிக்கத்தக்க பெரியவர், ஒரு பழுத்த சுமங்கலி, கூட ஒரு பெண் உள்ளே வந்தார்கள்.

அந்தப் பெண்ணிற்கு இருபது வயதிருக்கும். அழகி என்று சொல்ல முடியாது. ஆனால் முகத்தில் நல்ல களை இருந்தது.

கோபி அவர்களை உட்காரச் சொல்லி உபசரித்தான்.

அவர்கள் தாங்கள் கொண்டு வந்திருந்த வெற்றிலை, பழம், பாக்கு இவற்றைத் தட்டில் எடுத்து வைத்த போது, நான் எழுந்து நின்றேன்.

''இந்த கோபி என்ன செய்கிறான்?'' — எனக்கு ஆச்சரியமாக, ஏன் பயமாகக் கூட இருந்தது.

என்ன தைரியம் இருந்தால் என்னை ஒரு வார்த்தை கூடக் கேட்காமல் இப்படியெல்லாம் செய்வான். மாப்பிள்ளைகளுக்கு முன் எத்தனை பெரிய அவமானம். எவ்வளவு தலைகுனிவு!

கோபி அவர்களை அறிமுகப்படுத்தி வைத்தான்.

''இவர் நாராயணன். என் பள்ளிக்கூடத்

தில் எனக்குக் கணக்கு வாத்தியாராக இருந்த வர். அவருடைய மிஸஸ். அவர் பெண் சுமதி. ஒரே பெண். போன வருஷம் பி.எஸ்.ஸி. முடித்திருக்கிறாள்.''

அவனுடைய தமக்கைகள் மூவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

''நீங்கள் ஊருக்குப் போவதற்குள் நான் தான் இவர்களை வரச் சொன்னேன். தனியாக ஒரு பெண் பார்க்கும் நாடகம் வேண்டாம் எனப் பட்டது. உங்கள் ஒவ்வொருவருடைய மனத்திலும் எனக்குப் பெண் நிச்சயித்திருப்பதாக உங்கள் பேச்சி லிருந்து புரிந்து கொண்டேன். ஆனால் என் மனத்திற்குப் பிடித்தவள் இவள்தான். நான் பேசுவது கொஞ்சம் அடக்கக் குறைவாக இருப்பதாகத் தோன்றினால் மன்னித்துக் கொள்ளுங்கள். எனக்கு இந்த சுமதி போதும். வேறு எந்த ரதியோ, ரம்பையோ குபேரன் வீட்டுச் சம்பந்தமோ வேண்டாம். இவள்தான் என் மனைவி என்பது முடிவான விஷயம். அதை நான் மாற்றிக் கொள்வதாக இல்லை. அது மட்டும் இல்லை. இப்போது இவள் எப்படியிருக் கிறாளோ அப்படித்தான் இந்த வீட்டு மருமகளாக வருவாள். கூட ஒரு நகையோ ஒரு ஸ்பூனோ வராது. இவர்கள் கூட முதலில் அதற்குச் சம்மதிக்கவில்லை. ''எங்கள் பெண்ணிற்கு நாங்கள் செய்கி றோம்!'' என்றார்கள். அப்படியானால் இந்தக் கல்யாணம் நடக்காது எனச் சொல்லி விட்டேன். காரணம் நான் என் அப்பாவுக்குக் கொடுத்த வாக்கு. ''கட்டிய புடைவையுடன் உனக்குப் பிடித்தவளைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். அவளைத் தவிர எதையுமே நேராகவோ மறைமுகமாகவோ எதிர்பார்க்கக் கூடாது" எனச் சத்தியம் வாங்கிக் கொண்டிருக் கிறார்.''

சில வினாடிகள் நிசப்தம்.

காயத்ரிதான் எந்தச் சந்தர்ப்பத்தையும் அருமையாகச் சமாளிப்பவள்.

''அதனால் என்னடா கோபி.. கல்யா ணம் பண்ணிக் கொள்ளப் போகிறவன் நீ. சுமதிக்கு என்ன? சிலை மாதிரி இருக்கிறாள். வா அம்மா! உள்ளே என் அம்மாவிடம் கூட்டிப் போகிறேன்!'' என அவளைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வந்தாள்.

என்னை நமஸ்கரித்த சுமதியை என் மனம் வாழ்த்தியது.

அதே சமயம் ஒரு வருத்தம் கூட.

நான் எங்கே கொடுத்த வாக்கைக் காப்பாற்றாமல் காற்றில் பறக்க விட்டு விடுவேனோ என்ற அவநம்பிக்கையில் கோபியிடம் தனியாகச் சத்தியம் வாங்கிக் கொண்டிருக்கிறாரே அவன் அப்பா...

அதைத்தான் என்னால் தாங்க முடிய வில்லை.



## அருள்வாக்கு

புராண புருஷர்கள் நமக்கு லக்ஷியத் தைக் காட்டுகிறார்கள். அந்த லக்ஷியத்தை அடைவதற்கு வழி என்ன என்றால் கர்மா நுஷ்டானத்தில்தான் ஆரம்பிக்க வேண்டும். இப்படி நாம் நடைமுறையில் practical ஆகச் செய்ய வேண்டியதை எல்லாம் சொல்வது தர்மசாஸ்திரம். நாம் என்னென்ன செய்ய வேண்டும் என்று வேதத்தில் அங்கங்கே உதிரி யாகச் சொல்லியிருக்கின்றனவோ அவற்றை நன்றாக வகைப்படுத்தி விவரமாகச் சொல்கிற வேத உபாங்கம் இது.

குடும்பக் காரியம், சொந்தக் காரி யம், குளிப்பது, சாப்பிடுவது முதற் கொண்டு எல்லாவற்றையும் ஒரு நிர் ணயப்படி, நியதிப்படிச் செய்ய வேண்டும். வேத தர்மத்தில் மனுஷ்ய வாழ்வின் ஸகல அம்சங்களையும் ஆத்மா விருத்திக்கு அநுகூல மாக ஆக்கி விதிகள் போட்டிருக் கிறது. இப்படிப் படுத்துக் கொண்டால் சிரேயஸ், இப்படி ட்ரெஸ் பண்ணிக் கொண் டால் அது ஆத்மாவுக்கும் நல்லது, இப்படி வீடு கட்டினால்தான் அநுஷ்டானத்துக்குச் சாதகமாக இருக்கும் என்பதாக வாழ்க்கையில் எல்லா விஷயங்களையும் மதத்தோடு அது சம்பந்தப்படுத்தி விடுகிறது. லௌகிக வாழ்க்கை (secular life) மத வாழ்க்கை (religious life) என்று அது இரண் டாகப் பிரிக்கவில்லை. லௌகிகம் கூட மதத்தில் கொண்டு சேர்க்கும்படியாகவே வேததர்மம் அமைந்திருக்கிறது. எந்தக் கர்மா வைப் பண்ணினாலும் அதை மந்திர பூர்வ மாகச் செய்யும்படி பண்ணி ஆத்மா விருத் திக்கு அங்கமாக ஆக்கி விடுகிறது. லௌகி கத்தையும் ஆத்மிகத்தையும் சேர்த்துக் கொடுப்பது போலவே, தனி மனுஷ்யன் தன் சிரேயஸுக்(individual salvation) காகப் பண்ண வேண்டியதிலேயே ஸமூக வாழ்க்கையின் ஒழுங்கும், லோக க்ஷேமமும் (common welfare) சேரும்படியாக இணைத் துக் கொடுத்திருக்கிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# யாரிடம் ஆட்டோகிராப் வாங்க ஆசை?

**சீர்காழி ஜி. சிவசிதம்பரம்:**

எம். ஜி. ஆர். முதலமைச்சராக இருந்த போது, அன்னை தெரசா தமிழகம் வந்திருந்தார். வள்ளுவர் கோட்டத்தில் நடந்த விழாவில், இறைவணக்கம் பாட என்னை அழைத்திருந்தனர். பாடி முடித்துவிட்டு, மேடையில் அமர்ந்திருக்கும் அன்னை தெரசாவின் பாதங்களைத் தொட்டு ஆசி பெற்றுக் கொண்டு, அப்படியே ஆட்டோகிராபும் வாங்கிவிடலாம் என்ற எண்ணத்துடன் சென்றேன். ஆனால் விழா நிகழ்ச்சியில் சிறு மாற்றம் செய்து, இறைவணக்கத்துக்குப் பின் குழந்தைகள் நிகழ்ச்சி ஒன்று நடந்தது. அது முடிந்த பின்தான் அன்னை மேடைக்கு வந்தார். எனவே போய் ஆட்டோகிராப் வாங்க முடியாமல் போய் விட்டது. அவரிடம் ஆட்டோகிராப் வாங்கும் ஆர்வம் எனக்கு இப்போதும் இருக்கிறது.



* சீர்காழி சிவசிதம்பரம்

**பாலகுமாரன்:**

ஆட்டோகிராப் வாங்க வேண்டும் என்கிற ஆர்வம் கிடையாது. காரணம் ஆட்டோகிராப் வாங்குகிறதெல்லாம் குழந்தைத்தனமான விஷயங்கள் என நான் நினைக்கிறேன். ஆனாலும் கன்னட எழுத்தாளர் சிவராம் கரந்தைச் சந்தித்து நிறையப் பேச வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். "ஆட்டோகிராப் வாங்குவது குழந்தைத்தனம் என்றால், உங்களிடம் ஆட்டோகிராப் கேட்பவர்களிடமும் இதையே கூறி மறுத்து விடுவீர்களா?" என்று நீங்கள் என்னைக் கேட்கலாம். நேரில் வந்து ஆட்டோகிராப் கேட்பவர்களுக்குத் தர மறுத்தால் அவர்கள் மனம் புண்படும் என்பதால் போட்டுக் கொடுப்பேன்.



* பாலகுமாரன்

50

**யோசனை தந்த வாசகர்:**
நெல்லை குரலோன்,
பொட்டல்புதூர்.

**அஞ்சு:**

இன்றையச் சூழ்நிலையில் புரட்சித் தலைவர் என்று பட்டம் பெறப் பொருத்தமானவர் ரஷ்ய அதிபர் கோர்பச்சேவ் தான். பழமையிலிருந்து, புதுமைக்கு வழிகாட்டும் ரஷ்ய அதிபர், ஆயுதக் குறைப்பு மற்றும் உலக அமைதிக்காக ஆற்றிவரும் பணி மகத்தானது. எனவே அவரைச் சந்தித்து ஆட்டோகிராப் வாங்க வேண்டும் என்று எனக்கு ஆசை.



* அஞ்சு

**ஔவை நடராஜன்:**

தமிழறிஞர் வ. சுப. மாணிக்கம் என்னை மிகவும் பிரமிப்பூட்டிய மனிதர். அவர் சொல்கிற கருத்துக்கள் புதியவையாய் இருக்கும்; பழைய கருத்து என்றால், அவர் சொல்லும் முறை புதியதாய் இருக்கும். அவருடைய சொல்லாட்சி இருக்கிறதே! அப்பப்பா! எந்தக் கட்டுரை எழுதினாலும் அதிலே புதிதாய் நான்கு சொற்களைப் பயன்படுத்தியிருப்பார் அவர். நான் தமிழ் வளர்ச்சித்துறையில் பொறுப்பேற்ற தினம், என்னைப் பார்க்க வந்திருந்தார் அவர். நான் பணியைத் தொடங்குமுன், ஏதாவது எழுதிக் கையொப்பமிட்டுத் தரும்படி நான் அவரைக் கேட்ட போது அவர் எழுதித் தந்தது: "அறத்தான் உருவாவதே இன்பம்" அதை இன்றும் பொக்கிஷமாய்ப் பாதுகாத்து வருகிறேன்.



* ஔவை நடராஜன்

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி.

# 25

ரங்கன் ரமணியின் முகத்தைப் பார்த்தான். ரமணியின் முகத்தில் கோபம் மின்னியது.

''ரமணி சார், நான் விரும்பிக் கேட்டது தப்புன்னு படுதா.. எனக்கு இது நியாயமாப் படுது. தனம் இப்ப என் பொண்சாதி இல்லைதான். நான் அவ புருசன் இல்லதான்... ஆனா அவ கூட கொஞ்ச காலம் வாழ்ந்துட்டேன்.. அவ என்னைப் பணம் காசுக்கு ஏமாத்தியிருக்கலாம். ஆனா அவ எனக்குச் சோறு ஆக்கியும் போட்டிருக்கா....''

''அப்ப அவளைப் போய்ப் பார்த்து கையிலே பத்தாயிரத்தைக் கொடுத்துக் கொஞ்ச நேரம் அவ கூட ஜாலியா...''

''இல்லே ரமணி சார்... நிச்சயமா அவ கூட ஜாலியா இருக்கணும்னு நான் போகலே.. அந்த எண்ணமே வரலே...''

''எதுக்கு அவளுக்குப் போய் நீ பணம் கொடுக்கணும்?''

''வடிவேலு கூடச் சொன்னாரு, அவரு தனத்தை விட்டுப் போறப்ப அஞ்சாயிரம் கொடுத்தேன்னு...''

''அவனே அஞ்சாயிரம் கொடுத்தான்னா, நீ பத்தாயிரமா கொடுக்கிறது? உன் அந்தஸ்துக்குக் கொறஞ்சது ரெண்டு லட்சமாவது கொடுக்கணும். கொடுக்கறியா?''

''கோபிச்சுக்காதீங்க ரமணி சார்... ஆண்டவன் புண்ணியத்திலே எனக்கு லட்சம் லட்சமாப் பணம் வந்திருக்கு. உங்க தயவிலே ரெண்டு வீடு கெடைச்சிருக்கு. நான் நல்லா இருக்க வேணாமா?''

''அதுக்கு?''

''தனம் மனசாலே கூட என்னை எண்ணிக்கும் திட்டக் கூடாது ரமணி சார்... அவ கோபம் நிச்சயமாத் தணியாது.''

''இந்தப் பணம் என்ன தண்ணியா, அவ மேலே கொட்டி அணைக்கறதுக்கு? பேசாம இரு...''

''ரமணி சார்... ரமணி சார்... நீங்க எனக்குச் செஞ்சுட்டிருக்கிற உதவிக்கு நான் உங்களுக்குக் கோவில் கட்டினாக் கூடப் பத்தாது. என்னோட எல்லா ஆசைங்களையும் நீங்க நிறைவேத்தியிருக்கீங்க.. ஆஸ்பத்திரியிலே ராத்திரி பூராக் கண் முழிச்சுப் பார்த்திருக்கீங்க... இந்தச் சின்ன ஆசையையும் நிறைவேத்தினீங்கன்னா...''

''சரி சரி... நிறுத்து.''

ரமணி யோசித்தான்.



இனிமேல் ரங்கன் தனத்தைச் சந்திப்பதோ அந்தச் சந்திப்பு தொடருவதோ ரங்கனை மீண்டும் பாதிக்கக்கூடும். மயில்சாமியும் தனமுமாகச் சேர்ந்து கொண்டு அவனைப் படாதபாடு படுத்துவார்கள்.

ரங்கா!

''சார்.''

''நீ தனத்துக்குப் பத்தாயிரம் கொடுக்கணும்னு ஆசைப்படறே... ஓகே... கொடு. அவ விடற கோபக் கண்ணீர் உன்னைச் சுட்டுச் சாம்பலாக்கக் கூடாதுங்கறே.. ஓகே... சாம்பலாக்க வேண்டாம்.. உன் கூட கொஞ்ச காலம் அவ குப்பை கொட்டியிருக்கா.. ஓகே... பத்தாயிரம் ரூபாயை அவ மூஞ்சியிலே தூக்கி எறியலாம். ஆனா அப்படி எறியப் போறது நீ இல்லே! நான்... நான்தான்...''

ரமணி இந்த மாதிரி கடுப்புடன் பேசி ரங்கன் கேட்டதில்லை. திடீரென்று அவனுக்கும் இதுவரை முளைத்திராத சினம் மென்மையாக முளைத்தது.

''ஏன் ரமணி சார், நான் போகக் கூடாது? ஏன் போகக் கூடாது?''

''ஏன்னா அவளும் மயில்சாமியுமா உன் முதுகுத் தோலைப் பிய்ச்சுடுவாங்க!''

''மயில்சாமி இன்னும் ஜெயிலில்தான் இருக்கான். ரமணி சார்!''

''அப்ப தனம் ஒருத்தி போதும் உன்னை நார் நாராக் கிழிக்க... அவ பேர்ல, உன்னாலே போலீஸ்ல கேஸ் போட்டிருக்காங்க. அவளைக் கோர்ட்லே ஏத்தி, வக்கீல் கோர்ட்டே சிரிக்கும்படியா கேள்வியெல்லாம் கேட்டிருக்காங்க.. நீ இப்ப அவளைப் பத்தி கரிசனமா நினைக்கிற மாதிரி, நிச்சயமா அவ உன்னைப் பத்தி நினைச்சுட்டிருக்கமாட்டா... நான் இவ்வளவு சொன்னதுக்கு அப்புறமும் நீ பி டி வா த மா ப் போறதுன்னு முடிவு பண்ணினா எனக்கு ஆட்சேபணை இல்லை, தாராளமாப் போ! ஆனா ஒண்ணே ஒண்ணு மட்டும் நினைவிலே வைச்சுட்டுப் போ! இனிமே என் வீட்டு வாசப்படியை நீ மிதிக்கக் கூடாது. உனக்கும் எனக்கும் பேச்சு வார்த்தை இல்லை!''

ரங்கன் நீண்ட நேரம் ரமணியையே பார்த்து நின்றான். ரமணியின் கண்கள் நீர் கட்டிக் கனத்திருப்பதாகத் தோன்றியது. ஏன் ரமணி இவ்வளவு தூரம் இந்த விஷயத்தில் பேச வேண்டும்? கடுமையாக இருக்க வேண்டும்? தனம் என்கிற ஒரு பெண்ணால் அவனுக்கு எந்தவிதமான ஆபத்தும் வரக் கூடாது என்றுதானே?

ரமணியின் மிரட்டல் அவனுக்கு எதிர்பார்த்த பதிலை அளித்தது.

''சரி சார்... நீங்க சொல்றதிலேயும் அர்த்தம் இருக்கு. நீங்களே போய்க் கொடுத்துட்டு வாங்க.. இனிமே நான் அவளைப் பார்க்கணுங்கற எண்ணத்தைக் கூட உங்ககிட்டச் சொல்ல மாட்டேன்.

## ஏ.வி.ஆர்

''எனக்குத் தெரியாமலும் போகக் கூடாது.''

''போக மாட்டேன், ரமணி சார்.''

தனம் திடுக்கிட்டுப் பார்த்தாள். ரமணி புன்முறுவலுடன் வாயிலில் நின்று, ''உள்ளே வரலாமா?'' என்று கேட்டான்.

''வாங்க... உட்காருங்க. அவரோட ஒடம்பு இப்ப எப்படி இருக்குங்க?''

ரமணி அயர்ந்து போனான். தனத்தின் ஆத்திரமும் கோபமும் எங்கே போயின?

''இப்ப சௌக்கியமா இருக்கான். ஆமாம், உனக்கு எப்படித் தெரியும் ரங்கனுக்கு உடம்பு சரியில்லாம இருந்ததுன்னு?''

''சுகந்தி அம்மா சொன்னாங்க.''

மாலு ஆபீசில் சொல்லியிருக்க வேண்டும். சுகந்தி காதில் விழுந்திருக்க வேண்டும். தனத்தை எங்காவது சந்தித்திருக்க வேண்டும்.

''அப்படியா... அது சரி, நீ எப்படி இருக்கே...''

''ஜெயில்லேர்ந்து வந்தவ எப்படி இருப்பா? அப்படி இருக்கேன்.''

''ரங்கன் என்னை அனுப்பியிருக்கான்.''

''எதுக்கு... அவரோட பொருள் ஏதானும் இங்கேயே இருக்குதா... சொல்லுங்க, தேடித் தரேன்.''

''இல்லே தனம், இந்தப் பொருளை உங்கிட்டக் கொடுக்க அவன் என்னை அனுப்பினான்.''

ஒரு நீண்ட தோல் பையை அவன் அவளிடம் நீட்டினான்.

''என்னங்க இது?''

''பணம்.''

''பணமா?''

''ஆமாம், பத்தாயிரம் ரூபா.''

''பத்தாயிரம் ரூபாயா? எனக்கா?''

''ஆமாம் தனம்... உன் கூட ரங்கன் கொஞ்ச நாள் வாழ்ந்திருக்கான் இல்லியா... உன் நினைவு அவனுக்கு இன்னும் மறையலே... உனக்கு ஏதானும் உதவி செய்யணும்னு அவன் விரும்பறான்.''

''அவர் என் கூட இந்த ரூமில இருந்தாருங்க... அது நெசம்தான். ஆனா ஒருநாள் கூட அவர் என் கூட வாழலே... சத்தியமா வாழலே... வாழணும்னு அவர் ஆசைப்பட்டார்... ஆனா அதுக்கு நான் இடம் கொடுக்கலே... என் விசயத்திலே அவர் மொதல்லேந்து கடைசி வரை சுத்தமாத்தான் இருந்தார்... நான்தான் அவரை ஏமாத்திக்கிட்டிருந்தேன். அதுக்கான தண்டனையையும் வாங்கிக்கிட்டேன்...''

தோல் பை இன்னும் ரமணி நீட்டிய கையிலேயே இருந்தது.

''எல்லாத்தையும் சொப்பனம்னு நெனைச்சு மறந்துடு, தனம். இந்தா இதை வாங்கிக்க...''

''எனக்கு வேணாம் சார்... எனக்கு யார் பணமும் வேணாம்.. இந்தப் பத்தாயிரம் என் ஆயுசு பூரா வருமா... நான் ஊதாரி. தாம் தூம்னு செலவளிச்சுக்குவேன்... அப்புறம் இன்னிக்கு இருக்கிற நெலமைதானே... நான் நன்றி கெட்ட பொண்ணு. ஒரு ஆளைக் கட்டிக்கிட்டு அவனை ஏமாத்தின பஜாரி... அந்த ஆள் போனப்புறம் இன்னொரு ஆளை வளைச்சுப் போட்டவ... எனக்கு அந்த நல்ல ஆளோட் பணம் தேவை இல்லே சார். நான் வாங்கிக்கிட்டா பாவம்.. ஜரிக்காது. எதனாச்சியும் கோவிலுக்கு தர்மம் பண்ணிடுங்க... சோடா கலர் குடிக்கிறீங்களா? ஓடிப் போய் வாங்கியாரேன்.''

ஒரு கணம் யோசித்தான் ரமணி. தான் வேறு ஏதோ ஒரு புதுமையான உலகத்தினுள் பிரவேசித்து விட்டதான பிரமை உண்டாயிற்று.

தனமா இப்படி மாறியிருக்கிறாள்? பத்து ரூபாய் நோட்டைக் கண்டால் பாய்ந்து பறிக்கிறதனமா இப்போது பத்தாயிரத்தைத் துச்சமாக மதிக்கிறாள்? இவளுடைய இந்த மனமாற்றத்துக்குப் பத்தாயிரம் ரூபாய் அற்பமான தொகை. பல லட்சங்கள் கொடுக்கலாமே.

மௌனமாய், தலைகுனிந்து நிற்கும் தனத்தைப் பார்த்தான்.

''சரி, தனம். ஒரு கோலி சோடா வாங்கி வா... எனக்கும் தாகமா இருக்கு.''

''இதோ வரேன் சார்.''

அவள் தலை மறைந்ததும் தோல் பையை சிறு சுவர் அலமாரியின் அகலமில்லாத தட்டின் மீது வைத்தான். மறு வினாடி கதவைச் சாத்தி விட்டு வெளியேறி, பிடாரி அம்மன் தெருவுக்கு வந்தான்.

ஓர் ஓரமாய் அவன் நிற்கையில், தனம் கையில் ஒரு சோடா பாட்டிலுடன் விரைவாக நடந்து, தன் வீடு இருக்கும் சந்தினுள் பிரவேசித்தாள். அவள் தன் வீட்டுக்குள் நுழையும் வரை காத்திருந்த ரமணி, அவளுடைய தலைமறைந்ததும் விருட்டென்று நடந்து ஒரு சைக்கிள் ரிக்ஷாவில் ஏறிக் கொண்டாள்.

''தம்புச் செட்டித் தெருவுக்குப் போப்பா... கொஞ்சம் வேகமாகப் போ!''

ரிக்ஷாவில் செல்லுகையில் மனித மனத்தின் விசித்திரங்களை ரமணி நினைத்துப் பார்த்தான்.

இப்படியும் ஒரு பெண்ணா?

பண்பும் நெறியும் வெறும் படிப்பிலும் அறிவிலுமா இருக்கிறது? அது மண்ணோடு பிறந்தது அல்லவா? அந்த மண்ணில் பிறந்த கோடானு கோடிப் பேர்களில் இந்த தனமும் ஒருத்தி தானே?

ரமணி இதுவரை அனுபவித்திராத மகிழ்ச்சியில் திளைத்துப் போனான். அதே சமயத்தில் உள் மனத்தில் ஓர் எச்சரிக்கை மணியும் ஒலித்தது.

தனம் பாவமன்னிப்பைத் தேடும் பெண்ணாக மாறி விட்டாள் எனும் விஷயத்தை ரங்கனிடம் சொல்லக் கூடாது. அப்படிப் பட்ட தனத்தை மீண்டும் பார்க்க அவன் துடிப்பான். யார் கண்டார்கள், துண்டிக்கப் பட்ட தொடர்பு மீண்டும் தழைக்காது என்று?

அந்த வருடம் தை மாதத்தில் கிரகப் பிரவேசம் நடத்துவது என்று முடிவு செய்தார்கள்.

தாத்தாவுக்கு அன்றைய தினசரியை ரமணி படித்துக் கொண்டிருக்கையில் அம்மா கோமதி ஒரு பாத்திரம் நிறைய இட்லியும் எண்ணெய் மற்றும் சட்னி சகிதமாகப் பிரவேசித்தாள்.

''என்ன கோமதி, இவனோட அப்பன் என்ன செய்யறான்? நான் ஒருத்தன் இங்கே இருக்கேன்னு அவனுக்கு ஞாபகம் இருக்கா?''

''ஏன் இப்படிக் கேட்கறீங்க அப்பா? உங்களை ரமணி நன்னாக் கவனிச்சுக்கிறானேன்னு அவர் திருப்தியா இருக்கார்...

## டீயுமா ஆபத்து?



பற்பசையில் புளூரைட் அடங்கியுள்ளதை உபயோகிக்கலாமா, கூடாதா? என்று ஏற்கெனவே சர்ச்சை நடந்து வருகிறது. ஒரு மில்லியனுக்கு நாலு பகுதி மட்டுமே புளூரைட் இருக்க வேண்டும். அதிகமானால் இதுவே நச்சுப் பொருளாகி ஊறு விளைவிக்கக் கூடும். தமிழ்நாடு, ஆந்திரப் பிரதேசம், குஜராத், ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில் உள்ள தண்ணீரில் இயற்கையிலேயே புளூரைட் மிக அதிகமாக இருக்கிறது. இந்நிலையில், பம்பாயிலுள்ள ஓர் ஆய்வு நிலையம் நாம் உபயோகிக்கும் தேயிலையில் மிக அதிகமான புளூரைடு இருப்பதாகக் கூறுகிறது. இனி ஒரு கோப்பை டீ குடிக்கக் கூட யோசிக்க வேண்டுமோ?

நன்றி: பிசினஸ் இண்டியா.

தகவல்: கிருஷ்ணவேணி ரங்கநாதன்.

இல்லாயப் போனா அவர் தினமும் ரெண்டு வேளை பார்த்துட்டுப் போகமாட்டாரா?''

''நம்ப பழைய வீட்டை இடிச்சு புது அஸ்திவாரம் போட்டு ஒரு வருஷமாயிட்டுது. இந்த அடுக்கு வீடும் ரெடியாயிடுத்து. இந்த ஒரு வருஷத்திலே எண்ணிப் பார்த்தா அஞ்சாறு தடவை கூட உன் புருஷன் வந்ததில்லே... சாமியார்ப் புள்ளையை நான் இன்னும் பார்க்கலே... மூத்தவனை நான் போய்ப் பார்க்க வேண்டியிருக்கு!''

''ஏன் தாத்தா அலுத்துக்கறீங்க? அவங்க வந்தா நீங்க சும்மாவா இருக்கீங்க? குதர்க்கமாப் பேசி, குத்தலாப் பேசி அவங்க மனசை நோக அடிக்கறீங்க.. இப்பப் பேசாம இட்லியை ஒரு கை பாருங்க.''

தாத்தா ஒரு துண்டு இட்லியைச் சாப்பிட்டார். பிறகு, ''அந்த நோஞ்சான் எப்படி இருக்கான்?'' என்று கேட்டார்.

''இப்ப நான் இஸபல் ஆஸ்பத்திரிக்குப் போகப் போறேன்.''

''என்னிக்கு அட்மிட் ஆச்சு?''

''நேத்து ராத்திரி.''

''ஏன் முன்னாலேயே சொல்லலே?''

''நீங்க சனிக்கிழமை சனிக்கிழமை எண்ணெய் தேய்ச்சுக் குளிக்கிற மாதிரி ரங்கன் ஆஸ்பத்திரிக்குப் போயிட்டு வர்றான்.''

''சிவனேன்னு ஆஸ்பத்திரியிலே அவன் ஒரு ரூமையே வாங்கியிருக்கலாம்.''

''பாவம் ரங்கன், இந்த வியாதியிலே ரொம்ப அவஸ்தைப்படறான்.''

''ஒருவாட்டி போயிட்டு வந்தா மூவாயிரம் நாலாயிரம்னு ஆறது...''

''எல்லாம் பகவானோட திருவிளையாடல்டா... ஒரு பக்கம் கொட்டறான், இன்னொரு பக்கத்திலேர்ந்து வாரி எடுத்துக்கறான். என்ன வியாதின்னு சொன்னே... பேரு மனசிலே பதிய மாட்டேங்கறது.''

''எம்பிசிமா.''

''பிழைப்பானாடா...''

''இழுத்துண்டே போகும்னு டாக்டர் சொல்றார்.''

''இப்படி அவஸ்தைப்படறதுக்குப் போய்ச் சேர்ந்துட்டாத் தொல்லை விட்டது. அவனுக்கு ஒரு விடுதலை கிடைச்சுடும்.''

''ஏன் அப்பா இப்படிப் பேசறீங்க? ரங்கன் நல்ல புள்ளை. சின்ன வயசு. புதுப் பணத்தைக் கண்டவன் பூரணமாக் குணமாகி அவனோட ரெண்டு வீட்டை வாடகைக்கு விட்டுட்டு, இன்னொன்லே குடியும் குடித்தனமுமா இருக்கட்டுமே!''

''பணம், வயசு இதுக்கும் வரப் போற சாவுக்கும் சம்பந்தமே இல்லே கோமதி... என்னைப் பாரேன்! ஏ பி ஸி டி எதுவுமே இல்லே. ஆனா இது சாசுவதமா...? ஏதாவது ஒரு காரணம் வரும். பொட்டுன்னு போயிடுவேன்!''

''அதென்ன ஏ பி ஸி டி?'' என்றாள் கோமதி.

''A — ஆர்த்ரைட்டீஸ், B — பிளட் பிரஷர், C — கார்டியாக் — அதான் ஹார்ட் சம்பந்தப்பட்டது. அப்புறம் D — டயாபடீஸ்'' என்றான் ரமணி.

கோமதி சிரித்தாள்.

பிறகு, ''கிரகப்பிரவேசத்தின் போது பசு மாடு வரணும்னு சாஸ்திரம் இருக்குடா ரமணி!'' என்றாள்.

''கிழ் ஃப்ளோர் வீட்டுக்குள்ளே பசு மாடு தலை நீட்ட ஏற்பாடு செய்யறேன் அம்மா... ஆனா முதல் மாடி ரெண்டாவது மாடியெல்லாம் அது ஏறி இறங்காது!''

''பசு மாடுன்னு நீ சொன்னப்ப எனக்கு மாலு ஞாபகம் வந்தது. கூறை, திருமாங்கல்யம் இதெல்லாம் நம்ப செலவு... கோமதி நீயும் ரமணியும் அவளை அழைச்சுட்டுப் போய் வாங்கிக் கொடுங்கோ... ரமணி, வேணும்ங்கற பணத்தை பாங்க்லேர்ந்து ட்ரா பண்ணு.''

''சரி தாத்தா.''

''தை மாசம் பத்தாம் தேதி கிரகப் பிரவேசம்... பதினேழாம் தேதி கலியாணம்... ரெண்டு நல்ல காரியங்கள்'' என்றார்.

கிரகப் பிரவேசம் அமோகமாக நடந்தேறியது.

ஒரே ஒரு குறை என்றாலும் அது மாபெரும் குறையாகப் பட்டது ரமணிக்கு.

ரங்கன் இன்னும் ஆஸ்பத்திரியிலேயே இருந்தான்.

(அடுத்த இதழில் நிறைவு பெறும்)



**சர். சி. வி. ராமன் எப்போதுமே தலைப்பாகை அணிந்திருப்பார். அவரைச் சந்தித்த நண்பர் ஒருவர் அவரிடம், ''எப்போதுமே தலைப்பாகை அணிகிறீர்களே, ஏன்?'' என்று கேட்டார்.**

**''தலை, (கனத்தினால்) பெருத்து விடக் கூடாதே, அதற்காகத்தான்'' என்றார் ராமன்!**

**—மதுரை எஸ். சாகுல் ஹமீது.**




"நான் இப்ப என்ன செய்யறதுன்னு தெரியலை ராமு" என்றார் கோபால்.

"என்ன சொல்றே?" என்றார் அவர் நண்பர் ராமு.

"என் பையன் எஸ். எஸ். எல். சி. பாஸ் பண்ணிட்டான்ல."

"ஆமாம் அதுக்கென்ன இப்ப?"

"என் மகன் டி.ஸி.ல மிகவும் பிற்படுத்தப் பட்ட வகுப்புன்னு போட்டு, என் சாதிப் பெயரை விட்டுட்டு இன்னொரு சாதிப் பெயரைப் போட்டிருக்காங்கப்பா. என்ன அநியாயம் இது?"

"சரி சரி இப்ப உனக்குத் தேவை உன் பையனோட அட்மிஷன். முதல்ல எப்பாடு பட்டாவது உன் பையனை முதலில் ஏதாவது ஒரு பள்ளியில் ப்ளஸ் ஒன்னில் சேர்க்க முயற்சி செய். பிறகு மற்ற பிரச்னைகளைப் பார்த்துக்கலாம்."

"அது எப்படிப்பா... இப்ப விட்டுட்டா பிற்பாடு பிரச்னை வந்துடும். அதனால முதல்ல என் பையன் படிச்ச ஸ்கூலுக்குப் போய் விவரங்களைச் சொல்லி டி.ஸி.யில திருத்தச் சொல்லணும்."

"சரி உன்னிஷ்டம்."

கோபால் அந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியரைச் சென்று சந்தித்தார். விஷயத்தைச் சொன்னார்.

கோபால் சொல்வதை அசுவாரசியமாய்க் கேட்டு விட்டு, "நீங்க பிற்பட்ட வகுப்பு... ஆனா மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்புன்னு போட்டிருக்குன்னு சொல்றீங்க. பி.ஸி.யை விட எம்.பி.ஸி.க்குச் சலுகைகள் உண்டு. பேசாம இருந்துடுங்க" என்றார் தலைமை ஆசிரியர்.

"அது எப்படி சார், எங்க சாதியை விட்டுக் கொடுக்க முடியும்? பின்னால் ஏதாவது பிரச்னை வந்தாப் பையன் எதிர்காலம் பாதிக்கும். நான் வேணும்னே பொய்யான விவரங்கள் கொடுத்ததா என் மேலயும் குற்றச்சாட்டு வரும். தவிரவும் எங்க சொந்தக்காரங்களே நாளைக்கு என்னைச் சாடுவாங்க. பிற்பாடு பையனுக்கு எந்த சாதில பெண் எடுப்பேன்?"

"உங்க பீலிங்ஸ் எனக்குப் புரியுது. இப்ப ஸ்கூல்ல சேர்த்துடுங்க. பிற்பாடு பார்த்துக்கலாம்."

"அது எப்படி சார்... புதுசா நான் சேர்க்கப் போற பள்ளியில எஸ்.எஸ்.எல்.சி. முடிச்சவுடனே, டி.ஸி. வாங்கினப்பவே ஏன் கவனிக்கலை? இத்தனை வருஷங்களா கவனிக்காம இப்ப வந்து மாத்தணும்னு சொன்னா எப்படின்னு கேட்டா, என்ன பதில் சொல்வேன் சார்? தவிரவும் மேலிடத்துக்கு விவரம் தெரிஞ்சா உங்களையும் விளக்கம் கேட்கலாமில்லையா?"

"ஓ அப்படியொன்று இருக்கிறதை நான் மறந்தே போனேன். இப்ப அட்மிஷன் நேரம் பாருங்க. உங்க பையனோட டி.ஸி.யைக் கொடுத்திட்டுப் போங்க. நான் கவனிக்கச் சொல்றேன்."

"அப்ப நான் எப்ப சார் வரட்டும்? ஏன்னா டி.ஸி. கையில கிடைச்சப்புறம்தான் அட்மிஷன் விஷயமா அலையணும்."

"இன்னைக்குப் போய் நாளை மறுநாள் வாங்க மிஸ்டர் கோபால்."

"நிச்சயமா நாளை மறுநாள் கிடைச்சிடுமா?"

"பயப்படாம போய் வாங்க. அட்மிஷன் விஷயமில்லையா... நாங்க விட்டுருவமா?"

மறுநாளைக்கு மறுநாள் கோபால் போன போது, அந்த ஹெட்மாஸ்டர் வர

வில்லை. அங்கிருந்த குமாஸ்தாவை நெருங்கி விவரம் கேட்டார் கோபால்.

''அப்படியா விஷயம்.. ஹெட் மாஸ்டர் எங்கிட்ட எதுவுமே இது பத்திச் சொல்ல லையே...''

''சார்... தயவு பண்ணிப் பாருங்க. என் பையனோட டி.ஸி.யை உங்ககிட்டக் கொடுத்திருக்காரான்னு.''

''இல்லை சார். கொடுத்திருந்தா நான் ஏன் உங்கிட்டப் பொய் சொல்லணும்?''

''அப்ப ஹெட் மாஸ்டர் எப்பத்தான் வருவார்?''

''இன்னைக்கு ஹெட் மாஸ்டரோட அப்பாவுக்குத் திதி. அதனால விடுப்பு. நீங்க நாளைக்குப் பன்னிரண்டு மணி சுமாருக்கு வாங்க.''

''சார் இப்பவே எஸ். எஸ். எல். சி. ரிஸல்டு வந்து மூணு நாட்களாச்சு. அங்கங்கே ஒவ்வொரு ஸ்கூல்லயும் கூட்டம் அலைமோதுது. இந்த லட்சணத்தில் என் பையன் மார்க்குகள் வேறு கம்மி. டி. ஸி. இல்லாம எங்கேயும் என் பையனைச் சேர்க்க முடியாது சார். பிளீஸ்! உங்க ஸ்கூல்லயும் டென்த்துக்கு மேலே இல்லை. அதனால்...''

''ஏன் சார் பயப்படறீங்க. நாளைக்கு நிச்சயம் உங்க வேலை முடிஞ்சிடும். நானாச்சு உங்க வேலையை முடிச்சுக் கொடுக்க.''

''சார் தப்பா நினைக்கலைன்னா இந்த ஐம்பது ரூபாயைத் தயவு பண்ணி வாங்கிக் கணும்.''

''என்னய்யா இது... இதெல்லாம் எனக் குப் பிடிக்காது. லஞ்சமா கொடுக்கிறீங்க...''

கோபால் ஆடிப் போனார்.

''லஞ்சம்னு ஏன் நினைக்கறீங்க? தயவு பண்ணி என் விஷயத்தை...'' குழைந்தார் கோபால்.

அந்தப் பள்ளியின் பியூன் கோபாலை வெளியே தள்ளிக் கொண்டு வந்தான்.

''என்னங்க உங்களுக்குக் கொஞ்சமாவது மூளையிருக்கா? என்னை எதிரில் வச்சுக் கிட்டு நேரடியா அவர்கிட்ட பணம் கொடுக்கலாமா?''

''தப்புத்தான்.''

''இதெல்லாம் நான் பார்த்து, முடிச்சுத் தரமாட்டேனா... நான் எதுக்கு இருக்கேன். தவிரவும் பழைய ரெகார்டுகளையெல்லாம் கிளறிப் பார்க்கணும். உங்க பையன் எப்ப இங்கே ஸ்கூலில் சேர்ந்தான்?''

''ஐந்து வருஷங்களுக்கு முன்பு, ஆறாம் வகுப்பில.''

''அதுக்கு முன்னால...''

''அதுக்கு முன்னால ஒரு எலிமெண்டரி ஸ்கூலில் படிச்சிட்டிருந்தான். இதையெல் லாம் ஏன் கேட்கிறீங்க?''

''இல்லை பழைய ரெகார்டுகளையெல் லாம் கிளறி உங்க பையனோட அப்ளிகேஷ ணைத் தேடி எடுக்கணும். அதில என்ன ஜாதி கொடுத்திருக்கீங்களோ அதுதான் இப்ப இருக்கும்.''

''அப்ப சரியாத்தான் என் சாதிப் பெயரைக் கொடுத்தேன்.''

''முன்னால இருந்த குமாஸ்தா கூடத் தப்பிதமா எழுதியிருக்கலாம். சரி சரி இன்னொரு நூறு ரூபாய் கொடுங்க.''

''எதுக்கு?''

''எதுக்கா? நல்லாக் கேட்டீங்க. இந்த குமாஸ்தா நூறுக்குக் குறைஞ்சு வாங்கறதில்லை. நீங்க லொடக்குனு ஐம்பதைக் கொடுத்ததாலதான் அவர் கோபப்பட்டார். அப்புறம் எனக்கு ஐம்பதாவது வேண் டாமா?''

''உங்களுக்குமா?''

''நல்லாக் கேட்டீங்க போங்க. இது அட்மிஷன் நேரமில்லையா! பழைய ஐந்து வருஷத்துப் பைல்களை யார் கிளறுவாங் களாம்? இதையெல்லாம் நான்தானே செஞ்சு முடிச்சாகணும்.''

''சரி தரேன்... ஆனா...''

''கச்சிதமாக் காரியம் முடிஞ்சிடும். நீங்க நாளைக்கு இதே நேரத்துக்கு வந்து டி.ஸி.யை மாத்திட்டுப் போயிடலாம்!''

**ம**றுநாள் போன போது, சுறுசுறுப் பாய் வேலை நடந்து கொண்டிருந்தது.

ஐந்து வருஷங்கள் முன் எலிமெண்ட்ரி ஸ்கூலில் கொடுத்த டி.ஸி.யிலேயே யாரோ அதை மாற்றி விட்டிருந்தார்கள்.

''இன்னா சார் படா பேஜாராப் போச்சு. இதை யார் மாத்தினது?'' என்றான் பியூன்.

''நிச்சயமா நான் இல்லை.''

''அப்ப, தப்பு எங்கேயோ நடந்திருக்கு. முதல்ல இருந்த குமாஸ்தா கூடப் பண்ணி யிருக்கலாம். உங்க பையன் முதல்ல படிச்ச எலிமெண்டரி ஸ்கூலுக்குப் போய் நீங்க கைப்பட எழுதிக் கொடுத்த விண்ணப்பத் தில் என்ன சாதி போட்டிருக்குன்னு கண்டுபிடிச்சு வந்துட்டா இதைச் சரி பண்ணிடலாம்...''

''வேற வழியே இல்லையாப்பா?''

''எங்கேயோ தப்பு நடந்திருக்கு. சரி பண்ணியாகணுமில்ல. உங்க பையன் படிச்ச பழைய ஸ்கூலுக்குப் போய் பழைய ரெகார்டு களைக் கிளறி எடுத்தாறதைத் தவிர வேற வழியில்லை...''

''இப்பவே ஒரு வாரமாயிடுச்சி. ஸ்கூல்ல எப்படி அட்மிஷன் கிடைக்கும் லேட் டானா?''

''என்ன சார் செய்யறது. நாங்க தப்புச் செஞ்சிருந்தா, நாங்க திருத்திக் கொடுத்திடு வோம். உங்க கைப்பட எழுதிக் கொடுத்த

கௌசல்யா ரங்கநாதன்



''என்னங்க, சாப்பாட்டில் பெரிய கல்லாக் கிடக்குது?''
''சின்னதா இருந்தாப் பொறுக்கக் கஷ்டப்படுவீங்களே, சார்!''
— ஞான. குமரன்.

அப்ளிகேஷனும் இங்கே இல்லை.''

''பழைய பள்ளிக்குக் கோபால் சென்று பார்த்த போது, ''பத்து வருடத்திற்கு முன்பு இருந்த ரெகார்டுகளையா... எப்படித் தேடறதாம்?'' என்றார் தலைமையாசிரியர்.

''எனக்கு வேற வழியே தெரியலை. என் பையனோட எதிர்காலம் கேள்விக்குறியா இருக்கு...'' என்றார் கோபால்.

''இப்ப முடியாது. இங்கேயும் அட்மிஷன் நேரம். ஒரு மனு எழுதிக் கொடுத்திட்டுப் போங்க. அடுத்த மாதம் வாங்க. பழைய குப்பைகள் எங்கேயிருக்கோ தேடித்தான் பார்க்கணும்...'' என்று அலுத்துக் கொண்டார் அவர்.

''சார் கொஞ்சம் தயவு பண்ணி....''

''எங்க நேரத்தை வீணாக்காதீங்க. போயிட்டு வாங்க சார்...''

கோபால் ராமுவிடம் வந்து முறையிட்டார்.

''என்னடா இது அக்கிரமமா இருக்கு. உங்களுக்குன்னு சாதிச் சங்கமேயில்லையா?'' என்றார் ராமு.

''ஆமாம் நல்ல சமயத்திலே நினைவுபடுத்தினே... இதோ வரேன்'' என்று எங்கேயோ விரைந்தார்.

அவர் உறவினர் ஒருவர் அந்தச் சாதி சங்கத்துச் செயலாளராம். அவரைப் போய்ப் பார்த்து விவரம் சொல்ல, அவரும் முதலில் நம்ம சாதிச் சங்கத்தில சேருங்க என்று சொல்ல, அந்தச் சங்கத்துக்குச் சந்தா கட்டிச் சேர்ந்தார் கோபால்.

''இன்னும் இரண்டு நாட்களில் எங்க லெட்டர் ஹெட்டில் லெட்டர் வாங்கித் தரேன் கோபால்...'' என்றார் அவர்.

''இரண்டு நாட்களா... ஏற்கெனவே லேட்டாயிடுச்சே!''

''என்ன செய்யறது. லெட்டர் பாட் காலியாயிடுச்சு. பிரிண்டிங்குக்குக் கொடுத்திருக்கோம். அது வந்தவுடன்...''

''என்னைக்கு வரும்...?''

''நாளைக்கு நான் உங்களுக்காக அந்த பிரஸ்ஸுக்குப் போய் லெட்டர் ஹெட் வாங்கி வந்து பிரசிடெண்டு கிட்டக் கையெழுத்து வாங்கி வைக்கிறேன்.''

''இந்தாங்க இருபத்தஞ்சு ரூபாய். பிரஸ்ஸுக்குப் போக பிரசிடெண்ட் சார் வீட்டுக்குப் போய் வரச் செலவுக்கு...''

''இதெல்லாம் எதுக்கு? சரி கொடுங்க...''

சொன்னபடி லெட்டர் பாடில் 'கோபாலின் மகன் இன்ன சாதியைச் சேர்ந்தவன் என்று இந்தச் சங்கம் தெரிவிக்கிறது' என்று சொல்ல... அதை எடுத்துக் கொண்டு மகன் படித்த பள்ளிக்கு விரைந்தார் கோபால்.

அதைப் பார்த்த ஹெட்மாஸ்டர் ''இது போதாது சார். இதை அடிப்படையா வச்சு நாங்க காஸ்ட் மாத்த முடியாது. மாத்தினா நாங்க ஜெயிலுக்குத்தான் போகணும்.''

''அப்ப என்னதான் சார் செய்யணும்?''

''இதை எடுத்துக்கிட்டு உங்க வீட்டுக்கு அருகாமையில் இருக்கிற தாலுகாபீசில் கொடுங்க. தாசில்தார்தான் உங்க மனுவை ஏத்துக்கிட்டு சாதிச் சான்றிதழ் வழங்க முடியும். அதை எடுத்துக்கிட்டு வந்தா அதை அடிப்படையா வச்சு நாங்க உங்க டி.ஸி.ல சாதியை மாத்தித் தருவோம்!'' என்றார்.

தாசில்தார் ஆபீசுக்குப் படையெடுத்து, தாசில்தாரைப் பார்க்க முடியாமல் காத்துக் கிடந்து, பின்பு அங்குள்ள புரோக்கர் ஒருவர் மூலமாக முயற்சி செய்து, அவனும் ''உங்க தொகுதி எம்.எல்.ஏ.தான் நீங்க இன்னார்னு தெரியப்படுத்தணும். இன்ன சாதி நீங்கன்னு சர்டிபிகேட் கொடுக்கணும். அதை வச்சுக்கிட்டுத்தான் தாசில்தார் ஆபீஸ்ல பரிசிலித்துச் சாதிச் சான்றிதழ் வழங்குவாங்க'' என்றான்.

''எத்தனை நாட்களாகும். எங்கே எம்.எல்.ஏ.யைப் பார்க்கிறதாம்?''

''ஏன் கவலைப்படறீங்க. வெள்ளையப் பணைத் தள்ளி விட்டா எல்லாம் நடந்துடும்.''

''சரி எவ்வளவு வேணும்.''

''ஒரு முந்நூறு கொடுங்க. இதில் எல்லோருக்கும் பங்குண்டு.''

''பணத்தைப் பற்றியில்லை. வேலை...''

''நாளன்றைக்குக் காலைல பதினோரு மணிக்கு வந்து, உங்க சாதிச் சான்றிதழை வாங்கிட்டுப் போங்க சார். பணம் கூட இப்ப கொடுக்க வேணாம். நான் தாசில்தார் ஆபீஸ் சிலோட கொடுத்தப்புறம்...''

''சரி.''

ஒரு வழியாகக் கோபால் தம் மகனின் டி.ஸி.யில் உண்மையான ஜாதியை எழுதி வாங்கிய போது எல்லாப் பள்ளிகளிலும் பிளஸ் ஒன்றுக்கான அட்மிஷன் சுத்தமாக முடிந்திருந்தது!



26

# அதிர்ஷ்ட தேவதை

கட்டடக் கலைஞரின் திட்டத்துக்கு ஏற்ப, இஞ்ஜினியர் குஞ்சிதபாதம் கட்டடத்தைக் கட்டினார். ஓய்வு பெற்ற நிபுணர் — மாலுவின் மாமா அவ்வப்போது ஆலோசனைகள் அளித்து, மேற்பார்வையும் செய்தார். சிறியதும் பெரியதுமாக மொத்தம் பதினெட்டுக் குடியிருப்புகளே கடைசியில் உருவாகி, ஒரே சமயத்தில் கிரகப்பிரவேசமும் கோலாகலத்துடன் நடந்து முடிந்தது. தன்னுடைய நீண்ட நாளைய ஆசை நிறைவேறியும் கூட ரமணியால் மனமார மகிழ்ச்சியுடன் கொண்டாட முடியவில்லை. தாத்தா அவனுக்கு ஆசை விதைகளை அள்ளிக் கொடுத்திருந்தாலும், அவை முளை விட்டு வளரக் காரணமாக இருந்தவன் ரங்கன். அந்த ரங்கன் விழாவில் கலந்து கொள்ளாமல் ஆஸ்பத்திரியில் விழுந்து கிடந்தான்.

அவன் மீண்டும் வெளிவந்த போது, ரமணி அவனை ஒரு புது மாருதியில் புது வீட்டுக்கு அழைத்து வந்தான்.

''ரங்கா இப்ப எப்படி இருக்கே?''

''அமாவாசை முடிஞ்சு சந்திரன் வளர்ற மாதிரி சுகமா இருக்கேன், ரமணி சார். ஆனா இது எத்தனை நாளுக்கு? மறுபடியும் எப்ப மூச்சுத் திணருமோ, எப்ப டாக்டர் இதே ஆஸ்பத்திரியில் வந்து வைத்தியம் பார்ப்பாரோ யார் கண்டது?''

''எல்லாம் காலப்போக்கிலே சரியாப் போயிடும் ரங்கா.''

''ஏன் ரமணி சார், உங்களுக்குள்ளேயே பொய் சொல்லிக்கிட்டு என்னைச் சமாதானப்படுத்தப் பாக்கறீங்க? இது நான் உசிரோட இருக்கிற வரை குணமாக முடியாத வியாதி. அப்பப்ப டாக்டர் கடி

காரத்துக்குச் சாவி கொடுத்திட்டிருக்கார். அப்பவெல்லாம் அது ஓடுது. ஒரு நாள் அவர் சாவி கொடுத்துட்டே இருப்பார்... ஆனா ஸ்பிரிங் ஒடிஞ்சுடும். இதை விடுங்க ரமணி சார். எல்லாரும் புது வீட்டுக்கு வந்துட்டாங்களா? தாத்தா சௌகரியமா இருக்காரா... அம்மாவுக்குப் பிடிச்சிருக்கா...?''

''எல்லாரும் வந்துட்டாங்க, ரங்கா. உன் மூணு வீடுதான் இப்ப காலியாயிருக்கு. மொதல்ல ரெண்டு வீடுன்னு சொல்லி முடிவிலே மூணா வாங்கிட்டே!''

''எனக்கு வேண்டியதெல்லாம், ஒரே ஒரு வீட்ல ஒரே ஒரு ரூம்தான். அதிலே பாயும் தலைகாணியும் இருந்தாப் போதும்!'' ரங்கன் சிரிக்க முயன்றான்.

அவனுடைய அவலமான மனநிலையை மாற்றும் எண்ணத்தில்—

''இந்த மாருதி ஏதுன்னு நீ கேட்கலையே?'' என்றான் ரமணி.

''உங்க தாத்தா உங்களுக்குப் பரிசா வாங்கிக் கொடுத்த கார். மாலு அம்மா மூந்தா நாளே ஆஸ்பத்திரியில் சொல்லிட்டாங்க... ஆமாம் என்னிக்கு முகூர்த்தம்... மாலு ஏதோ சொன்னாங்க... ஆனா அந்தச் சமயம் பார்த்து நான் அசதியிலே கண்ணை மூடிட்டேன்.''

''இதே தை மாசக் கடைசியிலே, ரங்கா. மீனாட்சி கலியாண மண்டபத்திலே.''

''இங்கிலீஷ் தேதி சொல்லுங்க ரமணி சார்...''

''பிப்ரவரி பத்து — வெள்ளிக்கிழமை.''

''நான் இப்பக் கடவுளை வேண்டிக்கறதெல்லாம் ஒண்ணே ஒண்ணுதான்.''

''அது என்னன்னு எனக்குத் தெரியும், ரங்கா.''

''அப்ப சொல்லுங்க.''

''அன்னிக்கு உடம்பு திடமா இருக்கணும். ஆஸ்பத்திரியிலே இருக்கக் கூடாது.''

''கரெக்டா சொல்லிட்டீங்க, ரமணி சார்... அந்த வடிவேலு சொந்தத் தொழில் ஆரம்பிச்சுட்டானா?''

''மூந்தா நாள்... உன்னையும் அழைச்சுட்டு வரச் சொல்லியிருந்தான். ஆனா நீ...''

''சரி விடுங்க... நான் எப்பவும் புத்தியிலே ரெண்டுங்கெட்டான். இப்ப உடல் நலத்திலேயும் ரெண்டுங்கெட்டான்'' என்ற ரங்கன், விரக்தியுடன் —

''ஏங்க நான் இருந்து யாருக்கு என்ன புண்ணியம்? என்னாலே உங்களுக்கு, மாலு அம்மாவுக்கு, ஏன் நம்ம அம்மாவுக்கு — எல்லாருக்கும் சிரமம்தானே?'' என்றான்.

''பேசாம வா, ரங்கா. உன்னை அமெரிக்காவுக்கு அனுப்பினா பூரணமாக் குணமாகுமான்னு யோசிச்சிட்டிருக்கேன்.''

இப்போது ரங்கன் சிரித்தான்.

''அமெரிக்காவானாலும் போகிற உடம்பு இதேதான் ரமணி சார். பணம் இன்னும் எவ்வளவு பாக்கி இருக்கு?''

''கவலைப்படாதே... அஞ்சு லட்சத்துக்குக் குறைவு இல்லாம இருக்கு.''

''அதை வெளிநாட்லே கொட்ட வேணாம் சார்.''

ரமணி பதில் பேசவில்லை.

கீழே ஓர் இரண்டு அறை வீடும், முதல் மாடியில் ஒன்றும் இரண்டாம் மாடியில் ஒன்றுமாக மொத்தம் மூன்று வீடுகள் ரங்கனுக்குச் சொந்தமாயின. உடல் அசதியையும் பொருட்படுத்தாமல் அவன் மூன்று வீடுகளுக்கும் போய் வந்து கொண்டிருந்தான். மாடி ஏறும்போதெல்லாம் மார்பு வலித்தது. மூச்சு இரைத்தது. ஆனால் அவன் லட்சியம் செய்யவில்லை.

நாட்கள் ஓடின.

மெல்ல மெல்ல அவனுக்குத் தன் உடல் நிலை முற்றிலும் தேறி விட்டதாகத் தோன்றியது. ஒரு தனி குஷியும் பிறந்தது.

ரமணியின் தாத்தாவைப் பார்த்து வரலாம் என்று ஓடினான்.

தாத்தா ரமணியுடன் பேசிக் கொண்டிருந்தார்.

''ஏண்டா படவா, கிரகப்பிரவேசம் நடந்தன்னிக்கு நீ உன் மூணு அத்தைகள் மூஞ்சியையும் பார்த்தாயோ?''

''ஏன் தாத்தா கேட்கறீங்க?''

''எரிச்சலும் அசூயையும் தாண்டவமாடித்து. கிழவன் போற கிழவன்தானே, போனாப் போகட்டும்னு என்னை நமஸ்காரம் பண்ணித்துகள்.''

''இதெல்லாம் உங்க கற்பனை, தாத்தா...''

''ஆளுக்கு அம்பதாயிரம்னு சொன்னேன் இல்லியா? மூணு பேருக்கும் எரிச்சல். வயத்தெரிச்சல். பிள்ளைகளுக்கு ரெண்டு லட்சத்துக்கு மேலே பெறுமானமுள்ள வீடு; எங்களுக்கு அம்பதாயிரமான்னு பொருமறா... ஏன் அம்பதாயிரம்னு கத்தணும்? அரை லட்சம்னு சொல்லப்படாதோ!''

ரமணி சிரித்தான்.

''அத்தைகளுக்கு நீங்க செஞ்ச காரியம் ஒரவஞ்சனையாப் படறது... நீங்க ஒண்ணு செய்யலாம் தாத்தா.''

''படவா நீ எனக்குப் புத்தி சொல்லப் போறியா?''

''அதெப்படி முடியும், தாத்தா? யோசனைதானே சொல்ல வர்றேன்.''

''என்னடா பெரிய யோசனை?''

**பி.வி.ஆர்.**

''அரையை ஒண்ணாப் பண்ணிடுங் களேன்!''

''அப்பவும் அதுகளுக்குத் திருப்தி வராதுடா...'' என்றார் தாத்தா.

பிறகு, ''அதோ ஷெல்பிலே ஒரு நீளக் கவர் இருக்கு. அதை எடு!'' என்றார்.

ரமணி எடுத்தான்.

''பிரிச்சுப் படி... உரக்கப் படிச்சுத் தொலைக்காதே... உன் சித்தப்பன் பெரியப் பன் வீட்டு மனுஷா வந்து தொலையப் போறா... மனசுக்குள்ளே படிச்சுக்கோ.''

ரமணி அவசர அவசரமாகப் படித்தான்.

''என்ன தாத்தா இது...''

''நான் எப்பப் புறப்பட்டுப் போவேன்னு யார்டா கண்டா... பொறந்த அன்னிக்கே போற தேதிக்கு ரிஸர்வேஷனும் ஆயாச்சு. உன் கலியாணம் முடியற வரை இருக்க ணும்னு ஓர் ஆசை...''

''உங்க வீட்டையும் எல்லாப் பணத்தை யும் என் பேர்ல எழுதி வைச்சிருக்கீங்களே தாத்தா...''

''என் இஷ்டம்.''

''பெரியப்பா, சித்தப்பா, பெரியம்மா, சித்தி அவங்க பிள்ளை, பெண்கள் எல்லா ரும் என்னைக் கரிச்சுக் கொட்டுவாங்க, தாத்தா!''

''எல்லாத்தையும் ஒரு மூட்டையிலே போட்டுக் கட்டி சமுத்திரத்திலே எறி. நான் எழுதினா எழுதினதுதான். நீ படிச்சது நகல் தான். ஒரிஜனலை ரிஜிஸ்தர் பண்ணி, ரிஜிஸ்தார்ட்டயே டெபாசிட் பண்ணிட் டேன்'' என்று சொன்ன அவர், ''இப்ப எவ்வளவுடா நம்ப ஜாயின்ட் அகௌண்ட்லே பணம் இருக்கு?''

''பன்னண்டு லட்சம்.''

''கன்னாபின்னான்னு செலவழிச்சுத் தொலைக்காதே...''

''தாத்தா... இந்த உயிலை...''

''கை வைக்க மாட்டேன்! எழுதினா எழுதினதுதான்!''

''பூரா எல்லாத்தையும் அனுபவிக்க எனக்கு என்ன அருகதை இருக்கு, தாத்தா?''

''நீ சின்ன வயசிலேர்ந்தே எங்கிட் டேர்ந்து எதையும் எதிர்பார்க்காம, தாத்தா, தாத்தான்னு உசிரை விட்டிருக்கேடா, படவா... பிறத்தியார் காசுக்கு நீ என்னிக் குமே ஆசைப்படலேடா, ராஸ்கல்.''

ரமணியின் கண்கள் கனத்தன. தாத்தா தம் உணர்ச்சிகளை உள்ளடக்கிக்கொண்டு கத்துகிறார் என்பதை மட்டும் அவன் புரிந்து கொண்டான்.

''ரமணி சார் இங்கேதான் இருக்கீங் களா?''

ரங்கன் பிரவேசித்தான்.

''யார்டா, ரங்கனா... நீ எப்படா புகுந்த விடு போய்த் திரும்பினே?'' என்றார் தாத்தா.

''ஆஸ்பத்திரியைச் சொல்றார்'' என் றான் ரமணி, ரங்கன் விழிப்பதைக் கண்டு.

''நாலு நாள் முன்னாடி ஐயா.''

''உன் தலைவிதி... லட்சம் லட்சமாப் பணம் இருந்தும் அனுபவிக்க முடியலே, பார்த்தியா..''

''நாம ஆசைப்பட்டதைக் கொடுத்த கடவுள், நாம ஆசையே படாததையும் கொடுக்கிறார்னு இப்பத்தான் புரிஞ்சுக்கிட் டேன், ஐயா!'' என்றான் ரங்கன்.

''அப்ப உனக்கும் ஞானம் பிறந்தாச் சுன்னு சொல்லு.''

''ஐயா சௌகரியமா இருக்கீங்களான்னு விசாரிக்க வந்தேன்.''

''உன் சௌக்கியத்தை விசாரிக்க எட்டுப் பேர் ஆஸ்பத்திரிக்கு வர வேண்டியிருக்கு. நீ என்னை விசாரிக்க வந்திருக்கியாக்கும்.''

''இப்ப நான் திடமா இருக்கேன், ஐயா.. உங்க காலைப் பிடிச்சு விடட்டுமா?''

''உன் புத்தி போகாதே... இப்ப நீ ஒரு லட்சாதிபதிடா... மூணு வீட்டுக்குச் சொந்தக்காரன்டா!''

''அது வேறே, இது வேறே!'' என்றான் ரங்கன். பிறகு, ''அடடா, ரமணி சார் எங்கே? சொல்லிக்காமப் போயிட்டாரே'' என்றான்.

''அம்மாவைப் பார்க்கப் போயிருப் பான்!''

''ஐயா!''

''என்னடா!''

''ரமணி சாருக்குக் கலியாணம் நடக்கப் போவுது. அவர் எனக்கு மனுஷ தெய்வமா இருக்கார். நான் எதனாச்சும் செய்யணும்!''

''செய்யேன்.''

''நீங்க உதவி செய்யணும்.''

''என்ன உதவி?''

''டாக்டர் திருமலை வூடு தெரியும். ஆனா நல்ல வக்கீல் வூடு எங்கேயிருக்குன்னு தெரி யாது.''

''எதுக்குடா உனக்கு வக்கீல்?''

''தேவைப்படுது.''

''அனந்தராமன்னு பக்கத்திலே இருக் கார். நம்ப பால்பூத் இருக்கு இல்லியா? அதுக்கு நேர் எதிர்த்தாப்பல இருக்கு. நான் அனுப்பினேன்னு சொல்லு. உனக்கு வேண் டியதைச் செய்து தருவார்.''

''சரி, ஐயா... நான் வரேன் ஐயா...!'' என்ற ரங்கன், ''நான் வக்கீல் பத்தி விசாரிச் சது ரமணி சாருக்கு இப்பத் தெரிய வேணாம்!'' என்றான்.

''எனக்கு இதான் தொழில்னு நினைச் சியா கழுதே!'' என்றார் தாத்தா.

முகூர்த்தம் நல்லபடியாக நடந்தேறி யது. தாத்தா, அப்பா, அம்மா இன்னும் மற்ற

# உங்கள் பால்காரரர் இரவு 10 மணிக்கு பால் கொண்டு தருவாரா?



என் பால்காரரர் தருவார்

உங்கள் மகன் இரவு வெகுநேரம் படிக்க விரும்புகிறான். அவனுக்கு காப்பி வேண்டும். பாட்டியோ இரவு சாப்பாட்டுக்குப் பதிலாக பால் வேண்டும் என்கிறார். அந்த நேரத்தில் எங்கு சென்று பால் வாங்குவீர்கள்? அமுல் மில்க் பவுடர் கைவசம் வீட்டில் வைத்திருங்கள். கவலையே இருக்காது. யால் தாமதமாக வராது. தீர்ந்து போகாது. திரிந்தும் போகாது.

அமுல் மில்க் பவுடர் கொண்டு தூய்மையான, ஆடை நிறைந்த பாலை நொடியில் தயாரித்து விடலாம். அப்படியே அருந்தலாம். தேனீர், காப்பி, தயிர், மோர், பாயசம், கஸ்டர்ட், கேக், ரஸகுல்லா... எது வேண்டுமோ தயாரிக்கலாம்.




## அமுல் மில்க் பவுடர்

**வீட்டினுள் இயங்கும் ஒரு பால்பண்ணை.**

விற்பனைக்கு விடுப்போர் : குஜராத் கோ. ஆப்பரேடிவ் மில்க் மார்கெடிங் ஃபெடரேஷன் லிட்., ஆனந்த் 388 001

OPERATION FLOOD

RADEUS/AMP/1-88-TAM

பெரியவர்களிடமெல்லாம் ஆசிர்வாதம் வாங்கிக் கொண்டபின், ''இப்ப நீயும் நானும் இதே மாலையும் கழுத்துமா ரங்கனைப் பார்க்கப் போகிறோம்!'' என்றான் ரமணி.

''நானும் இதையேதான் நினைச்சேன்!''

''சரி, வா...''

''படவா, எங்கேடா போறே?'' என்று தாத்தா கேட்டார்.

''ரங்கனைப் பார்த்துட்டு வர்றோம், தாத்தா!''

''சீக்கிரம் வந்து சேரு. நீ வந்தப்புறம்தான் எனக்குச் சாப்பாடு.''

ஆஸ்பத்திரியை அடைந்த போது காலை மணி பதினொன்று.

ரங்கன் கட்டிலில் சாய்ந்து உட்கார்ந்திருந்தான்.

''ரங்கா!''

''ரமணி சார்... ரமணி சார்.''

''அழாதே ரங்கா!''

''நீங்க தாலி கட்டறப்ப நான் இல்லாமப் போயிட்டேனே ரமணி சார்!''

''இதுக்காக சின்னக் குழந்தை மாதிரி அழலாமா... இப்ப எங்க ரெண்டு பேரையும் பாரு. மாலையும் கழுத்துமா ஸ்பெஷலா உன்னைப் பார்க்கணும்னு வந்திருக்கோம். மத்தவங்க எங்களை வேடிக்கை பார்க்கறதையும் லட்சியம் செய்யாம வந்திருக்கோம்... எங்க ரெண்டு பேரையும் நீ இப்ப வாழ்த்தணும்!''

பொலபொலவென்று கண்களிலிருந்து நீர் கொட்ட, ரங்கன், ''எனக்கு என்ன சொல்றதுன்னு புரியலே சார்... ஆனா ஒண்ணு, நான் என்னென்னிக்கும் உங்க ரெண்டு பேர் மனசிலேயும் இருக்கணும்!'' என்றான்.

''இருப்பே!''

''நிச்சயமா இருப்பே!'' — மாலு.

''உங்க கலியாணப் பரிசை நான் என்னிக்கோ தயார் பண்ணிட்டேன்!'' — சொன்ன ரங்கன் தலையணைக் கடியிலிருந்து, ஒரு நீண்ட உறையை எடுத்தான்.

## மாதம் ஒரு தொகுதி

# திருவாடானைத் தொகுதியைச் சுற்றிப் பார்க்க வருகிறோம்!

'மாதம் ஒரு தொகுதி' என்ற கல்கியின் திட்டத்தின் கீழ் நடந்த ஒன்பதாவது குலுக்கலில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள தொகுதி, இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள திருவாடானை தொகுதி.

இத் தொகுதியில் தமக்கு அடுத்தபடியாக வாக்குகள் பெற்ற தி. மு. க. வேட்பாளரை விட 1,850 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி பெற்றிருப்பவர் இ. காங்கிரஸைச் சேர்ந்த கே. இராமசாமி அம்பலம்.

திருவாடானைத் தொகுதி மக்கள் எந்த நம்பிக்கையோடு கே. இராமசாமி அம்பலத்தைத் தேர்ந்தெடுத்தார்களோ, அந்த நம்பிக்கையைக் காப்பாற்றும் வகையில், கொடுத்த வாக்குறுதிகளைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறாரா அல்லது மறந்து போய் விட்டாரா?

திருவாடானைத் தொகுதியைச் சேர்ந்த அனைவரும் தங்கள் எம். எல். ஏ.வான கே. இராமசாமி அம்பலத்திடம் கேட்க நினைக்கும் அத்தனை கேள்விகளையும் எங்களுக்கு எழுதியனுப்பலாம். தொகுதிக்கு அவர் செய்யும் வளர்ச்சிப் பணிகள் ஏதேனும் இருந்தால் அவற்றையும், கூடவே தொகுதியின் வளர்ச்சிக்கான தங்கள் ஆலோசனைகளையும் எழுதலாம்.

திருவாடானைத் தொகுதி வாக்காளர்களே, நீங்கள் எழுதும் ஒவ்வொரு விஷயத்தையும் எம். எல். ஏ. இராமசாமி அம்பலத்திடம் எடுத்துச் சொல்லி விவாதிப்போம். தொகுதியை நேரடியாக வந்து சுற்றிப் பார்த்தும் உண்மைகளை ஆராய்வோம்.

கடைசியாக எங்கள் அனுபவங்களையெல்லாம் ஒன்று சேர்த்துக் கல்கியில் கட்டுரையாக வெளியிடுவோம்.

**திருவாடானைத் தொகுதியிலுள்ள வாசகர்களின் கடிதங்கள் கல்கி அலுவலகத்துக்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 27.10.90.**

உறையின் மேல் 'மாதம் ஒரு தொகுதி' என்று மறவாமல் குறிப்பிட்டு உடனடியாக எழுதியனுப்புங்கள்.

— ஆசிரியர்.

## "கோட்டை விட்டார்கள்!"

## "போட்டோ பிடித்தார்கள்!"

**சுமித்ராவை அடித்துப் போட்டுவிட்டு வில்லன்கள் சத்யராஜுடன் சண்டை போடுகிறார்கள். அடுத்த காட்சியிலேயே சுமித்ரா மண்டையில் கட்டுடன் வருகிறார். மகனை வில்லன்கள் அடித்துக் கொண்டிருக்கும் போது எந்தத் தாய் தனக்கு பாண்டேஜ் போட்டுக் கொண்டிருப்பாள்?**

**— இப்படிப்பட்ட பொருத்தமில்லாக் காட்சிகளை இனம் கண்டு, "கோட்டை விட்டார்கள்!" என்ற தலைப்பில் இதே ஐந்தாறு வரி அளவில் மாணவர்கள் எழுதி அனுப்பலாமே என்ற யோசனையை வழங்குகிறவர் கல்கி வாசகர் கும்பகோணம், ஆர். வசந்தகுமார்.**

**முடிவு தேதி: 13.10.90.**

**போட்டோகிராஃபர்களை ஊக்குவிப்பது இங்கே குறைவாக உள்ளது. சிறப்பான, வேடிக்கையான, அபூர்வமான காட்சிகளைப் படம் பிடித்து அதற்கு ஓரிரு வரிகள் கமெண்ட்டும் எழுதி அனுப்பும் மாணவர்களுக்குப் பரிசு வழங்கலாமே என்று யோசனை கூறுகிறவர் கல்கி வாசகர் கடையநல்லூர் கணேசன்.**

**முடிவு தேதி: 15.12.90.**

**(கல்லூரி விலாசம் குறிப்பிடவும்.)**

**வாசகர் யோசனைகளுக்குப் பரிசு அனுப்பப்படுகிறது. மாணவர்களுக்கும் முதல் பரிசும் ஆறுதல் பரிசுகளும் உண்டு. தவிர, பொன் விழா மேடையில் ரூ. 2500 சிறப்புப் பரிசு பெறும் வாய்ப்பு, மாணவ வாசகர், மாணவரல்லாத வாசகர் ஆகிய இரு தரப்பினருக்குமே உள்ளது.**

**குட் லக்!**

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**

50

இருவரிடமும் நீட்ட அவர்கள் வாங்கிக் கொண்டார்கள்.

"என்ன இது, ரங்கா!"

"மாலு அம்மாகிட்டக் கேளுங்க. அவங்களுக்குத் தெரியும்."

திடீரென்று டாக்டர் திருமலை பிரவேசித்தார்.

"ரமணி, சாயங்காலம் ரிசப்ஷனுக்கு வரேன்... ஏன் ரங்கா உட்கார்ந்துட்டே... படுத்துக்கணும். பேசப்படாது..."

"சரி டாக்டர்."

எல்லோரும் வெளியே வந்தார்கள்.

"என்ன டாக்டர், இப்படியாயிடுத்தே!"

"அப்படித்தான் ஆகும்... வீடு, ஆஸ்பத்திரின்னு மாத்தி மாத்திப் போய் வந்துட்டிருப்பான்" என்றார் டாக்டர்.

"இது மாதிரி எவ்வளவு காலத்துக்கு?"

"உசிர் போற வரைக்கும்!"

"என்ன டாக்டர்...."

"ஒரு வருஷம். மிஞ்சினா பதினெட்டு மாசம..."

"கவலையா இருக்கு டாக்டர்."

"இப்பத்தான் தாலியைக் கட்டியிருக்கே... ஃபர்ஸ்ட் நைட்டை நெனைச்சுட்டு ஓடு... யார்தான் சாகாம சாசுவதமா இருக்கா...? போனா, இவனுக்குத்தான் விடுதலை."

இருவரும் கலியாண மண்டபத்துக்குத் திரும்பினார்கள்.

"மாலு... இதுக்குள்ளே என்ன இருக்குன்னு எனக்குத் தெரியும்!"

"என்ன?"

"உயில்!"

"கரெக்ட்!"

"எல்லாம் என் பெயருக்குத்தானே?"

"கரெக்ட்."

"ரங்கன் உசிரோட இருக்கிற வரைக்கும் இருக்கட்டும். ஒரு நாள் அவன் போயிடுவான்.. அந்த நாள் பொறக்கறப்ப நம்ப கண்லே கண்ணீர் வரப்படாது. மனசார அஞ்சலி செய்துட்டு, அவன் சொத்தை நல்ல வழியில் அவன் பெயர்லேயே செலவு செய்வோம்..."

"அதைப் பத்தி இப்ப என்ன யோசனை, ரமணி! அவனோட பணத்திலே நயாபைசா நீங்க கை வைச்சதில்லே... அவன் போனாலும் உங்க குணம் மாறாது..."

"மாறணும்னு சொல்றியா?"

"மாறிட்டா அப்புறம் நீங்களும் ஒரு சாதாரண மனுஷன்தானே... நான் இப்ப ஒரு சாதாரண மனுஷனுக்கா மனைவியாயிருக்கேன்?" என்றாள் மாலு.

ரமணி மௌனமானான்.

கழுத்து மாலையை விட மனத்தில் மாலையாக விழ்ந்து விட்ட ரங்கன் கனமாகத் தோன்றினான்.

**(நிறைவு பெற்றது)**

# வெற்றிக் கதைகள்

படித்து விட்டு வேலை கிடைக்க
வில்லையே என்று வேதனைப்படுவோர்
பலர். எல்லாருமே அம்பானியாகவோ,
அனந்தராமகிருஷ்ணனாகவோ, விஜய்
மல்லையாவாகவோ, பொள்ளாச்சி
மகாலிங்கமாகவோ மாறிவிட முடியாது.
ஆனால் நம்மைச் சுற்றிப்
பார்வையைச் செலுத்தினால் ஒன்று
மில்லாத நிலையிலிருந்து ஓரளவு உயர்ந்து
தங்களது வளர்ச்சியுடன் நாட்டின்
வளர்ச்சிக்கும் உதவியுள்ள
பலரைக் காணலாம். தமிழ்நாட்டின்
இளைஞர்கள் தன்னம்பிக்கை பெற
அத்தகைய சிலரது வெற்றிக் கதைகள்
இங்கே இடம் பெறுகின்றன.

# இன்று நான் நெம்பர் ஒன்!



— 'ஷீன்லாக்' அதிபர் ஜான் பீட்டர்

"1960 – ஆம் வருடம். நான் பெயின்ட் விற்பனையில் ஒரு சிறிய ஏஜென்சி எடுத்த போது, பெயின்ட் செய்வதற்கு முன்னால் பயன்படுத்தும் 'தின்னர்'தான் (பெயின்ட் விரைவில் உலர உதவுவதுதான் 'தின்னர்.') விற்பனைக்கு எடுத்துக் கொண்டிருந்தேன். அப்போதெல்லாம் யாருமே அதன் தரத்தில் அக்கறை காட்டாதிருந்தனர். அதனால் மார்க்கெட்டுக்குப் போகும் போது பலரும் புகார் கூறி வந்தார்கள்.

என் தகப்பனார் சொன்னார்: 'எதற்கு இந்த வீண் அலைச்சல் உனக்கு? பேசாமல் என் கடை வியாபாரத்தைக் கவனித்துக் கொண்டிரு!' நான் இளைஞன். அப்பா இப்படிச் சொன்ன போது, அதையே ஒரு சவாலாக எடுத்துக் கொண்டேன்.

சில மாதங்களுக்குப் பிறகு, ஏ. சி. காலேஜ் ஆஃப் டெக்னாலஜியில் உள்ள ஒரு பேராசிரியர் எனக்கு நண்பரானார். அவரிடம் நான் தரமான 'தின்னர்' இல்லாததையும், இருப்பதை விற்க முடியாமல் அவஸ்தைப்படுவதையும் எடுத்துச் சொன்னேன்.

'ஏன் நீயே தயாரிப்பில் இறங்கக் கூடாது?' என்று கேட்டார் அந்தப் பேராசிரியர்.

இந்தக் கேள்விதான் என் பிஸினஸ் வாழ்க்கையில் ஒரு திருப்புமுனை.

மிகக் கடினமான துறைதான். 'பொறுமையோடு செயல்பட்டால் வெற்றி கிடைக்கும்' என்றார் அவர். ஒரு வழிகாட்டி மாதிரி, நான் இது சம்பந்தமாக எந்தெந்தப் புத்தகங்கள் படிக்க வேண்டும் என்று சொன்னார். ஏராளமான புத்தகங்கள்...

சிறு தொழில் இன்ஸ்டிடியூட் வாயிலாக லாபரேடரிகளின் உதவி கிடைத்தது. நானே 'தின்னர்' தயாரிக்கத் தொடங்கினேன். புதிய தயாரிப்பு என்றாலே விற்பனையாளர்கள் முதலில் ஏற்க மாட்டார்கள். விலை வேறு ஒரு பிரச்னை.

யோசித்தேன். உபயோகிப்பாளரையே நேரடியாகப் பார்த்தால் என்ன? பார்த்தேன்.

> "லாபம் ஒன்று மட்டுமே நோக்கமாக இருக்கக் கூடாது!"

ஒரு வழியாக என் தயாரிப்புக்கு நிலையான மார்க்கெட் கிடைத்தது. 1970 – இல் அம்பத்தூர் தொழிற்பேட்டையில் ஒரு தொழிற்சாலையையும் அமைத்தேன்.

ஆறே வருடங்களில் மறுபடி ஒரு பிரச்னை முளைத்தது. பொதுவாகவே பிஸினஸ் சற்று மந்தமாக இருக்க, ஜி. டி. நாயுடுவின் 'பிரெஞ்ச் பாலிஷ்' போட்டிக்கு வந்தது. நான் சோர் வடையவில்லை. அதைத் தரத்தில் போட்டியிட்டு, நானும் பிரெஞ்ச் பாலிஷ் தயாரிப்பில் ஈடுபட்டேன்.

ஆனால் வெறுமனே தயாரிப்பு – விற்பனை என்று இருந்தால், உபயோகிப்பாளரின் நேரடித் தொடர்பும் அவர்களுடைய முழு ஆதரவும் கிடைக்காது என்று தோன்றிற்று. எனவே, தச்சுத் தொழிலாளர்கள் அத்தனை பேரையும், மிகப் பெரிய நட்சத்திர ஓட்டலில் விருந்துக்கு அழைத்தேன். அவர்கள் வாழ்நாளில் அப்படி ஓர் ஓட்டலுக்கு அவர்களாகப் போக மாட்டார்கள். அதனால் அவர்களை அங்கே அழைத்து, என் தயாரிப்புக்களின் உயர்வான தரத்தை எடுத்துச் சொல்லி, அவர்களுக்கு விருந்து வைத்து, அவர்கள் தொழிலுக்குப் பயன்படும் சாமான்களடங்கிய ஒரு 'கிட்' கொடுத்து, அதிலேயே பாலிஷ் வகையறாக்களை வைத்து அன்பளிப்பாக ஒவ்வொருவருக்கும் கொடுத்தேன். கூடவே, என் தயாரிப்புக்களைப் பொதுமக்களின் பார்வைக்குக் கொண்டுவர, டீ. வி. விளம்பரம் செய்தேன்.

பிறகு விற்பனையாளர்களை எல்லாம் அழைத்து, அவர்களை நேரில் சந்தித்து, என் தயாரிப்புக்களைப் பற்றி எடுத்துச் சொன்னேன். இந்த மூன்று முயற்சிகளுமே அப்போது புதுமையானவை; அவற்றுக்கு நல்ல பலன் கிடைத்தது.

''ஓரளவு பொருளாதாரச் செழிப்பு வந்த பிறகு, கார் பெயின்ட் தயாரிப்பில் ஈடுபட நினைத்தேன். ஒரு நலிவுற்ற ஆலையை விலைக்கு வாங்கினேன். தேவையான மாற்றங்கள் செய்து, இரண்டு வருடங்கள் பரிசோதனை விற்பனை எனப்படும் 'டெஸ்ட் மார்க்கெட்டிங்' செய்தேன். பிறகு ஜூலை 87 இல் விற்பனைக்குக் கொண்டு வந்தேன். விற்பனையாளர்களுடன் நான் ஏற்கெனவே ஏற்படுத்திக் கொண்டிருந்த இறுக்கமான தொடர்பு, என் புதிய பொருளின் விற்பனையிலும் எனக்கு உதவியது. அறிமுகப்படுத்திய 72 வண்ணங்களில் சிலவற்றை நான்தான் முதன் முதலாக அறிமுகப்படுத்தினேன்!'' என்கிறார்,

இன்று, ஸ்பினாக்ஸ் கெமிகல் இன்டஸ்ட்ரீஸ் லிமிடெட்டின் மானேஜிங் டைரக்டரான ஜான் பீட்டர்.

தமக்கு ஆரம்ப நாளில் உதவிய ஸ்கூட்டரை இன்னும் சென்டிமென்டலாக, வீட்டிலேயே வைத்திருக்கும் பீட்டரின் நிர்வாகத்தின் கீழ் இப்போது ஐந்து கிளை ஆபீசுகள், இயங்குகின்றன. ஒரிசாவில் ஆறாவது கிளை திறக்க ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.




''சிறு வயதிலேயே எனக்கு ஒரு சுபாவம் உண்டு. எதிலும் நான்தான் முதலில் வரவேண்டும் என்று மனசுக்குள் ஒரு பொறி. அது நான் வளர்ந்து பெரியவனாகி, வியாபாரத்தில் இறங்கியதும், நான்தான் இந்தத் துறையில் இந்தியாவிலேயே முதலில் வர வேண்டும் என்ற வைராக்கியத்தை மனத்தில் வளர்த்தது. இந்த முயற்சிகளில் எனக்குச் சில கொள்கைகளும் இருந்தன.

- பிசினஸில் நேர்மையாக இருக்க வேண்டும்.
- லாபம் ஒன்று மட்டுமே பிரதானமான நோக்கமாக

இருக்கக் கூடாது.

- தொடர்ந்து, தரத்தில் உயர்வைக் கடைப்பிடிக்க வேண்டும்.
- தட்டுப்பாடில்லாமல் மார்க்கெட்டில் பொருள் கிடைக்கச் செய்ய வேண்டும்.
- தொழிலில் உண்மையான ஈடுபாடு இருக்க வேண்டும்.
- சொந்தச் சுகங்களுக்கு ஆசைப்படாமல், இடர்களை எல்லாம் மறந்துவிட்டுத் தொழில் செய்ய வேண்டும்.
- அநாவசியச் செலவுகளைக் கட்டுப்படுத்த வேண்டும்.

தொழில் ஆரம்பித்து வளர்ந்த போது என் ஆடிட்டர் சொன்னார்: 'தொழிலில் நீங்கள் உண்மையாக முன்னேற வேண்டுமானால் நம்பர் டூ அக்கவுண்ட் வைத்துக் கொள்ளாதீர்கள்!' இதை நான் வார்த்தைக்கு வார்த்தை கடைப்பிடிக்கிறேன். அதனால் மனநிம்மதி கிடைப்பது மட்டுமல்ல, எந்த அதிகாரிக்கும் நான் பயப்பட வேண்டிய நிலைமையும் உருவாகாது அல்லவா?''



# மனதில் உறுதி வேண்டும்!

— 'பி. ஆர். டீ ஸ்டால்ஸ்' பாபு



''முப்பத்துமூன்றுவருடங்களுக்கு முன், ஒரு ஜூலை மாதக் காலையில் நான் சென்னை வந்து சேர்ந்த போது, என் கையிலிருந்தது ஒரே ஓர் அணாதான்!'' என்கிறார் பி. ஆர். டீ ஸ்டால்களின் அதிபர் பாபு. அப்போது அவர் வயது பதின்மூன்று!

பாபு சிறு வயதில் நிறைய சினிமா பார்ப்பதுண்டு. அதனால் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த போதே, சினிமாவில் சேர வேண்டும் என்று ஆசை. சொந்த ஊர் கொட்டர்ரக் கரையிலிருந்து மதுரைக்கு வந்து ஒரு மாதம் தங்கியிருந்த போது கையிலிருந்த பணம் எல்லாம் செலவாகி விட்டது. மோதிரம் ஒன்றுதான் கையிருப்பு. அதையும் விற்றுப் பணமாக வைத்திருந்த போது, ஒருவர் பரிச்சயமானார். சென்னையில் சினிமா உலகில்

* சகோதரர் ராஜனுடன் பாபு

தமக்குப் பலரையும் தெரியும் என்று சொல்லி, பணத்தை மெல்ல வாங்கிக் கொண்டு, சென்னையில் ஒரு விலாசத்தைக் கொடுத்து விட்டுத் திண்டுக்கல் போய்விட்டார்!

சென்னையில் வந்து அந்த விலாசத்தில் தேடிய போதுதான் தெரிந்தது — அது பொய்யான முகவரி என்று.

கையில் இருந்ததோ ஒரே அணா. மேற்கொண்டு என்ன செய்வது?

டவுனில், ஓர் ஓட்டலில் சேர்ந்து வேலை செய்ய ஆரம்பித்தார் பாபு.

''1960 இல், திருவல்லிக்கேணியில் ஒரு காய்கறிக் கடை விலைக்கு வந்தது. 'எடுத்து நடத்தேன்?' என்று சொன்னார்கள் நண்பர்கள். துணிந்து எடுத்தேன்.

''அந்தக் காய்கறிக் கடையை நான் நடத்திய போது, பக்கத்தில் ஒரு சிறிய ஓட்டல் இருந்தது. அதைச் சரிவர நடத்த முடியாமல், வாரத்துக்கு ஒரு முதலாளி என்று மாறிக் கொண்டிருந்தார்கள். அந்த ஓட்டலுக்கு நான் கறிகாய் விற்றுக் கொண்டிருந்தேன். அது இன்னொருவருக்கு விற்கப்படவிருக்கும் போது, 'நான் எடுத்து நடத்துகிறேன்' என்று முன் வந்தேன். அது ஒரு பெரிய டீக்கடை அளவிலான ஓட்டல்தான்.

''சிறிய மாற்றங்கள் செய்து, வர்ணம் பூசி ஓட்டலை ஆரம்பித்தேன். நானோ காங்கிரஸ் அபிமானி. அதுவோ தி. மு. க. ஆதரவு அதிகமான இடம்! எனவே, 'நீ எப்படி இங்கே டீக்கடை நடத்திவிடுவாய், பார்த்து விடுகிறோம்' என்று சவால் விட்டார்கள். ரௌடிகளை ஏவிவிட்டுக் கலாட்டா செய்தார்கள். அப்போது நான் இளைஞன். துடிப்பு அதிகம். பொறுமையாக இருப்போம்; என்னதான் நடக்கிறது, பார்ப்போம்' என்று கையைக் கட்டிக் கொண்டு இருக்கவில்லை. அத்தனை ரௌடிகளையும் எதிர்த்து நின்று, ஒழித்துக் கட்டினேன்.



''அதுதான் முதல் டீ ஸ்டால். முதலில் மாடர்ன் டீ ஸ்டால் என்றுதான் பெயர் இருந்தது. பிறகு தம்பி ராஜனும் வந்து சேரவே, பாபு — ராஜன் என்ற பெயர்களில், உள்ள முதல் ஆங்கில எழுத்துக்களைச் சேர்த்து 'பி. ஆர். டீ ஸ்டால்' என்று ஆரம்பித்தோம்.

''டீ. வி. வந்த புதிதில், திருவல்லிக்கேணி பெரிய தெருவில், எங்கள் கடையில் முதல் முதலாக டீ. வி. கொண்டு வந்து வைத்த போது கூட்டம் அலைமோதியது. போக்குவரத்துக்கு இடைஞ்சலாக இருக்கும் அளவுக்குத் தெருவில் கூட்டம். போலீஸ் வந்து எங்களை மிரட்டியது! இப்படி, முதல் முதலாக டீ ஸ்டாலில் டீ. வி. கொண்டு வந்தது நான்தான். இது சில செய்தித்தாள்களிலும், பத்திரிகைகளிலும் வந்து ஓரளவு பெயர் பரவியது. வியாபாரம் நன்றாக நடந்தது. படிப்படியாக வளர்ந்தோம். இன்று —

''திருவல்லிக்கேணியில் நான்கு; ராயப்பேட்டையில் இரண்டு; பெரம்பூரில் இரண்டு... என்று எட்டு ஸ்டால்கள் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருக்கின்றன. ஒன்பதாவதுக்கு வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. தினசரி நானோ, தம்பியோ எல்லா ஸ்டால்களிலும் போய் ஒரு தடவை பார்த்து விடுகிறோம்.''

''உங்கள் வளர்ச்சிக்கு என்ன காரணம் சொல்வீர்கள்?''

''நான் வளர்ந்ததற்கு நாலே நாலு காரணங்கள்தான் சொல்லுவேன். 1. மன உறுதி, 2. நேர்மை, 3. நாம் முன்னேறுவதற்காக மற்றவர்களை அழிக்காமல் இருப்பது, 4. தரமான, ருசியான பொருள்களையே விற்பனை செய்வது!''

இன்று பாபு, டீ ஸ்டால் உரிமையாளர்கள் சங்கத் துணைத் தலைவர்.

# நாணயம் இருந்தால் வளரலாம்!

— 'வைரம்' வடிவேல் செட்டியார்



ஒருநாள் 'வைரம்' ஐஸ் கம்பெனிக்கு, அதன் முதலாளியைத் தேடி ஒருவர் வந்தார். தங்கள் விழா ஒன்றிற்கு, மறு நாள் கப் ஐஸ்க்ரீம் வாங்க ஆர்டர் கொடுக்க வந்திருந்தார்.

''முதலாளி எங்கே?'' என்றார் முன்னால் நின்று கொண்டிருந்தவரிடம்.

''உட்காருங்கள். என்ன வேண்டும்?''

''முதலாளியிடம் பேச வேண்டும். அவரை வரச் சொல்லுங்கள்!''

''நான்தான் முதலாளி. உங்களுக்கு என்ன வேண்டும்?''

வந்தவர் அவரை மேலும் கீழும் பார்த்தார். முதலாளியின் தோற்றம் அவருக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு, முண்டா பனியன் அணிந்திருந்தார். பனியனில், வேட்டியில், உடம்பில் எல்லாம் மிஷினை ரிப்பேர் பார்த்ததால் ஏற்பட்ட மசகுக் கறைகள்.

''தொழிலாளியோடு தொழிலாளியாக ஆரம்பத்தில் உழைக்க வேண்டும். அப்போதுதான் தொழிலாளர் பிரச்னைகள் எழாது. ஒரு தொழில் வளர, இந்தச் செயல் முறை நிச்சயம் கைகொடுக்கும்'' என்கிறார் வைரம் அச்சகம் வடிவேல் செட்டியார்.



தேவகோட்டையிலிருந்து 1951 இல் சென்னைக்கு வந்தவர் வடிவேல். முதலில் கரூரிலும், பிறகு தேவகோட்டையிலுமாகப் பள்ளிப் படிப்பை முடித்தவர். பள்ளியிறுதியில் அந்த ஆண்டின் சிறந்த மாணவராக, ராஜா சர் அண்ணாமலை செட்டியார் தங்கப் பதக்கம் பரிசாகப் பெற்றவர். (இவரது பள்ளித் தோழர்கள் தமிழ்வாணனும், 'வானதி' திருநாவுக்கரசும்.)

மனைவியின் ஊரான மதுரையில், முதலில் சிறிய முதலீடு செய்து உழைப்புப் பங்காளியாகக் காப்பித் தூள் கம்பெனி ஒன்றில் சேர்ந்ததுதான் வடிவேல் வைத்த முதல் அடி. 1950 இல் சென்னை வந்தபோது, ஸ்ரீ முருகன் ஐஸ் கம்பெனியை, தம் மைத்துனர் முத்தையாவுடன் சேர்ந்து விலைக்கு வாங்கினார்.

மிகவும் கடினமாக உழைக்க வேண்டியிருந்தது. காலணா,

அரையணா, ஓரணா என்று சில்லறையாக ஐஸ் விற்றுப் பணம் சம்பாதிப்பது எளிதான காரியமல்ல. மிகவும் சிக்கனமாக வாழ்க்கை நடத்த வேண்டியிருந்தது.

1958 இல், 'வைரம் ஐஸ் கம்பெனி' என்று பெயர் மாற்றம் செய்து, குச்சி ஐஸ் மட்டுமின்றி, தரமான கப் ஐஸ் வகைகளை யும் தயாரித்தார். இந்தச் சமயத்தில்தான் கவிஞர் குயிலன் தொடர்பு ஏற்பட்டது. புத்தக வெளியீட்டுத் துறை நுணுக்கங் களைப் புரிந்து கொள்ளும் வாய்ப்பு நிறையவே கிடைத்தது.

'**வை**ரம் பதிப்பகம்' 1964 இல் உருவாகியது. பல பிரபல ஆசிரியர்களின் நூல்கள் இங்கிருந்து வெளியிடப்பட்டன. இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, பாட நூல்களை வெளியிட்டால் தான் புத்தக வியாபாரத்தைப் பெருக்க முடியும் என்ற முடிவுக்கு வந்தார் வடிவேல். 'குயிலன் — வைரம்' இவற்றின் ஆரம்ப எழுத்துக்களை வைத்து, 'கு வை பப்ளிகேஷன்ஸ்' என்னும் பாட நூல் வெளியீட்டு நிறுவனத்துக்குப் பதிவு செய்து கொண்டார்; ஆனால் 68 இல்தான் அதற்கு அனுமதி கிடைத்தது. இடையே சும்மா இருக்கவில்லை வடிவேல். அரசு அனுமதி தேவை இல்லாத புத்தகங்கள் சிலவற்றை, ஆரம்பப் பள்ளி வகுப்புகளுக் காக வெளியிட்டு ஓர் இடத்தைப் பிடித்தார்!

1970, 71 ஆண்டுகளில், ஏற்கெனவே இத்துறையில் இருந்து வரும் பெரிய விற்பனையாளர்களுடன் போட்டி போடும் நிலைக்கு விற்பனையைப் பெருக்கினார் வடிவேல். உழைப்பில் எப்படிச் சளைக்கவில்லையோ, அப்படியே வியாபார நண்பர் கள், அதிகாரிகள் ஆகியோரின் நட்பைப் பெறுவதிலும் இவர் சளைக்கவில்லை. 'தொழில் வெற்றிக்குச் சுமுகமான நட்பும் அடிப்படை' என்கிறார் வடிவேல்.

'72 இல் தமிழக அரசு, பாடநூல் வெளியீட்டுத் தொழிலை முழுமையாக அரசுடைமை ஆக்கியது! கையிலிருந்த நூல்கள் அத்தனையும் எடைக்குப் போட வேண்டி வந்த போதும், வடிவேல் சோர்ந்து போய்விடவில்லை. பிரபல வங்கிகளின் குறிப்பு, பேரேடு, வவுச்சர்கள் முதலிய பல ரக ஸ்டேஷனரிகள் தயாரித்துக் கொடுப்பதற்கும், டெபாசிட் ரசீது போன்ற நம்பிக்கை உத்தரவாதத்துக்குரிய பணிகளும், வந்து சேர்ந்தன. 'வைரம் அச்சகம்' உருவாகியது.

ஜப்பானிலிருந்து 'ரயோபி' என்னும் எண்கள் அச்சிடும் இயந்திரம் வாங்க முற்பட்ட போது, வங்கிக் கடனுடன், தங்கள் பங்குக்கான முதலீட்டைச் செலுத்த வேண்டி வந்தபோது, தைரியமாகக் குடும்ப நகைகளை அடகு வைத்துவிட முடிவு செய்தார்! ஆனால் அதிக விலை கொடுத்து வாங்கிய புதிய அச்சு இயந்திரங்கள், எந்த நோக்கத்துக்காக வாங்கப்பட்ட னவோ அதற்குப் பயன்பட முடியாத நிலை ஒரு கட்டத்தில் உருவாகிய போது, சற்று கலங்கினார் வடிவேல்.




**இ**ந்தச் சமயத்தில் பாண்டிச்சேரி அரசு தங்கள் பரிசுச் சீட்டுக்களை டெல்லிக்கு அருகில் இருக்கும். ஃபரீதாபாத்தில், காலதாமதத்துக்கு இடையிலும் பெரும் செலவிட்டு அச்சிட்டு வந்தது. டெக்கான் ஏஜென்சீஸ் நண்பர் அன்ராஜ், வைரம் அச்சகத்தின் வசதிகளைப் பாண்டிச்சேரி அரசுக்கு எடுத்துச் சொல்லவே, பரிசுச் சீட்டுக்கள் அச்சிடும் பணி கிடைத்தது.

ஆனால் முதல் ஆறு மாதங்கள் மனைவி, மக்கள், மருமக்கள் என்று மொத்தக் குடும்பமுமே நள்ளிரவு வரை பணிபுரிய வேண்டி வந்தது. இதைப் பார்த்து ராயல் பூட்டான் அரசும் தனது பரிசுச் சீட்டுக்களை வைரம் அச்சகத்திலேயே அச்சிடும் படி கேட்டுக் கொண்டது. இதனால் மேலும் இரண்டு அச்சு

வேலைக்குப் போவதுதான் வாழ்க்கை என்பது தவறான எண்ணம்...

இயந்திரங்கள் வாங்க வேண்டிய நிலை ஏற்பட்டது!

வங்கிகளுக்கான ஸ்டேஷனரி வகைகளை அச்சிட கான்ட்ராக்ட் கிடைத்த போது, இவர் கையாண்ட உத்தி விசித்திரமானது, வித்தியாசமானது. ஒரே 'வெரைட்டி'யைத் தேர்ந்தெடுத்து, மில்காரரிடம் 'எனக்கு மொத்தமாக இத்தனை டன் காகிதம் தேவைப்படுகிறது. அதை ஒவ்வொரு கட்டமாக சப்ளை செய்தால் போதும்!' என்று இவர் செய்து கொண்ட ஒப்பந்த முறை, சரக்குக் கையிருப்பு ஏராளமாக வைத்துக் கொண்டு விழிப்பது, ஒட்டு மொத்தமாக முதலீடு செய்வது என்ற இரண்டு அவஸ்தைகளிலிருந்தும் காப்பாற்றி இருக்கின்றன.

இன்றைக்குப் பிள்ளையார் பட்டியில் வைரம் சர்ஜிகல் காட்டன் தொழிற்சாலை இயங்குகிறது. புதிய தொழில். ஆனால் இதிலும் முன்னேற முடியும் என்ற நம்பிக்கை இப்போதே இவரிடம் இருக்கிறது!

பாண்டிச்சேரியில் 'வைரம் சான்வீ' என்ற ஃபைபர் கிளாஸ் மின்விசிறித் தொழிற்சாலை தொடங்கியிருக்கிறார். முழுக்க முழுக்க நவீன தொழில் நுட்பம். இதில் மின்சார மிச்சமும் உண்டு என்கிறார் வடிவேல். துருப் பிடிக்காத, ஷாக்—ப்ரூப் பிளேடுகள் பல வண்ணங்களில் இந்த மின்விசிறிகளில் சுழலுகின்றன.

இப்போது கம்ப்யூட்டர் ஸ்டேஷனரி தயாரிப்பிலும் ஈடுபட்டிருக்கிறது வைரம் குரூப். தொழில் நுட்பத்தைப் பெற இத்தாலி இன்ஜினியர்கள் இங்கே வருவதென்றால் லட்சக்கணக்காக ஆகும் என்பதால், தமது தொழிலாளி ஒருவரையே அங்கே அனுப்பி, பயிற்சி பெற்றுவர அனுப்பி வைத்தார்!

வைரம் சோப்புத் தூள், சோப் என்று மார்க்கெட்டிங் பிரிவு ஒன்றும் தொடங்கியிருக்கிறார்!

"எனக்கு டி.வி.எஸ் நிர்வாகத்தைப் பார்த்துத்தான் இன்ஸ்பிரேஷன் உண்டாயிற்று!'' என்கிறார் வைரம் அதிபர் வடிவேல்.

''தொழிலைத் தொழிலாகச் செய்ய வேண்டும். நாணயம் மிக முக்கியம். வேலைக்குப் போவதுதான் வாழ்க்கை என்பது தவறான எண்ணம். உழைப்புக்குப் பயந்து படித்துக் கொண்டே இருப்பது ஆபத்தான மனப்பான்மை. உடலால் உழைக்காத வேலைதான் வேலையா என்ன?'' என்று கேட்கிறார் இந்த வெற்றியாளர்.

பேட்டிகள்: **சாருகேசி**

படங்கள்: **ரமணன்**

---

## ஆன்மிகம்: பாபா சொன்ன பதில்!



''அன்றாட வாழ்க்கையில் ஆன்மிகத்தை எப்படிக் கடைப்பிடிப்பது?'' என்று பாபாவைக் கேட்டபோது சொன்னார்:

''கடமையைச் செய்கிறோம் என்ற கர்வம் எட்டிப் பாராமல் கடமையைச் செய்! அடக்கத்துடன், பொறாமை, சுயநலம், வெறுப்பு போன்ற எதுவும் எட்டிப் பாராமல் பணியாற்று.''

''செய்கிற காரியம் ஒவ்வொன்றும் இறைவனுக்கே அர்ப்பணம் என்ற எண்ணத்துடன் செயல்பட்டால் மனம் தூய்மை அடையும். ஆன்மிகம் என்பது இதுதான்.''

— வி. பாலு.




டி.ஒய். எக்ஸ் 2457 பென்ஸ் லாரி நாகப்பட்டினத்தில் உள்ள ஒரு புரோக்கர் செட்டில் வெங்காயம் ஏற்றிக் கொண்டு, அந்த மாலை நேரத்தில் சென்னையை நோக்கிக் கிளம்பத் தயாராக இருந்தது. புரோக்கர் செட்டில் குட்டித் தூக்கம் போட்ட டிரைவர் சங்கரன் பிள்ளை ஒரு தகர டப்பாவில் தண்ணீருடன் வெளியே வந்து முகம் கழுவினார். ஐம்பது வயது மதிக்கத்தக்க உருவம். மாநிறம், லேசான முன் வழுக்கை. அதில் ஒன்றிரண்டு நரைமுடி. கூர்மையான கண்கள். லேசான மீசை. கன்னம் சதைப் பற்றுடன் மினுமினுப்புத் தெரிந்தது. இடுப்புச் சதை சரிந்த லேசான தொந்தி. வாடகை தபால், செக் போஸ்ட் பில், ட்ரிப் ஷீட் இவைகளுடன் வண்டியில் ஏறி அமர்ந்தார்.

''என்ன சுப்பிரமணி கூடைகளைச் சரியா எண்ணிக்கிட்டியா?''

''எண்ணிக்கிட்டேண்ணே! பத்து டன்னுக்கு மொத்தம் எண்ணூற்று முப்பது கூடை...''

''ஆயில் லெவல் பார்த்தியா...? சரியா இருக்கா...?''

''சரியா இருக்குண்ணே!''

''ரேடியேட்டருக்குத் தண்ணி ஊத்திட்டியா?''

''ஊத்திட்டேண்ணே!''

'அப்பாடா...! என்று சொல்வது போல் டிரைவர் தன் சட்டையின் மேல் இரண்டு பட்டனைக் கழற்றிக் காலரை பின்னே தூக்கி விட்டு, என்ஜினை ஸ்டார்ட் செய்தார். வரிசையாக கியர் போட்டு அறுபது கிலோ மீட்டர் வேகத்தில் சென்னை சாலையில் செல்லத் துவங்கியது.

இரவுச் சாப்பாடு சிதம்பரத்தில் சாப்பிட்டு, வண்டி எடுக்கும் போது மணி பத்து. புவனகிரியில் இருந்து நெய்வேலி ரோட்டில் திரும்பும் போது, ஒரு கூட்டம் வண்டியை நிறுத்தியது.

''பண்ருட்டி வரைக்கும் இருபது டிக்கெட் வரலாமா?'' கூட்டத்தில் ஒருவன் கேட்டான்.

''தலைக்கு அஞ்சி ரூபா தர்றியா?''

''கட்டாது டிரைவரே! வியாபாரத்துக்கு வந்தோம். சரியாப் போகல... மூணு ரூபா தாரோம்...''

''நாலாக் கொடுத்துடுங்க...''

''பரவாயில்ல ஏறுங்கப்பா'' என்று ஒருவன் சொல்ல, டிரைவர் சீட்டுக்குப் பின்னாடி உள்ள சீட்டிலும், மற்ற இடங்களிலும் எட்டுப் பேர் உட்கார்ந்து கொள்ள மீதி உள்ளவர்கள் கேபினிலும், வெங்காய கூடு மேலேயும் ஏறிக் கொள்ள வண்டி நகர்ந்தது.

டிரைவரை ஆச்சரியமாகப் பார்ப்பது போல் பார்த்தான் சுப்பிரமணி.

என்ன என்பது போல் சுப்பிரமணியத்தைத் திரும்பிப் பார்த்த டிரைவர், ''ஒவ்வொருத்தர்கிட்டேயும் நாலு ரூபா வாங்கிக்கப்பா...''

''சரிண்ணே!''

வண்டியில் கூட்ட நெரிசலில் சரியாக உட்கார முடியவில்லை. இருந்தாலும், பரவாயில்லை, பண்ருட்டி வரைக்கும்தானே! அப்புறம் ப்ரியாகி விடும். எண்பது ரூபா சர்வ சாதாரணமாகக் கிடைத்து விட்டதே! இதை வைத்துத்தான் முருகேசன் சொன்னானோ, முந்நூறு... நானூறு கிடைக்கும் என்று...!

ஜன்னல் வழியாக வந்த காற்றில் சுப்பிரமணிக்குத் தூக்கம் வருவது போல் இருந்தது. இந்த வாரம்தான் முதன் முதலாக இந்த லாரியில் கிளீனர் வேலைக்குச் சேர்ந்திருந்தான். ஒரு ட்ரிப் மெட்ராஸ் சென்று வந்து இது இரண்டாவது ட்ரிப். பி. ஏ. வரை படிப்பு. படிப்பு முடிந்து நான்கு வருடம் ஆகியும் வேலையில்லை. எம்ப்ளாய்மெண்ட் ஆபீஸில் பதிவு பண்ணியும் வேலை நாளுக்கு நாள் கனவாகியது. வீட்டில் வயதான தாய் தந்தை, திருமணத்திற்கு நிற்கும் இரண்டு தங்கைகள். எட்டாம் வகுப்புப் படிக்கும் ஒரு தம்பி... சென்ற வருடம் வரை பக்கத்து கிராமத்தில் உள்ள ஒரு பண்ணையில் கணக்குப் பிள்ளை வேலை பார்த்து வந்தார் அப்பா. வயது ஆக ஆகக் கண் தெரியவில்லை. உடம்பும் முடியவில்லை., அதையும் விட்டு, வீட்டோடு சொந்த வேலையைப் பார்த்துக் கொண்டு தங்கி விட்டார். தற்போது இரண்டு ஏக்கர் நிலத்தை நம்பித் தான் குடும்பம் நடத்த வேண்டும்.

மூன்று வருடங்களுக்கு முன் சுப்பிரமணி கல்லூரியில் படிக்கும் போது வீட்டில் இரண்டு கறவை மாடுகள், ஆடுகள் எல்லாம் வளர்த்து வந்தார்கள். கடைசி நேரப் படிப்புச் செலவிற்காக நிலத்தில் இருந்து வந்த வருமானம் பத்தாததால் ஆடு, மாடு... என்று ஒவ்வொன்றாக விற்றுப் படிப்பை முடித்திருந்தான். இப்போது விவசாயத்தை நம்பி பிரயோஜனம் இல்லை. ஆற்றில் தண்ணீர் இல்லை. மழை இல்லை. குடும்பச் செலவிற்காக மீதம் உள்ள ஆட்டையும், மாட்டையும் வீட்டில் உள்ள பித்தளைச் சாமான்கள், மேஜை, பீரோ என்று ஒவ்வொன்றாக விற்றுக் குடும்பம் நடத்தி வந்தார்கள். 'தின்னு தின்னு உடம்ப வளக்கிறான் ஒரு சல்லிக் காசுக்குப் பிரயோஜனமே இல்லை' என்ற அப்பாவின் கடுமையான வார்த்தை தீயாய்ச் சுட்டது. மாதம் முந்நூறோ! இல்லை நானூறோ சம்பாதிக்க வேண்டும், என்ற வெறி மனசுக்குள் உருவாகியது. டவுன் சென்று ஒவ்வொரு மளிகைக் கடையாய்க் கணக்குப் பிள்ளை வேலைக்காக ஏறி இறங்கினான். பெரிய பெரிய ஓட்டல்களில் ஏறி இறங்கினான். ஒன்றும் காலி இல்லை.

ஒருநாள் நாகப்பட்டினம் கடை வீதியில் வேலைக்காகச் சுற்றும் போது, சுப்பிரமணியனுடன் பத்தாம் வகுப்பு வரை படித்து, பாதியில் நிறுத்தி லாரியில் கிளீனராக வேலை செய்து, இப்போது டிரைவராக இருக்கும் முருகேசனைப் பார்த்துக் கட்டிப் பிடித்துக் கொண்டு நலம் விசாரித்தான், சுப்பிரமணி. வேலைக்காகத் தான் அலைவதாகவும், குடும்பம் ரொம்பவும் கஷ்டமான சூழ்நிலையில் இருக்கிறது என்றும் விவரம் சொன்னான். 'என்னோட தகுதிக்கு உன்ன ஒரு லாரி கிளீனர் வேலைக்குத்தான் சேர்த்து விடலாம்... நீ என்ன சொல்ற? மாதம் பாதி நாள் வேலை, பாதி நாள் ரெஸ்ட். ஒரு ட்ரிப் ஏறி இறங்கினால் சம்பளத்தைத் தவிர செலவு போக எப்படியும் முந்நூறு, அல்லது நானூறு ரூபாய் கிடைக்கும். இப்படியே இரண்டு வருடம் கிளீனராக ஓடினால் போதும். அப்புறம் டிரைவர் ஆகி விடலாம், அப்ப நிறையச் சம்பாதிக்கலாம். என்ன சொல்ற? சொல்லு' என்றான் முருகேசன்.

சுப்பிரமணிக்கு ஒன்றும் புரியவில்லை. ஆயிரக்கணக்கில் செலவு பண்ணிப் படித்துப் பட்டம் வாங்கியது இந்தக் கிளீனர் வேலைக்குத்தானா? உடம்புக்கு ஒத்து வருமா? அந்தத் தொழில் முறை ஜனங்களிடம் பேச வருமா? குழப்பங்களோடு சிந்தித்தான். எப்படியாவது மாதம் முந்நூறோ, நானூறோ குடும்பத்திற்குக் கொடுக்க வேண்டும். வேறு வழி இல்லை என்று தெரிந்ததும் கிளீனர் வேலைக்கு ஒப்புக் கொண்டான். அடுத்த ஒரு வாரத்தில், தான் தொழில் கற்றுக் கொண்ட டிரைவர் சங்கரன் பிள்ளையிடமே சேர்த்து விட்டான் முருகேசன்.

பண்ருட்டி கடைத் தெருவில் வண்டி நின்றது. டிக்கெட்டுகள் எல்லாம் இறங்கின.

''ஏண்ணே! பலாப்பழம் இருக்கு. திண்டிவனம் வரைக்கும் ஏத்திக்கிறியா...?'' — கீழே பலாப்பழ மூட்டையுடன் இருக்கும் வியாபாரி கேட்டான்.

''எவ்வளவுப்பா....?''

''அம்பது பழம்... பத்துச் சாக்கு மூட்டையில இருக்கு.''

''நூறு ரூபா... தர்றியா...?''

''கட்டாது டிரைவரே? இப்பத்தான் வியாபாரத்துக்குப் போறோம். அம்பது ரூபாய் தாரேன்.''

''கட்டாதுப்பா'' என்று சொன்ன டிரைவர் வண்டியை நகர்த்தினார்.

''அறுபது தர்றேண்ணே!''

''எண்பது தர்றியா?''

''ஏய் தூக்குங்கடா... இதுக்கு மேலே இங்க நிற்கக் கூடாது. நேரம் ஆகுது. இப்பவே சந்தையில போட்டி போட்டுக்



**நடிகையின் கணவர்:** என்னைக் கல்யாணம் பண்ணிக்கணும்னு உனக்கு எப்படித் தோணிச்சு?

**நடிகை:** என்னமோ தெரியலைங்க! உங்களைப் பார்த்ததுமே நீங்க டைவர்ஸ் சமயத்துல எதுவும் தகராறு பண்ண மாட்டீங்கன்னு தோணிச்சு, அதான்!

— மேல்மங்கலம் பத்ரா

கிட்டுக் கிடப்பானுக.''

பண்ருட்டி தாண்டி மெட்ராஸ் ரோட்டில் வண்டி திரும்பும் போது, இடது பக்க முன் சக்கரம் ''புஸ்ஸ்ஸ்'' என்ற சப்தத்துடன் மெயின் ரோட்டை விட்டு மணலில் இறங்கியது. டிரைவர் கண்ட்ரோலில் வண்டி குலுங்கி நின்றது. டிரைவர் அவசர அவசரமாகக் கீழே குதித்துப் பார்த்தார். என்ன நடந்திருக்கிறது என்று ஊகிக்க முடியவில்லை. ஒரே இருட்டு!

''ஏய் பொட்டியில காண்டா விளக்கு இருக்கு, எடு...'' என்று டிரைவர் சொல்ல, சுப்பிரமணிக்கு டிரைவர் ''ஏய்'' என்று சொன்ன வார்த்தை அவமானமாக இருந்தது. கோபமாக டிரைவரைப் பார்த்தான். அவர் டயரை பார்த்துக் கொண்டு நின்றார். சீட்டுக்கு அடியில் உள்ள பெட்டியைத் திறந்து காண்டா விளக்கை எடுத்துக் கொளுத்தினான். டயரைப் பார்த்தார்கள். லாடம் ஏறியிருந்தது.

ஜாக்கி வைத்துத் தூக்கி டயரை கழற்றி ஸ்டெப்னியை மாட்ட வேண்டும். சுப்பிரமணி டிரைவர் சொன்னபடி ஜாக்கி, லீவரை எடுத்துக் கொண்டு குனிந்து உள்ளே நுழைந்த போது, தகர பிசிறு ஒன்று சட்டையில் முதுகுப்புறம் கிழித்தது. ''ச்சே'' என்று திரும்ப வெளியே எழுந்து சட்டையைப் பார்த்தான்.

''என்னப்பா நேரம் ஆகுது பாரு. சட்டையெல்லாம் போட்டுக்கிட்டு வேலை செஞ்சாச் சரியா வருமா? படிச்ச பையனை வேலைக்குச் சேர்த்தா இப்படித்தான். அதட்டி வேலை வாங்க முடியலை...'' என்று டிரைவர் எரிந்து விழ, சட்டை பட்டனில் கை வைத்துக் கழற்றப் பொறுமை இல்லாமல் பிய்த்துத் தூக்கி எறிந்தான்.

டயரை கழற்றி வெளியே எடுத்து, ஸ்டெப்னியை இருவரும் சேர்ந்து மாட்டினார்கள். பங்க்சர் ஆன டயரை கேரியரில் மாட்டி விட்டு, ஜாக்கி, லிவர் கட்டை எல்லாவற்றையும் எடுத்து டூல்ஸ் பெட்டிக்குள் வைத்து விட்டு நிமிரும் போது, உடம்பு வேர்வையில் நனைந்து பிசுபிசுத்தது.

''என்னப்பா போகலாமா?'' டிரைவர் கேட்டுக் கொண்டே வண்டியை நகர்த்தினார்.

''இத பாரு சுப்பிரமணி, இது மாதிரி டயர் பங்க்சர் ஆன டயத்துல நீ ரொம்பச் சுறுசுறுப்பா இருக்கணும். மெயின் ரோடு பாரு, அடுத்தடுத்த வண்டிக்காரன் இடிச்சிட்டுப் போயிடுவான். தூங்கக் கூடாது. திண்டிவனத்துல நிப்பாட்டறேன். பழத்தை இறக்கி விட்டு, டீ சாப்பிட்டுட்டுப் போகலாம்'' என்று டிரைவர் ஆறுதல் சொல்வது போல் சொன்னார்.

திண்டிவனம் நாலு ரோட்டைத் தாண்டி வண்டி நின்றது. பழ வியாபாரி பழத்தை இறக்க ஆரம்பித்தார். ''சுப்பிரமணி நாலு டயரையும் தட்டிப் பார்த்துட்டு வா... டீ சாப்பிடலாம்'' என்று சொல்லிக் கொண்டே எதிரில் உள்ள டீக் கடையில் நுழைந்தார் டிரைவர்.

சுப்பிரமணியம் பின்புறம் உள்ள வலது பக்க டயரை இடது கையால் தட்டி விட்டு, இடது பக்க டயரைத் தட்டும் போது முதல் தட்டில் 'சப்' என்று ஏதோ பனியனில் அடித்தது. பசை போல் கொழ கொழவென்று கையில் பிசுபிசுத்தது. என்னவென்று கையை மூக்கில் வைத்து முகர்ந்த போது, உடம்பைச் சிலிர்த்துக் கொண்டான். மலம்... மனிதமலம்.. டீக்கடைக்காக ரோட்டை விட்டு மணலில் இறக்கியதன் விளைவு! அய்யய்யோ... பேனாப் பிடித்து ஆபீஸ் வேலையில் எழுதிக்கொண்டிருக்க வேண்டிய கை இங்கே... என்ன கொடுமை! யார் செய்த பாவம்? இந்தக் கிளீனர் தொழிலே இப்படித்தானா? நாளையோடு முழுக்குப் போட வேண்டியதுதான். கைப் பம்பைத் தேடிப் போனான். பனியனைக் கழற்றிக் கசக்கி, வண்டியில் காயப் போட்டு விட்டுக் கை, கால், முகம் கழுவி விட்டு டீக் கடையில் நுழைந்தான். டீயை வாயில் வைக்கும் போது மலவாடை நினைவில் வந்து அடிவயிற்றைக் கலக்கியது.

அடுத்த நாள் பொழுது விடியும் போது, லாரி வால்டாக்ஸ் ரோடு — தண்ணீர்த் தொட்டித் தெருவில், ராஜேஸ்வரி லாரி செட் முன் வந்து நின்றது. டிரைவர் தன் கைப் பையுடன் இறங்கிக் கொண்டார். மெட்ராஸ் லோக்கல் டிரைவரிடம் வண்டி ஒப்படைக்கப்பட்டது. ஹார்பரில் வெங்காயம் இறக்க வேண்டும். ஹார்பர் சென்று லோடை இறக்கத் துவங்கினார்கள். லோடு இறக்க ஒரு மணி நேரம் ஆகும். அதற்குள் தூங்கலாம் என்று பார்த்தான் சுப்பிரமணி. தூக்கம் வரவில்லை. இன்றோடு குளித்து

ஐந்து நாட்கள் ஆகின்றன. குளிக்காததால் தலை முடி சிக்கு விழுந்திருந்தது. உடல் உஷ்ணத்தில் கண் பொங்கி, நீர்க் கடுப்பு வருவதற்கான அறிகுறி தெரிந்தது. இடுப்பில் கட்டியிருந்த லுங்கி புழுதி படிந்து ஆயில் கறையுடன் உடம்பில் ஒருவித அரிப்பைக் கொடுத்தது. ஒத்து வராத தொழில்! வேறு ஏதாவது நமக்குத் தகுந்த வேலை பார்த்துக் கொள்ள வேண்டியதுதான். ஆண்டவன் விட்ட வழி...

மதியம் இரண்டு மணிக்கு வெங்காய லோடு இறக்கிவிட்டு வண்டி திரும்பவும் செட்டிற்கு வந்தது. நாகப்பட்டினத்திற்கு அடுத்த லோடு ஏற்றப்பட்டது. மதிய உணவு கட்டானது. செட்டில் நிம்மதியாகத் தூங்கி எழுந்த டிரைவர், குளித்து சுத்தமான உடையுடன் வண்டியை ஒரு சுற்றுச் சுற்றி டயரைத் தட்டிப் பார்த்துவிட்டு ஏறி அமர்ந்தார். வண்டி புறப்பட்டது.

''அண்ணே!'' என்றான் சுப்பிரமணி.

''என்னப்பா?'' என்று தலையைத் திருப்பிப் பார்த்த டிரைவரிடம், ''நான் இந்தச் சிங்கிளோட இறங்கிக்கறேன். எனக்கு ஒத்து வராத தொழில். உடம்பு முடியல. தூக்கம் தாங்கல. இந்தத் தொழில் முறை ஜனங்களோட பேச வரல. நான் வேற ஏதாவது ஒரு வேலை பார்த்துக்கிறேன். ஆயிரக் கணக்காச் செலவு பண்ணிப் படிச்ச படிப்புக்கு இது மாதிரி கஷ்டப்படணுமான்னு படுது. ஏதோ! முருகேசன் சொன்னான்னு வந்தேன். கஷ்டமான குடும்பம்தான். என்ன பண்றது? நாகப்பட்டினம் போனதும் வேற கிளீனர் பார்த்துக்குங்க,'' என்றான்.

அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த டிரைவர் தனக்குள் சிரித்துக் கொண்டார்.

''அந்த இன்ஸ்பெக்டர் ரொம்ப நேர்மையானவர்னு எப்படிச் சொல்றே?''

''தப்பு செஞ்சது தன்னுடைய பையனாயிருந்தாலும் 'மாமூல்' வாங்கிடுவார்னா பார்த்துக்கோயேன்!''

— காட்டாங்குளத்தூர் குரு.



''என்னப்பா... நீ வந்து நாலு நாள்தான் ஆவுது. அதுக்குள்ள வெறுத்துப் போயிட்டுது உனக்கு? இந்தத் தொழிலைப் பத்தி என்ன தெரிஞ்சுக்கிட்ட...? இந்தத் தொழில் ஒண்ணும் கஷ்டம் இல்லப்பா. நீ படிச்ச படிப்ப நெனைச்சு நெனச்சு இந்தக் கிளீனர் வேலையில முழுமையா ஈடுபட முடியல உனக்கு. இந்த வேலையை நல்லாப் புரிஞ்சு செய். அப்புறம் சுலபமா ஆயிடும். எந்தத் தொழிலும் புரிஞ்சுக்கிற வரைக்கும்தான் கஷ்டம். ஆரம்பத்தில் உம்முன்னு இருக்கிற நீ, பழகப் பழக கலகலப்பா ஆயிடுவே. நாலு வண்டி கிளீனர்கிட்ட பழகறப்ப 'மச்சான்... மாப்பிள்ளே!'ன்னு முறை வச்சுப் பழகு. அப்பத்தான் ஒவ்வொருத்தரும் தொழில்ல நல்லது கெட்டது சொல்றப்ப உனக்கு நல்லாப் புரியும். நமக்கு இதுதான் தொழில், நமது வாழ்க்கை இதில்தான் அடங்கியிருக்குன்னு நெனைச்சுச் செயல்பட்டின்னா, பொறுப்பு வந்துடும். அப்புறம் சுலபமாயிடும். தொழில் முறையில டிரைவர்ங்க திட்டறதுதான். அத மனசுல வச்சுக்கப்படாது. எல்லாம் உன் நல்லதுக்குத்தான். இப்படியே இரண்டு வருஷம் கடுமையா உழைச்சின்னா டிரைவர் ஆகிடலாம். இதுல உனக்குப் படிக் காசு எல்லாம் சேர்த்துச் சம்பளத்தைத் தவிர ஒரு டூட்டிக்கு நானூறு ரூபாய் கிடைக்கும். உனக்கு வருமானமும் கிடைக்குது; தொழிலும் கத்துக்கிறே... டிரைவர் ஆகிட்டின்னா நிறையச் சம்பாதிக்கலாம். நீ விருப்பப்பட்டா லாரி ஓட்டலாம். இல்ல ஏதாவது ஒரு கார்ப்பரேசன் பஸ் ஓட்டப் போயிடலாம். நீ படிச்ச படிப்புக்குப் பத்தாயிரம், இருபதாயிரம் லஞ்சம் கொடுத்தார்த்தான் வேலைக்குப் போகலாம். ஆனா இந்த வேலைக்கு நீ எந்த லாரி முதலாளிக்கும் லஞ்சம் கொடுக்க வேண்டியதில்லை. இந்த உலகத்துல லஞ்சம் வாங்காத ஒரு வேலைன்னா இந்த லாரி டிரைவர், கிளீனர் வேலைதான். நமது திறமைதான் லஞ்சம். நீ படிச்ச படிப்பை நெனைச்சு முழுமையா ஈடுபட முடியாம தடுமாறிக்கிட்டு இருக்கே... நான் சொன்னதை நல்லாச் சிந்திச்சுப் பாரு.... வண்டி போய் நாகப்பட்டினம் சேர இன்னும் எட்டு மணி நேரம் ஆகும்.''

அடுத்த நாள் பொழுது விடிய, காரைக்கால் தாண்டி திருமலைராஜன் பட்டினத்தில் தேவர் டீக் கடையில் வண்டியை நிறுத்தினார் டிரைவர். சுப்பிரமணியை டீ குடிக்க எழுப்பி விட்டுவிட்டுக் கடைக்குள் நுழைந்தார் டிரைவர். தூக்கத்தில் இருந்து எழுந்த சுப்பிரமணி சுற்றும் முற்றும் பார்த்து 'விடிந்து விட்டதே!' என்ற பரபரப்புடன் இறங்கி ஒவ்வொரு டயராகத் தட்டிக் கொண்டு வந்தான். 'டும்... டும்..' என்று தட்டும் சப்தத்தில் காற்றின் அழுத்தம் முழுமையாகப் புரிய ஆரம்பித்தது.

# குண்டடா? குழியா?

ஒரு பக்கா பேருந்து நிலையத்தைப் பெற்றதில் அப்பநாயக்கத்துக்காரர்களின் ஏக்கம் தீர்ந்தாயிற்று என்று எண்ணாதீர்கள். அங்குதான் விதியை விழுங்கி ஏப்பமிட்டது சதி.

'பனி இல்லாத மார்கழியா? பிணியில்லாத ஹாஸ்பிட்டலா? பெயரில்லாத பேருந்து நிலையமா?' என்று நகராட்சி நினைத்திருக்கக்கூடும். நகராட்சி உறுப்பினர்கள் கூடிப் பேருந்து நிலையத்துக்குப் பெயர் சூட்டத் தீர்மானித்தனர். நாடறிந்த நாலு தலைவர்களின் பெயர்கள் முன் மொழியப் பட்டன. அதைப் பின் மொழிய யாரும் முன்வரவில்லை. காரணம் கேட்டதற்கு மா. மா. கழக (மாசற்ற மாநிலக் கழகம்) உறுப்பினர் விளக்கினார்:

''ஏற்கெனவே அந்தத் தலைவர்களின் பெயர்களை மாவட்டம் முதல் மாவாட்டும் மிஷின் வரை, பல்கலைக் கழகங்கள் முதல், பஸ் கார்ப்பரேஷன் வரை வைத்தாயிற்று. மேலும் மதிப்பா நாம் பேர் வைச்சா ஜனங்க மத்தியிலே ரொம்ப மிதிப்பா அவங்க பேரு அடிபடுது. தலைவர் பக்கிரிசாமி பேரை பஸ் டிரான்ஸ்போர்ட் கார்ப்பரேஷனுக்கு வைச்சோம். இப்ப என்னாச்சு? 'பக்கிரிசாமி பூட்சா?' ன்னு கேட்கறாங்க. 'இந்த பக்கிரி சாமி எப்பவும் லேட்டு.' 'பக்கிரி சாமிங்களுக்குத் திமிரு ஜாஸ்தி... ஓவர் ஸ்பீடு போறானுங்க, சோமாறிங்க'ன்னு கன்னா பின்னான்னு ஜனங்க அவர் பேரை ரிப்பேர் பண்றாங்க...'' என்று சொல்லிக் கொண்டிருந்தபோதே மா. மா. கழக நகராட்சித் தலைவருக்கு நறுக்கென்று ஒரு ஐடியா பளிச்சிட்டது.

இப்படி வைக்கப்பட்ட பெயர்கள் படாத பாடுபடும் பட்சத்தில் எதிர்க்கட்சி ஆட்களின் பெயர்களை வைத்தால் வசதியாக இருக்கும் என்று நினைத்தவர், ''உறுப்பினர் கூறுவது போலப் பெரிய தலைவர்கள் பெயரை வைக்காமல் உள்ளூர்த் தலைவர் பெயரையே வைக்கலாம்னு நினைக்கறேன். மறைந்த எதிர்க்கட்சி எம். எல். ஏ. 'குண்டு வரதன்' பெயரை முன் மொழிகிறேன்'' என்றவர், தமது கட்சி உறுப்பினர்கள் சந்தேகமாகப் பார்ப்பதைக் கவனித்துக் கண் சிமிட்டி விட்டு அவர்கள் காதில் மட்டும்




அகிலா கார்த்திகேயன்

விழும்படி ''இப்படி கிட்டவாங்க... அந்த குண்டு வரதன் அப்பெல்லாம் நம்மை கன்னாபின்னான்னு எப்படியெல்லாம் திட்டியிருக்கான்... அவனை நாம் திட்டறதுக்குள்ளே பாதியிலே மண்டையைப் போட்டுட்டான். இப்போ 'பஸ் ஸ்டாண்ட்'க்கு அவன் பேரை வைச்சுட்டா நமக்கு ரெண்டு சௌகரியம். பஸ் ஸ்டாண்ட் ஏற்கெனவே நாறுது.. ஜனங்களும் 'குண்டு வரதன் சுத்த மோசம். குண்டு வரதனை நினைச்சாலே குமட்டிட்டு வருது'ன்னு நாராசமாப் பேசும் போது நம்ப காதுலே பாயாசமாக விழும். அதே சமயம் எதிர்க்கட்சி எம். எல். ஏ. வோட பெயரை வைச்சோம்னு நமக்கு நல்ல பேரு வேற... எப்படி ஐடியா?'' என்றார்.

அவர் இப்படிக் கிசுகிசுத்தது, பிசுபிசுவென்று எதிர்க்கட்சி தா. தா. கட்சி உறுப்பினர்களை எட்ட, அவர்களும் சுதாரித்துக் கொண்டனர். அவர்கள் ஆளுங்கட்சித் தலைவரின் அத்தை பெயரான 'குழியாச்சி'யைத் தான் பேருந்து நிலையப் பெயராக வைக்க வேண்டுமென்று வம்பிழுத்தனர். குழியாச்சி என்றதும் தலைவருக்கு ஜுரம் கண்டது. கன்னத்திலும், கண்களிலும் கிண்ணமாய்க் குழி விழுந்த தன் அத்தை 'கம்' மாமியாரின் மறைந்த மட்டமான முகம் வட்டமிட்டு வாட்டியது. ஓர் அடங்காப்பிடாரியைப் பெத்துப் போட்டு விட்டு — தன் தலையில் கட்டி விட்டுச் செத்து விட்ட குழியாச்சி பெயரைப் பேருந்து நிலையத்திற்கு வைத்துப் பழி தீர்க்கலாமென்று ஒரு கண நேரம் அற்ப ஆசை ஏற்பட்டதென்னவோ உண்மை. இருப்பினும் இந்தச் சதி பத்தினிக்குத் தெரிந்தால் தன் கதி என்னாவது என்று நினைத்துக் கை விட்டார்.

''குண்டு வரதன்தான்'' என்று மா. மா. கழக உறுப்பினர்கள் கூச்சலிட, ''குழியாச்சிதான்'' என்று தா. தா. கட்சி எதிர்க் கூச்சலெழுப்பக் கூட்டம் கலைந்தது.

**அ**ன்று இரவே மா. மா. கழக ஆட்கள் சுறுசுறுப்பாய்ச் செயல்பட்டனர். ரோட்டோரமிருந்த ஒரு தார் டிரம்மைத் தள்ளிக் கொண்டு வந்தனர். தட்டி, நீட்டி நன்றாக நீவி விட்டனர். 'குண்டுவரதன் பேருந்து நிலையம்' என்று தார்க்குச்சியில் எழுதி, நாலா பக்கமும் அலட்சியமாய்ச் சந்தனம் தெளித்துப் பொட்டோடும் பூவோடும் பஸ் ஸ்டாண்ட் நோக்கி எடுத்துச் சென்றனர்.

அதற்கு முன்பே தா. தா. கட்சி ஆட்கள் ஒரு சினிமா போஸ்டர் தட்டியை அபேஸ் செய்து, குட்டையும் நெட்டையுமாய்க் ''குழியாச்சி பஸ் நிலையம்' என்று எழுதிக் கலர் காகிதங்களை ஒட்டி, பலர் காணும் வண்ணம் ஊர்வலமாய் வந்து சேர்ந்திருந்தனர். இதைப் பார்த்த மா. மா. கழக அடிமட்டத் தொண்டன் அர்ச்சுனன், ஆத்திரமடைந்து தட்டியைத் தாக்கச் சென்று, சற்றுத் தயங்கினான். 'தட்டியைத் தாக்கலாம் தவறில்லை; தட்டியில் கெட்டியாய் எழுதியிருந்த தலைவரின் மாமியார்க் கிழவியின் பெயர் கிழியுமே! அந்தப் பழி நம்மைச் சாருமே!' என்று ஓங்கிய கையோடு ஒய்யார போஸில் நின்ற அர்ச்சுனனைப் பார்த்துக் கேடி கிஷ்டன், ''இப்படி ஜகா வாங்கினு தயங்கினுக்கிறயே அர்ச்சுனா.. நீ கிழிக்கப் போறது கிழவி பேராச்சேன்னு யோசனை பண்றது புரீது... ஆனா பழிக்கப் போறது இந்த கிஷ்டனைத்தான்'' என்று கீதா உபதேச பாணியில் ஒரு சாதா உபதேசம் செய்தான். அவ்வளவுதான். கள்ளச் சாராயத்தில் கஞ்சாவைக் கலந்து குடித்தாற்போல், அர்ச்சுனன் பாய, மற்ற அடியாட்களும் போஸ்ட் ஆபீஸில் பேஸ்ட்

## சந்தோஷத்தின் கட்டுப்பாடு!

அந்த டாக்டருக்கு வயதாகி விட்டது. ஓய்வாக அமர்ந்திருந்தார். அவரைக் காண வந்த நண்பர் கேட்டார்: ''ஏன் நீங்கள் சும்மா இருக்க வேண்டும்? பிராக்டிஸ் பண்ணலாமே?''

''எனக்குப் பார்வை மங்கி வருகிறது'' என்றார் டாக்டர்.

''அதனால் என்ன? அறுவைச் சிகிச்சையா செய்யப் போகிறீர்கள்? வைத்தியம்தானே? நேரடியாக இல்லாவிட்டாலும் உங்கள் பரந்த அனுபவத்தை மற்ற டாக்டர்களுக்கு யோசனை கூறப் பயன்படுத்தலாமே?''

அப்போது அந்த டாக்டர் சொன்னார்: ''மருத்துவத் துறையில் நாளுக்கு நாள் முன்னேற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. அவற்றை நான் படித்து அறிய வேண்டும். பிறகுதான் வைத்தியம் செய்ய வேண்டும். சதா படித்து என் அறிவை விருத்தி செய்து கொள்ள முடியாத போது, நான் வைத்தியம் செய்வதும் கூடாது!''

கண்ணியத்துடன், தமக்குத் தாமே கட்டுப்பாடு விதித்துக் கொண்ட இந்த டாக்டர் யார்? காசநோய் சிகிச்சையில் நிபுணராக விளங்கி, அதற்கென்றே . மருத்துவமனையும் உருவாக்கிய சந்தோஷம்தான். சுதந்திரா கட்சியில் இருந்து, பிறகு லோக தளம், ஜனதா தளம் எல்லாவற்றையும் பார்த்து அண்மையில் காலமானவரேதான்.

லயன் டி. ஜே. ஜார்ஜ்.

கூறக் கேட்டவர்: ராஜ்.

டாக்டர் சந்தோஷம்



டுக்கு அலைமோதுவது போல அவனைத் தொடர்ந்தனர்

தட்டியைப் படக்கென்று பிடுங்கி மடக்கென்று இவர்கள் ஒடிக்க, எதிர்முனையிலிருந்து ஏகப்பட்ட சோடா பாட்டில் பறக்க, 'குண்டு வரதன்' தார் டிரம் போர்டு பெண்டு நிமிர்த்தப்பட... ஆரம்பித்தது 'பேர்'ராட்டம்! பேருந்து நிலைய மைதானம் யார் எல்லைக்குள் வருகின்றதென்று வரையறை செய்யாத நிலையில், இரு காவல் நிலையங்களும் தொல்லையின்றித் தூங்கின.

அந்த ராத்திரியில் ரவுண்ட் அப் வந்த 'வம்பு தும்பு' வார இதழ் நிருபர் இந்த நாலந்தரச் சண்டையை நாலு பக்கத்துக்கு எழுதி நாட்டுப் பிரச்னை ஆக்கினார்.

ஆட்சிக்கு வந்த ஆறு மாதங்களில் அரிசி, தண்ணீர்ப் பிரச்னைகளிலிருந்து ஆரம்பித்து, விலைவாசி, மின்சாரம் மற்றும் சம்சாரத்துக்குத் தேவையான சாதாரண பிரச்னை வரை ஒன்று விடாமல் தீர்த்து விட்ட கற்பனையில் ஹாய்யாக ஓய்வெடுத்துக் கொண்டிருந்த ஆளுங்கட்சி, இந்தப் பெயர்ப் பிரச்னை கிடைத்ததில் எக்ளேர் சாக்லெட்டைப் பார்த்த எல்.கே.ஜி. பையனானது. அதே சமயம் போராட சப்ஜட்டே இல்லாமல் போர் அடித்துப் போய் உட்கார்ந்திருந்த எதிர்க்கட்சிக்குப் பத்து ரூபாய் கைமாத்து வாங்கப் போனவனுக்கு பத்து லட்சம் பம்பர் அடித்தாற் போல் இருந்தது.

குண்டு வரதனிடம் தாங்கள் கண்ட வரலாற்றுக் காரணங்களை ஆட்சியாளர்கள் கூற, தங்கள் விழிப் பார்வையில்'குழியாச்சி' தான் அப்ப நாய்க்கத்துக்காரர்களைக் குஷியாக்கும் என்று எதிர்க்கட்சி எடுத்துரைக்க, நாளொரு அறிக்கையும் பொழுதொரு போஸ்டருமாக திமிலோகப்பட்டது. எந்த மூலையிலோ இருந்த அப்பநாய்க்கன் பாளையம், தூர்தர்ஷனன் வழியாக ஆல் இண்டியாவிலும் பரவியது.

ஏமாந்த தொண்டன் ஒருவனை உசுப்பேற்றி மா. மா. கழக ஆட்கள் பஸ் நிலைய மைதானத்திலேயே தீக்குளிப்புப் போராட்டத்திற்கு ஏற்பாடு செய்தனர். மக்களும் கிரசின் கிடைக்காத காலத்தில் எப்படி தீக்குளிக்கப் போகிறாரென்று வேடிக்கை பார்க்கக் கூடினர். அவர்கள் நினைத்தது போலவே கிரசின் எங்கும் கிடைக்காமல் போகவே மா. மா. கழக ஆட்கள் ப்ஸ் ஸ்டாண்ட் டீக்கடைக்காரரை அணுகி அவர் ஸ்டவ்விலிருந்த கிரசினைக் கேட்டனர். அவர் மறுக்கவே, இவர்கள் வெறுத்துப் போய் டீக்கடைக்காரரை பரோட்டாவாய்ப் பிசைந்தெடுத்துக் கடையிலிருந்த டீயை எல்லாம் ஆளாளுக்கு அள்ளிப் பருகினர். தீக்குளிப்புப் போராட்டம் டீக்குடிப்பு போராட்டமாகிப் பிசுபிசுத்தது.

தம் பங்குக்குத் தா. தா. கட்சித் தொண்டர்கள் சௌகர்யமாக உண்ணும் விரதம் மேற்கொள்ள ஏற்பாடு செய்தனர். ஒரு வேன் நிறைய இட்லி, பொங்கல், வடை, சித்ரான்னங்கள், பழ வகைகள் சகிதம் மைதானத்தை அடைந்தவர்களுக்கு அதிர்ச்சியாய் இருந்தது. யாரோ ஒரு குறும்புக்காரர் 'சாயங்காலம் வரை உண்ணும் விரதம்' என்ற அறிவிப்பு போர்டை 'சாகும் வரை உண்ணாவிரதம்' என்று மாற்றி எழுதியிருக்க, மக்களும் இவர்களைச் சூழ்ந்து உண்ணாவிரதமிருந்தால்தான் ஆயிற்று என்று அடம்பிடித்தனர். வயிறு பிழைத்தது வரதன் புண்ணியம் என்று விழுந்தடித்துக் கொண்டு ஓடித் தொண்டர்கள் தப்பித்தனர்.

இப்படி தினம் ஒரு கூத்தும் கணம் ஒரு கேளிக்கையுமாகி பஸ் ஸ்டாண்ட் மைதானம் எல்லோரையும் பரவசப்படுத்த, அந்த ஊர் தியேட்டர்கள் வெறிச்சோடிப் போயின. பேருந்து நிலையத்திற்கு, பஸ்கள் வரப் பயந்தன. பை—பாஸ் செய்தன! கடமையே என்று வந்த ஓரிரு பஸ்களும் தாங்கள் உள்ளே வந்தது மடமையே என உணரத் தொடங்கின. அவற்றை உச்சகட்டப் போராட்டமான டயர் கிழிப்புப் போராட்டம் உபாதைப்படுத்தின.

''குண்டா — குழியா'' என்ற குழப்பமான பிரச்னையைக் கண்டும் காணாமலும் அப்படியே விட்டு விட்டு அரசாங்கம் தாற்காலிகமாக பேருந்து நிலையத்தை இழுத்து மூடிக் காவலுக்குக் கெட்டிக்காரர்களை எட்டுத் திக்கிலும் நிறுத்தியது.

அப்பநாய்க்கத்துக்காரர்கள் முன் போலவே வேற்றூரில் இறங்கி தங்கள் ஊருக்கு நிம்மதியாக நடக்கத் தொடங்கினார்கள்.

இந்தக் கதையைப் படித்து விட்டு, 'பஸ் நிலையத்தை இழுத்து மூடலாம்; பஸ்ஸை அந்தப் பக்கமே விடாமல் மாற்றுப் பாதையில் திருப்பி விடலாம்; ஆனால் ரயிலை எப்படி திசை திருப்புவது?' என்று ரயில்வே நிர்வாகம் தலையைச் சொறிந்து கொண்டிருப்பதாகக் கேள்வி.



●● 'விரைவாகச் செயல்படு' என்றால் பத்து நிமிட வேலையை அவசர அவசரமாக ஐந்து நிமிடங்களில் செய்து முடிப்பது அல்ல. கவனமும், நிதானமும் சிதறாமல் பத்து நிமிட வேலையைப் பத்தே நிமிடத்தில் முடிப்பதுதான் விரைவான செயல்!

— நார்மன் வின்சென்ட் பீல்.

தகவல்: புத்தனாம்பட்டி சி. மணி.

# ஏழாவது இரவு

(21)

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்: ஜெயராஜ்..

''இந்த நிமிஷத்துல உங்க திட்டம் என்னன்னு எனக்குத் தெரியும்'' என்று இன்ஸ்பெக்டர் கூறிய போது மாலினிக்கு அதிர்ச்சியாக இருந்தது.

அவளும் ரஞ்சனாவும் மேற்கொண்ட ஒவ்வொரு முயற்சியின் போதும் அதுபற்றி முன்னதாகவே தெரிந்து கொண்டு இந்த இன்ஸ்பெக்டர் குறுக்கிட்டிருக்கிறார். அவர் மட்டுமல்ல. அந்த இன்னொரு கோஷ்டியும் அப்படியே செயல்பட்டு வந்திருக்கிறது.

அது எப்படிச் சாத்தியம்?

இருவரும் தனித்தனியாகச் செயல்படுகிறார்களா? அல்லது இருவருக்குமிடையே வெளித்தெரியாத தொடர்பு ஏதும் உண்டா?

சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தாள். சொன்னாள்:



# புதிய கல்வெட்டுக்கள்

## ஸ்டெல்லா புரூஸ்

பதினைஞ்சு நாட்களுக்கு முன்னால் என்னுடைய பாட்டி பத்மா இறந்து விட்டாள். செத்துப் போவதற்கு நான்கு நாட்களுக்கு முன்னால் பாட்டி ஒருத்தருக்கும் தெரியாமல் என்னிடம் மட்டும சொன்ன சங்கதியைக் கேட்டதும் அதிர்ச்சியாகவும் தாங்க முடியாத ஆச்சர்யமாகவும் போய் விட்டது எனக்கு. அதுவரைக்கும் என்னுடைய தாத்தா திருமலைதான் சில சமாசாரங்களில் ஒரு மாதிரியான ஆசாமி என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஏனென்றால் என் தாத்தா அப்படியொரு விநோதமான மனிதர். உதாரணத்திற்கு ஒரே ஒரு விஷயத்தை மட்டும் சொல்லிக் கொள்கிறேனே...

— ஒரு சமயம் என்னுடைய அத்தை ஒருத்திக்கு மோசமான டிப்தீரியா வந்து விட்டது. திடீர்னு ஒரு நாள் அத்தையோட நிலைமை கவலைக்கிடமாகவும் ஆகி விட்டது. டாக்டர் வெங்கடாச்சாரிதான் வைத்தியம் பார்த்து வந்தார். "பன்னிரண்டு மணி நேரம் தாங்கறதே கஷ்டம்; நீங்க எல்லாருக்கும் தகவல் கொடுத்துடலாம்" என்று சொல்லி ஒரு நாள் வெங்கடாச்சாரி ரெண்டு கையையும் விரித்து விட்டார். உடனே என் தாத்தா கடிகாரத்தில் ஒரு கண்ணும்; என் அத்தையின் மேல் ஒரு கண்ணுமாய் — நடுக்கூடத்தில் நாற்காலியை எடுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்து விட்டார். பன்னிரண்டு மணி நேரக் கணக்கைக் கண்காணித்துக் கொண்டிருக்கணுமே...

அத்தையின் உயிர் இதோ போய் விடும்; இதோ போய் விடும் என்று தாத்தாவும் உட்கார்ந்து உட்கார்ந்து பார்த்தார். உயிர் போவதற்கான வழியையே காணோம். திடீர்னு ஓடிக் கொண்டிருந்த அந்தக் கடிகாரம்தான் நின்று தொலைந்து விட்டது...! தாத்தாவிற்கு அப்படியொரு ஆதங்கம். அத்தை சாகாமல் பிழைத்துக் கொண்டதைப் பற்றிக் கொஞ்சம் கூட சந்தோஷமே படவில்லை மனிதர்... பெரிய டாக்டரின் வாக்கு பொய்யாகக் கூடாது அவருக்கு... இப்படிப்பட்டவரை விநோதமான ஆசாமி என்று சொல்லாமல் வேறு எப்படிச் சொல்வது?!

ஆனால் இந்த மனுஷரையெல்லாம் தூக்கிச் சாப்பிட்டு விட்டாள் என் பாட்டி.

பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த நீண்ட நாட்களில் எனக்குப் புரியாமலேயே இருந்த ஒரு விஷயம் — என் ஒருத்தனுக்கு மட்டும் இரண்டு பாட்டிகள் இருந்தது தான்... என்னோடு படிச்ச பையன்கள் எல்லோருக்குமே — ஒரு தாத்தா ஒரு பாட்டி. எனக்கு மட்டும்தான் ஒரு தாத்தா, இரண்டு பாட்டி...! இரண்டு பாட்டிகள் என்பதில் எனக்கு நெஞ்சு கொள்ளாத பெருமை. கூடப் படிக்கிற பையன்களிடமெல்லாம் போய் ரொம்பத்தான் பீற்றிக் கொள்வேன். பையன்களும் சரியான மக்குகள்தான். இல்லாவிட்டால் விவரம் புரியாமல் அதற்கெல்லாமா என் மேல் போய்ப் பொறாமைப்படுவார்கள்?

ஆனால் வேறொரு வயசு வந்த அப்புறம் தாத்தாவின் இந்த இரண்டு பாட்டி சமாசாரம் எல்லாம் வெட்ட வெளிச்சமாகத் தெரிந்து போய் விட்டது எனக்கு. இன்றைக்குத்தான் பெரிய வீடு, சின்ன வீடுயென்று எப்படியெல்லாமோ பேசுகிறார்கள். ஆனால் என் திருமலைத் தாத்தாவின் விஷயத்தில் அந்த மாதிரியான சமாசாரம் எதுவும் கிடையாது. என்னோட இரண்டு பாட்டிகளுமே தாத்தாவிற்குப் பெரிய வீடுகள்தான்...! என் பத்மா பாட்டி வீடும் பெரிசு. சந்திரவதிப் பாட்டி — அதாவது சின்னப் பாட்டி வீடும் அதே மாதிரி பெரிசுதான்... இதில் இருக்கிற இன்னொரு பெரிய சுவாரஸ்யம் என்னவென்றால் — எங்களின் இரண்டு பாட்டிகளும் நிஜமாகவும் அக்கா, தங்கச்சிகள்தான். அதுவும் கூடப் பிறந்த அக்கா தங்கச்சிகள்...!

என் பாட்டி — அதாவது என் அப்பாவைப் பெற்றவள் — பத்மாதான் அக்கா. சந்திரவதிப் பாட்டி தங்கச்சி. அக்காவுக்கும் தங்கச்சிக்கும் சரியாகப் பத்து வயசு வித்தியாசம். தாத்தா முதலில் எங்கள் பத்மா பாட்டியைக் கல்யாணம் செய்து கொண்ட போது பாட்டிக்கு வயசு பதினாலே பதினாலுதான். தாத்தாவுக்கு அப்போது பதினெட்டு வயசு. அவர்கள் இரண்டு பேருக்கும் கல்யாணமாகி அப்படி இப்படியென்று பன்னிரண்டு வருஷம் வேகமாய் ஓடியும் விட்டது. இந்தப் பன்னிரண்டு வருடத்தில் பாட்டிக்குப் பிறந்த பிள்ளைகள் ஏழில் இரண்டு செத்துப் போய் விட, ஐந்து பிள்ளைகள் இருந்தார்கள். இந்த ஐந்தில் மூன்று ஆண், இரண்டு பெண். இந்தச்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — ரூ 375/- மூன்றாம் பரிசு பெறும் கதை-1

சமயத்தில்தான் பாட்டியின் தங்கச்சி சந்திரவதிக்கு வயசு பதினாறு ஆகி, அவளுக்குப் ஒரு கல்யாணம் செய்து வைத்து விட அவளுடைய அப்பா ரொம்ப மும்முரமாக மாப்பிள்ளை தேட ஆரம்பித்திருக்கிறார். என் தாத்தாவிடமும் வந்து நல்ல மாப்பிள்ளையாக எங்கேயாவது இருந்தால் பார்த்துச் சொல்லும்படி மரியாதைக்காக ஒரு வார்த்தைச் சொல்லி வைத்திருக்கிறார். தாத்தா தானே அவர்களுடைய வீட்டிற்கு மூத்த மாப்பிள்ளை... மூத்த மாப்பிள்ளைக்கு இந்த மரியாதை கூடக் காட்டா விட்டால் எப்படி...?!

ஆனால் பாட்டியின் தங்கச்சிக்கு மாப்பிள்ளை பார்க்கிற விஷயத்தில் திடீர்னு ஒரு நாள் ஒருத்தருமே கற்பனை செய்து கூடப் பார்த்திராத திருப்பம் வந்து சேர்ந்து விட்டது.

"அவளுக்கு என்னத்துக்கு அங்கே இங்கேன்னு போய் வீணாக் கஷ்டப்பட்டு மாப்பிளளை பார்க்கணும். நானே அவளையும் கட்டிக்கிறேனே..." என்று சொல்லித் தாத்தா பெரிய குண்டைத் தூக்கிப் போட்டிருக்கிறார். எல்லாருமே அப்படியே திகைத்துப் போனார்களாம் திகைத்து... திகைக்க மாட்டார்களாயென்ன...?

"இது என் பொம்பளைப் புள்ளையோட கல்யாண விசயம்; இதுல போய் வெளையாடாதீங்க மாப்ளை..." என்று சொல்லியிருக்கிறார் பாட்டியின் அப்பா.

"ஆமா; இந்த விசயத்துல போய் ஒருத்தன் வெளையாடுவானாக்கும்?"

"நெசமாவே சுய நினைப்போடதான் கேக்கறீங்களா மாப்ளை?" — மாமனார் இப்படிக் கேட்டதும் தாத்தா கோபித்துக் கொண்டு கிளம்பி வந்து விட்டாராம் வண்டியில் ஏறி.

"சுயநினைப்போடதான் கேக்கறியான்னு என்னைப் பார்த்துக் கேக்கறான் உங்கப்பன். என்னை என்ன கிறுக்குப் பயல்னு



நெனைச்சானா அந்தத் தகரக் கடைக்காரன்....'' தாத்தாவின் மாமனாருக்குப் பாவம்! போதாத காலம்தான்... பெரிய பணக்காரன் ஒருத்தனுக்குப் பொண்ணையும் கொடுத்து இந்தப் பாடும் பட வேண்டியிருக்கிறதே...

அதுவும் இல்லாமல் 'என்னதான் இருந்தாலும் ஒங்களைப் பாத்து ஒங்க மாமனார் அந்த மாதிரி கேள்வியைக் கேட்டது நெசமாவே அக்ரமம்தாங்க முதலாளி...' என்று தாத்தாவிற்கு வெற்றிலைப் பெட்டி சுமக்கும் செந்தியப்பன் கூட பாட்டியோட அப்பாவைத்தான் கடிந்து கொண்டான் என்றால் அதைக் கலிகாலம் என்று சொல்லாமல் வேறு எப்படிச் சொல்வது?

தாத்தாவைச் சுற்றி நின்று கொண்டு ஒரு கும்பல் ஜால்ரா அடித்துக் கொண்டிருந்த போது தாத்தாவின் மாமனாரைச் சுற்றியும் ஒரு கும்பல் இருந்தது.

''ஒன் பெரிய மாப்பிளை ரொம்பப் பசையுள்ளவன்; பிரியப்பட்டுக் கேக்கறான் பொண்ணை. பேசாமே குடுத்திட்டுப் போயேன்...''

''இது ஒண்ணும் ஊர் உலகத்துல நடக்காத சமாசாரம் இல்லை தகரம்...''

''இனிமே வேற ஒருத்தன் தைரியமா வந்து உன் மவளைப் பொண்ணு கேப்பான்னு மட்டும் நெனைச்சிடாதே.''

''வள்ளி தேவானை மாதிரி இருந்திட்டுப் போவட்டுமே...''

ஆள் ஆளுக்கு வளைத்து வளைத்துச் சொன்னதும் பாவம் தகரக் கடைக்காரருக்கும் வேறு வழி தெரியவில்லை. பணிந்து விட்டார். ஆனால் ஒரு 'கண்டிஷன்' போட்டார்.

''என் மூத்த மாப்ளை — பெரிய பணக்காரன்தான்; அதோட சிம்மலக்னத்துக்காரன் வேற... பொண்ணைக் கட்டித் தர மாட்டேன்னு சொன்னா ஏதாவது ஏடாகூடமா செஞ்சாலும் செஞ்சுடுவான். அதனால ஒத்துக்கறேன்... ஆனா ஒரு கண்டிஷன்: ''சந்திரவதி இதுக்கு ஒத்துக்கறாளான்னு முதல்ல கேக்கணும். அவ பிரியம் என்னன்னு தெரியாமே நம்ம பாட்டுக்கு ஆளுக்கு ஆள் பேசிட்டு இருக்கிறதில் பிரயோசனம் எதுவும் இல்லை...''

''தாராளமாக் கேளுங்க. ஆனா ஒரு கண்டிஸன்...'' — தாத்தாவும் அவருடைய பங்குக்கு ஒரு கண்டிஷன் போட்டிருக்கிறார்.

''சந்திரவதிக்கு என்னைக் கட்டிக்கிறதுக்குப் பிரியம் இருக்கா இல்லையான்னு நீர் அவளைத் தனியா உம்ம வீட்டு மச்சிக்குள்ளேயெல்லாம் வச்சிக் கேட்டுட்டு வந்து சொன்னா நான் ஒத்துக்க மாட்டேன். ஒங்க வீட்டு ஹால்ல எனக்கு முன்னே நிக்க வச்சித்தான் சந்திரவதியை நீங்க கேக்கணும்... அது மட்டுமில்லை; அந்த இடத்துல எங்க தாயாதிக்காரன் ஒருத்தனும்; ஒங்க தாயாதிக்காரன் ஒருத்தனும் சாட்சிக்கு வந்து இருக்கணும்...''

அதே மாதிரி — இந்தப் பக்கம் தாத்தாவும் அவரது தாயாதிக்காரரும்; அந்தப் பக்கம் தாத்தாவின் மாமனாரும் அவருடைய தாயாதிக்காரர் ஒருத்தரும்... இவர்களுக்கு நடுவில் வெள்ளை மணல் கோடாய்த் தலை வகிடு தெரிய, தாத்தாவின் மச்சினி சந்திரவதி...

''ஒன்னை ஒன் பெரிய மச்சானே கட்டிக்கிறேன்னு சொல்றார்ம்மா... நீ என்ன சொல்றே?''

சந்திரவதிப் பாட்டியின் முகம் நிமிரவே இல்லையாம்.

''ஒனக்குப் பிரியம் இருந்தாப் பிரியம் இருக்குன்னு சொல்லு. பிரியம் இல்லேன்னாலும் பயமில்லாமே பிரியம் இல்லேன்னு சொல்லிடு. எதுவும் கட்டாயம் கிடையாது.''

பாட்டி முகத்தை லேசாக உயர்த்தி வெட்கப்பட்டுத் தாத்தாவைப் பார்த்துவிட்டு, மறுபடியும் குனிந்து கொண்டதாம்...

''வாயைத் திறந்து சொன்னாத்தானேம்மா எங்களுக்குத் தெரியும்..''

''பொம்பளைப் பிள்ளை வாயைத் திறந்து சொல்வாள்னு நெனைச்சீங்கன்னா— நீங்க ஒரு விவரம் கெட்ட ஆளு மாமா...!''

''குறுக்கே குறுக்கே நீங்க பேசினீங்கன்னா எனக்குக் கெட்ட கோவம் வரும் மாப்ளை..''

''எல்லாரும் வேலை வெட்டியை விட்டுப்புட்டு வந்து காத்துக்கிட்டுருக்கோம்ல... சட்டுப் புட்டுனு சொல்லு தாயி'' — தாயாதிக்காரர்களும் அவர்களின் பங்குக்கு வழிமொழிந்திருக்கிறார்கள். அப்போது பாட்டியின் ரெண்டு கன்னமும் வெட்டியெடுத்த நுங்கு மாதிரி மினுமினுத்ததாம்; ராட்டினம் போல் சுற்றிச் சுற்றிப் பார்த்தாளாம். சப்தமில்லாத குரலில் சொன்னாளாம்.

''பெரிய மச்சானையே கட்டிக்கிறேன்ப்பா...''

''நல்லா யோசிச்சிச் சொல்லும்மா...''

''அதெப்படி நீர் மட்டும் குறுக்கே குறுக்கே பேசறது?''

''ஆமா தகரம்; ஒனக்கு ஒரு பேச்சு; ஒன் மாப்ளைக்கு ஒரு பேச்சுன்னு இருக்கக் கூடாது. உன் மவதான் பிரியத்தைச் சொல்

**''புதன்கிழமைக்கு அப்புறம் வெள்ளிக்கிழமை வந்துட்டாப் பரவாயில்லைன்னு ஏன் சொல்றே?''**

**''வியாழக்கிழமை டி. வி. நாடகம் பார்க்க வேண்டியதில்லையே!''**

— ஆர். ரத்னசாமி



சாலை விதிகளை மீறும் பதினைந்து வயதுக்குட்பட்ட சிறுவர்களுக்குப் பம்பாய் போலிஸ் ஒரு விசித்திரமான தண்டனையை வழங்குகிறது. அவர்கள் இரண்டு காதுகளையும் பற்றிக் கொண்டு சாலை ஓரத்திலேயே நூறு தோப்புக்கரணங்கள் போடவேண்டும்; குறும்புக்காரச் சிறுவர்களைச் சாலை விதிகளைக் கடைப்பிடிக்குமாறு செய்ய இதைவிடச் சிறந்த வழி இல்லை என்கிறது பம்பாய் போலிஸ்!

— ராஜீவி நரசிம்மன்




லி நச்சே...''

''எதுக்கும் ஒருவாட்டிக்கு ரெண்டு வ்ாட்டி கேட்டுப்பிடறது நல்லதில்லையா?''

''ரெண்டு வாட்டி கேக்கறதுக்கு இங்கே என்ன ஏலக்கச்சேரியா நடக்குது?!''

''அப்ப கல்யாணத்துக்குத் தேதி பாத்திடலாம்மா?''

''பாத்திடுங்கப்பா.''

**தா**த்தாவின் முதல் கல்யாணம் கூட அப்படி நடக்கவில்லையாம். அப்படியொரு அட்டகாசம் பண்ணியிருக்கிறார் மனிதர்.

என்னதான் கூடப் பிறந்த அக்கா தங்கச்சிகளாக இருந்தாலும் சக்களத்திகள் என்றாகி விட்ட பிறகு உப்புப் பெறாத விஷயத்துக்கெல்லாம் சண்டையும் சச்சரவும் வந்து விடுவது இயற்கைதானே? அதனால் கல்யாணம் முடித்த கையோடு தாத்தா என் சின்னப் பாட்டியைத் தனியாக வேறொரு வீட்டில் குடிவைத்து விட்டார். ரெண்டு பாட்டிகளின் மத்தியில் அதனால் எந்தப் பிரச்னையும் வர வழியில்லாமல் போய் விட்டது. சின்னப் பாட்டியும் அவள் பாட்டுக்கு ரெண்டு வருஷத்துக்கு ஒரு பிள்ளை பெற்றுக் கொண்டிருந்தாள். என் பாட்டியும் சளைக்காமல் அவளுடைய பங்குக்கு அதே மாதிரி ரெண்டு வருஷத்துக்கு ஒரு பிள்ளை தொடர்ந்து பெற்றுக் கொண்டிருந்தாள்.

**பு**துப்புது தலைமுறைகள் வந்து விட்டன. என் தாத்தா இறந்து பதினைந்து வருஷங்களுக்கும் மேலாகி விட்டது. செத்துப் போவதற்கு முன்னால் வாழ்க்கையில் என்னென்ன கஷ்டமெல்லாம் படணுமோ அத்தனை கஷ்டமும் பட்டுத்தான் செத்தார் தாத்தா. அவருடைய வியாபாரங்கள் நொடித்துப் போயின. தோட்டங்களெல்லாம் பாழாகிப் போயின. நிறையச் சொத்துக்கள் விற்கப்பட்டு அமிழ்ந்தன. சின்னப் பாட்டி செத்தும் வருஷம் எட்டு ஓடிப் போய் விட்டது. தொண்டு கிழமாய்க் கிடந்த பத்மா பாட்டிதான் எமப் பயலோடு இத்தனை வருஷமும் 'சடுகுடு' விளையாடி விளையாடிப் பதினைந்து நாள் முன்னாடி 'இது கிடக்கும் இன்னும் ஏழெட்டு வருஷத்துக்கு...' என்று எல்லாரும் நினைத்துக் கொண்டிருக்க, பொசுக்கென்று யாருமே எதிர்பார்க்காமல் கண்ணை மூடி விட்டது.

பாட்டி செத்துப் போவதற்குச் சரியாக நான்கு நாட்கள் இருந்த போது எதேச்சையாக வீட்டில் பாட்டியுடன் நான் மட்டும் தான் இருந்தேன்.

''ராசப்பா!'' பாட்டி கூப்பிட்டாள்.

''என்ன பாட்டி?''

''வேற யாரும் வீட்ல இல்லையா ராசா?''

''ஒருத்தரும் இல்லை பாட்டி.''

''ஒன்கிட்ட ஒரு சங்கதி சொல்லணும். கிட்ட வரீயா?''

''இந்தா வரேன் பாட்டி.'' பாட்டிக்கு ரொம்பவும் நெருக்கமாய்ப் போய் உட்கார்ந்து கொண்டேன்.

''என்ன விசயம் பாட்டி?''

''யார்கிட்டேயும் சொல்லிரக் கூடாது.''

''சொல்லவே மாட்டேன்.''

''ரொம்ப வருசத்துக்கு முன்னாடி ஒங்க தாத்தா எப்புடி சந்திரவதியையும் கல்யாணம் செய்துக்கிட்டாக என்கிற சமாசாரமெல்லாம் ஒனக்குத் தெரியும் இல்லீயா?''

''ஊர்ல இருக்கற எல்லாத்துக்குமே தெரிஞ்ச சமாசாரம்தானே பாட்டி அதெல்லாம்?''

''வேற ஒரு சூட்சுமம் இருக்குய்யா. அதுல... சந்திரவதியையும் கட்டிக்கணும்ங்கிற நெனைப்பு ஒருநா கூட தாத்தாவுக்கு வந்ததே கெடையாது ராசா... அவுக பாட்டுக்குத் துட்டு சம்பாதிக்கிறதுலேயே தான் எப்பவும் குறியா இருப்பாங்களே தவிர, வேறு ஒரு ஸ்மரணையே வராது அவுகளுக்கு. சும்மா கிடந்த சங்கை ஊதிக் கெடுத்த மாதிரி அவுக மனசைக் கெடுத்த பாவி யார்னு யாருக்காச்சும் தெரியுமா...?''

''நீ என்ன பாட்டி சொல்றே?''

''எல்லாம் இந்தப் பொச கெட்டவ செய்து வச்ச வினை...'' பாட்டி சேலைத் தலைப்பில் மூக்கைச் சிந்தி, கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

''செவனேன்னு கெடந்த அவுகளைப் போயி நான்தான்ய்யா புத்தி பிசகிப் போயி உசுப்பி விட்டுத் தொலைச்சேன்...



"சார், வீரப்பன் ஒளிஞ்சிருக்கிற இடத்தைப் பற்றித் தகவல் கிடைச்சிருக்கு...!"

"சரி, சரி... ஒரு வாரத்துக்கு அந்தப் பக்கம் போக வேண்டாம்னு நம்ம ஆளுங்க எல்லாத்துக்கும் சொல்லிடுங்க!"

— ஆர். ரத்னசாமி

எனக்கு வந்த அதிர்ச்சி இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாது.

"என்ன பாட்டி இது — அநியாயமா இருக்கு. சின்னப் பாட்டியையும் கட்டிக்க நீயா தாத்தாவைத் தூண்டி விட்டே?"

"பொறாமை! பொட்டச்சிங்ககூட பெறந்த குணமாச்சே பொறாமை... என்னை மட்டும் விட்டுரமா அது. சனி புடிச்சி ஆட்டின மாதிரி மனசுக்குள்ள பொறாமை பிடிச்சி என்னை ஆட்டுச்சுய்யா ராசா. என் தங்கச்சி சந்திரவதி இருக்காளே — அவ சின்ன வயசுல கருவாச்சியா இருந்தாலும் கரும்புக்கட்டுக் கணக்கா இருப்பா... நிகுநிகுன்னு... பாத்தவன் நின்னுருவான் அசந்து போயி... அவளை ஒருவாட்டி திருச்சுழி கோயிலுக்குக் கூட்டிட்டுப் போயிருந்தேன். அப்ப அங்க கோட்டைபட்டி சமீன்தாரு மவனும் வந்திருந்தான். சந்திரவதியைப் பாத்ததும் அப்படியே சொக்கிப் போய் நின்னான். அவனும் நம்ம சாதிக்காரன்தான் ராசா.... இந்த சமாசாரம் அவனுக்கும் தெரிஞ்சு போச்சி. சந்திரவதியை யார் ஏதுன்னு வெசாரிச்சிப் பாத்திட்டு அவளைப் பொண்ணு கேக்கணும்னு அப்பவே முடிவு பண்ணியிருந்தாக... கோயிலுக்குப் போயிட்டு வந்த அன்னைக்கு ராவுல உறக்கமே வரலை எனக்கு... சந்திரவதி பெரிய சமீன்தாரு வீட்டுக்கு மருமவளா போயிடுவாளோன்னு நெனைச்சி நெனைச்சி பொறாமையில் புழுங்கிப் போய்க் கெடந்தேன். ஏன்னா — அதுவரைக்கும் எங்க அப்பா வீட்ல என் கொடிதான் பறந்துக்கிட்டு இருந்திச்சு. பெரிய சிமான் வீட்டு மருமவனு எங்க அம்மா வீட்ல என் பேச்சுக்குத்தான் செல்வாக்கு. பெரிய ராணி மாதிரி நான் அவுகளுக்கெல்லாம். கோட்டை பட்டி சமீன்தாரு ஆளுங்க ரொம்பப் பெரிய சமஸ்தானம். சந்திரவதி அவுக வீட்டுக்கு மருமவளா போயிட்டா அவதான் என்னை விடப் பெரிய ராணியாட்டம் ஆயிடுவா... பெறகு அவ கொடிதான் பறக்கும் எங்க அம்மா வீட்ல... அந்த சமீன்தாரு வீட்டுக்கு இவ மருமவளா போயிடவே கூடாதுன்னு நெனைச்சேன். அதுக்கு என்ன செய்யலாம்னு கெடந்து விடிய விடிய யோசிச்சிப் பார்த்தப்ப எனக்கு இந்த வழி ஒண்ணுதான் தெரிஞ்சது.. சமீன்தாரு மவன் விசாரிச்சி வந்து பொண்ணு கேக்கறதுக்கு முன்னாடி நாம முந்திக்கணுமேன்னு அவசரம் கெடந்து ஒரு பக்கம். ஊசி மருந்து ஏத்தற மாதிரி விசயத்தை ஏத்தினேன். ஒடனே ஒங்க தாத்தாவும் தார்ப்பாச்சைக் கட்டிக்கிட்டுப் பொறப்பட்டுப் போனாக. அவளைக் கட்டிக்கிட்டு வந்த பெறகுதான் மறு சோலியும் பார்த்தாக. ஆனா — நாந்தான் அந்த மனுசனை உசுப்பி விட்டேங்கிறதை மட்டும் ஓர்த்தர்ட்டேயும் சொல்லிரக் கூடாதுன்னு கண்டிசனா சொல்லி வச்சிட்டேன். இல்லேன்னா என் தலையில்ல உருண்டு போயிரும்...."

"நீ சொன்னதெல்லாம் சரிதான் பாட்டி. தாத்தாவை நீ உசுப்பிவிட்டே... நீ உசுப்பி விட்ட மாதிரியே கௌம்பி அவரும் போனாரு. ஆனா — பெரிய மாப்ளை கேக்கறார் என்கிறதால மட்டும் ஒரு மனுசர் தன் சின்ன மவளையும் கட்டிக் கொடுத்திடுவார்னு எப்படி நீ எதிர்பார்த்தே?"

"கட்டிக் குடுத்தார்ல...! அது ஒரு காலம்யா ராசா..."

"சின்னப் பாட்டி தாத்தாவைக் கட்டிக்க முடியாதுன்னு சொல்லியிருந்தாலும் விசயம் நீ நெனைச்ச மாதிரி நடந்திருக்காதே?"

"ஒனக்கு வெவரம் தெரியாது. அதனால கேக்கறே... ஒன் தாத்தா மேல அந்தக் கருவாச்சிக்கு எப்பவுமே ஒரு கண் உண்டு ராசப்பா. அவ மனசு எனக்கு எங்கே தெரியும்னு அந்தப் பொச கெட்டவளுக்கு நெனைப்பு. எனக்கா தெரியாது ஒரு பொட்டச்சி பத்தி. அதுவும் என்கூடப் பொறந்த தங்கச்சி. தெரியாம போயிடுமா? அவுகளைப் பாத்தாதான் அவளுக்கு ரெண்டு கன்னமும் செவந்து பூத்திருமே பூத்து... பொங்கிப் பொங்கில்ல பேசுவா. அதைப் பாத்திருக்கிறதாலேதான் தெரிஞ்சது எனக்கு — கல்லை எடுத்தெறிஞ்சா மாங்கா விழுந்து போகும்னு...!"

"என்னதான் நீ சொன்னாலும் — ஒன் புருசனையே பங்கு போட்டுக்கற அளவுக்கா அப்படியொரு பொறாமைன்னு நெனைச்சா எனக்கு ரொம்ப ஆச்சர்யம் தான் வருது பாட்டி."

"என் கொடி அரைக்கம்பத்ல பறந்தாலும் பரவாயில்லை. அந்தக் கருவாச்சியோட கொடி உயரத்ல பெரிசாப் பறந்திரக் கூடாது! அதான் ராசப்பா என்னோட ஒரே நெனைப்பு."

பாட்டியின் இந்த மனோநிலை உண்மையில் ஆச்சர்யமானதுதான். செத்துப் போவதற்கு முன்னால் இதை என்னிடம் மட்டும் ஏன் சொல்லி விட்டுப் போனாள் என்பதை நினைத்தால் அதை விடவும்தான் ஆச்சர்யமாக இருக்கிறது... நினைத்துப் பார்த்தால் தாத்தா, பாட்டி, சின்னப் பாட்டி மூன்று பேருமே ஆச்சர்யமான மனுஷ ஜென்மங்கள்தான்...





[illegible] என முகததை அடிககடி கழுவ வேண்டி உள்ளது. சோப்புகள் அலாஜி ஏற்படுததுவதால், அதை உபயோகிக்க விருமப விலலை. வேறெப்படிதான், என் முகததைக் கழுவுவது?

ப: சோப்புக்குப் பதில் இயற்கையாகவே தேய்த்துக் கழுவலாம். புல்லரிசிக்கூழ், துளசி, "witch-hazel" எனப்படும் ஒரு வகை வட அமெரிக்கச் செடி (இது கிடைககா விட்டால பனனீரை பயனபடுததவும) மற்றும் உப்புப்படிகம் – இவற்றைக் கலந்து பயன்படுததலாம். இதமான முறையில் முகத்தில் வட்ட வடிவில் இதைத் தடவி 5 நிமிடங்கள் கழிதது நிறைய தண்ணீரில் முகம் கழுவுங்கள்.

கே: என் முகத்தில் சிவப்பு புள்ளிகள் உள்ளது. இதனால் நான், மிகவும் வித்யாசமாகக் காட்சி அளிக்கிறேன். இதிலிருநது மீள நான் என்ன செய்வது?

ப: பொதுவாக நுண்புழை நாளங்கள் அடைத்துக் கொண்டால், சிவப்புப் புள்ளிகள் முகத்தில் தோன்றும். "Lettuce" எனப்படும் ஒரு வகைக் கீரையின் பாலை பூசினால் முகத்தில் உள்ள சிவப்புப் புள்ளிகள் மாறுவதுடன், மென்மையாகவும் செய்திடலாம். இதைத் தயாரிக்க "Lettuce" இலைகளை ஓடும் நீரில் கவனமாக கழுவவும். பிறகு, அவற்றை "Saucepan"" மீது வைதது சூடுபடுத்தவும். (ஆனால், இலைகளை எரிதது விடக் கூடாது) கொதிக்கும் நீரின் மேல் இந்த இலைகளை மூடி வைத்தாலும் போதும். அதாவது இறுக்கமாக மூடி, அரை மணி நேரததிற்கு இளஞ்சூடு படுத்தவும். குளிர வைத்த பின் ஒரு மிகஸியில போட்டு கலககவும அததுடன் 8–10 வேப்பிலையையும், துளசி இலையையும் சேர்த்து அழுந்த நசுக்கி அந்த சாறையும் சேர்க்கவும். இக் கலவையை, ரெஃப்ஜிரிரேட்டரில் வைத்தால், சிவப்புப் புள்ளி தோன்றும் போதெல்லாம் இதைப் பயன் படுத்தலாம்.

கே: என் முகத்தில் பழுப்புப் புள்ளிகள் ஏற்பட்டதால், என் அழகே குறைந்து விட்டது. நான் என்ன செய்ய வேண்டும்?

ப: சூரியக் கதிர்கள் அதிகமாக தாக்குவதால், இது போல பழுப்புப் புள்ளிகள் ஏற்படுவது நமது வெப்பமான நாட்டில் சகஜமான பிரச்சினைதான். கீழ்க்கண்ட சிகிச்சையை செய்து வந்தால் அவற்றை லேசுப்படுத்தி பிறகு அவற்றை ஒழித்தும் விடலாம்:

ஒரு தேக்கரண்டி முள்ளங்கிச்சாறை, "யோகர்ட்"டுடன் சேர்த்து கலக்கவும். பிறகு பழுப்புப் புள்ளிகள் மீது பூசவும். அது காய்ந்த பின், வெதுவெதுப்பான நீரில் முகம் கழுவவும். இங்கிலாந்தில் உள்ள ராஜ குடும்ப அழகு நிபுணர்கள், மூன்று பங்கு எலுமிச்சை சாறில் ஒரு பங்கு "ரம்"மை கலந்து பயன்படுத்தினார்களாம்!

கே: என் உதடுகள் வருடம் முழுவதும் வறண்டும், வெடிப்பு ஏற்பட்டும் உள்ளது. எவ்வளவோ க்ரீம் தடவியும் பயனில்லை. எனக்கு உதவுங்கள்.

ப: லெவண்டர்-எண்ணெய் (அல்லது 4–5 மல்லிப் பூச்சாறு) பாதாம் எண்ணெய் மற்றும் தேன்–இவை மூன்றையும் கலந்து உங்கள் உதடுகளில் தடவவும். பட்டு போன்ற உதடுகளை மீண்டும் பெற தினமும் பயன்படுத்துவது நல்லது

# மென்பட்டு மேனி காக்க எளிய குறிப்புகள்



டாக்டர் பாரதி மா

கே: என் வயது 25. எனக்கு இப்போது பரு வளர்கிறது. மேனி இளமையாக இருந்தா முகத்தில் பருக்களால் தழும்புள்ளது. இதை எ மிதப்படுத்துவது?

ப: உங்கள் வீட்டில் இந்த சிகிச்சையை செய் தழும்புகள் மறைந்து புதுமை மி புத்துணர்வுமிக்க சருமம் பெறலாம். ஆ அதற்கு மிகவும் தாமதமாகும். ஏனெனில், மாற்றம் மெதுவாகத்தான் நடக்கும். என பொறுமை அவசியம். ஒரு துண்டு பப் பழத்தை முகத்தில் தேய்க்கவும். 15 நிமிட கழித்து முகம் கழுவவும். தினசரி ஒரு மு இப்படி செய்யவும். பப்பாளியில் உ புரதச்சத்தான பெப்ஸின், சரும மேற்பர உள்ள தழும்பை மெதுவாக அகற்றுகிறது. தீங்கற்றது, சக்தி மிக்கதென்றாலும் பூ குணமாக 2,3 வருடங்கள் ஆகலாம்.

வாசகர்களே!

உங்கள் கேள்விகளை அனுப்ப வேண் முகவரி: Rexona-Tips on Skin C P.O. Box No. 758. Bombay-400 001





# நாம் அறியாத தியாகிகள்



* சிவகுருநாதன்

"நம் நாட்டுக்குச் சுதந்திரம் வாங்கிக் கொடுத்தவர் யார்?" — ஒரு பள்ளியாசிரியர் கேட்க, "காந்திஜி!" என்று பதில் கூறுகிறாள் ஒரு சிறுமி.

"இன்னும் சில சுதந்திரப் போராட்ட வீரர்களின் பெயர்களைச் சொல்லுங்கள்..." ஆசிரியர் மீண்டும் கேட்க,

"நேருஜி," "சுபாஷ் சந்திர போஸ்", "ராஜாஜி", "சர்தார் படேல்"; "காமராஜர்", "பகத் சிங்"...... என்று சிறுவர் சிறுமியர் பிரபல தலைவர்களின் பெயர்களை அடுக்குகின்றனர்.

— **Unknown Freedom Fighters** என்ற **Documentary** திரைப்படத்தின் ஆரம்பக் காட்சி இது. இதைத் தொடர்ந்து ஊர் பேர் தெரியாத பல எளிய மக்களை நமக்கு அறிமுகம் செய்து வைக்கிறது இத் திரைப்படம். அவர்கள் எல்லோருமே இந்திய சுதந்திரத்துக்காகப் போராடியவர்கள். **கிருஷ்ணஸ்வாமி அசோஸியேட்ஸ்** தயாரித்து வழங்கிய அப்படத்தில் இடம்பெற்றுள்ள சிலர்:

● **சாந்தாராம் வகீல்** — காந்திய மார்க்கத்தைத் தேர்ந்தெடுத்து விடுதலைப் போரில் இறங்கிய இவர் தமது வாழ்நாளில் கிட்டத்தட்ட இருபத்தைந்து ஆண்டுகள் சிறை வாசம் செய்தார். தமது வீராவேசமான மேடைப் பேச்சுக்களால் மக்களைச் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபடுத்திய இவரைப் போலீஸ் கொடுமைப்படுத்தியது. ஆனாலும் அவர் இறுதிவரை மனந்தளராத காந்தியவாதியாக அஹிம்சையையே கடைப்பிடித்தார். திருமணம், குடும்ப வாழ்க்கை பற்றிய சிந்தனைகளுக்கு இவருக்கு அவகாசமே இருக்கவில்லை. தள்ளாத வயதிலும் தாமே சமைத்துச் சாப்பிடுகிறார்.



* மாரிமுத்து செட்டியார்

* காந்தி நாயர்





* காந்தி செட்டியார், ஆறுமுகம் செட்டியார்.

● **சிவகுருநாதன்** — தூத்துக்குடி சங்கர ராமேஸ்வரன் கோயிலில் தெய்வீகப் பாக்களைப் பாடுபவர். பக்தி சிரத்தை மிக்க இந்தச்சாது மனிதர் 1927 இல் தேசியக் கொடி போராட்டத்தில் கலந்து கொண்டார். பொதுக் கட்டடங்களில் யூனியன் ஜாக் கொடியை இறக்கிவிட்டு மூவர்ணக் கொடியை ஏற்றியதற்காகச் சிவகுருநாதன் பல வருடங்கள் சிறைவாசம் அனுபவித்தார்.

● **கிருஷ்ணன் நாயரைக்** கேரளத்துக் கண்ணனூர் மாவட்ட மக்கள், 'காந்தி கிருஷ்ணன் நாயர்' என்றுதான் அழைக்கிறார்கள். உப்பு சத்தியாகிரஹத்தில் கலந்து கொண்ட இந்தத் தியாகி இதை, காந்தியத் தத்துவங்கள் பற்றிய சொற்பொழிவுகள் ஆற்றி, நல்வழிகாட்டும் தோழனாகவும் ஆசானாகவும் இருக்கிறார்.

● **மாரிமுத்து செட்டியார்** — சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டதற்காக தமது மாநிலத்திலிருந்தே வெளியேற்றப்பட்டார். அப்போது கோலாரை விட்டு அகன்று தர்பபுரியில் குடியேறியவர் கிராமத்து மருத்துவராக விளங்குகிறார்.

● **கல்பனா ஜோஷி** — இந்த அம்மையார் மாணவப் பருவத்தில் தமது கல்லூரியின் பௌதிக ஆய்வுக் கூடத்தை வெடி குண்டுகள் தயாரிக்கப் பயன்படுத்தினார். ரகசியமாகத் தயாரித்த வெடிகுண்டுகளைச் சுதந்திரப் போராளிகளுள் தீவிரவாதிகளுக்கு அனுப்பி வந்தார். இவரது சகாக்கள் சிட்டகாங்க் நகரிலிருந்த அரசாங்க ஆயுதக் கிடங்கைக் கைப்பற்றினார்கள். கல்பனா ஜோஷி தலைமறைவானார். அவரைக் கண்டுபிடித்து வருவோருக்குப் பரிசு அறிவித்தது பிரிட்டிஷ் அரசாங்கம்! தமக்கும் தமது கூட்டத்தினருக்கும் அடைக்கலமும் ஆதரவும் தந்த கிராம மக்களை மறக்கவே முடியாது என்கிறார் கல்பனா. 'அவர்கள் உதவியால்தான் எங்கள் போராட்டம் நான்காண்டுகளுக்கு நீடிக்க முடிந்தது' என்கிறார்.



* கல்பனா ஜோஷி

● **காந்தி செட்டியார், ஆறுமுகம் செட்டியார்** — ஆகிய இருவரும் தூத்துக்குடியைச் சேர்ந்த தியாகிகள். போலீஸ் வன்முறையையும் சிறைவாசத்தையும் தாங்கிச் சுதந்திரத்துக்குப் போராடிய இவர்களுடைய தோள்கள் இன்று கை வண்டிகள் இழுக்கின்றன — பிழைப்புக்காக!



* சாந்தாராம் வகீல்

சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் எடுக்கப்பட்ட இந்த டாகுமெண்டரி திரைப்படம், 'நாடெங்கிலும் உள்ள முகமறியாத் தியாகிகளை அலட்சியப் படுத்தினால், சரித்திரம் நம்மை மன்னிக்காது' என்ற வாசகத்துடன் முற்றுப் பெறுகிறது. இன்றைக்குப் பொருந்துகின்ற கருத்து.

"என்னய்யா தொரைசாமி, தூங்குறியா?'' என்று கேட்டவாறே மிடுக்காய் வந்து நின்ற குமரேசனைக் கண்டதும் உள்ளூர ஓர் அச்சம் எழ, இருக்கையை விட்டு எழமுயன்றான் துரைசாமி.

''...சேச்சே!... என்ன அப்படிக் கேட்டுட்டீங்க?... எதுனாச்சும் ரி கா ர் ட் ஸ் வேணுமா?.....''

''யெஸ்... 1987-88 ஆம் வருஷத்து ஆடிட் ஃபைலை எடு, ஜல்தி.... மானேஜர் கேக்கறாரு...''

எடுக்கத் துரைசாமி சென்றதும், ஏதோ தப்புச் செய்கிறவன் மாதிரி, அங்கிருந்த காலி நாற்காலியில் பட்டும் படாமலும் அமர்ந்து கொண்டான் குமரேசன்.

அலுவலகத்தின் முடிந்துபோன பழைய கோப்புகளையும், புத்தகங்களையும் பாதுகாவலாய் வைத்திருக்கும் 'ரிகார்ட்ஸ் செக்ஷன்'. அலுவலகத்தின் ஒரு மூலையில் இருக்கும் அதில், துரைசாமியைத் தவிர, சில எலிகளும் இருந்தன. பழைய புத்தகங்களின் நெடி, பூச்சி வராமல் தடுக்க அவ்வப்போது தூவப்படும் மருந்தின் கமறல் ஆகியவற்றுக் கிடையே துரைசாமிக்கு வேலை. அலுவலகத்தின் மற்ற பகுதிகளிலிருந்து 'தற்போது தேவையில்லை' என்ற முத்திரையுடன் மாற்றப்படும் கோப்புகளையும் மற்ற ஆவணங்களையும் விஷயம் வாரியாக, வருஷம் வாரியாகப் பிரித்து அடுக்கிவைக்க வேண்டியதும், தேவைப்படும் போது எடுத்துக் கொடுக்க வேண்டியதும் அவனது அன்றாடப்பணி. 'ரிகார்ட் கிளார்க்' என்பது அவன் தொழிலுக்கு, அலுவலகம் அளித்த நாமகரணம்.

''.... சரி. குறிச்சுக்க. பிறகு ஞாபகமாக் கேட்டுவாங்கிக்க. ஒரே மருந்து நெடி. எப்படித்தான் இதுலே இருக்கியோ?'' என்று முகத்தைச் சுளித்துக் கொண்டு வேகவேகமாய்ச் சென்ற குமரேசனையே பார்த்தான்.

'.... அக்கௌண்ட்ஸ் டிபார்ட்மென்ட்லே இருக்கான். .... அக்கவுண்டென்டுக்கு வலது கை.... மூச்சுக்கு முந்நூறுவாட்டி மானேஜர் கூப்பிடுவாரு... கம்பெனி லாப நஷ்டக் கணக்கெல்லாம் பாக்குறவன்....'

பெருமூச்சுடன் தன் இருக்கையில் அமர்ந்து கொண்டான். அந்தச் சலனத்தினால் அஞ்சி, விழுந்தடித்துக் கொண்டு ஓர் எலி ஓடிற்று.

அலுவலகத்தின் மற்றபகுதிகள் குளிர்பதனம் செய்யப்பட்டவை. ஜிலீரென்று இனிமையை வாரிக் கொட்டும். மெத்து மெத்தென்று தரையெல்லாம் விரிப்பு சுகம் கூட்டும். வண்ணச் சுவரெல்லாம் எழிலோவியங்கள். நடுநடுவே பூச்செடிகள், குளிர்பதனக் குளுமையில் சுகித்து இலையசைக்கும்.

காற்றே வராத அறையையும் 'லொடலொட'வென்று ஆடும் மின் விசிறியையும் பார்த்துப் பெருமூச் செறிந்தான் துரைசாமி.

'அந்தச் செடிகள் செஞ்ச அதிர்ஷ்டம் கூட நான் செய்யலே போல...'

மனத்தில் சோகம் சன்னமாய் இழையோடிற்று.

'ரிகார்ட் க்ளார்க்குன்னாலே மட்டம்

# செடி நிழலில் ஓர் இளைப்பாறல்






தான்' என்று நினைத்துக் கொண்டான். சில நாட்களுக்கு முன்னர் அலுவலகக்கான்டீனில் தேநீர் சாப்பிட நுழைந்த போது நிகழ்ந்த நிகழ்ச்சி மனத்தை உறுத்தி, நினைவில் எழுந்தது.

அக்கவுண்ட்ஸ் டிபார்ட்மென்ட், சேல்ஸ் டிபார்ட்மென்ட் ஆகியவற்றைச் சேர்ந்தவர்கள், உட்கார்ந்து பேசிக் கொண்டே காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அலுவலகத்தின் வருமானம் அதிகரித்திருப்பது பற்றியும், சேல்ஸ் டிபார்ட்மென்டிற்குப் பாராட்டுப் பத்திரம் அளிக்க, பம்பாயிலிருந்து ஜெனரல் மானேஜர் வரப்போவது குறித்தும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு கோப்பைத் தேநீர் அருந்தலாமென்று உள்ளே நுழைந்த துரைசாமிக்கு, அத்தனை பேரைப் பார்த்ததும் உதறலெடுத்தது.

அப்போது குமரேசன் ''.... யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னேன்னு சொல்றது சரிதாம்பா... என்னடா திடீர்னு பூச்சி மருந்து நாத்தம் அடிக்குதேன்னு பாத்தேன்... தொரைசாமி நொழையறான்...'' என்று பெரிதாய்ச் சொல்லிச் சிரிக்கவும் மற்றவர்கள் ஆர்ப்பாட்டமாய்ச் சிரித்தார்கள்.

''அதுலே இன்னொன்று இருக்கு... நாமெல்லாம் இன்னைக்கு எப்படி வொர்க் பண்றது, நாளைக்கு எப்படி சேல்ஸை இம்ப்ரூவ் பண்றது, நாளன்னைக்கு என்ன ப்ரொஜக்ஷன் குடுக்கறதுன்னு கவலைப் படறப்போ, துரைசாமி பாடு மஜா. பத்து வருஷத்துக்கு முந்தின ரிகார்ட்ஸைப் பார்த்துக்கிட்டே பொழுதைக் கழிச்சிடுவான். அவன் இன்னமும் இந்தியன் இன்டிபென்டன்ஸுக்கே வரல்லே. குவிட் இண்டியா மூவ்மெண்டிலேயே இருக்கான். அவன் நடைமுறைக்கு வர்றதுக்குள்ளே, நாம ரிடையர் ஆகிடுவோம்...''

பெரிதாய்ச்சிரிக்கவும்,குன்றிப்போனான் துரைசாமி.

தலைவலி என்று தேநீர் சாப்பிட வந்தவனுக்கு மனமும் வலிக்கத் தொடங்கிற்று.

இன்றுதான் என்றில்லை, இதுபோலப் பலநாட்கள். துரைசாமி என்றாலே மற்றவர்களுக்கு அலட்சியம்.

ஒரு சமயம் அவன் லீவ் லெட்டர் கொடுத்த போது, ''ஏம்பா தொரைசாமி.... இங்கிலீஷ் தெரியல்லேன்னா யாரையாச்சும் கேக்கக் கூடாது?... அஸ் ஐ அம் தி ஒன்லி ஹஸ்பண்ட் ஆஃப் மை வொய்ப்னு லெட்டர் எழுதியிருக்கியே, என்னய்யா அர்த்தம்?....'' என்று மானேஜர் அதட்ட, சுற்றியிருந்தவர்கள் குபீரெனச் சிரிக்கவும் துடித்துப் போனான்.

''.... இல்லே சார்... என் வொய்ப்புக்கு ஒடம்பு சரியில்லே. அவளைப் பாத்துக்க, வீட்டிலே என்னை விட்டா யாருமில்லே. அதான் லீவு கேட்டேன்...''

''அதுக்கு இப்படித்தான் எழுதறதா?... போய்யா. இனிமேல் தமிழ்லே லீவு லெட்டர் எழுது....''

''தமிழ்லேயும் இப்படித்தான் எழுது

ஜெயந்தன்

வான். இல்லே தொரை?....''

மீண்டும் சிரிப்பலை சித்ரவதை செய்ய, கண்ணீர் வரும் முன் அவ்விடம் விட்டு அகன்றான்.

'ஏன் என் நிலை இப்படியாயிற்று? நல்ல படிப்பும் பதவியும் இருந்தால் இம் மாதிரியாகியிருக்குமா? நாலு பேர் என்னை மதிக்கும் நிலை வருமா? என்னைப் பார்த்துப் பிரமித்து, 'துரைசாமி' என்று மரியாதையுடன் அழைக்கும் நாள் வருமா?'

வேலைதான் அற்பமாய்ப் போயிற்று, ஆளாவது பார்க்கக் கம்பீரமாய் மிடுக்காய் இருக்கக்கூடாதா? தொற்றலாய்க் கருப்பாய், மெலிதான கூன் விழுந்த முதுகும், தூக்கிய முன் பல்லும், பால்ய வழுக்கையுமாய்....

சரி. அதுதான் இல்லை. அடாவடியாய்ப் பேசவாவது தெரிகிறதா? பேசக் கூட வர வில்லையே? அன்றொரு நாள் மானேஜர் அவசரமாய் ஒரு ஃபைல் கேட்டாரென்று எடுத்துக் கொண்டு போக, அவர் மிடுக்காய் 'உன் பெயரென்ன?' என்று கேட்க, அவசரத்தில் வாய் குழறி 'துசைராமி' என்று கூற, 'வாட்' என்று உரத்துக் கேட்க, அருகேயிருந்த ஸ்டெனோ பெரிதாய்ச் சிரித்து 'துரைசாமி' என்று திருத்த.... எவ்வளவு ஏளனமாய் மானேஜர் என்னைப் பார்த்தார்?

கலங்கிய கண்களைப் பிறர் அறியா வண்ணம் மூடிக் கொண்டான் துரைசாமி.

மூடியகண்களுக்குள் அவன் சக்கரவர்த்தியாய்க் கிரீடம் அணிந்து, சேடிப் பெண்கள் மலர்தூவி வரவேற்கப் பட்டுப்பீதாம்பரங்கள் அணிந்து கம்பீரமாய் நடந்து போவான். அவன் பார்க்கிற இடமெல்லாம் மக்கள் கை கூப்பி, வணங்குவர்....

''...அப்பா, ப்ளஸ்டு ரிஸல்ட் வந்தாச்சுப்பா... நான் தான் ஸ்டேட்லேயே ஃபஸ்டு... ஆயிரத்து இருநூறுக்கு, ஆயிரத்து நூத்து எழுபது மார்க் வாங்கியிருக்கேம்பா..''

— பிள்ளை சொல்லவும் பிரமித்துப் போனான் துரைசாமி.

அவன் பிள்ளை கோபால் மாநிலத்திலேயே முதல் மாணவனா? சந்தோஷம் பொங்கிற்று.

செய்தி சிறிப்பாய்ந்து, தெருவில் இருப்பவர்கள் வந்து பாராட்டினார்கள். பத்திரிகை நிருபர்கள் பேட்டி கண்டார்கள். துரைசாமியையும், அவன் மனைவியையும், கோபால் அருகே நிற்க வைத்துப் புகைப்படம் எடுத்தார்கள். தொலைக் காட்சி நிருபர் பேட்டி கண்டார்.

''ஏன் கோபால், நீ முதல் மாணவனாய்த் தேற யார் காரணம்? எப்படித் தயார் செய்தாய்?...''

''.... ஸ்கூல்லே நல்லா கோச் பண்ணினாங்க. ஆனா நான் இவ்வளவு மார்க் வாங்க, எங்கப்பாதான் காரணம். எங்க அப்பா ரொம்பக் கண்டிப்புக்காரர். அவர்னா எனக்குப் பயம் உண்டு. காலைலே அஞ்சு மணிக்கு எழுந்து பல் வெளக்கிட்டுப் படிக்க ஆரம்பிக்கணும். அது மாதிரி மாலையிலே வெளக்கேத்தி வச்சதும் கைகால் கழுவி, சாமி கும்பிட்டுட்டுப் படிக்க ஆரம்பிக்கணும். எங்க அப்பா ரொம்ப ஸ்ட்ரிக்டா இருப்பார்.... இந்த டிசிப்பிளினை ஒரு நாள் விட்டாக் கூடக் கோவிச்சுப்பாரு... ஆசிரியர்கள் பயிற்சி, அப்பாவின் கண்டிப்பு ரெண்டும் தான் என் வெற்றிக்குக் காரணம்....''

கோபால் சொல்லச் சொல்ல உருகிப் போனான் துரைசாமி.

செய்தித்தாள்கள் துரைசாமி, அவன் மனைவி, கோபால் ஆகியோரின் புகைப் படங்களை வெளியிட்டன. தொலைக் காட்சியிலும் காண்பித்துப் பேட்டியை ஒளி பரப்பி, துரைசாமியைக் க்ளோஸ் அப்பில் காண்பித்தார்கள்.

நமது அலுவலகத்தைச் சேர்ந்த திரு. துரைசாமியின் பிள்ளை, மாநிலத்திலேயே முதல் மாணவனாய்த் தேறியிருப்பதில் நமது நிர்வாகம் பெருமிதம் கொள்கிறது. ஒரு திறமையான தந்தையான துரைசாமியைப் பாராட்டுகிறது. கோபாலின் மேற்படிப்புச் செலவு அனைத்தினையும் நிர்வாகம் ஏற்றுக் கொள்கிறது... நமது ஜெனரல் மானேஜர், துரைசாமியைப் பாராட்டி மாலையணிவித்து, அவர் மகன் கோபாலுக்குப் பரிசளிப்பார்....''

பலத்த கைதட்டலுக்கிடையே மேடையேறினான் துரைசாமி. அதுவரை அவன் பார்த்தேயிராத ஜெனரல் மானேஜர் அவனைக் கை குலுக்குகிறார். மாலையணிவிக்கிறார். கேமராக்கள் மின்னுகின்றன. ஐந்தடி உயரமே உள்ள, நோஞ்சான் கோபால் விசுவரூபமெடுத்து, துரைசாமியை விண்ணளவாத் தூக்கியது போலத் தோன்றுகிறது.

''..... ஆளு சாதாரணமா இருந்தாலும். துரைசாமி ரொம்ப கெட்டிக்காரன். நிறை குடம். ரொம்பப் பேசமாட்டான். பிள்ளையைஎப்படிவளர்த்திருக்கான்பாத்தியா? மெச்சூர்ட் பெர்ஸன்...''

யாரோ சொல்ல, பலர் ஆமோதிக்கிறார்கள்.

''யெஸ், யெஸ்... டீப் வாட்டர்ஸ் ஆர் சைலண்ட்....''

---

''நடிகையை நம்பி நான் மோசம் போயிட்டேன்...''

''எப்படி?''



'''டைவர்ஸ்' பண்ண மாட்டேங்கிறா!''



— ஆர். ரத்னசாமி.

# முதற் கடவுள்

அன்னை பராசக்தி கைலாயத்துச் சித்திரக்கூடத்தைப் பார்வையிடுகையில் 'ஓம்' என்ற எழுத்தில் அவரது விழி மலர்கள் லயிக்க, அப்போது உதித்தவரே பிள்ளையார் என்கிறது ஸ்கந்த புராணம். கணபதி வழிபாட்டில் ஈடுபாடு கொண்டவர்கள் 'க' என்பதை அறிவின் முதலெழுத்தாகவும், 'ண' என்பதை அறிவின் இறுதி எல்லையாகவும் பொருள் கொண்டு, 'கணபதி,' அறிவின் முதலுக்கும் இறுதிக்கும் தலைவராகிய முதற் கடவுள் என்கின்றனர்.

**கணநாதனின் சில அபூர்வத் தோற்றங்கள்:**

**பால கணபதி:** நான்கு கைகளுள் ஒன்றில் வாழைப்பழம், இரண்டாவதில் மாம்பழம்,





மூன்றாவதில் பலாப்பழம், நான்காவதில் கரும்பு ஏந்தி, துதிக்கையில் கொழுக்கட்டையுடன், அருள் பாலிக்கிறார். ''கலாவத பூமி சம்ரக்ஷக'' என்று பூமிக்கு இயற்கை வளங்களை அருள்பவராகவும், ''கலாவத புத்தி பேஷக'' என்று அறிவு வறட்சியை நீக்குபவராகவும் வணங்கப்படுகிறார்.

**வல்லப மஹா கணபதி:** சிவனுடைய அர்த்தநாரீசுவரத் திருக்கோலத்தைப் போலவே ஆண்மை, பெண்மை — இரு தத்துவங்களையும் ஒருசேரக் காட்டுவதாகக்

கூறப்படுகிறது. விஷ்ணு, சிவன், மன்மதன், வராஹம் ஆகியோருடைய ஆயுதங்களான சக்கரம், சூலம், கரும்பு, கதை இவற்றை முறையே நான்கு வலது திருக்கரங்களிலும், லக்ஷ்மி, பார்வதி, ரதி, பூதேவி ஆகியோருடைய கரங்களை அலங்கரிக்கும் தாமரை, பாசம், உத்பல மலர், நெற்கதிர் இவற்றை நான்கு இடது திருக்கரங்களிலும் வைத்துக் கொண்டிருக்கிறார். முன் இரு கரங்களுள்



வலது கையில் மாதுளம் பழம். இடது கை வல்லபை தேவியை அணைத்தபடி உள்ளது. வல்லபையின் இடது கரத்தில் உடைந்த தந்தம் இருக்கிறது.

**பஞ்சமுக கணபதி:** ஆக்கல், அளித்தல், நீக்கல், மறைத்தல், அருளல் ஆகிய பஞ்ச கிருதிகளையும் உள்ளடக்கிய மூலாதார மூர்த்தி இவர். ஐந்து யானை முகங்களுடைய இவரே சிம்மத்தின் மேல் அமர்ந்து வரும் ஹேரம்ப கணபதியாகவும் சித்திரிக்கப்படுகிறார். பொதுவாக யானையை அடக்கி அதன் தலையில் கஜகேசரியாகச் சிங்கம் உட்காருவது தான் சொல்லப்படுகிறது. அந்தச் சிம்மத்தையும் அடக்கி ஆள வல்லவராக இங்கே வினாயகப் பெருமான் காட்சி தருகிறார்.

**ஜப்பானிய கணபதி:** ஜப்பான் நாட்டு கியோடா நகரத்தில் உள்ள டைகோஜி மடாலயத்தில் ஒரு மிகப் பழைய படம் உள்ளது. ஒன்பதாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட இந்தப் படம் ஓர் அபூர்வ, அழகிய வினாயகர் உருவம். தொப்பை, தொந்தி இல்லாத இந்த வினாயகரின் ஒரு கையில் கோடரியும் மற்றொரு கையில் ஒரு முள்ளங்கியும் உள்ளன. 'பினாயகா,' 'ஷோடன்,' 'காங்கிடன்' என்ற பெயர்களில் வினாயகரைப் பல நூற்றாண்டுகளாக வணங்கி வருகின்றனர் ஜப்பானியர்!

வினாயகர் வடிவம், மெக்ஸிகோ, எகிப்து, ரோம், கிரீஸ், சீனா, மங்கோலியா, கம்போடியா போன்ற தேசங்களிலும் வழிபாட்டுக்குரியதாகக் கருதப்படுகிறது.



தொகுப்பு: **நிர்மலா சக்கரவர்த்தி**

தகவல்கள் உதவி: **மஞ்சக்குடி ராஜகோபால சாஸ்திரிகள்.**

ஓவியங்கள்: **மணிவேல்.**

வண்ணப்படம்: **ரமணன்.**

**(நன்றி: டாக்டர் எம். ஜி. வரதராஜன்)**

# தனிமை

# 1

கதவைத் திறந்த ராமசேஷனின் கைகள் நடுங்கின. உள்ளே அடியெடுத்து வைத்த போது கால்கள் கனத்தன. நெஞ்சத்தின் பாரம் முழுதுமே கால்களில் இறங்கி நடக்க முடியாமல் அழுத்துவதைப் போல் உணர்ந்தார்.

மெதுவாகத் திரும்பிக் கதவைச் சாத்தி, யந்திரத்தனமாய் நடந்து, சாய்வு நாற்காலியை அடைந்து, அமர்ந்து, நிதானமாய்ச் சாய்ந்து பெருமூச்சு விட்டார்.

எதிரே சுவரில் லோசனியின் படம்.

எப்போதும் அந்தச் சாய்வு நாற்காலியிலேயே படிந்து ஓய்வெடுக்கும் ராமசேஷனின் பார்வையில் நிரந்தரமாகப் படர்ந்து கொண்டிருக்கும் வகையில் மாட்டப்பட்டிருந்த படம்.

கனிவான பார்வை... இதமான சிரிப்பு... லோசனி...

படத்தை ஏறிட்ட போது, முதல் முறையாக அவருடைய மனவலு வடிந்துபோய்த் தனிமை உணர்வு தலைநிமிர்த்தி நின்று அவரைப் பயமுறுத்தியது.

எதைப் பற்றியும் எப்போதுமே கவலைப் படாதவர் ராமசேஷன்.

'யாருடைய உதவியும் தேவையில்லை. யாரை நம்பியும் நான் இல்லை. என் கால்களின் மீது நின்று என்றைக்கும் எதையும் என்னால் சமாளித்து விட முடியும்' என்று சவால் விட்டு இத்தனை காலமும் வாழ்ந்து விட்டவர்.

அவருடைய முடிவுக்கெதிராக அவன் விரும்பிய யாரோ ஒரு பெண்ணையே மணந்து கொள்ளப் பிடிவாதம் பிடித்த ஒரே மகனை — மனைவியின் நகல் பிம்பமாக விளங்கி, அந்த ஒரு காரணத்தினாலேயே அவர் நெஞ்சம் முழுதும் வியாபித்திருந்த செல்லப் பிள்ளையைக் கொஞ்சமும் தயக்கமின்றி வீட்டை விட்டே வெளியேற்றியவர்.

அதன் காரணமாகக் கண்ணீர் விட்டுக் கதறிய லோசனியிடம், ''இதப் பாரு, உனக்கு நான்... எனக்கு நீ... அது போதும். வேறே யாரும் நமக்குத் தேவையில்லை'' என்று முரட்டுத்தனமாகக் கூறி அவளுடைய மன்றாடலை மறுத்து உதறியவர்.

திடீரென்று எதிர்பாராத வகையில் லோசனியின் மரணம் நிகழ்ந்து விட்டதைத் தெரிந்து கொண்டவுடன், ''நல்ல காரியம் செய்துட்டேம்மா. எனக்கு முந்தி நீ போனது தான் சரி. நான் போய் நீ தனியாயிட்டா ரொம்பக் கஷ்டப்பட்டுப் போயிடுவே. அப்படியில்லாம இப்படி நடந்ததுக்கு நீ ரொம்பவும் புண்ணியம் செய்திருக்கே'' என்று கூறி அழ மறுத்தவர்.

அந்த ராமசேஷன்தான் அவள் இறந்து போன இரண்டாவது நாள் இப்படி உடைந்து சிதறிப் போனார்.

மரணம் யாரை எப்போது தழுவும் என்பதைச் சொல்ல முடியாது என்பது அவர் அறியாதது அல்ல. அது ஓர் இயற்கை நியதி என்பதும் தெரிந்ததுதான். என்றாலும், லோசனியின் விஷயத்தில் அது நிகழ்ந்த வகைதான் எதிர்பாராதவிதமாக அமைந்து போய் விட்டது.

மகன் வீட்டை விட்டு வெளியேறிப் போய் விட்ட நாளிலிருந்தே அவள் உள்ளுக்குள்ளேயே குமைந்து கொண்டிருந்தாள். வெளிப்படையாகச் சொல்லித் தணித்துக்

---

**கல்கி பொன்விழா போட்டி**
**வாசகர் யோசனை — 1**

கல்கி பொன் விழாவையொட்டி வாசகர்களிடமிருந்து யோசனைகள் வரவேற்கப்படுவதாக அறிவித்திருந்தோம். ஏராளமான வாசகர்கள் யோசனைகளைத் தெரிவித்து எழுதி வருகிறார்கள். அவற்றுள் முதல் யோசனையாகத் தேர்வு செய்யப்பட்டு, ஹிந்து நாளிதழில் 6.8.90 அன்று வெளியான கீழ்க்கண்ட செய்தியை அடிப்படையாகக் கொண்டு இந்தச் சிறுகதை வெளியாகியுள்ளது.

**Costly error**

GAINESVILLE, Florida: A doctor was fined and another faced disciplinary action for mistakenly performing open-heart surgery on the wrong woman after a mix-up in patient records. Besides fining Dr. Howard W. Ramsey $ 5,000 on Friday, the State Board of Medicine ordered him to write an article for other doctors warning them about making the same mistake. Its action is still pending against Dr. Daniel Knauf, a University of Florida surgeon who operated on the healthy Palatka woman in 1988, for letting an assistant, who was not a doctor, examine the patient before surgery instead of doing it himself. During surgery, Mr. Knauf found the woman's valve normal and sewed her up again. — AP

இச் செய்தியின் அடிப்படையில் கதையெழுதலாம் என்று யோசனை தெரிவித்தவர்:

ஆர். ஸ்ரீதரன்,
பிளாட் எண்: 1, முதல் மெயின் ரோடு,
பானு நகர், அம்பத்தூர்,
சென்னை — 53.

ரூ. 25 பரிசு பெறுகிறார் ஸ்ரீதரன்.

— ஆசிரியர்.

## அபர்ணா நாயுடு

கொள்ள வழியில்லாமல், கணவருக்கெதிராகத் தன் உள்ளக் கொந்தளிப்பைக் கொட்டி அதனை வடிந்து போகச் செய்யத் துணிவில்லாமல் அடக்கி அடக்கி, அது உள்ளுக்குள்ளேயே எதிரொலித்து எதிரொலித்து, அடுத்த நாலைந்து ஆண்டுகளில் ரத்த அழுத்தம் என்கிற பெயரில் அது அவள் உடல் நலத்தையே பாதித்து, நடமாட்டத்தையே கட்டிப் போட்டு விட, ஒருநாள் அவள் நிலை மோசமாகியது.

அப்போதும் அவர் கலங்கவில்லை.

''உனக்கு நான்... எனக்கு நீ... அது போதும். வேறே யாரும் நமக்குத் தேவையில்லை'' என்று முன்னர் சொன்னதையே திரும்பச் சொன்னார்.

''ஒத்தாசைக்கு ஒருத்தரும் இல்லைங்கறதுக்காக உன்னை இப்படியே சீர்குலைஞ்சு போக விட்டுட மாட்டேம்மா... வீட்டில வச்சுக் கவனிச்சுக்க முடியலைன்னா இருக்கவே இருக்கு நர்ஸிங் ஹோம். சேர்த்துடறேன். நீ கவலையே படாதே.''

உறுதியாகச் சொன்னார். அப்படிச் சொன்னதோடு நிற்கவில்லை. உடனடியாக அதைச் செய்தும் விட்டார்.

அதற்கடுத்த இரண்டாம் நாள்தான் அந்தத் தவறு நேர்ந்தது.

**கா**லையில் எழுந்து, குளித்து, சமைத்து, சாப்பிட்டு முடித்து, வீட்டைப் பூட்டிக் கொண்டு, மனைவிக்குத் துணையிருக்க நர்ஸிங் ஹோமுக்குச் சென்ற போதுதான் அந்தச் செய்தி அவருக்குக் கிடைத்தது.

மருத்துவரல்லாத ஓர் உதவியாளர் செய்து விட்ட கோளாறு, இன்னொரு பெண்மணிக்குப் பதில் லோசனிக்கு இருதய அறுவைச் சிகிச்சை மேற்கொள்ளப்பட்டு, தவறு தெரிந்த போது மருத்துவர் பிளந்த மார்பை மூடித் தைத்து விட, இப்போது தீவிர சிகிச்சைப் பிரிவில் அவள்...

இரண்டு நாட்கள் அந்தப் பிரிவில் இருந்த லோசனி மூன்றாம் நாள் மூச்சடங்கிப் போனாள்.

காரியங்கள் நடக்க வேண்டுமே என்று கவலைப்படவில்லை அவர். அதற்காக மகன் எங்கே இருக்கிறான் என்று தேடவும் இல்லை.

''எனக்கு அவள்.. அவளுக்கு நான்..! பிள்ளை என்பவன் எதிர்பாராமல் இடையில் நேர்ந்து விட்ட ஒரு விபத்து. அப்படி நடுவில் வந்தவன் நடுவிலேயே போய் விட்டான். அவ்வளவுதான். இப்போது நான்தான் என் மனைவிக்குக்



கொள்ளி போடப் போகிறேன்...''

அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள் அதிசயித்துப் போனார்கள்... 'இப்படியும் ஓர் எஃகு மனிதரா?'

**ம**றுநாள் அஸ்தியைக் கரைத்து விட்டு வீடு திரும்பிய போதுதான் திடுமென்று இடியாய் அந்த எண்ணம் அவருள் இறங்கியது.

சுவடே இல்லாமல் இந்த உலகத்திலிருந்து லோசனி மறைந்தே போய் விட்டாள். உடலை எரித்து, எஞ்சிய சாம்பலையும் கடலில் கரைத்தாகி விட்டது. அவருக்கு அவள்... அவளுக்கு அவர் என்று இருந்தவர்கள். இன்று அவள் இல்லை.

யோசனைகள் தீவிரமடைந்து, கடுமையான தனிமை உணர்வு ஓர் அதிர்வுடன் அவரைப் போர்த்த, அப்படியே கண்களை மூடிக் கொண்டார்.

உள்ளும்புறமும்ஒரேயடியாக அந்தகாரம் சூழ்ந்து கொண்டு விட்டதைப் போல இருந்தது...

**வா**சல் கதவு தட்டப்படும் ஒலி கேட்டது.

திடுக்கென்று கண் விழித்தார் ராமசேஷன். உடல் துணியாய்த் துவண்டிருந்தது. மனம் வெறுமையாகிப் போயிருந்தது. உட்கார்ந்தபடியே குரல் கொடுத்தார்.

''யாரு?''

மீண்டும் கதவு தட்டப்பட்டது.

''உள்ளே தாழ்ப்பாள் போடாமத்தான் இருக்கு.''

தயக்கமாகக் கதவு திறந்தது. அங்கே பிரேமிட்ட படம் போல் நின்றிருந்தவளைப் பார்த்த போது அவருடைய பார்வை கூர்மையாகியது. கேட்டார்.

''நீ... நீ... அந்த நர்ஸிங் ஹோம்ல ரிசப்ஷனிஸ்ட் இல்லை?''

தலையசைத்தாள்.

சட்டென்று அவருள் உஷ்ணம் பரவியது.

''என்ன? போலீஸுக்கு போக வேண்டாம், கோர்ட்டு — கேஸ்னு எதுவும் வேண்டாம், நஷ்டஈடு கொடுத்துடறோம், சமாதானமா — சமரசமா எல்லாத்தையும் பேசி முடிச்சுக்கலாம்னு சொல்லியனுப்பிச்சிருக்காங்களா?''

''இல்லை.''

''பின்னே?''

''நான்... நான் உள்ளே வந்து பேசலாமா?''

''அவசியம் இல்லை. அங்கேயிருந்தே சொல்லலாம்.''

தயங்கினாள். சொன்னாள்.

''நாம உயிருக்குயிரா நேசிச்ச ஒருத்தரை — நம்மோட மறுபாதியா வாழ்ந்திருந்த ஒருத்தரை இந்த மாதிரி இழக்கும் போது அது கொண்டு வருகிற அதிர்ச்சி, சோகம், தனிமை இதெல்லாம் எப்படியிருக்கும்னு எனக்குத் தெரியும். அந்த மாதிரி நேருகிற போது மனசைத் திருப்ப ஓர் ஆதாரம் இல்லைன்னா நாம நிலைகுலைஞ்சு போயிடுவோங்கறதும் எனக்குத் தெரியும்.''

''அதுக்காக?''

''ரெண்டு வருஷத்துக்கு முன்னால என் கணவர் ஒரு சாலை விபத்துல இறந்து போன போது எனக்கு ஏற்பட்ட மனக்குமுறல்தான் இப்போ உங்களுக்கும் ஏற்பட்டிருக்குங்கறதை உணர்ந்தேன். அதனால தான் வந்தேன்...''

சட்டென்று அவள் முகத்தை உற்றுப் பார்த்தார். அவளுடைய நெற்றியின் வெறுமை அவரைச் சுட்டது. அவளே தொடர்ந்து பேசினாள்.

''இந்த இரண்டு நாளா காரியங்கள் நடந்ததுல உங்க தனிமையை உணரக் கூட உங்களுக்கு நேரம் இருந்திருக்காதே...''

''......''

''... இனிமேல்தான் தனிமை ரொம்ப வாட்டும்... எனக்குத் தெரியும். இரண்டு வருஷம் ஆயிட்டாலும் அந்த ஞாபகங்கள் தீவிரம் குறையாம மனசுல ஒரு பக்கமா இருக்கு...''

''இப்ப உனக்கு என்ன வேணும்...''

''எனக்கு ஒண்ணும் வேண்டாம்... உங்களுக்கு எப்பவாவது ஒரு பேச்சுத் துணை அவசியம்னு தோணினா, ஒரு மாறுதல் தேவைன்னு பட்டா எங்க வீட்டுக்கு வரலாம். இது எங்க அப்பாவோட விசிட்டிங் கார்ட்... நான் அவர் கூடத்தான் இருக்கேன்...''

அவள் நீட்டிய கார்டை வாங்கிப் பார்த்தார். அவள் தொடர்ந்தாள்.

''உங்களுக்குக் குழந்தைகள் இல்லைன்னு தெரியறது...''

ராமசேஷனுடைய எஃகு மனம் இந்தக் கணத்துக்காகக் காத்திருந்தது போல் ஒட்டுமொத்தமாய் உருகி வெடித்தது. குமுறிக் குலுங்கிய அவரை மெள்ளச் சாய்வு நாற்காலிக்கு வழிநடத்தினாள் அவள்.



**அடுத்த இதழில்...**

- **அரசியல் சாதிக்காததை ஆன்மிகம் சாதிக்கிறது!**

  **— ஒரு நேரடி ரிப்போர்ட்**

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...




ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம். **"நேர்முகப் பயிற்சியும் உண்டு"**.

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

**உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்!**

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

# விவேகானந்தா கல்வி நிலையம்

**தபால் பெட்டி எண்: 4986, 9. மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17.**

எனக்கு நீண்ட நாட்களாகவே அந்த எழுத்தாளரைச் சந்திக்க வேண்டுமென்கிற ஆவல். என் பொழுது போக்குகளில் ஒன்று புத்தகங்கள் படிப்பது, அதிலும் காட்டூர் கோபாலனின் கதைகள் என்றால் மிகவும் இஷ்டம். வட்டாரச் சொற்களில் கதைகளைச் செதுக்குவார்.

அவரைப் பார்ப்பதற்கு இப்பொழுது ஓர் அரிய சந்தர்ப்பம் ஏற்பட்டுள்ளது. என் அலுவலக வேலையாகக் காட்டூருக்குப் பக்கத்து டவுன் வரை போக வேண்டியிருந்தது.

அங்கு சென்றவுடன்தான் ஞாபகத்துக்கு வந்தது, என் அபிமான எழுத்தாளர் வசிக்கும் ஊர் பக்கத்தில்தான் உள்ளது என்பது.

உடனே முடிவெடுத்துக் காட்டூர் செல்லும் பஸ்ஸைத் தேடினேன். பல நபர்களிடம் விசாரித்து டவுன் பஸ் நம்பரைத் தெரிந்து கொண்டேன். அதுவும் அந்த ரூட்டில் அடிக்கடி பஸ் போகாதாம். என்ன இருந்தாலும் எழுத்தாளரைச் சந்தித்து விடுவது என்ற முடிவுக்கு வந்து பஸ்ஸுக்காக காத்திருந்தேன்.

எனக்கு விவரம் தெரிந்து புத்தகம் வாசிக்க ஆரம்பித்த போது, வாசிப்பில் அவ்வளவாக இஷ்டமில்லை.ஒருகுறிப்பிட்ட வயதில் காட்டூர் கோபாலனின் எழுத்தைப் படித்தவுடன்தான் எனக்குப் படிக்கவே பிடித்தது.

காட்டூர் கோபாலனின் எல்லா நாவல்களையும் ஒரு வெறியோடு வாசித்தேன். அவருடைய எழுத்தின் மேல் எனக்கு எந்த அளவுக்கு வெறி என்பதற்கு ஒரு சம்பவத்தைச் சொல்லலாம்.

என் கல்யாணத்துக்காகப் பல இடங்களில் என் பெற்றோர் பெண் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஓர் இடத்தில் என் பெற்றோருக்குப் பெண்ணை மிகவும் பிடித்துப் போயிற்று.

சம்பிரதாயத்துக்கு என்னிடம் பெண் பார்க்கப் போகலாம் எனச் சொன்னார்கள்.



போனோம்.

பெண் பார்க்கும் படலம் நடந்து கொண்டிருந்தது. பெண்ணை அழைத்து வந்து காட்டினார்கள். எனக்கும் பெண்ணைப் பிடித்துப் போயிற்று. ஆயினும் நான் என் சகோதரியிடம் சில கேள்விகள் கொடுத்து, அதைப் பெண்ணிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுமாறு சொல்லியிருந்தேன்.

சீக்கிரத்தில் நல்ல சேதி சொல்வதாக என் குடும்பத்தினர் சொல்லி விட்டுப் புறப்பட்டனர்.

நான் என் சகோதரியை அழைத்துக் கேட்டேன். அந்தப் பெண் சினிமாச் செய்திகளைத் தவிர வேறெதையும் வாசிக்க மாட்டாளாம் என்று என் சகோதரி சொன்னதும் எனக்குச் சுவாரஸ்யம் போய் விட்டது. அப்படியானால் காட்டூர் கோபாலனின் எழுத்துக்களை எங்கே படித்திருக்கப் போகிறாள்! அப்படிப்பட்டவளைத் திருமணம் செய்து கொண்டால் வாழ்க்கை என்னாவது? பிடிவாதமாக நான் அப்பெண்ணை மறுத்து விட்டேன்!

இதற்குள் காட்டூர் செல்லும் பஸ் வந்து நின்றது. கூட்டம் எக்கச்சக்கம். நானும் அடித்துப் பிடித்து ஏறினேன். கிராமத்து ஜனங்கள் மூட்டை முடிச்சுக்களுடன் ஏறினர்.

குண்டும் குழியுமான ரோட்டில் பஸ் குதித்துக் குதித்துச் சென்றது. ஒரு வழியாகக் காட்டூர் வந்து சேர்ந்தது அந்த பஸ். கூட்டத்திலிருந்து நசுங்கிப் போய் இறங்கினேன். அங்கே முண்டாசு கட்டிக் கொண்டு நின்ற ஒரு பெரியவரிடம் கேட்டேன்: "ஐயா! காட்டூர் கோபாலன் வீட்டுக்கு எப்படிப் போகணும்?"

"கிழக்கப் போகணும்... இருங்க. வழி காட்டப் பொடியனை வரச் சொல்லுதேன்" என்று ஒரு சிறுவனைக் கைதட்டி அழைத்தார். கோவணத்துடன் இருந்த ஒரு சிறுவன் ஓடி வந்தான்.

"இந்தய்யாவைக் காட்டூரைய்யா வீட்டுக்கு அழைச்சுக்கிட்டுப் போடா" என்றார்.

சிறுவன் ஆர்வத்துடன், "குடுங்கய்யா. நான் தூக்கியாறேன்," என்றான் என் கையில் வைத்திருந்த சிறிய பெட்டியைப் பார்த்து.

"வேண்டாம். கனமில்லே" என்று மறுத்து விட்டு, அவன் கூடவே நடந்தேன்.

ஒரு வீட்டுக்கு அருகில் வந்ததும், "அதோ வேலி போட்டிருக்கே, அந்த வீடுதான்..." எனச் சொல்லிவிட்டுச் சிறுவன் திரும்பி ஓடி விட்டான்.

நான் மெல்ல அந்த வீட்டை நோக்கி நடந்தேன். கிராமங்களுக்கே உரிய ஓட்டு வீடு. சுற்றிலும் வேலி அமைத்த வாழைத் தோட்டத்திற்கு நடுவில் அமைதியாக இருந்தது வீடு.

கிராமத்தில்தான் இருக்கிறார் எனத் தெரிந்திருந்தாலும், இது மாதிரியான படு கிராமத்தில் இருப்பார் என நான் எதிர்பார்க்கவில்லை.

வீட்டின் முன்னே சில குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன. நான் கொஞ்சம் தயங்கி ஒரு குழந்தையைப் பார்த்துத் "தம்பி!" என அழைத்தேன்.

சிறுவன் திரும்பிப் பார்த்து விழித்தான். எப்படிக் கேட்பது என யோசித்தேன். அதற்குள் உள்ளிருந்து வந்த நடுத்தர வயதுப் பெண்மணி, "வாங்க... யாரைப் பார்க்கணும்?" என்றாள்.

"எழுத்தாளர் காட்டூர் கோபாலனை... அவரு இருக்கிறாரா?"

"இருக்காக... உள்ளார வாங்க..." என்றார்.

நான் தயங்கியபடியே உள்ளே சென்று அமர்ந்தேன்.

சற்று நேரத்தில் இடுப்பில் வேஷ்டியும் சட்டையில்லா மார்பில் துண்டுமாக வந்தார் என் அபிமான எழுத்தாளர்.

நான் எழுந்து, "வணக்கம் சார்! நான் உங்கள் ரசிகன்," என்றேன்.

"அப்படீங்களா...? ரொம்பச் சந்தோஷம்.



'மெல்லத் திறந்தது கதவு' என்ற படம் வெளியான தினத்திலும் மீண்டும் அதையே இரண்டு வாரங்கள் கழித்தும் பார்த்திருந்தால், ஒரு பெரிய வித்தியாசத்தைக் கண்டிருப்பீர்கள். அது என்ன தெரியுமா?

படம் வெளியான இரண்டு வாரங்கள் கழித்து, கதை தெளிவாகப் புரியவும், சுவாரசியத்துக்காகவும், முதல் பகுதியை இரண்டாம் பகுதியாகவும், இரண்டாவது பகுதியை முதல் பகுதியாகவும் மாற்றி அமைத்தார்கள்!

— ஷண்முக சுந்தரம்.

ரம்யப்ரபா

உட்காருங்க... உட்காருங்க...'' என உபசரித்தார்.

''எந்த ஊரில் இருந்து வர்றீங்க? எப்படி பஸ் பிடிச்சீங்க? எங்க ஊருக்கு வர்றதுன்னாப் பெரிய கஷ்டமாச்சே!'' எனக் கலகலவெனச் சிரித்தார்.

நான் எல்லா விவரங்களையும் சொன்னேன். அவருடைய எல்லாக் கதைகளையும் பாராட்டிப் பேசினேன். அவர் எல்லாவற்றையும் சிரித்துக் கொண்டே கேட்டுக் கொண்டார்.

எனக்கு அவருடைய எளிமை ஆச்சரியத்தைத் தந்தது. எழுத்தாளர் என்ற பந்தா கொஞ்சம் கூட இல்லாமல் அவர் பேசியது எனக்கு வியப்பைத் தந்தது.

அவருடைய கதைகளைப் பற்றியும் அது எழுத நேர்ந்த விதத்தைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தோம். இடையில் அவருடைய மனைவி பெரிய லோட்டாவில் இருவருக்கும் காப்பி கொண்டு வந்து கொடுத்தார்.

எழுத்தைப்பற்றியேபேசிக்கொண்டிருந்ததில் நேரம் போனதையே நான் கவனிக்கவில்லை. கவனித்து அவரிடம்விடைபெற்றுக் கொள்ளலாம் என்ற போது அவரே சொன்னார், ''உங்க பஸ் போயிருக்கும். இனி காலையிலதான் உங்களுக்கு பஸ். அதனால என் வீட்டிலே தங்கிட்டுப் போகலாம். காலையில் சீக்கிரம் பஸ் உண்டு'' என்றார்.

என் அபிமான எழுத்தாளருடன் தங்குவதென்றால் கசக்கவா செய்யும்! சரியென்று சம்மதித்தேன்.

பிறகு குடும்பத்தைப் பற்றிப் பேசினோம். ''உங்க துணைவியார் உங்க கதைகளைப் படிச்சுட்டு என்ன சொல்வாங்க?'' என்றேன்.

அவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு, ''அவ என்னோட கதைகளை வாசிக்கிறதில்லே. அவளுக்குஎழுதப்படிக்கத் தெரியும். ஆனாலும் பத்திரிகைகளோ, கதைகளோ வாசிக்கிறதில்லே. அதுக்கு அவளுக்கு நேரமுமில்லே. வயக்காட்டுக்குப் போறதுக்கும் குழந்தைகளைப் பார்த்துக்கிறதுக்குமே அவளுக்கு நேரம் சரியாயிருக்கு...''

''இதுல உங்களுக்கு வருத்தமில்லையா?''

''வருத்தப்பட என்ன இருக்கு?''

''உங்க கதைகளை உங்க மனைவியே படிக்கலைன்னா... இது உங்களுக்கு அவமானமா... வருத்தமாத் தெரியலையா...?''

''அப்படியில்லே. அவ நல்ல மனைவியா இருக்கா. என்கிட்டேயும் குழந்தைங்க கிட்டேயும் அன்பா நடந்துக்கறா. பொறுப்பாக் குடும்பம் நடத்தத் தெரிஞ்சிருக்கு. என் எழுத்தைப் பாராட்டத்தான் நீங்க... உங்களைப் போல எத்தனையோ ரசிகர்கள் இருக்காங்களே...! அவளும் அதையே செய்துக்கிட்டு இருந்தாக் குடும்பப் பொறுப்புகளைப் பொறுப்பா யாரு கவனிப்பா? அவ என் எழுத்தைப் படிச்சு ரசிக்காட்டியும் வயக்காட்டிலே பருத்திச் செடியின் வளர்ச்சியைப் பார்த்துப் பார்த்து ரசிக்கிறா. மாடு, கன்றுகளையெல்லாம் நன்றாக வளர்த்துப் பராமரிச்சு ரசிக்கிறா. எனவே அவளுக்கும் ரசனைகள் இருக்கு. என் கதைங்க மட்டும்தான் வாழ்க்கையிலே ரசனைக்குரிய விஷயமா என்ன?'' என்று அவர் சிரித்துக் கொண்டே சொன்னபோது, எனக்கு எல்லாமே புரிந்து விட்டது போலிருந்தது!



''நீ எழுதின கதையைப் பத்திரிகைக்கு அனுப்பு முன்பு ஒரு காப்பி எடுத்து வைச்சுக்கோ.''

''எதுக்கு வீண் செலவு? அது முன்னே வெளிவந்த புத்தகத்தையேதான் வைச்சுக்கிட்டிருக்கேனே, போதாதா?''

— லலிதா செல்லப்பா.

''அரசியலிலிருந்தே விலகப் போறீங்களாமே! அவ்வளவு வெறுத்துப் போவானேன்?''

''பின்னே என்னங்க...? இருபது வருஷமாக் கட்சியிலிருக்கேன். கேவலம் ஒரு கோஷ்டிக்குக் கூடத் தலைவராக முடியலையே!''

— ஞா. ஞானமுத்து.





லைம்
ஸின்த்தால்
Godrej
CINTHOL
THE LIME FRESH DEODORANT SOAP
அனைத்திலும் புத்துணர்ச்சிமிக்க லைம் சோப்
அனைத்திலும் உன்னதமான லைம் சோப்
துர்நாற்றம் அகற்றும் ஒரே லைம் சோப்

# விளிம்பில் சந்தித்தவர்கள்

இரயில் தடங்கலாய் நின்று கொண்டிருந்தது. அரை மணி நேரமாயிற்று. இன்னும் கிளம்பக் காணோம். இருட்டு மெல்லக் கவிழ்ந்து கொண்டிருந்தது. இன்னும் கொஞ்ச நேரத்தில் ரயில் கறுப்பு பூதமாகி விடும் என நினைத்தான் சிவராமன். எதிரிலிருந்த சங்கரியின் கழுத்தில் புதுத்தாலி மின்னிக் கொண்டிருந்தது.

''கேலா... கேலா'' என்றொருவன் சப்தமிட்டுப் போனான். சங்கரி எட்டிப் பார்த்தாள். அவனுருவம் தென்படவில்லை. கம்பார்ட்மெண்ட்டில் பெரும்பாலோர் கீழிறங்கி ரயிலின் தடங்கலைப் பற்றி அலசிக் கொண்டிருந்தனர்.

''கேலான்னா...''

''வாழைப்பழம்.''

''என்ன பாஷை?''

''இந்தி...''

சிவராமன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். புது சந்தோஷம், முகத்திலும், உடம்பிலும் தெரிந்தது.

''அப்போ ஒருத்தன் 'பல்லி பல்லி'ன்னு வித்துட்டுப் போனான். அய்யோ பல்லியெல்லாம் விக்கறாங்களா. கனவான்னு சந்தேகப் பார்த்தா அவன் வேர்க்கடலையைத் தான் வித்துட்டுப் போயிட்டிருந்தான்!'' சிரித்தாள். நாணமும், சிரிப்புமாய் அவள் முகம் புதுசாய் இருந்தது.

''பல்லீன்னா தெலுங்குலே வேர்க்கடலை...''

''உங்களுக்கு இந்தி, தெலுங்கெல்லாம் தெரியுமா?''

''இன்னும் ரெண்டு பாஷை தெரியும்...''

''எனக்குத் தமிழ் தவிர வேறெதுவும் தெரியாது..''

''எல்லாமே கட்டாயத்துலே கத்துக்கிட்டது!''

சிவராமனுக்கு முகம் கறுக்கத் தொடங்கியது. அவன் எதைஎதையோ நினைத்து முகத்தில் அதைப் பிரதிபலித்துக் கொண்டிருப்பதாய்க் கலவரத்துடன் எண்ணி, அவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். கம்பார்ட்மெண்ட் பிரயாணிகள் இருவர் மீண்டும் வந்து உட்கார்ந்து கொண்டனர். ரயில் தடங்கலுக்குக் காரணம் தற்கொலை என்றார்கள். முன் சென்ற ரயில் தடம் புரண்டது என்றார்கள். ரயில் பாதையில் வெடிகுண்டு இருக்கலாம் என்றார்கள்.

ரயில் பாதையின் இருபுறங்களிலும் அடர்ந்த காடுகள் தென்பட்டன. எல்லாம் இருட்டாகத் தெரிந்தது. துர்கதியாய் யாரோ சபித்து விட்ட இடம் மாதிரி எல்லோரும் பயந்து நகர்ந்து கொண்டிருந்தார்கள். ஒரு சின்ன ரயில்வே ஸ்டேஷன் அவ்விடம். சிவராமன் கொஞ்ச நேரம் வெளியே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் சட்டென அவள் கேள்வியிலிருந்து பேச ஆரம்பித்ததும் முன்பிருந்த சூழல் சட்டெனக் கலவரப்பட்டு விட்டது போலிருந்தது சங்கரிக்கு.

''ஏதாச்சும் ரயிலேறிக் கண்காணாத இடத்துக்குப் போயிடணும்ன்னு நான் நெனச்சிருக்கேன்.''

சங்கரிக்கு மெல்ல பயம் ஊர்ந்தது. கவனித்தான் சிவராமன்.

''இப்போ இல்லே. வேலையில்லாமே திரிஞ்சப்போ, மத்தவங்க முன்னாலே சோத்துக்கு அவமானப்பட்டப்போ.. சோத்துக்காச்சும் ஆகட்டும்னு சாதாரண வேலைக்குப் போனப்போ, படிப்பு காட்டிக் குடுத்துச்சு... பனியன் கம்பெனியிலே கணக்



நபு பிள்ளைன்னு உத்யோகப் பேர். படிக்காத முதலாளி கொடுக்கற முந்நூறு ரூபாய்க்கு அவங்க வீட்டு அந்தரங்க வேலையெல்லாம் செய்ய வேண்டியிருந்துச்சு. வெறுத்துச்சு.. சொந்த ஊர், சொந்த பாஷையைக் கட்டிக்கிட்டு எதுக்கு வெறுமனே அலையணும்ன்னு ஓடினேன். ஒரு வடக்கத்திக்காரன்... அங்க பன்னிரண்டு மணி நேரம் என்னை உறிஞ்சிட்டாலும் ஆயிரம் ரூபாய் குடுத்தான். பெத்தவங்களுக்கு நானூறு ரூபா அனுப்ப முடிஞ்சது. அவமானங்களையெல்லாம் சுலபமா ஜீரணிக்கக் கத்துக்கிட்டேன். வருஷம் அம்பது அம்பதாக் கூட்டிச் சம்பளம் வந்துது. இந்தச் சமயத்திலே கல்யாணம்கறது பயப்பட்ற விஷயமாச்சு. பெத்தவங்க கண்ணீரும், அவஸ்தையும் கல்யாணம் பண்ணச் சொல்லுச்சு. இப்போ என்னோட பயத்தோட நீயும்...''

பெரிய பிரசங்கமொன்றை முடித்தவன் போல் சொல்லி விட்டு நிமிர்ந்து பார்த்தான். சங்கரி அவனையே பார்த்தாள். அவனின் பாரம் இறங்கி விட்டது என்று பட்டது.

''காத்து மாதிரி சுலபமாயிட்டீங்கன்னு நினைக்கிறேன்.''

மெல்லச் சிரித்துக் கொண்டே சொன்னாள். அந்தச் சிரிப்பு, கறுத்துப் போன முகத்திலிருந்து கைப்பாய் வெளி வந்தது.

''நானும் காத்து மாதிரி ஆக பாரத்தை எறக்கிடட்டுமா....''



## சுப்ரபாரதிமணியன்

இதை எதிர்கொள்ளாதவன் போல் சிவராமன் பார்த்தான். கல்யாணமாகி எட்டு நாட்கள்தான் கடந்திருந்தன. தன் கடந்த காலத்தை எப்போதாவது தூக்கிப் போட்டுச் சங்கரியிடம் வெளிக்காட்டி ஓய்ந்து போகலாம் என நினைத்திருந்தான். ஆனால் சட்டென ரயில் பயணத் தடங்கல் அதற்கு வழி கொடுத்து விட்டது என்றிருந்தது.

எட்டு நாட்களில் இன்னும் ஸ்பரிசம் கூட முழுமையானதாக இருக்கவில்லை. ஸ்பரிசம், வெட்கமும், பரபரப்புமாய் இருந்து விட்டது. முழு ஸ்பரிசத்திற்கு முன் அவனின் பிரச்னைகளும், அனுபவங்களுமாய் அவள் முன் நிற்பது சந்தோஷமாகவே இருந்தது.

''நானும் உங்கள மாதிரியே எங்காச்சும் ஓடிப் போகணும்ன்னு இருந்திருக்கேன். ஆதிவாசிகள் மாதிரி திரியணும். கல்யாணமோ, குடும்ப பந்தமோ வேண்டாமுன்னு கூட நெனப்பு வந்திருக்கு. உடனே அது விரக்தியாலே வர்ற வார்த்தைகள்ன்னும் தெரிஞ்சிருக்கு.''

சிவராமன் அவன்முன் பெரிய படுதா தொங்குவதாய் உணர்ந்தான். பரபரவென்று அந்தப் படுதாவைக் கிழித்தெறிந்து விட்டு என்ன என்னவென்று ஆவலுடன் கேட்க வேண்டும் போலிருந்தது. சாந்தப்படுத்திக் கொண்டான். நிதானமாய் மூச்சை உள்ளிழுத்துக் கொண்டான்:

''வரன்னு வர்றவங்க போறவங்க முன்னாலே உக்காந்து சலிச்சேன். யார் யாரோ கால்லே விழுந்து அலுத்துப் போச்சு. கனவுகள் சர்வசாதாரணமாச்சு. அப்புறம் கனவுகளைக் கூட வெறுத்தேன். அது விஷமாத்தான் தோணுச்சு. வயசும் ஏறிட்டே போச்சு. நான் படிச்ச படிப்பு, நான் சுதந்திரமா இருக்கலாமுன்னு சொன்னாலும் எங்க கிராமச் சூழ்நிலையிலே அதெல்லாம் முடியல்லே. எனக்காக யாராச்சும் வருவாங்கன்னு காத்திட்டிருந்தேன். பவுனும், பணமுமா எல்லாரும் பாரங்களைச் சுமத்துனாங்க. சுமக்க முடியலே... உதறி உதறி. வயசு ஏற ஏற மூச்சுத் திணறிச்சு. அப்புறம் கடைசியில நீங்கதான்...''

சிவராமன் ஊர் வரும்போதெல்லாம் அவனின் அம்மாவும், அப்பாவும் கல்யாணப் பேச்செடுத்தார்கள். இரண்டு வருடங்கள், சம்பளத்தைக் கணக்கிட்டு வேண்டாம் என்று மறுத்தான். ஒட்டலும், அவஸ்தைகளும் அவனை நிர்மூலமாக்கும் என்று உணர்ந்தபின் சரியென்றான்.



"நம்ம படத்தைப் பற்றிப் பத்திரிகை யிலே என்ன விமர்சனம் எழுதி இருக் காங்க?"

"வீணா தியேட்டர்ல போய்ப் படம் பார்க்க வேணாம்; கூடிய சீக்கிரம் டி. வி. யில போடுவாங்கன்னுதான்!"

— எஸ். முகம்மது யூசுப்.

பெண் தேடும் படலம் அவனைக் கேவலப்படுத்தியது. வேலையற்று சாதாரண உத்யோகத்திற்காய் ஆயிரத்து ஐந்நூறு மைல் தள்ளி ஓடினவன் என்றார்கள். 'ரெண்டு ராத்திரி ரெண்டு பகலுமா, ரயில்லே அங்க போறதுக்கு?' என்று கேட்டார்கள். இரண்டு ரயில்கள் பிடித்துப் போகும் ஊரை ஏழு கடல் தாண்டின தேசம் என்று கற்பனை செய்து சொன்னார்கள். 'வேற ஜாதிக் காரங்க அங்கெல்லாம் சம்பந்தம் குடுக்க லாம். ஆனா நம்ம ஜாதி இந்த ஆத்துக்கரை யைத் தாண்டி எப்போ போச்சு?' என்றார் கள். 'தூரம் இருக்கறவன் — அங்கே என்ன வேலை பாக்குறானோ என்னவோ... அவன் சொல்றதைத்தானே நம்பணும்' என்றார் கள். சிவராமன் அவன் ஜாதியைச் சபித் தான். 'ஜாதி வாழ விடாது போலிருக்கிறது. அது வம்சமற்றுப் போகாதா' என்றிருந்தது.

பெற்றோரின் கைகள் ஜாதிய எல்லை களைத் தாண்டி எங்கும் நீளவில்லை. முடங் கித் துழாவின. 'வரதட்சணையும், பவுனும் இல்லாட்டிக் கூடப் பரவாயில்லே; குடும்பத் துக்கு ஏத்ததா இருந்தாப் போதும்' என்று சிவராமனுடைய அப்பாவின் வாய் வார்த் தைகள் விரக்தியில் நழுவின போது, உறவு கள் சிரித்தன. 'இவ்வளவு தாழ்ந்து போக ணுமா?' என்றார்கள்.

ஒவ்வொரு முறை ஊர் வரும் போதும் தலைகுனிந்தே சிவராமன் பெண் பார்க்கப் போனான். 'மூணு பவுன்தான் போட முடியும். அப்புறம் தாலிக் கயிறுதான். ஆனா ஹைஸ்கூல் படிச்சிருக்கு...' என்று சங்கரியின் வரன் வந்தது. ஜாதியில் பெண் கிடைத்ததைச் சிவராமனின் பெற்றோர் பாக்கியமாகக் கொண்டார்கள். சங்கரி சற்று வயதான முதிர்கன்னி என்றார்கள் அவனின் உறவுகள். 'எனக்கு மட்டும் வயசாகலியா?' என்று திருப்பிக் கேட்டான் சிவராமன்.

கூறுப்புப் போர்வையால் மூடப் பட்டது போன்ற இருள். சிவராமன் வெளிப் புறத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். எல்லாம் பேசி முடிந்தாயிற்று. எல்லா பாரங் களையும் இறக்கியாயிற்று. இனி எதுவு மில்லை என்பது போல் இருவரும் இருந்த னர். சிவராமன் சங்கரியைப் பார்த்தான். ஏதாவது பேச வேண்டும் போலிருந்தது.

"உன் மொகத்திலே நிறையப் பருக்கள். அது தனியா அழகா இருக்கு. 'மரங்களுக் கோர் தனியழகு, இரவில் பெண்களைப் போல'ன்னு ஒரு கவிஞன் சொன்ன மாதிரி, இந்தப் பருக்களுக்கும் சொல்லணும் போல இருக்கு..."

"உம்..."

"கல்யாணக் களை மாதிரி கல்யாணப் பருவுன்னு இருக்கோ என்னமோ?"

"கல்யாணப் பருவில்லே; வயசுக்கு மீறின பரு. முதிர்ச்சியினாலே வர்ற பரு..."

சட்டெனத் திடுக்கிட்டான் சிவராமன். சங்கடமாயிருந்தது அவனுக்கு.

"என்ன... என்னாச்சு?"

"ஒண்ணுமில்லே. முதிர்ன்னு எனக்கே பட்டுது. சொன்னேன்..."

"நான் மட்டும் முதிர் இல்லியா?"

"ஆணுக்கு வயசாகலாம். முதிரா இருக்க லாம். ஆனா பெண்..."

"இந்த பிம்பம் இனிமேலாச்சும் உனக் குள்ள இருக்கக் கூடாது. உடையணும்."

"நீங்க என்ன சொன்னாலும் என்னோட முதிர் வயசுதான் உங்களை என்னோட சேர்த்திருக்குன்னு நெனைக்கறேன். நான் இளமையா இருந்திருந்து, எங்க குடும்பம் கொஞ்சம் வசதியா இருந்தா எங்க வீட்லே இவ்வளவு தூரமுன்னு வேண்டாமுன்னு தான் சொல்லியிருப்பாங்க."

"அப்படின்னா நான் இவ்வளவு தூரம் வேலை கெடைக்காமே வந்து உத்யோகம் பாக்கறதும், என்னோட கொறச்சலான சம்பளமும்தான் உன்னை என்னோட சேர்த் திருக்குன்னு சொல்றது ஒண்ணும் பொய் யில்லைன்னு படுது. அது உண்மைதானே?"

அவள் முகத்தைத் திருப்பி எங்கோ பார்த் துக் கொண்டிருந்தாள்.

"அடுத்த அடி சறுக்கல்னு தெரிஞ்சுக் கிட்டுக் கடைசி அடிக்கு முன்னாலே வெவ் வேறு பக்கங்களிலிருந்து மலை விளிம்புக்கு வந்து கையைப் புடிச்சிருக்கோம், நாம ரெண்டு பேரும்!"

"ஆமாம்" என்ற சங்கரியின் கண்களில் நீர் துளித்தது.

ரயிலின் ஊதல் சப்தம் கேட்டுக் கீழே நின்றிருந்தவர்கள் திமுதிமுவென ஏற ஆரம் பித்தனர். ரயிலின் ஊதல் நீண்டது. சிவராமன் பக்கம் நகர்ந்து உட்கார்ந்தவள் அவன் கைகளைத் தொட, அவனும் பிடித்து இறுக்கிக் கொண்டான். அந்தத் தொடுகை உன்னதமானதாகவும், ஒருவருக்கொருவர் ஆறுதல் சொன்னபடியான புதுப் பயணத் தைத் தொடர்வதாகவும் இருந்தது.

"ஒவ்வொரு ஸ்பூனிலும் ஒப்பற்ற சக்தி"



உங்களது கடுமையான உழைப்புக்கும், மூளையின் வேலைக்கும் செறிவான ஊட்டமும் வலிமையுமே அடிப்படை. வெறும் நெல்லிக்காய் லேகியங்களும், சாதாரண டானிக்குகளும் இவற்றை நிறைவாகத் தரமுடியாது.

ஒப்பற்ற சக்தியைத் தினந்தோறும் உங்களுக்கு அளிக்கக் கூடிய அரிய மூலிகை டானிக் கிரௌன் காய கல்பம். இது பல்லாண்டு ஆராய்ச்சிக்குப் பின், சித்த வைத்திய முறையில் தயாரிக்கப்படும் சிறந்த மூலிகை டானிக்.

**கிரௌன் காயகல்பம் ரெகுலர்:**
கவனமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கல்ப மூலிகைகளான வல்லாரை, தூதுவளை, கரிசலாங்கண்ணி, பொற்சீந்தில், கடுக்காய், தான்றிக்காய், அஸ்வகந்தா, நெல்லிக்கனி ஆகியவற்றுடன் சுத்தமான தேன் மற்றும் முறையாகப் பாடம் செய்யப்பட்ட செந்தூரம், துத்தநாக பஸ்பங்களும் சேர்த்து இயற்கை முறையில் விசேஷமாகத் தயாரிக்கப் படுகிறது.

இது இரத்தத்தைச் சுத்தமாக்கி, உணவு எளிதில் ஜீரணம் ஆகவும், ஊட்டச் சத்துக்கள் இரத்தத்தில் சேரவும் உதவுகிறது. குடலைச் சுத்தம் செய்து வாயுக்கோளாறுகளை நிவர்த்தி செய்கிறது.

பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் நிறைய சக்தியும் ஊட்டமும் அளிக்க இரும்புச்சத்து நிறைந்தது.

**கிரௌன் காயகல்பம் ஸ்பெஷல்:**
கல்ப மூலிகைகள், தேன் ஆகியவற்றுடன் விசேஷ முறையில் பாடம் செய்யப்பட்ட தங்க பஸ்பம், வெள்ளி பஸ்பம், செந்தூரம், துத்த நாகம் உட்பட நவலோக பஸ்பங்கள் யாவும் சேர்க்கப்பட்டுள்ளன.

இதில் பல இயற்கை வைட்டமின்களும், தாது உப்புகளும் நிறைந்திருப்பதால் அதிகப்படியான வலிமையும் சுறுசுறுப்பும் எப்போதும் உங்களிடம் நிறைந்திருக்கும்.

| ரெகுலர் | ஸ்பெஷல் |
|---|---|
| இரும்புச்சத்து நிறைந்தது | தங்க பஸ்பம் அடங்கியது |
| 160 கி: ரூ. 18 | 150 கி: ரூ. 35 |
| 500 கி: ரூ. 54 | 500 கி: ரூ. 105 |
| (வரிகள் உட்பட) | (வரிகள் உட்பட) |



தயாரிப்பாளர்:
கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ், சென்னை-2

கிரௌன் காயகல்பம்

ஓயாமல் உழைத்திட ஒப்பற்ற சக்தி.

பம்பாய் விற்பனையாளர்: லக்ஷ்மி ஸ்டோர்ஸ், தாராவி மெயின் ரோடு, தாராவி, பம்பாய் — 17.
பெங்களூர் விற்பனையாளர்: ஜெயின் பிரதர்ஸ், 146, O. K. ரோடு, கும்பார்பேட், பெங்களூர் — 2.

எல்லா மருந்துக் கடைகளிலும் மற்றும் ஜெனரல் ஸ்டோர்களிலும் கிடைக்கும்.

அலாரம் அடித்த போது, அருணா வுக்குத் தேவதைகள் 'இன்று விடுமுறை' என்று பாடிய இனிய கனவு கலைந்தது. தினத்தின் முதல் வார்த்தையாக 'ச்சே' என்று சொல்லிக் கொண்டு, எழுந்து நேராக பாத்ரூமுக்குச் சென்று, ஹீட்டர் போட்டு விட்டுக் கதவைத் திறந்து, பால் பாக்கெட் வாங்கி வந்து, காப்பி போட்டு விட்டு முரளியை எழுப்பினாள்.

அவன் இயந்திரம் போல் பல் உரசவும் முகம் சவரவும் செல்ல, அருணா ஜிபாவை யும் நந்துவையும் எழுப்பி, அவைகளைத் தூக்கத்தோடு தூக்கிக் கொண்டு பாத்ரூமுக் குச் சென்று, 'கக்கா கக்கா' என்று முக்க



வைத்துவிட்டு அலம்பிக் தளிப்பாட்டித் துண்டு சுற்றி வெளியே அழைத்து வந்தாள்.

நெற்றியைச் சுருக்கிக்கொண்டு அழுதால் அடி விழும் என்ற பயத்துடன், குளிக்கப் பட்ட - உடுத்தப்பட்ட குழந்தைகள் தூக்க மும் விழிப்பும் தொட்ட, மலர்கள் போல அப்பா அம்மாவுக்குக் காத்திருந்தன.

நந்துவை 'ஹோம் ஒர்க்' பண்ண வைத்து விட்டு, டிளிகதச் 'செய் செய்' என்று இரண்டு தோசை போட்டு, முதல் டிகாஷன் காப்பியுடன் டேபிளில் எடுத்து வைத்து விட்டு, அவன் சட்டை பாண்டட்டுக்கு இஸ்திரி போட்டு விட்டுக் குளிக்கப் போனாள்.

சரியாக இரண்டு நிமிஷத்தில் தளியலை பிடித்துக்கொண்டு இரண்டு நிமிஷத்தில் புடைவை உடுத்திப் பொட்டுத் தொட்டுக் கொண்டு ஜிபாவுக்கு ஃப்ளாஸ்கில் வெந்நீரும், மில்கேரும் விதவித துண்டுகளும் டயாப்பர்களும் ஃபீடிங் பாட்டிலும் காம்புகளும் நந்துவுக்கு ரொட்டி வெட்டு, பேரிக்காய்த் துண்டு, ப்ரோட்டின் பிஸ்கட், கோக்கோமால்ட் என்று ஒரு ஜெட் பைலட்டுக்கு உண்டான சாமக் கிரியைகள் போல அனைத்தையும் பிரம்புக் கூடையில் பொருத்தினாள்.

முரளி காலை ஆட்டிக்கொண்டு பேப்பர் படித்து விட்டுக் கண்ணாடியில் பதினைந்து நிமிஷம் பார்த்துக் கொண்டு, டீக்காக சட்டை, பாண்ட் அணிந்து கொண்டு, ஸ்கூட்டருக்கு வர, கூடையை அதன் கழுத் தருகில் நிற்க வைத்துக் குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டு, நந்து இருவருக் கும் நடுவில் பார்சை போல ஒட்டிக் கொண்டு ஒருவழியாய் தினசரி திக்விஜயம் கிளம்பும் போது மணி பார்த்தாள், 7:45.

இன்று நிச்சயம் லேட்.

இன்றும்!

டைனி டாட்ஸ் பேபி சென்டரில் கதவு மூடி இருந்தார்கள். குழந்தைகளை உள்ளே திணித்து விட்டுப் புறப்பட்டு ஆனந்த ராவ் சர்க்கிள் ட்ராஃபிக்கில் மாட்டிக் கொண்டு, ஆபீஸ் போய்ச் சேர 8:15. அவளை 'ட்ராப்' பண்ணி விட்டு முரளி தன் அலுவலகம் சென்றான்.

பதற்றத்துடன் லிஃப்ட்டுக்குக் காத்திருந் தாள். பழாய்ப் போனது எற்றத்திலேயே இருந்தது. கடைசியாக இறங்கி வந்து தன் ஆறாவது மாடி மேசைக்கு வந்து சேர்ந்த போது 8:22.

''மேடம் மேனேஜர் கூப்பிடறாங்க.''

பயத்துடன் உள்ளே சென்றாள். ஸ்ரீனிவாச மூர்த்தி ஒரு கண்ணாடி உருண் டையை உருட்டிக் கொண்டு சன்னல் வழியே வெளியே பார்த்துக் கொண்டிருந்தார்.

''உக்காருங்க அருணா'' — இவளைப் பார்த்ததுமே முகம் இறுகியது.

''பரவாயில்லை ஸார்.''

''மணி என்ன தெரியுமா

மௌனம்.

''நான், அதாவது உங்க பாஸ், தினப் தவறாம எத்தனை மணிக்கு எட்டுக்கு வந்து சேர்றேன் தெரியுமா? எய்ட் ஷார்ப்''

''ஸாரி ஸார். ட்ராஃபிக்கில மாட்டிக் கிட்டோம்.''

''முப்பது நாளைக்கு முப்பது காரணங் கள் சொல்றீங்க. லேட்டா வர்றது உங்களுக் குப் பழக்கமாப் போச்சு. ஆபீஸ்ல எத்தனை பெண்கள் இருக்காங்க! அவங்களுக்கெல் லாம் குழந்தைகள் இல்லையா, ட்ராஃபிக் இல்லையா?''

''அவர்களுக்கெல்லாம் மாமியார், அம்மா யாராவது தாங்கறாங்க...'' என்று சொல்லவில்லை.



''வாட்ஸ் யுவர் ப்ராப்ளம் அருணா...?''

மௌனம்.

''குல்பர்காவுக்கு ட்ரான்ஸ்பர் பண்ணி டட்டுமா?''

''வேண்டாம் ஸார்.''

''ஏன் இப்படி தினம் லேட்டா வர்றீங்க... ஸாரி, பொறுத்துப் பொறுத்து அலுத்துப் போச்சு. நாளையிலிருந்து 8:5க்குள்ள வரலைன்னா ஸாலரி... கட் அரை நாள்.. ஒரு காஷன் மெமோ கொடுக்கப் போறேன்...''

நின்று கொண்டிருந்தாள்.

''போகலாம்.''

மேசைக்குத் திரும்பியதும் சூப்ரிண் டன்ட் அவளைக் கண்ணாடியைச் சரித்துப் பார்த்து, ''எதுக்காக நீங்கள்ளாம் வேலைக்கு வரணும்னே தெரியலை!'' என்றார்.

கண்களில் ததும்பிய நீரைத் தடுத்துக் கொண்டு ஃபைலில் ஈடுபட்ட போது, ''அருணா நீங்க இன்னிக்கு ஓ.டி. ஸ்டேட்



**மாணவன்: சார், இந்தக் கணக்கில் நாலாவது ஸ்டெப் மட்டும் புரிய மாட்டேங்குது...?**

**ஆசிரியர்: நோட்ஸ்ல அப்படித்தான் கொடுத்திருக்கான். நான் மட்டும் என்ன செய்ய முடியும் சொல்லு பார்க்கலாம்...**

**— ஆர். ரத்தினசாமி**

---

மெண்ட்டை முடிச்சுட்டுத்தான் போகணும். இல்லைன்னா ஜி. எம். கோவிச்சுப்பார்.''

''சரி, ஸார், ஒரு ஃபோன் பண்ணிக்கலாமா?''

''உள்ளூர்னா சரி'' என்று ஃபோனை அவள்பால் இஷ்டமின்றித் தள்ளினார்.''

''ஹலோ, ஏ.பி.எஸ்.ஸி., கொஞ்சம் இ.ஒ. செக்ஷன்ல ரமேஷைக் கூப்பிட நீங்களா.. அவங்க ஒய்ஃப் பேசறேன்.''

ரமேஷ் வந்து, ''என்ன அருணா?''

''சாயங்காலம் நீங்கதான் குழந்தைகளை அழைச்சுக்கிட்டு வரணும். எனக்கு லேட் ஆகும்.''

''மானேஜர் சத்தம் போட்டானா ராஸ்கல்!''

''ஆமாம்'' உங்களுக்கு ஏதும் ப்ராப்ளம் இல்லையே...''

''என்னை யாரும் கேட்க முடியாது. ஓட்டியா?''

''ஸ்டேட்மெண்ட் முடிக்கணும். வீட்டில வந்தப்புறம் பேசலாம்.''

''தாங்க்ஸ் ஸார்'' என்று ஃபோனை வைத்து, சீட்டுக்குப் போன போது ப்யூன் இரண்டடி உயரத்துக்கு ஃபைல் கட்டுகளை மேசை மேல் வைத்திருந்தான். ஒவ்வொன்றும் கேஸ் ஸ்டேட்மெண்ட் போட்டு, ட்ராப்ட் தயார் செய்து, சூப்ரிண்டெண்டுக்கு அனுப்ப வேண்டும். நளினியின் மேசை காலியாக இருந்தது. புதுசாக வந்திருக்கும் மைசூர் க்ரேப் சேலை பற்றிக் காவேரியுடன் பேசிக் கொண்டிருந்தாள்.

எரிச்சலாக வந்தது. யாருடன் சண்டை போட முடியும்? கேட்டால், 'தினம் டயத்துக்கு வா. அதற்கப்புறம் கேள்!' என்பார் சூப்ரிண்டெண்ட்.

நளினி நாஸூக்கான பெண். அவள் கொஞ்சிக் கொஞ்சிப் பேசுவதும் மார்புப் புடைவை தங்காததும் அடிக்கடி மானேஜர் அறைக்குப் போவதும் நன்றாக இல்லை.

மற்றொரு கவலை வேறு உறுத்திக் கொண்டே இருந்தது. அசதியில் கண்ணைச் சுழற்றியது. டைப் அடித்ததெல்லாம் பிரிந்து தெரிய ஏன் இந்த மயக்கம் என்று புரியவில்லை. இந்த ரேட்டில் அஞ்சு வருஷத்தில் செத்துப் போய் விடுவேன். ஏதாவது ஒன்று தீர்மானம் பண்ணியே ஆக வேண்டும்.

மேனேஜரிடமிருந்து வந்த மெமோவைக் கூடச் சரியாகப் படிக்கவில்லை. **'You are advised to be more careful in future as this is the last time'** என்றெல்லாம் எழுதியிருந்தது.

என்ன ஆகும்? வேலையை விட்டு நீக்குவார்களா? நிம்மதி! நீக்கட்டுமே... அதற்குள் நானே ராஜினாமா கொடுத்து விடுகிறேன். இன்று முரளியுடன் பேசியே ஆக வேண்டும்.

நாலரை மணிக்கு முரளியின் ஃபோன் வந்தது. ''குழந்தைகள் க்ரீஷ்ல இல்லை. கதவு பூட்டியிருக்கு.''

''என்னது சரியாப் பார்த்தீர்களா?''

''பார்த்தாச்சு! நீ என்ன பண்றே... நேரே வந்து...''

''லேட்டா போனீர்களா?''

''ஆமாம் கொஞ்சம் லேட்டு.''

''பிரின்சிபால் வீடு பின்னால் இருக்கு. லேட்டாப் போனா அங்கே அனுப்பிச் சுருவா. போய்ப் பாருங்க.''

''நீயே வாயேன் ஒரு அரை மணி பர்மிஷன் வாங்கிண்டு.''

''முடியாது. இன்னிக்கு நிச்சயம் கிடைக்காது! எல்லாரும் கடுப்பா இருக்காங்க!''

''சரி'' என்று அலுத்துக் கொண்டான்.

ஸ்டேட்மெண்ட் முடிக்க ஏழாகி விட்டது. பி.டி.எஸ். பஸ் பிடித்து வீடு வந்து சேருவதற்கு எட்டு. ஜிபாவின் அலறலும் நந்துவின் அழுகையும் தெருமுனை திரும்பினதுமே கேட்டது. அவள் போய் இருவரையும் அணைத்துக் கொண்டதும்தான் நின்றது. ஜிபா பயந்திருந்தது. அப்பாவைப் பார்த்தது.

''கிள்ளினீங்களா?''

''சேச்சே!''

''அடிச்சா அப்பா!'' என்றான் நந்து. அவன் கன்னத்தில் விரல் அடையாளம் சிவப்பாக இருந்தது.

''சும்மாரு ராஸ்கல்!''

''என்ன ஒரு க்ரீஷ்! நான் போறேன்... பிரின்ஸிபால் வீட்டில் வாசல்ல மண்ணில விளையாடிண்டிருக்கு குழந்தை. வேலைக்காரி எங்கேயோ நிக்கறா. இவன் நிக்கர் எல்லாம் கிழிச்சுண்டிருக்கான். இது இன்னிக்கு ஒரு தம்ளர் மண்ணு தின்னிருக்கு!


இலவசமாக ஃபெம் வழங்குகிறது
ஒவ்வொரு 90 கிராம் பேக்குடன்
2 ஒப்பற்ற பை கிளிப்புகள் இலவசம்.
INSTOBLEACH
fem
Coffee
FREE BAG CLIPS WITH THIS PACK
FADES UNWANTED HAIR OUT OF SIGHT ON FACE ARMS BODY
முந்துங்கள்! சலுகை ஸ்டாக் உள்ளவரையே
Dazzal-Tam


ஹலோ, நல்வரவு!
• HOT POTS
• LUNCH CARRIERS
• WATER BOTTLES
• VACUUM FLASKS
• GIFT SETS
cello
THERMOWARE

மாசம் இருநூறு ரூபா வாங்கிண்டு, எவ்வளவு மோசமான க்ரிஷ்! அருணா ஏதாவது செய்தே ஆகணும். வேற இடம் பார்த்துரு.''

''பக்கத்தில் வேற இடம் இருக்கா என்ன?''

''இல்லை. ஏன் உங்கம்மாவை வந்து மூணு மாசம் இருக்கச் சொல்லேன்.''

''எங்கம்மா வரிசையா பிரசவம் பார்த்துண்டிருக்கா. வர மாட்டா! உங்கம்மா வரலாமே!''

''காட்ட்ராக்ட் கண்ணை மறைக்கிறது. ஆப்பரேஷனுக்கு காத்திண்டு இருக்கா. அவளால எப்படி வர முடியும்?''

''வாஸ்தவம்தான்.''

''குழந்தை ரெண்டும் பாழாப் போறது! இந்த நந்துவைப் பாரு... ஆட்டோர் ஷாப்ல க்ளீனர் பையன் மாதிரி இருக்கான். என்னைக் கண்டாலே ரெண்டும் அலறல். நான்தான் அப்பான்னு எப்பவாவது சொல்லி வெக்கறியா இல்லையா?''

''என்னையே தெரியுமாங்கறது சந்தேகம். ஞாயிற்றுக் கிழமையைத் தவிர மற்ற தினங்களில் எங்க அவங்களோட பழக முடியறது? ஆபீஸ்லேயிருந்து வந்த உடனே சமையல், சாப்பாடு, தூக்கம். காலைல எழுந்ததும் ஆபீஸுக்கு ஓட்டம்!''

''அருணா இதை நிச்சயம் நாம நிறுத்தியே ஆகணும்! எதுக்காக ரெண்டு பேரும் வேலைக்குப் போறோம்? ஒருத்தர் சம்பளம் பத்தலை, அதனால்தானே!''

''வந்த சம்பளத்தில் பாதி சேமிப்பு நிதிகளுக்கே கட்டியாறது. அதை நிறுத்திட்டா ஒரு சம்பளம் போறும்.''

''அப்ப குழந்தைகளுடைய எதிர்காலம்?''

''எதிர்காலத்துக்குப் பணம் கட்டி நிகழ்காலத்தைக் கோட்டை விட்டுண்டிருக்கோம். எனக்கு எல்லாமே கனவில் நடக்கற மாதிரி இருக்கு. குழந்தைகள் பிடுங்கல், தினப்படி அவசரம், அவலம், ஆபீஸ்ல என் மானேஜர் நரசிம்மாவதாரம். பஸ்ஸில போய் ஸ்கூட்டர்ல போய், குழந்தைகள் ஏங்கிப் போய்! எதுக்காக எதைச் சாதிக்க இப்படி அங்காடி நாய் போல அலையறோம்னு பிரமிப்பா இருக்கு. போதாக் குறைக்கு இந்தக் கவலை வேறு!''

''எந்தக் கவலை?''

''மறுபடி உண்டாயிருக்கேனான்னு! தள்ளிப் போறது!''

அவன் திடுக்கிட்டு, ''அய்யோ இது என்ன புதுசா? மாத்திரை சாப்பிடலையா?''

''என்னவோ தினப்படி குழப்பத்தில் என்ன முழுங்கினோம் என்ன முழுங்கலைனே நினைவே இல்லை.''

''அய்யோ! டாக்டரைப் பார்த்துடலாம்.''

''ஆமாம். மற்றொரு பிரசவம், மெடர்னிட்டி லீவு தள்ளிப் போடறதுக்காக எட்டாவது மாசம் வரை ஆபீஸ் போயிண்டு! சே போறும்பா!''

''முதல்ல இதைக் கவனிக்கலாம்.''

டாக்டர் ஜெயலட்சுமியின் வரவேற்பறையில் நாற்பது தாய்மாரும் நாற்பது குழந்தைகளும், இருபது கர்ப்ப ஸ்திரீகளும் காத்திருந்தார்கள். நந்துவின் பிடுங்கல் தாங்காது, சாக்லேட் வாங்கித் தர வேண்டியிருந்தது. ஜிபா மடியில் தூங்கிப் போனது. ஒன்பது மணிக்குத்தான் நம்பர் வந்தது.

திரப் பரிசோதித்து விட்டு, ''ப்ரக்னன்ஸி போலத்தான் இருக்கு. ஆனா இப்ப முடிவாச் சொல்றதுக்கில்லைம்மா. அடுத்த வாரம்தான் கன்ஃபர்ம் பண்ண முடியும். உனக்குள்ள எப்படி ஃபீல் பண்றே?''

''ரொம்ப டயர்டா இருக்கு டாக்டர்.''

''நாசியா?''

''இல்லை டாக்டர்.''

## சஞ்சீவி மலை வெற்றிலை!



டெல்லி கன்னாட் சர்க்கிள் பகுதியில் ஒரு பீடா கடை உள்ளது. இதில் உலகப் புகழ்பெற்ற ஓவியர் எம். எஃப். ஹுஸைன் தீட்டிய ஓர் ஓவியம் இருக்கிறது. பல ஆயிரம் கொடுத்தாலும் கிடைக்காத இந்தப் படம் கடைக்காரர் சிவநாராயணன் பாண்டேவுக்கு எப்படி கிடைத்தது?

ஹுஸைன் பேரும் புகழும் பெறுவதற்கு முன்பிருந்தே இந்த வெற்றிலை பாக்குக் கடைக்கு வந்து போய்க் கொண்டு இருந்திருக்கிறார். அவரிடம் பாண்டே ஒரு படம் வரைந்து கொடுக்குமாறு கேட்டார். இத்தனை நாளாயிற்று ஹுஸைனுக்குத் தம் வாக்கைக் காப்பாற்ற. சமீபத்தில்தான் ஓவியம் தீட்டி அளித்தார்.

அந்த ஓவியத்தில் ஹனுமார் சஞ்சீவி மலையைக் கையில் தூக்கிக் கொண்டு பறக்கிறார். மலையில் சஞ்சீவி மூலிகைக்குப் பதிலாகப் பாண்டேயின் புகழ்பெற்ற வெற்றிலைகள் காட்சி தருகின்றன!

ஆதாரம்: இண்டியா வீக்.
தகவல்: சேலம் சக்திக்கொடி.



தோழர்கள் தருவார்கள் சிறப்புஇடம் - உங்களுக்கே!
சாதாரண சோப்புகள் உடல வாடையை தடுககாது அது உஙகளுககு தெரியும்.
புதிய ஷீல்டின் இன்ட்டர் நேஷனல் டியோடரன்ட் மட்டுமே தீவிரமாக உடல் வாடையை தடுக்கிறது. தன்னம் பிக்கை புத்துணர்வு தருகிறது.... மணிக்கு மணி!
புதிய
Shield
இணடர்நேஷனல டியோடரன்ட் உள்ளது.
தன்னம்பிக்கையின் புத்துணர்ச்சி!
இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

''ஜெனரல் வீக்னஸ் போலத்தான் இருக்கு டாக்டர்'' என்றான் முரளி.

ஜெயலட்சுமி நந்துவையும் ஜிபாவையும் பார்த்து, ''குழந்தைங்க ரொம்ப வீக்கா இருக்குதுங்களே! சரியா ஃபீட் பண்றதில்லையா?''

''க்ரிஷ்ல ஃபீட் பண்றாங்க டாக்டர்.''

''ஓ! நீங்க ரெண்டு பேரும் வேலைக்குப் போறீங்களா?''

''ஆமா டாக்டர்.''

''குழந்தைங்களுக்கு நல்லதில்லை. முடிஞ்சதுன்னா நீ வீட்டில இருந்துறேம்மா! லீவு எடுத்துக்கிட்டு...''

''லீவா, எனக்கா! அதுவும் அன்யுவல் க்ளோஷர் டயத்தில...''

''இல்லை சமாளிக்க முடிஞ்சா வேலையை விட்டுரும்மா! இந்தக் காலத்தில் கொஞ்சம் யோசிச்சுச் செய்ய வேண்டிய முடிவுதான். இருந்தாலும் குழந்தைகளைக் கவனிக்க வேண்டியதுதான் முதல் கடமைன்னு நீங்க நினைச்சா, நீ வேலையை விட்டுடறது நல்ல முடிவு.''

அருணா முகமலர்ந்து, ''இவர்ட்டச் சொல்லுங்க டாக்டர். இவர்தான் வேலையை விடக் கூடாதுன்னு பிடிவாதமா சொல்லிண்டு இருக்கார். என்க்கு என்னமோ பரிபூரணச் சம்மதம்!''

''என்ன மிஸ்டர் முரளி?''

''கொஞ்சம் யோசிச்சு எடுக்க வேண்டிய முடிவு. இல்லையா டாக்டர்.''

**வீ**டு திரும்பும் போது அவள் ஸ்கூட்டர் பின்னாலிருந்து, ''இதில் யோசனை என்ன இருக்கு நமக்கு? பணம் முக்கியமா, குழந்தைகளோட ஆரோக்கியம் முக்கியமா? இப்ப என்ன, உங்க சம்பளத்தில் குடித்தனம் பண்ண முடியாதா! கொஞ்சம் தேவைகளைக் குறைச்சுக்கறது. பால், தயிர் எல்லாம் சிக்கனமாச் செலவு பண்றது. சினிமா வேண்டாம். வீடியோ வாடகை வேண்டாம். கரண்டு செலவு குறைக்கலாம். வெளியிலே சாப்பிடறது ஏதும் வேண்டாம். ரேஷன் அரிசி நல்லாவே இருக்கு. பாமாயில் வாங்கிக்கறது.... மனசிருந்தா முடியும். என்ன சொல்றீங்க?''

''நீ சொல்றது வாஸ்தவம்தான் அருணா. குழந்தைகளை இந்த மாதிரி வளர்க்கறது தப்பு. ஏங்கிப் போயிடும். கிரிஷ்ல இனிமே விட வேண்டாம்!''

''அப்பாடா! நிம்மதி! நாளைக்கே கால் கடுதாசி எழுதி சீனிவாசமூர்த்தி முகத்தில எறிஞ்சுட்டு வந்துட்றேன்.''

''வேண்டாம்! அதுக்கு அவசியமில்லை.''

''ஏன்?''

''யோசிச்சுப் பார்த்தேன் அருணா உனக்குத்தான் சம்பளம் அதிகம். அதனால நான் ரிஸைன் பண்ணிட்டு வீட்டில இருக்கிறதாத் தீர்மானிச்சுட்டேன்!''

# கோடு தாண்டிய கோதை

இரவின் நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு நெல்லை எக்ஸ்பிரஸ் சீரான வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தது.

ஜன்னல் ஓரமாக அமர்ந்திருந்தாள் சௌம்யா. பௌர்ணமிக்கு இரண்டு நாட்களே இருந்ததாகையால், மேகமற்ற வானிலிருந்து சந்திரன் விழிக்கு இதமான ஒளியினால் உலகைப் போர்த்தியிருந்தான். அவளுக்கு நேர் எதிரே அமர்ந்திருந்த கௌதமன் தன் கால்களை உரிமையுடன் அவள் மடியில் போட்டுக் கொண்டிருந்தான்.

அவர்கள் இருவரும் வாழ்க்கையில் இணைந்து மூன்று நாட்கள்தான் ஆகின்றன. திருமணம் முடிந்த பின் தேனிலவிற்கு என்று எல்லோரும் ஊட்டி, கொடைக்கானல் என்று போவார்கள். இவர்களோ கல்லிடைக்குறிச்சிக்குப் பக்கத்தில் ஒரு கிராமத்திற்குப் போய்க் கொண்டிருந்தார்கள்.

சௌம்யாவுக்கு என்னவோ இதில் விருப்பம் இல்லைதான். ஆனால் கௌதமனுடைய அப்பாவின் பேச்சைத் தட்ட முடியவில்லை. கௌதமனின் தாத்தா ஸ்வாமிநாத ஸ்ரௌதிகள் ஊரில் இருந்தார். வயது கிட்டத்தட்ட தொண்ணூறு. கூடப் பழுத்த சுமங்கலி பாகீரதி பாட்டியும் இருந்தாள். அவர்களிடம் ஆசீர்வாதம் பெற்று உள்ளூர்க் கோவிலில் நேர்த்திக் கடன்களை முடித்து விட்டுத்தான் வர வேண்டும் என உறுதியாகச் சொல்லி விட்டார்.

தாத்தா குடும்பத்திற்கு மூத்தவர். நான்கு தம்பிகள், மூன்று தங்கைகளை வளர்த்து ஆளாக்கியவர். அவருக்கே மூன்று பிள்ளைகள், ஐந்து பெண்கள். கௌதமனின் அப்பாதான் கடைசிப் பிள்ளை. சப் ஜட்ஜாக இருந்து ஓய்வு பெற்றவர். வயது அதிகம் ஆனாலும் திடமாக இருந்தார். ஊரில் எல்லோராலும் மதிக்கப்படுபவர். குறையாத செல்வம் உள்ளவர். பதினைந்து வருஷங்களாக ஊரை விட்டு எங்கேயும் வெளியே வருவதில்லை. வீட்டில் விரிவான பூஜைகள் உண்டு. கணீரென்ற குரலில் பாராயணம் செய்வார். நல்ல மனம். எல்லோரும் நன்றாக இருக்க வேண்டும் என நினைப்பவர்.

கௌதமன் தன் தாத்தாவைப் பற்றிப் புகழ்ந்து கொண்டே போனான்.

''ரொம்பக் கட்டுப்பாடு இருக்குமோ? எனக்குப் பயமாக இருக்கிறது கௌதம்.''

''இதில்தான் எல்லா விவகாரமும் ஆரம்பிக்கிறது. புருஷனைப் பெயரிட்டுக் கூப்பிடுவது தாத்தாவுக்குப் பிடிக்காது. பல் தேய்க்காமல் காப்பி சாப்பிடுவது, புருஷர்கள் நின்று கொண்டிருக்கும் போது உட்காருவது, அவர்கள் சாப்பிட்டு முடிக்குமுன் தான் சாப்பிடுவது, அனாவசியமாக இரைந்து பேசுவது, சிரிப்பது...''

''ஓ! காட்... நமக்கெல்லாம் ஆகாதப்பா. பேசாமல் திரும்பிடலாம்.''

''அதே வீட்டில் என் பாட்டி எழுபது வருஷங்களுக்கு மேல் வாழ்ந்திருக்கிறாள். என்ன சொல்கிறாய்?''

''கிராமத்துக் கட்டுப்பெட்டி. கிணற்றுத் தவளை.''

''இல்லை. என் பாட்டி படிக்காதவள் இல்லை. உன் மாதிரி கான்வெண்டில் படித்து தாட் பூட் என இங்கிலீஷில் பேசத் தெரியாதவள்தான். ஆனால் காளிதாசனின் காவியங்கள் அத்தனையும் பாடம். இந்த எண்பத்திரண்டு வயதிலும் குரலில் பிசிறு தட்டாமல் பாடுவாள்.''

''அம்மாடி. பாட்டியைப் பற்றிச் சொன்னால் என்னமாக் கோபம் வருகிறது? உரலில் மாட்டிக் கொண்டாயிற்று. இனி உலக்கைக்குத் தப்ப முடியுமா? இந்த நான்கு நாட்களில் நான் எப்படி நடந்து கொள்ள வேண்டும், சொல்லுங்கள்.''

''காலையில் ஐந்தரை மணிக்கெல்லாம் எழுந்திருக்க வேண்டும். பல் தேய்த்து, முகம் கழுவி, பொட்டிட்டு..''

''இதெல்லாம் எனக்குத் தெரியும். மேலே சொல்லுங்கள்.''

''பெட் காப்பி'' கேட்காமல், புதிதாக வந்த மாட்டுப் பெண் வாசலில் கோலம் போட வேண்டும். தினமும் தலைக்குக் குளிக்க வேண்டும். கீழே தலைமுடி உதிராமல் கவனமாக இருக்க வேண்டும். குளித்த பிறகுதான் காப்பி.''

''பத்து மணிக்காவது கண்களில் காட்டுவார்களா?''

''நீ குளித்து முடித்து விட்டு வந்தவுடன் காப்பி தயாராக இருக்கும். பாட்டி கைக் காப்பி ஒரு தரம் சாப்பிட்டால் அங்கேயே தங்கக் கூட விரும்புவாய். அத்தனை அமிர்தமாக இருக்கும்.''

''சரி... அப்புறம்?''

''தாத்தா சீக்கிரம் எழுந்து விடுவார். தன் ஜபதபங்களையெல்லாம் முடித்து விட்டு பூஜைக்கு உட்கார்ந்தால் அது முடிய மணி பன்னிரண்டு ஆகும். குளிக்காமலோ நம் மரபுப்படி புடைவை உடுத்தாமலோ பூஜை

ஜனனி

அறைக்குள் போகக் கூடாது.

"உங்கள் அம்மா சொல்லி அனுப்பியிருக்கிறார். ஒன்பது கஜப் புடைவை கொண்டு வந்திருக்கிறேன்."

"கொண்டு வந்தால் போதுமா? கட்டிக் கொள்ளத் தெரிய வேண்டாமா?"

சௌம்யா அவனை அடிக்கக் கையை ஓங்கினாள்.

"தெரியாவிட்டால் பரவாயில்லை. பாட்டி சொல்லிக் கொடுப்பாள்" என்றான் கௌதமன்.

"அப்புறம் உனக்குப் பன்னிரண்டு மணி வரை பசி தாங்காது என்று எனக்குத் தெரியும். மாடியில் நம் பெட்டியில் நிறைய பிஸ்கட் பொட்டலம் இருக்கும். சாப்பிட்டுக் கொள். கீழே வரும் போது வாயை நன்றாகத் துடைத்துக் கொண்டு வா."

சௌம்யா சிரித்தாள்.

"நீங்கள் மாட்டிக் கொண்டு இருக்கிறீர்கள். அதுதான் சொல்கிறீர்களா?"

"ஆமாம். அப்புறம் தாத்தா பூஜை செய்யும் போது சப்தம் போட்டு யாரும் பேசக் கூடாது. இருமல் தும்மல் வந்தால் தள்ளிப் போக வேண்டும்."

"மூச்சு விடலாமா இல்லையா?" எனக் கேட்டாள் சௌம்யா இடக்காக.

"தாத்தா அதிர்ந்து பேச மாட்டார். தப்பு ஏதானும் நடந்தால் திட்ட மாட்டார். கத்த மாட்டார். தன்னையே தண்டித்துக் கொள்வார். அன்றைக்கு உபவாசம் இருப்பார். மற்றவர்களுக்குச் சிரமமாகப் போகும்."

சௌம்யா புரிந்து கொண்டாள். பயம் பூரணமாக விலகாவிட்டாலும் எப்படியாவது நான்கு நாட்கள் சமாளித்து விடலாம் எனத் தைரியம் வந்தது.

**வீ**ட்டு வாசலில் பாட்டி ஆரத்தித் தட்டுடன் காத்திருந்தாள். முதல் பார்வையிலேயே சௌம்யாவிற்குப் பாட்டியைப் பிடித்துப் போய் விட்டது. லட்சுமிகரமான முகம். கண்களில் கனிவு. பேச்சில் இதம்.

பழைய காலத்து வீடு. இருந்தாலும் நன்றாகப் பராமரிக்கப்பட்டிருந்தது. ரேழி நடையைத் தாண்டியவுடன் கம்பி போட்ட முற்றம். நான்கு புறமும் அறைகள். மழமழ வென்ற மரத் தூண்கள். தேக்கு மரச் சட்டங்கள் போட்ட தரை. கூடத்தில் டி.வி. இருந்தது. 'வி.ஸி.ஆர்.' இருந்தது.

கௌதம் சௌம்யாவை மாடிக்குக் கூட்டிப் போனான். இரண்டே அறைகள் தான். கீழே விசாலமான குளியலறை. நான் கூடிக்கு ஆறடி இல்லை. பானையில் வெந்நீர் கொதித்துக் கொண்டிருந்தது. இதமான சூட்டில் சௌம்யா குளித்து முடித்தாள்.



பக்கத்தில் உடை மாற்றிக் கொள்ளத் தனி அறை.

ஒன்பது கஜப் புடைவையைப் பிரித்து உடுத்த முயன்ற சௌம்யா தோற்றுப் போனாள். பாட்டி உள்ளே வந்து சுற்றுக் கொடுத்தாள். கட்டி விட்டாள் என்றே சொல்ல லாம். கூந்தலைச் சீவிப் பின்னலிட்டு மல்லிகைச் சரம் சூட்டி மணப்பெண்ணைப் போல் அழைத்து வந்தாள்.

இதற்குள் பஞ்சகச்சம் கட்டிப் பட்டை பட்டையாக விபூதி பூசிக் கௌதமன் காத்திருந்தான்.

இருவருமாகப் பூஜை அறையில் நுழைந் தார்கள்.

அங்கே... சௌம்யா தாத்தாவை முதல் முறையாகப் பார்த்தாள்.

கிட்டத்தட்ட ஆறடி உயரம் இருப்பார். நல்ல சிவந்த நிறம். பட்டையான கரை போட்ட வேட்டி, அங்கவஸ்திரம். மணை யில் இருந்தபடியே நமஸ்கரிக்கச் சொன் னார்.

சௌம்யா கௌதமின் இடதுபக்கம் நின்ற படியே நமஸ்கரிக்க யத்தனித்தாள்.

''உம்...'' என்ற உறுமல் தாத்தாவின் கண்டத்திலிருந்து எழுந்தது.

பாட்டி அவசர அவசரமாக சௌம்யாவை கௌதமின் வலப்புறம் பிரதட்சிணமாக வரச் சொன்னாள். இருவரையும் இரண்டு கைகளால் பூ எடுத்துப் போட்டு விட்டு நமஸ் காரம் செய்யச் சொன்னாள். இரண்டு கைகளையும் தூக்கி, பெரியவர் ஆசீர்வதித் தார்.

பகல் உணவு. தாத்தா, பேரன், மற்ற ஆடவர்கள் முதலில் சாப்பிட்டார்கள். பாட்டி சௌம்யாவைப் பாயசம் வைக்கச் சொல்லி அனுப்பினாள். ஒன்பது கஜப் புடைவையில் நடக்கச் சிரமமாக இருந்தது. தாத்தாவிடம் இருந்த பயம், இலையில் பாயசம் வைக்கும் போது தரையில் சிந்தி விட்டது. தாத்தா நிமிர்வதற்குள் பாட்டி துடைக்கத் துணியுடன் காத்திருந்தாள்.

பின்னர் சௌம்யா சாப்பிட்டாள். பாட்டி பக்கத்தில் உட்கார்ந்து உபசரித்தாள். எல்லோரையும் பற்றி அன்பாக விசாரித் தாள்.

சாப்பாடு முடிந்தவுடன் கூடத்திற்குப் போனார்கள். தாத்தா ஒரு கையால் விசிறிய படி ஊஞ்சலில் உட்கார்ந்தார்.

சௌம்யா ஒரு தூணைப் பிடித்தபடி நின்றாள். அவளை அவர் பல கேள்விகள் கேட்டார். அவள் படிப்பு பற்றி, அவள் உத்தியோகம் பற்றி, அவள் அப்பா, அம்மா வைப் பற்றி.

சௌம்யா அசந்து போனாள். இந்த மனிதர்தான் எத்தனை விஷயங்கள் தெரிந்து வைத்திருக்கிறார். கிணற்றுத் தவளை என எடை போட்டது எத்தனை தவறு?

பகலில் படுப்பது அந்த வீட்டில் வழக்கம் இல்லை என எச்சரித்திருந்தான் கௌதம். அவனைத் தனியே சந்திக்கக் கூட அவளால் இரவு பத்து மணிக்குத்தான் முடிந்தது.

பாட்டி அவள் கையில் பால் செம்பைக் கொடுத்து மாடிக்கு அனுப்பினாள். முதலிரவு அறை போல உள்ளே ஜோடிக்கப் பட்டிருந்தது.

''ஆமாம். வீட்டில் இத்தனை பேர் இருக்கிறார்களே.. யார்?'' எனக் கேட்டாள் சௌம்யா.

''பாட்டி சொல்லவில்லையா?''

''சொன்னார்கள். மாமா பேத்தி. அக்காள்கள் மருமான். இப்படி ஏதேதோ...''

''அது கூட எனக்குத் தெரியாது. ''நமக்கு நேருவைத் தெரியும். அவருக்கு நம்மைத் தெரியாது என்பார்கள் இல்லையா?'' அது போலத்தான். அவர்களுக்கு நம்மைத் தெரி யும். அது நமக்குப் போதும்'' என்றான் கௌதம் சுருக்கமாக.

**ம**றுநாள் காலை.

ஐந்து மணி அடிக்கவில்லை.

சௌம்யா கௌதமை எழுப்பினாள். அவன் காதுகளில் மெதுவாகச் சொன் னாள்.

''ஐயையோ...'' என்றான் அவன் திடுக் கிட்டுப் போய்.

அவர்கள் எதிர்பார்க்காத விபரீதம். ஒரு வாரத்திற்கு முன்பே.

''இப்போது என்ன செய்வது?'' எனக் கையைப் பிசைந்தாள் சௌம்யா.

கௌதம் பாட்டியைப் பார்த்து மெது வாகச் சொன்னான்.

''அடப் பாவமே... இருக்கப் போற நான்கு நாளிலே இது ஒரு கூத்தா?'' என்ற வள் பூஜை அறையை மூடினாள்.

சௌம்யாவைக் கீழே கூட்டிப் போனாள்.

பின்னர் வாயிற்திண்ணை ஓரத்தில் மரத் தடுப்புப் போட்ட அறையைக் காட்டினாள்.

''அங்கேயே இரு அம்மா. கதவைத் திறக் காதே. உனக்கு இதெல்லாம் பழக்கம் இல்லே. பார்த்து இருந்துக்கோடி குழந்தே.''

வேலைக்காரி அதற்குள் சுத்தப்படுத்தி யிருந்தாள். ஐந்தடி நீளமுள்ள பெஞ்சு போடப்பட்டிருந்தது. ஒரு போர்வை கொண்டு தந்தார்கள். ஒரு செம்பும் தம்ளரும்.

சௌம்யாவிற்கு அழுகை அழுகையாக வந்தது. அவர்கள் வீட்டு அல்சேஷியனுக்கு ஒதுக்கப்பட்ட இடம் இன்னும் கொஞ்சம் தாராளமாக வசதியாக இருக்கும்.

''தவறிப் போய்த் தாத்தா கண்ணில் பட்டு விடாதே. குளிக்கப் புறப்பட்டு விடுவார்'' என எச்சரித்தாள் பாட்டி.

அன்று வியாழக் கிழமை. ஞாயிறன்று அவர்கள் திரும்பப் புறப்பட வேண்டும். வெள்ளிக் கிழமை காலையில்தான் கோவில்

அபிஷேகம். ஆராதனை எல்லாம் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

வீட்டில் அத்தனை பேர் இருந்தாலும் இவள் வயதில், மனம் விட்டுப் பேச யாரும் இல்லை. ஒரே ஒரு பிள்ளைக் குழந்தை. இரண்டு வயது முடிந்திருக்கும். 'அஸ்வின்' என்று பெயர். நேற்று அவளிடம் ஒட்டிக் கொண்டது. அது இருந்தாலும் கூடப் போதும்.

ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்த அவள் கதவை யாரோ பிறாண்டுவது போல் கேட்கவே சற்றே திறந்தாள். இரண்டு பிஸ்கட் பொட்டலம் உள்ளே வந்து விழுந்தது. அவசரமாகத் திரும்பிப் போய்க் கொண்டிருந்த கௌதமின் முதுகு தெரிந்தது.

அஸ்வினின் தாய் குழந்தையுடன் வாசலுக்கு வந்தாள். சௌம்யாவைப் பார்த்துச் சிரித்தான் குழந்தை. அவளிடம் போகத் தன் தாயின் இடுப்பிலிருந்து தாவினான். ஆனால் அவன் அம்மா விடவில்லை. அழ அழக் கூட்டிப் போனாள்.

வீட்டில் அவளுக்காகத் தனிச் சமையல். சுவையில் குறைவு இல்லைதான். நேரம் தப்பி, ஜெயில் கைதிக்குப் போடுவது போல், எல்லாவற்றையும் அவளே கழுவி, அவளே எடுத்துக் கொண்டு போய்க் கவிழ்த்து, அவள் நடந்த இடமெல்லாம் பின்னாலேயே ஒருவர் நீர் தெளித்து ...

சௌம்யாவிற்கு இம்மியும் பிடிக்க வில்லை. ''சுத்தக் காட்டுமிராண்டி ஜனங்கள்!'' எனச் சபித்தாள். முக்கியமாகத் தாத்தாவின் மேல் கோபம் வந்தது.

**ம**றுநாள்.

காலை ஒன்பது மணிக்கு எல்லோரும் கோவிலுக்குப் புறப்பட்டுப் போய் விட்டார்கள். திரும்பி வரப் பதினோரு மணி ஆகும். எனப் பாட்டி சொன்னாள்.

''நீ கூட வேண்டுமானால் கொஞ்ச நேரம் திண்ணையில் உட்கார்ந்து கொள்!'' எனச் சொல்லி விட்டுப் போனாள் பாட்டி. பாவம் பெண் மனசு புரிந்தவள்.

மணி பத்தரை.

அஸ்வினுடைய தாய் வெளியே வந்தாள்.

''தீபாராதனை ஆகும் நேரம். போய் எட்டிப் பார்த்து விட்டு வருகிறேன்!'' என்று சௌம்யாவிடம் சொன்னாள்.

''அஸ்வின் எங்கே?'' எனக் கேட்டாள்.

''உள்ளே தூங்கிக் கொண்டிருக்கிறான்!'' எனச் சொல்லி விட்டுப் போனாள் அவள்.

இன்னும் பத்து நிமிஷங்கள்தான் இந்த விடுதலை கூட. மறுபடியும் கூண்டிற்குள் அடைபட்டாக வேண்டும்.

திடீரெனக் குழந்தையின் வீறிட்ட அழுகை. சௌம்யா தன் நிலை மறந்து உள்ளே ஓடினாள்.

அங்கே திறந்திருந்த பூஜை அறையி

னுள்ளே குழந்தை கீழே கிடந்தான். அவன் மேல் குத்து விளக்கு. ஆடையில் தீ.

தூக்கத்திலிருந்து எழுந்திருந்தவன் அம்மாவைத் தேடியிருக்கிறான். அகஸ்மாத்தாக பூஜை அறையின் கதவு திறந்திருக்கவே எட்டிப் பார்த்து இருக்கிறான். தட்டில் இருந்த வாழைப் பழம் அவன் கண்ணில் பட்டிருக்கிறது. எடுத்துக் கொண்டு திரும்பியவன் கால் இடறிக் கீழே விழ, 'குத்து விளக்குச் சாய்ந்து அதன் சுடர் அவன் ஆடையில் பற்றிக் கொள்ள...

சௌம்யா யோசிக்கவில்லை. உள்ளே பாய்ந்தாள். குழந்தையை வாரி எடுத்தாள். தன் கையால் துணியைக் கசக்கித் தீயை அணைத்தாள். விசும்பிய குழந்தையைத் தோளில் போட்டுத் தட்டியவாறு வெளியே வர யத்தனித்த போது —

பூஜை அறை வாசலில் தாத்தா, பாட்டி, கௌதம்...' எல்லோரும்!

குழந்தையைக் கீழே போட்டு விட்டு, பொங்கி வரும் அழுகையை அடக்க முடியாமல் வெளியே ஓடி வந்தாள்.

கௌதம் அவளைக் கோபத்துடன் வெறித்தான். ''படித்துப் படித்துச் சொல்லியும் இப்படிச் செய்து விட்டாயே!'' எனக் கோபித்தான்.

அலர்தியான ஒரு மௌனம்.

குடம் குடமாகத் தண்ணீர் கொண்டு அறை கழுவப்பட்டது, தன் மேல் கொட்டப்பட்ட அக்கினித் திராவகமாகத் தெரிந்தது சௌம்யாவுக்கு. துடைப்பத்தால் தேய்த்துத் தேய்த்துப் பெருக்கினார்கள். தன்னையே இரண்டு அடி அடித்தால் கூடப் பரவாயில்லை எனப்பட்டது.

தாத்தா குளித்தார். பாட்டி குளித்தாள்.

மறுபடியும் பூஜை ஆரம்பமாகியது. மணி பன்னிரண்டு. ஒன்று...

தாத்தா எழுந்திருக்கவில்லை. சௌந்தர்ய லஹரி முடிந்தது. மூகபஞ்சசதி நிறைவு பெற்றது. ஆனால் அவர் எழுந்திருக்கவில்லை.

அத்தனை பேரும் பட்டினி.

பகல் இரண்டு மணி. தீபாராதனை மணி அடித்தது.

பாட்டி மட்டும் உள்ளே போனாள்.

''சாப்பிட வாருங்கள்!'' என அழைத்தாள்.

''இல்லை. நான் வரவில்லை. எனக்கு வேண்டாம்.''

''தெரியாமல் நடந்து விட்டது. இதற்காக...''

''நீங்கள் எல்லோரும் போய்ச் சாப்பிடுங்கள். எனக்கு வேண்டாம் என்றால் வேண்டாம்.''

''இதோ பாருங்கள். அந்தப் பெண் குழந்தை... கத்தி யாரையாவது உதவிக்குக் கூப்பிட்டிருக்கலாம். தானே உள்ளே போனது தப்பு. பாவம். நான்கு நாட்கள் இருக்கப் போகிறாள். நம் கோபத்தை அவளிடம் காட்டி.''

''பாகீரதி? அவளா குழந்தை?'' — சுவாமிநாதன் கேட்டார் உக்கிரமாக.

''ஆமாம். நம்ம பழக்கம், வழக்கம் எல்லாம் தெரியாத சிறிசு. குழந்தைதான்.''

''குழந்தை இல்லேடி அவள். தேவி. நான் வணங்கும் மாதா. நம் வீட்டில் ஒரு சிசு ஹத்தி ஏற்படக் கூடாது என்பதற்காக இந்தப் பெண் ரூபத்தில் வந்த ஆதி சக்தி. அவள் காலில் விழுந்து நமஸ்கரித்தால் கூடத் தோஷம் இல்லை'' என்றார் சுவாமிநாதன் உணர்ச்சிப்பெருக்குடன்.

கௌதம் உடல் சிலிர்த்தது. சௌம்யா பரவசப்பட்டுப் போனாள்.

''அப்படியானால் சாப்பிட வாருங்களேன்.''

''இல்லை. பாகீரதி. எந்தக் குற்றத்திற்கும் தண்டனை உண்டு. பூஜை அறை விளக்கைத் தணிக்காமல் போனது என் தப்பு. அறையை மூடாமல் வந்தது உன் தப்பு. நாம் இரண்டு பேரும் இன்று உபவாசம் இருப்போம். மற்றவர்கள் சாப்பிடட்டும்!'' என்றார் சுவாமிநாதன் முடிவாக.

சௌம்யா தன்னையறியாமல் கையெடுத்து அவர் இருந்த பக்கம் பார்த்துக் கும்பிட்டாள்.



அடுத்த இதழில்...

“என் வாழ்க்கையே ஒரு திரைக்கதை...”

— மனம் திறந்து பேசுகிறார் எஸ். பி. பி.!

# ஒரு நெருக்கமான சந்திப்பு

## இன்று முதல் ஒரு இளைஞர் குழு உங்களிடம் பேசி-பரிசளிக்க வருகிறார்கள்.

**(உங்கள் வீட்டிலோ அல்லது அலுவலகத்திலோ )**

இன்று முதல் ஸ்ரீராம் நண்பர்கள் மக்களைச் சந்திக்க இருக்கிறார்கள். இந்தச் சந்திப்பு வீடுகளிலோ அல்லது அலுவலகங்களிலோ அல்லது எங்கே வசதியோ அங்கே நடைபெறும். நீங்களே கூட இந்த நெருக்கமான சந்திப்பில் இடம் பெறுபவராக இருக்கக்கூடும். அது பலன் மிக்க சந்திப்பாகும் — சில எளிய கேள்வி களுக்குப் பதில் அளிப்பதன் மூலம் பரிசு ஒன்றை நீங்கள் பெறுவதற்கு வாய்ப்பு இருக்கிறது. அதனால்தான் அவர்கள் கேட்கக்கூடிய கேள்விகளுக்குச் சரியான பதில்களை உங்களுக்குப் பரிச்சயப்படுத்துகிறோம். இதோ பின் வருவனவற்றைத் தெரிந்து கொண்டால் நீங்கள் எல்லாக் கேள்விகளுக்குமே பதில் அளித்து விட முடியும்:

சீட்டுநிதி என்றால் என்ன? உங்களைப் போன்ற சந்தாதாரர்கள் ஒரு குழுவாகச் சேர்ந்து, ஒரு நிர்ணயிக் கப்பட்ட காலத்துக்கு ஒவ்வொரு மாதமும் ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்துவதுதான் சீட்டு ஆகும். ஒவ்வொரு மாதமும் ஒரு சந்தாதாரர் ஏலத்தில் தள்ளி எடுத்து வெற்றி பெறுவார். சீட்டின் அசல் மதிப்புத் தொகைக்கும் அவர் தள்ளி எடுத்த தொகைக்கும் இடையே உள்ள வித்தியாசம் டிவிடெண்ட் ஆக விநியோகிக்கப்படுகிறது.

ஒருவருடைய வருங்கால வருமானங்கள் ஒரு மூலதனமாக அமைவதை நிச்சயப்படுத்திக் கொள்ளும் ஒரு வழிதான் சீட்டு ஆகும். அது உடனடியான தேவைகளை சந்திப்பதற்கும் இருக்கலாம். அல்லது பின்னர் ஏற்படக் கூடிய ஓர் அவசியத்துக்காகவும் இருக்கலாம். சீட்டின் இணக்கமான தன்மையே, அதில் ஒரு சந்தாதாரர் சேமிப்பவராகவும் கடன் பெறுபவ ராகவும் இருப்பதுதான். பல்கிப் பெருகும் பலனை உள்ளடக்கி விளங்குகிறது சீட்டு. சரியான தருணத்தில் சீட்டுத் தொகையைத் தள்ளி எடுத்து அதனால் கிடைக்கும் தொகையை மறுமுதலீடு செய்யுங்கள். அந்த முதலீட்டிலிருந்து கிடைக்கும் வருமானம் அதிகமாக இருக்கும்.

ஸ்ரீராம் சிட்ஸ் நாட்டின் மிகப் பெரிய சீட்டு நிறுவனம் ஆகும். சுமார் 2 லட்சம் சந்தாதாரர்கள் கொண்டது. தொடக்கத்திலிருந்து இதுவரை சுமார் 260 கோடி ரூபாய்க்கும் அதிகமான சீட்டுத் தொகையை ஸ்ரீராம் சிட்ஸ் விநியோகித்துள்ளது. இப்போதைய மொத்த ஆண்டு ஏலத்தொகை 160 கோடி ரூபாய் ஆகும்.

இந்த விவரங்களைத் தெரிந்து கொள்வதன் மூலம் பதில் சொல்வதில் நீங்கள் சிறந்து விளங்குவீர்கள். உங்களை சந்திக்க ஆவலோடு காத்திருக்கும் ஸ்ரீராம் நண்பரின் எந்தக் கேள்வியையும் நீங்கள் துணிவோடு எதிர் நோக்கலாம்.

இந்தச் சந்திப்பில் நீங்கள் எப்படிப் பதில் சொல்கிறீர்கள் என்பதைப் பொறுத்து உங்கள் ஸ்ரீராம் நண்பர் உங்களுக்குப் பரிசுக் கூப்பனை அளிப்பார். மூன்று சரியான பதில்களை அளிப்பதன் மூலம் உங்களுக்குக் கிடைக்கும் பரிசுக் கூப்பனைக் கொண்டு ஒரு அழகிய, **சிக்** ஜாஸ்மின் கண்டிஷனர் ஷாம்பூ கொண்ட பரிசுப் பெட்டியைப் பெற முடியும்.

# அந்தி வரும் நேரம்



தலைப்புக்கும் படத்துக்கும் சம்பந்தம் இல்லாதது போலவே ஆரம்பக் காட்சிகள் ஒன்றுக்கொன்று அவ்வளவாக ஒட்டாமல் போய் விட்டாலும் கார் விபத்துக்குள்ளாகும் மாலினி (அறிமுகம்) கோமா நிலைக்குப் போன பின், 'ஓமன்' போன்ற ஆவியுலகம் சம்பந்தப்பட்ட ஆங்கிலப் படங்களின் திகில் காட்சிகள் துணை நின்று விறுவிறுப்பைக் கூட்டுகின்றன.

உடல் அப்படியே அசையாமலிருக்கத் தலை மட்டும் தனியே 360 டிகிரிக்கு முழுமையாகச் சுற்றி நிலைப்பதும், இடுகாட்டின் ஒரு பகுதித்தரை படிப்படியாகக் கொந்தளிக்கும் சேற்றுக் குட்டையாக மாறுவதும், பரந்து விரிந்த இரட்டைக் கட்டில் சட்டென ஒரு மினி நீச்சல்குளமாக மாறி ஆவிப் பெண் அதில் நீச்சலடிக்க, கட்டிலின் கண்ணாடிப் பரப்பின் மீது படுத்தபடியே அதைப் பார்த்து ரசித்து மயங்கிப் போகும் நிழல்கள் ரவியை அவள் ஆவலோடு தழுவி உள்ளுக்குள் இழுத்துத் தண்ணீரினுள் அமுக்க நீர்க்குமிழிகள் கொப்புளிப்பதும் — ஏற்கெனவே பார்த்திருக்கும் விதேசிக் காட்சிகள் போலத்தான் என்றாலும் பரபரப்புக்குக் குறைவில்லை. அவற்றுக்குப் பக்கவலுவாக விளங்குவது சங்கர் — கணேஷின் பின்னணி இசை.

கோமாவில் படுத்திருக்கும் மாலினியின் ஆவி இன்னொரு பெண்ணின் உடலில் புகுந்து கொள்கிறது. தன்னை அந்நிலைக்கு ஆளாக்கிய நால்வரைப் பழிவாங்குவது அதன் நோக்கம். அவர்கள் ஒவ்வொருவராக அலற அலறக் கொலை செய்யப்பட, ஆவியின் அட்டகாசத்தை முடிவுக்குக் கொண்டு வருவது எப்படி?

வெகுஜன நன்மைக்காக மாலினியின் தாய் (கமலா காமேஷ்) மருத்துவமனையில் நினைவில்லாமல் படுத்திருக்கும் தன் மகளின் உடலில் செலுத்தப்பட்டிருக்கும் குழாய் இணைப்புக்களை (பிராண வாயு, சலைன், இரத்தம்) பிடுங்கியெறிந்து அவள் உயிரைப் போக்க, ஆவி அடங்கிப் போகிறது.

முதலில், "எப்படியாவது என் மகளின் உயிரைக் காப்பாற்றுங்கள் டாக்டர்" என்று நிழல்கள் ரவியிடம் அழுது மன்றாடும் அந்தத் தாயே முடிவில் மகளின் உயிரைப் போக்கிவிடும் உறுதிக்கு வந்துவிடும் பாத்திரப் படைப்பு கமலா காமேஷுக்கு அளவெடுத்துத் தைத்த சட்டை.

நிழல்கள் ரவி, கமலா காமேஷ் — இந்த இருவரையும் விட்டு விட்டால், படம் முழுவதும் எவ்வளவு தேடினாலும் பழக்கப்பட்ட வேறு முகங்கள் யாருமே இல்லை.

ஆவியின் அட்டகாசங்களைப் போக்கி அழித்துவிடப் பூசாரிகளையும் மதச் சின்னங்களையும் நாடிப் பயன்படுத்தாமல் மருத்துவ ரீதியில் முடிவு கண்டிருப்பது ஆறுதலான விஷயம்.

என்றாலும், இயக்குனர் இந்த ஆவியுலகச் சமாசாரங்களை இன்னும் சற்று ஆழமாக ஆராய்ந்திருக்கலாமோ என்று தோன்றுகிறது. காரணம், உயிரோடு கோமா நிலையில் இருக்கும் போதே உடலை விட்டு ஆவி வெளியேறி இப்படியெல்லாம் ஆட்டிப் படைக்கிறது என்பதை, என்னதான் இது தமிழ் சினிமாவாக இருந்தாலும் கூட, ஜீரணிக்க முடியவில்லை.

நட்சத்திரப் பட்டியலையும் அதனுடன் இணைத்திருக்கும் தமிழ் சினிமா ஃபார்முலாவையும் நம்பியிராமல் காமிராவையும் கத்தரிக்கோலையும் நம்புவதற்கு நிறையத் துணிச்சல் வேண்டும். இயக்குனர் ரமேஷ்குமாருக்கு அது நிறையவே இருக்கிறது.

அதோடு, சரி.

— சி. ஆர். கே.

50

('சினிமா சிங்காரத்தின் முக பாவனையால் படத்தின் தன்மையை உணர்த்தலாமே...' என்று ஐடியா கொடுத்த வாசகர்: நெல்லை குரலோன், பொட்டல்புதூர்.)



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி
## ரூ.250/- ஆறுதல் பரிசு பெறும் கதை-3.

# மரணம்

'அரசினர் ராசாசி மருத்துவமனை' என்றன எழுத்துக்கள் சோகையாய். எதிர்ச் சுவரில் தமிழனை இன உணர்வு கொள்ளச் சொல்லி, பெரிய கறுப்பு எழுத்துக்கள். பஸ் ஸ்டாப்புகளில் 'பஸ் வராதா?' என்று முதிய தலைமுறையும், 'காதல் வராதா?' என்று இளைய தலைமுறையும்.

ஆஸ்பத்திரியினுள் எல்லாம் அவசரமயமாய் இருந்தது. வெவ்வேறு மனிதர்கள். நம்பிக்கையுடன். நம்பிக்கை இல்லாமல்.



சந்தோஷத்துடன். சோகமாய். சஞ்சலமாய். கனவுகள் சுமந்து. கர்ப்பங்கள் சுமந்து. மரணத்தைச் சுமந்து. அருசையாய். இரத்தமாய். அங்கஹீனமாய். ஆண்கள். பெண்கள். குழந்தைகள். மனிதர்கள். இத்துடன், இயக்கம் நின்று போன, வெறும் பிணங்கள்!

ஆஸ்பத்திரி வாசலில் ரிக்ஷா நிற்க, இறங்கிய முனியசாமிக்கு மலைப்பாய் இருந்தது.

''சீக்கிரம்... சீக்கிரம்...'' என்று அவசரப்படுத்தினான் ரிக்ஷாக்காரன்.

ரிக்ஷாவினுள் முடங்கிக் கிடந்த தன் மகனைக் குனிந்து தூக்கித் தோளில் சாய்த்துக் கொண்டான்.

வாசலுக்கு வந்தவனைத் தடுத்து நிறுத்தினான் கேட்கீப்பர்.

''புள்ளைக்கு ரொம்ப முடியலீங்க. உடனே ஆசுபத்திரியிலே சேர்க்கணும்னு எங்க ஊரு டாக்டர் எழுதிக் கொடுத்து விட்டாருங்க...'' என்றான் கலங்கிய

தரலில்.

''அப்படியா? சேர்த்துடலாம். ஒண்ணும் கவலைப்படாதே.'' என்றான் கேட்-கீப்பர். ''அப்படியே மச் செலவுக்கு ரெண்டு ரூபா கொடுத்துட்டுப் போ...''

கொடுக்கா விட்டால் திருப்பி அனுப்பி விடுவானோ என்று பயந்து, ரூபாயைத் தந்து விட்டு உள்ளே வந்தான்.

வீல்சேரைத் தள்ளி வந்த ஒருவன், ''என்ன பண்ணுது?'' என்றான் சிநேகமாய்.

''புள்ளைக்கு முடியலீங்க...''

''பின்னே ஏம்ப்பா தேமேன்னு முழிச்சுக்கிட்டு நிக்கே? இதுல உட்கார வை...''

''மவராசனா இருப்பே...'' மகனை வீல் சேரில் உட்கார்த்தினான்.

பையன் மெதுவாய்க் கண் திறந்தான். ''பசிக்குதா நைனா? பெட்டுலே உன்னைச் சேர்த்துட்டுக் காப்பி ரொட்டி வாங்கியாறேன்...'' என்று கூறிய முனியசாமிக்கு இறந்து போன மனைவி 'கறுப்பு'வின் ஞாபகம் வந்தது. உலகத்திலேயே தான் மட்டும் அனாதையாய் இருப்பதாய்த் தோன்ற, அழுகை வந்தது.

''அடச்சீ ... ஏய்யா இப்பவே செத்துப் போன மாதிரி அழுவுறே?'' என்றான் வீல் சேரைத் தள்ளுபவன்.

ஓ.பி. டிக்கெட் கொடுக்குமிடத்தில் வீல் சேரை நிறுத்தினான் சிப்பந்தி. ''வா.. ஓ.பி. டிக்கெட் வாங்கியாறலாம்...''

ஓ.பி. டிக்கெட் வாங்க ஹனுமன் வால் போல் வரிசை இருந்தது. ஓ.பி. டிக்கெட் தருபவனிடம், ''அண்ணே.. நமக்குத் தெரிஞ்ச கேசு. அவசரம். டிக்கட் குடு..'' என்றான் வீல்சேர்காரன்.

''பேரு என்னப்பா?''




''முனியசாமிங்க...''

''ஓம் பேரைக் கேக்கலே. புள்ளை பேரைச் சொல்லு..''

''கண்ணனுங்க..''

எழுதித் தந்த சீட்டை வாங்கிக் கொண்டு, மீண்டும் வீல்சேரைத் தள்ளினான். மூத்திர, மல வாசனையைத் தாண்டி

**சமர்ப்பணம்**

மதுரை மருத்துவக் கல்லூரியில் மருத்துவத் துறைப் பேராசிரியராய் விளங்கிய காலஞ்சென்ற டாக்டர் ஆர். எஸ். (ஆர். சுப்ரமணியம்) அவர்களுக்கு இக்கதையைச் சமர்ப்பணம் செய்கிறேன்.

— சகுபர் சாதிக்.

**சகுபர் சாதிக்**

இருபத்திரெண்டாம் நம்பர் அறைக்கருகே நிறுத்தினான்.

''இங்கேதான் காட்டணும். இந்தா, சீட்டைப் புடி...''

பிள்ளையைத் தூக்கப் போனான் முனியசாமி.

''இந்தாப்பா.. ஒரு அஞ்சு ரூபா கொடு...'' என்றான் வீல் சேர்க்காரன்.

பிடுங்காத குறையாய் வாங்கிப் போனான்.

**இ**ருபத்திரண்டாம் அறையின் உள்ளும், வெளியும் கும்பலாய் இருந்தது. உள்ளே மேஜையைச் சுற்றியிருந்த நாற்காலிகளில் டாக்டர்கள். அவர்களைச் சுற்றி நோயாளிகள்.

கண்ணன் பரிசோதனை மேஜையில் கிடத்தப்பட்டான். ஒரு டாக்டர் எழுந்து வந்து, ''என்ன பண்ணுது?'' என்றார். விழி இமையைத் தூக்கிப் பார்த்தார். தலையை ஆட்டிப் பார்த்தார். டார்ச் லைட் ஒளியைக் கண்ணுக்குள் அடித்தார். சுத்தியல் போன்ற கருவியை எடுத்து மூட்டுகளில் தட்டினார். சாவியைக் கொண்டு பாதத்தைக் கீறினார். காலைக் கையைத் தூக்கிப் பார்த்தார். ''பையனுக்கு மூளைக் காச்சல் மாதிரி தெரியுது. பெட்லே சேத்துக்கிறியாப்பா?'' என்றபடி ஓ. பி. டிக்கெட்டில் ஏதேதோ எழுதினார்.

''பையனுக்குச் சரியாயிடுமா சாமி?''

''பையனைத் தூக்கிக்கிட்டு வாங்க...'' என்று டாக்டர் அடுத்த அறைக்குப் போனார். முனியசாமி பையனைத் தூக்கிக் கொண்டு அவர் பின்னாலேயே ஓடினான்.

அடுத்த அறையில் சீஃப். டாக்டர், மாண்வ மாணவிகளுக்கு வகுப்பு எடுத்துக் கொண்டிருந்தார்.

''கொஞ்ச நேரம் பையனை வச்சுக்கிட்டு இங்கேயே இருங்க. சீஃப் வகுப்பு முடிச்ச பின்னாலே, நான் வந்து அவர்கிட்டே பெட்டுலே சேர்க்கக் கையெழுத்து வாங்கித் தாரேன்...'' என்று சொல்லி விட்டுப் போனார் அந்த டாக்டர்.

**சீ**ஃபிடம் அட்மிஷனுக்காகக் கையெழுத்து வாங்கியபின் சாப்பாடு சீட்டு வாங்க இரண்டாம் நம்பர் அறைக்குப் போனான்.

இரண்டாம் நம்பர் அறையிலும் வரிசை இருந்தது. வரிசையில் நிற்காமலேயே சிலர் சாப்பாடு சீட்டு வாங்கிப் போனார்கள். சிலர் பணம் தந்தார்கள். சிலரிடம் பணம் கேட்டார்கள். கேட்டுத் தராதவர்களைச் 'சாவுக்கிராக்கி' என்று திட்டினார்கள். தன் முறை வந்ததும் டாக்டர் எழுதித் தந்த சீட்டை முனியசாமி காட்டினான். பெயர் விலாசம் எழுதிக் கொண்டு இன்னொரு சீட்டு தந்தார்கள்.

''இந்தா... இதைக் கொண்டு போய் நூத்திப் பன்னெண்டுலே கொடு...''

நூத்திப் பன்னிரண்டுக்குப் போகும் வழியை யாரிடம் கேட்பது...?

எதுவும் புரியாமல், பையனைத் தூக்கிக் கொண்டு இலக்கில்லாமல் நடந்தான்.

**நூ**ற்றிப் பன்னிரண்டாம் வார்டை ஒருவாறு கண்டுபிடித்ததும் 'அப்பாடா' என்றிருந்தது. வாசலில், முகத்தில் கவலையையும் கைகளில் பண்ட பாத்திரங்களையும் வைத்திருக்கும் நோயாளிகளின் உறவினர்கள். சிரிஞ்சுகளை ஏந்தியபடி ஹவுஸ் ஸர்ஜன்கள், நர்ஸிங் மாணவிகள்.

ஒரு மூன்று கோடு பேட்ஜ் அணிந்திருந்த நர்ஸிங் மாணவியிடம், ''பையனை பெட்டுலே சேர்க்கணுங்க...'' என்றான் முனியசாமி. சாப்பாடு சீட்டை அவளிடம் தந்தான். நோட்டுப் புத்தகத்தில் பதியப் போன அந்தப் பெண், ''ஹலோ நிம்மி...'' என்று குரல் கேட்டு நிமிர்ந்தாள். எதிரில் ஒரு ஹவுஸ் ஸர்ஜன்.

எழுதுவதை நிறுத்தி விட்டு, ''இன்னிக்கு ஏன் இவ்ளோவ் லேட் பாலமுருகன்?'' என்றாள்.

''ஓபியை முடிச்சுட்டு வர வேணாமா?'' என்றான். ''நேத்து எங்கே ஆளையே காணோம்?''

''ஆஃப்...''

உள்ளிருந்து, ''நிர்மலா, இங்கே வா..'' என்று ஸ்டாஃப் நர்ஸ் கூப்பிட, ''குண்டம்மாவுக்கு ஒடனே மூக்குலே வேர்த்துடுமே...'' என்றாள். ''சரி... அப்புறமா வர்றேன்...''

''இன்னிக்கு என்ன ட்யூட்டி? ஆன் ட்யூட்டியா, ஆஃப் ட்யூட்டியா?''

''ஆஃப். ட்யூட்டி...'' என்று சொல்லி உள்ளே போனாள்.

பின்னால் வந்த இன்னொரு ஹவுஸ் ஸர்ஜன், பாலமுருகனிடம், ''நல்லா கொக்கு சுடுறேடா..'' என்றான்.

''பையனைப் பெட்டுலே சேர்க்கணும்,'' என்றான் முனியசாமி.

''கொஞ்சம் வெய்ட் பண்ணுங்க. ஸிஸ்டர் வந்ததும் அவங்ககிட்டே கொடுங்க..''

**அ**ந்த 'ஸிஸ்டர்' வந்து, சம்பிரதாய நடைமுறைகள் முடிந்து, பையனைப் படுக்கையில் கிடத்த இன்னும் அரை மணி நேரம் ஆனது.

ஓ.பி.யில் பார்த்த டாக்டர் மீண்டும் பையனைப் பரிசோதித்தார். நீளமான சீட்டில் எழுதினார். ஹவுஸ் ஸர்ஜன் ஒருவனைக் கூப்பிட்டு, ''இந்தக் கேசுக்கு எல்.பி. பண்ணணும்,'' என்றார்.

பயிற்சி டாக்டர்களில் சிலர் நோயாளிகளுக்கு ஊசி போட்டுக் கொண்டிருந்தனர்; நோயாளிகளைப் பரிசோதித்துக் கொண்டிருந்தனர்; வம்பளந்து கொண்டிருந்தனர்.

நசித்து விட்டதும் பையன் பக்கத்தில் உட்கார்ந்தான் முனியசாமி.

"என்ன ராசா, என்ன பண்ணுது?"

"அப்பா..."

"என்னடா கண்ணு?"

முனியசாமியைச் சற்று நேரம் கூர்ந்து பார்த்தான் பையன்.

"அப்பா... எனக்காகத்தான் நீ கள்ளு, சாராயம் குடிக்கிறதை நிப்பாட்டுனியாமே..."

முனியசாமி தலையை ஆட்டினான்.

"எனக்காகத்தான் நீ ரெண்டாங் கல்யாணமே பண்ணிக்கலியாமே...?"

"இதெல்லாம் ஏம்பா இப்ப கேக்குறே?"

"முழுப் பரீட்சையப்போ போன வருஷம் எனக்குக் கால் ஒடஞ்சு போனப்ப, பரீட்சை எழுதறதுக்கு என்னை நெதமும் தூக்கிட்டுப் போனில்லப்பா..."

முனியசாமிக்குக் கண்களில் நீர் கோத்தது.

"நான் பொழச்சுக்குவேனாப்பா?"

"நீ பொழச்சுக்குவே ராசா..." என்றான். "இப்படியே படுத்துக்க. காப்பி வாங்கியாறேன்."

"அப்பா... எனக்குப் பல்லெல்லாம் ஊறுது.. எதையாச்சும் கடிக்கணும் போலிருக்கு..."

"ஐயையோ... எம்புள்ளே என்னென்னமோ புலம்பறானே..."

**வா**ர்டில் இருந்து விசிட்டர்கள் விரட்டப்பட்டனர். அவர்களுடன் சப்தமும்.

"சீஃப் வர்றார்."

சீஃப் உள்ளே நுழைய, பவ்யமாய் அவர் பின்னால் எல்லா டாக்டர்களும்.

முதல் பெட்டுக்கு வந்தார். "**What is this case?**" என்றார்.

ஒரு எம்.டி. படிக்கும் மாணவன், "**A case of acute myocardial infarction,**" என்றான்.

அடுத்த பெட்டுக்கு வந்தார். அடுத்த பெட். அடுத்த பெட். அப்போது அவர் பார்வை கண்ணன் மேல் பட, "லுக்..." என்றார்.

முனியசாமி தன் பையனுக்குக் காப்பியைப் புகட்ட முயற்சி செய்ய, அதை விழுங்க முடியாமல் திணறிக் கொண்டிருந்தான் பையன். முகம் திருகி, கண்கள் செருகி, வேர்த்து 'வேண்டாம்' என்று தலையசைத்துக் கொண்டிருந்தான்.

"என்னையா பாத்தீங்க...?" என்றார் சீஃப்.

ஒருவரும் பதில் சொல்லாமல் போக, "ஹைட்ரோஃபோபியா" என்றார். எல்லாரும் அதிர்ந்து நிற்க, "யாருய்யா இந்த கேஸைப் பார்த்தது?"

ஒரு எம். டி. மாணவன் முன்னே வர, "என்னய்யா கேஸ் இது?" என்றார்.

"என்கெஃபலைடிஸ்..."



**பதினெட்டு ஆண்டுகளாக ஒருவர் ரயில்வேயில் உதவியாளராகவும், அதே சமயம் தபால் தந்தி அலுவலகத்தில் போர்ட்டராகவும் வேலை பார்த்து, இரண்டு அலுவலகங்களிலிருந்தும் சம்பளமும் வாங்கி இருக்கிறார்! அத்தனை ஆண்டுகள் சென்று அவருடைய மோசடியை ரயில்வே போர்டின் புலனாய்வுத் துறை கண்டுபிடித்தது.**

**ஆதாரம்: 'தி ஸ்டேட்ஸ்மென்'**
**தகவல்: தக்கோலம் அ. முஸ்தபா.**

''நாய் ஏதும் கடிச்சதான்னு கேட்டியா?''

''இல்லே ஸார்...''

''இதுக்காகவே உன்னை எம்.டி.யிலே மூணு தடவை ஃபெயிலாக்கலாம்..''

முனியசாமியைக் கூப்பிட்டார். ''ஏம்ப்பா, நாய் எதனாச்சும் பையனைக் கொஞ்ச நாளைக்கு முன்னாடி கடிச்சுதா?''

யோசித்து, ''ஆமா... சாமி..'' என்றான். ''ரெண்டு மாசம் முன்னாடி ஒரு நாய் கடிச்சதுன்னு பையன் சொன்னான். ரொம்ப பெரிசா ஏதும் காயமில்லே சாமி. அதுக்கு அப்பவே மந்திரிச்சுட்டேன்.''

''முட்டாளே...!'' என்றார். ''அப்பவே தடுப்பூசி போட்டிருந்தா இந்த நெலைமை வந்திருக்காதேய்யா...''

ரேபிஸ். நாய்க்கடியால் வரும் மூளைக் காய்ச்சல். மரணம் நிச்சயம். நூற்றுக்கு நூறு சதவீதம்.

சொன்னது முழுமையாய்ப் புரியாவிட்டாலும் ஏதோ மோசம் என்கிற அளவில் புரிந்தது முனியசாமிக்கு. ''எம் புள்ளைக்கு என்ன சாமி?'' என்றான் அழுகையாய்.

''பையனோட அப்பாவுக்கு வெவரத்தைச் சொல்லிட்டு, பையனை 'செல்'லுக்கு மாத்திடுங்க.''

சீஃப் போனபின், வார்டின் பொறுப்பு டாக்டர் முனியசாமியை உள்ளே கூப்பிட்டார். சொன்னார். ''இது நாய்க்கடியால் வந்த மூளைக் காய்ச்சல். நாய்க் கடிச்ச உடனேயே ஊசி போட்டிருந்தா எந்தப் பிரச்னையும் வந்திருக்காது; ஆனா, மூளைக் காய்ச்சல் வந்துட்டா, ஒண்ணும் பண்ண முடியாது. யாரும் பொழைக்க மாட்டாங்க...''

முனியசாமிக்கு இருட்டிக் கொண்டு வந்தது. ''நான் பெத்த மகனே...'' என்று நெஞ்சிலடித்துக் கொண்டான். ''எம் புள்ளே நாய் மாதிரி கொரைச்சுச் சாகப் போறானா சாமி?''

''அப்படில்லாம் இல்லே..'' யோசித்து, ''ரொம்பவும் கஷ்டப்பட்டுச் சாகறதை வேணும்ன்னா தடுக்க முடியும்..''

பெருங்குரலெடுத்து அழ ஆரம்பித்தான் முனியசாமி. தலையில் பளார் பளாரென அடித்துக் கொண்டான். ''நீ படிச்சு என்னைக் காப்பாத்துவேன்னு நெனச்சேன்.''

''இப்படியெல்லாம் நீங்க கத்தக் கூடாது. பையன் பக்கத்திலே இப்படி அழுதா அவன் மனசு என்ன பாடுபடும்னு நெனச்சுப் பாருங்க...''

முனியசாமி போனதும் மற்ற மாணவர்களையும், பயிற்சி டாக்டர்களையும் கூப்பிட்டார் வார்டின் பொறுப்பு டாக்டர். ''யார் யார் அந்தப் பையனை க்ளோஸா ஹேன்டில் பண்ணுனீங்க..?''

''ஸார்.. நான்தான் அந்தப் பையனை முழுக்க எக்ஸாமின் பண்ணினேன்...''

''ஸார்.. நான்தான் இஞ்செக்ஷன் போட்டேன்...''

''டோன்ட் ஒர்ரி...'' என்றார் பொறுப்பு டாக்டர். ''உங்களுக்கு ஒண்ணும் ஆகாது. இருந்தாலும், அந்தப் பையனை நெருக்கமா ஹேண்டில் பண்ணினவங்கள்லாம் வேக்ஸின் போட்டுக்கங்க. அந்தப் பையனை 'செல்'லுக்கு அனுப்பறதுக்கு முன்னாடி காம்போஸ் இஞ்செக்ஷன் போட்டு அனுப்புங்க...''

'யார் பையனுக்கு ஊசி போடுவது?' என்பதில் எல்லாருக்கும் தயக்கம் இருந்தது. இருந்தபோதிலும், யாராவது போட்டாக வேண்டுமென்பதால் தவிர்ப்புகள், தயக்கங்களுக்குப் பின் பாலமுருகன் போடுவது என்று முடிவானது.

மருந்தை ஸிரிஞ்சில் எடுத்துக் கொண்டு பையனருகில் சென்றான்.

''ஸார், பக்கமா வந்துடாதீங்க..'' என்றான் சிறுவன். ''எனக்குக் கடிக்கணும் போல இருக்கு..''

பாலமுருகன் ஓரடி பின்வாங்கினான். பையன் சுற்று முற்றும் பார்த்தான். அருகிலிருந்த பீரோவைச் சுட்டிக்காட்டி, ''ஸார்... நான் அந்த பீரோவுக்கு அடியிலே தலையை விட்டுக்கறேன். அதுக்கப்புறமா நீங்க எனக்கு ஊசி போடுங்க. கடிக்கணும்னு தோணினாக் கூட சட்டுன்னு என்னாலே தலையை வெளியே எடுக்க முடியாது...'' என்று மெதுவே கட்டிலிலிருந்து இறங்கிச் சென்று தரைக்கும், பீரோவின் அடிப்புறத்திற்கும் இடையில் இருந்த சிறிய இடைவெளிக்குள் கஷ்டப்பட்டுத் தலையை உள்ளே நுழைத்துக் கொண்டான். ''இந்த ஊசி போட்டா நான் பொழைச்சுப்பேனா ஸார்?''

பாலமுருகனுக்கு அழுகை வந்தது.



**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதை — 1**

வீடியோ 'நாயகனில்' கமலஹாசனின் உக்கிரமான சண்டைக் காட்சியில் உணர்ச்சி வயப்பட்டுக் கொண்டிருந்தவர்களின் கவனத்தைச் 'சட்'டென்று திருப்பியது அந்தக் குரல்.

''சார், தந்தி!''

வயதான தந்தையின் மெலிந்த உருவம் ஒரு கணம் கண்களில் நிழலாட, பரபரப்புடன் தந்தியை வாங்கிப் பிரித்தார். "தந்தை சீரியஸ், உடனே வரவும்'' என்ற வாசகம் எதிர்பார்த்தது போல் சம்மட்டி கொண்டு தாக்காவிட்டாலும், அவரைப் பாதிக்கவே செய்தது. மனைவி பார்வதியும் அவளுடைய அப்பா, அம்மா, வயதான பாட்டி இவர்களின் உருவம் நினைவில் கணப்பொழுது தோன்றி மறைய, அவர் அருகில் வந்து எட்டிப் பார்த்து, விஷயம் தெரிந்தபின் லேசான திருப்தி கலந்த அதிர்ச்சியுடன், ''இப்ப என்னங்க பண்றது, உடனே புறப்படவா?'' என்று கேட்டாள்.

''பின்ன, போய்த்தானே ஆகணும், சரி, படத்தை 'ஆப்' பண்ணு'' என்றார். பிள்ளைகள் எதிர்ப்புத் தெரிவிக்க, படம் ஓடிக் கொண்டிருந்தது. அவர் புறப்படுவதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்யலானார்.

'''சீரியஸ்' என்றுதானே வந்திருக்கு, ஒண்ணும் ஆகியிருக்காது'' என்று அவள் சமாதானத்துடன் சொல்ல முயன்றாள்.

''சீரியஸ்னு அடிச்சா 'அது'ன்னுதான் அர்த்தம். தந்தி அப்படித்தான் கொடுப்பாங்க. இங்கே, பம்பாயிலிருந்து நாகர்கோயிலுக்குப் போறதுன்னா அவ்வளவு சீக்கிரம் டிக்கெட் கிடைச்சுடுமா என்ன? எதுக்கும் நான் போய் டிக்கெட் ரிசர்வ் பண்ணிட்டு வர்றேன். இன்னிக்குச் சாயங்கால ரயிலில் கிளம்பினா நாளை மறுநாள் போய்ச் சேர்ந்துரலாம். 'புறப்பட்டாச்சுன்னு' பதில் தந்தி கொடுத்துட்டு, 'லீவ்' அப்ளை பண்ணிட்டு வர்றேன். நீ ரெடியா இரு'' என்று சொல்லி, புறப்பட்டார் ஈஸ்வரன்.

ரயிலில் வரும்போதே தந்தையின் ஒவ்வோர் அசைவும் அவர் கண்முன் நிழற்படமாக ஓடி மறைந்தது. அப்பாவோடு வாழ்ந்த அந்தக் காலம், இனிமையான இளமைப் பருவம். இரவு பத்து மணிக்கு வழக்கமாகவந்து'கேட்'டைத்திறக்கும்தந்தையின் காலடி ஓசை தந்த பரவசத்தில் 'அப்பா வந்தாச்சு' என்று மகிழ்ச்சியுடன் ஓடிக் கதவைத் திறக்க, அவர் கையிலிருக்கும் பார்சலைப் பங்கிடுவதில் அண்ணனுடன் ஏற்படும் போட்டி... அவர் மனம் நெகிழ்ந்தது. சராசரியான மாணவனாக இருந்த தன்னை, தன் தொணதொணப்பால் படிக்கச் செய்தார் அப்பா. உறங்கவே விடமாட்டார். மாடியில் படித்துக் கொண்டிருக்கும் போது இடைஇடையே, ''லேய், என்ன சத்தத்தையே காணோம்; உறங்கிட்டியா?'' என்று அவர் உறங்காமல் இவரைக் கண்காணித்தது; அவர் குரல் கேட்டு லேசான உறக்கத்தில் இருந்து விழித்த இவர், ''படிச்சுட்டுத்தானே இருக்கேன். மனசுல படிக்கேம்பா'' என்று சமாதானம் சொன்னது, ''அப்படியா, படி, படி'' என்று அவர் ஊக்கப்படுத்தியது. எல்லாம் நேற்று நடந்தது போலிருந்தது.

''சீரியஸ்'னுதானே தந்தி வந்திருக்கு. ஏதாவது ஆகியிருக்குமா? நமக்காகக் காத்திருப்பார்களோ? வேறு யாருக்கும் காத்திருக்க வேண்டிய அவசியம் இல்லையே. அண்ணன் அப்பாவோடுதான் இருக்கான். கிராமத்துல நிலபுலன்களைப் பார்த்துக் கொண்டு, தங்கைகள் பக்கத்து ஊர்லதான். நாம்தான் ரொம்ப தூரம். 'ஐஸ்'ல வெச்சிருப்பாங்க!

இந்தச் சிந்தனைக்கு அவசியமே இல்லையே. தந்தி அடிக்கும் போது சீரியஸா இருந்திருக்கலாம். இப்ப நல்லாயிருக்கலாமே! அப்படின்னா, பார்த்துட்டு, ரெண்டுநாள் இருந்துட்டு, வந்துரணும். லீவை கான்சல் பண்ணிடலாம். ஒருவேளை 'அப்படி' நடந்திருந்தால் லீவ் 'எக்ஸ்டண்ட்' பண்ணணும். அனேகமா லீவ் 'எக்ஸ்டண்ட்' பண்ண வேண்டியதிருக்காதுன்னு நினைக்கிறேன். எல்லாம் அங்கே போய்ப் பார்த்துக்கலாம்.'

## நாஞ்சிலமுதன்

காலை ஏழு மணிக்கே நாகர்கோயிலுக்கு வந்து விட்டார்கள். உடனே ஒரு டாக்சியைப் பிடித்துத் தோவாளைக்கு – மலருக்குப் பெயர் பெற்ற அவர்கள் கிராமத்துக்கு விரைந்தார்கள். கிராமத்தினுள் நுழையும் போதே பிச்சி, முல்லை, மரிக்கொழுந்து, செவந்தியின் சுகம்பவாசனை மூக்கைத் துளைக்க, டாக்சி பாலத்தைத் தாண்டி இவர்கள் வீடு இருக்கும் சந்தில் நுழைந்தது. பக்கத்து வீட்டிலுள்ளோர் எட்டிப் பார்த்தார்கள். தூரத்திலிருந்தே வீட்டின் வாசலைக் கவனித்தார். கூட்டமோ, பரபரப்போ இல்லை. வாசலில் டாக்சி வந்து நின்றது. அங்கு நின்ற பெரியவர் ஒருவர், ''இப்பத்தான் வர்றியா ஈஸ்வரா? எல்லோரும் சுகம்தானே?'' என்று கேட்டு விட்டு நகர்ந்தார். நெஞ்சில் இருந்த பாரம் இறங்கியதா அல்லது கூடியதா என்று உணர முடியவில்லை.

தயக்கத்துடன் வீட்டினுள் நுழையும் போது, ''சித்தப்பா, வந்தாச்சு'' என்று அவர் அண்ணன் மகன், கத்திக் கொண்டே உள்ளே ஓடினான். அண்ணி எட்டிப் பார்த்தாள். அண்ணனைக் காணவில்லை.

''ரயில் உடனே கிடைச்சுதா? பயணம் நல்லா இருந்ததா? வா! பார்வதி! பிள்ளைகள் சவுக்கியம்தானே?'' என்று சொல்லிக் கொண்டே பார்வதியையும் பிள்ளைகளையும் உள்ளே அழைத்துச் சென்றாள் அண்ணி.

''அப்பாக்கு எப்படி இருக்கு?'' என்ற அவர் குரலில் தொனித்தது ஏமாற்றமா அல்லது பயமா என்று இனம் கண்டு

---

# அடப்பாவிகளா!

### கிழமைப் பெயர்களில் ஊர்ப் பெயர்கள்

தலைஞாயிறு: (இப்பெயரில் இரண்டு ஊர்கள் தஞ்சை மாவட்டத்தில் உள்ளன.) திங்களூர்: (தஞ்சை மாவட்டத்தில் திருவையாற்றுக்கு அண்மையில்); செவ்வாய்ப்பேட்டை: (சேலம் மாவட்டத்தில்); புதன் சந்தை: (சேலம் மாவட்டம் திருச்சி — சேலம் சாலையில்); வியாழமேடு: (திருச்சி நகரிலிருந்து ஏறத்தாழ பதினைந்து கி. மீட்டர் தொலைவில்); வெள்ளிமலை, வெள்ளியங்கிரி: (திருநெல்வேலி மாவட்டத்தில்); சனியூர்: (பாரதம் பாடிய வில்லிபுத்தூராார் பிறந்து வாழ்ந்த ஊர்.)

— நா. தண்டபாணி.

கொள்ள முடியவில்லை.

''உள்ளே படுத்திருக்கார். முந்தாநாள் சீரியசாயிட்டது. டாக்டர் வந்து ஊசி போட்டார். 'இன்னும் பத்து மணி நேரம் தாண்டினாத்தான் சொல்ல முடியும், எதுக்கும் உங்க தம்பிக்குத் தந்தி கொடுத்துடுங்க'ன்னு சொன்னார். அதான் உடனே தந்தி கொடுத்தோம். அப்புறம் ராத்திரி சரியாயிட்டுது. ஆனா பேச்சு மூச்சில்லை. 'கோமா'ன்னு சொல்றார் டாக்டர்.''

''அண்ணா எங்கே?''

''வயலுக்குப் போனார். இப்ப வந்துருவார். வாங்க, குளிங்க. சுடச்சுட இட்லி சாப்பிட்டுட்டுப் பேசலாம்'' என்று சொல்லி, அவள் அடுக்களைக்குள் நுழைய, இவர் அப்பா படுத்திருந்த அறைக்குச் சென்றார்.

படுக்கையோடு ஒட்டிக் கிடந்த உருவம். அசைவில்லை. மூச்சு மட்டும் வந்து கொண்டிருந்தது.

தன்னை மார்பு மீதும் தோள் மீதும் போட்டு வளர்த்த உடல், கனிவு மிகுந்த அந்தக் கண்கள், செயலற்றுக் கிடந்த நிலை. அவர் கண்களில் 'குபுக்'கென்று கண்ணீர் வந்தது. சிறிது நேரம் உற்றுப் பார்த்துவிட்டு வெளியேறினார்.

அண்ணா வந்து விட்டார்.

''வா, ஈஸ்வரா! இப்பத்தான் வந்தியா? பார்வதி, பிள்ளைகள் சுகம்தானே?'' என்று கேட்டுக் கொண்டே, தலையிலிருந்த தலைப்பாகையை அவிழ்த்து 'உஸ், உஸ்'ஸென்று விசிறியவாறே பெஞ்சில் அமர்ந்தார்.

காப்பி சாப்பிடும்போது சொன்னார்.

''முந்தா நாள் டாக்டர் சந்தேகமாத்தான் சொன்னார். இப்ப, எப்ப ஆகும்னு சொல்ல முடியாதுங்கிறார். நாளைக்கும் இருக்கலாம். மாதக் கணக்கில் நீடிக்கவும் செய்யலாம் என்கிறார். நீ எத்தனை நாள் அவதி எடுத்திருக்கே?''

''அதைப் பத்திப் பிரச்னை இல்லைண்ணா, தேவையானா 'எக்ஸ்டண்ட்' பண்ணிக்கலாம். நிச்சயமாத் தெரியாததனாலே என்ன செய்யறதுன்னே புரியலை.''

''ரெண்டு நாள் பார்ப்போம். ஒண்ணும் ஆகலைன்னா நீ கிளம்பு. ஏதாவது ஆச்சுன்னா தகவல் தெரிவிக்கிறேன். அப்ப வந்தால் போதும்.''

''திரும்பவும் ஒருக்கா லாங் லீவ் போடறது சிரமம். லீவோட லீவுன்னா எக்ஸ்டண்ட் பண்ணிடலாம். எதுக்கும் கூட ஒரு வாரம் இருந்து பார்த்துட்டுப் போறேனே'' என்று சொல்லும் போதே குரலில் ஒரு தயக்கம், எதையோ எதிர்பார்த்து ஏமாந்த உணர்வு இழை — பம்பாயிலிருந்து மீண்டும் ஒரு முறை விடுப்பெடுத்து வர வேண்டுமென்றால் ஆகும் செலவு — இவற்றின் பிரதிபலிப்பு தெரிந்தது. அவருக்கே ஆச்சரியமாக இருந்தது. இது என்ன சிந்தனை? அப்பா உயிரோடு இருப்பது ஏமாற்றமா? தன் உதிரத்தைக் கொடுத்து, வளர்த்து, முழு மனிதனாக, கௌரவம் உள்ளவனாக ஆக்கிய தந்தைக்குச் செய்யும் கைமாறு இது தானா? ஒரு முறை மீண்டும் வரவேண்டும், கொஞ்சம் பணமும் செலவாகும். இதெல்லாம் ஒரு சுமையா? தன்னை ஆளாக்கத் தந்தை செய்த தியாகத்துக்கு இது ஈடா? சீ! எப்படி என் மனம் இத்தனை கீழ்மையானது? — அவர் சிந்தனையைக் கலைத்தது அண்ணனின் குரல்.

''உனக்கு 'லீவ்' பிரச்னை இல்லைன்னா இரு. இவ்வளவு தூரம் வந்திருக்கீங்க. சும்மாச் சும்மா அலைய முடியுமா?'' என்று இவருடைய மனத்தில் ஓடும் எண்ணங்களைப் புரிந்து கொண்டவர் போல அவர் சொன்னதும்,

''அலைச்சல் என்ன அண்ணா அலைச்சல். நம்மை ஆளாக்க அப்பா செய்த தியாகங்களை நினைச்சா நம் உயிரையே கொடுத்தாலும் தகும். பணமும் அலைச்சலும் ஒரு பொருட்டே அல்ல. எதுக்கும் ஒரு வாரம் இருக்கேன். அப்புறம் போயிட்டு, உன் தகவல் கிடைச்சதும் வர்றேன். கடவுள் செயலா அவர் குணமாகி எழுந்து நீடூழி வாழணும்'' என்று சொல்லி, தம் மனத்தில் முன்பு ஓடிய எண்ணங்களுக்குப் பரிகாரம் தேட முனைந்தார்.

இரண்டு நாட்கள் கழித்துப் பார்வதி கேட்டாள். "என்னங்க, தந்தி வந்ததும் போட்டது போட்டபடி அரக்கப் பரக்க ஓடியாந்தோம். புள்ளைங்களுக்குஸ்கூல் நடந்துட்டிருக்கு. இங்கே என்னன்னா காப்பி, சாப்பாடு, தூக்கம், இதுல சீட்டு வெளையாட்டு வேற. என்னதான் மனசுல நெனைச்சிருக்கீங்க? நாம போகாண்டாமா?"

"போகணும். வந்த காரியம் முடியலியே!"




"என்னங்க இப்படிப் பேசறீங்க? வந்த காரியம் முடியலியா? . அப்ப, உங்க அப்பா செத்தாத்தான் புறப்படுவியளா?"

"நா அப்படியா சொன்னேன்? அப்பா சீரியஸா இருக்கார். இன்னிக்கோ நாளைக்கோன்னு இருக்கு. இதுல நாம போயிட்டா? ஒரு வேளை உடனே திரும்ப வேண்டியிருக்கும். எதுக்கும் ரெண்டு மூணு நாள் பார்த்துட்டுப் போவமே..."

"உங்கப்பாவைப் பார்த்தா அவ்வளவு சீக்கிரமாப் போறவராத் தெரியலை. ரொம்ப நாள் ஆகும்னுதான் நெனைக்கிறேன். அப்புறம் உங்க இஷ்டம்."

பெரியவர் படுத்தாலும் படுத்தார். உறவினர்களுக்குக் கொண்டாட்டமாகிவிட்டது. காலையிலும், மாலையிலும் தவறாமல் வருவது, "என்னா, எப்படியிருக்கு?" என்ற வழக்கமான கேள்வி — அப்புறம் காப்பி, சாப்பாடு, பின்பு வாய் நிறைய வெற்றிலையைப் போட்டுக் குதப்பிக் கொண்டே, ஊர் வம்பு, அரசியல், சினிமா விமர்சனங்கள் — ஒவ்வொருவரும் தலைசிறந்த மருத்துவ நிபுணராகி அள்ளி வழங்கும் ஆலோசனைகள் — அத்தனையும் முகம் சுளிக்காமல் பொறுத்துக் கொண்டார் அவர் அண்ணன். முகம் சுளிக்காமல் வந்தவர்களை உபசரித்தார் அண்ணி.

ஒருநாள் வழக்கம்போல் விருந்துண்ட

பின் மூத்த உறவினர் பகவதிக்கண்ணு பிள்ளை அண்ணனைப் பார்த்துச் சொன்னார். "சிதம்பரம் எத்தனை நாளைக்குத் தான் இப்படியே இருக்கிறது? உனக்கு விஷயம் தெரியுமா? மேலத்தெரு சொக்கலிங்கம் பிள்ளை இப்படித்தான் 'கட்டிலும் ஒழிய மாட்டேங்குது; கட்டையும் போக மாட்டேங்குது'ன்னு இழுத்துக்கிட்டுக் 'கெடந்தார். நம்ம அம்மன் கோயில் நாடி ஜோஸ்யர், அவர் நாடியைப் பிடிச்சுப் பார்த்து, 'ரெண்டே நாள்'னு சொன்னார். கரெக்டா ரெண்டாவது நாள்ல போய்ச் சேர்ந்துட்டாரு. ஈஸ்வரா, போயி அந்த ஜோஸ்யரை வந்து பார்க்கச் சொல். சரியாச் சொல்வார். அதுக்கேத்தபடி நீ ஏற்பாடு பண்ணிக்கலாம்."

இந்த யோசனை நல்லதாகவே பட்டது ஈஸ்வரனுக்கு. உடனே ஆளனுப்பினார். ஜோஸ்யர் வந்தார். முதலில் தயங்கினார். "ஈஸ்வரா! ஒங்கப்பாவும் நானும் ஒண்ணாங் கிளாஸிலிருந்து ஒண்ணாப் படிச்சவங்க. எங்கிட்டக் கேக்காம எதுவும் செய்ய மாட்டார். எனக்கு அவர் செஞ்சிருக்கிற உதவிக்கு அளவே இல்லை. அவர் கையைப் பிடிச்சு, அவருடைய முடிவைச் சொல்லும் துர்ப்பாக்கியம் எனக்கு வேண்டாம். தயவு செய்து என்னைக் கட்டாயப்படுத்தாதே..." என்று நழுவினார்.

"ஜோஸ்யரே! அதெல்லாம் இருக்கட்டும் வேய்! நீரும் பார்த்துக்கிட்டுத்தானே இருக்கீர்? அவர் பிள்ளைங்க என்ன பாடுபடுதுன்னு. ஒரு 'நாள்' தெரிஞ்சுட்டா மனசு கெடந்து அடிக்காது. நீரா கொல்லப் போறீர்? 'நாளை'த்தானே சொல்லப் போறீர். இதுவரை நீர் சொன்னது எல்லாமே சரியா நடந்தது. அதனாலதான் கேக்கிறோம். வாரும், நாடியைப் பார்த்துச் சொல்லும்," என்றார் பகவதி கண்ணு பிள்ளை.

பலரும் வற்புறுத்தவே, மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு பெரியவரின் அருகில் அமர்ந்தார், ஜோஸ்யர். சற்று நேரம் கண்களை மூடித் தியானித்துவிட்டு நாடியைப் பிடித்தார். சிறிதுநேர மௌனம். அறையெங்கும்அமைதி. மிகப்பெரியதீர்ப்பைஎதிர்பார்க்கும் மரண அமைதி. ஜோஸ்யர், "இன்றிலிருந்து பதினைந்தாவது நாள் உயிர் பிரியும்" என்று சொல்லிவிட்டு விடுவிடென்று வெளியேறினார்.

**ப**தினைந்தாவது நாளும் வந்துவிட்டது. அதிகாலையிலேயே எழுந்து விட்டார் ஈஸ்வரன். தந்தையின் அருகில் போய்ப் பார்த்தார். எந்த மாற்றமும் இல்லை. அண்ணன், அண்ணி, மனைவி, குழந்தைகள் எல்லோரும் குழுமிவிட்டனர். உறவினர்களும் ஒவ்வொருவராக வர ஆரம்பித்தனர். ஊர்ப் பெரியவர்களும் வந்துவிட்டனர். அவர்களுக்கு உணவு, காப்பி, வெற்றிலைப் பாக்கு என்று மீண்டும் கலகலப்பு.

ஈஸ்வரனுக்கு மனத்தில் இனம் புரியாத கலவரம். முடிவை எதிர்பார்த்தா? இல்லை முடிவு வந்துவிடப் போகிறதே என்றா? அவருக்கே புரியவில்லை. தேவாரம், திருவாசகம் படிக்கக் குருக்களை அழைத்து வந்தனர். அவர் உணர்ச்சி பொங்கப் பாடிக் கொண்டிருந்தார். மாலை நான்கு மணி வரை எந்தச் சலனமும் இல்லை. வந்தவர்களில் ஒருசிலர் விட்டு விட்டு வந்த வேலைகளைக் கவனிக்கச் சலிப்புடன் சென்றனர். சுமார் ஐந்து மணி அளவில் லேசான அசைவு தெரிந்தது. இருபது நாட்களுக்குப் பிறகு முதன் முறையாகத் தோன்றும் அசைவு. அனைவரது முகத்திலும் ஆச்சரியம்.

பெரியவரின் கண்கள் லேசாகத் திறந்தன. மூத்த மகனை நோக்கி அசைந்தன கருவிழிகள். அவர் அருகில் சென்று, "அப்பா அப்பா! நான் சிதம்பரம்பா! தம்பி ஈஸ்வரன் வந்திருக்காம்பா" என்று சொல்ல, ஈஸ்வரன் அருகே சென்று, அவர் பார்வையில் படும்படி நின்றார். கண்கள் ஈஸ்வரனை உற்று நோக்கின. கைகள் லேசாக அசைந்தன அவரை நோக்கி. கைகளைப் பற்றிக் கொண்டார் ஈஸ்வரன். பெரியவர் எழ முயற்சி செய்வது தெரிந்தது. அணையப் போகும் விளக்கோ!

மீண்டும் எல்லாம் செயலற்று விட்டன. மூச்சு மட்டும் சீராக வந்து கொண்டிருந்தது. இரவு மணி எட்டை நெருங்கிக் கொண்டிருந்தது. எல்லோர் முகத்திலும் ஏமாற்றம்.

குருக்கள் திருவாசகத்தை உரக்கப் பாடினார். மீண்டும் லேசான அசைவு. உதடுகள் பிரிந்தன. பகவதிகண்ணு பிள்ளை, "ஈஸ்வரா! கோயில் தீர்த்தம் கொண்டு வந்துட்டானா! கொண்டா இப்படி" என்று வாங்கி அவர் வாயில் மெதுவாக

---

**"இதுவரைக்கும் நான் செய்த ஐம்பது ஆபரேஷன்களில் இது ஒண்ணுதான் 'சக்ஸஸ்' ஆகியிருக்கு!"**

**"அதை ஏன் வருத்தத்தோடு சொல்றீங்க டாக்டர்?"**

**"அவசரத்தில் வேற பேஷண்ட்டுக்குச் செய்துட்டேன், போலிருக்கு! இப்பத்தான் தெரிஞ்சுது!"**

**— வேதபுரி எஸ். இரமேஷ்.**



ஊற்றினார். இறங்குவது தெரிந்தது. "சிதம்பரம்! பாலும் ஒரு வெள்ளைத் துணியும் கொண்டா" என்று கட்டளையிட்டார். வந்தவுடன் வெள்ளைத் துணியைப் பாலில் நனைத்துப் பிழிந்து ஊற்றச் சொன்னார். சிதம்பரம் அப்படியே செய்ய, பால் மெதுவாக இறங்கியது. நெஞ்சு ஏறி இறங்கிக் கொண்டிருந்தது. வாய், மேலும் ஏதாவது விழாதா என்று எதிர்பார்த்த மாதிரி திறந்திருந்தது.

வேறு ஒன்றும் நிகழவில்லை. அனைவரது ஆர்வமும் வடிந்துவிட்டது. நேரம் ஆக ஆக, நாடி ஜோஸ்யரின் கணக்கு தப்பி விடப் போவதை எண்ணி, நம்ப முடியாமல் வியந்தனர்.

திடீரென்று ஏதோ நினைவு வந்தவர் போல பகவதிகண்ணு பிள்ளை சிதம்பரத்திடம் கேட்டார்.

"சிதம்பரம்! ஓங்கப்பா போன வருசம் கீழத்தெரு மூலையில் உள்ள களத்தை வாங்கினாரில்ல?"

"ஆமா, மாமா..."

"டேய்! அதுல மாட்டுத்தொழுவங் கட்டி நாலு சீமைமாடு வாங்கிவிடணும்னு சொலவிக்கிட்டே இருந்தார்டா. அதுல ஒரு 'போர்' போடணும்னும், காய்கறித் தோட்டம் போடணும்னும் ரொம்ப ஆசையாச் சொல்வார்டா. அந்தப் பூமியை விட்டுப் போகவே அவருக்கு மனசு இல்லடா. எப்பப் பார்த்தாலும் அந்தக் களத்தைப் பத்தியேதான் பேசுவார். நெனச்சபடி அனுபவிக்காம படுக்கையிலே விழுந்துட்டார். அந்த பூமியிலே உள்ள ஆசைதான் அவருக்கு நெஞ்சு கிடந்து துடிக்குதுன்னு நினைக்கிறேன்."

"அதுக்கு என்ன மாமா செய்யணும்?"

"போ! ஒன் தம்பியை அனுப்பிக் களத்திலே இருந்து கொஞ்சம் மண் எடுத்துவரச் சொல்லு."

ஈஸ்வரன் டார்ச்சை எடுத்துக் கொண்டு போய் ஒரு கிண்ணத்தில் மண்ணைக் கொண்டு வந்தார். அதை நீர்விட்டுக் கலக்கி வலைபோன்ற துணியில் இறுத்து, "சிதம்பரம்! இந்தா, உங்கப்பா வாயில் ஊத்து. அப்பத்தான் அவர் ஆத்மா சாந்தியடையும். நெஞ்சும் வேகும். ஓய்! குருக்களே உரக்கப் பாடும்!" என்று சொல்ல, சிதம்பரம் அந்த மண் கலந்த திரவத்தை, திறந்த வாயில் மெதுவாக ஊற்றினார். திடீரென்று வந்து விழுந்த திரவத்தின் கனம் தாங்க மாட்டாமலோ அல்லது புரை ஏறி விட்டதாலோ என்னவோ, 'ம்ம்க்க்ம், ஹக்' என்ற ஒலித் திணறலுடன் மார்பு ஒரு முறை அதிர்ச்சியுடன் ஏறி இறங்க, கண்கள் மேலே செருக, பெரியவர் உயிர் பிரிந்தது.

# உலக நாயகியைத் தாங்கி உலா வரும் பெண்கள்

ஆனந்தி

இளைஞர்களான அர்ச்சகர்கள் சுறுசுறுப்பாகச் சந்தியாகாலப் பூஜைக்குத் தயார் செய்கிறார்கள். அலங்காரதீப வரிசைகள் எண்ணெய்த் திரிபோட்டுத் தயாராக இருக்கின்றன. 'டணார்' 'டணார்' என்று மணிகள் அடிக்கத் தொடங்குகின்றன. நான்கு சந்நிதிகளிலும் மந்திரங்களின் ஒலி...

கூடவே "கடகட, ஜிகுஜிகு" என்று பெரிய சப்தம்! மந்திரம் சொல்லும் ஒலி இந்த இயந்திர சப்தத்தில் முழுகியே போயிற்று! கோவிலை ஒட்டியுள்ள போலீஸ் ஹாஸ்டல் தண்ணீர்த் தொட்டிக்குத் தண்ணீர் லாரியிலிருந்து தண்ணீர் விடப்படும் சப்தம் அது என்றுபிறகு கேட்டுத் தெரிந்து கொண்டேன். சந்தியாகாலப் பூஜை, குறிப்பிட்ட நேரத்தில்தான் சுமார் இருபது நிமிடங்கள் மிக அழகாக நடந்தது. தண்ணீர் இறைப்பதை அதற்கு முன்னோ பின்னோ வைத்துக் கொள்ளக் கூடாதோ?

சென்னை அசோக்நகர் பகுதியில் மல்லிகேசுவரர் கோயில் சுமார் இருபது வருடங்களுக்கு முன்னால் பூஜை இல்லாமல் வெறிச்சோடி இருந்தது. அசோக் நகர் பகுதி வளர்ச்சியுற ஆரம்பித்த காலத்தில் யாரோ ஒரு புண்ணியவான் தாமாகவே ஒரு விளக்கை ஏற்றி வைத்தார். அப்படி முதன் முதலில் விளக்கேற்றியவர் இன்று கோயிலில் மூன்று காலப் பூஜையும், ப்ரதோஷ பூஜை, மாத சிவராத்திரி, பௌர்ணமிகளில் விசேஷ அபிஷேக ஆராதனைகளும், நவராத்திரி முதலிய பண்டிகைகளும் இவ்வளவு அழகாக நடைபெறும் என்று எதிர்பார்த்திருக்கவே முடியாது.

மூன்று நிலை வாசல்களுடன் சிறிய கோயில். முன்னால் மகாமண்டபம். முழுமுதற்கடவுளான கணபதியும், நடுநாயகமாக மல்லிகேசுவரரும், அடுத்த கருவறையில் காசி விசுவநாதரும் தரிசனம் தருகிறார்கள். வெள்ளிக்கவசம் சாத்தப்பட்டு விநாயகர் அலங்காரமாக வீற்றிருக்கிறார். அருள்மிகு மல்லிகேசுவரரும், விசுவநாதரும் நாகாபரணம் அணிந்து மோனத்தவம் செய்கிறார்கள். தெற்குப் பார்த்து அன்னை விசாலாட்சி காட்சி தருகிறார். தனியான கருவறையில் மஹேச்வரித் தாயார் மகத்தான ஞானச் செல்வத்தை அள்ளித்தரக் காத்திருக்கிறார்.

கோவிலை நெருங்கும் போது ஞானச் செல்வரான சம்பந்தர் பெருமானின் பதிகம் மனம் குவியச் செய்கிறது. இழையும் குரலில் — சற்று முதுமையின் உருக்கத்தோடு தேவாரப் பதிகம் காதுகளில் விழுகிறது:

**"பீடுடைய பிரமாபுரம் மேவிய**
**பெம்மான் இவனன்றே."**

குறைந்தது அறுநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட கோயில் இது என்று அபிப்பிராயப் படுகிறார்கள். பல்லவர் காலக் கோயில் அமைப்பு என்றும் சொல்லுகிறார்கள். மல்லிகேசுவரரே ஆதி முதல் அருள் பாலித்து வருபவர். இதர சந்நிதிகள் பிற்பாடு அமைக்கப்பட்டவை. பழைய சரித்திரச் சான்றுகள் கிடைக்காவிட்டாலும் சமீப காலச் சரித்திரம் மிக சுவாரஸ்யமாக இருக்கிறது.

கோவிலைச் சுற்றிலும் குடியிருப்புக்களைக் கட்டுவதற்கு முன்பாக 'புல்டோஸர்' கொண்டு வந்து நிலத்தைச் சமதரையாக்க முயற்சி செய்தார்களாம். புல்டோஸர் வேலை செய்திருந்தால் மல்லிகேசுவரர் கோவில் இருந்த இடம் மறைந்து கூடப் போயிருக்கும். மனிதர்களைவிட "புல்டோஸர்" பண்பாட்டுடன் நடந்து கொண்டது. ஒரு சரித்திரச் சின்னத்தை, தெய்வத்தின் இருப்பிடத்தைச் சுற்றி நகரவே அது மறுத்துவிட்டது! கோவில் பிழைத்தது! அசோக் நகர் வாசிகள் புண்ணியம் செய்தவர்கள்.



* மாவட்ட ஆட்சித் தலைவர் வி. கே. சுப்புராஜு



* மகளிருக்குத் தையல் பயிற்சி...

தயாரிக்கிறது. அத்தனையும் ஏற்றுமதி! கண்ணைப் பறிக்கிற டிசைன்கள். இந்திய சணல் ஆராய்ச்சிக் கழக வேண்டுகோள்படி, சணல் நாரையும் கைத்தறி போலவே பல வண்ணங்களில் நெய்கிறார்கள்! (சணல் வந்து கைத்தறியை அடித்துக் கொண்டு போய் விடுமோ? "போய் விடாது" என்கிறார் ஸ்பெஷல் ஆபீசர்.) இது ஒருபுறமென்றால் மறுபுறம், 'சென்டெக்ஸ்' நிறுவனத்திலிருந்து வெளியேறும் சாயக் கழிவுநீர், பாதையின் நடுவே பாய்ந்து, அந்த வழியாக உள்ள குடிநீர்க் கிணறுகள், விவசாயக் கிணறுகள், ஆழ்துளைக் கிணறுகள் என்று எல்லாவற்றிலும் கலந்து மாசுபடுத்திக் கொண்டிருந்தது. அரசு மான்யம் ஐம்பது சதவிகிதமும், சென்டெக்ஸ் ஐம்பது சதவிகிதமும் போட்டு நாலு லட்ச ரூபாய்ச் செலவில் கழிவுநீர் வாய்க்கால் கட்டப்பட்டிருக்கிறது. "இந்தக் கழிவுநீரை எங்கே கொண்டு போவீர்கள்?" என்று கேட்ட போது, "தற்போதைக்கு மக்களின் கோரிக்கையை ஏற்று, இங்கேயுள்ள தண்ணீரை மாசுபடுத்தாமல் வெளியே கொண்டு செல்லுகிறோம். இப்போதைக்கு அவ்வளவு தான் சொல்ல முடியும்!" என்றார்கள். இந்தத் தண்ணீர் கடைசியில் எங்கு போய்க் கலக்கும் என்பது பயங்கர சஸ்பென்ஸாகவே இருக்கிறது!

●● ஊராட்சி ஒன்றியங்களுக்கு வருமானம் கிடைக்க, இப்போதெல்லாம் புதுப் புது வழிகளைக் கையாளுகிறார்கள். வருமானத்துக்கு வருமானம்; வேலை வாய்ப்புக்கு வேலை வாய்ப்பு. பவானி ஊராட்சி ஒன்றியத்தில், இரும்புக் கிராதிகள், சட்டங்கள், ஜன்னல்கள் எல்லாம் செய்யப்படுவதுடன், இளைஞர்களுக்குப் பயிற்சியும் அளிக்கிறார்கள். சென்ற வருடம் மட்டும் எட்டு லட்ச ரூபாய்க்கு வியாபாரம் செய்து, ஐம்பதாயிரம் ரூபாய் லாபம் ஈட்டியிருக்கிறார்கள். இந்த வருட இலக்கு, இருபது லட்ச ரூபாய். பெருந்துறை பஸ் ஸ்டாண்டை மிக நவீன வசதிகளுடன் கட்டியிருக்கிறது பேரூராட்சி. கடைகள் என்ன, உணவு விடுதி என்ன... வருட வருமானம் இதிலிருந்து மட்டும் ஆறு லட்ச ரூபாய் வருமாம்.

●● ஜம்பை கிராமத்து மக்களுக்கு சபாஷ் போட வேண்டும் — எத்தனை எத்தனை வீடுகளில் சாண எரிவாயுக் கலன்கள்! மாணிக்கம் என்ற விவசாயியின் வீட்டில், அடுப்பு எரிக்க மட்டுமல்ல, தோட்டத்துக்குத் தண்ணீர் பாய்ச்ச, கரும்பு பிழிய, விளக்கு எரிய என்று பலவகைகளில் பயன்படுத்தி ஐம்பது சதவிகித டீசலை மிச்சம் பிடித்திருக்கிறார்!

●● கொமாரபாளையம் நஞ்சப்ப செட்டிப் புதூரில் ஆதி திராவிடர் குடியிருப்புக்கான வீடுகள் முன்பு போல ஒதுக்குப்புறத்தில் கட்டப்படாமல் பிற சாதியினரின் வீடுகளுக்கு அருகேயே கட்டப்பட்டிருக்கின்றன. "பிற சாதியினரிடமிருந்து இதற்கு எதிர்ப்பு ஏதும் இல்லை" என்றார்கள். புகையில்லா அடுப்பு (சூளா) எல்லா வீடுகளுக்கும் கொடுக்கப்பட்டிருப்பதால், புகைக் கறை படியும் வாய்ப்பு இல்லை.

●● தண்ணீர்ப் பிரச்னை எந்த நல்ல காரியத்தையும், முன்னேற்றப் பணிகளையும் கறுப்புப் பொட்டு வைத்துப் பாழடித்து விடும் என்பதற்கு இரண்டு நிகழ்ச்சிகளைக் குறிப்பிட வேண்டும்:

"அங்கே எல்லாம் குழாய் இருக்கிறது. தண்ணீர் வருகிறது. நவீனக் கழிப்பறைகள் கட்டிக் கொடுக்கிறார்கள். எங்கள் தெருவில் சுமார் நூறு வீடுகள் இருக்கின்றன. குழாயும் இல்லை. தண்ணீரும் இல்லை!" என்று செங்கோடன்பாளையத்தில் நான்கு கிராமவாசிகள் சொன்னார்கள்.

அந்தியூர் அருகே உள்ள புதுப்பாளையத்தில் 88 அரிஜனக் குடியிருப்புகளிலும் நவீன கழிப்பறைகள் கட்டிச் சாதனை புரிந்திருக்கிறார்கள். ஆனால் இரண்டு நாளாகிறதாம் தண்ணீரைப் பார்த்து. ஒரு குடம் தண்ணீர் ஐம்பது பைசா. அதுவும் கூடச் சரியாகக் கிடைப்பதில்லையாம். அப்புறம் நவீனக் கழிப்பிடங்கள் கட்டிச் சுகாதாரப் பாதுகாப்பை அங்கங்கே கொடுப்பது என்ன பலனை அளிக்கும்? 'குறைகளையும் சொல்லுங்கள்' என்று மாவட்ட ஆட்சித் தலைவர் சுப்புராஜு சொன்னதால், இங்கே நமக்குப் பட்ட குறைகளையும் சொல்லி விட்டோம்!

— சாருகேசி



# புலன் விசாரணை

போட்டிக்
கதை — 2

இருபத்து மூன்றாம் தேதி காலை, ஒன்பது மணி. உடம்பை வருடும் குளிருடன் பெங்களூர் நகரம் மெல்ல இயங்க ஆரம்பித் திருந்தது.

க்ரைம் இன்ஸ்பெக்டர் ரங்கநாத் தன் அலுவலக அறையில் அன்றைய பேப்பர் படித்துக் கொண்டிருந்தார்.

வாசலில் நிழலாடவே நிமிர்ந்து பார்த் தார். உள்ளே வந்த ஒரு நாகரிகமான இளை ஞன், முகத்தில் ஏராளமான சோகத்துடன், "இன்ஸ்பெக்டர், ஐ யாம் பாஸ்கர். நேற்று மாலையிலிருந்து என் மனைவியைக் காண வில்லை. நீங்கள்தான் எப்படியாவது அவளைக் கண்டு பிடித்துத் தர வேண்டும்." — குரல் உடையச் சொன்னான்.

இன்ஸ்பெக்டர் ரங்கநாத் சுறுசுறுப் பானார்.

"மிஸ்டர் பாஸ்கர், உட்கார்ந்து, அமை தியா, எல்லாத்தையும் விவரமாச் சொல் லுங்க."

"சார், நேற்று நான் ஆபீஸ் முடிந்து ஏழரை மணிக்கு வீட்டுக்கு வந்தேன். வீடு பூட்டியிருந்தது. என்னிடமிருந்த டூப்ளிகேட் சாவியின் உதவியால் உள்ளே சென்றேன்... என் மனைவி வீட்டில் இல்லாததை நான் இயல்பாக எடுத்துக் கொண்டேன். சினிமா போயிருக்கலாம் அல்லது தெரிந்தவர்கள் வீட்டிற்குச் சென்றிருக்கலாம் என நினைத் தேன். ராத்திரி முழுக்கத் தூங்காது காத் திருந்தேன் இன்ஸ்பெக்டர். அவள் வர வில்லை.... இன்றுகாலை ஆபீஸுக்கு ஃபோன் பண்ணி லீவு சொல்லிவிட்டு நேராக உங்களிடம் வந்திருக்கிறேன்... எனக்கு பயமா இருக்கு இன்ஸ்பெக்டர்."

"எங்கு வேலை செய்யறீங்க?"

"காதம்பரி இன்டஸ்ட்ரீஸ் ஜெனரல் மானேஜர்."

"உங்க மனைவியின் பெயர்?"

"வித்யா."

"வயது?"

"இருபத்தேழு."

"ஓகே, ஒரு கம்ப்ளெயின்ட் எழுதிக் குடுங்க."

பாஸ்கர் எழுதிக் கொடுத்தவுடன், இன்ஸ் பெக்டர் தொப்பியை அணிந்து கொண்டார். எழுந்து நின்று பெல்டை சரி செய்து கொண்டார்.

"வாங்க பாஸ்கர், உங்க வீட்டுக்குப் போகலாம்."

வீட்டின் முன்பு விதவிதமான பூஞ்செடி கள் நேர்த்தியாக அடுக்கப்பட்டிருந்தன. பக்கவாட்டில் பெரியதாக கார் காரேஜ் இருந்தது. சுற்றிலும் தோட்டம். உள்ளே மூன்று பெட்ரூம்களுடன் வீடு பெரியதாக இருந்தது.

"பாஸ்கர் உங்க மனைவியின் சொந்த ஊர் எது?"

"மெட்ராஸ்?"

"ஒருவேளை மெட்ராஸ் போயிருக் கலாமே......"

"இல்ல சார், இன்னிக்குக் காலைல எஸ்.டி.டி. போட்டு அவள் வீட்டிற்குத் தற் செயலாகப் பேசுவது போல் பேசினேன். அவள் மெட்ராஸ் செல்லவில்லை என்பதை உறுதி செய்து கொண்ட பின்தான் உங்க ளிடம் வந்தேன்.... அவள் வீட்டிற்கு இன்ன மும் விஷயம் தெரியாது."

எஸ். கண்ணன்

"உங்களுக்குள்ள சமீபத்தில் பெரிய சண்டை கோபம் ஏதாவது..."

"இல்லை இன்ஸ்பெக்டர். அப்படி எதுவு மில்லை."

இன்ஸ்பெக்டர் ஹாலில் இருந்த தொலை பேசியை எடுத்து, கன்ட்ரோலுடன் தொடர்பு கொண்டு, வித்யாவைப் பற்றிச் சொல்லித் தேடச் சொன்னார்.

பாஸ்கரிடமிருந்து அவனது விசிட்டிங் கார்டையும், வித்யாவின் சமீபத்திய புகைப் படம் ஒன்றையும் கேட்டு வாங்கிக் கொண் டார்.

கிளம்புமுன், "பாஸ்கர், கவலைப் படா தீங்க. நாங்க எப்படியும் வித்யாவைக் கண்டு பிடித்துவிடுவோம்... தேவைப் பட்டால் உங்களை கான்ட்டாக்ட் பண்றேன்" என் றார்.

"சார், நான் ஆபீஸ் விஷயமாக இன்று மாலை ஐந்து மணி ப்ளைட்டில் பாம்பே செல்ல வேண்டும், நாளை மாலை திரும்பி விடுவேன்..." அனுமதி கேட்கும் பாவனை யில் சொன்னான் பாஸ்கர்.

ஒரு நிமிடம் யோசித்த இன்ஸ்பெக்டர், நாளைதான் வந்துவிடுகிறானே என்கிற நினைப்பில் "நோ ப்ராப்ளம், போயிட்டு வாங்க" என்றார்.

பாஸ்கர் உடன்வர வெளியே வந்தார். "பாஸ்கர், உங்க காரில் ஸ்டேஷன் வரை ஒரு ட்ராப் வாங்கிக்கறேன்!"

"ஓ, ஷ்யூர்."

இன்ஸ்பெக்டர் காரில் ஏறிக்கொள்ள, பாஸ்கர் கதவைச் சாத்தினான்.

கார் கிளம்பியதும் இன்ஸ்பெக்டர் டிரை வரை நோட்டம் விட்டார்.

"உன் பேரென்னப்பா?"

"ரமேஷ் சார்."



"இந்த ஆபீஸ்ல லஞ்சம் தலைவிரித்து ஆடுது போலிருக்கு!"

"எப்படிச் சொல்றீங்க?"

"பாருங்களேன், மேஜை ஆடுதுங்கற துக்காக, மேஜை காலுக்கடியில் நூறு ரூபாய் நோட்டை மடிச்சுச் செருகி இருக்காங்களே!"

— எஸ். முகம்மது யூசுப்.

"ரமேஷ், இந்தக் கார் பாஸ்கரின் சொந்தக் காரா?"

"இல்ல சார், கம்பெனி கார்."

"நீதான் அவருக்கு டிரைவரா?"

"ஆமா சார்."

"எத்தனை வருஷமா அவருக்குக் கார் ஓட்டறே?"

"ரெண்டு வருஷமா சார்."

"லாக் புக்கெல்லாம் மெயின்டெய்ன் பண்றதுண்டா?"

"ஆமா சார்."

"நேத்து சாயங்காலம் என்ன ட்யூட்டி உனக்கு?"

"ஆபீஸ்லேர்ந்து மிஸ்டர் பாஸ்கரை ஏழரை மணி வாக்கில் அவர் வீட்டில் ட்ராப் செய்துவிட்டு, க்ளோஸிங் கிலோ மீட்டர் ரீடிங் எழுதி அவரிடம் கையெழுத்து வாங்கியதும் கார் சாவியைக் கொடுத்துட்டு நான் என் வீட்டுக்குப் போயிட்டேன் சார்."

"இன்னிக்குக் காலைல நீதானே வண்டிய எடுத்தே?"

"ஆமா சார்."

"வண்டி எடுக்கும் போது ஓப்பனிங் கிலோ மீட்டர் ரீடிங் எழுதுவேதான?"

"ஆமா சார். எழுதினேன்."

"லாக் புக்கை எடு பார்க்கலாம்."

டாஷ்போர்டைத் திறந்து எடுத்து இன்ஸ்பெக்டரிடம் கொடுத்தான். இன்ஸ்பெக்டர் புரட்டினார். நேற்று க்ளோஸிங் கிலோ மீட்டர் 20018. இன்று ஓப்பனிங்கில் 20026 என்று இருந்தது. டிரைவர் இல்லாமல் வண்டி எட்டு கிலோமீட்டர் ஓடியிருப்பதைப் புரிந்து கொண்டார்.

"பாஸ்கருக்குக் கார் ஓட்டத் தெரியுமா?"

"தெரியும் சார். ஆனா எப்பவாச்சும் தான் ஓட்டுவார்."

ஸ்டேஷனில் இறங்கிக் கொண்டார்.

உடனே தொலைபேசியில் பாஸ்கருடன் தொடர்பு கொண்டார். "பாஸ்கர் உங்களுக்கு கார் ஓட்டத் தெரியுமா?"

"தெரியும் சார், ஆனா டிரைவர் இருக்கறதுனால அக்கேஷனலா ஓட்டுவேன்."

"நேத்து ராத்திரி உங்க கார்ல எங்கே போனீங்க?"

"நேத்தா... ராத்திரி எங்கேயுமே போகல சார், என் மனைவிக்காக வீட்டிலேயே காத்திருந்தேன்."

"அப்ப வேற யாருக்காவது கார் குடுத்தீங்களா?"

"இல்ல, யாருக்கும் தரல்ல."

"ஆல்ரைட் பாஸ்கர், தேவைப்பட்டா மறுபடியும் உங்களைக் கான்ட்டாக்ட் பண்றேன்."

இன்ஸ்பெக்டருக்கு பாஸ்கரின் மீது முதன் முதலாகச் சந்தேகம் ஏற்பட்டது.

தமது உதவியாளரைக் கூப்பிட்டு, காதம்பரி இன்டஸ்ரீஸ் சென்று பாஸ்கரைப் பற்றிய விவரங்களை ரகசியமாகச் சேகரிக்கச் சொன்னார்.

கன்ட்ரோலுடன் தொடர்பு கொண்டு, வித்யாவைப் பற்றி ஏதாவது தெரிந்ததா என்று விசாரித்தார்.

மதியம் ரயில்வே ஸ்டேஷன் சென்று, முந்தைய தினம் புறப்பட்டுச் சென்ற அனைத்து ரயில்களின் ரிசர்வேஷன் சார்ட்களைப் பார்த்து உதட்டைப் பிதுக்கினார்.

பெங்களூர் ஏர்போர்ட்டில் சார்ட்டைப் பார்த்தபோது, வித்யா பாஸ்கரின் பெயர் முதல் நாள் — அதாவது 22 ஆம் தேதி இரவு, 'IC510 இரவு எட்டு மணி' என்று மெட்ராஸ் ப்ளைட்டில் இருந்தது.

ஏர்போர்ட் டியூட்டி ஆபீஸரிடம் சென்று டிக்கெட்டின் கார்பன் பிரதியை வாங்கிப் பார்த்தபோது டிக்கெட் டிராவல் ஏஜன்ஸி மூலம் வாங்கப்படாது, பணம் கொடுத்து வாங்கப் பட்டிருப்பதை அறிந்து கொண்டார்.

போலீஸ் ஸ்டேஷனுக்குத் திரும்பி வந்தார்.

மெட்ராஸ் போலீஸுடன் தொடர்பு கொண்டு, வித்யாவைப் பற்றிய விவரங்களைச் சொல்லி, அவளைத் தேடும்படி கேட்டுக் கொண்டார்.

காதம்பரி இன்டஸ்ரீஸ் சென்றிருந்த உதவியாளர், மாலை ஐந்தரை மணிக்குத் திரும்பி வந்து இன்ஸ்பெக்டரிடம், "சார், பாஸ்கர் ஜெனரல் மானேஜராக இருக்கிறார். அவருக்கும் அவர் செகரட்டரி திவ்யாவுக்கும் ரொம்ப நெருக்கமாம். சில சமயம் பாஸ்கர், ஜெயநகரில் உள்ள அவள் வீட்டிலேயே கூட இரவு தங்குவதுண்டாம். திவ்யா ஒரு மாதிரியான பெண்ணாம். பாஸ்கரின் மனைவி வித்யாவுக்கு, இந்தத்

## சிரிக்க வையுங்கள்: சிங்கப்பூர் செல்லுங்கள்!

பால்பாயிண்ட் பேனாவை எடுங்கள். கீழே உள்ள இடத்தில் ஒரு ஜோக் அல்லது ஓர் அனுபவச் சிரிப்புத் துணுக்கை எழுதியனுப்புங்கள். பிரசுரமானால் ரூ. 25 பரிசு. அடுத்த ஆகஸ்ட் இறுதிக்குள் யாருடைய ஜோக்குகள் அல்லது துணுக்குகள் மிக அதிகமாகப் பிரசுரமாகிறதோ, அவர் ஜோடியாகச் சிங்கப்பூர் போகலாம் — செலவின்றி! திரும்பி வந்து பேட்டி தரலாம்! உறை மீது ''சிரிப்பு — சிங்கப்பூர்'' என்று குறிப்பிட்டு அனுப்புங்கள். முடிவு தேதி: 8.10.90.

ஜோக்/துணுக்கு:

என் பெயர்: .......................

விலாசம்: .......................

.......................

.......................

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**

தொடர்பு, தெரியவந்ததிலிருந்து அவர்களிடையே அடிக்கடி சண்டை கூட வருவதுண்டாம்... இதுதான் சார் திவ்யாவின் ஜெய நகர் முகவரி.''

அவன் தந்த பேப்பரில் திவ்யாவின் அட்ரஸும், டெலிபோன் நம்பரும் இருந்தது.

இன்ஸ்பெக்டர் ரங்கநாத் கேஸ் பிடிபடுவதை உணர்ந்தார்.

அன்று இரவு எட்டு மணிக்கு ஜெய நகரிலுள்ள திவ்யாவின் வீட்டிற்குச் சென்று, பஸ்ஸரை அழுத்தினார்.

கையில் கார்ட்லஸ் போனுடன் திவ்யா தான் கதவைத் திறந்தாள். உடுப்பில் இருந்த இன்ஸ்பெக்டரைப் பார்த்து வியந்தாள்.

''நீங்கதானே திவ்யா?''

''எஸ் ப்ளீஸ்.''

''நான் க்ரைம் இன்ஸ்பெக்டர் ரங்கநாத். உங்களிடம் சில கேள்விகள் கேட்க வேண்டும்.''

''ப்ளீஸ் உள்ள வாங்க.''

உள்ளே சென்று வரவேற்பறையில் அமர்ந்தார்கள்.

''நேற்று மாலையிலிருந்து உங்க ஜெனரல் மானேஜர் பாஸ்கரின் மனைவியைக் காணவில்லை.''

''ஆமாம், இன்று முழுதும் ஆபீஸில் இதைத்தான் பேசிக் கொண்டார்கள்.''

''உங்களுக்கு பாஸ்கரை 'ரொம்ப' நன்றாகத் தெரியுமென்றும், அடிக்கடி அவருடன் நீங்கள் வெளியே போவதுண்டு என்றும் கேள்விப் பட்டேன்.... அவர் மனைவி காணாமல் போனது சம்பந்தமாக உங்களுக்கு ஏதாவது தகவல் தெரியும் என்று நம்புகிறேன்....''

'ரொம்ப'வில் சற்று அழுத்தம் கொடுத்தார்.

''இன்ஸ்பெக்டர், அவர் கூப்பிட்டால் அவருடைய செகரட்டரி என்கிற முறையில் அவருடன் வெளியில் செல்வது என்ன தப்பு? அப்படியே எங்களுக்குள் ஏதாவது இருந்தாலும் அது எங்களுடைய பர்சனல் விஷயம். நீங்க அவரது மனைவியை ட்ரேஸ் பண்ணா முதல்ல சந்தோஷப் படறது நானாகத்தான் இருப்பேன்'' என்றாள்.

மிரட்டினால் உண்மை வரும் என இன்ஸ்பெக்டர் நினைத்து, சற்று அதட்டலாக, ''கார்ட்லஸை எங்கிட்டக் குடுங்க, நான் பாஸ்கரிடம் பேசணும். அவருடைய பம்பாய் நம்பர் என்ன?'' என்றார்.

''எனக்கு அவர் பாம்பே போனதே தெரியாது. அவர் எங்க தங்குவார்னும் தெரியாது'' என்றாள்.

இன்ஸ்பெக்டர் வெறுப்புடன் திவ்யாவை முறைத்துவிட்டு, வெளியேறினார்.

இன்ஸ்பெக்டர் அன்று இரவு தன் வீட்டில் மிகவும் யோசித்து, ஒரு வெள்ளைத் தாளில் இப்படி எழுதினார்: 1) 22 ஆம்




**ஆசிரியர்: நீங்க ஒரு கதை எழுதித் தாங்க. அந்தக் கதையை எழுதியது யார்னு கண்டுபிடிக்கும் படியா நம்பத்திரிகை வாசகர்களுக்கு ஒரு போட்டி வைச்சுடலாம்.**

**எழுத்தாளர்: வேண்டாம் சார்! அப்புறம் உண்மையாவே, அந்தக் கதையை யார், எந்த மொழியில் எழுதியதுன்னு கண்டுபிடிச்சுடுவாங்க!**

**— கோபிகா எஸ். முரளி.**

தேதி இரவு பாஸ்கர் எட்டு கிலோ மீட்டர் தூரம் கார் ஓட்டியதை மறைக்கிறான்; 2) சென்னைக்கு வித்யா போகவில்லை. போலீஸைத் திசை திருப்ப அவள் பெயரில் யாராவது பயணித்திருக்கலாம்; 3) 22, 23 தேதிகளில் திவ்யா சரியான நேரத்துக்கு அலுவலகம் சென்று வந்திருக்கிறாள்; 4) பாஸ்கரும், திவ்யாவும் சேர்ந்து வித்யாவைக் கொலை செய்திருக்கலாம். எனில், வித்யாவின் உடல் எங்கே?

மறுநாள் 24 ஆம் தேதி காலை எட்டு மணிக்கு ஜீப்பை எடுத்துக்கொண்டு இந்திரா நகரிலுள்ள பாஸ்கரின் வீட்டையடைந்து, பூட்டியிருந்த வீட்டைச் சுற்றி வந்தார். தோட்டத்து மணற் பகுதிகள் புதிதாகத் தோண்டப் பட்டிருக்கிறதா என ஆராய்ந்தார்.

தடயம் ஒன்றும் கிடைக்கவில்லை.

வெளியே வந்து ஜீப்பினருகில் நின்று யோசித்தார். சட்டென்று ஓர் எண்ணம் பளிச்சிட, ஜீப்பை நேராக பெங்களூர் டெலிபோன்ஸ் அலுவலகத்துக்குச் செலுத்தினார்.

அங்கிருந்த கம்ப்யூட்டர் செக்ஷனுக்குள் ஜில்லிட உள்ளே சென்று, டெலிபோன்ஸ் அதிகாரியிடம் தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டார்.

திவ்யாவின் வீட்டு டெலிபோன் நம்பரைச் சொல்லி, 22 ஆம் தேதியிலிருந்து அந்த நிமிடம் வரை, திவ்யாவின் டெலிபோனிலிருந்து டயல் செய்யப்பட்ட நம்பர்களின் ப்ரிண்ட் அவுட் தரும்படி கேட்டார்.

பத்தே நிமிடங்களில் கிடைத்தது. கண்களை வேகமாக அதில் ஓட விட்டார்.

23 ஆம் தேதி இரவு பத்து மணிக்கு 022—4933101 நம்பருடன் பதினைந்து நிமிடங்கள் பேசப் பட்டிருந்ததை ப்ரிண்ட் அவுட் உறுதி செய்தது.

022 பாம்பே எஸ்.டி.டி. கோட் நம்பர்.

இன்ஸ்பெக்டர் உடனே டெலிபோன் அதிகாரி அனுமதியுடன், அங்கிருந்த தொலைபேசியில் 022 — 4933101க்கு தொடர்பு கொண்டார்.

''தீனதயாளன் ஹியர்'' என்றது குரல்.

''மே ஐ ஸ்பீக் டு காதம்ரி இன்டஸ்ரீஸ் ஜி. எம். மிஸ்டர் பாஸ்கர் ப்ளீஸ்.''

''பாஸ்கர் ஹாஸ் கான் அவுட். எனி மெஸேஜ்?'' என்றார் தீனதயாளன்.

இன்ஸ்பெக்டர் தொடர்பை உடனே துண்டித்தார்.

நேற்று தம்மிடம், பாஸ்கர் பாம்பே சென்றிருப்பதே தெரியாது என்று சாதித்த திவ்யா, அவனுடன் பதினைந்து நிமிடம் பேசியிருக்கிறாள் என்பதை இன்ஸ்பெக்டர் புரிந்து கொண்டார்.

டெலிபோன் அதிகாரிக்கு நன்றி சொல்லி விட்டு, ப்ரிண்ட் அவுட்டுடன் ஜீப்பில் தாவியேறி நேராக போலீஸ் ஸ்டேஷன் வந்தார்.

டிரைவரைக் கூப்பிட்டு, திவ்யாவை ஸ்டேஷனுக்கு அழைத்து வரச் செய்தார்.

இன்ஸ்பெக்டர், ஒரு பெண் போலீஸின் முன்னிலையில் திவ்யாவிடம் அதிரடித் தாக்குதலில் இறங்கத் தீர்மானித்துத் தயார் நிலையில் இருந்தார்.

உள்ளே நுழைந்த திவ்யாவிடம், இன்ஸ்பெக்டர் அதிகாரத் தோரணையுடன், ''மிஸ் திவ்யா, நீங்களும் பாஸ்கரும் சேர்ந்து வித்யாவைக் கொலை செய்ததை பாஸ்கரே ஒப்புக் கொண்டு விட்டார். பம்பாய் போலீஸ் இன்று காலைதான் பாஸ்கரை அரெஸ்ட் செய்தது. தவிர, நேற்று இரவு பத்து மணிக்கு நீங்க பாஸ்கருடன் பேசிய முழு விவரங்களும் எனக்குத் தெரியும்... எதையும் மறைக்க முயற்சி பண்ணாதீங்க, இதோ நீங்க பேசியதற்கு அத்தாட்சியாக ப்ரிண்ட் அவுட்'' என்று கையில் இருந்ததைக் காண்பித்தார்.

திவ்யா தொய்ந்து போய் அருகிலிருந்த பெண் போலீஸின் மீது சரிந்தாள். முகத்தைப் பொத்திக் கொண்டு பெரிதாக அழுதாள். நாற்காலியில் அமரவைக்கப் பட்ட பின், '' இன்ஸ்பெக்டர், பாஸ்கர் சொல்வது பொய். எனக்கும் இந்தக் கொலைக்கும் சம்பந்தமேயில்லை.... என்னைத் திருமணம் செய்து கொள்வதாயும் அதற்கு இடைஞ்சலாக இருக்கும் வித்யாவை அவரே தீர்த்துக் கட்டி விடுவதாகவும் சொல்லி, போலீஸைத் திசை திருப்பி அலிபி உண்டாக்க, பாஸ்கர் தான் என்னை வித்யாவின் பெயரில் 22 ஆம் தேதி இரவு எட்டு மணி ப்ளைட்டில் சென்னை சென்று, பின்பு அதே இரவு பத்து மணி பெங்களூர் மெயிலில் வேறு பெயரில் திரும்பி வருவதற்கு டிக்கெட் தந்தார்... அந்த

வகையில் அவருக்கு நான் உடந்தையாக இருந்தது என் குற்றம்தான்... வித்யா என்ன ஆனான்னு எனக்குச் சத்தியமாகத் தெரியாது...'' என்று அழுகையினூடே புலம்பினாள்.

இன்ஸ்பெக்டருக்கு, திவ்யாவின் அழுகையில் உண்மை இருப்பது புலப்பட்டது.

இருபத்திரண்டாம் தேதி இரவில் வித்யா கண்டிப்பாகக் கொலை செய்யப் பட்டிருக்க வேண்டும். ஆனால் அவளின் உடல் எங்கே? என்ற கேள்விக்கு அந்த எட்டு கிலோ மீட்டரில் சூட்சுமம் இருப்பதாக நம்பினார்.

பெண் போலீஸிடம் திவ்யாவை கஸ்டடியில் வைத்திருக்கச் சொல்லிவிட்டு, ஸ்டேஷனை விட்டு வெளியே வந்தார்.

டிரைவரை அழைத்து ஜீப்பை எடுக்கச் சொல்லி நேராக பாஸ்கரின் வீட்டிற்கு மறுபடியும் வந்தார்.

யோசித்தார்.

பாஸ்கரின் வீட்டிலிருந்து மூன்று பாதைகள் செல்கின்றன. முதலாவது ஏர்போர்ட் ரோடு. இரண்டாவது நேர் எதிர்ப் பாதை—தாஜ் ரெஸிடென்ஸி செல்வது. மூன்றாவது அல்சூருக்குப் போகும் ரோடு.

இருபத்திரண்டாம் தேதி இரவு இந்த மூன்று பாதைகளில் ஏதாவது ஒன்றில்தான் பாஸ்கர் நான்கு கிலோ மீட்டர் தூரம் பயணித்து, வீட்டிற்குத் திரும்பியிருக்க வேண்டும் என உறுதியாக நம்பினார்.

ஜீப்பைக் கிளப்பச் சொன்னார்.

பாஸ்கரின் வீட்டிலிருந்து சரியாக நான்கு கிலோ மீட்டர் தூரம் மூன்று பாதைகளிலும் அடுத்தடுத்து மெதுவாகச் செலுத்தி ஏரி, குளம், இடிந்த கட்டடம் என்று ஏதாவது தட்டுப் படுகிறதா என உன்னிப்பாகக் கவனித்தார்.

புதிய கட்டடங்கள் ஆங்காங்கே எழும்பிக் கொண்டிருந்தனவே தவிர, சந்தேகத்துக்கு இடமளிக்கும் வகையில் எதுவும் இல்லை. எனினும் இன்ஸ்பெக்டர் நம்பிக்கை இழக்கவில்லை.

திரும்பத் திரும்ப அதே மூன்று பாதைகளில் நான்கு கிலோ மீட்டர் தூரம் போவதும், திரும்புவதுமாக இருந்தார்.

இன்ஸ்பெக்டருக்கு இன்று என்ன வாயிற்று என டிரைவர் வியந்து கொண்டான்.

ஐந்தாவது முறையாக ஜீப் ஏர்போர்ட் ரோடில் வேகமாகச் சென்றபோது 'தடக், தடக்' என பெரிதாகச் சத்தம் எழுப்பிவிட்டுச் செல்ல, உடனே இன்ஸ்பெக்டர் வண்டியை நிறுத்தச் சொல்லி கீழே இறங்கினார்.

தடக், தடக் சத்தம் எதனால் வந்தது என ரோடில் பார்த்தபோது, வட்ட வடிவமான பாதாளச் சாக்கடை மூடியின் மீது ஜீப் ஏறியதால்தான் என்பதைப் புரிந்து கொண்டு — ஜீப்பினருகில் சென்று கிலோ மீட்டர் ரீடிங்கைப் பார்த்தார்.

பாஸ்கரின் வீட்டிலிருந்து 3.5 கிலோ மீட்டர் தூரம் காட்டியது.

உற்சாகத்துடன் திரும்பவும் சாக்கடையின் மூடிக்கு வந்தார். மூடியின் கொக்கியில் வலது கை விரல்களை விட்டு, பலம் கொண்ட மட்டும் மேலே தூக்கி இழுத்து அருகில் வைத்தார்.

உள்ளே 'ஹோ' வென்ற இரைச்சலுடன் சாக்கடை பாயும் சத்தம் கேட்டது. குனிந்து பார்த்தார். இருட்டாக இருந்தது. குப்பென்று நாற்றமடித்தது.

சாக்கடை மூடியை ஒரு பலசாலி எளிதாகத் தூக்க முடியும்... ஒன்று அல்லது இரண்டு பேரைத் தாராளமாக உள்ளே தள்ளி மூட முடியும் என்பதைப் புரிந்து கொண்டார்.

பாஸ்கரின் வீட்டிலிருந்து 3.5 கிலோ மீட்டர் தூரம் இந்த பாதாளச் சாக்கடை.

பாஸ்கரின் கார் உடனே வலது பக்கம் திரும்பிச் செல்லச் சாத்தியப் படாத வகையில் ஏர்போர்ட் ரோடில் டிவைடர் இருக்கிறது. நேராக அதே பாதையில் 0.5 கிலோ மீட்டர் சென்று, டிவைடரின் பிளவில் 'யு' டர்ன் அடித்துத் திரும்பிய பின், பாஸ்கர் வீட்டையடைந்தால் எட்டு கிலோ மீட்டர் ஆகிறது என்பதைக் கணக்கிட்ட இன்ஸ்பெக்டருக்கு உற்சாகம் கரை புரண்டது.

சாக்கடையை மூடினார்.

ஜீப் டிரைவரை கார்ப்பரேஷனுக்கு அனுப்பி, ஆட்களைக் கூட்டி வரச் செய்தார்.

அரைமணியில் பாதாளச் சாக்கடையின் மூடி மறுபடியும் திறக்கப்பட்டு, இரண்டு ஆட்கள் உள்ளே லாகவமாகச் சென்றனர்.

இரண்டே நிமிடத்தில் பதறியடித்துக் கொண்டு மேலே வந்தார்கள்.

முகத்தில் கலவரம் படர, ''சார், உள்ள ஒரு பொம்பளையோட பாடி இருக்கு சார்,'' — பதற்றமானார்கள்.

இன்ஸ்பெக்டர் பிணத்தை வெளியே எடுக்க உத்தரவிட்டார்.

வெளியே எடுக்கப் பட்டதும், வித்யா தான் அது என்பதை வாடை தாங்காது மூக்கில் கர்சீப்பை பொத்திக் கொண்டு இன்ஸ்பெக்டர் உறுதி செய்து கொண்டார்.

பாடியை போஸ்ட்மார்ட்டத்திற்கு அனுப்பினார்.

உற்சாகத்துடன் ஸ்டேஷனையடைந்தார்.

022 — 4933101 எண்ணுடன் தொடர்பு கொண்டு திவ்யாவைக் காதல் தொணியில் பாஸ்கருடன் இயல்பாகப் பேசச் செய்தார்.

அன்று மாலை ப்ளைட்டில் பாஸ்கர் பெங்களூர் திரும்புவதாக திவ்யா சொன்னாள்.

மாலை ஏர்போர்ட் சென்று, பாம்பே ப்ளைட்டின் வரவுக்காகக் கையில் விலங்குடன் காத்திருந்தார் இன்ஸ்பெக்டர் ரங்கநாத்.

# தீர்ந்த ஒரு கவிதை

வீட்டின் மொட்டை மாடியில், தனிமையில், தரையில் படுத்திருந்த தேவநாதன் விண்ணில் நொடிக்கு ஒரு முறை மாறும் மேகக் கோலத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

வேறு ஒரு சமயமாய் இருந்தால் அந்த இயற்கையின் விந்தை கலந்த வினோதக் காட்சி, அவன் மனத்தில் ஒரு கவிதையை உருவாக்கியிருக்கும். இன்று அவனால் அதனையெல்லாம் ரசிக்க முடியாமல் அவன் மனைவி சாரதா கேட்ட நெருப்புக் கேள்விகள் தடுத்தன.

எப்படிக் கேட்டு விட்டாள்?

தேவநாதன் உருகிப் போனான். அவள் மீது கோபமில்லை. அவள் சராசரிப் பெண். குடும்பத் தலைவி. மூன்று குழந்தைகளுக்குத் தாய். வீட்டின் வறுமையும் — அன்றாட வாழ்வின் அத்யாவசியத் தேவையும் அவளை அப்படிக் கேட்க வைத்ததில் வியப்பில்லை என்பதனையும் தேவநாதன் சிந்தித்தான்.

வேலை — நிரந்தர வருவாய் — பணம் இதெல்லாம் இல்லாத கற்பனை வாழ்வில் எத்தனை எதார்த்தமாகச் சோகங்களைச் சந்திக்க நேரிடும் என்பது தேவநாதனுக்குப் புரியாமல் இல்லை. மற்றவர்களும் இந்த நடைமுறை உலகச் சிரமங்களை உணர்த்தாமல் இல்லை. அதுவெல்லாம் தேவநாதனின் மனத்தில் தைத்ததே இல்லை.

'சோர்ந்து போகாதே.... கைகளையே நெம்புகோலாக்கி, உலகப் பந்தை உருட்டி விளையாடு' என்று கவிதை எழுதியவனுக்கு, வறுமை பெரிதாய்த் தெரியாமல் போகலாம். அவனை நம்பி வந்த மனைவிக்கு....? அவள் வயிற்றில் உருவான உயிர்க்குஞ்சுகளுக்கு...?

உலகமே கைக்குள் அடங்கும் பந்து என்று பாடியவனுக்கு ஒரு படி அரிசிக் கஞ்சிக்கு வழியில்லையே என்ற ஆதங்கத்தைச் சாரதா அவனுக்கு உணர்த்தி விட்டாள்...

''என்னங்க கவிதை.... பெரிய கவிதை... சும்மா வெறும் எழுத்து ஜாலம். வார்த்தைக் கோவை. பாருங்க ஒரு பிரபலக் கவிஞரே தமிழ்நாட்டின் ஜனத்தொகையை விடக் கவிஞர்கள் ஜாஸ்தின்னு கிண்டல் பண்றார். கவிஞர்கள் நிறைய.... கவிதைகளே இல்லை என்று குற்றம் சாட்டுகிறார்....''

கவிதை என்றால் என்னவென்றே தெரியாத சாரதா எப்படி அழகாய்ப் படம் பிடித்துக் காட்டி விட்டாள்...

''பேசாம ஒரு பெட்டிக்கடை வைத்திருந்தால் கூடத் தினம் பத்து, இருபது சம்பாதிக்கலாம்.''

அவள் தீர்மானமாய், கோபமே இல்



லாமல், கொஞ்சம் விரக்தி – சலிப்பு கலந்து யதார்த்தமாய்ச் சொன்ன போது, தேவநாதனால் கோபிக்க முடியவில்லை.

'இவள் இப்படிச் சொல்வதில் என்ன தவறு? இத்தனை வருடம் கவிதை எழுதி என்ன சாதித்து விட்டோம்?' என்ற கேள்வி சுய தரிசனமாய் எழுந்தது.

மறுநாளே தேவநாதன் பெட்டிக் கடை முயற்சியில் இறங்கினான். அதிர்ஷ்டவசமாய் இரண்டு, மூன்று அலுவலகங்கள் உள்ள பக்கமாய் ஒரு கடை கிடைத்தது. கண்ணகியின் காற்சிலம்பு போல மனைவியின் தாலிச் செயின் மார்வாடியிடம் தஞ்சம் புகுந்தது.

கடை வைத்தாகிவிட்டது.

'இப்போதாவது புத்தி வந்ததே!' என்று பார்வையிலேயே சாரதா பாராட்டினாள்.

தேவநாதன் மனத்தில் நம்பிக்கை வளர்ந்தது. ஒரு நாளைக்கு இருபது, முப்பது சம்பாதிக்க முடிந்தது. வீட்டில் பிள்ளைகள் மூன்று வேளை சாப்பிட்டனர். ஒரு பையனுக்கு யூனிபார்ம் கூட புதுசாய் எடுத்துக் கொடுத்தான். கவிதை – எழுத்து என்பதைச் சுத்தமாய் மறந்திருந்தான். அவ்வப்போது சில இலக்கிய நண்பர்கள் வந்து துக்கம் விசாரிப்பது போல..... ''நீ.... நீயுமா மாறி விட்டாய் தேவநாதா?'' என்று 'யூ டூ புரூட்டஸ்' பாணியில் கேட்டுச் சென்றனர். ஆனால் இவன் அது பற்றி லட்சியம் செய்ய வில்லை.

பிஸ்கட் – போன்றவை மடிக்க பழைய புத்தகம் கொஞ்சம் தேவைப்பட்டது. கடையில் வாங்கலாமா என்று விசாரித்த போது கிலோ நாலு ரூபாய் சொன்னார்கள்.

'ஏன் இப்படிச் செய்தால் என்ன?' என்ற கேள்வி மனத்தில் எழுந்ததும் கடன் வாங்கிக் கஷ்டப்பட்டுச் சுயமாய் வெளியிட்ட தனது கவிதைத் தொகுதி ஆயிரம் பிரதியில், நண்பர்களுக்கு இலவசமாய்க் கொடுத்தது போக நிறையக் கட்டிக் கிடந்தன. தூசி தட்டித் தேவநாதன் அதனை எல்லாம் கடைக்கு எடுத்து வந்தான். புத்தகம் விலை போக வில்லை என்ற வருத்தம் நீங்கி 'ஒரு மாதத்திற்குக் கடையில் பிஸ்கட் மடிக்க இது போதும்' என்ற திருப்தி வந்தது.

"சார்... லூஸ்ல ஆறு பிஸ்கட்'' என்று இரண்டு இளைஞர்களில் ஒருவன் கேட்டதும் பிஸ்கட்டுகளை எண்ணிக் கவிதைத் தொகுதியில் ஒரு தாளைக் கிழித்து, அதில் வைத்துக் கொடுத்து விட்டு பாக்கி சில்லறை கொடுத்தான் தேவநாதன்.

பிஸ்கட்டை இருவரும் ஆளுக்குப் பாதியாய்ப் பகிர்ந்து சாப்பிட்டு விட்டுத் தாளில் கை துடைத்த போது, அவர்களில் ஒருவன் கண்ணில் அந்தக் கவிதை வரிகள் எதேச்சையாய் பட்டன....

''முடியாது என்பதும்
நடவாது என்பதும்
முடமான வார்த்தைகள்!
விடியாது என்பதும்
கிடையாது என்பதும்
சோம்பேறி வாதங்கள்!
இல்லை என்பது
எதிலுமே இல்லை
எல்லை என்பது
எங்குமே இல்லை!
சிறகை விரி.
எழு!''

படித்ததும் மெய் சிலிர்த்துப் போனான் அந்த இளைஞன்.

'ஓ! தேவநாதன் என்பவர் எழுதி ஓர் இலக்கியப் பத்திரிகையில் வந்திருந்த கவிதை அல்லவா இது....!' மனம் சோர்ந்து போய் இருந்த நிலையில் சென்ற வருடம் அதனைப் படித்து மன உறுதியுடன் ஒரு வேலைக்கு மனு போட்டதும்... அது கிடைத்ததும் நினைவிற்கு வந்திட....

''சார்... இந்தக் கவிதைப் புத்தகம் உங்க கடையில் இருக்கா...?'' என்று தேவநாதனிடம் கேட்டு விட்டு அவனுடன் வந்த நண்பனிடம், ''ராகவா, நான் அடிக்கடி சொல்வேனே ஒரு கவிதை... அது இது தாண்டா. எவ்வளவு அருமையான கவிதை.



உதவி ஆசிரியர்: இந்தக் கதையை எழுதி அனுப்பினவர் கில்லாடியா இருப்பார்னு தோணுது சார்!

ஆசிரியர்: எப்படிச் சொல்றீங்க?

உதவி ஆசிரியர்: பின்குறிப்புல, 'வாசகர்களின் குட்டுக்கள் எனக்கு வெற்றிப் படிகள்'னு எழுதியிருக்காரே!

— சீர்காழி வி. ரேவதி.

கமலா கந்தசாமி



## அருள்வாக்கு

நமக்கெல்லாம் குருபக்தி போத மாட்டேனென்கிறது. ஆனால் நம் ஸம்பிரதாயங்களுக்கு மூலமான குருமார்களாகவும், முக்கியமான குருமார்களாகவும் இருந்த மஹா பெரியவர்களோ தாங்களே தங்கள் குருமார்களிடம் அபார மான பக்தி செலுத்தியிருக்கிறார்கள்.

ஆதிகுரு தக்ஷிணாமூர்த்தி. அவருக்கும் கூட ஒரு குருவிடம் தாம் பணிவாக இருந்து, சிஷ்யனாகி, உபதேசம் வாங்கிக் கொள்ள வேண்டும் என்று இருந்திருக்கிறது. பரமேச்வரனான அவரே தம் சொந்தக் குழந்தையிடம் கைகட்டி, வாய் பொத்திப் பிரணவோபதேசம் வாங்கிக் கொண்டிருக்கிறார்.

ஞானமே வடிவானவள் அம்பாள். அவளும் பதியான ஈச்வரனிடம் சிஷ்யையாகி உபதேசங்கள் வாங்கிக் கொண்டிருக்கிறாள். அநேக ஆகம தந்த்ரங்கள் ஈச்வரன் அம்பாளுக்கு உபதேசம் பண்ணினவைதான்.

ஸ்ரீ ராம ராமேதி ரமே ராமே
மநோரமே ।
ஸஹஸ்ர நாம தத்துல்யம் ராம நாம
வராநநே ॥

என்பதாக (மும்முறை ராமநாமா சொன்னால் அது ஸஹஸ்ர நாமம் சொன்னதற்கு ஸமானம் என்று) ராம நாம மஹிமையைச் சொல்லும் ச்லோகம் அம்பாளுக்கு ஈச்வரன் உபதேசித்தது தான் என்று "விஷ்ணு ஸஹஸ்ரநாமம்" அறிந்தவர்களுக்குத் தெரிந்திருக்கும்.

மஹாவிஷ்ணு, ராம, கிருஷ்ண அவதாரங்களில் வஸிஷ்டர், ஸாந்தீபனி ஆகியவர்களிடம் பரம விநயத்தோடு குருகுலவாசம் செய்திருக்கிறார்.

குரு பரம்பரையில் தத்தாத்ரேயருக்கு ரொம்பவும் உன்னதமான ஸ்தானம் உண்டு. அப்படிப்பட்டவரோ மண்ணு, தண்ணி, மலைப்பாம்பு, குளவி, ஒரு தாஸி, ஒரு வேடன், ஒரு சின்னக் குழந்தை இவை உள்பட இருபத்து நாலு பேரைத் தம்முடைய குரு என்று சொல்லிக் கொண்டு அவர்களிடமிருந்து தாம் இன்னின்ன பாடம் கற்றேன் என்று (பாகவதத்தில்) சொல்கிறார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

இதெல்லாம் விலை போகலே... யாரோ பழைய பேப்பராகக் கருதிக் கடையிலே போட்டிருக்காங்க பாரு..."

அந்த இளைஞன் உண்மையிலேயே மனம் நொந்து பேசினான்.

அதனைக் கேட்ட தேவநாதனின் உடல் புல்லரித்தது. மகிழ்ச்சியில் கண்கள் கூடக் கலங்கின.

"சார்... இந்தாங்க...." என்றபடி அட்டை கிழிக்கப்படாத தனது கவிதைத் தொகுப்பை எடுத்து நீட்டினான். மகிழ்ச்சியோடு பெற்றுக் கொண்ட இளைஞன் "எவ்வளவு தரட்டும்...?" என்று பர்ஸைத் திறந்த போது, "இல்லை... வேண்டாம்... நீங்களே வச்சுக்கங்க..." என்றான் தேவநாதன்.

"நோ நோ... இவ்வளவு அரிய நூலை சும்மா வாங்கக்கூடாதுங்க..." என்று அதன் விலை பத்து ரூபாய் என்பதனைக் கவனித்து, "இந்தாங்க..." என்று பத்து ரூபாய் நோட்டு ஒன்றை வைத்து விட்டுப் புத்தகத்துடன் அந்த இளைஞன் செல்வதைப் பார்த்த தேவநாதனின் மனம் நிறைந்தது.

இதோ நம் கவிதைக்கு அங்கீகாரம் கிடைத்து விட்டது. போதும். இது போதும் என்ற திருப்தியில் உள்ளம் களித்தது. முகஸ்துதிக்கு இல்லாது ஒருவன் பாராட்டினால் போதாதா? இந்த உலகமே தன்னைக் கவிஞனாய் அங்கீகரித்த உணர்வு தேவநாதனிடம் வந்தது.

கடையை மூடி விட்டு இரவு ஒன்பது மணிக்கு மேல் வீடு போய்ச் சாப்பிட்டு விட்டுக் கடைக் கணக்குகளை முடித்து விட்டு, வழக்கம் போல் தனிமையில் மொட்டை மாடிக்குச் சென்று படுத்தான் தேவநாதன்.

வானில் மேகமே இல்லை. முழு நிலா பிரகாசமாய் இருந்தது.

கவிதை நூலைப் பார்த்து மகிழ்ந்து போன அந்த இளைஞனின் முகமே மனத்தில் நிறைந்தது. மனத் திருப்தியும், சந்தோஷமும், மகிழ்ச்சியும் சேர்ந்ததில் கண்களில் நீரும் வழிந்தது.

மறுபடியும் மனத்தில் புதிதாய்க் கவிதை ஒன்று பூத்தது!

# பட்டால்தான் தெரியும்

ராஜி ரகுநாதன்

குழந்தைகளுக்குப் படித்துப் படித்து சொலலியாகி விட்டது. ''சரிம்மா,'' என்று தலையை ஆட்டுகிறார்கள். நாளைக்கு அவர்கள் முன் மானத்தை வாங்காமல் இருக்க வேண்டுமே என்று கவலைப் பட்டாள் ஜெயம்.

''நீ ஏன் அனாவசியமா அலட்டிக்கறே? வரப் போறது யாரு? எங்க அம்மா அப்பா தானே? தாத்தா பாட்டிகிட்டே எப்படி நடந்துக்கணும்னு மிலிடிரி டிரெயினிங் குடுக்கணுமா என்ன?''

ராமச்சந்திரன் சிரித்துக் கொண்டே கேட்டான்.

இப்போது சிரிப்பாகத்தான் இருக்கும். சமயம் வரும் போது பார்க்கணுமே, இவருடைய உக்ர தாண்டவத்தை... என்று நினைத்துக் கொண்டாள் ஜெயம்.

ஆனால் அவரைச் சொல்லியும் குற்றமில்லை. குழந்தைகள் செய்யும் விஷமம், அடம் அப்படிப்பட்டது. பொழுது விடிந்தது முதல் பன்னிரண்டு வயது குமாருக்கும், ஒன்பது வயது முரளிக்கும் ஆரம்பிக்கும் யுத்தம் இரவு வரை ஓயாது.

ஒருவன் உட்கார்ந்த இடத்தில்தான் இன்னொருவன் உட்கார வேண்டும். அவன் நின்ற இடத்தில் தான் இவன் நிற்க வேண்டும். அப்படி ஒரு போட்டி, சண்டை.

''ஏண்டா இப்படிச் சண்டை போட்டு என் பிராணனை வாங்கறீங்க? சனியன்களா... நீங்கள் உருப்பட மாட்டீங்க.''

எந்தச் சமாதானமும் பலிக்காமல் ஜெயம் உபயோகிக்கும் சரளமான சாபம் இது. கையாலாகாத சாபம்.

பாடம் படிக்கச் சொன்னால், பெரியவன் பேனா ரிப்பேர் பண்ண ஆரம்பித்து விடுவான். இங்க் பேனாவில் தினமும் இங்க் போடுவான். பால் பாயிண்ட் பேனாவைத் தினமும் நாலு தடவையாவது திறந்து, ரீபிள் தீர்ந்து விட்டதா என்று பார்ப்பான். படிப்பு முடிந்த மாதிரிதான். எழுந்து விடுவான்.

சின்னவனோ... சொல்லவே வேண்டாம். காலையில் படிக்கச் சொன்னால், ''கொஞ்ச நேரம் டயர் ஓட்டறேம்மா. சாயந்திரம் படிக்கிறேன்'' என்பான். எவ்வளவு கண்டிப்பாக இருந்தாலும், அவர்கள் நினைத்ததைத் தான் செய்வார்கள். சாயந்திரம் ஆளே கண்ணில் பட மாட்டான். பிளேகிரெளண்டில் போய்த்தான் தேடி அழைத்து வர வேண்டும்.

'இரவு, டீ.வி.யில் நல்ல நாடகம்மா' என்பான் பெரியவன். சாம பேத தான தண்டம் ஒன்றும் பலிக்கவில்லை, இவர்களிடம். கத்திக் கத்திப் பெற்றவர்கள் ஓய்ந்து போனதுதான் மிச்சம்.

க்ஷேத்ராடனம் போகும் வழியில் விசிட் அடிக்க வரும் மாமனார் மாமியாரிடம் இந்தக் குழந்தைகள் நல்ல பெயர் வாங்கித் தருவார்களா? ''குழந்தை வளர்த்திருக்கிற அழகைப் பாரேன்!'' என்று குத்திக் காட்ட மாட்டார்களா?

மறுநாள் விடிந்தது. பெரியவர்கள் வந்து இறங்கினார்கள்.

வானரங்கள் பழையபடி ஆரம்பித்து விட்டன.

வந்ததும் வராததுமாகத் தாத்தாவின் பிளாஸ்கை உடைத்தான் சின்னவன். வேண்டுமென்று உடைக்கவில்லை என்பது நிச்சயம். அது என்னவோ எதைப் பார்த்தாலும் அதைத் திருகி, குடைந்து, உண்டு இல்லை என்று பண்ணி விடுகிறார்கள் குழந்தைகள். ராம! ராமா!

எவ்வளவுதான் ஜாடை காட்டினாலும் புரிந்து கொள்ளாமல் அவர்களின் சூட்கேஸை ஆராய்கிறான் பெரியவன்.

பல்லைக் கடித்துப் பொறுத்துக் கொண்டாள், ஜெயம். ராமச் சந்திரனால் அப்படி இருக்க முடியவில்லை.

சுள்சுள்ளென்று குழந்தைகள் இருவர் முதுகிலும் அடி வைத்தான். தரதரவென்று இழுத்து வந்து ஜெயத்திடம் விட்டான்.

''போனாப் போறதுடா... அடிக்காதடா!'' என்று தடுத்த பெற்றோரைப் பொருட்படுத்தவில்லை.

''உருப்படாத குழந்தைகள்... உருப்படாத

குழந்தைகள் பிராணனை வாங்கறதுகள். எவ்வளவு சொன்னாலும் புரிய மாட்டேங்கறது.. பீடைகள்.. நாளைக்குக் கல்யாண மாகி, இதே மாதிரி ரெண்டு குழந்தைகள் பொறந்து, படுத்தினால்... அப்பத்தான் புத்தி வரும் போல இருக்கு!''

உறுமினான் ராமச்சந்திரன்.

அப்பாவும், அம்மாவும் ஒருவரையொரு வர் பார்த்துக் கொண்டார்கள்.

அதில் ஆயிரம் அர்த்தங்கள்.

''சரிதாண்டா... போடா. குழந்தைகள்... என்ன பண்றது?''

அம்மா சிரித்துக் கொண்டே சின்ன வனை அருகில் அழைத்து அணைத்துக் கொண்டார்.



அப்பா பெரியவனைக் கூப்பிட்டு பிஸ்கெட் பாக்கெட்டையும், கலர்ப் பென்சில் பாக்ஸும் தருகிறார்.

அப்பா தொண்டையைச் செருமிக் கொண்டு சோபாவில் உட்கார்ந்து கொண்டார். பிள்ளையை அருகில் அமர்த்திக் கொண்டார்.

''இதோ பாருடா.. ராமா! நான் இப்ப இங்க பார்த்தது அப்படியே முப்பது வருஷத்துக்கு முன்னாடி பார்த்ததோட ரீ—ப்ளே தான். என்ன... நான் சொல்றது?'' என்று கேட்டு அர்த்தத்தோடு நிறுத்தினார்.

அம்மாதான் சிரித்துக் கொண்டே தொடர்ந்தார். ''என்னடா! ஒண்ணும் தெரியாத மாதிரி பார்க்கறே? சின்ன வயசால நீ செய்யாத விஷமமா? அடிக்காத லூட்டியா? உன் தங்கையோடு போடாத சண்டையா? எல்லாம் மறந்தே போயிடுத்தா? எஸ்.எஸ்.எல்.ஸி. படிக்கும் போது கூட படிப்பில் கவனம் இல்லாம, அடுத்த வீட்டு மாமி ரேடியோல சினிமாப் பாட்டு வைப்பதை கவனமாக் கேட்டுப்பேயே. நான் கூட இதற்காக அவளுடன் சண்டை போட்டிருக்கிறேன். எங்களை நீ படுத்தாத பாட்டையா உன் பிள்ளைகள் படுத்தறான்கள்?"

அம்மா பழைய நினைவுகளில் ஆழ்ந்து உணர்ச்சியோடு பேசும் போதுதான் ராமச்சந்திரனுக்கு உண்மை உறைக்கிறது.

மாமியார் சொல்லச் சொல்ல, தான் கூட தன் தாய் ஏதாவது வேலை செய்யச் சொன்னால் எதிர்த்துப் பேசியதும், தன் தம்பியோடு ஏட்டிக்குப் போட்டி சண்டை போட்



டதும்... நினைவுக்கு வருகிறது ஜெயத்திற்கு. தலையைக் குனிந்து கொள்கிறாள்.

நால்வரையும் பழைய நினைவுகளின் ஆழம் தாக்குகிறது.

அடுத்த அறையில் குழந்தைகள் இருவரும் தாத்தா கொடுத்த கலர்ப் பென்சிலை ஒரு வழி பார்ப்பதில் ஈடுபட்டிருந்தார்கள்.

''சரி. போனது போகட்டும். அப்ப எங்களோட அறிவுரையை ஏற்கற வயசு உங்களுக்கும் இல்லை.

எங்களுக்கும் பொறுமை இல்லை. எங்களால முடியாம போன போது; இப்ப நீ சபிச்சா மாதிரியே வயிறு பத்தி.. நானும் சபிச்சிருக்கேன். உங்க அம்மாவும் சபிச்சிருக்கா. ஒருவேளை அதோட பலன்தான் நீ அனுபவிக்கிறாயோன்னு இப்பத் தோணறது.

அப்ப நீங்களும் நாங்களும் இருந்த அதே நிலைமையில இப்ப உன் குழந்தைகளும் நீங்களும் இருக்கீங்க. ஆனால் எங்களுக்கு இப்ப அனுபவம் கூடியிருக்கு. உங்களுக்கும் பக்குவம் வந்திருக்கு. அதனால நான் சொல்றதைக் கொஞ்சம் யோசிச்சுப் பாருங்கோ'' என்றார் அப்பா.

''என்ன?''

என்பது போல் பிள்ளையும் மருமகளும் பெரியவரை ஏறிட்டுப் பார்க்கிறார்கள்.

அப்பா தொடர்ந்தார்.

''இதோ பாரும்மா ஜெயா! உன் பிள்ளைகள் விஷமம் பண்றாங்களே... அடம் பிடிக்கறாங்களேன்னு கவலைப்படாதே. அதுக்காகத் தவிக்கவும் வேண்டாம். கொதிக்கவும் வேண்டாம். சாபம் கொடுக்கவும் வேண்டாம். எல்லாம் உன் புருஷன் பண்ணின பால லீலைகள்தாம். உன் புருஷனைச் சின்ன வயசுல பார்க்கறாப் போல நினைச்சுக்கோயேன். கோபம் மறந்து போய் சிரிப்பு வந்துடும். நீயும்தாண்டா.. ராமா! நாங்களும் உன்னைச் சபிச்சோம், 'பட்டாத்தான் தெரியும்'னு. ஒருவேளை அதுதான் பலிச்சுடுத்தோன்னு இப்ப திக்குதிக்குங்கறது. நீயாவது அந்தத் தப்பைப் பண்ணாதே. இது ஒரு தொடர்கதையாக வேண்டாம். நயமாச் சொல்லிப் பாரு. பிஞ்சுகளைப் போட்டுக் கரிச்சு கொட்டாதீங்க! புரியாத வயசு. தானாச் சரியாப் போயிடும். இப்ப நீயே இல்லையா? காலேஜில் சேர்ந்த பின் நல்லா படிச்சு முன்னுக்கு வரலையா? எல்லாம் வேளை வரணும். என்ன நான் சொல்றது?"

மனைவியைப் பார்த்துக் கேட்கிறார் அப்பா. முதியவர்கள் இருவரும் கலகலவென்று சிரிக்கிறார்கள். அந்தச் சிரிப்பு இளம் தம்பதிகளையும் தொற்றிக் கொள்கிறது. அவர்கள் மனத்தில் ஒரு தீர்மானமும் ஏறுகிறது.

''சரி.. சாப்பிட வாங்க! நாழியாறது,'' என்கிறாள் ஜெயம், சிரிப்பினூடே.

# பொன் குஞ்சுகள்

**ராஜி**



"**வ**யசாயிருக்கே தவிர, விவேகமே இல்லையே? என்ன செய்வது?'' உஷா கணவனிடம் புலம்பினாள்.

கையிலிருந்த ஆங்கிலப் பத்திரிகையிலிருந்து கண்களைத் திருப்பாமலே புருவத்தை மட்டும் உயர்த்தி விசாரிக்கிறான் சங்கர்.

''நீ யாரைப் பத்தி சொல்றே? கொஞ்சம் புரியறாப் போலச் சொல்லேன்.''

கையினால் அவனுடைய புத்தகத்தைக் கீழே இறக்கிக் கொண்டு சொல்கிறாள்.

''அதான், சொன்னேனே...! அடுத்த வீட்டுக்கு ஒரு பாட்டி வந்திருக்காங்கன்னு...''

''ஓஹோ! அந்த ஸ்பான்ஞ் பொம்மை விஷயமா? சரியாப் போச்சு! நான் என்னமோ ஏதோன்னு பயந்தே போனேன்.''

புத்தகத்தை விடுவித்துக் கொண்டு மீண்டும் படிக்க ஆரம்பிக்கிறான்.

உஷாவுக்குக் கோபம் வருகிறது. 'அவ்வளவு அலட்சியமாகவா இருக்கிறது, உங்களுக்கு?' உம்மென்று உட்கார்ந்திருக்கிறாள்.

புத்தகத்தைத் தாழ்த்தி அவளைப் பார்த்து கிண்டலடிக்கிறான்.

''உனக்கு ஏன் இந்தக் கிழவிகளோடு சிநேகம்?''

அவளால் அவ்வளவு லைட்டாக எடுத்துக் கொள்ள முடியவில்லை. புதுசா வாங்கியிருக்கோம். அடுத்த மாசம் முதமுதலா கொலு வைக்கப் போறோம். இவ்வளவு சொல்லியும் அந்தப் பாட்டிக்குப் புரிய மாட்டேங்கிறதே!

உஷாவுக்கு விளங்கவில்லை. யாரிடம் போய்ச் சொல்வாள்? எப்படித் தீர்ப்பாள்?

விஷயம் இதுதான்.

பக்கத்து வீட்டு ராவ் தம்பதிகள் இருவரும் வேலை பார்ப்பவர்கள். ராவின் ஒரே பிள்ளை வெளியூர் ஹாஸ்டலில் தங்கி காலேஜில் படித்து வருகிறான். பத்து நாட்கள் முன் ஊரிலிருந்து வந்த ராவின் தாயார், தனியாகப் பொழுது போகாமல் வலிய வந்து உஷாவிடம் பேசிப் பழகி, இப்போது இருவரும் நட்பாகி விட்டார்கள். ராவின் மனைவியோடு அதிகம் பழக்கம் கிடையாது.

பாட்டிக்கு அறுபதுக்கு மேல் வயசிருக்கும். தலையெல்லாம் நல்ல நரை. சின்னதாக முடிந்திருந்தாள். முகத்தில் கூட ஐந்தாறு நரை முடிகள்.

மருமகள் காலையிலேயே அரக்கப் பரக்க சமைத்துச் சாப்பிட்டு விட்டுப் போய் விடுவது பாட்டிக்குப் பாந்தமாய் இருப்பதில்லை. மெதுவாக எழுந்திருந்து, பல் தேய்த்து, குளித்து, பூஜை முடித்து, சமையலறைக்குச் சென்று பசியோடு பாத்திரங்களைத் திறந்து பார்த்தால்... ஆறிப் போன மீதிச் சாப்பாடு. ''ஹூம்! இது என்ன சமையலோ? கண்றாவி!'' என்பாள்.

காம்பவுண்டுக்கருகிலிருந்து குரல் கொடுப்பாள். ''உஷா! அம்மா.. உஷா!''

இவளும் இந்தப் பக்கத்திலிருந்து பதில் குரல் கொடுப்பாள். இவள் வீட்டுக் கறியும் குழம்பும் கிண்ணங்களில் பரிமாறப்படும். மருமகள் வருவதற்குள் தவறாமல் கிண்ணங்களை அலம்பிக் கொடுத்து விடுவாள், பாட்டி.

பாட்டிக்குச் சாப்பாட்டில் நப்பாசை. தினமும் இவளைப் பார்க்கும்போதெல்லாம் என்ன சமையல்? என்ன டிபன்? என்று கேட்கத் தவற மாட்டாள். மத்தியானத்தில் தூங்கிய நேரம் போக, மிகி நேரம் வீட்டைப் பூட்டி விட்டு இங்கே வந்து விடுவாள்.

முதல் நாள் வந்தபோதே அந்தஸ்தை எடை போடுபவள் போல வீட்டை ஆராய்ச்சியாகப் பார்த்தாள். பாட்டிக்கு நல்ல கலைக் கண்கள். உஷாவின் கை வேலைத் திறனை மெச்சிக் கொண்டாள்.

இங்கேதான் வந்தது பிரச்னை. தான் எக்ஸிபிஷனிலிருந்து வாங்கி வந்த ஸ்பான்ஜ் பொம்மையைப் பெருமையாகப் பாட்டியிடம் காட்டினாள், உஷா.

''இந்தத் தடவை முதமுதலா நவராத்திரி கொலு வைக்கலாம்னு இருக்கேன். அதற்காக பொம்மை சேர்க்க ஆரம்பித்திருக்கிறேன்,'' என்றாள்.

பாட்டியின் கண்கள் அந்த பொம்மையில் லயித்து விட்டன. ஊரிலிருக்கும் தன் பெண் வயிற்றுப் பேத்தி நினைவுக்கு வந்து விட்டாள்.

''உஷா! இந்த பொம்மையை எனக்குக் கொடுத்து விடேன். என்ன விலையோ தந்து விடுகிறேன், நீ வேறு வாங்கிக் கொள்.''

பாட்டியின் கையிலிருந்து உடனே பொம்மையைப் பிடுங்காத குறையாக வாங்கி உள்ளே வைத்து விட்டாள் உஷா.

''இது எந்தக் கடையில் கிடைக்குமோ தெரியாதே. டவுனுக்குப் போகும் போது கிடைத்தால் உங்களுக்கு ஒன்று வாங்கி வருகிறேன்.''

''நான் அடுத்த வாரம் ஊருக்குத் திரும்ப வேண்டும். நீ ஒண்ணு செய்யேன், உஷா. வேறு வாங்கிக் கொள். என் பேத்தியைப் பற்றித்தான் சொல்லியிருக்கேனே. உன்னை மாதிரிதான் அவளும். ஆசை ஆசையா எல்லாம் செய்வா.''

''இருந்தாலும்.. பாட்டி, எனக்கு இதோட விலை தெரியாது.''

''அதற்கென்ன? இருபத்தஞ்சு ரூபா தரேன். பொம்மையைத் தா.''

''ஐயையோ அவ்வளவு விலை இருக்காது. ஆனாலும் விலை சரியாக நினைவில்லை. உங்களிடம் அதிகம் வாங்கிக் கொள்ள எனக்கும் கஷ்டமாயிருக்கும்.''

பாட்டியிடம் பலிக்கவில்லை.

''சரிதான் போ! நீ என் பெண் மாதிரி ஒரு அஞ்சு பத்து உன்கிட்டே என் காசு இருந்தா ஒண்ணும் ஆயிடாது.''

அன்று பாட்டியை எப்படியோ சமாளித்து வீட்டுக்கு அனுப்புவதற்குள் பெரும்பாடாகி விட்டது, உஷாவுக்கு.

நாளை எப்படியும் பாட்டியைச் சந்திக்கத் தானே வேண்டும்?

மறுநாள்.

கணவனை அலுவலகத்துக்கு அனுப்பிய பின், வேலைகளில் லயித்திருந்த உஷாவுக்கு பாட்டியை எப்படிச் சமாளிப்பது என்பது இன்னும் புரிபடவில்லை.

''டிங்... டாங்...''

காலிங்பெல் கூப்பிட்டது.

கதவைத் திறந்த உஷா திடுக்கிட்டாள்.

''அடடே! அம்மா...! வாம்மா, அப்பா வரலையா?''

''இல்லேடியம்மா. நான் மட்டும்தான் கிளம்பி வந்தேன். உன் மன்னிக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கு. அவள் வீட்டிலேர்ந்து ஃபோன் வந்தது. அதுதான் நான் மட்டும் போய்ப் பார்த்து விட்டு வரலாம்னு கிளம்பி வந்தேன். இரண்டு நாளில் லீவு எடுத்துக்



கொண்டு உன் அண்ணாவும் அப்பாவும் போய் வருவார்கள். போகும் வழியில் உன்னையும் பார்த்துப் போகலாமென்று வந்தேன்.''

நான்கு மணி நேரம் பஸ்ஸில் வந்தது தாங்கவில்லை, அம்மாவுக்கு.

சோர்ந்து போயிருந்தாள்.

''மாப்பிள்ளை மத்தியானம் சாப்பிட வருவாரில்லையா? அவரையும் பார்த்துவிட்டு, மூணு மணி பஸ்ஸுக்குக் கிளம்பினாத்தான் சரியாயிருக்கும்.''

''இந்தா... பையை உள்ளே வை.''

அம்மா புஸ்புஸ்ஸென்று மூச்சு விட்டுக் கொண்டு காலை நீட்டி உட்கார்ந்தாள். காலைப் பிடித்து விட்டுக் கொண்டாள்.

பெட்டியைத் திறந்து ஒரு கோலப் புத்தகத்தை ஆசையாக எடுத்து உஷாவிடம் கொடுத்தாள்.

அதை வாங்கிப் பார்த்த உஷா வியக்கிறாள்.

''உனக்குக் கோலம்னா பைத்தியமாச்சேன்னு வாங்கிண்டு வந்தேன். உன் மன்னிக்கு இதிலெல்லாம் ஆர்வமே கிடையாதுடி. ஆனால் எதிர் வீட்டில் ஒரு பெண் இருக்கிறது. உன்னை மாதிரியேதான், எல்லாத்துலயும். தினுசு தினுசா பட்சணம் பண்றதும், புதுசு புதுசா கை வேலை பண்றதுமா, அதைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு உன் ஞாபகம்தான் வரும். அவதான் இந்தக் கோலப் புத்தகம் அவ வீட்டுக்காரர் மதுரை போன போது வாங்கிண்டு வந்தார்ன்னு காமிச்சாள். அடுத்த தடவை போகும் போது உனக்கும் ஒண்ணு வாங்கிண்டு வரச் சொல்லலாம்னுதான் இருந்தேன். ஆனால் திடீர்னு கிளம்ப வேண்டி வந்துடுத்து.

சரிதான்னு... வெட்கத்தை விட்டு அவகிட்டே கேட்டுட்டேன். 'இந்த புக்கை என் பெண்ணுக்குக் கொடு. நீ வேறே வாங்கிக்கோ'ன்னு. உன் அண்ணாவுக்குத் தெரிஞ்சா வைவான். ஆனா, அந்தப் பொண்ணு கொஞ்சம் கூட யோசிக்காம உள்ளே போய் டக்குனு கொண்டு வந்து கொடுத்துட்டாள். நான் கூட அவகிட்டே சொன்னேன். 'என் பெண் கூட உன்னை மாதிரிதாண்டி'ன்னு.' இன்னும் காசு கூட கொடுக்கலைடி, உஷா. புத்தகம் நல்லாயிருக்காடி?''

குழந்தை போல் கேட்டு, இவள் முகத்தைப் பார்க்கும் தாயைப் பார்க்கையில் நெஞ்சு கரைந்தது. கண்ணீர் வந்தது. அடுத்த வீட்டு மாமியார் நினைவுக்கு வந்தாள்.

''சரி... வாம்மா! இந்தக் காப்பியைக் குடிச்சுட்டு குளி. அதுக்குள்ள சூடா ஏதாவது பண்ணிடறேன்.''

சமையலறையில் புகுந்த உஷா, பக்கத்து வீட்டுப் பாட்டிக்குப் பிடித்த மணத்தக்காளி வற்றல் குழம்பும், உருளைக் கிழங்கு கறியும் செய்கிறாள்.

''இதென்னடி சமையல் இப்ப போய். ஏதோ இருக்கறதை போடக் கூடாதா?'' குளித்து விட்டு புடைவையைச் சுற்றிக் கொண்டு வந்த அம்மா கேட்கிறாள்.

''இருக்கட்டும்மா! இதோ ஒரு நிமிஷம் இரு. வந்துடறேன்.''

அம்மா உள்ளே போய் புடைவை கட்டிக் கொண்டு வருவதற்குள் பெட்டியிலிருந்த ஸ்பான்ஞ் பொம்மையையும், கிண்ணங்களில் பதார்த்தங்களையும் எடுத்துக் கொண்டு, பக்கத்து வீட்டுக்குச் சென்றாள், உஷா.

தட்டை செய்யும் பொழுது மைதாவிற்குப் பதிலாகக் கோதுமை மாவை ஆவியில் வேகவைத்துச் செய்தால் அதிக ருசியுடன் இருக்கும்.

— விஜயா.





சப்பாத்தியின் மேல் சர்க்கரை, ஏலம் கலந்த தேங்காய்ப்பாலை ஊற்றி ஐந்து நிமிடம் கழித்துச் சாப்பிடக் கொடுங்கள். குழந்தைகள் விரும்பிச் சாப்பிடுவர்.

— விஜயா.

# பெண்களாக பார்க்கக் கூடாது!



அரசு இலாகாக்களிலும், பொது நிறுவனங்களிலும் பெண் அதிகாரிகளின் மேலாண்மை இன்னும் கூட ஆண் ஊழியர் களுக்குப் புதுமையாக உள்ளது. பின்வரும் பிரிவுகளில், ஏதாவது ஒன்றில் அவர்களைச் சேர்த்து, விமர்சித்து, முத்திரை குத்தி விடுகிறார்கள் என்று ஒரு ஆய்வில் தெரிய வருகிறது.

**விமர்சனங்கள்:**

**அ. அலங்காரப் பதுமை:**

''நாளொரு விதமாக டிரஸ் செய்து கொள்ளவும், மாடலிங்குக்கும்தான் லாயக்கு. இலாகாவைப் பற்றிய அடிப்படை விவரங்களைக் கூடக் கற்றுக் கொள்ள வில்லை. உதவி அதிகாரி... எதை எழுதி வைத்தாலும், கண்ணை மூடிக் கொண்டு கையெழுத்துப் போட்டு விடுகிறாராம். இன்னும் கொஞ்ச நாளைக்கு அந்த (உதவி) அதிகாரி வைத்ததுதான் சட்டம். இவர் களெல்லாம் பொழுது போகாமல், பரீட்சை பாஸ் செய்து விட்டு, வேலைக்கு வந்து, நம் பிராணனை வாங்குகிறார்கள்.''

**ஆ. தாய்:**

''அந்த அம்மாள் தங்கமானவர். எல்லாம் கீழே இருப்பவர்கள் செய்யும் 'கோல் மால்' தான். நீ நேராக அவரைப் போய்ப் பார். மகாலக்ஷ்மி மாதிரி களையான முகம். சொல்வதை மிகவும் பொறுமையாகக் கேட் கிறார். அன்பாகப் பேசுகிறார். 'அப்படியா, இதுவரை இந்தப் பிரச்னை இருப்பதைப் பற்றி யாருமே எனக்குச் சொல்லவில் லையே!' என்கிறார்.''

(ஒரு கூட்டு நிர்வாகத்தில் தன்னைப் பற்றி மட்டும் இப்படி ஒரு 'இமேஜை' ஏற்படுத்திக் கொள்வது தவறு. விரைவில் இது எதிர்மறையான விளைவுகளையே ஏற்படுத்தும்).

**இ. இரும்புக்கரம்:**

''ஏதோ, நேர்மையும், கண்டிப்பும் இருக்க வேண்டியதுதான். அதற்காக இப்படியா, நிதானம், தராதரமில்லாமல், எல்லோரை யும் சகட்டு மேனிக்குக் காய்ச்சுவது? இவர் மட்டும் ரொம்ப ஒழுங்கா? குழந்தை தும்மல் போட்டால், அன்று ஆபீசுக்கு மட்டம் போட்டு விடுகிறார். எத்தனையோ சேலை கட்டிய ஹிட்லர்கள் இருக்கிற இடம் தெரி யாமல் போய் விட்டார்கள். இவருடைய கொட்டம் எத்தனை நாளைக்கு? அதையும் பார்த்து விடுவோம்.''

பெண் அதிகாரிகளை அதிகாரிகளாகப் பார்க்க வேண்டும். பெண்களாகப் பார்க்கக் கூடாது என்னும் நிலைமை வர இன்னும் பல புத்தாண்டுகள் ஆகும். அதுவரை, இந்த மூன்று வகை முத்திரை விமர்சனங்களிலும் சிக்காமல், தொழில் திறமை, நேர்மை, தயை, கண்டிப்பு, அனுசரணை இவை களைச் சரியான விகிதத்தில் கலந்து, ஆண் ஊழியர்களின் அறிவுபூர்வமான மதிப்பை யும், உணர்வு பூர்வமான ஒத்துழைப்பையும் பெறும் பெண்களே வெற்றிகரமான நிர் வாகிகள் என்று புகழ்பெறுகிறார்கள்.

**— மேலாண்மைத்துறை பயிற்சியா ளர்களுக்கான ஓர் ஆய்வுக் குறிப்பி லிருந்து.**

**— எஸ். சரோஜினி.**

குறுநாவல்:



# இன்று புதிதாய்ப் பிறந்தேன்..

ரிஷபன்

மூன்று மாத இடைவெளிக்குப் பிறகு இப்போதுதான் அலுவலகத்தில் காலடி வைக்கிறாள் ரேணுகா.

பிறரின் பார்வைகள் தன்மேல் பதிவதையும், விஷயம் தெரிந்தவர்கள் முகத்தில் படரும் திகைப்பும், கிசுகிசுப்பும் தன் போக்கில் நடந்தவளுக்குப் புரியவே செய்தன.

இவையெல்லாம் எதிர்பார்த்ததுதான். இந்த மூன்று மாதமும் மனசுக்குள் — ஆபீஸ் வரும் இன்றைய தினத்தை — பிறரின் உறுத்தும் பார்வைகளை — மீண்டும் கற்பனை செய்து கொண்டுதானிருந்தாள். இந்த பாதிப்பிலிருந்து எப்படி மீள்வது என்றுப் தீர்மானித்திருந்தாள்.

ஆனால்... நிஜமாக இன்று... இந்த நிமிடம் மனசுக்குள் எழும் உறுத்தல்...







தவிர்க்க முடியவில்லை அவளால்.

"ஹலோ... ரேணுகா... ஹௌ ஆர் யூ?"

சங்கரன் எதிர்ப்பட்டார். புன்னகை செய்தார்.

"ம்... பைன்."

"ஸோ... யூ ஆர் ஜாயினிங் டுடே ..."

"ம்."

"நல்லது... இன்று முதல் நடப்பது நல்லவை ஆகட்டும்."

அந்த வாழ்த்தே மேலும் உறுத்தியது. பழைய நினைவுகளைக் கிளர்ந்தது. முகஞ் சுருங்கியது தன்னிச்சையாக சமாளித்துக் கொண்டு முறுவலித்தாள்.

லிப்டைத் தவிர்த்து படியேறினாள்.

காலையின் சுறுசுறுப்பு லிப்டில் போனால் குறைந்து போகும் என்பது அவளின் நினைப்பு. இன்று ஒவ்வொரு படியும் ஏதோ எட்டாத உயரத்தில் இருப்பது போல் தோன்றியது.

மெல்ல இரண்டாவது மாடியில் பிரவேசித்து... வலது கைப் பக்கம் திரும்பி... மூன்றாவது அறையில் தன் பெயர் பொறித்த பெயர்ப் பலகை முன் தயங்கினாள்.

...பி. ரேணுகா...

கதவைத் திறந்ததும் கண்ணில் பட்டவன் முன்சீட் நாராயணன். இவளை எதிர்பார்த்தது போல எழுந்து நின்று வரவேற்றான்.

"குட் மார்னிங் மேடம்."

"...மார்னிங்."

ஸ்டெனோ புவனா காலை வணக்கம் சொன்னாள். இன்னொரு கிளார்க் பூபதிக்கும் பதில் வணக்கம் சொல்லிவிட்டு தன் இருக்கையில் அமர்ந்தாள்.

சங்கடமான அமைதி சட்டென்று நிலவத் தொடங்கியது அந்த அறைக்குள்.

டேபிள் டெஸ்க் காலண்டரில் தேதி மாறாமல் ஜூன் இருபத்தாறு என்றது. மூன்று மாதங்கள். மறுபடி உயிர் பிழைத்து.. அதே ஸீட்டில்..... இன்று வந்து அமர்ந்தாகி விட்டது.

உயிர் கெட்டிதான். விதியின் பிடிக்கு இறுக்கமானதுதான். 'பிழைத்துப் போ' என்று சொல்லி கணக்கு முடிக்க மறுந்து

விட்டது. இன்னும் எத்தனை இடைஞ்சல்களில் சிக்கி... அல்லல்பட வேண்டுமோ.

''மேடம்... எம்.டி. கூப்பிடறார்'' என்றாள் புவனா.

''ஹலோ... குட்மார்னிங் ரேணுகா.. ஹௌ ஆர் யூ?''

''ஃபைன்... தாங்க் யூ.''

''...பீ ரிலாக்ஸ்டு... அப்புறம் லஞ்ச் டைம்ல சீட்டுக்கு வாங்க... ஸ்ட்ரெய்ன் பண்ணிக்காதீங்க.''

''நத்திங் டு வொர்ரி... ஸார். ஐயாம் ஓக்கே.'' என்றாள் கொஞ்சம் எரிச்சலாகவே.

அனுதாபங்கள்... ச்சே.... தேவையற்ற இந்த பரிதாப வார்த்தைகள் தான் மேலும் மேலும் அவளைத் துன்புறுத்துகின்றன. சுய நிலை பிறழ்ந்து தவறான முடிவுகளை எடுக்கத் தூண்டுகின்றன.

இதோ... எதிரில் கூட... அனுதாபம் அப்பிய போலி முகங்கள். ஒன்றில் கூட நிஜமில்லை. உள்ளுக்குள் கேலியாய்ச் சிரித்துக் கொண்டு... இவள் பார்வையில் இருந்து விலகியதும் வம்பு பேசப் போகும் அற்ப ஜீவன்கள்.

'...இவ... பாய்சன் குடிச்சு... உயிரை விடப் பார்த்தாளாமே... தெரியுமா...'

'...ஏனாம்.'

'புருஷன் சரியில்லையாம். கொடுமைப் படுத்தறானாம்.'

'அதுக்காக.. விஷங் குடிப்பாளா ஒருத்தி.'

'...சும்மாவா ஒருத்தன் கொடுமைப்படுத்துவான். இவ என்ன தப்பு பண்ணாளோ.'

'...ஆபீசர்ங்கிற கர்வம்... எடுத்தெறிஞ்சு பேசியிருப்பா.'

'இங்கேயே... ஒவ்வொரு ஆபீஸ் மீட்டிங்லயும் அலட்டிப்பாள்.'

'...என்ன துணிச்சல்டி.'

'முட்டாள் தனம்னு சொல்லு.'

''ஸ்டாப் இட்'' என்று ரேணுகா அலறினாள்.

மூவரும் திகைத்துத் திரும்பினர். என்ன ஆயிற்று இவளுக்கு?

சூழ்நிலை புரிய... ரேணுகா தடுமாறிப் போனாள். மனத்தின் எண்ண ஓட்டங்கள் நிஜம் போல பிரதிபலித்து தன்னிலை மறந்து அவளை அலற வைத்து விட்டது. மேலும் ஒரு வம்புப் பேச்சிற்கு வழி செய்து கொடுத்து விட்டது.

''ஐயாம் ஸாரி.'' என்றாள் முனகலாக.

நாராயணன் சட்டென்று எழுந்து வெளியே போனார். புவனா தர்மசங்கடமாக தன் இருக்கையில் நெளிந்தாள். அவளும் எழுந்து போனால் அநாகரிகமாகப் படுமோ என்ற நினைப்பு தவிக்க வைத்தது.

''....அர்ஜெண்டா..... அட்டெண்ட் பண்ண வேண்டிய லெட்டர்ஸ் எதுவும் இருக்கா?'' என்றாள் புவனாவைப் பார்த்து.

''இருக்கு மேடம்.''

புவனா எழுந்து வந்தாள். பேப்பர்களை மேஜை மேல் வைத்தாள். ஷார்ட்ஹேண்ட் நோட் புக்கைப் பிரித்துக் கொண்டாள். படிக்கும் போதே பதிலையும் டிக்டேட் செய்து விடுவது ரேணுகாவின் வழக்கம்.

''அப்புறம் டிக்டேட் பண்றேன்..''

''சரி... மேடம்...''

புவனா எழுந்து போனாள். இவள் படிப்பதைப் பார்த்து விட்டு தைரியம் பெற்றவளாகக் கண்ணாடி டம்ளரை எடுத்துக் கொண்டு அறைக்கு வெளியே போனாள்.

இன்னும் அரை மணி நேரத்திற்குள் இந்த அலுவலகம் முழுவதும் ரேணுகாவின் அலறல் பரவி விடும்.

பேப்பரின் வரிகளில் மனசு பதிய மறுத்து சண்டித்தனம் செய்தது. முரண்டு பிடிக்கும் மனத்தைத் திசை திருப்ப முயன்று தோற்றாள். திரும்பத் திரும்ப பழைய நினைவுகளே கிளர்ந்தன. பார்வை இலக்கின்றி அலைபாய்ந்தது.

மதியம் லஞ்ச் இடைவேளையில் எம்டியின் அறைக்குப் போனாள்.

ஸ்டெல்லா இவளைப் பார்த்ததும் முறுவலித்தாள்.

''பாஸ் இருக்காரா.''

''ம்... யூ கேன் கோ.''

ஏஸியின் ஜில்லிப்பு சட்டென்று உடம்பில் பாய எதிரில் அமர்ந்திருந்த நரேந்திரனைப் பார்த்தாள்.

''..கம் ஆன் ரேணுகா... வெரி ஹாப்பி டு மீட் யூ அகெய்ன்... ஆஃப்டர் எ லாங் டைம்.''

ஓய்ந்த மனத்துடன் சேர்பாவில் சாய்ந்தாள்.

''...சொல்லுங்க... ஹௌ டு யூ ஃபீல் நௌ. வொர்க் எல்லாம் முடிஞ்சுதா.''

''....ம்...''

'அப்புறம் உங்களுக்கு ஒரு குட் நியூஸ். உங்க ஸீட்டே கொஞ்சம் டென்ஷன் தான். ஏற்கெனவே பிரபோஸ் பண்ணபடி....

## தொட்டுக் கொள்ள..

விருந்தினர் திடீரென்று வந்து விட்டார்களா, கோதுமை மாவு வைத்து சப்பாத்திக்குப் பிசைந்து விட்டீர்கள். ஆனால் தொட்டுக் கொள்ள என்ன செய்வது என யோசிக்காதீர்கள்.

ரசத்தின் அடிவண்டியை எடுத்துக் கொள்ளுங்கள். வெங்காயம் வதக்கி, மசாலா பொடித் தூவி விட்டு, தேங்காய் இருந்தால் 2 டீஸ்பூன் அளவு துருவிப் போட்டு ரச வண்டியைப் போட்டுச் சிறிது தண்ணீர் விட்டு கொதிக்க வைத்துப் பரிமாறுங்கள். சுவையாகவும் இருக்கும். விருந்தினரும் ருசித்துச் சாப்பிடுவார்கள்.

— வசந்தி மாதவன்.

அடிஷனல் ஹேரண்ட் ஈஸ் அப்பாயிண்டட்... உங்களுக்கு இனிமே பிரச்னை இருக்காது.''

''ஹௌ ஆர் யூ ஸோ கான்பிடன்ஸ் இன் மீ?'' என்றாள் திடீரென.

''...ந்நோ ரேணுகா... யூ ஆர் மிஸ்டேக்கன்... இன்பாக்ட்... நீங்களே முன்னால ஒரு தடவை சொன்னதுதான். வொர்க்லோட் அதிகம்னு..''

பேசாமலிருந்தாள். ஏன் இப்படிப் பேசுகிறேன். கூலிவிரக்கப் அதிகமாகி... அதனால் பாதிக்கப்பட்டு.. எதையும் எதிலும் குறை காண ஆரம்பித்துவிட்டேனா.

''நீங்க இப்போ... முக்கியமான மேட்டர்களில் உங்க புல் கவனத்தையும் செலுத்தலாம்.'' என்றார் நரேந்திரன் தொடர்ந்து.

''தேங்க் யூ ஸார்.''

''எது வேண்டுமானாலும் கேளுங்க... நான் எப்பவும் உதவி செய்ய தயாரா இருக்கேன்..''

மறுபடியும் ஒரு நன்றியை முனகினாள். எழுந்து வெளியில் வந்தாள். ஸ்டெல்லா போனில் எதோ சொல்லி சிரித்துக்கொண்டிருந்தாள். வெளியில் வந்தவளைப் பார்த்து மீண்டும் ஒரு புன்முறுவல் செய்தாள்.

ரேணுகா ஸீட்டுக்குத் திரும்பிய போது மனசுக்குள் அவள் தவிர்க்க நினைத்திருந்த அயர்வு மெல்ல படர ஆரம்பித்தது.

கூடாது... அவள் தளர்ந்து போகக் கூடாது.. பிளீஸ். கடவுளே... எனக்கு மனோதிடத்தைக் கொடு. தயவு செய்து என்னைக் குழப்பங்களில் இருந்து விடுவி.... தெளிவைத்தா... ஓ....

''என்ன ரேணுகா..'' என்றது புதிதாக ஒரு குரல். ''உங்களுக்கு என்ன வேணும்.''

சுதாரித்துக் கொண்டாள் ரேணுகா.

''எ... என்ன.''

''ஐயாம் ரஞ்சனி.. நியூ கமர்.'' என்று சிரித்தபடி ஒருத்தி கைநீட்டினாள்.

இயந்திரமாய் அதைப் பற்றி குலுக்கினாள். மறுபடி சத்தமாய் அலறியிருந்திருக்க வேண்டும். நல்லவேளை. செக்ஷனில் இன்னும் யாரும் வரவில்லை. இந்த புதுப் பெண்ணைத்.தவிர.

இவள்தானா அது. அடிஷனல் ஹேரண்ட் எப்படி இருக்கிறாள்.

நன்றாகத்தானிருந்தாள், ஒல்லியான உடல்வாகு. தீர்க்கமான கண்கள். சற்று ஒட்டிய கன்னங்கள். அழுத்தமான உதடுகள். சுரிதார் பாந்தமாகப் பொருந்தி அவளை இன்னும் கம்பீரமாக்கியது. சரியான உயரம்.

தன்னை அளவிடுவதை அவளும் ரசித்திருக்க வேண்டும். புன்சிரிப்புடன் ரேணுகாவைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

ரேணுகா ஒரு நிமிடம் தடுமாறித்தான் போனாள். என்னவென்று பேச ஆரம்பிப்பது.

''இரண்டு வாரங்களுக்கு முன்னால்தான் இங்கே டிரான்ஸ்வராகி வந்தேன். டிரெயினிங் எல்லாம் டெல்லியிலதான்... போஸ்டிங்கும் அங்கேயேதான் இருக்கும்னு நினைச்சேன். அதைத்தான் விரும்பினேன்.

## புளிக்காது!

முதல் நாள் இட்லி, தோசை மாவு மீதமாகி இருந்தால் அதில், சிறிது கடலைப் பருப்பை ஊற வைத்து மிக்ஸியில் ஒரு சுற்றுச் சுற்றி எடுத்து மாவில் போடவும். தேவையான அளவு காரப் பொடி, பெருங்காயத்தூள் போட்டு, வெங்காயம், கறிவேப்பிலை நறுக்கிப் போட்டுக் கலந்து தோசைக் கல்லில் மெல்லியதாக ஊற்றி, சுற்றிலும் எண்ணெய் விட்டு மூடி எடுக்கவும். அடை போன்று சுவையாகவும், மணமாகவும் இருக்கும். சிறிதும் புளிக்காது.

— பாலா.

ஆனா... நடந்தது வேற...'' என்று தோளைக் குலுக்கினாள்.

''ஏன்... இந்த ஊர் பிடிக்கலையா...'' என்றாள் ரேணுகா ஏதோ கேட்க வேண்டும் என்பதற்காக.

''அப்படியில்லை. ரேணுகா... உங்களுக்கே புரியுமே... அங்கே இருக்கிற நாகரிகம், பழக்க வழக்கம் எல்லாமே வித்தியாசம்தான். இங்கே... ஆண்களின் பார்வையே பெண்ணின் மனசைப் பார்ப்பதில்லை. உடம்பின் பரிமாணங்களைத் தான்....''

''எல்லோரும் மோசமில்லை..'' என்றாள் ரேணுகா முனகலாக.

''...அக்ரீட்... ஆனா.. இப்படிப்பட்டவங்க இங்கே கொஞ்சம் அதிகம்னுதான் சொல்றேன். வேலைக்குப் வருகிற பெண்களை இழிவாகப் பார்ப்பதும்... பேசுவதும். அவளின் புத்திசாலித் தனத்தை அங்கீகரிக்க மறுப்பதும்... குதர்க்கம் செய்வதும்... ஹாரிபிள்.''

புதுமுகத்திடம் ரொம்பவும்தான் பேசுகிறோம் என்கிற உணர்வு எழ ரேணுகா சட்டென்று அமைதியானாள்.

ரஞ்சனியின் முகத்தில் அலாதி மலர்ச்சி தெரிந்தது. அது மாறாமலே இருப்பதும் அவளின் கவர்ச்சியை அதிகப்படுத்தியது. அதுவே உள்ளூர ரேணுகாவிற்கு மன முனகலைத் தூண்டியது.

தூக்கம் தவறிய தன் கண்களின் கருவட்டங்களும், சுருக்கங்களும்... முகத்தின் அழகைக் குறைத்து... பார்ப்பவர்களை ஒரு எல்லைக்குள் நிறுத்தி விடுவதை அவள் உணர்ந்தே இருந்தாள்.

''அப்புறம்... ரேணுகா. இந்த நீ வீக்ஸா.. உங்க வேலையைக் கொஞ்சம் கொஞ்சம் நான் பார்த்தேன். அப்கோர்ஸ்... நீங்க வந்த பிறகு தான் எனக்கு டிரெயினிங் ஆரம்பிக்கிறது என்றாலும்... மத்த கலீக்ஸ் ரொம்ப ஹெல்ப்பா இருந்தாங்க. தே ஷேர்ட் தேர் நாலட்ஜ் வித் மீ. அதனால எனக்கு ஈஸியா இருந்தது. இப்ப நீங்களும் வந்தாச்சு.. குரு தட்சணை என்ன வேணும்.. ரேணுகா.'' என்றாள் சிரிப்பு மாறாமல்.

அது அவள் சுபாவம் என்று புரிந்தது.

எவ்வளவுசீரியஸ்னெஸ்ஸிலும்ஒருகுறும்பு... ஒரு வேடிக்கை... கலக்காமல் அவளால் இருக்க முடியாது என்று ரேணுகாவிற்குப் புரிந்தது.

இதிலென்ன கஷ்டம்... இன்னமும் வாழ்க்கையில் அடிபடவில்லை. அந்த அவலங்கள் பரிச்சயமானால் இந்த புன்னகையும், தமாஷும் சொல்லாமல் கொள்ளாமல் ஓடி விடும். முகம் இறுகி... வேறாளாகிப் போவாள். என்னைப் போல...

''முதல் பாடம் என்ன ரேணுகா?''

ரேணுகா சட்டென்று தன்னிலை இழந்தாள்.

''ஹௌ டு கீப் கொய்ட்... யெஸ்... எப்ப பேசணும்னு தெரிஞ்சு வச்சிருக்கிறது...''

ரஞ்சனியின் முகத்தில் சிரிப்பு மாறவில்லை. நிச்சயம் கேலியில்லை. அனுதாபம்

**செடி வளர்க்க...**

தேவையில்லாத ஸ்கூட்டர் டயர், கார் டயரைத் தோட்டத்தில் ஆங்காங்கே தரையில் வைத்து அதனுள் மண்ணைப் போட்டு குரோட்டன்ஸ் செடி வகைகளை வைக்கலாம். சீராக வளர்வதுடன் மண் வெளியில் பரவாது. பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருக்கும்.

— ஜெயஸ்ரீ.

மனசுக்கு மிக நெருங்கியவளிடம் புரிந்து கொண்டவர்களுக்குள் நிலவும் அன்பு... கனிவு தான் முகத்தில் தெரிந்தது. எதுவுமே நிகழாதது போல எழுந்து அவள் ஸீட்டுக்குப் போனாள்.

ரேணுகா மீண்டும் மனசுக்குள் காயப்பட்டாள்.

## 2

ஒரு வாரம் ஓடி விட்டது.

அலுவலகச் சூழ்நிலை மீண்டும் படிந்து விட்டது. காலையில் எழுந்து வருவதும்... அலுவல்களைக் கவனிப்பதும்... ஒரு மீட்டிங் கூட கலந்து கொண்டாகிவிட்டது. ஒரு விவாதத்தில் நிச்சயம் இவள் மறுப்பாள் என்று எதிர் பார்த்தபோது மௌனம் சாதித்தாகி விட்டது.

ரஞ்சனிதான் எழுந்து மறுத்தாள்.

இவள் நினைக்கிற... நினைக்கக் கூடிய அதே கோணத்தில்... மறுப்பைத் தெரிவித்த போது... யாரோ மெலிதாகக் கைதட்டியது கேட்டது.

''வெரிகுட்... ரஞ்சனி.'' என்று எம். டி. பாராட்டினார்.

தன்னறைக்கு வந்ததும் இவளும் ஒப்புக்கு பாராட்டினாள்.

''கிரடிட் கோஸ் டு யூ ஒன்லி ரேணுகா..'' என்றாள் ரஞ்சனி.

''எப்படி...''

''...பழைய ஃபைலைப் பார்த்துகிட்டு இருந்தேன் தற்செயலா... உங்களோட கமெண்ட்ஸ் அதுல இருந்தது.... அதையே தான் சொன்னேன்.... மீட்டிங்ல..''

''எனிவே... யூ ஆர் பிரில்லியண்ட்...''

''ஐ டு ஹோப் ஸோ..'' என்றாள் சிரிப்புடன்.

உண்மையிலேயே புத்திசாலிதான். ஒரு கோடி காட்டினால் போதும். வேலையைச் செய்து விடுவாள். மறுபடி திருத்தம் நேராத படி. இப்போது நிஜமாகவே மனத்தில் ஆபீஸ் சம்பந்தமான டென்ஷன் இல்லாமல் தான் இருக்கிறது. அதுவேதான் பிரச்னையாகவும் ஆகிவிட்டது.

அலுவலகம் திரும்பியதும் வேலைகளில் தன்னை மூழ்கடித்து மனத்தின் குமுறல்களை மறந்தே போக வேண்டும் என்று தீர்மானித்த முடிவு அடிபட்டுப் போனது.

தொல்லைகள் தவிர்ந்த மனசில்... நினைவுக் குமிழிகள் எழுந்த வண்ணம் இருந்தன. போராடித்தான் அகற்றவேண்டி இருந்தது.

''ரேணுகா... இன்னைக்கு ஈவ்னிங் நீங்க ஃப்ரீயா..''

''எ... என்ன.''

''...இல்லே... ஃப்ரீன்னா கொஞ்சம் போரடிகலாமேன்னுதான்.. எங்க வீட்டுக்கு வரீங்களா. அஃப்கோர்ஸ். இஃப் யூ டோண்ட் ஹாவ் எனி அதர் இம்பார்டண்ட் வொர்க்?''

சனிக்கிழமைதான். நாளை விடுமுறை தான். வீட்டிற்குப் போனாலும் ஒட்டாத மனத் தனிமைதான். போனால் என்ன. போய்த்தான் பார்க்கலாமே.

''வரேன்.''

''ஹப்பா. தி பிளெஷர் ஈஸ் மைன்.'' என்றாள் உணர்ச்சிபூர்வமாய்.

வேடிக்கையாய் இருந்தது. தன்னிடம் இவளுக்கென்ன அட்ராக்ஷன். அதுவும் நொடிக்கொருதரம் முரண்டு பிடிப்பவளிடம் ஏனோ அவளைப் பிடித்துப் போய் விட்டது இப்போது. சுவாதீனமாய் பெயர் சொல்லி அழைத்தாலும்.. பர்சனல் விஷயங்களைக் கேட்பதில்லை. குறிப்பு அறிந்து விலகும் சாமர்த்தியம் இருக்கிறது. மனநிலை சரியில்லாத நேரங்களில்... வேலைகளைத் தானே முடித்து விடுகிற திறமையும் இருக்கிறது. சொல்லப் போனால் அந்த ஒத்துழைப்பிற்காகவே இவள் பலமுறை நன்றி சொல்ல வேண்டும்.

மாறாக... அவளுடைய கடமையைத் தானே செய்கிறாள் என்பது போலத்தான் ரேணுகா நடந்து கொண்டாள் ரஞ்சனியிடம். அதையும் ரஞ்சனி பொருட்படுத்தவில்லை என்று புரிந்தே இருந்தது.

எல்லாவற்றுக்கும் சிகரமாய்... அந்த சம்பவம்.

ரேணுகா இருப்பதைக் கவனியாமல்... காண்டீனில் புவனா ரஞ்சனியிடம் பேசுவதைக் கேட்டாள்.

''மேடம்... ஷீ ஈஸ் நாட் நார்மல்.. அவங்க கதை தெரியுமா.''

''பிளீஸ் ஷட்டப் புவனா. நீயும் ஒரு

பெண்தானே. நம்ம இனத்தைச் சேர்ந்த [illegible] நாமே வம்பு பேசினா... அப்புறம் மத்தவங்களை எப்படித் தப்பு சொல்றது? நம்மைப் பொறுத்தவரை அவங்க செக்ஷன் ஹெட்... அந்த டியூட்டியை எப்படிச் செய்யிறாங்க. அதுதான் முக்கியம். புரிஞ்சுதா... வீண் காஸிப்பிங்லாம்... இம்மெச்சூரிட்டியைத்தான் காட்டும். அட் எனி காஸ்ட்.. வீ மஸ்ட் அவாய்ட் இட்..'' என்றாள் ரஞ்சனி படபடப்பாக.

புவனா வாயடைத்துப் போனாள்.

இவள் புதுசு. வழக்கமாய்... இந்த மாதிரி சூழ்நிலையில் வேறொருத்தியானால்... 'அப்படியா...ம்... அப்புறம்...' என்பாள்.

இம்மாதிரி முகத்தில் அடிக்கிறமாதிரி பதில் சொல்ல மாட்டாள். அதுவும் பதிலில் தொனித்த நேர்மையின் தீவிரம் புவனாவைப் பலமாகவே தாக்கி விட்டது.

''ஸாரி..'' என்றாள் முனகலாக.

ரஞ்சனியின் முகத்தில் மறுபடி பழைய மலர்ச்சி வந்து விட்டது.

''டேக் இட் ஈஸி.. மனசுல பட்டதை சொன்னேன். சரியா எடுத்துப்பேன்னு... ஓக்கே..''

மனசை வருடுகிற பேச்சு... குரல்... இதுதான் ரஞ்சனியை எல்லோரும் நேசிக்க வைத்து விட்டதா... இந்தக் குறுகிய காலத்தில்.

அதனாலேயே... அந்த நெகிழ்விலேயே... ரஞ்சனியின் அழைப்பை ஏற்றுக் கொண்டாள். வீட்டுக்கு வருவதாகச் சொன்னாள்.

இவள் சம்மதித்ததும் ரஞ்சனி முகத்தில் காட்டிய சந்தோஷமும், சுவாதீனமும் மேலும் இவளை நெகிழ்த்தி விட்டன. இவள் எதிர்பார்த்து ஏமாந்த அன்பு. இன்று வேறொரு வடிவத்தில்... வேறொருவர் மூலமாக இவள் எதிர் பாராத கணத்தில் வெளிப்படுகிறது. இவளைத் தேடி வருகிறது.

## 3

இரண்டு ஆச்சர்யங்கள் காத்திருந்தன, ரேணுகாவிற்கு.

ரஞ்சனியின் வீட்டில் நுழைந்ததுமே ஒரு போட்டோ பார்வையில் பட்டது. ஒரு பெண்மணியின் கழுத்தைக் கட்டியபடி... ரஞ்சனி. ரேணுகா எதிர்பார்த்தபடி... ரஞ்சனி தனியாள் அல்ல. ஒரு துணை இருக்கிறது. அதுவும் தெரிந்த முகமாய்.

உள்ளிருந்து அந்த பெண் மணி வெளிப்பட்டு வணங்கியதும் விளங்கிவிட்டது.

நர்மதா இவர்கள் அலுவலகத்திலேயே வேலை பார்ப்பவள்.

''நீங்களா... உங்க மகளா ரஞ்சனி'' என்றாள் ரேணுகா.

''ஆமாம்... சொல்லவேயில்லையா... இவ...''

''அவங்க கேட்கவே இல்லையே...'' என்றாள் ரஞ்சனி சிரித்துக் கொண்டு.

''அம்மா. இன்னைக்கு நாம மூணு பேரும் சேர்ந்து சாப்பிடப் போறோம்.. டின்னர் ஸ்பெஷலா இருக்கட்டும்.'' என்றாள்.

''ஊஹூம்... அதெல்லாம் வேணாம். இருக்கிறது. போதும்.'' என்றாள் ரேணுகா.



## நொடியில் மோர்க் குழம்பு!!!

அதிக புளிப்பு உள்ள தயிர் அல்லது மோர் இருந்தால், தேவையான மிளகு, மிளகாய் வற்றலை நன்றாக அரைத்து அதனுடன் கலக்கி உப்பு சேர்த்து கொதிக்க விடவும். கூழ் பதத்தில் கெட்டியானவுடன் இறக்கி அதை ஒரு பாட்டிலில் அடைத்து வைத்துக் கொள்ளவும். ஒரு மாதம் வரை கெடாது. விசேஷ நாட்கள் அல்லது எதிர்பாராத விருந்தாளிகள் வந்திருக்கும் சமயத்தில் இது மிகவும் நம்மை கைதூக்கி விடும். நாம் செய்ய வேண்டியது: அந்தச் சமயத்தில் தயாரிக்க வேண்டிய அளவிற்கு மோர் கூழை எடுத்துக் கொண்டு அதற்கேற்றாற் போல் தேங்காயைத் துருவி அரைத்து அதில் கலக்கி கொதி வந்தவுடன் இரண்டு ஸ்பூன் சர்க்கரை தூவி இறக்கி, தேங்காய் எண்ணெயில் கடுகு, கறிவேப்பிலை தாளிக்கவும். இந்த வகை மோர்க் குழம்பை நொடியில் தயார் செய்து பப்படத்துடன் பரிமாறி விருந்தினர்களை வியப்பில் ஆழ்த்துங்கள்.

— ஜெயஸ்ரீ.

''அப்படின்னா... அரிசி... பச்சை காய் கறிதான்... பரவாயில்லையா. சமைக்க வேணாமா.''

''எப்ப பார் இவளுக்கு கேலிதான்.'' என்றாள் நர்மதா.

தேநீரைக் குடித்தபடி மௌனமாக அமர்ந்திருந்தாள் ரேணுகா.

சூழ்நிலையே கலகலப்பாக இருந்தது. மனசுக்குள் புது பரவசம் தெரிந்தது. மனசு கூட அதன் இடை விடாத முனகலைக் கொஞ்சம் நிறுத்தி விட்டிருந்தது.

அலுவலகத்தில் நடந்த வேடிக்கைகள்.... இப்போதைய வெளி உலக விஷயங்கள். கிரிக்கெட் என்று தினுசு தினுசாகப் பேசினார்கள். நர்மதா சமையலையும் கவனித்துக் கொண்டு, இவர்கள் அரட்டையிலும் கலந்து கொண்டாள்.

டீ. வி. நிகழ்ச்சிகளில் கொஞ்சம் பொழுது போனது. தினசரி அவளும் அவள் வீட்டில் பார்க்கிற நிகழ்ச்சிகள்தான். வழக்கமாய் இல்லாத ஈடுபாடு... இப்போது இருந்தது.

உடனே டீவியின் தினசரி நிகழ்ச்சிகள் பயனுள்ள... சுவாரசியமான.. அறுவையான.. என்று ரக வாரியாய் விமர்சனங்கள்.

சாப்பாடு எளிமையானாலும் மனசு நிரம்பியிருந்த நிறைவில்... முழுதிருப்தியைத் தந்தது.

விடை பெற்றுக் கிளம்பும் போது....... கண்கள் பனித்தன ரேணுகாவிற்கு.

''தேங்க்ஸ்.'' என்றாள் குரல் தழதழக்க.

''ச்சிய்.'' என்றாள் ரஞ்சனி.

''அடிக்கடி வாம்மா.'' என்றாள் நர்மதா. மொபெட்டில் திரும்பியபோது மனசு முழுக்க உல்லாசமாக இருந்தது.

திங்கள் அவள் அலுவலகம் செல்லவில்லை. முடியவில்லை. உடம்பு ஏனோ அனலாகக் கொதிக்க ஆரம்பித்தது.

சனி இரவு வீடு திரும்பியதும், சாப்பிடாமல் காத்திருந்த பாக்கியத்தைச் சாப்பிடச் சொன்னாள்.

ஞாயிறு பாக்கியத்திற்கு விடுமுறை. முழு நாளும் வர மாட்டாள். இவள் ராஜ்ஜியம் தான். முதல் நாளின் கலகலப்பை எதிர் பார்த்து ஏங்கவே ஆரம்பித்து விட்டது மனசு.

டீ.வி. அதன்பாட்டுக்கு இயங்கியது. பேப்பர் பிரிக்கப்படாமல் கிடந்தது. ஃபிரிட்ஜின் கதவு கூடச் சரியாக மூடவில்லை. பிறகு கவனித்து மூடினாள்.

என்ன ஆயிற்று எனக்கு. சிறுபிள்ளையா.. பக்குவமின்றி.. கைக்கு எட்டாத விஷயத்திற்கு ஆசைப்படுகிறேனா..

பிரட்டை டோஸ்ட் செய்து கஷ்டப்பட்டு விழுங்கினாள். ஜாம் கூடக் கசந்தது. இரவு பாலைக் காய்ச்சிக் குடித்தாள். மிச்சமிருந்த ஒரு ஆப்பிளைக் கடித்தாள். விளக்கை அணைக்கக் கூட மறந்து தூங்கிப் போனாள்.

காலையில் எழுந்ததும் லேசாகத் தலை வலிக்கிற உணர்வு வந்தது. எழுந்து கொள்ள முடியவில்லை. உடனே உடம்பின் ஜுரம் புலப்பட்டது.

பேசாமல் படுத்து விட்டாள்.

பாக்கியம் வழக்கம் போல எட்டு மணிக்குத்தான் வந்தாள். இவள் இருந்த நிலைமையைப் பார்த்ததும் பதறிப் போனாள்.

''என்னம்மா... என்ன ஆச்சு...''

''ஒரு ரிக்ஷா கூப்பிடு. டாக்டர் வீட்டுக்குப் போகணும்.. போற வழியில ஒரு போன் பண்ணணும் ஆபீசுக்கு..''

வீட்டைப் பூட்டிக் கொண்டு கிளம்பினார்கள்.

போகும் வழியில் மெடிகல் ஷாப்பிலிருந்து போன் செய்தாள். சிரமப்பட்டுத்தான் பேசினாள். ஸ்டெல்லா விவரம் தெரிவிப்பதாகச் சொன்னாள். ரஞ்சனிக்கும் சொல்வதாகக் கூறியதும் அங்கிருந்து டாக்டரிடம் போனாள்.

''நத்திங்.. நார்மல்தான் டெம்பரேச்சர்'' என்றார்.

ஊசி போட்டுக் கொண்டு, மாத்திரைகளுடன் வீடு திரும்ப மணி பத்தரை ஆகி விட்டது.

ரசம் சாதமாகக் கரைத்துக் கொடுத்தாள் பாக்கியம். சாப்பிட்டதும் மீண்டும் தூங்கிப் போனாள்.

மூன்றரை மணிக்குக் கண் விழித்த போது வேர்த்து விட்டிருந்தது.

அடுத்த டோஸ் மாத்திரைகளை, ஹார்லிக்ஸுடன் விழுங்கினாள். டேப்பில்

மாண்டலின் இசை ஒலிப்பதைக் கேட்டபடி, தினசரியைப் பிரித்து படிக்க ஆரம்பித்தாள்.

எதிரில் நிழலாடியது.

"ரஞ்சனி... நீயா.."

"என்னங்க.. திடீர்னு ஷாக் கொடுத்துட்டீங்க.." என்றாள் மெத்தையில் அமர்ந்தபடி.

"..லைட் ஃபீவர்.."

"நான் பயந்தே போயிட்டேன். போச் சுடா. நம்ம வீட்டு சமையலை சாப்பிட்டுட்டு ஏதாவது ஆயிருச்சோன்னு."

"பாக்கியம்.. இவங்களுக்கு பிஸ்கட்டும், டீயும் கொண்டு வா."

"வீடு நல்லா இருக்கு.." என்றாள் ரஞ்சனி சுற்றுமுற்றும் பார்த்தபடி.

பச்சை டிஸ்டம்பரில் ரூம். ஒவ்வொரு சுவரிலும் நடுவில் ஒரு புளோ அப். ஒன்று இயற்கைக் காட்சி. இன்னொன்று இரண்டு குழந்தைகள். அடுத்தது... அருவி நீர். ஒவ்வொன்றும் வாசகங்களுடன்.

'பகிரும் போதுதான் அன்பு முழுமை அடைகிறது..' என்ற வரியைப் படித்தாள்.

"ஃபண்டாஸ்டிக்..." என்றாள் ரஞ்சனி.

"டீ சாப்பிடும்மா. ஆறிடப் போவுது.." என்றாள் பாக்கியம்.

"தேங்க் யூ.."

பாக்கியம் வெள்ளையாகச் சிரித்து விட்டுப் போனாள்.

"வெரி நைஸ்..." என்றாள் டீயை உறிஞ்சியபடி.

"மனதை மலர்ச்சியாக வைத்துக் கொள்வது நம் கையில்தான் இருக்கிறது' என்ற இன்னொரு புளோ அப்பின் வாசகம் ரேணுகாவின் பார்வையில் பட்டது. வெறும் அழகுக்காக மாட்டியிருந்த அந்தப் படத்தின் முழுமையான அர்த்தமாக இதோ எதிரே ஒருத்தி இருக்கிறாள் என்று திடீரெனத் தோன்றியது.

மனசுக்குள் திடுமென ஒரு குமுறல் வந்தது. லேசாக விசிக்க ஆரம்பித்து.. பூரணமான அழுகையாக்கினாள்.

"ஏய்.. ரேணுகா.. என்ன இது.."

தோளில் சாய்த்து தட்டிக் கொடுத்தவளின் வயசு மறந்து போனது. இவள்தான் என் உறவு.. சகலமும் இவள்தான். இவளிடம் மனச் சுமை இறக்கி இளைப்பாறலாம் என்று தோன்றியது. அழுகை தணிந்து மீண்டும் விசும்பல்களாகிப் பின் முற்றுமாக மறைந்து போனது.

மனசு கனம் குறைந்து தெளிவு வந்த மாதிரி உணர்ந்தாள்.

மாண்டலின் இசை நின்று ஆட்டோ ஸ்டாப்பில் 'டொக்'கென்று ஒலித்தது.

சட்டென்று ஒரு நிசப்தம் அந்த அறையில் நிலவி, யாராவது எதையாவது பேசுங்களேன் என்று கேட்பதைப் போல் இருந்தது.

பேச ஆரம்பித்தாள் தானாகவே. எந்தத் தூண்டுதலும் இல்லாமல். அதனாலேயே வெகு இயல்பாகப் பேச்சு வந்தது. இத்தனை நாள் துக்கத்தையும் இன்றோடு கொட்டித் தீர்த்து விடுவதைப் போல. ஒவ்வொன்றாக சொல்லிக் கொண்டு போனாள். இவள் மட்டுமே அறிந்து இருந்த இவள் வாழ்வில் நிகழ்ந்த இவளைத் தற்கொலை செய்து கொள்ளத் தூண்டிய அந்த விதியை.. மணவாழ்வின் ஏமாற்றத்தை.. நிகழ்ச்சி.. நிகழ்ச்சியாக வர்ணித்தாள்.

அவளால் முடிந்தது கோர்வையாகச் சொல்ல. ஏதோ படித்த கதை ஒன்றினை.. பார்த்ததிரைப்படத்தைவிவரிப்பது போல... மூன்றாம் மனிதனின் விஷயம் போல.. தடுமாற்றம் எதுவும் இல்லாமல் விவரித்துக் கொண்டு போனாள்.

ரஞ்சனி குறுக்கிடவில்லை. பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தாள்.

எதிரே இருந்த ஒரு பெண் தன் சுய பலங்களை மறந்து காயப்பட்டு ரணம் ஆற்றும் வகை புரியாமல் அல்லல்பட்ட செய்திகளைக் கேட்கக் கேட்க தார்மீகமான கோபம் ரேணுகாவின் முகந் தெரியாத கணவன் மேல் பிரவகித்தது.

சூழ்நிலையின் கைதியாகிப் போனவள் கணவனால் உதறப்பட்டு அறிவில் நம்பிக்கை இழந்து தடுமாறி விஷங் குடித்த செய்தியைக் கேட்கும் போது இம்மாதிரி பெண்மையின் அழிவுக்கு விடிவே கிடையாதா., என்று உள்ளூரக் குமுறல் வந்தது.

முடித்து விட்டாள். இன்று தனியாளாகி.. கைவிட்ட கணவனைச் சுத்தமாய் மறக்க முயற்சித்து.. வாழ்வின் அர்த்தம் உணரப் புதுப் பயணம் கிளம்பியதைச் சொன்னாள்.

ரஞ்சனி அவள் கைகளைப் பற்றி அழுத்தினாள்.

கடிகாரத்தின் இனிய ஒலி எழும்பியது.

'வாவ்.. மணி.. எட்டு..'

"ஐயைய்யோ.. இத்தனை லேட்டாச்சு" என்றாள் ரேணுகா.

"சமையல் ஆயிருச்சும்மா. ரெண்டு பேருக்கும்" என்றாள் பாக்கியம்.

"தேங்க் யூ.." என்றாள் ரேணுகா முதல் முறையாக.

ஏனோ சந்தோஷமாக இருந்தது. சொல்லாமலேயே செய்திருக்கிறாளே.

"என் மொபெட்லயே போயிரு."

"பரவாயில்லே. பஸ் கிடைக்கும்."

"அம்மா தேட மாட்டாங்களா?"

"ம்ஹூம்.. தெரியும். சொல்லிட்டுத்தான் வந்தேன்."

சாப்பிட்டதும் கிளம்பிப் போனாள்.

இரவு நிம்மதியாகத் தூங்க முடிந்தது.

## நமுத்து விட்டால்

கார்த்திகைப் பொரி உருண்டை நமுத்து விட்டால் கவலை வேண்டாம். அரை லிட்டர் பாலை, கால் லிட்டராகச் கண்டக் காய்ச்சி, அதில் பொரி உருண்டையை உதிர்த்துப் போட்டு, 2 நிமிடங்கள் கொதித்ததும் இறக்கவும். இதைக் குளிர வைத்தோ, சூடாகவோ சாப்பிடலாம். (அவல்) பாயசம் போன்று மிகவும் ஜோராக இருக்கும்.

— பாலா.

## கோ-ஆப்டெக்ஸ்

# இல்லங்களுக்கு · எழிலூட்டும் · துணிவகைகள்











ஒவ்வொரு பெண்ணும் இல்லத்தரசி யாகிறாள்... உங்களது இல்லங்களில் அழகு மிளிர்ந்திட கோ-ஆப்டெக்ஸ் அளித்திடும் சிறந்த துணி வகைகள்— எண்ணற்ற வண்ணங்களில்.

- ☐ இதமான துவாலைகள்
- ☐ பரந்த படுக்கை விரிப்புகள்
- ☐ மனம் கவரும் மேசை விரிப்புத் துணிகள்
- ☐ புதுமை பொலிந்திடும் திரைச் சீலைத்துணி வகைகள்

**உங்கள் இனிய கனவுகள் நனவாகும் போது அதிலே கோ-ஆப்டெக்ஸின் பங்கும் உண்டு!**

**கோ-ஆப்டெக்ஸ்**
தமிழ் நாடு கைத்தறி

இந்தியாவின் உயர் விற்பனைக் கைத்தறி வகைகள்

DIPR 1089/MS/89/HTA

**எங்களது பிரத்தியேக ஆடையலங்கார அங்காடி கோலம், 243, அண்ணா சாலை, சென்னை — 2-க்கு விஜயம் செய்யுங்கள்.**

# 4

மூன்றாவது நாள் ஆபீஸ் போக முடிந்தது.

இப்போது மனநிலையே சுத்தமாக மாறிப் போயிருந்தது. முன்பிருந்த உற்சாகம் இரண்டு மடங்காகத் திரும்பி விட்டிருந்தது. வேலையில் முழு கவனத்துடன் ஈடுபட முடிந்தது. மீட்டிங்கில் வழக்கம் போல பயனுள்ள யோசனைகளைச் சொல்ல முடிந்தது. சுருக்கமாய்ச் சொன்னால் அடைபட்ட மனதின் இறுக்கத்தைத் தளர்த்தி புதுக் காற்றை சுவாசிக்கச் செய்து விட்டாள் ரஞ்சனி.

அந்த வாரமும் அவர்கள் வீட்டிற்குப் போனாள். இம்முறை ஞாயிறும் அங்கேயே தங்கினாள். திங்கள் இருவரும் சேர்ந்தே அலுவலகம் வந்தனர்.

பழகியதன் தொடர்பாக.. ரஞ்சனியின் குடும்ப விவரமும் தெரிய வந்தது.

சின்ன வயதிலேயே தந்தையை இழந்து விட்டாள் ரஞ்சனி.

''எங்கம்மாதான் என்னை வளர்த்து ஆளாக்கினது ரேணுகா. ஷீ ஈஸ் எ பிரேவ் வுமன்.. என்ன திடம் பாரேன். ஷீ ஈஸ் ரியலி பவர்ஃபுல். அப்பா தவறின பிறகு கொஞ்சங் கூட பயப்படலே. இன்னொருத்தர் தயவை எதிர்பார்க்கலே. இந்த வேலை கிடைச்சுது. என்னைப் படிக்க வைச்சாங்க. டெல்லிக்குத் தனியாவே அனுப்பி வைச்சாங்க. எனக்கு முழுச் சுதந்திரம் கொடுத்தாங்க. என்னோட முடிவுகளில் தலையிடுவதில்லை. நானா கன்சல்ட் பண்ணா இப்படிப் பண்ணலாமேன்னு சொல்லுவாங்க.

இங்கே பாரும்மா. வாழ்க்கையோட வெற்றியும், தோல்வியும் ஒரளவுக்கு நம்ம கையிலேயும் இருக்கு. உங்கப்பா போன பிறகு எனக்கு அதிர்ச்சிதான் முதல்லே வந்தது. ஆனா.. இடிஞ்சு போயிட்டா உன் நிலைமை என்ன ஆகும்?

ரெட்டை மாட்டு வண்டின்னா நல்லது தான். சுமையைப் பகிர்ந்து இழுக்கலாம். அதுக்காக ஒற்றை மாட்டு வண்டியும் இல்லாமலா போயிருச்சு?

இன்னைக்கு உன்னை என்னால முடிஞ்ச வரை வளர்த்து ஆளாக்கிட்டேன்.

பிறரோட விமர்சனங்களை விட்டுத் தள்ளு.. உனக்கு உன்னோட மனசாட்சி இருக்கு. உனக்குன்னு ஒரு நல்ல வாழ்க்கை இருக்கு. நேர்மையான வழியில அதை வாழற உரிமையும் உனக்கு இருக்கு.

அதை எப்பவும் இழந்திரக் கூடாது. பின்னால வருத்தப்படற மாதிரியான சூழ் நிலையை நாமே வரவழைச்சுக்கக் கூடாது.

இப்படிப் பலமுறை என்கிட்டே மனசு விட்டுப் பேசியிருக்காங்க.

ஷீ ஈஸ் நாட் ஒன்லி மை மதர் என்னோட உண்மையான சிநேகிதியுங்கூட.

அதனாலதானோ என்னவோ எனக்கு எப்பவுமே குழப்பம் வந்ததில்லே. தெளிவா சிந்திச்சு. செயல்பட முடிஞ்சுது. வளர்ந்த சூழ்நிலையும் அதே போல் அமைஞ்சுது.''

ரேணுகா அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

ஏதோ எனக்கு மட்டும்தான் வாழ்வில் பிரச்னைகள் என்கிற மாதிரி கூட்டுக்குள் நத்தையாய் மனஞ் சுருங்கி.. புலம்பலை ஜீவிதமாய்க் கொண்டு.. விரிந்த வானத்தின் எல்லையற்ற இன்ப வெளியைக் காணத் தவறி விட்டேன்.

எல்லோருக்கும் ஏதேதோ இடைஞ்சல்கள். சோதனைகள். அவற்றைச் சாதனையாக மாற்றிக் கொள்கிற தீவிரம்தான் வாழ்வில் வெற்றி பெறும் மனிதனுக்குத் தேவையாகிறது.

இனி எனக்குள் குழப்பம் வராது. என் எல்லை எது என்று உணர்ந்து விட்டேன். என் வாழ்க்கை என் கையில்தான் என்று புரிந்து கொண்டேன்.

ஏதோ ஒருவனைச் சார்ந்து ஒருவனுக்காக என்றில்லாமல் தூய்மையான நேசிப்பில் உலகத்தையே அரவணைக்கலாம் என்று தெரிந்து கொண்டேன்.

இதோ என் குரு. சின்னவளானாலும் இவளுக்கு என் நமஸ்காரம்.

மன இருட்டை விலக்கிப் புது வெளிச்சம் பாய்ச்சியவள்.

''என்னங்க என்னவோ பிரமை பிடிச்சாப்ல உட்கார்ந்து இருக்கீங்க..'' என்றாள் ரஞ்சனி சிரிப்புடன். ''தூக்கம் வருதா.. தாலாட்டுற மாதிரி இருக்கா.. என் பேச்சு?''

'இல்லைம்மா... விழிப்பு வந்திருச்சு' என்று சொல்ல வேண்டும் போல் இருந்தது.

புன்னகையுடன் ரஞ்சனியின் கையைப் பற்றி அழுத்தினாள் ரேணுகா.

## ஆப்பிள் ஐஸ்கிரீம்

பால் — 1 கப்,
பால் க்ரீம் — 1 கப்,
பால் பவுடர் — 4 மேசை கரண்டி,
சர்க்கரை — 4 மேசை கரண்டி,
ஆப்பிள் — பெரியது 2 (தோல் சீவி, விதை நீக்கி, துருவவும்)

செய்முறை:

எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து அடித்து ஐஸ் ட்ரேக்களில் விட்டு வைக்கவும். இரண்டு மணி நேரம் கழித்து வெளியில் எடுத்து, மீண்டும் நன்கு அடித்துக் குளிர வைக்கவும். இப்படி அடிக்கும் போது, வாசனைக்குச் சிறிது பொடித்த லவங்கத் தூள், முந்திரி கலந்து அடித்து வைக்கலாம். நன்கு செட் ஆனதும் எடுத்துப் பரிமாறவும். ஆப்பிள் சீசனில் சுலபமாக செய்து, அனைவரின் பாராட்டையும் பெறலாம்.

— ஆனந்தி.

# பலி சோறு

சுப்ரபாரதிமணியன்

**ப**லிச்சோற்றை வீட்டு ஓட்டின் மீது இறைத்தாயிற்று. கிணற்று மேட்டில் காக்கைகள் நடமாட்டமும், பார்வையும் தெரிய வேண்டாம் என்று மூலையில் இலைகள் பரப்பியாயிற்று. ஒரு பருக்கையைக் கூடப் பகிர்ந்து கொள்ள எந்தக் காக்கையும் வர வில்லை.

ஈஸ்வரிக்கு ஆறுதலாக இருந்தது. அப்பா முகம்பேய் அறைந்தது போலிருந்தது. ''உறுத் தலாக இருக்குமோ. உறுத்தலென்றால் அம்மா இறந்த ஒரு வருஷத்துக்குள் அடுத்த



திவச நாளைக்குள் இதெல்லாம் நடந்திருக்குமோ.''

அம்மாவின் திவச நாள். பூஜை போட்டாயிற்று. அம்மா படத்திற்குப் பெரிசாய் மாலை போட்டு அலங்கரித்து நாலைந்து வகைப் பலகாரங்களுடன் சோற்றுப் படையல் கூடத்தில் கிடந்தது. அப்பா துண்டால் கண்களை ஒத்திக்கொண்டார். கண்கள் தளும்பியதோ இல்லையோ ஒரு பாவனை தான் என்றிருந்தது ஈஸ்வரிக்கு. சித்தி கூட சாஷ்டாங்கமாய் நிலத்தில் விழ முயன்று குனிந்து பின் அப்பா வேண்டாம் என்ற வார்த்தைச் சொல்லவும் நின்றபடி கும்பிட்டுக் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

அதன்பின் எல்லோருக்கும் அழுகை முட்டிக் கொண்டு வந்து விட்டது. கௌரி அம்மா அம்மா என்று அலறினாள். சங்கரும் அவளைப் பார்த்து அழ ஆரம்பித்து விட்டான். ஈஸ்வரி மடியில் அவனை இருத்தித் தேற்றினாள். அப்போதுதான் ஈஸ்வரியும் அழ ஆரம்பித்தாள். சண்முகம் சித்தப்பா நகர்ந்து தேற்றினார். அப்பா பக்கம் வரவில்லை. ஆறுதல் சொல்ல வெற்று வார்த்தைகளுக்காப் பஞ்சம். அப்படி ஆறுதல் சொன்னாலும், உன் ஆறுதல் வெறும் போலித்தனம். பாசாங்கு. போ என்று வேகத்தில் யாருக்காவது வார்த்தைகள் தவறிவிட்டால் நாலு உறவினர்கள் மத்தியில் அவமானம்தானே.

''சோமு.... எதுக்கும் இன்னொரு தரம் ஈசான மூலையிலே பலிச்சோறு வெய்யேன். பிரியமிருந்தா அண்ணியோட ஆத்மா ஏதோவொரு ரூபத்தில் வந்து சோறு எடுத்துட்டுப் போகட்டும். அவங்க மனசு என்னமோ கஷ்டப்பட்டிருக்கு. அதுதான் வராமெ கண்ணாமூச்சி ஆடறாங்க.''

சித்தப்பா சொல்லியபடி அப்பாவைப் பார்த்தார். அம்மா காக்கை உருவில் வந்து பித்ருக்களுக்கான பலிச்சோற்றை வாங்கிக் கொள்வாள் என்றால் அம்மா எல்லாவற்றையும் சகித்துக் கொண்டு வாழ்ந்து செத்தது போலவே செத்தபின்னும் இருக்கிறாள் என்று அர்த்தம். ஈஸ்வரி கல்யாண வயதில், நாலைந்து வருஷமாய் வரும் போதும் இளைஞர்கள் முகம் பார்த்துத் தலை சீவி, காலில் விழுந்து கும்பிட்டுக் கொண்டிருந்தவள் இன்னும் கரையேறாத போது, அப்பாவின் மறுமணம்.

''அம்மா நீ வர வேண்டாம். உன் அங்கீகாரம் அப்பாவை இன்னும் துர்குணமாக்கும். உன்னை மூலையில் கிடத்திக் கொண்டு போனது போலவே என்னையும் திருமணமற்று எரும்பாக்கி மூலையில் தள்ளும்.''

அப்பா ஈசான மூலையில் இருந்த துவைக்கும் கல்லருகில் சென்றார். அம்மா சரியாய் நடக்க முடியாமல் இருந்தபோது மெல்ல ஊர்வது போல் வந்து துவைக்கும் கல்லில்தான் உட்கார்ந்து வானம் பார்ப்பாள். பார்வையைப் பரப்புவாள். அப்பாடா என்று பெருமூச்சையும், வார்த்தையையும் வெளிவிடுவாள். ''இந்தக் காத்தும், ஆகாசமும் போதும். நான் இன்னும் பத்து வருஷம் இருப்பேனே. ஈஸ்வரியை கரை சேர்த்திட்டாப் போதும்.....'' பனி விழுகிற நேரம் வரை உட்காரட்டுமா என்பாள். உட்கார்ந்து இருட்டு பரவினதும் மூலைக்கு வந்து விடுவாள்.

அப்பா துவைக்கும் கல்லை நீர் ஊற்றி சுத்தமாக்கினார். காக்கைகள் எச்சமிட்ட மிச்சமிருந்தது. கையால் தள்ளினார். பின்னால் வந்த சித்தி தட்டை நீட்டினாள். பலிச்சோறும், பலகாரங்களும் இருந்தன. முன்பே நாலு இடத்தில் வைத்தாயிற்று. இன்னொரு இடம் என்பது குறித்த அலுப்பு அப்பாவிற்கு முகத்தில் தோன்ற ஆரம்பித்து விட்டது. ''என்ன நீ மறு படியும் மறுபடியும் அங்க இங்கன்னு நடக்கணுமா. சும்மா இருக்கக் கூடாதா'' என்றார் சித்தியைப் பார்த்து.

ஈஸ்வரி சித்தியின் மேடான வயிற்றுப் பகுதியைப் பார்த்தாள். ஐந்தாவது மாதம். அப்பாவின் அவசரம் ஈஸ்வரிக்கு எந்தக் கோணத்திலிருந்தும் புரியவில்லை. அம்மா இறந்த மூன்றாம் மாதத்திலேயே மறுமணம். சுயபாதுகாப்பு இல்லாமல் போய்விடும் என்ற பயமா? ஊன்றுகோலாய் நிற்க மனைவியைத் தவிர வேறெதும் நிரப்ப முடியாது என்ற தீர்மானம்? இன்னும் உடம்பும், அதன் துல்லிய உணர்வுகளும் அடங்கிப் போய்விடவில்லை என்றதன் அடையாளமா?

ஒரு தரம் சித்தப்பா ஈஸ்வரியிடம் சொன்னார்: ''அவனுக்குன்னு ஒரு தடுமாற்றம், சஞ்சலம் எப்பவும் இருக்கும். அந்த ஊசலாட்டமும், புகையும் அவனோட சின்ன வயசிலிருந்தே இருந்துச்சு. கல்யாணத்திலே எல்லாம் தீர்ந்ததுன்னு நெனைச்சாலும் இல்லேன்னு அப்பப்போ நிருபிச்சிட்டிருந்தான். மூணு கொழந்தைகளை பெத்து வளர்த்து நோயாளி ஜீவனா உங்கம்மா அஞ்சு வருஷமா வாழ்ந்தாலும் இந்த அஞ்சு வருஷத்தைத் தாண்டி முந்தின பதினெட்டு

> சாதாரணமாக கொத்தமல்லி, கறிவேப்பிலை போன்றவை பிளாஸ்டிக் பையில் போட்டு குளிர்சாதனப் பெட்டியில் வைக்கப்பட்டாலும் சில நாட்கள் கழித்து வீணாகி விடும். ஆனால் அதையே ஒரு எவர்சில்வர் டப்பாவில் போட்டு வைத்தால் ஒரு மாதம் வரை புதிதாகவே இருக்கிறது. இது என் அனுபவ உண்மை.
>
> கிரிஜா.

வருஷமும் அவன் அண்ணியோட வாழலியா.... அந்த நெனைப்பு மட்டும் போதுங்கற திருப்தி வர்லே பாரு....''

துவைக்கும் கல்லின் மேல் இருந்த பலிச் சோற்றை எல்லோரும் கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். தேவதூதன் போல் ஒரு காக்கை, ஒரு பித்ரு வந்து வாங்கிக் கொள்ளட்டும், ஆசீர்வாதம் செய்யட்டும் என்று. சின்னதாய், பெரிதாய் உருவில் பட்சிகள் பல பறந்தாலும், சாஸ்திரம் காக்கைக்கு மட்டுமே பித்ருவின் ஸ்தானம் தந்திருக்கிறது. வானம் பார்த்திருந்தார்கள்.

எல்லோருக்கும் அயர்ச்சி வந்துவிட்டது. காக்கை பலிச்சோற்றை ஒரு பருக்கையாவது கொத்தியபின்தான் அனைவரும் வாயில் சாப்பாடு வைக்க முடியும். அப்பாவும், சித்தியும் உள்ளூர் உறவினர்களின் முகங்களை காணச் சகிக்காது போல தனித்திருந்தனர். அம்மா காக்கை உருவில் வந்து பலிச் சோற்றை வாங்கிக் கொள்ள மறுக்கிறாள் என்பது மட்டும் நிச்சயமாயிற்று. எல்லோர்க்கும் இதன் காரணம் தெரியும். சித்தப்பா ஈஸ்வரியை நெருங்கினார்.

''ஏதோ குத்தத்தை மனசிலே வெச்சிட்டு ஒரு பருக்கையும் எதுவும் எடுக்கலே. குத்தம் எதுன்னு நமக்குத் தெரிஞ்சதுதா....'' அப்பா முகம் திருப்பி அவரது பேச்சை நிராகரிப்பது போல் நின்றிருந்தார்.

"குத்தமுன்னு மனசு உணர்ந்துட்டா இதெல்லாம் நடக்காது. செத்தபின்னும் நிம்மதியில்லாமே ஆத்மா இருக்காது. ஈஸ்வரி நீ எதுக்கும் ஒரு வாய் சோறு உன்னோட கையாலே உங்கம்மாவுக்கு வை. உங்கம்மா உன்னோட கையாலே திருப்திப் பட்டாள்ன்னா வந்து பலிச்சோற்றை வாங்கிக் கட்டும்."

சித்தப்பா படையல் போட்டிருந்த இடத்திற்குச் சென்றார். பலிச்சோற்றை தட்டொன்றில் அள்ளிப் போட்டுக் கொண்டார். செம்பு நீரையும் ஈஸ்வரியிடம் கொடுத்தார்.

எந்தப்பக்கம் பலிச்சோற்றை இடுவது என்பதில் ஈஸ்வரிக்குக் குழப்பமாகி விட்டது. நாலு பக்கமும் இட்டாயிற்று. இப்போது திசை என்பது முக்கியமற்றுப் போய்விட்டது. ஒருமையான மனத்துடன் ஒரு கவளம்.

வாழை மரம் தென்பட்டது. சித்தியைப் போலவே காய்த்துக் கொண்டிருந்தது. அம்மா இருக்கையில் வெற்றிடத்தில் எப்படியும் வாழை மரம் இருக்கும். கிணற்றடியில் கசியும் நீர் வாழை மரம் போய்ச் சேரவும், அதன் வளர்ச்சியில் ஒழுங்கும், அழகும் திகழவும் அம்மா எப்போதும் விரும்புவாள். குலை தள்ளினபின் புகை போட்டு பழுக்க வைத்து தெரு முழுக்க என் வாழை பார் என்பாள். அந்த இடம் அம்மாவின் பிரியமான நினைவு

களுடனான ஸ்தலம்.

''அப்படியே ஏதாச்சும் வேண்டிக்கோ ஈஸ்வரி, படையல் போடு''

வாழை மரத்தடியில் நீர் தெளித்து வாழை இலை போட்டு பலிச்சோற்றை இட்டாள். எல்லோரும் மீண்டும் வானம் பார்த்தார்கள். வானம் வெளிறியிருந்தாலும் அதன் அற்புதத்தோடு இருந்தது.

சட்டென நாலைந்து காக்கைகள் வட்டமிட்டன. ஒன்று மட்டும் கீழிறங்கிக் கரைந்தது. படையல் இலை பக்கம் உட்கார்ந்து அலகால் கொத்தியது. அப்பா சித்தியைப் பார்த்தார். ''சரி வா.... எல்லார்க்கும் இலை போடலாம்...'' அவர்களின் அவசரகதி எல்லோர்க்கும் கண்ணில் பட்டது.

மறுபடியும் நாலைந்து காக்கைகள் கீழிறங்கி பலிச்சோற்றைக் கொத்த ஆரம்பித்தன. ஈஸ்வரி அவற்றையே பார்த்துக் கொண்டிருந்தாள். எது அவளின் அம்மாவின் உரு என்பது விளங்கவில்லை.

அம்மா இப்படியொரு உருக் கொண்டு விட்டாள் என்பதை நினைக்க சங்கடமாயிருந்தது ஈஸ்வரிக்கு. அம்மா இப்படி காக்கையாய்த் திரிய வேண்டாம். தீங்கற்ற ஆத்மா அது. நம்பிக்கையில் ஏதோவொன்று அம்மாவின் பித்ரு என்றாலும் அம்மா அம்மாவாகவே இருக்கட்டும் என்று மனசு வேண்டிக் கொண்டது. வீட்டு உள்ளில் இலைகள் சீராய்த் தரையில் போடப்படும் சப்தம் கேட்டது. உறவினர்கள் உள்ளே நகர்ந்து விட்டிருந்தனர்.

சித்தப்பா ஈஸ்வரியைப் பார்த்தார். ''என்னம்ழா வேண்டிட்டே... என்ன வேணுமுன்னு ஆசீர்வாதம் பண்ணச் சொன்னே''

''அடுத்த வருஷம் இந்தத் திவச நாள்ல பலிச்சோறு என் கையாலே வாங்கக் கூடாதம்மா..... எனக்கும் யாராச்சும் படையல் போட்டு பலிச்சோறு போடும்படியா அழச்சுக்கோண்ணு வேண்டிட்டேன் சித்தப்பா.''

சித்தப்பா உடம்பு குலுங்கியது போன்று திகைப்புற்றார். ஈஸ்வரி பீறிட்டுக் கொண்டு வந்த அழுகையை சேலைத் தலைப்பால் வாயை மூடி அடக்க முயன்று சித்தப்பா பக்கம் குறுகி நின்றாள்.

''சே..... என்னம்மா.... நானெல்லா இல்லியா.....''

சுவரில் சாய்ந்து பசிக்களைப்பில் தூங்கிக் கொண்டிருந்த சங்கரை எழுப்பினபடி பார்த்தார் அவளின் அப்பா. ஆறுதல் பொருட்டாவது அவர் ஈஸ்வரி பக்கம் வருவார் என சித்தப்பா எதிர்பார்த்தார். ஆனால் சங்கரைத் தோளில் சுமந்து வீட்டுக்குள் நடக்கத் தொடங்கினார்.

# குழந்தைகள் மலர்

நான் மலரம்மா பேசறேன். மொதல்ல கோயம்புத்தூர்ல சொர்ணா எனக்கு வரவேற்பு சொல்லி எழுதியிருக்கிற கடிதம் —

> எங்களைப் போன்ற சிறுமிகள் சார்பில் 'மலரம்மா' அவர்களை மலர் கொடுத்து வரவேற்கிறோம். வளர்க மலரம்மாவின் பணி!
>
> கோவை — 46, எம். சொர்ணா.



'ஏ' இதை வச்சு என்ன வரைஞ்சிடப் போறாங்க அப்படீன்னு நான் நெனச்சது தப்பாப் போச்சு. அப்பா, வந்து குவிஞ்சுது பாருங்க படங்கள்! இந்தச் சின்னச் சின்ன கைகளுக்குள் இத்தனை சித்திரத் திறமையான்னு அசந்து போயிட்டோம். அரிவாள் மணை, ஒட்டகம், மயில், வீடு... எத்தனை உருவங்களில் இந்த வளையைப் பார்த்திருக்காங்கன்னு ஆச்சர்யப்பட்டுப் போயிட்டோம்.

வெற்றி பெற்றவர்களோட படங்கள் கடைசியில இருக்கு. மூன்றோட நிறுத்திக்க முடியல. பிரசுரமாயிருக்கிற மற்ற படங்களுக்கும் அன்பளிப்பு உண்டு. சரிதானே?

இந்த மாதமும் நடந்த ஒரு நிகழ்ச்சியைச் சொல்லப் போறேன். அதை சித்ரா சந்திரன் சொல்றாங்க. கேக்கலாமா?

"ஒருமுறை, நான் என் மாமா, மாமி, அவர்களின் ஒரே மகள் அனு, அவள் அண்ணன் நாகலிங்கம், பழனி, மூர்த்தி, சீனு ஆகியோருடன் படவேடு அம்மன் திருவிழாவுக்குக் கோவிலுக்குச் சென்று இருந்தோம். அப்போது விளையாடிக் கொண்டிருந்த எங்கள் மாமா மகள் அனு. கோவிலுக்குப் பின்புறமாக சிறிது தொலைவில் இருக்கும் அல்லி குளத்திற்கு விளையாட்டாக போய் விட்டாள். அல்லிப் பூவை பறிப்பதற்காக குளத்தில் எட்டித் தவறி விழுந்து விட்டாள். ஒரு பாறாங்கல்லைப் பற்றிக் கொண்டு ஏறவும் முடியாமல், அப்பா, அப்பா என்று கத்தியிருக்கிறாள். ஜன நடமாட்டம் அவ்வளவாக இல்லாத இடம் அது. அதனால் யாருக்கும் காதில் விழவில்லை.

அவளுடைய அண்ணன் நாகலிங்கம் விளையாடிக் கொண்டே கோவில் பின்புறம் வந்திருக்கிறான். திடீரென்று யாரோ அப்பா, அப்பா என்று அழைக்கும் குரல் கேட்டு குளத்தருகே ஓடியிருக்கிறான். தன் தங்கை அனு உயிருக்குப் போராடித் தவிப்பதைப் பார்த்து அப்பாவை அழைப்பதற்காக உள்ளே வந்தால், அனு விழுந்து விட்டால் என்ன செய்வதென்று பயந்து உடனே பாறையை நன்றாகப் பிடித்துக் கொண்டு படுத்து விட்டான். தன் கால்கள் இரண்டையும் தண்ணீரில் அனு கைக்கு எட்டும்படி தொங்க விட்டு, "அனு, என் காலை உன்

# மானம்

அவள் சொன்னது 'பதினாலு பதினஞ்சு' என்றுதான். ஆனால் அவளுடைய பெண்ணுக்கு வயது பதினேழு பதினெட்டுக்குக் குறைவாக இருக்குமென்று தோன்றவில்லை. அவர்கள் எப்போதும் வயதைச் சற்றுக் குறைத்துத்தான் சொல்வார்கள். பாஸந்தி எப்படித்தான் சேரியில் இந்தப் பெண்ணை வளர்த்தாள்? இவ்வளவு ஆரோக்கியமும் அழகும் இந்தப் பெண்ணுக்கு எங்கிருந்து கிடைத்தது?

சுமித்ராவுக்குத் தன் ஆச்சரியத்தை மறைத்துக் கொள்ள முடியவில்லை. அவள் சொன்னாள், "உம் பொண்ணு ரொம்ப அழகா இருக்காளே, பாஸந்தி! உம் பொண்ணுன்னே சொல்ல முடியாது!"

கொஞ்சம் கர்வமும், கொஞ்சம் வெட்கமும் கலந்த சிரிப்புச் சிரித்துக் கொண்டு பாஸந்தி சொன்னாள், "இது சின்னக் கொளந்தையா இருந்த காலத்திலேருந்து எல்லாரும் அப்படித்தான் சொல்றாங்க, அம்மா. இவ இவளோட அப்பாவைக் கொண்டிருக்கா. அவரு ரொம்ப அளகா இருப்பாரு. பாம்பு கடிச்சுச் செத்துப்போயிட்டாரு. அதுக்காக மாமியாரு என்னைப் பிடுங்க ஆரம்பிச்சா, நானே பாம்பாகி அவரைக் கடிச்ச மாதிரி. அவ கொடுமை பொறுக்காமதான் ஒரு நாள் கொளந்தையைத் தூக்கிக்கிட்டு வெளியே கிளம்பிட்டேன். சேரிக்காரங்க இவளோட அப்பாவைப் பார்த்ததில்லையே, அதனாலே அவங்க கேலி செய்யறாங்க... நான் ஒரு பாபு வீட்டுப் பொண்ணைத் திருடிக்கிட்டு வந்துட்டேனாம்!"

சுமித்ரா சிரித்துக் கொண்டு சொன்னாள்: "எனக்கும் அப்படித்தான் தோணுது. நீ இவ்வளவு நாளா வர்றியே, இப்படியொரு பொண்ணு இருக்காங்கிறதைச் சொன்னதே இல்லையே!"

பாஸந்தியின் முகத்திலிருந்த பெருமிதம் இப்போது மறைந்து விட்டது; அவள் சொன்னாள்: "இவ சின்னப் பெண்ணாயிருந்த போது இவளையும் கூட்டிக்கிட்டுத்தாம்மா வீடுகளுக்குப் போவேன். பெரியவளானப்புறம் இவளுக்கு வர இஷ்டமில்லே. 'நான் வீட்டிலே இருந்துக்கிட்டு வீட்டு வேலையெல்லாம் பார்த்துக்கிறேம்மா. பாபுமார் வீட்டுக்கெல்லாம் வர வெட்கமாயிருக்கும்மா'ங்கிறா. சரின்னு வீட்டிலேயே விட்டுட்டுப் போயிக்கிட்டிருந்தேன். ஆனால் இப்போ ஆபத்து வந்திருக்கு... அதான் சொன்னேனே உங்ககிட்டே. நீங்க மனசு வெச்சு இவளுக்கு இடம் கொடுக்கணும்மா!"

பாஸந்தி தன்னிடம் 'இவ்வளவு நாள்' வேலை பார்த்ததாக சுமித்ரா சொன்னது வெறும் பேச்சுக்குத்தான். உண்மையில் பாஸந்தி வேலை பார்த்தது ஒரு சில மாதங்கள்தான். சுமித்ராவின் வழக்கமான வேலைக்காரி சொந்த ஊர் போயிருந்த நாலு மாத காலம் அவள் தனக்குப் பதிலாக பாஸந்தியை வைத்துவிட்டுப் போயிருந்தாள். பாஸந்தி யோக்கியமானவள்; நன்றாக வேலை செய்வாள். அதனால்தான் சுமித்ராவுக்கு அவளை இன்னும் ஞாபகமிருந்தது.

பாஸந்தியின் விசித்திரமான கோரிக்கை, சுமித்ரா அவளுடைய பெண்ணைத் தன்னிடம் வைத்துக் கொள்ள வேண்டுமாம். சேரியிலுள்ள போக்கிரிப் பையன்கள் அவளைத் தொந்திரவு செய்கிறார்களாம்.

பாஸந்திக்கு உழைத்து வயிறு வளர்க்க வேண்டும். பெண்ணைக் கட்டிக் காத்துக் கொண்டு வீட்டில் உட்கார்ந்திருந்தால் நடக்காது.

பல வீடுகளில் வேலை செய்து கொண்டிருந்தவளுக்கு ஒரு நல்ல வேலை கிடைத்தது — ஒரு பணக்கார வீட்டுக் கிழவியைக் கவனித்துக் கொள்ளும் வேலை. சாப்பாட்டுடன் எழுபது ரூபாய் சம்பளம். கிழவிக்கு வாத நோய்; நடக்க முடியாது; ஆனால் ஷோக்குப் பேர்வழி அவள். அவளுக்கு சோப்புத் தேய்த்துக் குளிப்பாட்ட வேண்டும், வாசனைத் தைலம் தேய்த்துத் தலை சீவி விட வேண்டும், பவுடர் தடவி விட வேண்டும், நாள் முழுதும் அவளுக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்க வேண்டும்.

பாஸந்தி விடியற்காலையில் ஐந்து மணிக்கு வேலைக்குப் போய் இரவு பத்து மணிக்கு வீடு திரும்புவாள். அவளுடைய பெண் சேரியிலேயே யார் வீட்டிலாவது தங்கியிருப்பாள். பாஸந்தி அவளை வீட்டுக்குக் கூட்டி வருவாள்; பாஸந்தி தன் இரவுச் சாப்பாட்டைக் கையில் கொண்டு வந்து விடுவாள். அது தாய், பெண் இருவருக்கும் சாப்பிடப் போதும்.

இந்த மாதிரி வாழ்க்கை வசதியாகத்தானிருந்தது. பகல் ஒரு வேளை மட்டும் பெண் கொஞ்சம் சாதம் வடித்துச் சாப்பிட்டுக் கொள்வாள். சம்பளத்தில் பெரும்பகுதி மிச்சம். கொஞ்சம் பணம் சேர்ந்ததும் பெண்ணின் கல்யாணத்தைச் செய்து விடத் திட்டமிட்டிருந்தாள் பாஸந்தி.

---

**வங்காளி மூலம்:**

**ஆஷா பூர்ணா தேவி**

**தமிழாக்கம்: சு. கிருஷ்ணமூர்த்தி.**

ஆனால் இந்த வாழ்க்கையிலும் இப்போது ஓர் இடைஞ்சல் வந்து விட்டது.

ஒரு ஞானி போல் பேசத் தொடங்கினாள் பாஸந்தி, ''சாமி ரொம்பக் கருமி, அம்மா. கொடுத்தாலும் முழு மனசோட கொடுக்க மாட்டான். ஒரு பக்கம் கொடுத்துட்டு மறு பக்கம் பிடுங்கிக்குவான். இப்போ அந்தக் கெளவிக்கு ராத் தூக்கமில்லே. ராத்திரிப் பூரா முளிச்சுக்கிட்டே இருந்துக்கிட்டு 'எனக்கு இது வேணும்', அது வேணும்'னு பிள்ளை மாட்டுப் பொண்ணுகளை எழுப்பறா. 'விளக்கைப் போடு, விசிறியை நிறுத்து, தண்ணி கொடு'ங்கறா. பகல் பூரா உழைச்சுட்டு வர்ற பிள்ளைகளாலே ராத்தூக்கம் முழிக்க





முடியுமா? அதனாலே அவங்க என்னை ராத்திரிலேயும் அங்கேயே தங்கிடச் சொல்றாங்க. கூடப் பத்து ரூபா தராங்களாம். நான் என்ன பண்ணுவேன், சொல்லுங்கம்மா! நான் இந்த வேலையை நம்பி முன்னே பார்த்த வேலைகளை விட்டுட்டேன்....''

''ஐயோ பாவம்!'' என்றாள் சுமித்ரா.

''சும்மா 'பாவம்'னு சொல்லித் தட்டிக் கழிச்சுடாதீங்கம்மா. நான் உங்க காலடியிலே வந்து விழுந்துட்டேன். நீங்கதான் எனக்குக் கதி!''

சுமித்ராவுக்குப் பாஸந்தியின் நிலை புரிந்தது. அவள் மேல் அனுதாபமும் ஏற்பட்டது. ஆனால் பாஸந்தி ஏன் தன்னைப் பிடித்துக் கொண்டிருக்கிறாள் என்பது மட்டும் அவளுக்குப் புரியவில்லை. பாஸந்தி அவளுடைய வீட்டில் வேலை செய்தது ஒரு சில மாதங்கள்தான். பாஸந்தி முன்பு வேலை செய்து வந்த மற்ற வீடுகளை ஏன் அணுகவில்லை?

அல்லது பாஸந்தியை இரவிலும் தங்கச் சொல்லும் வீட்டுக்காரர்களே ஏன் அவளுடைய பெண்ணையும் அங்கே வைத்துக் கொள்ளக் கூடாது?

அதைத்தான் சுமித்ரா கேட்டாள்.

பாஸந்தி வருத்தத்தோடு சொன்னாள், ''நான் அவிங்களைக் கேக்காமே இருப்பேனா அம்மா? ஆனா பாபுமார் ரொம்பக் கடுமையானவங்க. ஒப்புத்துக்கல்லே. 'வீடு நிறைய வேலைக்காரங்க நடமாடறாங்க. இங்கே ஒரு வயசுப் பொண்ணை வச்சுக்க முடியாது'ன்னு சொல்லிட்டாங்க. அதிலேருந்து நானும் எனக்குத் தெரிஞ்ச ஒவ்வொரு வீடா ஏறி எறங்கறேன். ஒவ்வொருத்தரும் ஏதாவதொரு சாக்குச் சொல்லித் தட்டிக் கழிக்கறாங்க. பொண்ணு மூஞ்சியைப் பார்த்தாவது இரக்கப்படுவாங்களோன்னு நான் இவளையும் கூட்டிக்கிட்டு அலையறேம்மா!''

சுமித்ரா தனக்குள் சொல்லிக் கொண்டாள்: ''அதுதான் நீ செய்யற பிசகு. பெண்ணைப் பார்க்காமலிருந்தால் ஒரு சமயம் யாராவது அடைக்கலமளிக்க முன் வரலாம். நெருப்புச் சுடர் மாதிரி இருக்கிறாள் இவள். இவளை வைத்துக் காப்பாற்ற யார் முன் வருவார்கள்?''

அந்தப் பெண் வராந்தாவின் கோடியில் நின்று கொண்டிருந்தாள். அவள் வலை வலையாகப் போய்விட்ட ஒரு புடைவையும் நடைபாதைக் கடையில் வாங்கிய மட்ட ரகபிளவுசும் அணிந்திருந்தாள். இந்த உடையிலேயே அவளுடைய அழகு சுண்டியிழுத்தது. ஒரு தடவை பார்த்தவர்களை மறுபடி பார்க்கத் தூண்டியது. இந்தப் பெண்ணுக்கு நல்ல சாப்பாடும், துணி மணியும் கிடைத்தால் இன்னும் எவ்வளவு அழகாயிருப்பாள்!

தன் பழைய புடைவைகள் சிலவற்றை அந்தப் பெண்ணுக்குக் கொடுக்கத் தீர்மானித்தாள் சுமித்ரா. என்னென்ன கொடுப்பது

## இரவோடு...

உங்கள் வீட்டுத் 'தினசரி காலண்டரி'ல் தேதி மாற்றுவதை, முதல் நாள் இரவே மாற்றி விடுங்கள். இதனால் (மாத) அமாவாசை, கிருத்திகை, பூசம் போன்ற சிறு சிறு விசேஷங்களைத் தெரிந்து கொள்ள உதவுகிறது. இதனால் நாம் மறுநாள் செய்ய வேண்டிய வேலைகள், சமையல் முறை, பூஜை வேலைகள் போன்றவற்றை முன்கூட்டியே திட்டமிட்டுச் செயல்பட உதவியாக இருக்கும்.

— பாலா.

என்பதையும் முடிவு செய்து விட்டாள். அவளுடைய சிவப்புப் பூப் போட்ட ஜார்ஜெட் புடைவை கொஞ்சம் கொஞ்சம் நைந்து போய் விட்டது. இருந்தாலும் அதன் பளபளப்பு குறையவில்லை. அந்தப் புடைவையைக் கொடுக்கலாம். அப்புறம் அந்த நீலக் கலர் பங்களூர்ப் புடைவை நன்றாகத் தானிருக்கிறது; இருந்தாலும் ரொம்பப் பழைய மோஸ்தராகி விட்டது. அதையும் கொடுக்கலாம். அப்புறம் நிறைய உடுத்திக் கொண்டு விட்ட பிரிண்டெட் புடைவையும் இரண்டு கொடுக்கலாம். ரவிக்கைதான் நிறைய இருக்கிறது. அவளுடைய ரவிக்கை அந்தப் பெண்ணுக்குச் சரியாயிருக்கும்.

தன் புடைவையைக் கட்டிக் கொண்ட பின் அந்தப் பெண் பார்க்க எப்படியிருப்பாள் என்பதை மனக் கண்ணால் பார்த்துக் கொண்டாள் சுமித்ரா.

சில நாட்களுக்கு முன் ஒரு சேல்ஸ் கேர்ல் ஏதோ ஒரு கம்பெனியின் முகப் பவுடரை சுமித்ராவின் தலையில் கட்டி விட்டிருந்தாள். அதையும் அந்தப் பெண்ணுக்குக் கொடுத்து விட முடிவு செய்தாள் சுமித்ரா.

ஆகா, இவ்வளவு அழகான பெண் சேரியில் கிடக்கிறாளே! பாவமாயிருந்தது சுமித்ராவுக்கு.

பாஸந்தி சொன்னாள், ''இந்தப் பொண்ணை வச்சுக்கிட்டுப் புலியோட குகையிலே இருக்கேம்மா, பாம்புப் புத்துலே வாசம் பண்ணிக்கிட்டிருக்கேன். இவ்ளோட அழகுதான் ஆபத்தாயிருக்கு.''

புலியிலிருந்தும் பாம்பிலிருந்தும் அந்தப் பெண்ணை எப்படிக் காப்பாற்றுவதென்று சுமித்ராவுக்குத் தெரியவில்லை. ஆனால் அவள் நல்ல புடைவையும் ரவிக்கையும் கொடுத்தால் அந்தப் பெண்ணின் கவர்ச்சி தான் அதிகரிக்கும். அவளுடைய ஆபத்தும் அதிகமாகும். இது புரியவில்லை சுமித்ராவுக்கு.

சுமித்ரா பேசாதிருப்பதைக் கண்டு பாஸந்தி நினைத்து விட்டாள், அம்மா தன் வேண்டுகோளுக்கு இணங்கி விட்டதாக. 'மௌனம் சம்மதத்துக்கு அடையாளம்.' ஆகவே அவள் ஆர்வத்தோடு சொன்னாள்,

''அப்படீன்னா இன்னைக்கே இவளை இங்கே விட்டுட்டுப் போகவா, அம்மா? வீட்டு வேலையெல்லாம் செய்வா. சமையலறையிலே வேலை செய்ய விட்டீங்கன்னா சமையலும் செய்வா. நீங்க சாப்பிட்டு மிஞ்சினதைத் தின்னுட்டுக் கிடப்பா....''

சுமித்ரா மெதுவாக இடைமறித்தாள், ''வீட்டு வேலையைப் பத்தி ஒண்ணுமில்லேம்மா. அதுக்கு வேலைக்காரி இருக்கா. எங்க ரெண்டு பேருக்கு என்ன பெரிய சமையல்? பாபுவை ஒரு வார்த்தைக் கேட்காமே....''

அம்மா மனசு இளகி விட்டது என்று பாஸந்திக்குப் புரிந்து விட்டது. இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு அவள் சொன்னாள், ''பாபுவை எதுக்குக் கேக்கணும்மா? இந்தக் குடும்பத்திலே நீங்கதான் ராணி. நீங்க சொல்லிட்டா பாபு கூடாதுன்னு சொல்லுவாரா? உங்க வீட்டிலே ஆம்பிளை வேலைக்காரன், சமையல்காரன் யாருமில்லே. நீங்க மட்டுந்தான். அதனாலே தான் உங்க வீட்டிலே இவளை விட்டு வைச்சா எனக்கு நிம்மதியா இருக்கும். நீங்க மறுக்காதீங்கம்மா! சரி, நாளைக்கு நான் இவளைக் கூட்டிக்கிட்டு வந்து விடறேம்மா... ஜயி, அம்மாவைக் கும்பிடு. இனிமேல் இவங்கதான் உன்னோட அம்மா. இவங்க சொல்ற வேலையைச் செஞ்சுக்கிட்டு இங்கேயே இருக்கணும் உங்க கல்யாணம் நடக்கற வரையிலே....''

சுமித்ராவுக்கு இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள இஷ்டமில்லைதான்; ஆனால் மறுக்கவும் வாயெழவுமில்லை. அவள் ஏதாவது சாக்குச் சொல்லித் தட்டிக் கழிக்க முயன்றாள். ''உம் பொண்ணுக்கு இங்கே இருப்புக் கொள்ளுமா என்னவோ....''

''அதென்ன அப்படிச் சொல்றீங்க? உங்க கிட்டே இருக்கறதுக்குக் கொடுத்து வைக்கணுமே! சேரியிலே இருக்கற விடலைப் பசங்க இவளைப் பாத்தாச் சீட்டியடிக்கறாங்க. ஆபாசமாப் பேசறாங்க. குழாயிலே தண்ணி எடுக்கப் போனா மேலே வந்து இடிக்கறாங்க... பயந்து சுருங்கிப் போயிட்டா இவ... இனிமேல் அங்கே இவ தனியா இருந்தால்....''

பாஸந்தி புடைவைத் தலைப்பால் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு சொன்னாள், ''நான் காரணமில்லாமேயா உங்களை வந்து கொஞ்சறேம்மா? நான் நாலு வீட்டில் வேலை செஞ்சு பொளக்கிறவ தான். இருந்தாலும் ஒரு பொம்பிளைக்கு மானம் இருக்கில்லையா? நீங்க படிச்சவங்க. உங்களுக்கு எல்லாம் புரியும். அந்த மானத்தைக் காப்பாத்தற பொறுப்பு உங்களுது.''

பாஸந்தியின் வேண்டுகோள் சுமித்ராவின் மனிதத் தன்மைக்கு ஒரு சவால்.

''இதோ பாரு. நம் பொண்ணோட மானத்தைக் காப்பாத்தறது என் பொறுப்பு இல்லே. என்னாலே முடியாது!'' என்று அவள் சொல்லிவிடலாந்தான். இருந்தா


ஹா!
குதூகலமான குழந்தை
Tinycare
● சுகாதாரமானது
● அதிகமான ஈர்ப்புத் தன்மை உடையது
● வசதியானது
100% காட்டன்
Tinycare®
NAPPIES
முழுவதும் பருத்தி நூலாலான நாபகின்கள் (குழநதை களுககானவை). தீஙகற்றவை சிறநத பாதுகாபபளிப்பவை. புதிதாகப பிறநத குழந்தைகளுக்காகவே சிறப்பாகத் தயாரிககப்பட்டவை.
டைனிகேர் நாப்பி- தாய்மாருக்கும் குழந்தைகளுக்கும் மகிழ்வூட்டுபவை
உன்னத முறையில் தயாரிப்பவர்கள்:
சுசிதா இண்டஸ்ட்ரீஸ், பெஙகளூர்-560 002
Supraja SI-1-89

லும் சொல்ல வாயெழவில்லை அவளுக்கு.

மிகவும் தயங்கி விட்டு ஒப்புக் கொண்டாள்.

மகிழ்ச்சி மிகுதியில் அழுது விட்டாள் பாஸந்தி. அவள் சுமித்ராவின் கால்களைத் தொட்டுத் தன் தலையில் ஒற்றிக் கொண்டு சொன்னாள், ''நீங்க ஒத்துக்குவீங்கன்னு எனக்குத் தெரியும்மா. நீங்க சாட்சாத் பகவதிதான்...! எத்தனை வீட்டிலே ஏறி எறங்கினேம்மா! ஒருத்தரும் காது கொடுத்துக் கேக்கல்லேம்மா என் கஷ்டத்தை! சரி, இப்போ இவ இங்கே இருக்கட்டும்மா. ராத்திரி வேலை முடிஞ்சதும் வந்து கூட்டிக் கிட்டுப் போறேன். நாளைக் காலையிலே இவளோட துணிமணிகளோட இவளைக் கொண்டு வந்து விடறேன்...''

''இனிமேல் இந்தப் பெண்ணுக்குத் துணி மணிப் பஞ்சம் இருக்காது'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் சுமித்ரா.

பாஸந்தி போன பின் சுமித்ரா தன் அலமாரியைத் திறந்து பாஸந்தியின் பெண்ணுக்குக் கொடுப்பதற்குத் துணிமணிகள் பொறுக்க ஆரம்பித்தாள். சில நாட்கள் கழித்துப் பெண்ணைப் பார்க்க வரும் போது திடுக்கிட்டுப் போய் விடுவாள் பாஸந்தி. பெண் அழகி மட்டுமல்ல, அவளுடைய தோற்றத்தில் ஒரு கம்பீரம், ஒரு நளினம் இருந்தது. சுமித்ரா அவளுக்கு ஒரு புதிய வாழ்வைக் கொடுப்பாள், அவளுக்குப் படிப்பு கற்பித்து...

தன் சக்தியின் எல்லை தெரியாமல் பகற் கனவில் ஆழ்ந்தாள் சுமித்ரா...

ஆனால் அவள் கணவன் மகிதோஷுக்குத் தெரியும், அவளுக்கு எவ்வளவு முக்கியத்துவம் அளிக்கலாமென்று.

அவன் ஆபீசிலிருந்து வந்து விஷயத்தைக் கேட்டதும் அவளைக் கோபித்துக் கொண்டான். ''வாக்குக் கொடுத்துட்டியா? வாக்குக் கொடுக்கறதுக்கு முன்னாலே என்னை ஒரு வார்த்தைக் கேட்கணும்னு கூடத் தோணல்லியா உனக்கு?''

சுமித்ரா திக்கித் திக்கிச் சொன்னாள், ''அவ ரொம்பக் கெஞ்சினா...''

''கெஞ்ச மாட்டாளா? காரியத்தைச் சாதிக்கணும்னா அவங்க காலைப் பிடிச்சுக்குவாங்கதான்! அதுக்காக இவ்வளவு பெரிய பொறுப்பை ஏத்துக்க முடியுமா? அதெல்லாம் நடக்காது!''

சுமித்ரா சொன்னாள், ''அந்தப் பொண்ணு பாவம்! சேரியிலே இருக்க முடியல்லே. நல்ல பொண்ணா இருக்கக் கண்டு தான் அங்கே இருக்கப் பிடிக்கல்லே அவளுக்கு. கெட்டவளாயிருந்தால் எப்பவோ கெட்டுப் போயிருப்பா. தெரிஞ்சு அந்தப் பொண்ணைப் போக்கிரிகள்கிட்டே ஒப்படைக்கலாமா?''

''உலகத்திலே எவ்வளவோ நடக்கறது. அது எல்லாத்துக்கும் நீ பொறுப்பேத்துக்க முடியுமா?''

''எல்லாத்துக்கும் பொறுப்பேத்துக்க முடியாதுதான். யாராவது ஒருத்தருக்காவது ஏத்துக்கலாமே!''

''உன் கவிதையை நிறுத்திக்க! முன்பின் யோசிச்சுக் காரியம் செய்யணும்... அந்தப் பொண்ணைப் பார்த்தேன். கீழ் மட்டத்து வீட்டுப் பொண்ணு ரொம்ப ஒழுங்காத்தான் இருந்துடுமாக்கும்!''

சுமித்ராவின் முகம் கோபத்தால் சிவந்தது. அவள் சொன்னாள், ''அவங்க எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். நீங்க இவ்வளவு மட்டமா நடந்துக்க வேண்டாம்! அவங்க நிஜமாவே கெட்டவங்களா இருந்தால் அவ தன் பொண்ணுக்காக வந்து இவ்வளவு கெஞ்சி அழுவாளா?''

''ஏதாவது திட்டம் போட்டிருக்கலாம்.''

''என்ன திட்டம் இருக்க முடியும்?'' சுமித்ரா குரலைத் தாழ்த்திப் பேசினாள், ''எல்லா விஷயத்தையும் கேட்டால் நீங்களும் உதவி செய்ய மறுக்க மாட்டீங்க. சேரியிலே இருக்கற சோதாக்களோட தொந்தரவு தாங்க முடியல்லியாம். 'நீ ஒரு நாள் வேலையிலேயிருந்து திரும்பி வர்றப்ப நான் உத்தரத்திலேயிருந்து கயித்திலே தொங்கிக் கிட்டிருப்பேன்'னு பொண்ணு அம்மா கிட்டே சொல்லுதாம்.''

''அப்படீன்னா அம்மாக்காரி ஏன் அந்த வீட்டிலே வேலை செய்யணும்?''

''நல்லாயிருக்கே நீங்க சொல்றது! வேலை பார்க்கல்லேன்னா அவங்க எப்படி சாப்பிடுவாங்க? பணம் சம்பாதிச்சாத் தானே பொண்ணுக்குக் கல்யாணம் பண்ணி வைக்க முடியும்!''

''ஆமா, பத்துப் பாத்திரம் தேய்க்கற வேலைக்காரியோட பொண்ணு கல்யாணத்துக்குப் பல ஆயிரம் ரூபா வேணும்!'' என்று ஏளனமாகச் சொன்னான் மகிதோஷ்.

அவனுடைய ஏளனம் சுமித்ராவின் மனத்தைப் புண்படுத்தியது. அவள் சொன்னாள், ''அவ வீட்டிலேயே உட்கார்ந்துக் கிட்டுப் பொண்ணைக் காவல் காத்தாலும் காப்பாத்திட முடியுமா? போக்கிரிகள் அவ கண்ணுக்கு நேரேயே பொண்ணை இழுத்துக்கிட்டுப் போயிடுவாங்க.''

மகிதோஷ் மசியவில்லை. அவன் சொன்னான், ''ஓ, உன் மனசை இளகச் செய்யறதுக்காக நிறையவே பேசியிருப்பா போலிருக்கு! அவங்க பேச்சை விடு. அவங்களுக்குக் கற்பனை செஞ்சு நிறையக் கதை

## செலவு பாதி...

திராட்சை ஒரு கிலோ... நிறைய திராட்சை வாங்கி, அலம்பி, தனித்தனியாகப் பிரித்து, மெல்லிய மஸ்லின் துணியில் பரப்பி வெயிலில் உலர்த்துங்கள். சில தினங்களில் நன்கு சுருங்கி, காய்ந்து விடும். விரல்களின் இடுக்கில் வைத்து, தேய்த்தால், தோல் உடையாமல் இருக்க வேண்டும். இந்தப் பதத்தில் எடுத்து, பாட்டிலில் போட்டு மூடி வைக்கவும். உலர்ந்த திராட்சை ரெடி. செலவு பாதியாகும்.

— ஆனந்தவல்லி.

## சோளம்...

சோள மாவு உடலுக்கு மிகவும் ஆரோக்கியமானது. (ஜவ்வரிசி போல் வெள்ளையாக இருக்கும் சோளம்). சிலர் அதில் சப்பாத்தி செய்து சாப்பிடுவர். சோளத்தை வாங்கி மிஷினில் மாவாக அரைத்தால் அரிசி மாவைப் போல் கரகர வென்று இருக்கும். நாம் அரிசி மாவில் செய்யும் கார அடை, முறுக்கு வெல்ல அடை இவைகளுக்குச் சோள மாவை போட்டு செய்தால் உடலுக்கும் நல்லது, மிகவும் ருசியாகவும் இருக்கிறது.

— வத்சலா.

சொல்லத் தெரியும். அவ உன்கிட்டே பொண்ணை விட்டுட்டுப் போய், 'எம் பொண்ணை அவங்க வீட்டிலே பலவந்தமா நிறுத்தி வச்சிருக்காங்கன்'னு போலீசிலே புகார் பண்ணலாம்.''

''அவங்களுக்குக் கற்பனை சக்தி இருக்கோ இல்லையோ, உங்களுக்கு நிறைய இருக்கு! இந்த யோசனை உங்களுக்கு எப்படித் தோணித்து?''

''ஏன் தோணாது? நாங்கள்ளாம் உன் மாதிரி கண்ணுக்குப் பட்டை கட்டிப் பார்வையை மறைச்சுக்கிட்டுத் திரியல்லே. இந்த ஊரிலே இந்த மாதிரி எவ்வளவு வித மோசடி தினம் நடக்கறது, தெரியுமா உனக்கு? அப்போ இந்தப் பொண்ணே உன்னோட கண்ணியங்கற போர்வையைக் கிழிச்சு, ''ஆமாங்க, இவங்க என்னை வேலை செய்யக் கூட்டிக்கிட்டு வந்தாங்க. இப்போ வெளியே போக விடாமல் வீட்டிலே அடைச்சு வச்சிருக்காங்க'ன்னு சொல்லுவா. என் மேலேயும் அவதூறு சொல்லத் தயங்க மாட்டா.''

''அதனாலே அவளுக்கென்ன லாபம்?''

ஏளனமாகச் சிரித்தான் மகிதோஷ். ''நீ இப்பத்தான் உலகத்திலே வந்து பிறந்திருக்கறது மாதிரி பேசறியே! லாபம் என்னவா? நம்ம காதைத் திருகிக் காசு பிடுங்கறது தான்! அவளைக் கிண்டல் பண்றாங்கன்னு சொன்னியே, அவங்களே இந்தப் பொண்ணுக்கு உதவியா இருக்கலாம். அவங்க நம்ம வீட்டு வாசல்லே வந்து சப்தம் போடுவாங்க. அசிங்கமாப் பேசுவாங்க. மிரட்டுவாங்க... ஊஹூம், இந்தப் பொண்ணை இங்கே வச்சுக்கறது நடக்காது! அனுப்பிடு உடனே! ராத்திரி அம்மாக்காரி வர்ற போது சொல்லிடு, 'பாபுவுக்கு இஷ்டமில்லே'ன்னு.''

''அப்படீன்னா, இந்தக் குடும்பத்திலே எனக்கு ஒரு உரிமையுமில்லேன்னு நான் அந்தப் பாத்திரந் தேய்க்கற வேலைக்காரி கிட்டே ஒத்துக்கணும், இல்லையா?''

மகிதோஷ் சுமித்ராவின் பேச்சுக்கு முக்கியத்துவம் அளிக்கவேயில்லை. அவன் அலட்சியமாகக் கூறினான், ''ஒரு ஆள் கிட்டே உன் மதிப்பு குறைஞ்சுப் போச்சுன்னா என்ன பெரிய மோசம்? கவிதை பண்றதை விட்டுட்டு நடக்கற காரியத்தைப் பாரு. நான் சொன்ன மாதிரி நடந்தா நீ என்ன செய்வே சொல்லு!''

''அப்படியெல்லாம் நடக்கும்னு ஏன் நினைக்கணும்? வேலைக்காரி சொல்றது நிசந்தான்னு வச்சுக்கங்களேன்.''

''அதையெல்லாம் விட்டுத் தள்ளு. வேலைக்காரியோட பிரச்னையை அவ கவனிச்சுக்கட்டும். சேரியிலே அக்கம் பக்கத்து ஜனங்ககிட்டே சொல்லி வைக்கட்டுமே!''

''சேரிக்காரங்ககிட்டே சொல்லி வைச்சா அவங்க இந்தப் பொண்ணோட மானத்தைக் காப்பாத்தற பொறுப்பை ஒத்துப்பாங்களாக்கும்?''

''ஏன் ஏத்துக்க மாட்டாங்க? அவங்க எல்லாருமே கெட்டவங்க இல்லியே! அவங்கள்ளேயும் குடும்பஸ்தங்க, குழந்தைக் குட்டிக்காரங்க இருக்காங்க. அவங்க எல்லாரும் ஒண்ணு சேர்ந்தால் போக்கிரிப் பசங்க எம்மாத்திரம்?''

''அதாவது, அந்தச் சேரிக்காரங்ககிட்டே உங்களுக்கு இருக்கறதை விட நிறைய மனிதத் தன்மை இருக்குங்கறீங்க, அப்படித் தானே?''

''நீ என்ன வேணும்னாலும் சொல்லிக்க. மொத்தத்திலே நான் உன்னோட பாஸந்தியோட பொண்ணை இங்கே வச்சுக்க சம்மதிக்க மாட்டேன்! இதிலே மோசடியொண்ணும் இல்லேன்னாலும் இந்தப் பொண்ணு இங்கே இருந்துகிட்டே ஏதாவது தப்புத் தண்டா பண்ணலாம்.''

சுமித்ரா கேலியாகச் சிரித்துக் கொண்டு கேட்டாள், ''யாரோட தப்புத் தண்டா பண்ணுவா? நம்ம வீட்டிலேதான் வேலைக்காரங்க யாருமில்லியே!''

கடகடவென்று சிரித்தான் மகிதோஷ். ''ஏன், வீட்டுக்கார அய்யாவோட பண்ணலாமே! தலையைக் கிறுகிறுன்னு சுத்த வைக்கற அழகுன்னா!''

அதே கேலித் தொனியில் சுமித்ரா சொன்னாள், ''அப்படீன்னா அந்தப் பொண்ணை இங்கே வச்சுக்கறது ரொம்ப அவசியம். வீட்டுக்கார அய்யா தங்கமா பித்தளையான்னு தெரிஞ்சு போகும்!''

மகிதோஷுக்குக் கோபம் வந்து விட்டது. ''வீண் பேச்சை விடு! பொண்ணோட அம்மா வர்ற போது அவகிட்டே தெளிவாச் சொல்லிடு. 'இங்கே உன் பெண்ணை வச்சுக்க முடியாது'ன்னு.''

''சொல்ற பொறுப்பை நீங்க ஏத்துக்கங்க.''

''நானா? நான் ஏன் சொல்லணும்? வேலைக்காரிகளோட நான் பேசறதுண்டா? என்ன சொல்லணுமோ அதை நீதான்









AMRUTANJAN
STRONG
Pain Balm



பதினெட்டு வருடங்களாக நடந்து வரும்ஸ்ரீநிவாசாமாதர்சங்கம், பெண்களுக்கு இயற்கையாக உள்ள சங்கீத ஞானத்தை மெருகூட்டும் கைங்கர்யத்தைச் செய்கிறது. இலவசமாக அல்லது மிகக் குறைந்த கட்டணத்தில் மிகச் சிறந்த ஆசிரியர்களை வைத்து வகுப்புக்கள் நடத்துகிறோம். கை வேலை, கோலம், சமையற்கலை வகுப்புக்களும் அவ்வப்போது நடைபெறும். பல் இடங்களுக்கு அங்கத்தினர்கள் ஒன்று சேர்ந்து சுற்றுலா சென்று மகிழ்வோம். வருடத்திற்கு ஒருமுறை அங்கத்தினர்கள் ஒன்று கூடி சங்கத்தில் விருந்துண்டு களிப்போம். மாதம் ஒருமுறை, காஞ்சி ஆச்சார்யாள் அவர்களின் ஆக்ஞைப்படி ஹிந்து சமய மாதர் மன்றம் என்ற அமைப்பின் கீழ் கூட்டு வழிபாடு நடத்துகிறோம். வருடத்திற்கு இரு மாணவர்களுக்குப் புத்தகங்கள், சீருடை, பள்ளிக் கட்டணம் முதலிய வற்றிற்குத் தேவையான பண உதவி அளிக்கிறோம். இந்த உதவியை அவர்கள் +2 வகுப்பு முடிக்கும் வரைதொடர்ந்து அளிக்கிறோம். இன்னும் நிறைய செய்து வருகிறோம். வெற்றிகரமான எங்கள் சங்க நடவடிக்கைகளுக்கு அங்கத்தினர்களின் ஒற்றுமையும், அன்புமே காரணம்.

— சாரதா,
காரியதரிசி.

சொல்லணும்!''

''என்னாலே முடியாது. நான் அவளுக்கு வாக்குக் கொடுத்துட்டேன்.''

''யோசனை பண்ணாம வாக்குக் கொடுத்தால் திண்டாட வேண்டியதுதான்... ஒரு வேலைக்காரி ஏதோ சாகசம் பண்ணி ஒரு வாக்கு வாங்கிட்டா, அதைக் காப்பாத்தறதுக்கு இவ்வளவு அக்கறை...! சரி, உன்னாலே முடியல்லேன்னா நானே சொல்லிடறேன்.''

இரவில் பாஸந்தி வந்த போது சுமித்ரா அறைக்குள் இருந்தாள். மகிதோஷ் கதவைத் திறந்து பாஸந்தியுடன் பேசுவது சுமித்ராவுக்குக் கேட்டது.

பாஸந்தி அழுதுகொண்டே சொன்னாள், ''அம்மாவை ஒரு தடவை கூப்பிடுங்க, பாபு. அவங்கவச்சுக்கறேன்னுசொல்லிட்டாங்க... நானும் நான் வேலை பார்க்கற வீட்டிலே ஜம்பமா சொல்லிட்டு வந்துட்டேன்...''

''அம்மாவுக்குத் தலைவலி. இங்கே வர மாட்டாங்க. படுத்துக்கிட்டிருக்காங்க.''

''நான் கதவுப் பக்கத்திலேயிருந்து அவங்களோட பேசறேன், பாபு. 'ஆசைக் காட்டிட்டு இப்போ மோசம் பண்ணாதீங்க'ன்னு கெஞ்சறேன்...''

''ஊஹூம், அதெல்லாம் முடியாது. அவங்களாலே தலையைத் தூக்க முடியல்லே.''

சற்று நேரம் அழுது கொண்டிருந்தாள் பாஸந்தி.

திடீரென்று அவளை அதட்டியது ஒரு பெண் குரல். பாஸந்தியின் பெண்தான். அவள் சொன்னாள், ''போதும்மா இவங்களைக் கெஞ்சினது! அம்மா, அம்மான்னு அனத்திக்கிட்டிருக்காதே! யாருக்கு என்ன மதிப்புன்னு நல்லாத் தெரிஞ்சு போச்சு. இனிமே பொண்ணோட மானம் மரியாதையைக் காப்பாத்தறதுக்காக பாபுமாரோட காலிலே போய் விழுந்துக்கிட்டிருக்க வேண்டாம். ஏழைக் குடும்பத்துப் பொண்ணோட மானத்துக்கு பாபுமார்கிட்டே எந்த மதிப்பும் இல்லே. சரி, நாம கீழ் ஜனங்க, கீழ் ஜனங்களுக்கு நடக்கறதே நமக்கும் நடக்கட்டும். கெட்டுப் போகணும்னா கெட்டுப் போறேன்!''

மாடிப் படிகளில் இருவரும் இறங்கிச் செல்லும் ஒலி கேட்டது. அப்புறம் நிசப்தம்.

மகிதோஷ் அறைக்குள் வந்து சொன்னான், ''பொண்ணு சொன்னதைக் கேட்டியா? இந்தப் பொண்ணைத்தான் நீ ரொம்ப நல்லவ, கண்ணியமானவ அப்படீன்னு சொன்னே! ஹூம்!''

சுமித்ராவால் பதில் சொல்ல இயலவில்லை.

அவளால் நிஜமாகவே தலையை நிமிர்த்த முடியவில்லை. ஒரு பெண்ணின் மானத்தைக் காப்பாற்றும் சக்தி தனக்கில்லை என்ற வேதனையில் அவளது மண்டை வெடித்து விடும் போலிருந்தது.

எந்தப் பெண்ணின் மானம்?

கல்யாணியால் பொறுக்க முடிய வில்லை. புழுங்கிப் புழுங்கி அழ வேண்டும் போல் தோன்றியது. கொஞ்ச நேரம் அழு தாள். இனி அழுவதால் ஆவது ஒன்று மில்லை. எல்லாம் ஆயிற்று!

''சும்மா ஒப்பாரி வச்சிட்டா மட்டும் ஓடுகாலி பட்டம் மறைஞ்சி போயிடுமா? இல்லே நாங்கதான் இனிமே தலைதூக்கி நடக்க முடியுமா? போதும்பா போதும்! அவங்கவங்க பொழப்பைப் பாத்தாலே போதும். இந்த உறவு இல்லேன்னு இப்ப யார் அழுதா?''

''கல்யாணி... எனக்கு... என்ன செய் யறதுன்னே...''

''நான் புறப்படறேண்ணா''

''இந்த நேரத்துல நீ எங்கேம்மா போகப் போறே''

''இவளை இப்படியே கழட்டி விடற அள வுக்கு இன்னும் என் மனசு கல்லா போயிடல ஸார்''

விறைப்பாக சொல்லி விட்டு பூரணி வாசலுக்குப் போனாள். கல்யாணி மௌன மாக அவளைத் தொடர்ந்தாள்.

வெளியே இருட்டு கனமாய் இறைந்திருந்

# உறவுச்சங்கிலி

ஜெ.பாக்கியலட்சுமி

அடுப்படியில் பாத்திரங்கள் உருளும் பின்னணியில் அண்ணி பிரசங்கம் பண் ணிக் கொண்டிருந்தாள். ஹாலில் கூடை நாற்காலியில் அண்ணன்... குனிந்த தலை நிமிராமல் குறுகிப் போய் உட்கார்ந்திருந் தான். அவனுக்கு இது ஆச்சரியமாய் இருக்க லாம். ஏன் அதிர்ச்சியாகக் கூட இருக்க லாம்!

பக்கத்தில் திக்பிரமை பிடித்து நின்று கொண்டிருக்கும் பூரணிக்குக் கூட இது புதிய அனுபவமாய்த்தான் இருக்க வேண் டும்! ஆனால்... கல்யாணிக்குத் தெரியும்! எதிர்பார்த்ததுதான். அண்ணி ஒன்றும் தேவதை இல்லையே! மனுஷிதான்! அதிலும் இல்லாமைக்கும். இயலாமைக்கும் இடையே சதா போராடிக் கொண்டு, பொறா மையும், பழி உணர்ச்சியும் போட்டி போட, பொங்கிப் பொங்கிச் சாயும் சாதாரண மனுஷி!

பக்கத்தில் நின்று கொண்டிருந்த பூரணி யின் கையைப் பற்றியபடி மெல்ல எழுந் தாள் கல்யாணி.

''பையை எடுத்துக்கோ பூரணி'' அண்ண னைக் கடக்கும் போது நின்றாள். நிமிர்ந்து பார்த்த அண்ணன் வழி தவறி விட்ட ஆட் டைப் போல மிரள மிரள விழித்தான்.

''இது ரொம்ப அநியாயம் ஸார். முதல் லேயே இதை சொல்லி இருந்திங்கன்னா நானாவது...''

பொரிந்து கொண்டிருந்த பூரணி கல் யாணியின் கரம் பட்டதும் ஊமையானாள். கண்ணீர் தடங்களைக் கலைத்துக் கொண் டாள். உதடுகள் துடிக்க அண்ணன் உச்சிக் கூரையைப் பார்வையால் மேய்ந்தான்.

தது. என்றாலும் ஆங்காங்கே சில நட்சத்தி ரங்கள் வெளிச்சமாய் விளையாடிக் கொண் டிருந்தன. பூரணி கல்யாணியின் கரம் பற்றி ஆதரவாக அழுத்தினாள்.

''கவலைப்படாதே கல்யாணி. நாளைக்கு நானே உன்னை சேலத்துக்குக் கொண்டு போய் விடறேன். ஒருநாள்தானே! லீவு போட்டுடறேன்.''

''ஏன் பூரணி! நான் உங்க வீட்டிலே இருந்தா உங்கம்மா கோவிச்சுக்கு வாங்களா''

''கல்யாணி!''

''என் குழந்தை கோயமுத்தூர்லேதான் பிறக்கணும் பூரணி.''

''இதென்ன பிடிவாதம்!''

''இது பிடிவாதமில்லே. பிரார்த்தனை. முறை தவறிப் போனது என்னோட முடி யட்டும். என் பிறந்த வீட்டிலே இல்லேன்னா லும், என் பிறந்த ஊர்லேயாவது என் தலைப்பிரசவம் நடக்கட்டும். அதுதான் என் குழந்தைக்கு நான் குடுக்கற கௌரவம்.''

பூரணிக்குப் புரியவில்லை. என்றாலும் கல்யாணியின் முடிவில் ஏதோ ஒரு அர்த்தம் இருப்பதாகவே அவளுக்குத் தோன்றியது. அம்மா எதுவும் சொல்ல மாட்டாள். அவளுக்குக் கல்யாணியை நன்றாகவே தெரி யும். கல்யாணி காதல் கல்யாணம் செய்து கொண்டதில் அவளுக்கு உடன்பாடு இல்லை என்றாலும் கூட அவளைப் பற்றிய மென்மையான ஈரம் இன்னும் அம்மாவின் இதயத்தில் உலராமல் இருப்பது என்னவோ உண்மை.

எந்தப் பிரச்னையும் இல்லை. சொந்த வீடு.

பூரணியும் வேலைக்குப் போகிறாள். அவர்கள் இருவர் மட்டும்தான். கல்யாணியோடு மூன்று பாரமாகத் தோன்றாது.

"என்ன யோசனை பூரணி. கையில் ரெண்டாயிரம் வச்சிருக்கேன். பத்தலேன்னா ரெண்டு தங்க வளையல் இருக்கு. உனக்கு சிரமம் தர மாட்டேன்."

"சேச்சே என்னடி பேசறே! உன் வீட்டுக்காரர்கிட்டே என்ன சொல்லப் போறே. அதைத்தான் யோசிச்சிக்கிட்டு இருக்கேன்."

கல்யாணி பெருமூச்செறிந்தாள். என்ன சொல்லப் போகிறேன்? அந்த முரட்டு ஆத்மா இதை முழுமையாகப் புரிந்து கொள்ளுமா? அந்த இரும்பு உடம்புக்குள் இளகிய மெழுகாய் துடித்துக் கொண்டிருக்கும் மெல்லிய இதயம் இதைக் கேட்டுத் துள்ளாமல் இருக்குமா? உங்களை எப்படி சமாதானப் படுத்தப் போகிறேன் சாரங்கன்?

கல்யாணி எத்தனையோ பொறுமையாகத் தான் இருந்தாள். பெற்றோர் இல்லாத தன்னை கூட வைத்துக் கொண்டிருப்பதே அண்ணன் செய்யும் பேருதவி என்று தன்னை சமாதானப்படுத்திக் கொள்ள அவளால் முடிந்தது. தகுந்த வயதில் அண்ணனின் பெண்கள் இருவரும் கல்யாணமாகி மறுவீடு போகும் வரை இவளும் மாடாய் உழைத்துக் கொண்டுதான் இருந்தாள். ஆனால் கல்யாண வயதில் இவளைக் கரை சேர்க்க அண்ணனுக்குக் கையிருப்பில்லை. காலம் கடந்த பின்போ இவளைக் கட்டிக் கொடுக்க வேண்டும் என்ற கவனமே இல்லை.



சிறுவர்கள் தூங்கும் பொழுது அடிக்கடி தங்கள் பற்களை கடித்துக் கொண்டால், அவர்கள் வயிற்றில் பூச்சி இருக்கிறது எனத் தெரிந்து கொள்ளலாம். உடனே டாக்டரிடம் சென்று அதற்கான பரிசோதனை செய்து, மருந்து சாப்பிடக் கொடுக்க வேண்டும்.

பாலா.

கல்யாணமே இல்லாமல் கூட கல்யாணி இருந்து விடத் தயங்கவில்லை. ஆனால் ஊரில் ஒவ்வொருவராக வாய் திறக்கத் தொடங்குவதற்கு முன்பு அண்ணியே அதற்கு ஆரம்ப விழா நடத்தினாள்! அவளுக்குக் கல்யாணி வேலைக்கும் போக வேண்டும்! சம்பாதித்தும் தர வேண்டும். ஆனால் இதனால்தான் அவள் கல்யாணம் தடைபடுகிறது என்ற பேரும் வரக் கூடாது! அதற்கு அவள் கல்யாணியின் அதிர்ஷ்டத்தையும், ஜாதகத்தையும் ஆயுதங்களாக்கிக் கொண்டாள். ஏதோ தோஷமென்றாள்! பரிகாரமென்றாள்! தன் அதிகாரத்தை ஆரம்பித்தாள். பார்த்தாள் கல்யாணி! தன் பாதுகாப்பு மெல்ல மெல்ல பங்கப்படுவதையும், தான் பகடையாக உருட்டப்படுவதையும் உணர்ந்து கொண்டாள். இயல்புக்கு மீறிய செயல்தான்! என்றாலும் வேறு வழியில்லை. அவளுக்கு ஆறுதல் சொல்லக் கூட யாரும் இல்லை. பக்கத்து வீட்டில் குடியிருந்த சாரங்கன் அப்படி ஒன்றும் அழகன் இல்லை. அந்தஸ்தோ, படிப்போ அதிகமில்லை. லாரி டிரைவராய் இருந்தான். முரட்டுத்தனமாகப் பேசினாலும், கத்தினாலும் அவனுக்குள் ஒரு மனிதாபிமானம் மொட்டு விட்டிருப்பதை கல்யாணி சட்டென்று பற்றிக் கொண்டாள்.

போதும் அவளுக்கு. அவள் பெரிதாக ஆசைப்படவில்லை. தாம்பத்யக் கவர்ச்சி தாகம் தீரும் மட்டும்தான். அதற்குப் பிறகு ஒருவருக்கொருவர் தாங்கி நடத்திச் செல்லும் தவம்தான் இந்த வாழ்க்கை. அதற்கு இந்த சாரங்கன் எந்தவிதத்திலும் சளைத்தவனல்ல.

கல்யாணி தயங்கவில்லை. யாரிடமும் ஆலோசனை கேட்கவில்லை. நெருங்கிப் பழகும் பூரணியிடம் மட்டும் சொன்னாள். அவளை விட ஐந்து வயது இளையவளான பூரணிக்குக் கூட அது இன்விடேஷன் அல்ல! தகவல் மட்டுமே!

அஞ்ஞான வாசம் போல் சேலத்தில் ஒரு வருட வாழ்க்கை! பிள்ளை உண்டானதும் அப்படியே இருந்து விட கல்யாணி விரும்பவில்லை. அண்ணனுக்கு எழுதினாள்! தன் தவறை மன்னித்து தலைப்பிரசவத்துக்கு தன்னைப் பிறந்த வீட்டுக்கு அழைத்துப் போகும்படி! சாரங்கனுக்குத் தெரியாமல் தான். என்னதான் இழுத்துக் கொண்டு வந்திருந்தாலும், ஓர் ஆண் மகனுக்குரிய சமுதாய அந்தஸ்தைச் சாரங்கனுக்கும் வழங்க வேண்டும்,, வர வேண்டும் என்று கல்யாணி விரும்பினாள்.

கடிதத்துக்குப் பதில் போல, அண்ணன் பலகாரங்களோடு வந்தான். சாரங்கனைப் பார்த்தான். கல்யாணியை அழைத்துப் போக அனுமதி கேட்டான். பூரிப்பில் இருந்த சாரங்கன் எதையுமே பொருட்படுத்தாமல் அண்ணனோடு அவளை அனுப்பி வைத்தான். பஸ்ஸில் வரும் போது கூட கல்யாணி அண்ணனைக் கேட்டாள், "இதெல்லாம் அண்ணியின் சம்மதத்தோடு தானே நடக்கிறது!" என்று.

அண்ணன், எச்சில் உமிழ்வது கூட அண்ணியின் உத்தரவின் பேரில்தான் என்பது கல்யாணிக்குத் தெரிந்திருந்தாலும், இங்கு வந்த பிறகு "யாரைக் கேட்டு இவளைக் கூட்டிக்கிட்டு வந்தீங்க" என்று அண்ணி எகிறிக் குதிப்பாள் என்பதை அண்ணன் சத்தியமாக எதிர்பார்த்திருக்க மாட்டான். இந்த காலை வாரி விடுவது, முதுகில் குத்துவது, பிளேட்டைத் திருப்புவது, இதெல்லாம் அண்ணன் அறியாத போர் முறைகள்!

"வீடு வந்துடுச்சி கல்யாணி. அம்மா கிட்டே நீ எதுவும் சொல்லாதே! நானே பேசிக்கறேன்" என்ற பூரணி கல்யாணியைப் பார்த்து சிரித்தாள். "சேலத்துல சிரிக்கறதுக்குக் கூட காசு கேட்பாங்களோ" என்று பூரணி நொடிக்கவும், கல்யாணி கலகலப்பானாள். "இவள் அண்ணன் வீட்டில் இல்லை" என்பதை எப்படியும் சாரங்கனுக்கு எழுதி விட வேண்டும் என்று தீர்மானித்தாள் பூரணி!

அடுத்த வாரமே சாரங்கன் புயலாக வந்து சேர்ந்தான். வந்ததும் வராததுமாய் வானத்துக்கும், பூமிக்குமாக எகிறிக் குதித்தான். அவன் ஆர்ப்பாட்டம் அடங்கும் வரை பொறுமையாக நின்றிருந்த கல்யாணி,

"ஏன் இப்படி குதிக்கறீங்க" என்றாள் மென்மையாக!

"கல்யாணி இதோ பார் நான் வசதி இல்லாதவன்தான். சாதாரண டிரைவர்தான். ஆனா பொண்டாட்டிக்குப் பிரசவம் பார்க்கக் கூட வகை இல்லாதவன் இல்லே. நானா உங்க அண்ணனை வந்து கூட்டிக்கிட்டு போகச் சொன்னேன்? அவராத்தானே வந்தாரு! இப்ப இப்படி உன்னை அம்போன்னு விட்டுட்டு போயிட்டா என்ன அர்த்தம்! என்னை என்னக்...."

கோபத்தால் மூச்சு வாங்க, முகம் சிவந்து பொருமினான் சாரங்கன்.

"என்னை அம்போன்னு விட்டுட்டதா யார் சொன்னா?"

"நான்தான் லெட்டர் போட்டேன் கல்யாணி"

என்றபடி செருப்பை உதறி விட்டு

உள்ளே நுழைந்தாள் பூரணி. உடனே எரிச்சலும், இகழ்ச்சியுமாக கல்யாணியைப் பார்த்தான் சாரங்கன். கல்யாணி, பூரணியிடமிருந்து ஹேண்ட்பாக்கை வாங்கி ஆணியில் மாட்டி விட்டு இயல்பாகத் திரும்பினாள்.

''எதையுமே புரிஞ்சுக்காம அவசரப் படறதுதான் உனக்கு வழக்கமாச்சே பூரணி''

பூரணி அதிர்ந்து போனாள். கல்யாணி சாரங்கனை ஏறிட்டாள்.

''இதோ பாத்தீங்களா ஆஸ்பத்திரிக்கு ஆயிரம் ரூபா கட்டி இருக்கு. கையில ஆயிரம் இருக்கு. இந்த ஹார்லிக்ஸ், டானிக் இதெல்லாம் யார் வாங்கிக் குடுத்தது? எல்லாம் எங்கண்ணன்தான். நீங்க வந்ததிலேயிருந்து கவனிப்பீங்கன்னு பார்த்தேன். எங்கழுத்துல் இருக்கற ஒன்றரை பவுன் சங்கிலி குழந்தைக்குன்னு சீதனமா இப்பவே எங்கண்ணன் எடுத்துக் குடுத்துட்டாரு... உங்களுக்குத்தான் தெரியுமே... எனக்கிருக்கற தோஷம் எங்க குடும்பத்துக்கு ஆகாதுன்னு... அதனால வீட்டுல இருந்து பிரசவம் பார்த்துக்கிட்டா உங்களுக்கும் ஆகாதுன்னு அண்ணன் வருத்தப்பட்டுகிச்சு. நான்தான் அவரைச் சமாதானப் படுத்தி பூரணி வீட்டுல இருந்துக்கறேன்னு சொன்னேன். குழந்தை பொறக்கற வரைக்கும் நீங்க கூட அங்கே போகக் கூடாது. என்ன புரியுதா?''

கல்யாணி சட்டவட்டமாக முழங்கவும், புஸ்ஸென்று அடங்கி போன சாரங்கன், ''என்னமோ பண்ணு'' என்றான். கல்யாணி ''போயி குளிச்சிட்டு வாங்க... டாக்டர்கிட்டே போகலாம்'' என்றாள்.

சாரங்கன் நகர்ந்ததும் மெதுவாகக் கல்யாணியை சமீபித்து அவள் கரங்களைப் பற்றிக் கொண்டாள் பூரணி. கல்யாணி குபீரென்று உடைந்து போய் அவள் கைகளில் முகம் புதைத்து அழுதாள்.

''ஏம்மா கல்யாணி... எதுக்கும்மா இந்த பொய்யெல்லாம்... ரோல்ட் கோல்ட் செயினைக் காட்டி எத்தனை நாளைக்குத்தான் அவரை ஏமாத்துவே''

கல்யாணி குலுங்கிக் குலுங்கி அழுதாள்... ''பூரணி நான் ஏமாத்தலே பூரணி. தங்கச் செயின்னு என்னால பொய் சொல்ல முடியும் போது ''அது தொலைஞ்சு போச்சுன்னு'' பின்னால சொல்றது ஒண்ணும் பெரிய கஷ்டமில்லே. ஆனா கூடப் பொறந்தவனே என்னை கை விட்டுட்டான்னு சொல்லி நானே என் பிறந்த இடத்தைக் கேவலப்படுத்திட்டா பின்னால என் தன்மானத்துக்கு ஒரு சோதனை வர்றப்ப நான் தலைநிமிர்ந்து நிக்க முடியாது.

எவ்வளவுதான் மேடு, பள்ளம் இருந்தாலும், எவ்வளவுதான் இடைச் சறுக்கல் வந்தாலும் ஒரு பொண்ணு பொறந்த வீட்டையும், புகுந்த வீட்டையும் அன்பான தன் அணுகுமுறையாலே இணைச்சு வைக்கணும். அதுதான் அவளுக்குப் பலமும் கூட. நாளைக்கே யாரும் எப்படியும் மாறலாம். இவ யாருடைய நாதியும் இல்லாதவ தானேன்னு அலட்சியம் வந்துடக் கூடாது பாரு. அதுக்காகத்தான் இந்தப் பொய் வேஷம். இதுதான் எனக்குப் பாதுகாப்பும் கூட.''

பூரணி பிரமித்து நின்றாள்.

---

# மதியம் வாங்கித்தா!



நாங்கள் வருடாந்திர விடுமுறைக்கு மதுரை, திருச்செந்தூர், சிதம்பரம் என்று தென்னாட்டுக் கோவில்களுக்குச் சென்றோம். என் அக்கா குடும்பத்துடன் கூட வந்திருந்தார். அவரது பேரன்கள் இரண்டு பேர். இரண்டும் இரட்டை வால்கள். மதுரையில் ஒரு பகல் பஸ் மாறிப் போகக் காத்திருந்தோம். இந்த வாண்டுகள ஒரு இடத்தில் நிற்காமல் படுத்தி வைக்கவும் அருகில் இருந்த போலீஸ் காரர்களைக் காட்டி 'கலாட்டா செய்தால், பிடித்துப் போய் விடுவார்கள்' என்று பயம் காட்டினோம். அவர்களா பயப்படுவார்கள்? மெதுவாக அந்தப் போலீஸ்காரர்களிடமே போய்ச் சிரித்து நைச்சியம் பண்ணி பேசத் துவங்கி விட்டார்கள். குழந்தைகளை அந்தப் போலீஸ்காரர்களும் அருகில் கூப்பிட்டு பெயர், ஊர் எல்லாம் கேட்ட பின்பு, 'ஏம்ப்பா மதியம் சாப்பிட்டீர்களா' என்று கேட்டார்கள். இவர்கள் இருவரும் முழி முழி என்று முழித்துவிட்டு, 'இன்னும் இல்லை' என்றார்கள். அதற்கு அந்தப் போலீஸ்காரர்கள் 'இன்னுமா சாப்பிடலை...? போ... போ... போய்ச் சாப்பிட்டுவிட்டு வாங்க' என்று சொன்னார்கள். இவை இரண்டும் எங்களிடம் வந்து 'எங்களுக்கு உடனே மதியம் வாங்கித்தா' ''அது தித்திக்குமா? எப்படி இருக்கும்'' என்று மாற்றி மாற்றி உயிரை வாங்கி விட்டார்கள்! 'மதியம்' என்பது தின்பண்டம் அல்ல என்று புரிய வைப்பதற்குள் நாங்கள் மதியம் சாப்பிட்டது செரித்து விட்டது!

எஸ். ஜீஜாபாய்.



# பழசு புதுசாக ஜொலிக்கும் விந்தை!

உபயோகமில்லை என நினைத்து ஓரங்கட்டி வைத்திருக்கும் தொட்டில்கள், உடைந்த கட்டில் கால்கள், பரணிலே தூசி படிந்து தூங்கிக் கொண்டிருக்கும் பழைய மரத் தட்டுமுட்டுச் சாமான்கள் — இவைகள் எல்லாவற்றையும் கொண்டு தற்கால ரசனைக்கும் பயனுக்குமேற்ற ஃபர்னிச்சரைத் தயார் செய்யலாம் என்பது லக்ஷ்மி கண்ணனின் உறுதியான கருத்து. கவிழ்த்துப் போடப்பட்ட தொட்டில்களின் மேல் ஃபோம், அழகான துணி வைத்துத் தைத்தால் அது லோ—டைப் திவானாக உருமாறுகிறது. உடைந்த கட்டில்களின் கடைசல் கால்கள், அந்தக் கால முற்றங்களிலிருந்து எடுத்த மரத் தூண்கள் இரண்டாகப் பிளந்து சுவற்றில் பதிக்கப்பட்டால் நிலைவாசல் தனி அழகைப் பெறுகிறது. தூண்களின் வேலைப்பாடமைந்த அடிப் பகுதிகள் நாலைந்தை ஒன்று சேர்த்து மேலே கண்ணாடிச் சட்டம் போட்டு விட்டால் நவீன 'காஃபி டேபிள்' ரெடி.

முதலில் சகோதரர் சுரேஷுடன் சேர்ந்து பழைய மரச் சாமான்களை 'ரிப்பேர்' செய்யும் பணியில் ஈடுபட்டிருந்த லக்ஷ்மிக்கு இப்போது அருங் கலையழகு மிக்க அக்கால மரச் சாமான்களுக்குப் புது மெருகும், மதிப்பும் அளிப்பதில் அளவில்லா ஆர்வமே உண்டாகியிருக்கிறது. ரோஸ்வுட், தேக்கு, பலா, நாட்டு மரம் ஆகிய பல்வேறு மர வகைகளை அவற்றில் இருக்கும் 'கிரைன்ஸ்' என்று கூறப்படும் அமைப்புக்களை வைத்தோ, உரசி, முகர்ந்து பார்த்தோ பிரித்தறியக் கூடிய அனுபவமும் மெல்லக் கிட்டி வருகிறது. பழைய, பெரிய வீடுகளை விற்று விட்டு ஃபிளாட்டுகளில் குடியேறுபவர்கள், இடமாற்றம் காரணமாக ஊரை விட்டுச் செல்பவர்கள் ஆகியோர் தம்மிடமிருக்கும் பழைய மர நாற்காலிகள், சோஃபாக்கள், ஆகியவற்றை விற்று விட நினைத்தால் அவற்றை அம் மாதிரியான அருங்கலைப் பொருட்களை வாங்க விரும்புபவர்களிடம் விற்றுத் தருவதால் வியாபாரமும் கிடைக்கிறது.

அக் காலத்தில் செய்யப்பட்ட எந்த ஒரு மரப் பொருளிலும் ஒரு கலையழகு இருந்

தது. செட்டி நாட்டு 'டைல்'கள் பதிக்கப் பட்ட மணைப் பலகைகள், கிளிகளும், பூக்களும் அழகு செய்யும் தஞ்சாவூர்க் கதவுகள், நுணுக்கமான வேலைப்பாடுகள் கொண்ட புறாக் கூண்டு போலச் சிறு சிறு அறைகள் கொண்ட எழுதும் மேஜைகள், ஆந்திரக் கதவுகள். இவற்றுக்கெல்லாம் இப்போது தனி மதிப்பு வந்திருக்கிறது. பிரம்மாண்டமான 'செஸ்ட் ஆஃப் டிராயர்ஸ்' இடத்தை அடைக்குமே என்று நொந்து கொள்ளாமல், டிராயிங் ரூம், டைனிங் ரூமுக்கு இடையே 'ரூம் டிவைடர்'ராகப் பயன்படுத்திக் கொண்டு ஒரு புறம் டீ.வி., புத்தகங்கள் வைக்கவும், மறுபுறம் பீங்கான், கண்ணாடிப் பாத்திரங்கள் வைக்கவும் பயன்படுத்திக் கொள்ளலாமே என்கிறார் லக்ஷ்மி.

''எந்தவிதமான நுணுக்க வேலைப்பாடாக இருந்தாலும் அதைச் செம்மைப் படுத்தி பழைய அழகு திரும்ப வரச் செய்வதற்கான எல்லாவிதமான வசதிகளும் இந்தக் காலத்தில் இருக்கிறது. ஃபெவிகால் போன்ற நவீன ஒட்டும் பசைகள் நிஜமான வரப்பிரசாதம். 'கார்பென்டர்'களையும் கலைஞர்களாகப் பாவித்து அவர்கள் செய்யும் சிறு வேலையையும் கவனமாகக் கண்காணித்து வேலை முடிந்த பின் மனமாரப் பாராட்டினாலே போதும். வேலைகள் தடையின்றி முடிந்து விடும். ஆனால் ஒரு கஷ்டம் — பயனில்லை என்று கைவிடப்பட்ட ஒரு பொருள் பழைய அழகோடு ஜொலிக்கும் போது ஓர் அதீதமான திருப்தியுணர்வு மட்டுமல்ல அதை விற்காமல் நாமே வைத்துக் கொண்டாலென்ன என்ற எண்ணம் கூட சில சமயம் தோன்றி விடும்'' என்கிறார் லக்ஷ்மி சிரித்துக் கொண்டே.

சிறிய ஃபிளாட்டாக இருந்தாலும் கலையழகுடன் அதை அலங்கரிக்க வேண்டும் என்ற உந்துதல் இன்றைய மத்தியதர வகுப்பினருக்கும் வந்திருக்கிறது. குறிப்பாக வெளிநாடுகளில் சென்று தங்குபவர்கள் நம் தாய்நாட்டின் கலைச் செல்வங்களைப் பிரதிபலிக்கும் வகையில் தம் இல்லங்களையும் வைத்துக் கொள்ள விரும்புகிறார்கள்.

''ஆனால் 'விற்பனை' என்று வைக்கும் போது, வாங்க வேண்டும் என்ற நோக்கமேயில்லாமல் பொழுது போக்குவதற்காக வந்து நூறாயிரம் கேள்விகள் கேட்டுத் துளைப்பவர்களும் உண்டு. 'காட்ரெஜ்' பீரோவும், பழைய டீ.வி.யும் இங்கே கிடைக்குமா என்று தேடி வருபவர்களும் உண்டு. இவர்களையெல்லாம் சமாளித்து அனுப்புவதும் வியாபாரத்தின் ஒரு பக்கம்தானே'' என்பது லக்ஷ்மியின் கருத்து.

பழமைக்குக் கிடைத்து வரும் இப் புது மதிப்பு நம் பாரம்பரிய கலைஞருக்கும், கலைஞர்களுக்கும் நல்வாழ்வும் அளிக்குமேயானால் அது வரவேற்கத்தக்கதொரு மாற்றமே.

**— நிர்மலா சக்கரவர்த்தி.**

படங்கள்:
**— யோகா.**




ான் விரும்புவது
செபரேட்டரில் சமைக்க
அதிக இடம் தரும்
வெளிப்புறம்
பொருந்தும் மூடி.
மிக மிக
பாதுகாப்பான ஒரு
குக்கரை எனக்கு
தாருங்களேன்.
தொல்லேயே தராத
ஒரு பிரஷர் குக்கரை
யாராவது தயாரித்துள்-
ளார்களா?
Prestige
Prestige



# ரிடையர்மெண்டே கிடையாதா?

பர்வதத்திற்கு ரொம்ப நாளாக ஒரு சந்தேகம். ''இந்த ஆண்களுக்கு வேலையில் ரிடையர்மெண்ட் இருப்பது போல பெண்களுக்குக் கிடையாதா? சாகும் வரை வேலை செய்யத்தான் வேண்டுமா?'' அடிக்கடி குடும்பத்தினரிடமும் பலரிடமும் குறைபட்டுக் கொள்வது அவள் வழக்கம்.

அன்று, அடுத்த தெருவில் வசிக்கும் அம்புஜம் மாமி வழக்கமாக ''இத்த நாழி பேசலாம்னு வந்தேண்டி பர்வதம்'' னு சொல்லிக் கொண்டே காப்பி டிபனை முடித்துக் கொண்டு போகும் வழக்கமுள்ளவள் மிகுந்த முகவாட்டத்துடன் நுழைந்தாள்.

''என்ன அம்புஜம்? இரண்டு மூணு நாளா ஆளையே காணுமே! உடம்பு, கிடம்பு சரியில்லையா என்ன?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லடி! எங்க வீட்டுக்காரர் ரிடையர் ஆயிட்டார். ஏற்கெனவே அவர் துர்வாசர்னுதான் உனக்குத் தெரியுமே. காலம்பற போய்ட்டு சாயரட்ச வந்தாலே தாக்குப் பிடிக்க முடியாது. இப்ப முன் ரூமிலேயே உக்காந்துண்டு யாரு வரா? யாருபோறான்னுபார்த்துண்டுசெக்போஸ்ட் மாதிரி ஆயிடுத்து. கண்ணு வலிக்க பேப்பர்ல ஒரு எழுத்து விடாம படிச்சுண்டு அவருக்கு டயமே இல்ல. எனக்குத்தான் வேலை ஜாஸ்தி. வேளா வேளைக்கு சூடா பண்ணிப் போட்டுண்டு போறுண்டீம்மா. நீ சொல்றாப்பல பொம்மனாட்டி ஜன்மம் ஒரு ஜன்மமா?

''இப்ப எப்படி வந்தே? தூங்கிண்டிருந்தாரா?''

''ஆபீஸ் சிநேகிதர் ஒருத்தர் தாம்பரத்துல வீடு கட்டிண்டிருக்கார். போய்ப் பார்த்துட்டு வரேன்னார். வர்றதுக்கு சாயந்திரம் ஆயிடும். அதான் உன்னைப் பாக்கலாமேன்னு வந்தேன்.''

''நீ சொல்றச்சயே எனக்கு வயத்தக் கலக்கறதுடி அம்புஜம்! இவரும் இன்னும் ஒரு மாசத்துல ரிடையர் ஆகப் போறார். உனக்காவது இரண்டும் பொண்ணு. கல்யாணம் பண்ணிக் குடுத்துட்டே. எனக்கு சம்சாரம் பெரிசு. உங்காத்துக்காரர் மாதிரி இவர் கோபக்காரர் இல்லன்னாலும் எப்படி சமாளிக்கப் போறேனோ. புளியக் கரைக்கறதுடி.''

''பேசிண்டே நாழியாயிடுத்து. அவர் வரச்சே காப்பி போட்டுக் குடுக்க நான் இல்லாட்டா கத்துவார். ஒழியறச்சே வா. குங்குமம் குடு. கெளம்பறேண.''

அலுத்து, சலித்துக் கொண்டு போகும் அம்புஜத்தை வழியனுப்பியதும் ஏதோ ஒரு பயம் வந்து சூழ்ந்து கொண்டது போல இருந்தது பர்வதத்திற்கு.

பர்வதத்திற்கு இரண்டு பிள்ளை. ஒரே பெண். கணவர், இரண்டு குழந்தைகளுடன் பெண் ரஞ்சனி அமெரிக்கா வாசம். மூத்தவன் சங்கர் பம்பாயில் மனைவி ராதா

இரண்டு குழந்தைகளுடன் இருந்தாலும் தங்கை சென்னைக்கு வரும் போது ஒரு மாதம் லீவு போட்டு வந்து தங்கையுடன் ஜாலியாக இருந்து விட்டுச் செல்வான். சின்னவன் ஸ்ரீதர் வங்கியில் வேலை. போன வருடம்தான் மணமாகியது. அவன் மனைவி மாலாவும் வங்கியில் வேலையாக இருக்கிறாள். இந்தப் பிள்ளையாவது தன்னுடன் இருக்கிறானே என்று மாமிக்கு ரொம்ப சந்தோஷம்.

எல்லோருக்கும் விதவிதமாக சமைத்துப் போட்டும், லீவுக்கு வந்த பெண், பிள்ளைகள் எல்லோரையும் வெளியில் போக, ஷாப்பிங் செய்ய அனுப்பி விட்டு கணவர் மூர்த்தியுடன் பேரன், பேத்திகளுடன் விளையாடுவதில் மாமிக்குத் தனி இன்பம். வரவாளும், போறவாளுமாக பெரிய சம்சாரம். மாமி தனியே சமாளிப்பதில் அவளுக்கு நிகர் அவளேதான். அந்த அலுப்பிலேதான் சில சமயம் கணவருடன் தனிமையில் இருக்கையில் புலம்புவாள்.

''என்ன பர்வதம்? பாலைக் கையிலே வச்சுண்டு யோசனை பண்ற?'' மூர்த்தி கேட்டவுடன் எப்படா யார் கேட்பார்கள் என்று காத்திருந்தது போல பர்வதம் ஆரம்பித்து விட்டாள்.

''ஒண்ணுமில்லே, அம்புஜம்னு என் சிநேகிதி வருவாளே, அவ வீட்டுக்காரர் ரிடையர் ஆயிட்டாராம். அடிக்கடி வெளில வாசல்ல போக முடியாத கட்டுப்பாடு இந்த வயசுலயும் அவளுக்கு. அவ பக்கத்துல இல்லாட்டா கூப்ட குரலுக்கு ஏன்னு கேக்காட்டா கோபம் வந்துடும் அவருக்கு.''

''பின்ன எல்லாரும் என்னை மாதிரி பொண்டாட்டி கூப்ட குரலுக்கு வருவான்னு நினைச்சியா?'' கண் சிமிட்டிக் கேட்டார் மூர்த்தி. அதை ரசிக்கும் மனநிலையில் இல்லை பர்வதம்.

''கேளுங்க. இந்த வயசுல வேலையும் ஜாஸ்தி. கட்டுப்பாடும் ஜாஸ்தின்னா எப்படி? அதான் மத்தியானம் வந்து ஒரு குரல் அழுதுட்டுப் போறா. வயசாக வயசாக குடும்பப் பொறுப்பும் வேலையும் ஜாஸ்தியாறதே தவிர எங்கே குறையறது. இந்த பொம்மனாட்டிகளுக்கு மாத்திரம் ஏன் ரிடையர்மென்ட்டே இல்ல?''

''ஆரம்பிச்சுட்டியா? வேதாளம் முருங்கை மரம் ஏறின மாதிரி. பாலைக் குடுத்துட்டு பேசேண்டி. ஆறிடப் போறது.''

''இந்தாங்க! அடுக்களையை ஒழிச்சுட்டு வர்றேன். உங்ககிட்டே சொன்னா மாத்திரம் என்ன பெரிசா மாறிடப் போறது.'' தம்ளரைக் கையில் வாங்கிக் கொண்டு சமையலறைக்குள் செல்லும் பர்வதத்தைப் பார்த்து ஏதோ தீர்மானத்துக்கு வந்தாற் போலத் தலையை தனக்குத் தானே ஆட்டிக் கொண்டார் மூர்த்தி.

அடுத்த வாரம் அமெரிக்காவிலிருந்து வந்த தங்கை ரஞ்சனியுடன் விடுமுறையைக் கழிக்க சங்கர் குடும்பத்துடன் வந்தாகி விட்டது. தனக்கு சென்னைக்கே மாற்றலாகி விட்டதை அவன் சொன்ன போது மிக மிக சந்தோஷப்பட்டனர் பர்வதமும், மூர்த்தியும். ''என் வயத்துல பாலை வார்த்த கற்பகாம்பாளுக்கு அபிஷேகத்துக்கு ஏற்பாடு பண்ணிட்டு வரேன்'' சின்னப் பெண் போல குடுகுடுவென்று ஓடினாள் பர்வதம்.

அவள் கோயிலுக்குப் போனதும் மூர்த்தி குடும்பத்தினர் அனைவரையும் அழைத்துப் பேசினார். ''அம்மாவுக்கும் வயதாகி விட்டது. நானும் ரிடையர் ஆகப் போகிறேன். சங்கர் குடும்பத்துடன் வந்து தங்குவது சந்தோஷம்தான் என்றாலும் குடும்பத்தில் உள்ளவர்களது எண்ணிக்கை அதிக

மானால் மேலும் சுமைதானே அவளுக்கு. பெண்களுக்கு ரிடையர்மென்ட்டே கிடையாதான்னு கேக்கற அவளுக்கு நாம ஒய்வு கொடுக்க வேண்டியது அவசியம். அதற்குத் தகுந்தாற் போல நீங்கள்ளாம் புரிஞ்சுண்டு நடந்துப்பீங்கன்னு நினைக்கிறேன்'' மனைவிக்கு ஒய்வு தேவையென்பதை மிக நாசூக்காக எடுத்துரைத்தார் மூர்த்தி.

''மாமா! சமையல் பொறுப்பை காலைல நானும், இரவு மாலாவும் ஏத்துக்கறோம். ஏன்னா வேலைக்குப் போகாத நான் காலையில் வேலை செய்யலாம். மாலா எனக்கு இரவு உதவலாம். நீங்களோ, அண்ணன் தம்பி இருவருள் யாராவதோ காய்கறி, பால், கடைகண்ணிக்கு பொறுப்பெடுத்துக் கொள்ளட்டும். அம்மாவுக்குச் சின்ன வேலை கூட வைக்காம நாங்கள் இருப்போம் மாமா! நீங்களும், அம்மாவும் குழந்தைகளோடு விளையாடிண்டு, சந்தோஷமா காலத்தைக் கழிக்கலாம். பாருங்களேன்'' மூத்த மருமகள் ராதா முடிப்பதற்குள், மாலா,

''இதெல்லாம் அம்மாவுக்குச் சொல்லவே வேண்டாம். நான் வேலைக்குப் போறதால தான் இத்தனை நாள் அம்மாவுக்கு உதவ முடியாம இருந்தது. மன்னியும் நானும் நாளையிலிருந்து எப்படி சமாளிக்கிறோம் பாருங்கள்'' என்று முடித்ததும்,

ஸ்ரீதர், ''டாக்டர் வீட்டுக்கு வயிற்று வலின்னு அனுப்பாம இருந்தாலே போறும்'' என்றான்.

''போறும்டா, சிறிசுகள் பாரு. எப்படி நம்மள அசத்தப் போறா?'' மருமகள்களுக்குப் பரிந்து கொண்டு பேசினார் மூர்த்தி.

முதலில் நாலைந்து நாட்கள் ராதா சமையல் செய்த போது பார்வதம் மாமிக்கு சந்தோஷமாக இருந்தது. மூத்த மருமகள் பொறுப்பாக அன்பாக இருக்கிறாளே என்று கணவரிடமும் சிலாகித்துக் கொண்டாள். சின்ன மாட்டுப் பெண் மாலாவும் கூடக் கூட இரவு, மாலை வேளைகளில் ராதாவுக்கு உதவியது பெருமிதமாகவும் இருந்தது. தேவலையே! ஒரோரு வீட்டைப் பாக்கறச்சே நம்ம கண்ணே பட்டுடும் போலிருக்கேன்னு மனத்திற்குள் மகிழ்ந்தாள்.

பதினைந்து இருபது நாட்கள் ஆனதும் அவளுக்கு இருப்பு கொள்ளவில்லை. ''ராதா, மாலா போதும் நீங்க சமைச்சது. நானே பாத்துக்கறேன் வெளில வாங்க'' என்றாள்.

''வேண்டாம்மா! உங்க பிள்ளை என்னைத்தான் சமைக்கணும்னு சொல்லியிருக்கார்.'' காய்கறி நறுக்கக் கூட விடாமல் சமையல் அறையையே நெருங்க விடாமல் அடித்தனர் மருமகள்கள் இருவரும்.

தன்னை யாரும் எதற்கும் கேட்கவில்லையே! மதிக்கவில்லையே! என்ற ஏக்கம் மனத்தில் தோன்ற அவள் கலகலப்பே போய் விட்டது.

அன்று இரவு கணவர் மூர்த்தியிடம், ''இந்த வீட்டில யார் என் பேச்சைக் கேக்கறா? அவரவர் இஷ்டத்துக்கு நடக்கறது. ராதா தம்பி வந்தானே நேத்திக்கு என்னை ஒரு வார்த்தைக் கேட்டானா? சக்கரைப் போளியும், மெது பக்கோடாவும் உனக்குப் பிடிக்குமேடான்னு பண்ணிப் போட்டுண்டிருக்கா. பெரியவா, பெருந்தலைன்னு ஒண்ணு இல்ல இதுகளுக்கு. என்னால பொறுக்க முடியலே. நான் கொஞ்ச நாளைக்கு ரஞ்சனி வீட்டுக்குப் போய் சமைச்சு போட்டு காலத்தைத் தள்ளிட்டு வரேன்'' என்றதும்,

மூர்த்திக்கு ஒன்றுமே புரியவில்லை. குழம்பினார்.

''பார்வதம்! எங்களுக்கு வேலையிலிருந்து ரிடையர்மென்ட் ஆனா நாங்க தாழ்வு மனப்பான்மையா நெனைச்சுக்காம, நல்லா அதிகாரம் பண்ணி பழையபடியே சாப்பிட்டு, தூங்கி, வாழ்ந்து காலங்கழிக்கிறோம். பெண்களான உங்களுக்கு ஏன் ரிடையர்மென்ட்டே இல்லேன்னு இப்ப எனக்குப் புரிஞ்சுடுத்துடி. நீங்க குடும்பத் தலைமையிலேருந்து, அதிகாரத்திலேயிருந்து வெளில வர விரும்பறதில்லே. அப்படி வெளியிலே வரும்படியான சூழ்நிலை வந்தா உங்களை யாரும் மதிக்கலேன்னு தவறான தாழ்வு மனப்பான்மையை வளர்த்துண்டு கஷ்டப்படறீங்க. அதனால, புலம்பிண்டாவது, மத்தவாளக் குத்தம் சொல்லிண்டாவது நீங்க உங்க உரிமையை விடாம இருக்கறதாலதான் யாராலும் உங்களுக்கு ரிடையர்மென்ட் கொடுக்க முடியல'' என்று சிரித்தார்.

''போதும், போதும் உங்க லெக்சர். நாளையிலேருந்து நானே சமைக்கிறேன். எனக்கென்ன அப்படியா தள்ளாமை வந்துடுத்து'' என்று புடைவையை இழுத்துச் செருகிக் கொண்டு நிமிர்ந்தாள் பார்வதம்.

•

---

குளிர் காலங்களில், சைக்கிள், ஸ்கூட்டரில் செல்லும் போது, மார்பில் காற்று பலமாகத் தாக்கும். ஆகையால் ஒரு நியூஸ் பேப்பரை நான்காக மடித்து, பனியனுக்குள் வைத்து, பனியனை 'இன்' செய்து சட்டை போட்டுக் கொண்டால், மார்புக்குப் பலமான பாதுகாப்பு. ஸ்வெட்டரை எடுத்துக் கொண்டு அலைய வேண்டாம். (வெயில் ஏறியவுடன் ஸ்வெட்டரை எங்கு வைப்பது போன்ற பிரச்னை இல்லை. ஸ்வெட்டர் வாங்க முடியாதவர்கள், ஸ்வெட்டர் அணிந்து கொள்ள வெட்கப் படுபவர்களுக்கு இது உதவும்.)

— பார்வதி.

பாதி ஆத்திரமும் பாதி அழுகையுமாய் பேசிக் கொண்டே போனாள் உமா.

ராமாம்ருதத்தின் குரலே கேட்கவில்லை.

இனியும் பொறுமையாய் இருக்க முடியாது என்று தோன்றியது ஜானகிக்கு.

மெதுவாய், தன் பலம் முழுவதையும் திரட்டி, படுக்கையை விட்டு எழுந்து நின்றாள்.

காலுக்கடியில் பூமி நடுங்கியது. அறை தட்டாமாலை ஆடத்துவங்கியது. கண்களுக்குள் இருட்டு நிறைந்தது. மெதுவாய், சுவரைப்பிடித்தபடியே அடுத்த அறைவாயில் வரை வந்துவிட்டாள்.

உடல் சோர்வைத் தாள முடியாது, அப்படியே கீழே உட்கார்ந்தாள்.

உடலின் படபடப்பையும் மீறி, உள்ளம், வேதனையில் உருக, கண்களில் கண்ணீர் பெருகியது.

அறைக்குள் நோட்டமிட்ட போது கணவர் ராமாம்ருதத்தின் முதுகுபுறம்தான் அவளுக்குத் தெரிந்தது. பெண் உமா, உள் தள்ளி நின்றிருக்க வேண்டும். கண்களில் படவில்லை. ராமாம்ருதமும் உமாவின் பேச்சைக் கேட்காதவர் போல், தனக்கு முன்னால், ஜன்னலுக்கு வெளியே தெரிந்த நிர்மலமான நீல வானைப் பார்த்தபடி நின்றிருந்தார்.

உடல்தான் பல வீனப்பட்டிருந்தாலும், உமா பேசுவதைக் கிரகித்து உணரும் சக்தி ஜானகிக்கு இருந்தது. உமாவின் பேச்சைக் கேட்டதில் ஆத்திரமும், இயலாமையும் சேர...... இரண்டு கால் முட்டிகள் முகத்தைத்தாங்க, தலை குனிந்து அழ துவங்கினாள் ஜானகி.

"நான் என்னப்பா கேட்கக் கூடாததை கேட்டுட்டேன். கல்யாணமான இந்த ஆறு மாசத்தில் ஒரே ஒரு இடத்துக்காவது நாங்க ரெண்டு பேரும் சேர்ந்து போயிருக்கோமா... இன்னும் கூட நாங்க ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக்கவே இல்லை. மனசே வெறுத்துப் போச்சு. எதுக்குப் பார்..... அம்மாவைக் கேட்கணும், அம்மாவைத் தனியா விட்டுட்டு எங்கேயும் போகக் கூடாது... இதேதான் பேச்சு. எல்லாருக்கும் கல்யாணம் ஆனா, ஹனிமூன் போவாங்க. நாங்க... தெரு முனை வரைக்கூட சேர்ந்து தனியா போனது இல்லை. இத்தனைக்கும் இவர் ஒருத்தர் தான் பிள்ளையா? இன்னும் ரெண்டு பிள்ளைங்க அடுத்தடுத்த தெருவிலேயே இருக்காங்களே அங்க போய் கொஞ்சநாள் எங்க மாமியார் இருக்கக் கூடாதா? அவங்களுக்கும் பெத்தவளுக்குச் செய்ய வேண்டிய கடமை இல்லையா? நாங்களும் நெருங்கிப் பழகி ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக்க முடியும் இல்லையா?... இதையெல்லாம் நான் வெளிப்படையா கேட்டுட்டேன்னு தான்... என் தோளைப்பிடித்து உலுக்கி, கையை ஓங்கிகிட்டு, காட்டு மிராண்டித்தனமா அடிக்கவே வந்துட்டார். 'நீயுமாச்சு, உங்கம்மாவும் ஆச்சுன்னு' பேசாம கிளம்பி வந்துட்டேம்பா....."

............

"என்னப்பா இது.... இவ்வளவு பேசி இருக்கேன். வாயே திறக்கலையே நீங்க..."

"என்னம்மா சொல்லச் சொல்றே. இருபத்தஞ்சு வயசு பெண்ணுக்குத்தன் வாழ்வை நிர்ணயிக்கற உரிமை இருக்கு. உன் மனசுக்கு எது சரினு தோண்றதோ அதைச் செய்...."

"அப்பான்னா நீங்கதான் அப்பா, உங்க ஸப்போர்ட் இருக்கும்ற தைரியத்தில்தான் வந்தேன். அடுத்த வாரம் என் பிரெண்ட் கௌசியின் கல்யாணம். பாண்டிச்சேரியில் நடக்கறது. அதுக்கு நாம போகலாம் அப்படியே தஞ்சாவூர், திருச்சின்னு டிரிப் அடிச்சுட்டு ஒரு வாரத்தில் திரும்பிடலாம்னு ரகு கிட்ட கேட்டதுக்கு என்ன சொன்னார் தெரியுமா அப்பா......!"

"தெரியும்மா.... அம்மாவை அத்தன்ன நாள் தனியா விட்டுட்டு நாம பொறுப்பில்லாம ஊர்சுத்த முடியாதுன்னு சொல்லி

# திரும்ப வேண்டாம் சித்திரமே!

ரஜினி சந்தானம்

இருப்பார்......''

ஆச்சரியப்பட்டாள் உமா.

''எப்படிப்பா அப்படியே கரெக்டா சொல்லிட்டீங்க, அதுக்கு நானென்ன சொன்னேன் தெரியுமா?...''

''பக்கத்துத் தெருவில இருக்கிற உங் கண்ணன் வீட்டிலவிட்டுட்டு போகலாமே ஒரே ஒரு வாரம் தானே. உங்கண்ணனுக்கும் அம்மாதானே. அவங்கதான் கொஞ்ச நாள் பார்த்துக்கட்டுமேனு சொல்லி இருப்பே, ரகு தலை மறைந்ததும் மாமியாரிடம்.

'தனக்கு புருஷன் இல்லைன்னா.... மத்தவங்க புருஷனோட சந்தோஷமா இருக்கறதைப் பார்க்கக் கூடவா மனசு ஆசைப் படாது? வயசு ஆகலை ரெண்டு நாற்பது. பெருந்தன்மையா பிள்ளையையும், மருமகளையும் தனியா ஒரு வாரம் ஊர் சுத்திட்டு வாங்க, ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சிக்கோங்கன்னு வாயார வாழ்த்தி அனுப்ப மனசு வருதா.... எப்பவும் பிள்ளையை முந்தானியில் முடி போட்டு வெச்சுகிட்டு.... அதுக்கெதுக்கு என்னைக் கூட்டி வந்தாங்களோ தெரியலை. என்ன இருந்தாலும் மத்த அண்ணன் மன்னிகளுக்குக் கிடைத்த அதிர்ஷ்டமும் சுதந்திரமும் எனக்குக் கிடைக்கவே கிடைக்காதுன்னு மாமியார் காதுல விழனும்னே உரக்க சொல்லி இருப்பே.''

''அப்பா......!'' ஆச்சரியப்பட்டு போனாள் உமா.

''வார்த்தைக்கு வார்த்தை நிஜம்பா. அப்படியேதான் கேட்டேன். அதுக்குள்ள திரும்பி வந்துட்ட இவர் அதுக்குத்தான் அடிக்க வந்தார். சரிதான் போயிட்டு வாங்க. இதென்ன அந்தக் காலமா, குட்ட குட்ட குனியன்னு கேட்டுட்டு வந்துட்டேன்.....''

இப்போது ஜானகி பெருங்குரலெடுத்து அழ ஆரம்பித்தாள். அவள் குரல் கேட்டு அதிர்ந்து போன உமா ஓடிவந்து....

''அம்மா..... இத்தனை ஜுரத்தில் ஏம்மா எழுந்து வந்தே. ஏம்மா இப்படி அழறே....." என்ற போது, அவள் கைகளை நடுங்கும் கரங்களால் பற்றிக் கொண்டாள் ஜானகி.

''உமா... உடனே கிளம்பு. திரும்பி உன் வீட்டுக்கு போ. உன் வாழ்வை நீயே பாழடிச்சுக்காதே.இப்பதான்வாழ்க்கையைத்துவங்கி இருக்கீங்க. அதுல முதல் கட்டமே கோணலாகிப்போனா வாழ்க்கைமுழுவதும்கோணலாயிடும்மா. உமா நீ நல்ல பெண்ணில்லையா.... எம் பேச்சைக் கேளும்மா....'' என்றாள்.

விறைப்பாய் நிமிர்ந்தாள் உமா.

''என்னம்மா சொல்றே. என்னை அடிக்க வந்தார்.... எனக்கென்ன மானம், ரோஷம் இல்லைன்னு நினைச்சயா?..''

''உன்னை அடிக்க வந்தார்னு சொல்றயே அதனாலதான் சொல்றேன், உடனே புறப்படுனு....''

''என்னம்மா நீ.... சரியான கட்டுப் பெட்டியா இருக்கயே. இப்போ இதைப் பத்தியெல்லாம் என்ன. உன் உடம்பு சரியாகட்டும். உன் காதுல விழ கூடாதுன்னுதான் அப்பாகிட்ட பேசிகிட்டு இருந்தேன். வா... வந்து படுத்துக்கோ...''

கைத்தாங்கலாய அழைத்துப் போய் படுக்கையில் விட்ட உமாவை அருகில் அமரும்படி சொன்னாள் ஜானகி. கொஞ்சமாய் ஆஸ்வாஸ படுத்திக் கொண்டபின்...

''உமா... உங்கப்பா எப்படி நீ பேசி இருக்கிறதை கரெக்டாச் சொன்னார் பார்த்தியா...?''

''ஆமாம்மா... எனக்கே ரொம்ப ஸர்ப்ரைசிங்கா இருந்தது.''

''புரியாத குழந்தைதான் உமா நீ இன்னும். சரித்திரம் திரும்பும்னுவாங்களே அதுதான் இது. நீ இருக்கும் நிலையில் நான் இருந்து அன்று கேட்டதைத்தான் சொல்லி இருக்கார். ஆனால், இன்று உரிமையாய் உன்னைக் கண்டித்த உன் கணவரைப் போல இல்லாம, அன்று பேசாமல் மௌனமாய் இருந்தார். அந்த மௌனத்தை உங்க பாட்டி உங்கப்பாவுக்கும் தனியாய் பெண்டாட்டியோட ஊர் சுற்ற ஆசை என்று எண்ணி எங்களை ஒரு வாரம்... ஒரே ஒரு வாரம்தான் காஞ்சிபுரம் வரை போய், எல்லாக் கோவிலுக்கும் போய்விட்டுப் பெரியவாளையும் தரிசித்துவிட்டு வாங்கோன்னு அனுப்பினா. ஒரு வாரம் நாங்க இரண்டு பேரும்தான்னு மனசுக்குள் கனவுகளுடன் கிளம்பினேன்.

உங்கப்பா ஒரு கோழை. தன் எண்ணத்தில் உறுதியாய் இருக்கவும் தெரியாமல், என் எண்ணங்களுக்கு மதிப்புக் கொடுக்கவும் விழையாமல், தனக்குள் ஒரு வளையத்தைப் போட்டுக் கொண்டு அதற்குள்ளேயே மௌனமாய் இருந்தார். காஞ்சி வந்த நாள் முதல் 'அம்மாக்கு பி. பி. ஜாஸ்தி. மருந்து சரியா குடுக்கலைன்னா என்ன ஆகுமோ? இப்படித் தனியாக ஊர்






சுறறுவதில் என்ன சந்தோஷத்தைக் கண்டே? எனக்கு மனசெல்லாம் அங்கேயே இருக்கு. என்னை இத்தனை தூரம் வளர்க்க எங்கம்மா என்ன பாடு பட்டாங்க தெரியுமா? என்னோட அண்ணன்களெல்லாம் கொஞ்சம் பலசாலிகள். நான்தான் சின்ன திலிருந்து நோயாளி. பன்னிரண்டு வயசு வரை மாந்தம், அது இதுன்னு ஏதோ ஒரு நோய் வாட்டும். அம்மாதான் தூங்காம என்னைப் பார்த்துப்பா. `நான் கடைசிப் பிள்ளை வேறயா, அம்மாவுக்கு என் மேல்

தனிப் பாசம்...'' என்றெல்லாம் பேசி என்னை ஒரு குற்றவாளியைப் போல் பார்த்து... அடியோடு என் கனவுகளைக் கலைச்சுட்டார்.

''நானும் விடாம, எல்லா அம்மாவும்தான் பிள்ளைங்க மேல ஆசையா இருப்பாங் கன்னு சொல்லுவேன். அப்போ பதில் பேசாம என்னை நிமிர்ந்து ஒரு பார்வை பார்ப்பார். அப்பப்பா... அந்தப் பார்வை யில் காதல், பாசத்துக்குப் பதில் இன்று வரை ஒரு வெறுப்பைத்தான் நான் பார்த் திருக்கிறேன். என்னோட போதாத காலம்... நாங்க காஞ்சி வந்த மூன்றாவது நாளே உன் பாட்டிக்கு பி. பி. ஜாஸ்தியாகி ஆஸ் பத்திரியில் கிடந்தாங்க. விஷயம் எங்க ளுக்குத் தெரிஞ்சு, நாங்க போய்ச் சேர்ந்த போது, அங்கே போயே போயிட்டாங்க.

''அன்றிலிருந்து இன்று வரை எங்களுக் கிடையே குற்றம் சாட்டும் ஒரு மௌனம்தான் சுவராய் எழும்பி நிற்கிறது. நானும் அந்தச் சுவரைத் தகர்க்க எத்தனையோ பிரயத்தனப் பட்டேன். முடியலை. எங்களிடையே ஒரு அன்னியோன்னியமா இல்லை, ஏதோ இரண்டு அறிமுகமில்லாத நபர்களைப்போல வாழ்ந்துக்கிட்டு இருக்கோம்.

இது மாதிரி ஒரு கூரை கீழ் அன்னியமாய் வாழறது மஹா சித்திரவதை உமா. வயசானா, உனக்குத் தானாப் புரியும். உங்க மாமியார் மேல் ரகுவிற்கு அளவில்லாத ஆசையும் பாசமும் இருக்கு. ஏன்னா, ரகு அவங்களுக்குக் கடைசிக் குழந்தை. கடைசி குழந்தைகளைப் பெத்தவங்க வளர்வதாக நினைப்பதே இல்லை. இன்னும் அவர்கள் பார்வையில் ரகு ஒரு குழந்தைதான்... அவரைக் குடும்பத் தலைவனாப் பார்க்கக் கொஞ்சம் நாளாகும். அதுவரை நீ அவசரப் படாதே. பொறுமையாய் இரு. அந்தப் பொறுமை உங்கள் வாழ்வின் நிஜமான அர்த்தமுள்ள நெருக்கத்திற்கு ஒரு பசை யாய் இருக்கும். இன்னிக்கு ரகு உன்னைக் கண்டித்தார்னு கேட்க நான் சந்தோஷப்பட றேன். ஏன்னா... ரகுவுக்கு ஒரு முடிவெடுக் கும் திறமை இருக்கு.

''என் வாழ்க்கையைப் போல், உன் வாழ்க் கையையும் அர்த்தமில்லாததாக்கிக்காதே. தனிமை என்ன, ஹனிமூன் என்னம்மா? ரெண்டு உள்ளங்களிடையே உண்மையான நெருங்கிய உறவு இருந்தால், உடல் நெருங்கி இருக்கணும்னு அவசியமே இல்லை. பத்து பேருக்கு நடுவிலும் அவங்க கண்களால், புன்னகையால் தங்கள் மனத்தைப் பரிமாறி ரிக்க முடியும். எங்களைப் போல நெருங் காத உறவு இருந்தா... இப்பப் பாரேன். எங்க ரெண்டு பேரைத் தவிர இங்கே யாரும் இல்லை. ஆனாலும் எங்க மனசு நெருங் கவே இல்லை. நடுவில் ஒரு நூறு பேர் இருப் பது போல் ஒரு பிரமை...''

அம்மாவின் பேச்சு மொத்தத்தையும் கேட்ட உமா நீண்ட நேரம் சிந்தித்தாள்.

சிந்திப்பதே நல்ல அறிகுறிதான் என்ற நிம்மதியில் ஆயாசமாய்க் கண்களை மூடிக் கொண்டாள் ஜானகி.



## டு இன் ஒன் வடாம்

ஒரு படி அரிசியைக் களைந்து நிழலில் உலர்த்தி உருட்டிப் பிடித்தால் பிடிக்க வரும். விட்டால் உதிரும் பதத்தில்... இதனுடன் கால் கிலோ ஜவ்வரிசி சேர்த்து மிஷினில் அரைக்க வேண்டும். உப்பு, காரம் குறைந்த அளவில் இருக்குமாறு உப்பையும், பச்சை மிளகாயையும் அரைத்துக் கொள்ளவும்.

ஒரு டம்ளர் மாவுக்கு ஆறு தம்ளர் தண்ணீர் என்ற அளவில் அடிகனமான பாத்திரத்தில் போட்டுக் கலக்கி, கூடவே அரைத்த விழுதையும் போட்டு... அடுப் பில் வைத்து நன்றாக மாவு வெந்து குழம்பாக வரும் வரை கிளறிக் கொண்டே இருக்க வேண்டும். இறக்கிய பின் எலுமிச்சம் பழச்சாறு பிழிந்து கிளறி... பிளாஸ்டிக் பேப்பரில் அப்பளம் அளவிற்கு வருமாறு கரண்டியால் மொண்டு மொண்டு வட்ட வடிவமாய் இட, பொரித்தால் அரிசி அப்பளம் போலவே சுவையாய் இருப்பதுடன் வடாம் இடுவது போல சுலபமான முறை ஆகும்.

— ரமா சந்திரசேகர்.

# அனுபவங்கள் பாடங்கள்

ஜீவா ரொம்பப் பயந்து போனாள். அவள் கணவர் ஜகதீசன் ஆபீஸ் வேலையாக திருச்சிக்குப் போயிருக்கிறார். அவர் இல்லாத சமயம் குழந்தைக்கு ஜுரம் வந்து விட்டதே என்று பயந்தாள். பாபு இரண்டு நாட்களுக்கு முன் பள்ளிக்கூடத்திலிருந்து வரும்போதே ஜுரத்தோடு வந்து படுத்து விட்டான். மறுநாள் காலையும் ஜுரம் விடவில்லை. ஜீவா உடனே பாபுவை அழைத்துக் கொண்டு இரண்டு தெரு தள்ளி இருக்கும் டாக்டர் கீர்த்தியின் டிஸ்பென்ஸரிக்கு அழைத்துப் போனாள்.

அவர் சிறுவன் பாபுவை பரிசோதித்து மருந்தும் எழுதிக் கொடுத்தார், அவர் கூறிய படியே ஜீவா நேரம் தவறாமல் பாபுவுக்கு மருந்து கொடுத்தாள். அவர் சொன்னபடி பிரட்டும் பாலும் கொடுத்தாள். பகலில் சிறிது ஜுரம் குறைந்தது. ஆனால் மறுபடி இரவு அதிகமாகி விட்டது. இரண்டாவது நாள் காலை வேலைக்காரியைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டு ஜீவா மட்டும் டாக்டரிடம் போய்ச் சொன்னாள். அவர் நோயாளியைப் பார்த்துதான் மருந்து தரணும் என்று, தானே அவர்கள் வீட்டுக்கு வருவதாகக் கூறி அவளை அனுப்பி விட்டார். சிறிது நேரம் கழித்து ஸ்கூட்டரில் அவரே வந்து பரிசோதித்து வேறு மருந்து கொடுத்து 'இன்ஜெக்ஷனும் போட்டார். ஜீவாவிடம்,

''இந்தாங்கம்மா. இந்த மருந்தில் குணமாகணும். அப்படி ராத்திரி மறுபடி ஜுரம் வந்தால் இந்த நம்பருக்குப் போன் பண்ணுங்கள். நான் வரேன்'' என்று நம்பரை ஒரு சீட்டில் எழுதிக் கொடுத்தார்.

''டாக்டர்! இவனோட அப்பா வெளியூருக்குப் போயிருக்கார். குழந்தைக்கு பயம்... ஒண்ணுமில்லையே... என்ன ஜுரம் இரண்டு நாளாக விடவில்லை...'' என்று கலவரத்தோடு கூறினாள்.

அவர் ஆதரவாக, ''பயப்படும்படி ஒண்ணுமில்லேம்மா. ஆனாலும் சின்னக் குழந்தை தாங்க வேண்டுமே. பயப்படாதீர்கள். நாளைக்குள் குணமாயிடும்...'' என்று கூறி விட்டு கிளம்பிப் போய் விட்டார். அன்று பகலும் ஜுரம் கொஞ்சம் குறைந்தது. ஆனால் மாலை இரண்டு முறை வாந்தி எடுத்தான். குழந்தை சுருண்டு படுத்து விட்டான். இரவு நேரம் ஆக ஆக ஜீவா ரொம்ப பயந்து போனாள்.

ஏழு வயது சிறுவன். எப்பவும் ஓடி ஆடி விளையாடும் குழந்தை இரண்டு நாளாக வாடிய மலர் போல படுத்திருக்கிறான். அன்ன ஆகாரமில்லை. முகம் சோர்ந்து, உடல் துவண்டு குழந்தை படும் அவஸ்தை ஜீவாவின் அடி வயிற்றைக் கலக்கியது. இரவு பத்து மணி ஆகி விட்டது. தனிமையில், இருளில் பயம் அதிகரித்தது. பாபு கண் திறக்காமல் படுத்திருந்தான். நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள். அனலாகக் கொதித்தது. சட்டென்று எழுந்தாள். தலையைக் கோதி கொண்டு புடவையைச் சரியாக உடுத்திக் கொண்டு கையில் சில்லறையுடன் மெதுவாக வெளியே வந்து கதவைப் பூட்டினாள். வேகமாக தெருவில் நடந்தாள்.

தெருவில் இரண்டொரு விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. எல்லா வீடுகளிலும் படுத்து விட்டதற்கு அடையாளமாக இருள் சூழ்ந்திருந்தது. சில வீடுகளில் டெலிவிஷன் ஒலி மெதுவாகக் கேட்டது. அந்தத் தெரு முனையில் ஒரு கடை இருக்கிறது. அங்கு 'போன்' இருப்பது ஜீவாவுக்குத் தெரியும். வேக வேகமாகப் போனாள். கடைப் பையன் ஷட்டர்களை இறக்கிக் கொண்டிருந்தான். ஜீவா மூச்சு இறைக்க,

''தம்பி... தம்பி, அவசரமா... ஒரு போன் பண்ணணும்'' என்றாள். நல்ல வேளை அவன் அனுமதிக்க, அவனுக்கு நன்றி கூறி விட்டு டாக்டர் கொடுத்த நம்பருக்குப் போன் பண்ணினாள். மறு முனையில் ஒரு பெண் குரல் கேட்டது. அவள் விஷயத்தை அவசரமாகக் குரல் நடுங்கக் கூறினாள். மறு

ரத்னா

முனையிலிருந்து வந்த பதில் அவளைக் கலங்க வைத்தது.

''சாரி, மேடம்...'' என்றவள் போனை வைத்து விட்டு கடைப் பையனிடம் இரண்டு ரூபாயைக் கொடுத்து விட்டுத் தெருவில் நடந்தாள். நடை சோர்ந்து கண்களில் கண்ணீர் பெருக தள்ளாடி வீட்டுக்கு வந்தாள். கதவைத் திறந்து பிறகு தாளிட்டாள். அறையில் பாபு அப்படியே படுத்திருந்தான. மெதுவாக அவனை எழுப்பி மருந்தைக் கொடுத்தாள். சூடாக வெந்நீர் கொடுத்தாள். பிறகு படுக்க வைத்துப் போர்த்தினாள். பக்கத்திலேயே அமர்ந்தாள். இரண்டு நாளாக அவளும் சரியாக எதுவும் சாப்பிடவில்லை. உடல் களைப்பு, உள்ளத்தில் தவிப்பு அதோடு தனிமையின் பயங்கரம் அவளை மிகவும் சோர்வடையச் செய்தது. எப்ப கண் மூடினாளோ தெரியாது. கதவு தட்டப்படும் ஒலி கேட்டு திடுக்கிட்டு கண் விழித்தாள். பாபு ஒருக்களித்துப் படுத்திருந்தான். ஜுரம் இருந்தது. பொழுது விடியும் நேரம் என்பதை அறிந்து கொண்டாள். கதவைத் திறந்து பாலை வாங்கிக் கொண்டாள். அன்று ஜகதீசன் வந்து விடுவான் என்ற உணர்வில் சிறிது தெளிந்தாள்.

பாபுவுக்கு மருந்தும் பாலும் கொடுத்தாள். பிறகு அவளும் காப்பி கலந்து குடித்தாள். சிறிது நேரத்தில் ஜகதீசனும் வந்து விட்டார். கணவரிடம் குழந்தையின் உடல் நிலையை விவரித்தாள். ஜகதீசன் பதறினார். காப்பி குடித்து, குளித்து உடை மாற்றிக் கொண்டு,

''ஜீவா! நான் போய் ரிக்ஷா கூட்டிண்டு வரேன். நீயும் ரெடி பண்ணிக்கோ. குழந்தையை டிஸ்பென்சரிக்கு அழைத்துப் போகலாம்'' என்றார்.

ஜீவாவும் குளித்து உடை மாற்றிக் கொண்டு பாபுவுக்கும் வேறு சட்டை நிஜாரைப் போட்டாள். ரிக்ஷா வந்ததும் குழந்தையை ஜகதீசன் போர்த்தியபடி தூக்கிக் கொள்ள ஜீவா கதவைப் பூட்டிக் கொண்டு கிளம்பினார்கள். டிஸ்பென்ஸரியில் டோக்கன் வாங்கிக் கொண்டு முதலாவதாக அமர்ந்து கொண்டனர். டாக்டர் கீர்த்தியும் நர்ஸுகளும் சில நிமிடத்தில் வந்தனர்.

முதல் பேஷண்டாக பாபுவை துக்கிக் கொண்டு ஜீவாவும் ஜகதீசனும் உள்ளே நுழைந்தனர்.

நர்ஸ் பாபுவை பெஞ்சில் படுக்க வைத்தாள்.

''என்னம்மா, குழந்தை எப்படியிருக்கிறான்? ராத்திரி ஜுரம் குறைந்ததா...'' என்று வினவியபடி டாக்டர் கீர்த்தி ஸ்டெதஸ்கோப்பை கையில் எடுத்தார்.

''ராத்திரி ஜுரம் குறையலை டாக்டர். சாயந்திரம் இரண்டு தரம் வாமிட் பண்ணினான்...'' என்றாள் ஜீவா தழைந்த குரலில்.



டாக்டர் திரும்பினார்.

''வாமிட் பண்ணினானா? ஜுரம் குறையலையா? ஏம்மா போன் பண்ண சொன்னேனே பண்ணியிருந்தால் ராத்திரியே வந்து பார்த்திருப்பேனே...'' என்றார். ஜீவா தலையைக் குனிந்து கொண்டாள்.

''இவரும் ஊரில் இல்லை. இருட்டு நேரத்தில் நான் எங்கே டாக்டர் போய் போன் பண்ணுவேன். குழந்தையை... தனியாக விட்டுட்டு ராத்திரியில் யார் வீட்டில் போய் 'போன்' பண்றது... பயம்மாக இருந்தது டாக்டர்...''

''என்னம்மா... பயம். அக்கம் பக்கத்திலே இருக்கிறவங்க ஆபத்து சமயத்தில், உதவ



மாட்டாங்களா...'' என்றவர், 'நீங்க இரண்டு பேரும் கொஞ்ச நேரம் வெளியில் இருங்க'' என்றார். ஜகதீசனும் ஜீவாவும் தயங்கியபடி அறையிலிருந்து வெளியேறினார்கள். டாக்டர் நர்ஸிடம் அவசர அவசரமாக ஏதேதோ கட்டளை இட அவளும் பரபரப்புடன் இயங்க ஆரம்பித்தாள்.

ஜகதீசன் ஜீவாவைப் பார்த்து,

''ஏன் ஜீவா, நாலாவது வீட்டிலே போன் இநக்கே பண்ணியிநக்கலாமே.. எதுக்குப் பயப்படணும்?'' என்றார். ஜீவா கண்களில் நீர் வழிந்தது.

''அவர்கள் நேற்று காலையிலே காஞ்சிபுரம் போய்ட்டாங்க... தெரு முனையில் இருக்கிற கடையையும் ஒன்பது மணிக்கே மூடிட்டாங்க..'' என்றாள். முப்பது நிமிஷங்களுக்குப் பிறகு டாக்டர் வெளியே வந்தார்.

''நல்லவேளை... இப்பவாவது குழந்தையை அழைச்சிட்டு வந்தீங்களே... இன்னும் தாமதம் பண்ணியிருந்தால் குழந்தையை காப்பாற்றியிருக்க முடியாது. நீங்க ராத்திரி போன் பண்ணியிருந்தால் இத்தனை சிரியஸ் ஆகியிருக்காது. சரி, ஏதோ அதிர்ஷ்டம் சரியாயிடுத்து. இன்னும் இரண்டு நாள் குழந்தை இங்கே இருக்கணும். அட்மிட் பண்ணிட்டேன். நீங்க கூட இருக்கலாம்...'' என்றார் ஜீவாவைப் பார்த்து.

பிறகு ஜகதீசனிடம், ''சார், நீங்க இந்த

மருந்துகளை வாங்கிண்டு வாங்க. குழந்தைக்கு ஜூஸ், பால் கொடுக்கலாம். பயம் ஒண்ணுமில்லை...'' என்றவர் அடுத்த பேஷண்டை கவனிக்கச் சென்றார்.

''ஜீவா! நீ குழந்தையிடம் இரு... நான் போய் மருந்து வாங்கிக் கொடுத்து விட்டு வீட்டுக்குப் போய் ஒரு ரசம் சாதம் பண்றேன். உனக்கு டிபன் செட்டில் கொண்டு வரேன்..." என்று வெளியே சென்றார். இரண்டு நாட்கள் கழித்து பாபு நன்றாகக் குணமானதும் அவனை டாக்டர் டிஸ்சார்ஜ் செய்து வீட்டுக்கு அனுப்பினார்.

பாபுவை தன் டிஸ்பென்ஸரியில் அட்மிட் செய்த அன்று இரவு டாக்டர் கிர்த்தி வீட்டுக்குச் சென்றதும் மிகவும் அலுப்புடன் சோபாவில் சாய்ந்தார். எலுமிச்சம் பழ சர்பத்தை டம்ளரில் நிரப்பிக் கொண்டு வந்த மனைவி மஞ்சரி, அவரிடம் கொடுத்து விட்டு,

''ஏங்க, ரொம்ப டயர்டா இருக்கீங்களே... பேஷண்ட்ஸ் அதிகமா'' வினவினாள்.

''அதொன்றுமில்லை. மஞ்சு! இந்தக் காலத்தில் பெண்கள் எத்தனை எத்தனை துணிச்சலான வேலைகள் செய்கிறார்கள். மலை ஏறுகிறார்கள், பைலட்டாக இருக்கிறார்கள். இன்னும் எத்தனையோ செய்கிறார்கள். அப்படியும் சிலர் இன்னும் பயந்தாங்குளிகளாக இருக்கிறார்களே. அழுவதா சிரிப்பதா தெரியலை. ஒரு குழந்தை ஏழு வயதுப் பையன் இரண்டு நாளாக அனலாக ஜுரம். ராத்திரி ஜுரம் அதிகம் ஆனா 'போன்' பண்ணச் சொல்லியிருந்தேன். அந்தம்மாவுக்கு இருட்டில் நாலாவது வீட்டுக்குப் போய் 'போன்' பண்ண பயமாக இருந்ததாம் சொல்றாங்க. இன்னிக்குக் காலையில் கணவன் வெளியூரிலிருந்து வந்ததும் குழந்தையுடன் டிஸ்பென்ஸரிக்கு வந்தாங்க. ரொம்ப சீரியஸ்தான். நல்லவேளை இன்ஜெக்ஷன்களும், மருந்துகளும் கொடுத்து ஜுரம் தணிந்து விட்டது. எனக்கே ரொம்ப டென்ஷனாயிடுத்து.



பழைய நாலு முழ வேஷ்டியில் நாலைந்து பைகள் தைத்து வைத்துக் கொள்ளுங்கள். தானியங்களை முளைகட்ட, திரித்த பாலை வடிய வைத்து பனீர் செய்ய உபயோகப் படும்.

— கௌரி.

பொறுப்பில்லாத அம்மா அவங்க.. என்ன பயம். போன் பண்ணியிருந்தால் ராத்திரியே குணப்படுத்தியிருக்கலாம். ஏதோ அதிர்ஷ்டம் பையன் பிழைச்சுட்டான்...'' விவரித்த போது மஞ்சரியின் முகம் திடீரென்று கலவரமடைந்தது.

''நீ ஏன் மஞ்சு! பயப்படறே. பையன்தான் குணமாயிட்டானே. அந்தம்மா பயந்ததுதான் எனக்குக் கோபம் வந்துடுத்து...'' என்றார் டாக்டர்.

ஏதோ சொல்ல வாய் திறந்த மஞ்சரி சட்டென்று நிறுத்திக் கொண்டாள். அன்றிரவு அவளால் தூங்க முடியவில்லை. முதல் நாள் இரவு ஒரு பெண் போன் பண்ணின போது தான் சொன்னது அவள் நெஞ்சைக் குடைந்து கொண்டிருந்தது. ''குழந்தைக்கு ஜுரம் ரொம்ப அதிகமாக இருக்குங்க. வாந்தி வேறு பண்ணிட்டான். டாக்டரிடம் சொல்லுங்கள்'' அழும் குரல்.

மஞ்சரிக்கு ஆத்திரம். கணவன் அப்போதுதான் டிஸ்பென்சரியிலிருந்து வந்து அலுப்புத் தீர ஷவரில் குளித்துக் கொண்டிருப்பது தெரிந்தது. அவள் போனில் படபடத்தாள்.

''ஏம்மா.. டாக்டரும் மனிதர்தானே. அவருக்குக் குடும்பம் கிடையாதா? அவருக்கு ஓய்வு வேண்டாமா? இரவும் பகலும் நோயாளிகளிடமே இருந்தால் அவர் உடம்பு என்ன ஆகும்... காலையிலே டிஸ்பென்சரிக்கு வாங்க. இப்ப அவர் வர மாட்டார்'' என்று போனை வைத்து விட்டாள். கணவரிடம் சொல்லவில்லை. ஆனால் அந்தப் பெண் 'போன்' பண்ணவே இல்லை என்றாளாமே, ஏன் ஏன் பொய்ச் சொன்னாள்? எதற்காக? மஞ்சரி தவித்தாள். காரணம் என்ன? தெரிந்து கொள்ளத் துடித்தாள்.

அன்றுதான் பாபுவுக்கு சூடாக ரசம் சாதம் போட்டாள். அவனும் சாப்பிட்டு விட்டு அயர்வில் படுத்து விட்டான். ஜீவா கவலை நீங்கியவளாக தானும் சாப்பிட்டு விட்டு படுத்துக் கொள்ள நினைத்த சமயம் கதவு தட்டப்படும் சப்தம் கேட்டு வந்து திறந்தாள்.

''யார்...? யார் நீங்க... யாரைப் பார்க்கணும்'' வினவினாள். கதவருகில் நின்றிருந்த பெண்ணைப் பார்த்து வந்தவள் சிறிது தயங்கி,

''நான்.... நான் டாக்டர் கீர்த்தியின் மனைவி'' என்றாள். ஜீவா புரிந்து கொண்டாள்.

''வாங்க... உள்ளே வாங்க...'' வரவேற்றாள். உட்காருங்க... நாற்காலியை இழுத்துப் போட்டாள். மஞ்சரி உட்கார்ந்து நாலுபுறமும் கண்களை ஓட விட்டாள். ஜீவா ஆரம்பித்தாள்,

''குழந்தைக்கு இன்றுதான் சாதம் போட்டேன். அந்த ரூமில் தூங்கறான். இப்ப குணம் ஆயிடுத்து...'' என்று தானும் நாற்காலியில் அமர்ந்து கொண்டாள். சில

நிமிடங்கள் மௌனமாக இருந்த மஞ்சரி, தயங்கிய குரலில்,

''என்னை மன்னிச்சுடுங்கம்மா... அன்னிக்கு ராத்திரி போனில் ரொம்ப ஆத்திரமாகப் பேசிட்டேன். மன்னிச்சுடுங்கம்மா...'' என்றாள்.

''பரவாயில்லைம்மா. நீங்களும் என்னைப் போல ஒரு பெண்தானே. உங்கள் மனம் எனக்குப் புரியாதாம்மா. அலுப்புடன் வீடு வந்த கணவரை உடனே மறுபடி வெளியே அனுப்ப ஒரு மனைவிக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும்...'' என்றாள் ஜீவா.

''அன்னிக்கு ராத்திரி டாக்டர் வந்து ரொம்ப கோபமாக திட்டி விட்டாரம்மா...'' என்றாள் மஞ்சரி.

''ஏன்.. ஏன் உங்களையா திட்டினார். ஏன் நான்தான் 'போன்' பண்ணினதையோ நீங்க கோபமாகப் பேசியதையோ யாரிடமும் சொல்லவில்லையே. அவர் உங்களை ஏன் திட்டணும்...?''

''இல்லே.. என்னைக் கோபிக்கவில்லை. உங்களைத்தான் கோபித்தார். பொறுப்பில்லாத தாய் என்றார். இந்தக் காலத்தில் பெண்கள் எத்தனையோ தைரியமாக துணிச்சலாக இருக்கிறார்கள். அந்தம்மா போன் பண்ண அடுத்த வீட்டுக்குப் போக பயப்பட்டிருக்காங்க என்று படபடத்தார். நீங்க 'போன்' செய்ததை சொல்லவில்லை என்று எனக்குப் புரிந்தது. ஏன்ம்மா பொய்ச் சொன்னீங்க?'' மஞ்சரி ஆவலுடன் பார்த்தாள்.

''அப்ப.. அவர் உங்களைத் திட்டியிருப்பாரே...''

''ஆமாம் திட்டியிருப்பார். என்னைக் காட்டிக் கொடுக்கத்தானே உங்களுக்குத் தோன்றணும். அதுதானே இயற்கை. ஆனா நீங்க ஏன் நிஜத்தைச் சொல்லவில்லை. அது புரியலை.''

ஜீவா சில நிமிஷங்கள் மௌனமாக எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் ஏதோ பழைய நினைவுகளில் சென்று விட்டது போல மஞ்சரி உணர்ந்தாள். ஜீவாவின் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் தெறித்தது.

''உங்கள் வாழ்க்கையில் எந்த பூகம்பமும் ஏற்பட வேண்டாம் என்றுதான் உண்மையை மறைத்தேன். பல வருடங்களுக்கு முன், என் இருபதாவது வயதில் இதே தவறை நான் செய்தேன். ஒரு டாக்டரைக் காதலித்தேன். கல்யாணம் நிச்சயம் ஆயிற்று. ஒரு நாள் மாலை நாங்கள் சினிமாவுக்குப் போவதாக இருந்தோம். அந்தச் சமயம் ஒரு பேஷண்டின் வீட்டிலிருந்து போன் வந்தது. நோயாளி பெண் சீரியஸாக இருப்பதாக சொன்னார்கள். நான் 'டாக்டர் இல்லை வெளியே போய் விட்டார்' என்று பொய்ச் சொல்லி விட்டேன். இளமையின் திமிர். காதலின் வெறி என் புத்தியை அடக்கி விட்டது.



ஜவ்வரிசி வடகத்தைக் கொஞ்சம் பெரிய சைஸில் செய்தால் தணலில் அல்லது காஸ் அடுப்பில் சுட்டுச் சாப்பிலாம். உடல் நிலை சரியில்லாதவர்களும் இதனைச் சாப்பிடலாம்.

— நவி.

அன்று ஆனந்தமாகச் சினிமா பார்த்தோம். மறுநாள் என் வாழ்க்கையில் பூகம்பம் ஏற்படப் போவதை உணராமல் உல்லாசமாக இருந்தேன். மறுநாள் அந்த பேஷண்ட் இறந்து விட்டாள். அந்தப் பெண்ணின் பெற்றோர் 'போன் செய்தோமே ஒரு பெண் டாக்டர் இல்லை வெளியே போய் விட்டார் என்று சொன்னாள்'' என்று டாக்டரிடம் சொல்லியிருக்கிறார்கள். அவர் வந்து என்னிடம் கேட்ட போது ஆமாம் சினிமாவுக்குக் கிளம்பும் போது போன் வந்தது. அதனால் அப்படிச் சொன்னேன் என்றேன். உடனே அவர் என்னைப் பார்வையாலேயே சுட்டு விட்டார். என்ன ஆத்திரம் என்ன கோபம்...

''சீ... நீ ஒரு பெண்ணா.... நீ ஒரு டாக்டருக்கு மனைவியாக ஆகத் தகுதி உள்ளவள் இல்லை. உன்னால் ஒரு பெண் இறந்து விட்டாள். எனக்கும் கெட்ட பெயர். மற்ற எந்த உத்யோகஸ்தர்களும் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் டாக்டர் அப்படி இருக்க முடியாது. அவனைக் கடவுளுக்கு அடுத்தபடியாகத்தான் நோயாளிகள் எண்ணுகிறார்கள். நம்புகிறார்கள். ஒரு டாக்டரின் கடமை முதலில் நோயாளிகளைக் கவனிப்பதுதான். பிறகுதான் குடும்பம், மனைவி, மக்கள். நல்லவேளை கல்யாணத்துக்கு முன்பாகவே உன்னைப் புரிந்து கொண்டு விட்டேன். கல்யாணம் பண்ணிக் கொண்டு இன்னும் எத்தனை பேஷண்டுகளை சாகடிப்பாயோ... வேண்டாம். உன்னை என்னால் மணந்து கொள்ள முடியாது என்று போய் விட்டார். தவறு என்று உணர்ந்து எல்லோரும் எவ்வளவோ சொல்லியும் அவர் மனம் மாறவில்லை. கல்யாணம் நின்று விட்டது'' ஜீவா பெருமூச்சுடன் நிறுத்தினாள். தொடர்ந்தாள்,

''நிச்சயித்த கல்யாணம் நின்று போனதால் நாலைந்து வருடங்கள் எனக்கு வரனே வரவில்லை. கடைசியில் இவரை இரண்டாந் தாரமாக மணந்து கொண்டேன்...''

''அப்ப... அப்ப... அந்தக் குழந்தை...?'' மஞ்சரியின் மன எண்ணம் ஜீவாவுக்குப் புரிந்தது.

''இல்லை. இல்லை., முதல் மனைவிக்குக் குழந்தை இல்லை. பாபு என் மகன்...'' என்றவள்,

''நான் அறியாமையால் செய்த தவறினால் எத்தனை கஷ்டங்கள் பட்டேன். அதனால் நீங்கள் அன்று ஆத்திரத்துடன் 'போன்' செய்த போது எனக்குக் கோபம் வரவில்லை. வாழ்க்கையில் அனுபவித்த பாடம். உங்களைக் காட்டிக் கொடுக்கவில்லை. நீங்கள் காதலியோ மனைவியோ எனக்கு அன்று தெரியாது. எனக்கு நேர்ந்த துன்பம் உங்களுக்கும் நேர வேண்டாம் என்றுதான் 'போன்' செய்ய, வெளியே போக பயம்மாக இருந்ததாகப் பொய் சொன்னேன். அன்றிரவு நான் பட்ட கவலையும் துயரமும் பல வருடங்களுக்கு முன் இறந்த அந்த நோயாளிப் பெண்ணின் பெற்றோரின் துயரத்தை எனக்கு உணர்த்தியது. நீங்களும் இப்பொழுது புரிந்து கொண்டிருப்பீர்கள்..'' என்றாள்.

மஞ்சரி எழுந்து ஜீவாவின் கரங்களைப் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

''நன்றியம்மா. ரொம்ப நன்றி. நானும் இனி நோயாளிகளின் துயரத்தைப் போக்குவதையே முதல் கடமையாக நினைப்பேன். என் கணவரின் கடமைக்கு உதவியாக இருப்பேன்'' என்றாள்.

---

# என்னை அதிர்ச்சிக்குள்ளாக்கிய சம்பவம்



எந்த ஒரு பொருளையும் எடுத்த இடத்தில் வைக்கும் பழக்கம் இருந்தால் மிகவும் நல்லது. அப்படி இல்லாததால் ஏற்பட்ட சம்பவம் இது. எங்கள் வீட்டுக்குத் தேவையான ரேஷன் சாமான்களை வேலைக்காரியிடம் ரேஷன் அட்டை கொடுத்தனுப்பி வழக்கமாக வாங்குவோம். அவளும் எங்களுக்குச் சர்க்கரை, பாமாயிலும் அவளுக்கு அரிசியும் வாங்கிவருவாள்.

சென்ற பள்ளி விடுமுறையில் வீடு கொள்ளா விருந்தினர். பிள்ளைகள் அமர்க்களம். அந்த மாதமும் அவள் ரேஷன் அட்டையைக் கொண்டு சென்று அரிசி வாங்கிக்கொண்டாள். அட்டையை நான் மறந்துவிட்டேன். அதற்கு அடுத்த மாதம் வாங்கும் நாள் வந்த போதுதான் அட்டையைத் தேடினால் எங்கு பார்த்தும் கிடைக்கவில்லை. எனக்குக் கைகால் நடுக்கமெடுத்தது. அழுகை தொண்டையில் அடைத்துக்கொண்டது. புது அட்டை வாங்குவது சாமான்யமா? என்ன செய்வது? வேலைக்காரியின் வீட்டுக்கு ஓடினேன். சொன்னேன்.

"நீ அட்டையைத் தரவில்லை என்னிடம். உங்கள் வீட்டில்தான் இருக்கும், தேடிப்பார்" என்றாள். நான், ''கொஞ்சம் பாரேன்'' என்ற பிறகு அவளும் பத்து நிமிடம் தேடிவிட்டு, ''இல்லை அம்மா அப்பொழுதே கொடுத்துவிட்டேன்,'' என்று சத்தியம் வேறு செய்து அழுகிறாள். வீட்டிலிருப்பவர்கள், அவள் யாருக்கானும் விற்றிருப்பாள் என்று ஏதேதோ திட்டினார்கள். ரேஷனுக்கு அவளையும் அழைத்துச் சென்று எங்கள் அட்டையின் பதிவு எண்ணைச் சொல்லி, வந்தால் எடுத்து வைக்கும்படி சொல்லிவிட்டேன்.

அன்று முழுவதும் அதே நினைவு. தூங்கவில்லை. சாப்பிட முடியவில்லை. மாலை கணவர் வந்தால் இதை எப்படிச் சொல்வதென்று ஒரே பயம். மாலை அவர் வந்த பின் மெதுவாகச் சொன்னேன். 'அவளுக்கு அரிசி வாங்க அட்டை கொடுக்காவிட்டால் சீவி விடுவாளா? என்னால் புது கார்டுக்கெல்லாம் அலைய முடியாது' என்று கத்தினார்.

என் பெரியபையன், ''எல்லா இடமும் தேடினாயா? அந்த டேபிள் டிராவில் மேலே வைத்தால் அது சில நேரம் கீழ் டிராவில் விழுந்துவிடுமே, அதைத் திறந்துபார் என்றான். அங்கு மட்டும் நான் பார்க்கவில்லை. உடனே அந்த டேபிளின் கீழ் டிராவில் பார்த்தால் ஆபீஸ் பைல்களுடன் அட்டையும் ஒட்டிக் கொண்டுள்ளது.

அடடா எனக்கு ஏற்பட்ட ஆனந்தத்தைப் பார்க்க வேண்டுமே! அந்த அட்டையை எடுத்த இடத்தில் வைக்க சில நிமிடத்தை ஒதுக்காததால் ஏற்பட்ட வேதனை எவ்வளவு. டென்ஷன் எவ்வளவு. அனைவருக்கும் என் நிகழ்ச்சி ஒரு பாடமாக இருக்கட்டும்.

— மலர்விழி.



# குழந்தைகள் மலர்

பரீட்சையெல்லாம் நடந்துக்கிட்டே இருக்கும். அந்த மும்முரத்திலே யாரும் மலரம்மாவை மறந்துடலையே!

நிறையக் குழந்தைகள் எழுத ஆரம்பிச்சிருக்காங்க. ஒரு சிறுவன் சத்தான உணவைச் சாப்பிடணும்னு எவ்வளவு அழகா எழுதியிருக்கான் தெரியுமா?



தேனீ தந்த பாடம்

என் போன்ற சிறுவர், சிறுமியர்களுக்குக் காய்கள், கீரை, பழங்கள் எல்லாம் பிடிப்பதில்லை. ஆனால், கேக், சாக்லேட், சிப்ஸ், கூல்டிரிங்க்ஸ் எல்லாம் ரொம்பப் பிடிக்கும். ஒருநாள், அம்மா தேனீக்களின் வாழ்க்கையைப் பற்றிச் சொன்னார்கள்.

அதாவது ''ஒரு இராணித் தேனீ, பல்லாயிரக்கணக்கான முட்டைகளை இடும். அவற்றிலிருந்து வெளி வரும் புழுக்கள், சாப்பிடும் உணவைப் பொறுத்தே, வேலைக்காரி (அ) ராணித் தேனீக்களாக ஆகின்றன. 'ராயல் ஜெல்லி' என்ற சத்தான உணவைச் சாப்பிடும் புழுக்கள் ராணித் தேனீக்களாகின்றன. சத்துக் குறைவான 'தேனீ ரொட்டி' மட்டும் சாப்பிடுபவை வேலைக்காரத் தேனீக்களாகின்றன!''

அதனால் வளரும் வயதில் சத்துக்கள் நிறைந்த கீரை, காய்கள், பழங்கள் சாப்பிட்டால் எல்லாவற்றிலும் முதன்மையாக வரலாம் என்றார்கள். அன்றிலிருந்து கீரை, காய்களை ஒதுக்காமல் சாப்பிடுகிறேன்.

— பா. கௌதம் அரவிந்த்.

நான் சொன்னதைப் படிச்சுட்டு அம்மா பேச்சைக் கேட்டானாம். அவன் அனுபவத்தை எழுதியிருக்கான்...

நான் செய்த ஒரே நல்ல காரியம் என்ன தெரியுமா? இனி அம்மா பேச்சைத்தட்டாமல்கேட்கவேண்டும் என்ற தீர்மானமே!

எங்கம்மா அப்படி என்னதான் சொன்னார்கள் என்று கேட்கிறீர்

# பெண்ணாகவே இரு

"அம்மா, எனக்கு இன்னும் கொஞ்சம் உருளைக்கிழங்கு கறி போடும்மா."

"வேண்டியதெல்லாம் போட்டாச்சு சீக்கிரம் சாப்பிட்டு விட்டு, கடையிலே போய் சீக்கிரமாய் ஒரு அப்பளக் கட்டு வாங்கிண்டு வா."

"என்னம்மா, அந்தப் பாத்திரத்திலே நிறைய கறி மூடி வெச்சிருக்கியே போடும்மா."

"ஏண்டி உனக்கு ஒரு தடவை சொன்னாப்புரியாது? பாவம் குழந்தை ஸ்கூல்லேருந்து பசியோட வருவான் அவனுக்கோசரம் எடுத்து வெச்சிருக்கேன். பொம்மனாட்டி எதோ கிடைச்சதைச் சாப்பிட்டுட்டு போக வேண்டியதுதானே. ம், சீக்கிரம் வளவளன்னு பேசிண்டிருக்காதே."

சித்ராவின் முகம் கூம்பியது. தட்டை எடுத்து, எச்சில் இடத்தைத் துடைத்து விட்டு, சுருணையைப் போட்டுத் துடைத்தாள்.

"அம்மா, அப்பளம் எதுக்கும்மா?"

"எதுக்கெடுத்தாலும் கேள்வி கேட்கறதே வேலையாப் போச்சு. எல்லாம் உன் அண்ணன் ரமேஷுக்குத்தான். அவனுக்கு அப்பளம் பொரித்தால்தான் சாப்பிடுவான்னு உனக்குத் தெரியாதா?"

தனக்கு எல்லாம் ஒரு அளவுதான் என்று போடும் அம்மா, அண்ணாவுக்கு மட்டும் ஒன்றுக்கு இரண்டு வகையாகச் சமைத்துப் போடுவது ஏன் என்று அந்தப் பிஞ்சு மனம் நினைத்தது. ஆனால் அதை வாய் விட்டுக் கேட்க அஞ்சினாள்.

"சரி, அப்பளத்துக்குக் காசு குடு."

"இப்ப ஏது காசு? கணக்கிலே எழுதிக்கச் சொல்லு ஒண்ணாந்தேதி தரேன்னு சொல்லு." கடன் வாங்கியாவது பிள்ளையின் வயிற்றை ரொப்பணுமா? "போம்மா, கடன் சொல்ல எனக்கு வெக்கமாயிருக்கு. அண்ணாவுக்காகத்தானே ஸ்பெஷலா அப்பளம் பொரிக்கறே அவனையே வாங்கிண்டு வரச் சொல்லு."

அலமேலு சீறினாள். "சீக் கழுதை, பொட்டச்சியா லக்ஷணமாய் சொன்ன பேச்சுக் கேட்காம எதிர்த்தா பேசறே. மூணு வேளையும் வயிறு புடைக்க கொட்டிக்கறே பாரு, அந்தத் திமிருடி. ஸ்பெஷலாம் ஸ்பெஷல். ஆமாண்டி அவன் நாளைக்கு எங்களையெல்லாம் காப்பாத்தப் போறான். நீ ஒரு நாளைக்குக் கல்யாணமாகி இன்னொருத்தர் வீட்டுக்குப் போறவதானே. பேசாம போய் நான் சொன்ன வேலையைக் கவனி."

"ரமேஷ் சாப்பிட வரியா?"

"எனக்குப் பசியில்லேம்மா."

அம்மா கொடுத்த பாக்கெட் மணியில் ஹோட்டலுக்குப் போய் நண்பர்களுடன் ஒரு வெட்டு வெட்டிவிட்டு வந்த விவரத்தைச் சொல்லவில்லை. அடுத்தபடியாக என்ன காரணம் சொல்லி அடுத்த பாக்கெட் மணிக்கு வழி பண்ணலாம் என்று தீவிரமாக யோசித்தான்.

"வாடாப்பா, உனக்குப் பிடிக்குமேன்னு உருளைக்கிழங்கு கறியும் பொரிச்ச அப்பளமும் பண்ணி வெச்சிருக்கேன்."

"உன்னோட தொந்தரவாப் போச்சு அம்மா. இஷ்டப்பட்டபோது சாப்பிடக் கூட இந்த வீட்டில் சுதந்திரமில்லை."

"சரி, பசியில்லேன்னா கொஞ்ச நேரம் கழிச்சு சாப்பிடு. வயிறு சரியில்லையா?"

"ஆமாம்மா, வயத்தை லேசா வலிக்கிறது." பொய் அத்தனையும் பொய். பதறிவிட்டாள் அலமேலு. "ஐயோ வயத்து வலின்னா முதல்லேயே சொல்லக் கூடாது. இரு கஷாயம் வெச்சுத் தரேன்."

பயந்தே போனான் ரமேஷ். கிணறு வெட்டப் பூதம் கிளம்புகிறதே.

"இல்லம்மா, ஒரு வேளை பசி அதிகமானதாலே இருக்குமோ என்னவோ. நான்

எஸ்.அன்னபூரணி

ஒரு பத்து நிமிஷம் கழிச்சுச் சாப்பிட வரேன். கஷாயமெல்லாம் வேண்டாம்.''

ஏற்கெனவே வயிறு ரொம்பியிருந்ததால் பேருக்குக் கொறித்தான். அம்மாவைத் தாஜா செய்து கிரிக்கெட் கிளப்புக்குச் சந்தா கட்ட வேண்டுமென்று சொல்லி அம்மாவிடம் பணத்தைக் கறந்து விட்டான். பிள்ளையின் கோரிக்கையை நிராகரிக்க மனதின்றி அலமேலு சாமி உண்டியலைத் தஞ்சமடைந்தாள். மனத்திற்குள் கபில்தேவ், ஸ்ரீகாந்த் மாதிரி தன் மகனும் ஒரு பெரிய புகழ் பெற்ற கிரிக்கெட் வீரனாக வருவதை போலக் கற்பனை செய்து பூரித்துப் போனது அந்தத்தாய் மனம்.

''இன்னிக்கு ராத்திரி என் ப்ரெண்ட ஸோட எனக்கு டின்னர். நான் வர லே டானால் கவலைப் படாதே.''

''சரிப்பா.''

ராத்திரி சாப்பாட்டு நேரம். ''ஏம்மா அண்ணாவுக்குன்னு எடுத்து வெச்ச சாப்பா



டெலலாம் அப்படியே இருக்கே.''

''ஆமாண்டி, நீ கரிச்சுக் கொட்டினே. தழந்தைக்கு வயத்து வலி வந்து சரியாகவே சாபபிடல்ல. இந்தா நீயே கொட்டிக்கோ.''

சித்ராவின் தந்தை வைத்தியநாதன் குறுக்கிட்டார். ''ஏன் அலமு, குழந்தை அப்படி என்ன சொல்லிட்டான்னு நீ இப்படிக் கோவிச்சுக்கறே? நீ சாப்பிடும்மா சித்ரா.. உங்க அண்ணன்தான் என்னமோ அவளைத் தாங்கப் போறான்னு நினைப்பு. இதப் பாரு, உனக்குப் பிள்ளை உசத்தின்னா, எனக்குப் பொண்ணு உசத்தி'' சித்ரா முகம் மலர்ந்தாள்.

''ஹூம், செல்லம் குடுத்துக் குட்டிச் சுவராக்குங்கோ. நாளைக்குக் கல்யாணமாகிப் புக்காம் போனால் எல்லோரும் அம்மா வளர்த்திருக்கா பாருன்னு என் தலையைத் தான் உருட்டுவா.''

''அம்மா நான் பாஸ். ஸ்கூல்லேயே பர்ஸ்ட் வந்திருக்கேன்மா.''



''சரி, சந்தோஷம். அதுக்கு ஏன் இப்படித் துள்ளறே? பொம்மனாட்டி கொஞ்சம் அடக்க ஒடுக்கமா இருக்க வேண்டாமா? ரமேஷோட ரிஸல்ட் இன்னும் இரண்டு நாள்லே வரதாம். நல்லபடியா மார்க் வாங்கிப் பாஸாகணும்னு பிள்ளையாரை வேண்டியிருக்கேன்.''

''என்னம்மா நான் பாஸானதிலே உனக்கு சந்தோஷமில்லையா? எப்பவும் அண்ணாவைப் பத்தியே கவலைப்பட்டுண்டிருக்கியே.''

''இல்லையடி கண்ணே. நீ நல்லா படிக்கறது சந்தோஷம்தான். ஆனாலும் அது விழலுக்கு இறைச்ச தண்ணிதானே. உன்னைப் பெரிய படிப்புப் படிக்க வெச்சால், அதுக்கு மேலே படிச்ச மாப்பிள்ளையைத் தேடணும். இல்லை உன் படிப்பை மதிச்சு வரதட்க்ஷிணை வேண்டாம்னு சொல்லிடப் போறாளா? படிப்புச் செலவு போறாதுன்னு கல்யாணச் செலவு வேறே. நம்ம சக்திக்கு அது முடியுமா? அப்படியே இருந்தாலும் நாம வளர்த்த மரம் காம்பவுண்டுச் சுவரைத் தாண்டிப் பக்கத்தாத்திலே பலன் குடுக்கற மாதிரி, நீ சம்பாதிக்க ஆரம்பிக்கற நேரத்தில அந்தப் பலனையெல்லாம் உன்புக்காத்துமனுஷாதானே அனுபவிப்பா? கஷ்டப்படறது ஒருத்தர், பலனை அனுபவிக்கறது ஒருத்தரா? அதனால்தான் நான் ரமேஷ் படிப்புக்கு முக்கியத்துவம் குடுக்கறேன். புரியறதா?''

''அம்மா கவலைப் ப்டாதேம்மா. நான் நல்லா படிச்சு முன்னுக்கு வந்து, உன்னையும் அப்பாவையும் கடைசிவரை கஷ்டப் படாம பார்த்துக்கறேன். ப்ளீஸ் மேலே படிக்க வேண்டாம்னு மட்டும் சொல்லிடாதே அம்மா.''

ஆச்சரியத்தில் விழிகளை மலர்த்தி முக வாயில் கையை வைத்து ''இந்தப் பொண்ணு பேசறதைப் பார்த்தியோல்லியோ? சரிதான். உன்னைக் கல்யாணம் பண்ணாமல் வெச்சிருந்து நாங்க வயத்துல நெருப்பைக் கட்டிண்டிருப்போமா? உனக்குக் கிறுக்குத்தான் பிடிச்சுருக்கு போ. ஏதாவது நடக்கற காரியமா பேசுவியா? சரி, சரி, எனக்குத் தலைக்கு மேலே வேலையிருக்கு. உன்னோட வெட்டிப் பேச்சுப் பேச நேரமில்லை.''

''அலமேலு ரமேஷ் பாஸாயிட்டான்.''

''பாஸாயிட்டானா? தெரியுமே. பிள்ளையாரப்பா, நான் வேண்டிண்டபடி உனக்கு நூத்தியெட்டுத் தேங்காய் உடைச்சிடறேன்.''

''இது வேறேயா? சரி சரி, வெறுமனே பாஸானா மட்டும் போறுமா? நிறைய மார்க் வாங்கினால்தானே அவன் கேக்கற மெடிகல் ஸீட் கிடைக்கும்.''

அவர்கள் பயந்தபடியே நடந்தது. ரமேஷ் வாங்கியிருந்த மார்க்குக்கு மெடிகல் அட்மிஷன் கிடைக்கவில்லை. 'படித்தால் டாக்டர் படிப்பு. இல்லையென்றால் காலேஜ் பக்கமே போகமாட்டேன்,'' என்றான் அவன். வீடு ரெண்டு பட்டது. எல்லோரும் கெஞ்சிப் பார்த்தார்கள். ஆனால் ரமேஷ் அசைந்து கொடுக்கவில்லை. பொறுத்துப் பொறுத்துப் பார்த்த வைத்யநாதன் கடைசியில் கோபத்துடன் கத்தினார். 'மார்க் வாங்கத் துப்பில்லை. பெரிய கண்டிஷன் போடறானோ? எக்கேடோ கெட்டுத் தொலை' — துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு வெளியே போய்விட்டார்.

''ஏம்ப்பா, இப்ப என்ன பண்ணனுங்கறே? உங்க அப்பாவும்தான் என்ன செய்வார் சொல்லு. நீ மெடிகல் காலேஜிலேதான் சேருவேன்னு அடம் பிடிச்சா எப்படி?''

''அப்படிக் கேளும்மா. மெட்ராஸ்ல கிடைக்கல்லேன்னா என்ன? வெளியூரில் கிடைக்கும். என்னோட ப்ரெண்டு ஒருத்தன் என்னை விடக் கொறச்சலா மார்க் எடுத்திருக்கான். ஆனா்லும் அவனுக்கு அட்மிஷன் கிடைச்சுடுத்து.''

''அது எப்படிப்பா?''

''எல்லாம் பணம் பண்ற வேலை. அவன் அப்பா டொனேஷனா ஒரு லட்ச ரூபா கொடுத்திருக்கார்.''

''அடேயப்பா, ஒரு லட்சமா? அத்தனை பணத்திற்கு நாம எங்க போறது?''

''அவன்தாம்மா சொன்னான். எனக்குக் கன்ஸெஷன் வாங்கித்தரேன்னு சொல்லியிருக்கான். ஒரு அம்பதாயிரம் பொரட்ட முடிஞ்சா, நீ கனவு கண்ட மாதிரி நான் டாக்டராயிடலாம். அஞ்சு வருஷம்

> **ஒரு நிமிட தோசை**
>
> அரை ஆழாக்கு பச்சரிசி, அரை ஆழாக்கு புழுங்கல் அரிசி, ஒரு மேஜைக் கரண்டி வெந்தயம், இரண்டு மேஜைக் கரண்டி உளுத்தம் பருப்பை ஊற வைத்து, மாவாட்டி முதல் நாள் வைத்து, அடுத்த நாள் சற்று நீர்க்கக் கரைத்து, ஒரு கரண்டி மாவு விட்டு மெல்லிய தோசை வார்த்து மூடியினால் மூடி உங்கள் வாட்சைப் பாருங்கள். ஓரிரு நிமிடத்திற்குள் தோசை ரெடி. தோசையைத் திருப்பிப் போடக் கூடாது. இந்தத் தோசை வார்க்க, துடைதுணி இருந்தாலே போதும்! எண்ணெய் வேண்டாம். குண்டாக இருப்பவர்கள், இதய நோய் இருப்பவர்களுக்கு இது மிகவும் உகந்தது. இதையே ஆப்ப தோசை என்றும் அழைக்கலாம்.
>
> — காந்தா.

நிமிஷமா ஓடிப் போயிடும்.''

''ஐம்பதாயிரம் எப்படிப்பா பொரட்ட முடியும்?''

''ஏன் முடியாது? அப்பாவை பிராவிடண்ட் பண்டிலே கடன் வாங்கச் சொல்லு. நீ உன்னோட நகையையும், சித்ரா கல்யாணத்துக்குச் சேர்த்து வெச்சிருக்கற நகையையும் வித்துடு. அவள் கல்யாணத்துக்காக 'பிக்ஸெட் டெபாஸிட்'ல போட்டிருக்கிற பணத்தையும் எடுத்தா எப்படியாவது புரட்டலாம்.''

''உங்க அப்பா இதுக்குச் சம்மதிப்பாரா?"

'சம்மதிக்க வைக்கறது உன் பொறுப்பு. இல்லாட்டா ரமேஷ்னு ஒரு பிள்ளையே எனக்கு இல்லேன்னு நினைச்சுக்கோ.'

விருட்டென்று வெளியே போனான். அலமேலு திக்பிரமையடைந்து நின்றாள்.

''என்ன அலமேலு அசடாட்டம் பேசறே. உம் பையன்தான் ஏதோ புத்தி கெட்டு சொல்றான்னா நீயும் அவனுக்கு சப்போர்ட் பண்ணறியே.''

''நமக்கு இருக்கிறது ஒரே பிள்ளை. அவனோட படிப்புக்குத்தானே செலவழிக்கப் போகிறோம். நாளைக்கே அவன் டாக்டராயிட்டா பணமா கொண்டு வந்து கொட்டமாட்டானா?''

''நான் தெரியாமத்தான் கேக்கறேன். நமக்கு சித்ரான்னு ஒரு பெண்ணும் இருக்கா தெரியுமோ? அவளுக்குக் கல்யாணம் காட்சின்னு பண்ண வேண்டாமா? பிராவிடன்ட் ஃபண்டுல கடன் வாங்கி இருக்கறதையெல்லாம் எடுத்துட்டா, நான் ரிடயரானப்புறம் யாரு நம்பளைக் காப்பாத்துவா?''

''உங்களுக்கு எப்பத்தான் பிள்ளை மேலே நம்பிக்கை வருமோ? அவன் சம்பாதிக்க ஆரம்பிச்சுட்டா ஒரு வருஷத்திலே சித்ரா கல்யாணத்தைப் பண்ணிட மாட்டானா? ஒரு டாக்டரோட அப்பா ரிடையர்மென்டைப் பத்தி ஏன் கவலைப்படணும்?"

''ஒருவேளை ரமேஷ் நம்மளைக் கைவிட்டுட்டான்னா?''

''ஏன் இப்படியெல்லாம் பேசறேள்? உங்களோட வாக்குவாதம் பண்ண எனக்கு நேரமுமில்லை, சக்தியுமில்லை. முடிவா என்னதான் சொல்றீங்க?''

இதுவரை நடந்த உரையாடலைக் கவனித்துக் கொண்டிருந்த சித்ரா குறுக்கிட்டு, ''அப்பா, என்னைப் பத்திக் கவலைப்படாதீங்க. அம்மா சொன்னபடி கேட்டா அம்மாவுக்கும் திருப்தியாயிருக்கும். அண்ணாவுக்கும் சமாதானமாயிருக்கும். இப்ப நடக்கறதைப் பத்திக் கவலைப்படறதை விட்டுட்டு, எதிர்காலத்தைப் பற்றிப் பயப்படுவானேன்?

தனக்கு ஆதரவாக எவரும் இல்லையென்று உணர்ந்த வைத்தியநாதன் அரை மனதுடன் சம்மதித்தார்.

''எப்படியோ போங்க. பட்டாத்தான்



அரிசியில் இருக்கும் களிமண் கட்டிகள் நீரில் கரைந்து விடுவதற்கு இதோ ஒரு வழி! அரிசி களைவதற்கு முன் உப்பு போட்டு தண்ணீரில் அரிசியைக் கொட்டி ஐந்து நிமிடம் வைத்திருந்தால் களிமண் கட்டிகள் கறைந்து போகும். பிறகு அரிசியைக் களைந்து உலையில் போடுங்கள். ஒரு களிமண் கட்டி கூட இருக்காது.

— கீதா.

தெரியும் சில பேருக்கு.''

''ஆமாம் இப்படிப் பேசறவர்தான் நாளைக்கு நான்தான் டாக்டர் ரமேஷோட அப்பான்னு சொல்லிப் பெருமைப்பட்டுக்குவார். அந்தக் காலம் வரட்டும் அப்போ பேசிக்கறேன்.''

அந்தக் காலமும் வந்தது. ஒருவழியாக ரமேஷ் டாக்டர் பட்டம் பெற்றான். ஆனால் அதற்குள் அந்தக் குடும்பம் பட்டபாடு! அப்பப்பா, சொல்லி முடியாது. இதற்கிடையில் சித்ரா நல்லபடியாகப் ப்ளஸ் டூ தேறினாள். அவளுக்கு எதுவும் டொனேஷன் கொடுக்காமலேயே மருத்துவக் கல்லூரியில் இடம் கிடைக்கும் வாய்ப்பு இருந்தும், அவள் பெண் என்ற ஒரே காரணத்தினால் அவள் குடும்பத்தாரால் அந்த வாய்ப்பு மறுக்கப்பட்டது. அம்மா பழைய பல்லவியையே பாடி பெண் அதிகம் படிப்பதற்குத் தடையாக இருந்தாள். ரமேஷ், எங்கே விட்டால் இவள் தன்னையும் ஒரு படி மிஞ்சி விடுவாளோ என்று அஞ்சி ஏதேதோ சாக்குச் சொல்லி ஆட்சேபணை எழுப்பினான். ஒருவழியாக அப்பாவும் சித்ராவும் ஆலோசனை செய்து, கடைசியில் அவள் பி.காம்., சேர்ந்தாள். ரமேஷ் ஹவுஸ் சர்ஜன் முடித்து விட்டு வெளியே வரும் போது சித்ரா பி.காம். முதல் வகுப்பில் தேறி ஒரு வங்கியில் வேலையில் சேர்ந்து விட்டிருந்தாள். ரமேஷின் மேல்படிப்பினால் பொருளாதார ரீதியில் மிகவும் க்ஷீணித்து விட்டிருந்த அந்தக் குடும்பத்திற்கு சித்ராவின் வருமானம் ஓரளவுக்கு உதவி செய்தது. இப்போது அலமேலுவுக்குக் கூடச் சித்ராவின் மீது சிறிது மதிப்பேற்பட்டிருந்தது.

ஆச்சு, ரமேஷ் டாக்டராகப் பிராக்டீஸ் பண்ண ஆரம்பிச்சுட்டா நம்ம எதிர்காலக் கனவுகளைச் செயல்படுத்தி விடலாம்' என்று நினைத்திருந்த அலமேலுவின் காதில் இடியாக இறங்கியது அந்தச் செய்தி.

ஆம், ரமேஷ் இதற்குள் நந்தினி என்ற பெண்ணின் கண் அசைவில் விழுந்து விட்டிருந்தான். அவளும் அவனைப் போலவே டாக்டர்தான். பெரிய செல்வந்தரின் ஒரே பெண். அவள் அப்பா அந்தஸ்து பார்க்காமல் ரமேஷுக்குப் பெண்ணைத் தரச் சம்மதித்தார். அவர்கள் இருவரும் டாக்டர் தொழிலை ப்ராக்டீஸ் பண்ண ஒரு கிளினிக் ஏற்படுத்தித் தரவும் சம்மதித்தார். ஆனால் ரமேஷிடம் அவர் போட்ட ஒரே நிபந்தனை, அவன் தன் வீட்டாரைத் துறந்து விட்டு, வீட்டு மாப்பிள்ளையாக இருக்க வேண்டும் என்பதே. தன்னையறியாமலேயே சுயநலத்திற்கு அடிமையாகிவிட்டிருந்த ரமேஷ் அவரது நிபந்தனைக்குத் தயாராகி விட்டான். அவனது இப்போதைய பிரச்னை இந்த விஷயத்தை எப்படித் தன் வீட்டாருக்குத் தெரியப்படுத்துவது என்பது தான். நந்தினியின் அழகும், அந்தஸ்தும் அவன் மனத்தை மயக்கிப் புத்தியைப் பேதலிக்கச் செய்திருந்தன.

ஒருநாள் மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தான். "அம்மா, எனக்குக் கிளினிக் ஏற்பாடு செய்ய முடிந்தால்தான் என் தொழிலைத் தொடங்க உதவியாயிருக்கும்."

"அதுக்கு என்னப்பா செய்யணும்?"

"என்ன செய்யணுமா? நிறையப் பணம் செலவழிக்கணும். இந்த மாதிரி ஏழைக் குடும்பத்தில் பிறந்துட்டு அதெல்லாம் எனக்குக் கிடைக்குமா?"



மின்னணு கடிகாரங்களில் தண்ணீர் பட்டு விட்டால் அதன் திரையில் எண்கள் தெரியாமல் மறைந்து விடும். உடன் கடிகாரம் பழுது என நினைக்காமல் சூரிய ஒளியில் சிறிது நேரம் கடிகாரத்தை வைத்தால் அது மீண்டும் எண்களை காட்ட தயாராகி விடும்.

— ஆர். எஸ். கிதாராணி.

"என்னப்பா, இப்படிச் சொல்லிட்டே. நம்ம வீட்ல சொத்து சுகம்னு ஏதும் பெரிசா இல்லாட்டாலும், இருக்கிற கொஞ்சத்தையும் உன் படிப்புக்காகச் செலவழிச்சுட்டோமே. அதுக்கு மேலே என்ன எதிர்பார்க்கறே?"

"என்னம்மா ஏதோ பெரிசா செஞ்சுட்டா மாதிரி பேசறயே. நீங்க ஒரு மடங்கு செலவழிச்சுட்டுப் பத்து மடங்கு அதைச் சுட்டிக்காட்ட வேண்டாம். அதுவே நந்தினியோட அப்பாவைப் பாரு. அவளுக்கு எது வேணுமானாலும் தரத் தயாரா இருக்கார். அப்பான்னா அவரில்ல அப்பா?"

தன் கணவரைக் குறைத்துப் பேசியது அலமேலுவுக்கு மனதைப் புண்படுத்தியது.

"அது யாரப்பா நந்தினி?"

"என்னை மாதிரி அவளும் ஒரு டாக்டர் தாம்மா. என் காலேஜ்மேட். நீங்கள் எல்லோரும் சம்மதிச்சா அவர் எனக்குக் கூடக் கிளினிக் கட்டித் தருவதாய்ச் சொல்லியிருக்கிறார்."

"நீ சொல்றது எனக்கு ஒண்ணுமே புரியலை ரமேஷ். அவர் எதுக்குத் தன் பணத்தை உனக்காகச் செலவழிக்கணும்? கடனாகத் தருகிறாரா? அப்படியிருந்தால் அதுக்கு நாங்க சம்மதம் தர மறுப்போமா?"

ஆஹா, மனத்திலிருப்பதை வெளிப்படுத்தும் சந்தர்ப்பம் வந்து விட்டது. அம்மாவிடம் குழைந்தான்.

"அம்மா, என் செல்ல அம்மா இல்லே. அவ அப்பா நான் நந்தினியைக் கல்யாணம் செய்துக்கச் சம்மதிச்சா, கல்யாணச் சீரா கிளினிக் கட்டித் தருவாரும்மா. அது மட்டுமல்ல, அவ அப்பாவோட ஏராளமான சொத்துக்கு நந்தினிதான் ஒரே வாரிசு."

பாவம், வெகுளி அலமேலுவுக்கு இதனால் ஏற்படப்போகும் பிரச்னைகள் புரியவில்லை. தன் பிள்ளையின் படிப்பையும், அழகையும் மெச்சி, பெரிய பணக்காரர் ஒருவர் பெண்ணைத் தர முன்வந்திருப்பதாக எண்ணினாள்.

அன்று மாலை தன் கணவர் வீடு திரும்பியவுடன் தன் மகனுக்கு வரவிருக்கும் அதிர்ஷ்டத்தை விவரித்தாள். அவர் மௌனமாக எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்து விட்டு அவளைப் பரிதாபத்துடன் பார்த்தார்.

"என்னங்க இது? ஒரு நல்ல விஷயம் சொல்றேன். கேட்டுச் சந்தோஷப்பட மாட்டேங்கறீங்களே. இதுல கூட கஞ்சத்தனமா?"

"நீ மொதல்ல அந்த ரஞ்சனியோ, நந்தினியோ அவளை இங்கே அழைச்சுண்டு வரச் சொல்லு. அவ்வளவு பணக்கார இடத்திலிருந்து வர பொண்ணுக்கு நம்ப வீடு பிடிக்கறதான்னு பார்க்கலாம்."

நறுக்குத் தெரித்தாற்போல நாலு வார்த்தை பேசி விட்டுப் போய் விட்டார். தன் கணவரின் விட்டேத்தியான இந்தக்

கணம் அவளுக்குச் சிறிது வருத்தத்தைக் கொடுத்தாலும், ஏதோ இந்த மட்டில் ருத்ர தாண்டவம் ஆடாமல் விஷயத்தைக் காது கொடுத்துக் கேட்டாரே என்ற திருப்தி ஏற்பட்டது.

அன்று ரமேஷுக்கு நிலைகொள்ளவில்லை. முதன் முதலாக நந்தினி வீட்டுக்கு வரப் போகிறாள். திடீரென்று வீடு ரொம்பவும் பழசாக இருப்பதைப் போலத் தோன்றியது. அவள் வந்தால் எதில் அமரச் சொல்வது, சாப்பிட என்ன கொடுப்பது என்று பலவிதமாக சிந்தனை. அம்மாவும், சித்ராவும் எப்படியெப்படி உடை உடுத்த வேண்டும், எப்படிப் பேச வேண்டும் என்றெல்லாம் உத்தரவு கொடுத்திருந்தான். அப்பாவிடம் மட்டும் நெருங்க பயம்.

"என்ன அண்ணா, இவ்வளவு அமர்க்களம் பண்றே. என்ன அவ உன்னைப் பிள்ளை பார்க்க வராளா?"

குட்டக் கையை ஓங்கியவனிடமிருந்து தப்பித்து ஓடினாள். முதலில் தனக்கு வரப் போகும் மருமகளைப் பார்க்க ஆவலாகத்தான் இருந்தாள் அலமேலு. ஆனால் ரமேஷ் பண்ணும் அமர்க்களத்தைப் பார்த்தவுடன் அவள் மனதுக்குத் திருப்தியாக நடந்து கொள்ளத் தெரிய வேண்டுமே என்ற கவலை ஏற்பட்டது.

வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. சிவப்பு மாருதிக் காரைப் பூட்டிச் சாவியை எடுத்துக் கொண்டு உள்ளே நுழைந்தாள் நந்தினி. சிவந்த நிறம். நளினமான தோற்றம். நுழையும்போதே உயர்ரக வெளிநாட்டு செண்டின் மணம் தூக்கியடித்தது.

"பார்த்து குனிந்து வா. இது அந்தக் காலத்து வீடில்லையா" நந்தினி அவன் குரலின் தொனி அந்தப் பழைய வீட்டில் தான் இருக்க நேர்ந்ததற்கு மன்னிப்புக் கேட்பது போலி ருந்தது. பக்கத்து வீட்டிலிருந்து கடன் வாங்கி வந்திருந்த நாற்காலியை அவசர அவசரமாகப் பிரித்துப் போட்டான். வீட்டைச் சுற்றிலும் அலட்சியமாகப் பார்த்தவள் வெகு நாசூக்காகத் தன் ஒற்றை விரலால் நாற்காலியில் அழுக்கு இருக்கிறதா என்று சோதிப்பது போல் பார்த்து விட்டு அதன் நுனியில் அமர்ந்து கால் மேல் கால் போட்டுக் கொண்டாள். இதற்குள் அலமேலு தன் கையால் கிளறிய கேசரியைக் கொண்டு வந்து வைத்தாள். பழமையில் ஊறிய அவளுக்கு நந்தினி அமர்ந்திருந்த விதம் அதிர்ச்சியைக் கொடுத்தாலும் மகனை நினைத்து அஞ்சி வாயே திறக்கவில்லை. பின்னாலேயே சித்ரா காப்பியுடன் வந்தாள். ரமேஷ் அவளருகே நின்று கொண்டு அவள் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றான். அவளுக்குத் தன் வீட்டுச் சூழ்நிலை பிடிக்குமோ பிடிக்காதோ என்ற பயம் அவன் முகத்தில் வெளிப்படையாகத் தெரிந்தது. அங்கு நிலவிய மௌனத்தைக் கிழிக்க எண்ணி அலமேலு இரண்டு வார்த்தைகள் பேசினாள்.

"நீ எங்க வீட்டுக்கு வந்ததிலே ரொம்பச் சந்தோஷம் அம்மா. ரமேஷ் உன்னைப் பற்றி அடிக்கடி பேசிக் கொண்டிருப்பான்."

பதிலொன்றும் சொல்லாமல் நந்தினி ஒரு சிறிய புன்னகை செய்தாள். அவர்களுடன் பேசுவது கூடத் தன் கௌரவத்திற்கு இழுக்கு என்று நினைத்தாளோ என்னவோ.

"இதுதான் என் சிஸ்டர் சித்ரா" அறிமுகப்படுத்தினான் ரமேஷ்.

"ஹலோ" — சித்ரா பதிலுக்கு ஹலோ சொன்னாள். அப்பா தன் அறையிலிருந்து எழுந்து வரவில்லை. நந்தினிக்கு அங்கு இருப்புக் கொள்ளவில்லை என்பது தெளிவாகத் தெரிந்தது.

"கிளம்பலாமா ரமேஷ்?" பெருமாள் மாடு மாதிரி தலையசைத்தான்.

அவள் பின்னாலேயே தாஸானு தாஸனாகத் தன் பிள்ளை போவதையே பார்த்துக் கொண்டிருந்த அந்தத் தாயின் நெஞ்சில் ரத்தக் கண்ணீர் வடிந்தது. தன் தாயின் வருத்தத்தை உணர்ந்து கொண்ட சித்ரா ஏதும் பேசாமல் மௌனமாயிருந்தாள்.

கொஞ்ச நாளில் எவருடைய சம்மதத்தையும் எதிர்பார்க்காமல் ரமேஷ் திருமணத்திற்குப் பச்சைக் கொடி காட்டி விட்டான். திருமணம் தடபுடலாக நடந்தது. ஒரு பெரிய இடத்துக் கல்யாணத்துக்குரிய அத்தனை சிறப்பம்சங்களும் அதில் காணப்பட்டன. வரிசையாகக் கார்கள், பேண்டு வாத்தியம், கச்சேரி என்று அமர்க்களப்பட்டது.



சிறு எவர்சில்வர் டப்பாவில் ஈர மணலில் இஞ்சியைப் போட்டு வைத்தால் இஞ்சி உலர்ந்து போகாது. ஒரு வாரத்துக்கு மூன்று முறை மணலை நனைத்துக் கொண்டே இருக்க வேண்டும். ஈரம் வற்றக் கூடாது. ஆற்று மணல் தான் வேண்டும். கடல் மண்ணில் போடக்கூடாது. இஞ்சி கெட்டு விடும்.

— கீதா.

அந்தத் திருமணத்தில் ஒட்டாமல் இருந்தவர்கள் ரமேஷின் குடும்பத்தினர்தான். அவர்களை யாரும் லட்சியம் செய்ததாகவே தெரியவில்லை. அப்பா வைத்தியநாதன் வழக்கம் போல எதிலும் பற்றற்றவராக இருந்தார். அலமேலுவுக்குத் தன் கணவரை ஏறெடுத்தும் பார்க்கத் துணிவில்லை. எவ்வளவு பெரிய தீர்க்கதரிசி அவர்? இனி வருங்காலம் எப்படியோ? கல்யாணத்தன்றே தங்களை லட்சியம் செய்யாத பிள்ளை பிற்காலத்தில் எப்படி இருப்பானோ? அவள் கட்டிய கோட்டைகள் அவள் கண் முன்னாலேயே தரைமட்டமாவதைப் பார்க்க அவளுக்குச் சகிக்கவில்லை. சித்ரா பார்வையிலேயே தன் பெற்றோரின் மனத்துன்பத்தை உணர்ந்து கொண்டு விட்டாள். ஏதும் செய்ய இயலாமல் அவள் மனம் பரிதவித்தது.

ஆயிற்று, கல்யாணம் முடிந்ததும் ரமேஷ், நந்தினியின் வீட்டில் சென்று குடியேறி விட்டான். கடந்த ஒரு மாதத்தில் ஒரே ஒரு முறைதான் பெற்றோர்களைப் பார்க்க வந்தான். அதுவும் தனியாகத்தான் வந்தான். நந்தினி வரவில்லை. வந்தவன் சிறிது நேரம்தான் இருந்தான். புது மனைவியின் மோகமும், புதுப் பணத்தின் கவர்ச்சியும் அவனை அடியோடு மாற்றி விட்டிருந்தது.

''அம்மா, இந்தா சம்பளக் கவர். வாங்கிக் கொள். நீயும், அப்பாவும் கிழக்குப் பார்த்து நில்லுங்கோ, நமஸ்காரம் பண்றேன்.''

நெகிழ்ந்து போயினர் பெற்றவர்கள். ''கடவுளே உனக்கு நன்றி! பிள்ளையின் நடத்தையினால் புரையோடிப் போயிருக்கும் புண்ணுக்குத் தடவும் மருந்தைப் போல் ஒரு பெண்ணையும் கொடுத்தாயே நன்றி.''

''அலமு, நடந்து போனதைப் பற்றியே கவலைப்பட்டுக் கொண்டிருந்தால் எப்படி? சித்ராவுக்கும் ஒரு கல்யாணத்தைப் பண்ணி வெச்சுட்டா நிம்மதி.''

''நானும் அதையேதான் நினைச்சேன். ஆனா ஒரு குந்துமணி தங்கம் கூட மீதி வைக்காமல் ரமேஷ் படிப்புக்குன்னு வித்தாச்சு. அவளுக்குன்னு சேர்த்து வெச்ச பணத்தையும் கரைச்சாச்சு. வெறுங்கைல முழம் போட முடியுமா? ரமேஷுக்குச் சொல்லியனுப்பலாம்னு இருக்கேன். அவன் நம்பளை வயசான காலத்திலே வெச்சுக் காப்பாத்தாட்டாப் போறது. அவனோட ஒரே தங்கையோட கல்யாணத்துக்காவது உதவி செய்யட்டும். அது கூட அவன் சம்பாதிச்சுக் கொடுக்க வேண்டாம். அவனுக்குன்னு நாம செலவழிச்ச பணத்தைக் கொடுத்தாக் கூடப் போறும்.''

ரமேஷ் சொல்லியனுப்பியபடி வந்தான். ''என்ன அம்மா கூப்பிட்டு அனுப்பினாயாமே? நானே வந்து உன்னைப் பார்க்கணும்னு இருந்தேன்.''

''ஒண்ணுமில்லேப்பா. சித்ரா கல்யாண விஷயமாகத்தான் பேச நினைச்சேன். அவளுக்குன்னு வைச்சிருந்த பணத்தையும், நகையையும்தான் உன் படிப்புக்கு உபயோகப்படுத்தியாச்சே. இப்ப என்ன செய்யலாம்னு உங்கிட்டே யோசனை கேட்கத்தான் கூப்பிட்டேன்.''

சிறிது எரிச்சலுடன், ''அதுக்கு என்ன செய்யறது? பெத்தீங்க. வளர்த்துப் படிக்க வைக்க வேண்டியிது உங்க கடமை. நான் வந்தது வேறு விஷயமாக.''

''பெற்றோரைக் கடைசி காலத்தில் வைத்துக் காப்பாற்ற வேண்டியது உன் கடமையில்லையா? ஒரே தங்கையின் திருமணத்திற்கு உதவி செய்ய வேண்டியது உன் கடமையில்லையா?'' நுனி நாக்கு வரை வந்து விட்ட கேள்விகளைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள். அவனே பேசட்டும் என்கிற மாதிரியாக அவன் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

''அம்மா, இன்னும் ஒரு மாசத்திலே நந்தினிக்கு டெலிவரி டயம். பாவம், அம்மா இல்லாத பொண்ணு. என்னதான் ஆட்கள் நிறைய பேர் இருந்தாலும் நம்ப மனுஷான்னு யாராவது இருந்தால்தான் சௌகரியப்படும். நானும் உன்னை ஒரு மாசத்துக்கு உதவிக்கு அழைச்சுண்டு வர்றதா வாக்குக் கொடுத்துட்டேன். நீ தயாராயிரு. அதைச் சொல்லிட்டுப் போகலாம்னுதான் வந்தேன்.''

அந்த நிலையில் அவன் சொன்ன செய்தி அலமேலுவுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஆனால் திடீரென்று அவள் முகம் மாறியது. 'என்ன பிள்ளை இவன்? தனக்குக் குழந்தை பிறக்கப் போகும் செய்தியைத் தன் பெற்றோரிடம் தெரிவிக்க வேண்டும் என்று கூடவா தெரியாது? நாங்கள் என்ன அந்நியர்களாகி விட்டோமா? சரி, இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டாவது அவனுடன் சிறிது நாட்கள் இருந்து விட்டு வரலாம்.

வைத்தியநாதன் அவள் போவதை ஆட்சேபித்தார்.

''நீ என்ன அவர்கள் வீட்டு வேலைக்காரியா? கூப்பிட்ட குரலுக்கு ஓடுவதற்கு. அவனுக்கும் தான் வெட்கம், ரோஷம் ஏதாவது இருக்கா?''

அப்பாவிடம் தனியாகப் பேசினாள் சித்ரா. ''அப்பா, அம்மாவைப் பார்த்தா பாவமாயிருக்குப்பா. போகட்டும்பா. ஒரு வேளை, பேரக் குழந்தையைப் பார்த்தாலாவது அவ மனசுக்கு நிம்மதி கிடைக்கலாமில்லையா? இதுவே அண்ணாவாக இல்லாமல் ஒரு மூணாம் மனுஷாள் வந்து உதவிக்குக் கூப்பிட்டா நீங்க அனுப்ப மாட்டீங்களா? அப்படி நினைச்சுக்கோங்க.''

அப்பா மனம் இளகினார். சித்ரா அவர்

கண்ணுக்கு மகளாகத் தெரியவில்லை தாயாகத் தோன்றினாள்.

பேரன் பிறந்து ஒரு மாதம் அங்கு உதவிக்கு இருந்து விட்டுத் திரும்பினாள் அலமேலு. அவள் முகவாட்டம் அதிகரித்திருப்பதாகப்பட்டது. அந்தப் புது சூழ்நிலை அவளுக்கு ஒத்து வரவில்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயமாகி விட்டது. மாமனாரும், மனைவியும் எள் என்பதற்குள் எண்ணெயாக நிற்கும் தன் பிள்ளை இனித் தனக்கு உதவ மாட்டான் என்பது புரிந்து விட்டது.

கொஞ்சம் கொஞ்சமாக அலமேலுவின் உடல்நிலை பாதிக்கப்பட்டது. அவர்கள் மூவருக்குமே அதன் காரணம் புலப்பட்டாலும், அதைப் பற்றி வெளியே விவாதிக்க அஞ்சினார்கள். ஏதாவது பேசினால் தொண்டையில் பந்தாக உருண்டு கொண்டிருக்கும் சோகம் கண்ணீராக வெளிவந்து விடுமோ என்ற பயம். உடல்நிலை பாதிக்கப்பட்ட போதும் ரமேஷிடம் ஒரு டாக்டர் என்ற முறையில் கூடப் போகவில்லை.

"அம்மா, டாக்டர் உனக்குக் கீரை நிறைய சேர்த்துக்கச் சொல்லியிருக்கார். நான் உனக்குன்னு ஸ்பெஷலா வாங்கிப் பண்ணி வெச்சிருக்கேன். மத்தியானம் மறக்காமல் போட்டுண்டுச் சாப்பிடு. எதையாவது நினைச்சுண்டு மனசைப் போட்டுக் குழப்பிண்டிருக்காதே. நீ கேட்ட புத்தகங்களெல்லாம் வாங்கி வெச்சிருக்கேன். பொழுது போகலைன்னா அதைப் படி. பிளாஸ்கில் காப்பி வெச்சிருக்கேன். சாயந்திரம் வந்து டிபன் பண்ணித் தரேன்."

பெண்ணின் பரிவும், பாசமும் அலமேலுவை உருக்கியது. செய்வான் என்று எதிர்பார்த்த பிள்ளை திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. எந்தப் பெண்ணை வஞ்சித்து, சாப்பாட்டு விஷயத்திலாகட்டும், பண விஷயத்திலாகட்டும் மட்டம் தட்டப்பட்டவள், அதையெல்லாம் மனதிலே வெச்சுக்காம ஓடாக உழைக்கிறாளே. இவளுடைய இந்தப் பரிவும், பாசமுமே என்னைக் கொல்கிறதே. மனதுக்குள் ரத்தக் கண்ணீர் வடித்தாள் அந்தத் தாய்.

அன்று ஞாயிற்றுக் கிழமை. அப்பா, சித்ரா, அம்மா மூவரும் ஒன்றாக அமர்ந்து சாப்பிட்டு விட்டுப் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தக் குடும்பத்தில் கொஞ்சம் கொஞ்சமாகப் பழைய கலகலப்பு களை கட்ட ஆரம்பித்திருந்தது.

"அம்மா, உனக்கு நான் ஒண்ணு சொல்றேன். இதைப் பாரு அண்ணாவையே நினைச்சு உருக மாட்டேன்னு எனக்கு நீ சத்தியம் பண்ணித் தரணும். இதுவரைக்கும் நான் உங்கிட்டே ஏதாவது கேட்டிருக்கேனா? நீ மனசை தேத்திண்டு பழையபடி ஜம்முனு வளைய வரணும். அப்பதான் எனக்குத் திருப்தியாயிருக்கும். என்னைப் பத்திக் கவலைப்படாதே. இந்தக் காலத்திலே எவ்வளவோ பெண்கள் கல்யாணம் பண்ணிக்காமலே இருக்காங்க. அவங்கள்ளாம் மத்தவங்களை விட எந்த விதத்திலும் குறைஞ்சு போயிடலை. ஒருவேளை உங்களையும் என்னோடவே கடைசி வரைக்கும் வெச்சுக் காப்பாத்தறதுக்குச் சம்மதிக்கற ஒரு நல்ல மனம் படைத்தவர் கிடைத்தால் உங்க திருப்திக்காக நான் கல்யாணம் பண்ணிக்கறேன். ஆனா ஒண்ணு, பிள்ளை கூட இருக்க முடியலையே என்கிற உன் கவலையைத்தான் என்னால் மாத்த முடியவில்லை. அதனாலென்ன, என்னை ஒரு பொண்ணா நினைக்காம உன்னோட இரண்டாவது பிள்ளையா நினைச்சுக்கோ."

அவள் வாயைப் பொத்தினாள் அலமேலு. "வேண்டாம்டி கண்ணே, நீ பிள்ளையாயிருக்கேன்னு சொல்லாதே. பெண்ணாகவே இரு. அப்புறம் நீயும் என்னை விட்டுட்டுப் போயிடுவே" சொல்லிய அந்த ஐம்பது வயதுக் குழந்தை பெண்ணைக் கட்டிக் கொண்டு கதறினாள்.



**பிரயாணக் களைப்பினால் ஓய்ந்து போய் அசதியாக இருந்தால், வீட்டுக்கு வந்தவுடன் வெந்நீரில் உப்பைக் கலந்து அந்த நீரில் பத்து நிமிடங்கள் கால்களை முக்கி வைத்தால் சுறுசுறுப்பு உண்டாகும்.**

**தையல் இலைகளைத் தைக்கும் போது இலைகளின் அடிப்பாகத்தைத் திருப்பி வைத்துக் கொண்டு ஈர்க்கினால் தைத்தால் மேல் பாகத்தில் உணவைப் பிசைந்து சாப்பிடும் போது ஈர்க்கு பிய்ந்து வராது. இலை தைப்பவர்களே! இது மாதிரி தையுங்கள். சாதத்தோடு ஈர்க்குத் துண்டுகள் கலந்து சாப்பிடும் போது தொண்டையிலும் மாட்டிக் கொள்ளாது.**

**— கீதா.**

# பாம்பையும் அடக்கும் பூண்டு!



**பூண்டின் மணம் இந்துக்கள் சிலருக்குப் பிடிப்பதில்லை. குறிப்பாக, என்னதான் இவர்கள் இதைச் சாப்பிடா விட்டாலும் காலப்போக்கில் இதைப் பலவித மருந்துப் பொருட்களாகவும், தைலங்களாகவும், சூரணமாகவும் ஏதோ ஒரு வகையில் 'காட்லிவர்' ஆயிலைப் போல் உண்ண வேண்டியிருக்கிறது.**

1. வெள்ளைப் பூண்டை பாலில் வேக வைத்து நசுக்கி முகப்பரு மீது தடவி வந்தால் பருக்கள் உடன் குணமாகும்.
2. உள்நாக்கு வளர்ந்து வேதனைப் படுத்தினால் வெள்ளைப் பூண்டின் சாற்றை விரலால் தொட்டு உள் நாக்கின் வளர்ச்சியில் தடவினால் அது சுருங்கி குணம் ஏற்படும்.
3. பூண்டின் சாற்றை தினசரி இரண்டு துளி வீதம் ஆறு வேளைகள் காதினுள் பிழிந்து வர செவிடு நீங்குகிறது.
4. வெள்ளைப் பூண்டை நவச்சாரத்துடன் அரைத்து வெண் குஷ்டம், வெள்ளைப் புள்ளிகள் மீது தடவி வர வெண்மை நிறம் மாறி இயற்கையான நிறத்தைப் பெறலாம்.
5. வெள்ளைப் பூண்டு, கடுகு, இஞ்சி, முருங்கைப் பட்டை இவற்றை பஞ்சு போல இடித்து காலின் இரு பெரு விரலிலும் கட்டி விட்டால் 45 நிமிடங்களில் ஜன்னி குணமாகும்.
6. வெள்ளைப் பூண்டும், ஓமமும் வெதுப்பி குடிநீர் கொடுத்தால் பால் வாந்தி எடுக்கும் குழந்தைகளுக்கு நலம் உண்டாகும்.
7. ஏழு நாட்கள் மட்டும் காலை வெறும் வயிற்றில் மூன்று புதிய கம்மாறு வெற்றிலையுடன் மூன்று பூண்டின் பருப்பை வைத்து நன்றாக மென்று சாப்பிட்டு வெந்நீர் அருந்தி வர ரத்த அழுத்த நோய் குறையும்.
8. வெள்ளைப் பூண்டையும் தைவேளை வேரையும் சிதைத்து காதில் பிழிந்தால் ஒற்றைத் தலைவலி போகும்.
9. வெள்ளைப் பூண்டு, வசம்பு, அவரி இவற்றைச் சிதைத்து நாசியில் நசியம் செய்ய சகலவிதமான வலிப்புகளும் நீங்கும்.
10. வெள்ளைப் பூண்டு, மிளகு, கெச்சக் காய் இலை சம அளவு எடுத்து நன்கு அரைத்துத் தினமும் சாப்பிட்டு வர கர்ப்பந்தரிக்கும்.
11. பிரசவித்த தாய்மார்களுக்குக் காய்ச்சிய பசும் பாலில் இரண்டு பூண்டு பற்கள் அப்படியே வேகவைத்து மசித்து சிறிது சர்க்கரை சேர்த்துக் குடித்து வந்தால் பால் சுரக்கும்.
12. வெள்ளைப் பூண்டு பாம்பையும் அடங்க வைக்கும். வெள்ளைப் பூண்டை நசுக்கி நல்ல பாம்பு முன் போட்டால் சீறாமல் படுத்து சுருண்டு கொள்ளும். பூண்டை நசுக்கிக் கையில் வைத்துக் கொண்டு பாம்பை கையில் பிடித்தாலும் துவண்டு விடும். அது கடிப்பதும் சீறுவதும் அடங்கி விடும்.

இவை மட்டுமின்றி இன்னும் எத்தனையோ மருத்துவ குணங்கள் பூண்டுக்குள் பொதிந்திருக்கின்றன. பூண்டு என்னும் போது அதனுடைய வாசனையை நினைத்து நம்மில் பலர் வெறுக்கின்றனர்.

வெள்ளைப் பூண்டின் விசேட மருத்துவ நலனைப் பெற அதைத் தோலுரித்து அப்படியே சாப்பிடலாம். அப்படிப் பிடிக்காதவர்கள் உணவில் அதிகம் சேர்த்து அதன் மருத்துவ குணங்களைப் பெறலாம். வடக்கே உள்ளவர்களும், தெற்கே கொங்கணிகளும் பூண்டை மிகுதியாக உண்டே நோய் நொடி இன்றி திடமாக வாழ்கிறார்கள்.

— சாந்தா ராமசாமி.

# இது எவ்வாறு.

## ஏனெனில் இது வெறும் கேசச் சாயம் (ஹேர்-டை) மட்டுமல்ல. பரிபூரண அழகுத் திட்டமாகும்.

எவ்வாறு அழகு திட்டமாகும்?

ஏனெனில் சாதாரண கேசச் சாயங்கள் (ஹேர்-டைகள்) உங்கள் கேசத்திற்கு செயற்கை தன்மையை அளித்து, வறண்டு பளபளப்பின்றி கோரைபோல் திகழச் செய்கின்றன. மேலும் நீங்கள் கேசச் சாயம் (ஹேர்-டை) பூசியுள்ள விஷயம் அனைவருக்கும் வெட்டவெளிச்சமாகிவிடும்.

புதிய லக்மே ஹேர்-டை மற்றும் ப்ரோட்டீன் கண்டிஷனர், நரைக்கும் கேசத்திற்கு பரிபூரண அழகு திட்டமாகும்.

### 100% இயற்கையான உணர்வு.

புதிய லக்மே ஹேர்-டை தனியே ஒரு சேஷேயுடன் வருகிறது.




லகமே ஹேர டை மடடுமே பரோடடீன் கணடிஷனருடன வருகிறது அதுவும் தனியே ஒரு சேஷேயில் வருகிறது

இதிலே பிரத்தியேகமாக ப்ரோட்டீன் உருவாக்கப்பட்டுள்ள கண்டிஷனர் உள்ளது. உங்கள் கேசத்திற்கு சாயமிட்டபின் அதை அலசுங்கள். அதன்பின் இந்த கண்டிஷனரை கேசத்தில் உபயோகியுங்கள்.

இந்த கண்டிஷனரில் கலந்துள்ள ப்ரோட்டீன் உங்கள் கேசத்திற்கு ஊட்டமளித்து அதன் இயற்கைத் தன்மையை வெளிக் கொணர்கிறது. அதன் விளைவாக உங்கள் கேசம் பட்டுப் போன்று மென்மையாக பளபளப்புடன் திகழ்கிறது.

### 100% இயற்கையான வண்ணம்.

சாதாரண கேசச் சாயங்கள் (ஹேர்-டை) உங்கள் கேசத்திற்கு செயற்கையான கருமையை அளிக்கின்றன.



லக்மே ஹேர்-டை மட்டுமே உங்கள் கேசத்தின் இயற்கை வண்ணத்துடன் பொருந்தும் வகையில் மூன்று வித வண்ணங்களில் கிடைக்கிறது

ஆனால் புதிய லக்மே ஹேர்-டை உங்கள் கேசத்தின் இயற்கையான வண்ணத்துடன் பொருந்தும் வகையில் மூன்று தனித்தனி வண்ணங்களில் கிடைக்கின்றது.

புதிய லக்மே ஹேர்-டை மற்றும் ப்ரோட்டீன் கண்டிஷனர்.

உங்கள் கேசத்திற்கு சாயமிட முற்றிலும் பாதுகாப்பான அழகான வழியாகும்.

## புதிய லக்மே ஹேர்-டை மற்றும் ப்ரோட்டீன் கண்டிஷனர்.




## நரைக்கும் கேசத்திற்கு பரிபூரண அழகு திட்டம்.

**பா**ங்கிலிருந்து வந்தவுடனே, முகம் கழுவி, ஆடை மாற்றி, ராஜி செய்த முதல் காரியம் பிராந்திய அலுவலகத்திலிருந்து வந்த அந்தக் கடிதத்தை மூன்றாவது முறையாகப் படிக்க எடுத்ததுதான். அவளுடைய தனிப் பெயருக்கு வந்த கடிதம். பிராந்திய அலுவலகத்தின் எலக்ட்ரானிக் டைப்ரைட்டர் அடித்துத் தள்ளிய நேர்த்திமிகு எழுத்துக்கள், மீண்டும் படிக்கலாம் என்ற ஆவலைத் தூண்டின.

அன்புள்ள திருமதி ராஜி அவர்களுக்கு,

நம் வங்கியின் தலைமை அலுவலகம் சார்பாக, எங்கள் சார்பாக, உங்கள் உழைப்புக்கு எங்களுடைய இதயங்கனிந்த வாழ்த்துக்கள். ஒரு வங்கியின் கிராமியக் கிளை இந்த அளவுக்குத் தமிழகத்தின் கவனத்தைத் தன்பால் ஈர்த்தது, நம் நிர்வாகத்திற்குப் பெரும் மகிழ்ச்சியை அளித்துள்ளது. நம் கிளை அமைந்துள்ள கிராமத்தில் திருவிழா சமயமாகப் பார்த்து, வங்கியின் சேமிப்பு வார விழாவை வைத்து, பலவிதமான நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்தீர்கள். முதல் முறையாகப் பெரும் அளவில் கிராம மக்களை, குறிப்பாகக் கிராமப் பெண்களை, நம் வங்கி விழாக்களில் பங்கேற்க வைத்த உங்கள் சாதுரியத்திற்கும் திறமைக்கும் நிர்வாகத்தின் பாராட்டுதல்கள்.

கிளையின் மேலாளராக இருக்கும் உங்கள் தலைமையில் இந்த கிராமக் கிளை இன்னும் பல சிறப்புக்களைப் பெறும்



என்று நிச்சயம் நம்புகிறோம்.

உண்மையுள்ள,

பிராந்திய மேலாளர் கையொப்பம் தெளிவாக இருந்தது.

இது ராஜிக்கு நிச்சயம் வெற்றிதான். சந்தோஷம் தாங்காமல் அவள் உமாவைக் கட்டி, முத்தம் கொடுத்திருக்க வேண்டும். ஆனால் முகத்தில் அந்த மகிழ்ச்சி இல்லை. இதயத்தில் ஒரு இனம் புரியாத வேதனை.

''ராஜி... ரா...ஜீ....'' மூச்சிறைக்க வரும் மாமியாரைப் பார்க்க ராஜிக்கு வேதனையாக இருந்தது. கோயிலுக்குப் போய் வருகிறாள். கையிலிருந்த பூஜைக் கூடையிலிருந்து எட்டிப் பார்க்கும் உடைத்த தேங்காய் சொல்லுகிறது. மாமியார் ராஜி பெயரில் ஒரு அர்ச்சனை செய்திருப்பாள். இது நிச்சயம். ராஜிக்குத் தெரியும். பெரும் பாலான இந்திய மாமியார்களைப் போல் அல்ல இவள்.

நம்பக் கடினமாக இருக்கும். ராஜிக்கு மாமியார்தான் எல்லாம்.

''மனசு சந்தோஷமா இருக்கு, ராஜி...'' கோயில் குங்குமத்தை மருமகள் நெற்றியில் அழகாக வைத்தவாறு மாமியார் தொடர்கிறாள். ''கோயில்ல, குளத்தங்கரைல, வழில இதே பேச்சுத்தான். இந்தக் கிராமத்துல இவ்வளவு ஒத்துமையா தைப்பூசத் திருவிழா நடந்ததில்லையாம். ஏதாவது சண்டைன்னு வருமாம். பாங்கே முன்னாடி நின்னு, இந்தத் தைப்பூசத் திருவிழாவோட, டெபாசிட் விழாவையும் சேர்த்து நடத்தி, ஊருக்கே பெருமையாக போச்சாம். பாங்க் வாசல்ல இவ்வளவு பொம்பளைங்க கூட்டம், இதுக்கு முன்னாடி இந்த அளவுல வந்ததே இல்லியாம். உனக்கு திருஷ்டிதான் சுத்திப் போடணும்...''



மாமியாருடைய அன்பு ராஜிக்கு இலேசாகக் கண்களில் நீரை வரவழைக்கின்றது.

''அசட்டுப் பொண்ணே...'' – மாமியார் கண்களைத் துடைக்கிறாள். நீ விரும்பினே. ஒரு பொண்ணாலயும் இதையெல்லாம் செய்ய முடியும்னு காமிக்க நெனைச்சே. செஞ்சும் காமிச்சுட்டே. வேற எதையும் மனசுல வச்சுக்காதே'' இதமாக அவளை அணைத்துக் கொள்கிறாள் மாமியார். ''எனக்கு இன்னிக்குக் கொண்டாடணும் போல இருக்கு. பால் பாயசம் வைக்கட்டுமா?''

அவளுடைய பதிலுக்குக் கூடக் காத்திராமல், மாமியாருடைய அந்தப் பெரும் சரீரம் அசைய முடியாமல் அசைந்து போவது, நீர்த் திரையினூடே ராஜிக்குக் கோடாய்த் தெரிகிறது.

ராஜி கொடுத்து வைத்தவள்தான். இருந்தாலும் மனம் அந்த சந்தோஷத்தில் திளைக்கவில்லையே...?

அவள் கண்கள் பின்னாலிருந்து இலேசாகப் பொத்தப்படுகிறது. காதில் கிச்சு கிச்சு மூட்டும் குரலின் கிளுகிளுப்பு.

''யூ ஹேவ் அச்சிவ்ட் இட் மம்மி. ஐ வாண்ட் டு கிஸ் யூ'' வெட்கமில்லாமல் வரும் வார்த்தைகள். உமாதான். சந்தோஷம் வந்தால் என்ன வேண்டுமானாலும் அம்மாவிடம் பேசுவாள்.

''பாண்டிச்சேரி ரேடியோவுல இப்பத்தான் வச்சான். ஒரு பெண்மணி ஒரு கிராம வங்கியின் மேலாளராக அமர்ந்து, அந்தக் கிராமத்தையே இப்படித் தன் கைக்குள் போட்டுக் கொள்ள முடியும் என்று காட்டியிருப்பது மனத்திற்கு நிறைவு தரும் விஷயம்.'' அதுக்கு மேலே கலெக்டர் பேசினது தான் எனக்குத் தெரியுமே...''

தாயின் கண்ணீர் கைகளை ஈரப்படுத்தியிருக்க வேண்டும். உமா நகர்ந்து அம்மா முன் வருகிறாள். சந்தோஷமில்லாமல் சலனமே இல்லாமல் இருக்கும் அந்தக் கண்களையே பார்க்கிறாள்.

''தெரியும். நீ இன்னமும் சந்தோஷப்பட்டிருக்க மாட்டே. உன் ஆபீஸ் உன்னை அப்ரிஷியேட் பண்ணியாச்சு. நீ லெட்டரை மேஜை மேல வச்சி, மொகம் கழுவப்

போனப்போ, நானும் படிச்சிட்டேன். சாரி. சந்தோஷமா இருந்தது. முழுக்கப் படிச்சிட்டேன். ஊரும் சொல்லியாச்சி. உனக்கு இன்னும் என்னதான் வேணும்..?''

என்ன வேண்டும் என்று அவளிடம் மனம் விட்டு அழுது விடலாமா? ஒரு பதினெட்டு வயதுப் பெண்ணிடம், முப்பத்தியெட்டு வயதுத் தாயார் அழுது ஆறுதல் பெற முடியுமா? அல்லது அவளுக்குத்தான் அது புரியுமா?

உமா தாயையே ஊடுருவிப் பார்க்கிறாள்.

''தெரியாதுன்னு நினைச்சுக்காதம்மா. உம் மனசுல என்ன இருக்குன்னு எனக்குத் தெரியும். ஆனா அது நடக்காது. நடக்க முடியாத ஒண்ணுக்காக நீ ஏங்கறே..''

ராஜிக்குத் 'திக்'கென்றது. இவள் குழந்தையா..? விவரம் அறிந்தவளா..?

''நீ என்னை ஹாஸ்டல்ல விட்டுட்டு, இந்தக் கிராமத்துக்குப் பொறப்பட்டப்போ சொன்னதை நான் மறக்கலம்மா. வாழ்க்கைல நாம நெனைச்சதெல்லாம் கெடைக்காது உமா. கெடைச்சதை வச்சி சந்தோஷமா இருக்கப் பழகிக்கணும். எனக்கு அன்னிக்கு நீ சொன்னே. நீ மறந்துட்டே.''

இவளா குழந்தை? மனத்தை ஊடுருவி, ஒளிந்து கிடக்கும் நிஜத்தைத் தடவி எடுத்து முன்னால் வைக்கும் இவள் இனியும் குழந்தையா? நிச்சயம் ராஜிக்கு இவள் வயதில் இப்படி அம்மாவை ஊடுருவத் தெரிந்திருக்கவில்லை.

''நீ ஒரு பேக்கும்மா. அப்பாவோட சமாசாரம் தெரிந்த விஷயம்தானே? அவர் என்னிக்கு உன்னை என்கரேஜ் பண்ணியிருக்கார். புருஷனோட ஆதரவு என்னிக்கு இல்லைன்னு போயிருச்சோ, அன்னிக்கே அது வேண்டாம்னு உன்னால ஒதுங்க முடியலை.. நான் இப்படிப் பேசறதுக்கு ரொம்ப ஸாரிம்மா...'' உமா நகர்ந்து விடுகிறாள்.

ஒரு பதினெட்டு வயதுப் பெண்ணுக்கு இந்தப் பக்குவம் வருமா? வந்திருக்கிறது. தந்தையையும் தாயையும் பார்த்துப் பார்த்து, இளைய தலைமுறை, தனக்குத்தானே மெருகேற்றிக் கொள்கிறதா?

ப்ளாஸ்டிக் குழாயின் மேல் திருகு உடைந்து விட்டால் புதிய குழாய் வாங்கச் சில சமயம் உடனே முடிவதில்லை. இதற்கு உடனடி நிவாரணம் இதோ: ஷாம்பு பாட்டிலின் மேல் மூடியைக் குழாயின் மேல் வைத்து அழுத்தி விட்டால் புதிய குழாய் வாங்கும் வரை உபயோகமாக இருக்கும்.

— ஹேமா ராகவன்.

ஆனால், ராஜிக்கு இன்னமும் அந்த நப்பாசை இருந்தது. கன்கிராட்ஸ்'சுன்னு ஒரு வார்த்தைச் சொல்ல ஒரு ஆணுக்கு, மனசு விசாலமாக இருக்காதா?

அவளுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட குழப்பத்திற்கு, ஒரு வகையில் அவளுடைய வங்கியும் பொறுப்பேற்க வேண்டும். இன்னும் நிர்வாகத்தில் உயர உயரப் பறக்க, வங்கி அதிகாரிகள் அனைவரும் குறைந்த பட்சம் இரண்டாண்டுகளாவது கிராமப் புற சேவையில் ஈடுபட வேண்டும். அரசின் கொள்கைகளுக்கிணங்க, மக்களின் தேவைக்கு ஏற்ப பெருமளவில் கிராமப் புறங்களில் கிளை பரப்பிப் பரவும், வங்கிகளின் சேவையில் இது ஒரு இன்றியமையாத, தவிர்க்க முடியாத கட்டம். இப்பணிக்குத் தயாராக இல்லாத எந்த அதிகாரிக்கும் இனி பிரமோஷன் எட்டாத கனியாகி விடும்.

எல்லா வங்கி அதிகாரிகளின் வாழ்க்கையையும் மாற்றி அமைத்த, அந்த சுற்றறிக்கை அவள் வாழ்க்கையையும் மாற்றியது. பெண் என்ற காரணத்திற்காக எந்தத் தனிச் சலுகையையும் காட்டாத, இந்த சுற்றறிக்கை, உண்மையிலேயே பெண்கள் சுதந்திரத்திற்கு ஒரு மைல் கல், என்பது ராஜிக்குப் புரிந்த உண்மைகளுள் ஒன்று. இனி அவள் தீர்மானிக்க வேண்டும். ஆணுக்குப் பெண் நிகர், என்று பேசினால் போதாது; அவள் இதை ஏற்க வேண்டும். குடும்பக் கஷ்டங்களில் ஆண் தனக்குத் துணையாக இருக்க வேண்டும் என்று கருதும் எந்தப் பெண்ணும், அலுவலக நிர்ப்பந்தங்களில் ஆணுக்கு இணையாகத் தானும் சிக்கல்களை ஏற்றுக் கொள்ள வேண்டும். குடும்பத்துக்கு ஒத்து வராது என்று ஒதுங்கக் கூடாது.

அவள் தீர்மானித்தாள். வங்கி ஊழியராக வேலை கிடைத்து, இளநிலை அதிகாரியாய் பதவி உயர்வு பெற்ற அவள் இன்னமும் மேலே போக வேண்டும். அது முடியும் அவளால்.

அன்றைக்கு இரவு கணவனுக்கு உணவு பரிமாறும் போது மெதுவாகத் தன் கருத்தை வெளிப்படுத்தினாள். உங்களுக்குப் பிடிக்குமேன்னு எலுமிச்சம்பழ ரஸம் வச்சேன். கொஞ்சங்கூட ஊத்தட்டுமா? என்று நிஜமான அன்புடன் கேட்டு, பயங்கலந்த கவலையுடன் தன் ஆசையை அவள் அவனிடம் வெளியிட்டாள். சந்திரன் ஒன்றும் பேசவில்லை. ஒன்றும் பேசாமல் இருப்பது, அவன் உள்ளுக்குள் புகையும் கோபத்தின் முதல் கட்டம்.

''இதோ பார் ராஜி... என்னால உன் பின்னாடி கிராமத்துக்கெல்லாம் ஓடி வர முடியாது. வக்கீல் வேலைல ஏதோ இப்பத்தான் நாலு காசு பாக்கறேன்.''

''நீங்க வாணும்னு இல்லே. நானும் அம்மாவுமா போறோம்.''

"அம்மாவுமா...? உங்கூட சேர்ந்து அவளும் லோல் படணுமா?"

"சந்தோஷமா வரேன்னு சொல்லிட்டாங்க..."

"எனக்குப் பிடிக்கலை."

"ரெண்டு வருஷந்தான். இதை முடிச்சிட்டா, திரும்ப இங்கேயே வந்துடலாம். இல்லேன்னா மேல பிரமோஷன் கெடக்காது."

"இப்போ உனக்குப் பிரமோஷன் கெடக்கலேன்னு யார் அழுதா?"

சுரீர் என்று விழுந்த முதல் அடி. தாங்கிக் கொள்ளத்தான் வேண்டும்.

"நீ ஆபீசரா பிரமோஷனுக்கு அப்ளை பண்ணின அன்னிக்கே நான் உங்கிட்ட சொல்லிட்டேன். கிளார்க்கா இருந்து நீ கொண்டு வர ரெண்டாயிரம் ரூபா போறாதா?"

"ரெண்டாயிரத்தோட என் வாழ்க்கை நின்னுடணுமா?"

"சரி. இன்னும் என்ன வேணும்'ங்கறே"— சந்திரனுக்குக் குரலில் சூடேறியது.

"நான் ஃபர்தர் பிரமோஷன் வாங்கணும், பாங்க் மேனேஜரா வரணும்னெல்லாம் உங்களுக்குத் தோணவே தோணாதா...?"

"தோணாது."

"ரெண்டே ரெண்டு வருஷந்தான். இங்கேதான் பக்கத்துல சிதம்பரங்கிட்ட ஒரு கிராமத்துல மேனேஜர் போஸ்ட் கொடுத்திருக்கா. முடிஞ்சவுடனே இங்கேயே கூப்பிடுடறோம்னு அஷ்யூரன்ஸ் குடுத்திருக்கா."

"எக்கேடோ கெட்டுப் போ."

"ஏன் இப்படியெல்லாம் பேசத் தோணுது உங்களுக்கு?"

"பின்னே உமா கதி என்ன ஆறது?"

"பதினேழு வயசாடிச்சு. அவ காரியத்தைக் கவனிச்சுக்கத் தெரியும். ஹாஸ்டல்ல போட்ருவோம்."

"போட்ருவேன்னு, சொல்லு."

"பிரிச்சுத்தான் பேசணுமா?"

"பிரியறதுன்னுதான் நீ தீர்மானம் செஞ்சாப்பல தெரியறதே. என்னைப் பத்திக் கவலைப்பட்டியா? புருஷனால எப்படித் தனியா குடும்பம் நடத்த முடியும்னு யோசிச்சியா?"

"நான் அப்பப்போ லீவுல வரேன்."

— வெட்கத்தை விட்டு ஒரு பெண்ணாக நின்று, கணவன் முன் இரைஞ்ச வேண்டி இருந்தது. இது இரண்டாவது அடி. தாங்கிக் கொள்ள வேண்டும். குடும்ப நலம் கருதி, குழந்தைகள் நலம் கருதி, அவள் பாங்கில் எவ்வளவோ ஆண் அதிகாரிகள் இவ்வாறு மனைவிகளை விட்டுப் போகிறார்கள். அவர்களிடம் மனைவிகள் இவ்வாறு கேட்பதில்லை. கணவர்களும் பதில் சொல்லிக் கொண்டு நிற்பதில்லை. ஆனால், ஒரு மனைவியாக அவள் இதைத் தாங்கிக் கொள்ள

> ரோஜாப்பூ வாங்குகிறோம். பூ அழகாக இருக்கிறது. ஆனால் காம்பு உடைந்து விடுகிறது. என்ன செய்வது? எப்படித் தலையில் வைப்பது என்று கவலை வேண்டாம். ஒரு மிக மெல்லிய குச்சியை ஹேர் பின் அளவுக்கு ஒடித்துப் பூவின் காம்பு உள்ள பாகத்தில் செருகிவிடவும். இப்பொழுது இமிடேஷன் காம்பு ரெடி. வழக்கம் போல் ரோஜாப் பூவைத் தலையில் வைத்துக் கொள்ளலாம். பூ விழுந்து விடும் என்ற பயமும் இல்லை.
>
> — பாலா.

வேண்டும். எதிர்த்துப் பேசி விடக் கூடாது. முடியாது. காரியம் கெட்டு விடும். ஆணுக்கு அவன் தேவை, அவன் நலம், அவன் முன்னேற்றம் இவைதான் முக்கியம். தட்டு வைக்க, உணவு பரிமாற, குளித்து வந்தால் சட்டை எடுத்து வைக்க, படுக்கை விரிக்க—

அவனுக்குத் தேவை மேலே போக யத்தனிக்காத பெண். "ஒண்ணு மாத்திரம் புரிஞ்சுக்கோ. நாய் மாதிரி நாக்கைத் தொங்க போட்டுக்கிட்டு உன்னைப் பாக்க ஓடி வருவேன்னு நெனைச்சா, அது தப்புன்னு புரிஞ்சிப்பே."

அவள் வாழ்க்கையைத் தவற விடுகிறாள் என்று அவளுக்குப் புரிந்தது. இரவு வண்டிக்கு அவன் வரவில்லை. உமாதான் ஹாஸ்டலிலிருந்து வந்தாள். "அவனைத்தான் கல்யாணம் செஞ்சிக்கணும்னு நீ ஒத்தைக் கால்ல நின்னே. என் புள்ளையா இருந்தா என்ன? உண்மை உண்மைதான். அவனுக்கு நீ அதிகப்படி. சொன்னாக் கேக்கலை நீ. அத்தை பையனாச்சேன்னு மாஞ்சி போன. சரி வாடி என் பொண்ணே. நான் உனக்கிருக்கேன்" — மாமியார் என்றால் இப்படித்தான் என்ற நியதியை மாற்றிய மாமியாருடன் ராஜி தன் பயணத்தைத் துவக்கினாள்.

ஆனால் இதெல்லாம் ஒன்றரை வருடக் கதை. ராஜி இங்கு வந்தது, ஒரு கிராமப் புறப் பார்வைகளை, விமர்சனங்களைத் தாங்கி முன்னேறியது, அவ்வப்பொழுது விடுப்பில் அவனைக் காணச் சென்றது, எல்லாமே அவளுக்கு உணர்த்தியது ஒன்றைத்தான். அவள் முன்னேற்றம் அவனை விலக்கியது. உமா ஹாஸ்டலிலிருந்து இது போன்ற சமயங்களில் குடும்பத்துடன் இருக்க ஓடோடி வருவாள். அம்மாவைக் கட்டி, முத்த மழை பொழிவாள். சந்திரன் அந்த இரண்டு மூன்று நாட்கள் வீட்டிற்கே வர மாட்டான். ஏன், என்று அவளால் கேட்க முடியவில்லை. இன்னும் ஆறு மாதங்கள் பல்லைக் கடித்துக் கொண்டு இருந்து விட்டால், இங்கு வந்து விட்டால்

எல்லாம் சரியாகி விடும் என்று நினைத்த அவளுக்கு ஒரு நாள் மூன்றாவது அடி விழுந்தது.

காலையில் வீட்டைப் பெருக்கக் கதவைத் திறந்தவள் திண்ணையில் சந்திரன் படுத்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டாள். வாங்க என்பதற்கு மேல் எதுவும் சொல்ல முடியவில்லை. மேலே எது கேட்டாலும் கோபம் வருமோ என்று உள்ளே போய் மாமியாரை அழைத்து வந்தாள். இந்த ஒன்றரை வருட காலமாக நேரிலும், கடிதம் மூலமாகவும் என்று எதற்கும் பேசாத அவனிடம் என்ன பேசுவது என்று அறியாத பேதையாய் மனம் சஞ்சரிக்க, அன்று நடைபிணமாய் அலுவலகத்தி லிருந்து விட்டு வீடு திரும்பிய அவளுக்கு அந்த மூன்றாவது அடி பலமாகவே வலித்தது.

''பிராக்டீசை விட்டுட்டானாம், ராஜி. மூட்டை கட்டிண்டு இங்கே வந்திருக்கான். பார் மெம்பர்ஷிப்பைக் கூட வேண்டாம்னு வந்தாச்சாம். நாய்க்குப் போடறா மாதிரி தட்டுல கஞ்சி ஊத்தும்மா போதும் இனிமே. ஏன்னு கேக்க மாட்டேன்னு போயிட்டான். கிராமத்தைச் சுத்திட்டு வருவான்.''

அவன் கிராமத்தைச் சாதாரணமாக சுத்தவில்லை. கிராம விடலைகளுடன் சுத்தி னான். எந்த வங்கிக் கடன் வேண்டுமானா லும் வாங்கித் தருகிறேன் என்று எல்லோரி டமும் சத்தியம் செய்து, சங்கடப்படுத்த ஆரம்பித்தான். ஊர் ஒதுக்கியவர்களுடன் சைக்கிள் பின்னால் சென்று ஒதுங்கிய, ஒதுக்கப்பட்ட இடங்களில் கஞ்சா அடிக்க ஆரம்பித்தான். கடன் வாங்கி, பணம் கட்டாமல் ஏய்க்க முயன்றவர்களுடன் கூட் டாகி, இனி நீ பணமே கட்ட வேண்டாம் என்று சொல்ல ஆரம்பித்தான்.

ஆனால் வீட்டில் மாத்திரம் பேச்சில்லை. மேஜையிருந்தும், தாழ்வாரம் ஓரமாகப் பசித்தால் தட்டை வைத்துக் கொண்டு உட்கார்ந்தான். அன்னை வந்து பரிமாறி னால் சாப்பிட்டான். மறந்தும் பேசவில்லை. புருஷன்காரன் தாழ்வாரத்தில் சாப்பிடுவது பேசப்பட்டது. பேச வைத்தான். இது ஒரு வகைப் பழிவாங்கலோ?

ராஜிக்குத் தினமும் டென்ஷன் கூடியது. ஒவ்வொரு நாள் ஒவ்வொரு செய்தி. கீழே உள்ளவர்கள் அறிவுரை கூறும் நிலை வர ஆரம்பித்தது. இச் சமயம் பார்த்து இவ் விழா.

தன்னை மறக்க உழைத்தாள். இழந்து போக இருக்கும் பெயரை நிலைநாட்ட நாயாய், பேயாய் அலைந்து, கிராமத்தைக் கூட்டினாள்.

ஒரு வங்கிக்கே உரிய சிறப்புடன் விழாவை நடத்த யத்தனித்தாள். ஒரு பெண் வங்கி மேலாளராக இருந்து திறம்பட இது போன்ற நிகழ்ச்சிகளின் மூலம், மக்களை சென்று அடைந்து, வங்கிக்குப் பெருமை சேர்க்க முடியும் என்பதைக் காட்ட சீரிய முறையில் திட்டமிட்டு, திறம்பட நடத்த முயன்றாள்.

உமாவுக்கும், விடுமுறை இருப்பதை அறிந்து, கிராம விழா காண வரச் சொன் னாள்.

வாழ்க்கை சாதாரணமாகத்தான் இருக் கிறது என்று சகலருக்கும் காட்ட வேண்டும் என்றே விழைந்தாள்.

ஆனால், மனம்தான் சஞ்சலப்படுவதை நிறுத்தவில்லை. விழா முடிந்து மூன்று நாட் களாகியும் மனப் பளு குறையவில்லை.

உள்ளே போன உமா அம்மாவிடம் வந்து அமரவும், அவள் தந்தை உள்ளே நுழைய வும் சரியாக இருந்தது. எப்பொழுதும் போல் அவனுடைய இருப்பிடத்தில் சென்று அமர்ந்தான். எட்டிப் பார்த்த தாய், தட்டு டன் வந்தாள். அவன் கையில் பிரபலமான தமிழ் நாளேட்டின், வாரச் சிறப்பு மலர் இருந்தது மூவருக்கும் தெரிந்தது. கீழே

---

அரை ஆழாக்கு ரவையையும், கால் ஆழாக்கு ஜவ்வரிசியையும் நிதானமாக எண்ணெய் விடாமல் வறுத்துப் புளிக்காத தயிரில் கலந்து இரண்டு மணி நேரம் ஊறிய போது உப்பு, நறுக்கிய ப. மிளகாய், கறிவேப்பிலை, பெருங் காயம், ஒரு டீஸ்பூன் அரிசி மாவையும் அதில் போட்டு நன்றாகக் கலந்து போண்டா மாதிரி உருட்டி எண்ணெய் காய்ந்தபின் பொரித்தெடுங்கள். சுவையோ சுவை. குழந்தைகள் உனக்கு எனக்கு என்று போட்டி போட்டுக் கொண்டு தட்டைக் காலி செய்துவிடுழ்.

— பி. பார்வதி.

---

இரண்டு ஆழாக்கு ரவையை இரண்டு டீஸ்பூன் நெய்விட்டுப் பொன்னிறமாய் வறுக்கவும். துருவிய தேங்காய், வெள்ளை எள், உப்பு, மிளகாய்த் தூள் ஒரு ஸ்பூன், பெருங்காயம் போட்டு அளவாக நீர் தெளித்துப் பிசைந்து உருட்டித் தேங்காய் எண்ணெயில் பொரித்து எடுங்கள். மிகவும் கரகரப்பாகவும் ருசியாகவும் உள்ள சுவை யான சீடையாகும்.

— பி. பார்வதி.

பத்திரிகையை விரித்தான்.

கட்டம் கட்டி அந்த வங்கி நின்றிருந்தது. அருகே சாதனை புரிந்த பெண்ணாக ராஜியின் படம்.

ஒரு கிராம வங்கி நிகழ்ச்சிக்கு இந்த அளவுக்குப் பெண்களை, கிராமப் பெண்களை வரவழைக்க முடியும் என்று காட்டியிருப்பதே இவ் வங்கியின் சாதனை. முதல் சில வரிகள் கொட்டை எழுத்துக்கள். பளிச்சென்ற, படிக்கத் தூண்டும் வாசகங்கள்.

உமாவுக்கு ஓடிப் போய் பத்திரிகையை எடுத்து வர வேண்டும் போல் இருந்த ஆசை விஸ்வரூபம் எடுக்கும் போல் இருந்தது. தந்தை சாப்பிடட்டும் என்று பேசாமல் இருந்தாள்.

அவன் பேசாமல் சாப்பிட்டான். சாப்பிட்ட பிறகு தட்டில் இருந்த மிச்சத்தை அந்தத் தினசரியில் கொட்டினான். மடித்துப் பொட்டலமாகக் கட்டினான். வெளியே வர, எதிரே இரண்டு நாய்கள் எதிர்ப்பட, உணவுப் பொட்டலத்தை அவைகள் முன்னால் வீசினான். பொட்டலம் பிரிந்து, நாய்கள் குதறி, உணவை சிதைத்து நக்கி நக்கி உண்பதையே பார்த்தவன் அப்படியே கை கழுவி, வெளியேறி மறைந்தான்.

ராஜிக்குப் பொங்கி வரும் அழுகையை அடக்க முடியவில்லை. உமாவுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வர, "சீ... இவன்லாம் ஒரு மனுஷன்...!" — வாய் விட்டு வார்த்தைகள் வந்தே விட்டன.

ராஜியின் அருகே வந்து கண்களை முந்தானையால் துடைத்து விட்டவாறே, ராஜியின் மாமியார், உமாவை அணைத்துக் கொண்டாள்.

"அப்படியெல்லாம் சொல்லாத உமா. என்ன இருந்தாலும் அவன் எனக்கு மகன். உனக்கு அப்பா. ஒரு ஆம்பிளை. நாம ஏன் திட்டணும்? உன் வயசுல நான் ஸ்கூலுக்குப் போயிருக்கேனா? ஹாஸ்டலைப் பாத்திருக்கேனா? இன்னைக்கு உங்க அம்மாவால, வேலைக்குப் போய், ஒரு பாங்கு மானேஜராவும் இருக்க முடியறது. இப்போ நடக்கறதா; இல்லியா? நாளைக்கே பாரேன், நீ பெரியவளாகி, உங்க அம்மா மாதிரி கை நிறைய சம்பாதிப்பே... நல்ல வேலைக்கும் போவே. அப்போ, உன் புருஷன் உன் மனசறிஞ்சு, நீ மேல மேல வர, அன்பாவே எல்லா உதவியும் செய்வான். அதுவும் நடக்கத்தான் போறது. ஆனா நீயும் உங்க அம்மா மாதிரி உறுதியா இரு. பிடிவாதமா இரு. புருஷனை ஒதுக்காம, குடும்பம் வேணும்னு நிச்சயமா இரு. எல்லாம் மாறும்."

உமா பாட்டியின் கழுத்தை ஆவலுடன் கட்டிக் கொள்கிறாள். அந்தக் குழந்தைக் கண்களில் ஆச்சரியமாக, நம்பிக்கை மலர்கிறது.

"மாறுமா, பாட்டி?"

# ஆபத்தான வண்ணங்கள் இல்லாத அழகிய வண்ண வடகங்கள்!

**வ**ற்றல் வடகம் இடும் சீஸன் ஆரம்பித்து விட்டது. இப்போதெல்லாம் கலர் கலராக வடகங்கள் இடும் மோகம் பரவி வருகிறது. பச்சை... சிவப்பு... மஞ்சள்... பலப்பல வண்ணங்களில் கண்ணைப்பறிப்பது எத்தனை நிஜமோ, அத்தனை நிஜம் ஆரோக்யத்தைப் பறிப்பதும்! கலர்ப் பொடிகளில் உள்ள ரசாயனக் கலவைகள் தீமை விளைவிப்பவை என்பதால் இவைகளைத் தவிர்ப்பதே நல்லது.

ஆனால்... எந்த உணவுப் பண்டமும் கண்ணுக்கு அழகாக இருப்பது விரும்பத்தக்கதே. இந்தக் கலர்ப் பொடிகள் இல்லாமலே, அழகிய வண்ண ஜாலங்களுடன் வற்றல் வடகம் போடலாமே....

மஞ்சள் : வடகம் இடும் கூழுடன் சிறிது விரளி மஞ்சளை அரைத்துக் கலந்தாலே போதும்!

பச்சை: ஆய்ந்த கொத்துமல்லி, புதினா, சோவிக்கீரை (சோம்பு) இவைகளில் ஏதாவது ஒரு கீரையை இரண்டு கைப்பிடி அரைத்துக் கூழில் கலந்து போட்டால் பச்சை வண்ண வடகம் ரெடி!

சிவப்பு : இருக்கவே இருக்கிறது பீட்ரூட்! தோலை சீவி துருவி பிழிந்தால்... இந்த சிவப்பு கொள்ளை அழகாக இருக்குமே?

இளஞ்சிவப்பு : சிவந்த பழுத்த (கனியாத) தக்காளிகளை மிக்ஸியில் அடித்து கூழோடு கரைத்துக் கிளறவும்.

ஆரஞ்சு : காரட் நல்ல நிறமுள்ள புதியதாக இரண்டு எடுத்துத் துருவி மிக்ஸியில் அடித்துச் சேர்க்கவும்.

இம்மாதிரி வண்ணக்கலவைகள் செய்தால் நிறத்துக்கும் நிறம்... ஆரோக்கியத்திற்கும் ஆரோக்யம். ருசியும்.... ஒன்றுக்கொன்று மாறுபட்டவையாக இருக்கும்!

— எஸ். பட்டம்மா.

# சூனியக்காரர்களின் உலகத் தலைவி

இப்ஸிடா ராய் சக்கரவர்த்தி. இது ஒரு அழகான சூனியக்காரியின் பெயர். கருப்பு நிற உடை, மொத்தமான தங்க நகைகள், போதை தரத்தக்க மணமிக்க ரோஜாப்பூக்கள் — இவற்றோடு அந்தப் பெண் காட்சியளிக்கிறார்.

கனடாவில் உள்ள மாண்ட்ரீல் நகரில் அகில உலக மந்திரவாதிகள் சங்கத்தின் தலைமையகம் உள்ளது. அதன் தலைவர் தான், இந்த இப்ஸிடா!

தமது சங்கத்தின் செயல் முறைகள், இருப்பிடம் முதலியவற்றைப்பற்றி, ஏன் அதன் பெயரைக் கூடச் சொல்ல இப்ஸிடா மறுக்கிறாள். 'அது ரகசியம், சொல்லக் கூடாது' — என்கிறாள்.

"எங்களுக்கு இருக்கும் சக்தியால், குடும்பத்திலோ, அலுவலகத்திலோ மனக்கவலை கொண்டு இருக்கும் யாருக்கும் மன அமைதி ஏற்படுத்த முடியும்" என்று இப்ஸிடா பெருமையடித்துக் கொள்கிறாள்.

"யின் யாங் என்ற சீனத்தத்துவம், ரிக்





வேதம், எகிப்து நாட்டின் ஹகாவு என்று பலவித மந்திர தந்திரங்களை வருடக்கணக்கில் படிக்க வேண்டும். வாரம் தோறும் எங்களை உடலிலும், உள்ளத்திலும் பலவித சோதனைகளைத் தலைமைப் பூசாரி செய்வார். அப்போதெல்லாம் நாங்கள் உடலுறவு கொள்ளுவதோ, மதுபானம் போன்ற போதைப் பொருள்களைப் பயன்படுத்தவோ கூடாது" — என்கிறாள் இப்ஸிடா.

இப்ஸிடாவைப் போலத் தலைவராக வர வேண்டுவோர் இருபது தேர்வுகளில் தேர்ச்சி பெற வேண்டும்.

"எங்களுக்குத் தேதிகளெல்லாம் முக்கியம் இல்லை. ஆனால், 13-5-1986 ஐ நினைவு வைத்துக் கொண்டு இருக்கிறேன். அன்றுதான் நான் தலைமைப் பூசாரியாக நியமிக்கப்பட்டேன்" — என்கிறாள் இப்ஸிடா.

"எங்களில் சில கெட்ட சூனியக்காரிகளும் உண்டு. ஆனால், அது தவறு" — என்று சொல்லுகின்ற இப்ஸிடா, "நாங்கள் அறிவியலைப் பயன்படுத்தி பிறருக்கு நல்லனவற்றையே செய்கிறோம்" — என்று பெருமைப்படுகிறாள்.

"நடுப்பகல் நேரத்தில் சூரியனை வழிபடுகிறோம். பெரிய புயல் வீசிக் கொண்டு இருக்கும்போதும்சூரியனைவழிபடுகிறோம். இவையெல்லாம் எங்களுக்கு அளவற்ற சக்தியைக் கொடுக்கின்றன" — என்று இப்ஸிடா கூறுகிறாள்.

நாற்பதாயிரம் கிளைகள் அமெரிக்காவிலும், ஐரோப்பிய நாடுகளிலும் உள்ளன. இந்தியாவில் 25 கிளைகள் உள்ளன. "மந்திர — தந்திர வித்தைகளைக் கற்றுக் கொள்ள ஐந்நூறு பேர் விண்ணப்பித்து இருந்தார்கள். அவர்களில் ஆறு பேர்களைத்தான் நான் தேர்ந்தெடுத்துக் கொண்டேன்" — என்று இப்ஸிடா, சீடர்களைத் தேர்ந்தெடுப்பதில் ஜாக்கிரதையாய் இருக்கிறாள்.

கடந்த ஒன்றரை ஆண்டுகளில் சுமார் ஆயிரத்து ஐநூறு மனநோயாளிகள், தீராத உடல் நோயாளிகள் போன்றவர்களது நோய்களை முக்கால் பங்கு இப்ஸிடா குணமாக்கி இருக்கிறாள்.

கையில் உள்ள 'அதேனி' என்ற கூர்மையான வாள், மந்திரக் கோல், சிறிய சிறிய கோல்கள், பல விதமான அழகான கண்ணாடிக் குண்டுகள், பாம்புத் தலை உள்ள "தாகினி" என்ற விலையுயர்ந்த கத்தி, போன்றவைகளை இப்ஸிடா எப்பொழுதும் வைத்துக் கொண்டு இருக்கிறாள்.

அவை அவளுக்கு உதவியாக இருப்பதுடன், அவளது அழகுக்கு அழகு சேர்க்கின்றன!

— சண்டே மெயிலிலிருந்து.
சேலம் சக்திக்கொடி.

# ஊருக்கே செய்யறாங்க!

## கங்கா ராமமூர்த்தி

"மாமா...."

"என்ன?" செய்தித்தாளில் கண்ணை ஒட்டியபடியே மருமகளைக் கேட்டார். ஒற்றைச் சொல்லில் ஒரு கிலோ கோபத்தை ஏற்றியிருந்தார்.

கலா தயக்கத்தோடு வார்த்தைகளை மனசில் கோத்தாள். பிறகு மெல்ல மெல்ல வாய் வழியே பிரசவித்தாள்.

"இன்னிக்கு அஞ்சாம் தேதி...."

"சரி, அதுக்கென்ன?"

ஐந்தாம் தேதி பால் கார்டு வாங்க வேண்டிய நாள் என்பது அவருக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை.

"பால் கார்டு வாங்கணும். அவர் ஆபீஸுக்கு சீக்கிரம் போகணும்னு சுமியை க்ரெச்சில் விடல்லை. நான் தான் போய் க்ரெச்சில் விட்டுட்டு ஆபீஸுக்குப் போகணும். அதுனால..."

"இதபார் கலா, என்னால பால் கார்டு வாங்க க்யூல நிக்க முடியாது. ஓடறவரை ஓடி இப்பத்தான் ஒய்ஞ்சு ஒக்கார்ந்திருக்கேன்."

கலா கையிலிருந்த பால் கார்டை டேபிள் டிராயரில் பத்திரப்படுத்தினாள். "சரி மாமா, பரவாயில்லை. சனிக்கிழமை அவருக்கு ஆபீஸ் லீவுதான். கார்டு வாங்கலாம். டேபிள்ல சாப்பாடு 'ஹாட்பேக்'ல இருக்கு. தக்காளி பச்சடிய ப்ரிஜ்ல வெச்சிருக்கேன். ஞாபகமா எடுத்துக்குங்க. நான் வரேன்."

"ம். ம்" என்றார் கடுப்பாக.

ஜெயம் இருந்தவரை சந்திரமௌலி ஒரு துரும்பை எடுத்து, இந்தப் பக்கத்திலிருந்து அந்தப்பக்கம் நகர்த்தியவரில்லை. ஒரு பிள்ளை இரண்டு பெண்கள். பெண்களை வசதியான இடத்தில் திருமணம் செய்து கொடுத்து விட்டார். தெற்கில் ஒருத்தியும் மேற்கில் ஒருத்தியுமாக ஆளுக்கு இரண்டு குழந்தைகளோடு வாரம் ஒரு முறை அப்பாவைக் கடிதம் மூலம் குசலம் விசாரித்து வருகிறார்கள். அவரும் வரிந்து வரிந்து அவர்களுக்கு எழுதுவார். அவர்கள் என்ன எழுதுவார்களோ, ஏது எழுதுவார்களோ தெரியாது, சந்திரமௌலி உக்கிர சாமியாகியிருப்பார், அது மட்டும் நிச்சயம்.

"கேட்கக்கேட்க, அப்பா பதிலே பேசாம 'உர்'னு இருக்காரே. லல்லியோட லெட்டர் வந்ததா?" என்று ரமேஷ் கலாவிடம் ரகசியமாகக் கேட்பான்.

"இருக்கும். நான் வரும் போது, மாமா லெட்டர் எழுதிக் கொண்டிருந்தார். லல்லியோ இல்லை, புவனாவா, யார் போட்டால்தான் என்ன, நமக்கா எழுதப் போகிறார்கள். அப்பாவுக்குத்தானே எழுதுவார்கள்."

"கலா, என்னவோ போ, அம்மா போனப்பறமே அப்பா சின்னக் குழந்தை மாதிரி முரண்டு பிடிக்க ஆரம்பிச்சுட்டார். இது அவங்க குத்தமில்லை. வயசான தோஷம், தன்னை யாரும் கவனிக்க மாட்டாங்களோன்னு அவங்களுக்குள்ளே விபரீதமான எண்ணம் வந்திடும். தனக்கு ஒரு முக்கியத்துவம் இருக்கணும்னு நெனைக்க ஆரம்பிச்சிடுவாங்க. நமக்கு வயசானாலும் இதே மாதிரித்தான் நாமும் மாறிடுவோமோ என்னவோ?"

கலாவின் மன இறுக்கங்கள் 'பளிச்' சென்று விலகின. பிறருடைய குணங்களை நல்ல கண்ணோட்டத்துடனேயே பார்க்கப் பழகியிருக்கும் ரமேஷின் பேச்சில் அவள் மனத்திலும் மேகங்கள் விலகியது போல நிர்மலமான வானமாக நம்பிக்கை நீலம் நிறைந்தது.

வராந்தாவில் நாற்காலியில் சாய்ந்து வாரப் பத்திரிகையில் மூழ்கியிருந்தவரை நண்பர் ராமலிங்கத்தின் வருகை தலை நிமிர வைத்தது.

"உட்காரேன். இன்னிக்கு என்ன இவ்வளவு நேரம்? பதினோரு மணியா?"

"ஒனக்கென்னப்பா. ரிடையர் ஆன பிறகு 'அக்கடானு' இருக்கே. என்னைப் போலவா? பிள்ளை காலைல ஆபீஸ் போகும் பொழுதே கையில் பால் கார்டையும் பணத்தையும் கொடுத்துட்டுப் போயிட்டான். அங்க போனா ஏகப்பட்ட கூட்டம். வாங்கிண்டு வந்து இப்பத்தான் சாப்பிட்

டேன்.'

''உன் மருமகள் என்ன பண்றா? வீட்ல சும்மாதானே இருக்கா. ஏன் அவ செய்யறது. நீ எதுக்கு இடம் கொடுக்கறே. நாம், நம்ம பிள்ளைக்கும் மருமகளுக்கும் எதுக்காகப் பணியணும், ஏவினதைச் செய்ய வேலையாளா நாம்? அவங்களைப் பெத்த அப்பன். அதை நீயும் மறந்து போற, அவங்க மறந்து போறாப்பில நடந்துக்கறே."

''இதெல்லாம் உதவிதானேன்னு?''

''இன்னிக்கு மரியாதையா, இதைச் செய்யறீங்களா மாமானு கேக்கறவங்க, நாளைக்கு ஏன் இதைச் செய்யலைனு அதட்டிக் கேக்கற நெலைமைக்கு வந்திடும் தெரிஞ்சுக்க.''

''மருமகளை விடு. என் வொய்ப். அவளே சொல்றா.'' ''சும்மாதானே உட்கார்ந்திருக்கீங்க, பால் கார்டு வாங்கிட்டு வாங்களேங்கிறா! இதுக்கு என்ன சொல்ற?"

''வொய்ப் இருந்தபோது கூட நான் இது போல சில்லறை வேலை செய்ததில்லை. நம்ம மதிப்பை நாம்தான் காப்பாத்திக்கணும் ராமலிங்கம். சாப்பிட்டாச்சா?''

''ஆச்சு. வெயில் கொளுத்துது. கொஞ்ச நேரம் கண் அசரணும். மூணு மணிக்கு பால் வாங்கப் போகணும்.''

ராமலிங்கம் எழுந்து போனார். ரிடையர் ஆன பிறகு வெகுவாகத் தளர்ந்து போயிருந்தார். 'ஐயோ பாவம்' என்று சந்திரமௌலி நினைத்தார். ஒழுங்காக வேளா வேளைக்கு நல்ல சாப்பாடு கூட அவருக்குக் கிடைப்பதில்லை என்று அவரே குறைப்பட்டுக் கொண்டது நினைவுக்கு வந்தது. ராமலிங்கத்துக்கு எழநூறு ரூபாய் பென்ஷன் வந்தது. அவ்வளவையும் குடும்பச் செலவுக்கே கொடுக்கிறார். அப்படியும் அவர் மகன் சோமு சில சமயம் கத்துவது பக்கத்து வீட்டில் கேட்கும்.

"எழநூறு ரூபாய்க்கு நூறு செலவு. பால், பழம், சாப்பாடு, தவிர மருந்து, டாக்டர், இந்தக் கணக்கெல்லாம் யார் பார்க்கறாங்க. பென்ஷன் பணம்பூரா அப்படியே குடுத்துடறேன்னு வாய்க்கு வாய் சொல்றவர், செலவு என்ன ஆகிறதுன்னு யோசிச்சுப் பார்க்கிறாரா?''

சந்திரமௌலி குடும்பத்துக்கு என்று எதுவும் தருவதில்லை. வீடு அவருடைய வீடு. பிள்ளையைப் பெற்று வளர்த்து, சி.ஏ. படிக்க வைத்து நல்ல இடத்தில் திருமணமும் செய்வித்து சகல கடமைகளையும் நிறைவேற்றியாகிவிட்டது. இனிமேல் ஓய்வாக இருப்பதைத் தவிர வேறு ஒன்றுமில்லை. பிள்ளை தன்னையும் நன்றாகக் கவனித்தாக வேண்டும் என்று நினைப்பவர். உலகம் கடமைகளிலிருந்து புரண்டு வருவதைப் பார்க்க எரிச்சாகத்தான் இருக்கிறது.

கூடத்தில் குருவிக்கடிகாரம் பனிரெண்டு முறை கூவியழைத்து விட்டு நின்றது. செய்தித்தாளை மடித்து வைத்தார். வேகாத வெயிலில் குப்பை பொறுக்கும் கிழவி கூடையைச் சுமந்து செல்வது தெரிந்தது. இந்தக் கிழவி ஒரு நாளைக்கு மூன்று நான்கு முறை வருவதைப் பார்த்திருக்கிறார். கூனிப் போய்விட்ட முதுகு. சாம்பல் பூத்த கறுப்பு தேகத்தில் புடைவை மட்டும் சுற்றியிருப்பாள். வற்றிய கச்சலான உடம்பு. பிரிப் பிரியான தேங்காய் நார்க் கூந்தலை தலையின் ஒரு பக்கமாக இழுத்துச் செருகிக் கொண்டையாக்கியிருந்தாள். வெற்றிலை அடக்கிய கன்னம். மினு மினுவென்று கண்கள் தெருவின் இருபுற ஓரங்களிலும் அலையும். பெரிய கூடை அதற்குள்ளே பிளாஸ்டிக் பை, செரட்டை, சுள்ளி இவைகளை பைக்குள் போடுவாள்.

சந்திரமௌலி நினைத்துக் கொள்வார், இவளுக்கு என்று யாருமே இருக்க மாட்டார்களோ? தன் வயிற்றுப் பாட்டுக்கு இந்த வயதிலும் தானே உழைக்க வேண்டிய கட்டாயமா? இதற்காக நாள் முழுவதும் தெருத் தெருவாக கால் கடுக்க சுமை தூக்குகிறாளா? குப்பைகளை எடுக்கிறாளா? இல்லை. பெண்ணோ பிள்ளையோ இவளை ஆதரிக்கத்தயாராக இல்லையா?என்ன காரணமோ, கிழவி தெருவில் திரிகிறாள். அவருக்கு அவளைப் பார்க்க பாவமாக இருக்கும்.

உள்ளே போனார், சாப்பிட உட்கார்ந்தார். சமையல் நல்ல சூடாக இருந்தது. கலா இந்த வீட்டுக்கு வந்த புதிதில் சுமாராகத்தான் சமைத்தாள். இப்போது பரவாயில்லை நன்றாகவே தேர்ந்துவிட்டாள். வாழைக்காய் பொடி பிரமாதம். சாப்பிட்டு விட்டு அப்படி அப்படியே மூடிவைத்து, தட்டை தேய்க்கப் போட்டு, மேஜையைத் துடைத்தார். மறுபடி வாசலுக்கு வந்தார்.

நடக்கும் சின்னக் குழந்தைகள் இருக்கும் வீடுகளில் குழந்தைகள் அறையின் உள்ளிருந்து கதவைத் தாழ்போட்டுக் கொண்டு விடுமோ என்ற பயம் இல்லாமல் இருக்க, இதோ ஓர் எளிய வழி. கதவில் மேல் பாகத்தில் இருக்கும் தாழ்ப்பாளை எப்பொழுதும் மேலே நீட்டிக் கொண்டிருக்கும்படி வைத்தால்குழந்தைகளால் கதவைச் சரியாக மூடக் கூட முடியாதே!

— மீரா குமார்.



அரைமணி போல தபால்காரனுக்காகத் தவம் கிடப்பார்.

கிழவி தெருவின் வலப்பக்கம் மெல்ல நடந்து வந்தாள். வியர்வை முதுகில் நீர்க் கோடுகளை இழுத்திருந்தது. கூடையை இறக்கி வைத்து வேப்பமரநிழலில் நின் றாள். புடைவைத் தலைப்பால் முகம், கை, கழுத்து எல்லாம் துடைத்தாள். மறுபடி கூடையை எடுத்து பைய நடக்கலானாள்.

வாசலில் சந்திரமௌலி நிற்பதைப் பார்த்ததும் தயங்கி நின்றாள், ''சாமி, குடிக்க கொஞ்சம் தண்ணி,...''

அவர் உள்ளே சென்றார்.

கிழவி வராந்தாவில் நின்றாள். கூடையை வெளியில் இறக்கியிருந்தாள்.

பாட்டிலில் தண்ணீருடன் வந்தவர் முன் அவள் இருகை நீட்டி நீர் ஏந்திக் குடித்தாள். முகத்தில் புதிதாக ஒரு குளிர்ச்சி பரவ, பல்லில்லாத வாய், சிரிப்பில் விரிய அவரைப் பார்த்தாள்.

''மழக்கமா வந்திடுச்சி. அதான் கேட் டேன்.''

தண்ணீர் கேட்பது கூட விரும்பத் தகாதது என்று நினைக்கிறாளா? இந்த வற்றிய உடம் புக்குள்ளும் இவ்வளவு தன்மானமா?

''ஆயா, கீழ ஒக்காரு. கொஞ்ச நேரம் கழிச்சுப் போகலாம். வெயில் கொளுத்தறது. உன் வயத்துக்குச் சோறு போட ஆளில் லியா ஆயா! ம், வரவர, பெத்த பிள்ளை களுக்குத் தாயும் தகப்பனுமே பாரமாத்தான் இருக்கு. காலம் அப்படி ஆயிப் போச்சு!''

''இன்னா சொன்னே! பாரமா? அது படிச்சு வசதியா இருக்கற ஒங்க வீடுங்கள்ள தான் அப்பிடி. இன்னிக்கும் ஏழைங்க, அப்பனை ஆத்தாளை கஞ்சியோ கூழோ குடுக்காம நடுத்தெருல விடறதில்லே! தெரிஞ் சுக்க சாமி.''

''நீயே நடுத்தெருவுல அலையற. நீ பொறுக்கற பேப்பரால மகனுக்குச் சொமையா இருக்கக் கூடாதுன்னு தானே இதைச் செய்யறே. நெசத்தைச் சொல்லு!''

''மெய்தான். ஆனா அதுங்க என்னை வெரட்டல்லே, போய் சம்பாரிச்சானு தொரத்தல்லே. எம் மருமவ இருக்காளே...''

''நெனைச்சேன், பிள்ளை பொண்ணு, இதுங்களை நம்ம கிட்ட பிரியம் காட்டாமத் தடுக்கறதே இந்த மருமக வேலைதான்....''

''சாமீ! நீ ரொம்ப அவசரப்படறே! நான் சொல்லறதே வேற. எம்புள்ளை தச்சு வேலை செய்யறான். மருமவ வூட்டு வேலை செய்யறா. பேரனும் பேத்தியும் இஸ்கூல்ல படிக்குதுங்க. காவாங்கரையில சொந்தமா குடிசை. கூடையைத் தூக்கினாலே மருமவ கத்துவா, நீ இந்நாத்துக்கோசரம் அலையற, கம்னுகெட. ரெண்டுவேளை சோறு நான் போடறேன். சுத்தாதே. அப்டீன்னு

நானும் பதிலுக்குக் கத்துவேன். ''கையு காலும் தெம்பா இருக்கறவரை இந்தக் கட்டை ஒழைக்கத்தான் செய்யும். முடியாமப் போன கீழே சாயும். அன்னிக்கு ஒன் உப சாரத்தை வெச்சுக்க'னு, சாமி. ஒழைக்கற கட்டை இது. யாருக்கு ஒழைக்கறோம். கெடைக்கற பணத்தைப் புள்ளைங்களுக்கு நோட்டு வாங்குவேன், பென்சில் வாங்கு வேன், மருமவளுக்கு ஒரு சீலை கூட வாங்கித் தந்திருக்கேன். அப்பல்லாம் எனக்கு எவ் வளவு சந்தோசமா இருக்கும் தெரியுமா, அவங்களுக்கும் சந்தோசம்தான்.

இதெல்லாம் என்ன் சாமி. தலைலயா கொண்டு போகப்போறோம். இருக்கற வரை 'அம்மா, ஆயி'னு பிரியமா இருந்தா, போனா ரெண்டு சொட்டு கண்ணீர் விடும். இல்லேன்னா ''கெழவி எப்படா சாவான்'னு தோணும். சாமி, என்ன அப்படிப் பாக் கறீங்க?'' ஒரொருத்தர் ஊருக்கே ஒழைக் கறாங்க. நான் என் ஊட்டுக்குத் தானே ஒழைக்கறேன்!''

''ஆயா, இரு . சந்திரமௌலி உள்ளே போனவர் வேகமாக வந்தார். எம்பேரைச் சொல்லி, வெத்தலை போட்டுக்க.''

''எதுக்கு சாமி.'' என்று மறுத்துவிட்டு பிறகு சந்தோஷத்தோடு வாங்கிக் கொண் டாள்.

கதவைச் சாத்தி விட்டு உள்ளே சென்றார், மேஜை டிராயரிலிருந்து பால் கார்டை எடுத்தார். பீரோவிலிருந்து பணத்தை எடுத்தார். அவசரமாக வீட்டைப் பூட்டிக் கொண்டு பால் பூத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தார்.



நாம் சாதாரணமாக உப்பு சீடை செய் வது வழக்கம். ஆனால் அதே சீடையுடன், புளிப்பு இல்லாத தயிரை, காலையிலேயே ஒரு துணியில் மூட்டை போல் கட்டி தண்ணீர் முழுவதும் வற்றியுடன் மாலை யில் அந்த மூட்டையை அவிழ்த்து அந்த தயிரை மாவுடன் கலந்து பிசைந்து சீடை களாக உருட்டி ஒரு மணி நேரம் கழித்து வெந்து எடுங்கள். மிகவும் கரகரப்பாக அதே சமயம் ருசியுள்ளதும் கூட.

— ஜெயஸ்ரீ.

கையில வாங்கினேன்.
பையில போடலை.
காசுபோன இடம் தெரியலே.''

ஒரு பழைய தமிழ்ப படத்தின் பாடல் ஒன்று நினைவுக்கு வருகிறது. இன்றைய வாழ்க்கையில் பணத்தின் நிலமை இதுதான். ஒருவர் சம்பாதித்தாலும் போதவில்லை. இருவர் சம்பாதித்தாலும் போதவில்லை.

''கையிலே சம்பளம் வாங்கிட்டு வரது தான் தெரியுது..... அடுத்த நிமிஷம் எப்படி செலவாகுதுன்னே தெரியலே... பத்து தேதிக்கு எல்லாம் அடுத்த சம்பளம் எப்ப வரும்னு காத்துக் கொண்டிருக்க வேண்டிய பற்றாக்குறை வந்திருது... என்ன செய்யற துன்னே தெரியலே.''

பல குடும்பங்களிலும் இருந்து காதில் விழும் பேச்சுக்கள்தான் இவை.

ஆமாம்! இந்தப் பணம் எங்கே போகிறது என்று தேடிப் பார்ப்போமா?



### ஆடம்பரம் அதிகரித்து விட்டது:

சுமார் இருபத்தி ஐந்து முப்பது வருடங்களுக்கு முன்பு வருமானத்திற்குத் தகுந்த வாழ்க்கைத்தரம் இருந்தது. வருமானத்தைப் பெருக்கிக் கொள்ள முடியாதவர்கள், உள்ள வாழ்க்கைத் தரத்தில் வாழ்ந்துக் கொண்டிருந்தார்கள். போலியான வாழ்க் கைத்தரத்தில் வாழ விரும்பவில்லை. இப் போது வருமானம் தகுந்த அளவு இருக் கிறதோ இல்லையோ மிக உயர்ந்த வாழ்க் கைத்தரம் வேண்டும் என்று காட்டிக் கொள்ள வேண்டும் என்ற போலிக் கௌ ரவம் வெகு வேகமாக ஜனங்களிடையே பரவி வருகிறது.

சாதாரண நடுத்தரக் குடும்பங்கள், தங்களால் முடியுமோ முடியாதோ உயர் தரக் குடும்பங்களின் தரத்தில் வாழ முயற் சிக்கின்றன.

அதன் விளைவே கடன். எங்கும் கடன். எதற்கும் கடன்.

ஆபீசில் பிராவிடண்ட் பண்டு லோன். சொசைடி லோன். தவணை முறை விற் பனைக்கடன். எல்லாம் போகக் கையில் வருவது மொத்த சம்பளத்தில் கால் பகுதி கூட இருப்பதில்லை.

வீட்டுக்கு அந்தக் கால் பகுதியைக் கொண்டு வந்தால் மளிகைக் கடை கடன், துணிக்கடை கடன், கைமாத்துக் கடன் இன்னும் பல கடன்கள். 'என் கடன், கடன் திருப்பிக் கொடுப்பதே' என்று பாட வேண் டிய நிலைமை.

''நீ சம்பாதிக்கிற பணத்தை என்னடி செய்யறே'' என்று யாராவது ப்ரண்ட் கேட் டால், ''நாங்க வாங்கின கலர் டீவிக்குப் பணம் அடைச்சிகிட்டு இருக்கேன்'' அல்லது ''அவரோட ஸ்கூட்டருக்குக் கடனை திருப்பி அடைச்சிகிட்டு இருக்கேன்'' என்ற பதில் வருமே தவிர, ''என் பணத்தை நான் சேமித்து வைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று பதில் சொல்லும் பெண்கள் மிக



# எங்கே போகிறது பணம்

மிகக் குறைவு.

எல்லாவற்றையும் உடனேயே வாங்க அவசரம். அவசரம்....

மாதச்சம்பளத்தில் பெரும் பகுதி இத்தகைய கடன்களுக்குப் போகிறது.

### இயலாமையை ஒத்துக் கொள்ளாத வாழ்க்கை:

''அம்மா. நாலாம் நம்பர் நிர்மலாவுக்கு இன்னிக்கு பர்த்டே. அவங்க அம்மா முந்நூறு ரூபாய்க்கு சூடிதார் வாங்கிக் கொடுத்து இருக்காங்க. எனக்கும் வாங்கிக் கொடும்மா.''

அம்மாக்காரி அப்பாவிடம் சொல்லி சிபாரிசு செய்ய, அப்பா சம்மதித்தால் சரி, இல்லாவிட்டால் எங்கேயாவது கடன் வாங்கியாவது தனது மகளின் ஆசையை நிறைவேற்றுவாளே தவிர, அன்றைய காலத்துப் பெற்றோர்களைப் போல வசதி இல்லாவிட்டால், ''நமக்கு அதுக்கெல்லாம் வசதி இல்லை...'' என்று தங்களது இயலாமையை ஒத்துக் கொள்ள இன்றைய காலத்துப் பெற்றோர்கள் தயாராக இல்லை.

தாங்கள் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் தங்களது குழந்தைகளின் கண்ணோட்டத்தில் தாங்கள் பணக்காரர்களைப் போன்றே தோன்ற வேண்டும் என்று நினைக்கிறார்கள். இந்தத் தவறான மனோ பாவத்தின் காரணமாக பெற்றோர்களின் உண்மையான வருமான நிலைமை குழந்தைகளுக்குத் தெரிவதில்லை. அதனால் அவர்களுடைய அடுக்கடுக்கான தேவைகள் – பலதும் தேவையற்றது – தவிர்க்க முடிந்தது – வந்து கொண்டே இருக்கின்றன.

ஒரு தடவை பணக்கார வேஷம் போட்டால் அந்த வேடத்தில் தொடர்ந்து நடித்துக் கொண்டுதானே இருக்க வேண்டும்.

கடன் பெருகிறது. கவலை வருகிறது.

கடன்கள் பெருகுவதற்கு 'ப்ளாட் சிஸ்டம்' வாழ்க்கை முறையும் ஒரு காரணம்.

போட்டி மனப்பான்மை அதிக அளவில் வளருகிறது. ஒரு வீட்டில் ஒன்று வாங்கினால் அந்தச் செய்தி மிக விரைவாக எல்லா ப்ளாட்டுக்களுக்கும் பரவி அந்தந்த குடும்பங்களில் திடீர்த் தேவைகள் பிறக்கின்றன.

ஒரு ப்ளாட்டில் ஒரு பர்த்டே பார்ட்டி கொடுத்தால் அதைவிட ஆடம்பரமாக இன்னொரு ப்ளாட்டில் பர்த்டே பார்ட்டி கொடுக்கப்படுகிறது.

யார் வீட்டு பர்த்டே பார்ட்டி நன்றாக இருந்தது என்ற கேள்விக்கு முதல் மார்க் வாங்க வேண்டும் என்று பலரும் போட்டிப் போடுகின்றனர்.

விளைவு –

செலவு.

அந்தக் காலனியிலேயே வாழ்க்கைத் தரத்தில் உயர்ந்தவர்களாகக் காட்டிக் கொள்வதற்காகவே பலரும் பலப் பொருட்களையும் வாங்குகின்றனர்.

### குடிப் பழக்கம்:

பல குடும்பங்களிலும் குடிப்பழக்கம் அதிகரித்து விட்டது. ஆபீஸ் விட்டு வீட்டுக்கு வந்தால் நண்பர்களோடு சேர்ந்து குடிக்கும் கணவர்கள் பல குடும்பங்களிலும் அதிகரித்து வருகின்றனர்.

மாதத்திற்கு எப்போதோ ஒரு முறை என்றிருந்த பழக்கம், வாரத்திற்கு ஒரு முறை





யாகி பிறகு தற்சமயம் தினசரி பழக்கமாக பல குடும்பங்களிலும் இருந்து வருகிறது.

**ஷாப்பிங் பழக்கம்:**

வீட்டில் உள்ள ஆண் இப்படி என்றால் ஷாப்பிங் போகிறேன் என்ற பேரில் வீட்டில் உள்ள பல பெண்களும் கடைக்கு அனாவசியமாகச் சென்று தேவையில்லாத பல பொருட்களையும் வாங்கி வந்து கொஞ்ச நாளில் அவை உபயோகமற்றதென்று தூக்கி எறிகின்றனர்.

''கடைக்குப் போன போது நூறு ரூபாய் எடுத்துகிட்டுப் போனேன். வீட்டுக்கு வந்து பர்சைப் பார்த்தால் எல்லாம் காலி.'' அங்கே பார்த்தபோது வாங்கணும்னு தோணிச்சு.... வீட்டுக்கு வந்த பிறகு வாங்கி இருக்க வேண்டிய அவசியமில்லையேன்று தோணுது.''

பல குடும்பப் பெண்களும் சொல்வது காதில் விழுகிறதே!

**மாடர்ன் தாய்மார்கள்:**

வீட்டில் டிபன் செய்ய வேண்டுமா? இன்ஸ்டண்ட் தயாரிப்புகளை வாங்கு. குழந்தைக்கு ஜூஸ் கொடுக்க வேண்டுமா?

கடைகளில் பாக்கெட்டுகளில் அடைத்து வைக்கும் ஜூஸ்களை வாங்கி அந்தந்த நேரத்திற்குக் கொடுத்து விடுகின்றனர்.

இதனால் ஏற்படும் செலவு ஒரு பக்கம் இருக்க, அதற்கு உண்மையான பலன் இருக்குமா என்பது ஒரு கேள்வி குறி!

பல குழந்தைகளுக்கும் அலர்ஜி ஏற்படுவதன் காரணம் இது போன்ற பாக்கெட்டுகளில் விற்கப்படும் பழச்சாறு (!) களில் சேர்க்கப்படும் பிரிஸர்வேடிவ்ஸ்' கள் ஒத்துக் கொள்ளாததே.

**கிரெடிட் கார்டு:**

கையில் பணமே இல்லாமல் செலவு செய்ய வசதியைத் தருவது கிரெடிட் கார்டு. பாங்குகள் புதியதாக அறிமுகப் படுத்தி வரும் திட்டம் இது. எதிர்பாராத சந்தர்ப்பங்களில் இநதத்திட்டம் கை கொடுத்து உதவுவது உண்மைதான் என்றாலும் மனக்கட்டுப்பாடு இல்லாதவர்கள் இம்முறையினால் அனாவசிய செலவு செய்து விட்டுப் பிறகு அவஸ்தைப் படுகிறார்கள்.

இன்றைய வாழ்க்கை முறை எங்கே யார் எதைக் கடனில் கொடுத்தாலும், அது தேவையோ இல்லையோ அதை வாங்கு என்கிற முறையில் போய்க் கொண்டிருக்கிறது. இந்த வாழ்க்கை முறை சரியா?

இந்த முறை மாறி, நம்முடைய வருமானம் என்ன? நாம் எவ்வளவு கடன் வாங்க தகுதியுண்டு? வாங்க நினைக்கும் பொருள் அவசியமா? செய்ய நினைக்கும் காரியத்தை இன்னும் சிக்கனமாக செய்ய முடியுமா? எதிர் காலத்திற்காக சேமிக்க வேண்டாமா? என்றெல்லாம் சிந்தித்து செலவு செய்யாவிட்டால்,

'எங்கே தேடுவேன் — பணத்தை
எங்கே தேடுவேன்.'

என்று பணம் திரைப்படத்தில் என். எஸ். கிருஷ்ணன் பாடியது போல பாடிக் கொண்டிருக்க வேண்டியதுதான். குடும்பச் செலவைக் கட்டுப் படுத்துவதில் ஆண்களைக்காட்டிலும் பெண்களுக்கு பொறுப்பு அதிகம்.

— கமலநாதன்.

# பனி மூட்டம்

- சங்கரி அப்பன்

பஸ் வளைவில் திரும்பும்போதே அங்கிருந்து பார்த்தபோது, அந்த மஞ்சள் கட்டிடம் தெரிந்தது மேரிக்கு. அவளுள் ஒரு வெறுப்பு மூண்டது. ''கருணை இல்லம்'' என்ற கொட்டையெழுத்து போர்ட் அவளை வதைத்தது. பஸ் நின்றது.

''இறங்கு மேரி.... என்ன யோசனை, வீடு வந்தாச்சு....'' என்ற மதர் ரோஸி காய்கறிப் பையைத் தூக்கியபடி இறங்க ஆயத்தமானாள். இறங்குகிற கூட்டம் அதிகமிருந்தபடியால் சடக்கென்று இறங்க முடியவில்லை. தாவணியைச் சரி பண்ணிக் கொண்டு மேரி ஒயர் கூடையுடன் மதர் பின்னால் சென்றாள். ''வீடு வந்துவிட்டது....'' என்று மதர் சொல்கிறாள். வீடு... இதுவா வீடு.... அனாதை இல்லம். அம்மா இல்லை, அப்பா இல்லை — அதனால் அன்பான வீடில்லை, கவனிப்பில்லை, யாரோ ஒரு மதரின் கருணையை மட்டுமே பெறும் தகுதியுடன், சுய வெளிப்பாடு எதையும் காட்டமுடியாமல், இப்படி ஆட்டுக்குட்டியாய் வாழ்ந்து கொண்டு.... அவளையும் அறியாமல் கேவல் வெளிப்பட்டு விடுகிறது.

''மேரி... என்னாச்சு உனக்கு?''

மதர் ரோஸி கவலையுடன் கேட்டாள்.

'என்மேல் அன்பு செலுத்த அம்மா வேண்டும், அப்பா வேண்டும்... உங்களாலே தரமுடியுமா மதர்?' என்று கத்த வேண்டும் போல் மேரி உணர்ந்தாள். ஆனால் அப்படி கத்திவிட முடியாது. அது ரோஸியைக் காயப்படுத்தும். பிறந்து ஒரே வாரமான அவளை நெஞ்சிலும் தோளிலும் சீராட்டி வளர்த்த ரோஸி, இது கேட்டால் வருத்தமுடன் மனம் நொந்து போவார்.

''என்ன மேரி... உடம்பு சரியில்லையா?''

''சும்மாதான் லேசா உடல் சுடற மாதிரி இருக்கு...''

அப்பவே சொல்லியிருந்தா... இரண்டு மெட்டாசின் வாங்கியிருக்கலாமில்லே. எழுந்தவுடனே தலைக்குக் குளிக்கிறே, அதான் உனக்கு ஒத்துகிறதில்லை...

மேரி தன்னை சேகரம் பண்ணிக் கொண்டாள்.

''சரியாயிடும் மதர்....'' என்று புன்னகைத்தாள். அந்தப் புன்னகை ரோஸியை சமாதானப்படுத்திற்று.

''சரி... மதர் சுப்பீரியர் கிட்டே போய் கணக்கு ஒப்படைச்சுடு மேரி. நான் வகுப்பு நடத்தப் போறேன். நேரமிருந்தா சாயங்காலம் வா....''

ரோஸி பணத்தையும் காய்கறிக் கூடையையும் மேரியிடம் ஒப்படைத்துவிட்டு வேகவேகமாக பத்து வயதுவரை உள்ள பிள்ளைகளுக்குப் பாடம் நடத்தப் போனாள்.

மேரி கூடைகளைச் சுமந்தபடி மதர் சுப்பீரியர் ரூம் நோக்கிப் போனாள். விரல் முட்டியால் தட்டி அனுமதி கேட்டாள். கிடைத்தது. புன்னகையுடன் உள்ளே நுழைந்தாள். மதர் சுப்பீரியர் நீள டேபிள் முன் அமர்ந்திருந்தார். பெரிய லெட்ஜர் ஒன்றை வைத்துக் கொண்டு கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தார். இவளைப் பார்த்ததும் ததும்பும் சிரிப்பு ஒன்றைப் படரவிட்டார்.

''வாட் மை சைல்ட்?''

''ஹாண்டி க்ராப்ஃட்ஸிலே எங்களுடைய கைவேலைகளை போய்க் கொடுத்தோம். அவங்களுக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. மேலும் சில ஆர்டர்கள் கொடுத்திருக்காங்க....''

''வெரி குட்... உன்னுடைய தாஜ்மஹால் என்ன விலை போயிற்று மேரி?''

''முன்னூறு ரூபாய்க்கு எடுத்துக் கொண்டார்கள் மேடம்.'' அரவணைக்கிற பெருமிதப் பார்வையாய் அவளைப் பார்த்தார் மதர் சுப்பீரியர். காலியான வெறும் இன்ஜெக்ஷன் பாட்டில்களால் செய்யப்பட்ட தாஜ்மஹால் அது. விற்ற பொருட்களுக்கான பணத்தைக் கணக்குப் பார்த்து

ஒப்படைத்தாள் மேரி. மதர் மணியடிக்க, வந்த ஒரு பெண்மணியிடம் காய்கறிக் கூடையையும் மளிகைச் சாமான் நிறைந்த ஒயர் பையையும் ஒப்புவித்தாள்.

''வரேன் மேடம்...'

''எஸ் மை சைல்ட்... இப் என்ன வொர்க் உனக்கு?...''

''ஜூனியர் பெண்களுக்குத் தையல் வகுப்பு எடுக்கறேன் மேடம்..''

''குட்... உன் வேலையைக் கவனி...'' என்று மென்மையான குரலில் கனிந்து கூறினாள் மதர். மதரை நிமிர்ந்து பார்க்காமலேயே மேரி அவசரமாய் வெளியேறினாள். அவளுக்கு அழவேண்டும் போல் இருந்தது. தனியிடம் தேவைப்பட்டது. இப்பொழுது தையல் சொல்லித் தர முடியாது என்று பட்டது. மெல்ல, பரந்த தோட்டம் இருந்த இடத்திற்குச் சென்றாள் மேரி. மரங்கள் அடர்ந்த சின்னக் காடு மாதிரி நின்றது தோட்டம். குட்டிக் குருவிகளின் 'டுவீட்' சத்தம் இனிமையாகக் கேட்டது. செம்பருத்திப் பூக்கள் தலைநீட்டியிருந்தன. ஒரு பெரிய புளியமரம் நின்றது. அதன் நிழலுக்குப் போனாள் மேரி. அதன் முதுகில் சாய்ந்த வண்ணம் உட்கார்ந்தாள். அடக்கி வைத்த கண்ணீர் கொட்டத் தொடங்கியது.

பொருட்களைக் காணாமல் போட்டு விடுவது போல், சில தாய்மார்கள் பெற்ற குழந்தைகளையே காணாமல் போட்டு விடுகிறார்கள். இக்குழந்தைகளையெல்லாம் பொறுக்கி எடுத்து வளர்க்க சில இல்லங்கள்! மேரி, அந்தத் தாய்மார்களை வெறுத்தாள். இந்த இல்லங்களை ஒழிக்க வேண்டும் என்று துடித்தாள். இப்படி இல்லங்கள் அனாதைகளை வளர்க்கும் புண்ணியத்தைக் கட்டிக் கொள்கின்றன. தேவையா? உலகத்தாரின் பரிதாபத்தையும் அவமானத்தையும் சுமந்து கொண்டு, அடங்கி அடங்கி ஒரு சிறைப் பறவையாய் மனம் முடக்கப்பட்டு அப்படியாவது வளர்ந்து அவர்கள் சாதிக்கப் போவது என்ன? பெற்றாயேடி அம்மா... அந்தப் பிஞ்சுப் பருவத்திலேயே அப்படியே



கொன்னுப் போட்டு விட வேண்டியது தானே.... இப்படி துக்கம் சுமந்து நிக்க வேண்டியதில்லை அல்லவா? கொஞ்ச நாளாகவே மேரியின் மனம் பெற்றவர் பாசத்திற்காக ஏங்கத் தொடங்கிவிட்டது.

அன்று சர்ச்சிற்குப் போயிருந்தாள் மேரி. மேரிக்கு முன்னால் ஒரு தாயும் மகளும் சென்று கொண்டிருந்தனர். தாயிற்குச் சுமார் நாற்பது வயதிருக்கலாம். மகளுக்கு அவள் வயதுதானிருக்கும்.

''அந்தப் பக்கம் பார்க்காதேன்னு சொன்னேனில்லை...'' என்று தாய் மகளைக் கடிந்து கொண்டாள்.

''நான் பார்க்கலைம்மா....'' என்று மெல்லிதாகக் கூறினாள் மகள். அவள் கண்கள் கலங்கத் தொடங்கியிருந்தன.

''அவன் இங்கியேதான் பார்க்கிறான் படுபாவி. கரோலினா, ஏதாவது ஏடாகூடமா நடந்தே வெட்டிப்புடுவேன்....''

மகள் விசும்பினாள். அதற்குள் நுழை வாயில் வந்திட அனைவரும் பிரார்த்தனைக்




அரவைக்கு • துண்ட
• உலா
உண்மையிலேயே அன்றாட உபயோகத்திற்காக உருவாக்கப்பட்ட ஃபுட் ப்ராஸஸர் இது கட்டுறுதி மிக்கது உங்கள் வேலையாள் இதை கரடு முரடாக கையாண்டாலும் கூட அதைத் தாங்கக் கூடியது.
ஆகவே, ஸுமீத் SP-16 க்கு அன்றாடம் கடுமையான வேலை செய்யும் தண்டனை அளியுங்கள். இதில் நீங்கள் எத்தகைய வேலையையும் சுமத்தலாம் — எதையும் விட
உங்கள் விருப்பத் தேர்வு கேரட், ஆப்பிள், அன்னாசி போன்ற பழங்களைப் பிழிவதற்கான V-19 சென்ட்ரிஃபியூகல் ஜூஸர் கிடைக்கிறது.
ஸுமீத்
SP-16 எலக்ட்ரானிக்
கடுமையான சமையல்
வேலைகளைச் செய்திட
கட்டுறுதியுடன் உருவாக்கப்பட்டது.
இலவசமாக நேரில் நிகழ்த்திக் காட்டுவதைக் காணுங்கள்

காக மண்டியிட்டனர். மேரியால் ஈடுபாட்டுடன் பிரார்த்தனை பண்ண முடியவில்லை. அம்மா என்பவள் இத்தனைக் கொடூரமானவளா? என்னமாய்க் கடிகிறாள். பிரார்த்தனை முடிந்து மேரி, அவசரமாய் அவர்களுக்குப் பின்னாலேயே சென்றாள். வெளியே மரத்தடிக்கு வந்த தாய் மகளின் தலையை மிருதுவாய் வருடினாள். ''தளதளன்னு வளர்ந்து நிக்றியே... நீ நல்லபடியா ஒருத்தன்கிட்டே போய்ச் சேரணுமேன்னு கவலையா இருக்கு கரோ... அதான் ரொம்ப கோவிச்சுக்கிட்டேன்...'' இந்த வார்த்தைகள் தான் மேரியை அடித்துப் போட்டுவிட்டது.

தாயின் நெகிழ்ந்த குரல் கேட்டு மகள் உணர்ச்சித் தவிப்பில் உதடு துடிக்க விசும்பியபடியே அம்மாவைக் கட்டிக் கொள்கிறாள். மேரியின் கண்களில் கண்ணீர் துளிர்த்து விட்டது. மனசை என்னவோ செய்தது. அம்மா, என்ன ஒரு அழகான வேலி! அதிலிருந்து மேரிக்குப் பொது இடங்களுக்குச் சென்றால், இப்படிப் பெற்றோர்களையும் பிள்ளைகளையும் கவனிக்கும் பழக்கம் ஏற்பட்டது. அது அவள் ஏக்கத்தை அதிகப்படுத்திற்று.

''மன பலவீனமாகி நாளைக்கு ஒரு பிள்ளைக்குத் தாயாகி, அதை அனாதை இல்லத்திலே போட்டுட்டு ஒளிய வேண்டிய கேவல நிலை வந்திடக் கூடாதேம்மா... ஜாக்கிரதையா இருக்கணும். பொண்ணாப் பிறந்தா ஜாக்கிரதையா இருக்கணும்... வா போலாம்...'' என்று அந்தம்மாள் அன்று சொன்னதும் சுளீரென்று அடிபட்டது போல் உணர்ந்தாள் மேரி. சத்தம் போட்டு அழ வேண்டும் போல் இருந்தது. தன்னைப் பெற்ற தாய்க்கு இப்படியொரு தாய் இல்லாமற் போனதால் தான், தனக்கு இப்படியொரு நிலைமையோ! கடவுளே ஏன் இப்படிச் சிலரை மட்டும் பொறுக்கியெடுத்து தண்டிக்கிறாய்?

கடவுளுக்கு இவள் மனவலி புரிந்திருக்க வேண்டும். நான்காம் நாள் அந்த அதிசயம் நடந்தது. ''இதுதான் மேரி... ரொம்ப நல்ல பெண். எங்கள் இல்லத்திலேயே மிகவும் சூட்டிகையான பெண். பண்பும், அறிவும், அழகும் — இவள் உண்மையிலேயே உங்களுக்கு மகளாகப் பிறக்கக் கூடிய தகுதியுடையவள். அதனால்தானோ என்னவோ, நீங்களே இவளைத் தேடிக் கொண்டு வந்து விட்டீர்கள்....''

மேரிக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை. மதர் சுப்பீரியர் அறிமுகப்படுத்தி வைத்த அம்மாளைப் பார்த்தாள். பளீரென என்ன ஒரு நிறம்! ஐம்பது வயதாமே! அப்படித் தெரியவேயில்லை. மெல்லிய புன்னகையும், வட்டப் பொட்டும், கருணை ததும்பிய உயிர்ப்பான கண்களும், கண்ணனை வளர்த்த யசோதா மாதிரி இருந்தாள். பெயரும் யசோதா தானாம்.

''மேடம்...! எனக்கு இவளை ரொம்பப் பிடிச்சிருக்கு. அழைச்சிட்டுப் போறேன். என் மூன்று பெண்களும் திருமணமாகி அவரவர் இல்லங்கள் சென்றுவிட்டனர். அவரோ ஊர் ஊராய் சுற்றுபவர். எனக்கு இந்தத் தனிமை மிகவும் வேதனையாக இருந்தது. எப்பொழுதும் எனக்குப் பெண் குழந்தைகள் என்றால் பிடிக்கும். என் கூட என் மகளாக வர உனக்கு சம்மதமாம்மா..." ஏதோ யாசிக்கிறாள் போல் தன்னிடம் தழைந்து கேட்ட அம்மாளை வியப்புடன் பார்த்தாள் மேரி.

இவர்களுக்கு மகளாக — அடேயப்பா எப்படி கொடுத்து வைத்திருக்க வேண்டும்! மேரியின் உள்ளம் கனிந்துருகியது. கண்களில் ஈரம் படர்ந்தது. பேச வேண்டும் என்பதை மறந்து போனதன் விளைவாக, வாய் அசைவின்றி கிடந்தது. தனக்கென்று ஒரு இல்லம்! அவள் அனாதை இல்லை..... இல்லை... இல்லை. மெல்ல தலைகுனிந்து, உடம்பு சிலிர்க்க நின்றாள் மேரி.

''சொல்லு மேரி... இவர்களுடன் போறியா? உன் இழப்பு எங்களுக்குப் பெரிசுதான். அதுக்காக உனக்கு வரும் அதிர்ஷ்டத்தை நான் தடை பணணக் கூடாதில்லையா?'' என்று சொல்லிவிட்டு மதர் அவளைப் பார்த்தாள். மதரின் கண்கள் கலங்கியிருந்தன. மேரி மௌனமாக நின்றாள்.

''அவளுக்கு இஷ்டமில்லை போலிருக்கு. உன்னை என் மகள் போலவே வச்சிருப்பேனம்மா... ப்ளீஸ் சரி சொல்லேன்...'' என்று இரைஞ்ச ஆரம்பித்தாள் யசோதா. அதற்கு மேல் தாங்காமல் மதர் சுப்பீரியர் மேரியை அழைத்து அவள் கையை யசோதாவின் கையில் ஒப்படைத்தாள். தாயும் — மகளும் என்ற புதிய சிலிர்ப்பான உறவுடன் இருவரும் ஒருவரை ஒருவர் ஒரு வினாடி பார்த்துக் கொண்டனர். பெரிய கருநீலக் கலர் கார் மேரியை அழைத்துக் கொண்டு போனதும், மதர் சுப்பீரியர் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

புதிய வீட்டில் ஏற்பட்ட விழிப்பு ஒரு

## அப்பள சமோசா

அப்பளத்தை நீரில் நனைத்துக் கொள்ளுங்கள். சிறிது நேரங்கழித்து உருளைக்கிழங்கு மாசாலாவை ஈர அப்பளத்துக்குள் வைத்து, ஓரமெல்லாம் உளுந்து மாவுக் கலவையால் தடவி மூடி விடுங்கள். ஒவ்வொன்றாக வாணலி எண்ணெயில் பொரித்து வைத்துச் சாப்பிடுங்கள். அப்பள சமோசா ருசியே ருசி!

— கீதா.

புதிய உற்சாகத்தைத் தந்தது மேரிக்கு — லட்சுமிக்கு! ஆமாம் யசோதா சொல்லி விட்டாள். ''ஏம்மா இனிமே உன் பெயர் லட்சுமி...'' தலை நிறைய பூ வைத்து விட்டாள். நெற்றி நிறைய திலகமிட்டாள். கழுத்தில் ஒற்றைச் சங்கிலி, புதிய தொங்கட்டான்கள், கொலுசு, கைநிறைய கண்ணாடி வளையல்கள். கல் பதித்த சிறிய தங்க மோதிரம். ஆறு செட் பாவாடை தாவணி. எல்லாம் நல்ல நயமான துணி! லட்சுமி ஒரு சிறிய தோட்டம் போல் மலர்ந்திருந்தாள். லட்சுமி அந்த விட்டிற்குப் பிடித்த மாதிரி சமைக்கக் கற்றுக் கொண்டாள். டேப்பில் பிடித்தபோது பாட்டுக் கேட்டாள். வீடியோவில் நிறைய சினிமா பார்த்தாள். அந்த வீட்டில் சுதந்திரமாக ஒரு ஆறு போல் அலைந்தாள். யசோதா பார்க்க் நேர்த்தியாக இருந்தாளே தவிர அவளால் அதிகமாக வேலை செய்ய முடிந்ததில்லை. லட்சுமி எல்லா வேலைகளையும் பழகிக் கொண்டாள். எப்பவாவது சுந்தரேசன் வருவார்... இரண்டே நாளில் பறந்து விடுவார்.

''பார் லட்சுமி இப்படித்தான்... கல்யாணமான நாளிலிருந்தே இப்படித்தான். வீடு தங்காமல் ப்ளேனில் பறக்கிறார். குழந்தைகள் இருந்தார்கள், என் தனிமை தெரிந்ததில்லை. இப்ப பார், இவ்வளவு பெரிய வீட்டில் நான் மட்டும் எப்படித் தனியாக நாளெல்லாம் பேசக் கூட ஆளில்லாமல் இருப்பது?'' என்று குழந்தை போல் கூறி, யசோதா இவள் தோளில் சாய்ந்து கண்ணீர் விட்டாள்.

''கவலைப்படாதீங்கம்மா... அதான் உங்க மகளா நான் வந்திட்டேனே... உங்களுக்கு ப்ளட் ப்ரெஷர், சுகர் எல்லாம் இருக்கு, சீக்கிரம் டயர்ட் ஆயிடறீங்க... எல்லா வேலையும் நானே பார்க்கறேன்...''

''வேண்டாம் லட்சுமி... சமையற்காரி வைத்திருந்தேன், நீ வருவதற்கு கொஞ்ச நாள் முந்திதான கோபித்துக் கொண்டு ஓடிவிட்டாள். சாமான்களை எவ்வளவு அள்ளிப்போட்டாலும் சமையல் என்னவோ மோசமாய்தான் இருக்கும்.... சாம்பார் வைத்தால் ரசம் மாதிரி இருக்கும். இட்லி, ராணுவ வீரன் மாதிரி விரைப்பாய் இருக்கும். சாதம் கீர் மாதிரி குழைந்திருக்கும், இல்லை அவல் மாதிரி முழிக்கும்....''

''போதும்... போதும்... போதும்...'' லட்சுமி கணகளில் நீர் வரும்வரை சிரித்தாள்.

''நானே சமைச்சிடுவேன்மா... என் சமையல் பிடிச்சிருக்கில்லையா?''

''ரொம்ப சுவையா மணமா பண்றே... என் பெண்களில் ஒருத்தி கூட இப்படிச் சமையல் பண்ணியதில்லை. ஆனாலும் பாவம் நீ எதுக்கு சிரமப்படணும்மா? நல்ல ஆளுக்குச் சொல்லியிருக்கேன்....''



மோர்மிளகாயைப்பொரித்துத்தனியே வைத்தோமானால் நமத்துப் போய்விடும். ஆனால் பொரித்த எண்ணெயிலேயே போட்டு மூடி வைத்தோமானால் நமத்துப் போகாமல் இருக்கும். வேண்டிய பொழுது எடுத்துப் பரிமாறிக் கொள்ளலாம். மொறு மொறுவென்று சுவையாக இருக்கும்.

— மீ. சொர்ணா.

''வேண்டாம்மா. ஆள் தேள் எல்லாம் எதுக்கு? நான் சமைச்சுடறேன். நீங்க சாப்பிட்டுத்தான் ஆகணும்....''

லட்சுமி நெஞ்சு கொள்ளாத சந்தோஷத்துடன் அந்த வீட்டின் பொறுப்புக்களை ஏற்றுக் கொண்டாள்.

எண்ணெய்தேய்த்துக்குளித்திருந்தயசோதாவின் கூந்தலைச் சிக்கெடுத்து விட்டுக் கொண்டிருந்தாள் லட்சுமி. ''போஸ்ட்...'' உள்ளே ஒரு கவர் விழுந்தது.

''லட்சுமி... கவரை எடுத்து வாம்மா...''

''அக்கா போட்டிருக்காங்க...''

''யாரு... கஸ்தூரியா?''

''இல்லேம்மா, மஞ்சுளாக்கா... டில்லியிலே இருக்காங்களே...!''

''ஓ... அவளா...? பிரிச்சுப் படிச்சுச் சொல்லு லட்சுமி...''

''நீங்களே படிங்கம்மா...''

''போடி லட்சுமி... நீ என்ன வேற்றாளா? பார்த்தியா, நான் உன்னை என் சொந்த மகளா நடத்தினாக் கூட நீ விலகித்தான் நிக்கறே...!''

யசோதா கண் கலங்கினாள்.

''சே... சே... அப்படியில்லேம்மா,'' பிரித்துப் படித்தாள் லட்சுமி. இனிய நல்ல செய்தி. மஞ்சுளா மூன்று மாதம் தாய்மையடைந்திருக்கிறாள். இருவருக்கும் சந்தோஷம் தாங்கவில்லை.

''ஏண்டி லட்சுமி, உங்கக்காவுக்குக் கைமுறுக்குன்னா உயிர். மாசமாயிருக்கா...''

''அம்மா... எனக்கு முறுக்கு சுத்தத் தெரியாதே!''

''நான் சுத்துவேன்... ஆனா வெந்தெடுக்க ஆள் வேணுமே... என்னாலே எண்ணெய்ச் சட்டி முன்னால் ரொம்ப நேரம் உட்கார முடியாதே!''

''நான் வெந்தெடுக்கிறேன்மா.''

''வேண்டாம் ராசாத்தி... நான் வேணா நாகம்மா மாமியைக் கூப்பிட்டுக்கறேன். ஒரு படி மாவை நீ ஒண்டியாய் எப்படி வெந்தெடுப்பே...?''

''பார்த்தீங்களா... நீங்கதான் இப்பப் பிரிச்சுப் பேசறீங்க. எங்கக்காவுக்கு நான் செய்ய மாட்டேனா?''

''நீ கிடைக்க நான் என்ன புண்ணியம் செய்தேனோ...?'' கண்கலங்கினாள் யசோதா.

முறுக்கு, தட்டை, திரட்டுப்பால், நெய் விளங்காய் என்று யசோதா பக்குவம் சொல்லச் சொல்ல லட்சுமி பரபரவென்று எல்லாவற்றையும் மூன்றே நாட்களில் செய்து முடித்து விட்டாள். டில்லிக்கு டிக்கெட் எடுத்தாகிவிட்டது. அவளும் போகப் போகிறாள்! என்ன ஒரு அதிர்ஷ்டம்! இத்தனை அன்பான ஒரு தாய் கிடைத்திருக்க எத்தனை புண்ணியம் பண்ணியிருக்க வேண்டும்!

வாசல் மணியடித்தது. கதவைத் திறந்தாள் லட்சுமி.

கோமதியம்மாள்... யசோதாவின் தாய்.

''வாங்க பாட்டி... வாங்க... அம்மாவும் நானும் டில்லிக்குப் புறப்படறோம்...'' என்று துள்ளிக் கதவைத் திறந்தாள் லட்சுமி.

''அப்படியா லட்சுமி, எங்கே யசோதா?''

''அம்மா மாடியிலே இருக்காங்க. வாங்க. அம்மா... அம்மா...! பாட்டி வந்திருக்காங்க...!''

''கூப்பிடாதே லட்சுமி. ரெஸ்ட் எடுக்கட்டும். நானே போறேன்...''

யசோதா விழித்திருந்தாள். ஆனால் சோர்வாக இருந்தாள். லேசாகச் சாய்ந்த வாக்கில் படுத்திருந்தாள்.

குழந்தைகளுக்குக்காலையில்பிஸ்கெட் கொடுத்தால் வயிற்றில் மந்தம் வரும் என்று ஒருவர் எழுதியிருந்தார். ஆனால் காலையில் குழந்தையின் அழுகையை நிறுத்தினால்தானே வேலை செய்ய முடியும்? ஆகையால் பாயசத்துக்குப் போடும் திராட்சைப் பழத்தை முதலில் பத்து கொடுத்துவிட்டுப் பிறகு பிஸ்கெட் கொடுத்தால் மந்தம் வராது. வயிறு சம்பந்தமான எந்த நோயும் அண்டாது. நான் காட்டிலும், மேட்டிலும் டாக்டர் இல்லாத ஊர்களில் எல்லாம், என் குழந்தைகளை வயிற்றுக் கோளாறு வராமல் வளர்த்ததே இந்தத் திராட்சைப் பழத்தினால்தான்.

— பார்வதி



''என்ன யசோதா, உடம்பு சரியில்லையா?''

''வாம்மா... வா... வா! உன் பேத்தி மஞ்சுளா குழந்தை உண்டாகியிருக்காள்னு லெட்டர் வந்தது.''

''அப்படியா! ரொம்ப சந்தோஷம். எத்தனையாவது மாசம்?''

''மூன்று மாசமாம். பலகாரம் செஞ்சோம். என் மக லட்சுமிதான் எல்லாம் செஞ்சாள். தங்கமான பொண்ணு'' பாட்டி லட்சுமியை ஒரு தினுசாகப் பார்த்தாள். லட்சுமி புகழ்ச்சி கிடைத்த மயக்கத்தில் தலைகுனிந்து நெளிந்தாள்.

''ஸ்வீட் நல்லாப் பண்ணியிருந்தா, அளவுக்கு மீறிச் சாப்பிட்டுட்டேன். சுகர் ஏறிடுச்சு. அதான் படுக்கை...'' என்று யசோதா சிரித்தாள்.

''சரி... சரி... என்னைப் பற்றியே பேசிக்கிட்டிருக்கேன் பாரு... ஏம்மா, மணி நாலாகுது. காப்பி டிபன் சாப்பிடேன். அடை தானே இன்னிக்கு லட்சுமி?''

''இதோம்மா... பாட்டி இருங்க. காப்பியும் அடையும் கொண்டு வர்றேன்..''

''ஏம்மா... நீ கீழே போய்ச் சாப்பிட்டுட்டு வா. அந்தப் பிள்ளை பாவம் மாடிக்கும் கீழுக்குமாய் எத்தனை தரம் அலையும்...?''

''பரவாயில்லைம்மா. பாட்டி இங்கேயே இருக்கட்டும். ஓடிப் போய்க் கொண்டு வர்றேன். நீங்க பேசிக்கிட்டிருங்க...'' என்று லட்சுமி சிட்டாகப் பறந்தாள். காப்பியும், சூடான அடையும் ஏந்திக் கொண்டு படிகளில் ஏறினாள் லட்சுமி. பாட்டி சொல்வது கேட்டது..

''அதென்ன யசோதா, அந்தக் குட்டி உன்னை அம்மா அம்மாங்குது? நீயும் எம்மவ, எம் மவ அப்படிங்கறே? என்ன கூத்து இது? எங்கேயிருந்து பிடிச்சு வந்தே இதை?''

பாட்டியின் கேள்வி லட்சுமியைக் கோபப்படுத்தியது. யசோதாவின் அம்மா என்பதால் பேசாமல் விட்டாள் அவள். இல்லையேல் இந்நேரம் கழுத்தைப் பிடித்துத் தள்ளியிருப்பாள். யசோதா போன்ற அருமையான குணமுடையவருக்கு, இப்படியொரு மோசமான அம்மாவா! நிச்சயம் யசோதாம்மா பாட்டியை வாங்கு வாங்கென்று வாங்கப் போகிறார்கள் என்று நினைத்து உள்ளுக்குள் சிரித்துக் கொண்டாள்.

''அது ஒரு அனாதைம்மா. எல்லாம் காரியமாத்தான் பிடிச்சிருக்கேன் அதை...''

லட்சுமி அதிர்ச்சியில் உறைந்தாள். 'யசோதாவா... யசோதாவா இப்படிப் பேசுகிறாள்? நிஜமாகவா...? என்ன வார்த்தைகள் இது! லட்சுமியின் உள்ளம் நடுங்கியது.

''எனக்கோ உடம்பு முடியலை... என் மூணு பெண்களுக்குப் இனி வரிசையாப் பிரசவம் பார்க்க வேண்டிய சூழ்நிலை வரும்... அதுதான் பார்த்தேன்... வேலைக்

காரி வச்சா, காசுதான் செலவாகுமே தவிர, பாதி வேலை நாம்தான் செய்யணும். கொஞ்சம் அதட்டிட்டாப் போதும், இந்தக் காலத்து வேலைக்காரிங்க, சரிதான் போடீன்னு ஓடி விடறதுகள். என்ன பண்ணலாம்னு யோசித்தேன்...''

''அனாதை இல்லத்திலே போய் மகள்னு சொல்லி இதைக் கூட்டி வந்தியாக்கும்...?''

''ஆமாம்மா... என்ன கொஞ்சம் சுதந்திரம்கொடுத்திருக்கேன். டேப்பைப்போடும். சோபாவிலே உட்காரும். மெத்தையிலே படுக்குது. நல்ல துணி கட்டிக்கக் கொடுத்திருக்கேன். தொலையுது... நல்ல சாப்பாடு, இப்படி வசதியெல்லாம் அது எங்கே அனுபவிச்சிருக்கப் போகுது? கொஞ்சம் ஐஸ் வச்சாப் போறும், எல்லா வேலைகளையும் ப்ம்பரமாச் செஞ்சுடும்...''

''அது சரிதான்... நல்ல ஐடியா பண்ணினே. ஆனா...''

''என்னம்மா...? உன்னைப் பாட்டின்னு கூப்பிடுதேன்னு எரிச்சலா இருக்கா? தொலையுது விடு. காரியம் ஆகற வரைதான். அப்புறம் நைசா விரட்டிடுவேன்...''

''அதான் கேட்க வந்தேன். எப்படி விரட்டுவே? உனக்குக் கெட்டப் பெயர் வந்துடக் கூடாதில்லையா? இதைப் போய்க் காலம் பூரா வச்சு மாரடிக்கப் போறியா? கல்யாணம் கார்த்தின்னு தண்டச் செலவு பண்ணப்போறியா? இதெல்லாம் வெட்டி வேலைதானே, உனக்கு?''

''நீ ஒண்ணு... அதுக்கெல்லாம் நல்ல ப்ளான் வச்சிருக்கேன்... நம்ப டிரைவர் மாணிக்கம் இல்லே...?''

''யாரு...? பொண்டாட்டி கூட செத்துட்டாளே, இரண்டு புள்ளைய விட்டுட்டு...?''

''ஆமாம். அவனேதான். வயசு முப்பத்தஞ்சுதானே ஆகுது. இவளுக்கு இந்த இடம் போறாதா? மகள்கள் பிரசவம் எல்லாம் முடிஞ்சு செட்டிலானதும் நீட்டா அவனுக்கு இவளை ரெண்டாந்தாரமாக் கட்டி வச்சுட்டாப் போச்சு. என்ன ஒரு ரெண்டாயிரம் ரூபா செலவாகும். போயிட்டுப் போறது. வேற வழி? சரி... சரி... அது வந்துடப் போறது. ஆமாம். அப்பா ஊருக்குப் போயிருந்தாரே, வந்துட்டாரா?''

அவர்களின் சம்பாஷணை தொடர்ந்தது. கேட்டுக் கொண்டிருந்த லட்சுமிக்கு முகம் இருண்டது. இதுதானா யசோதாவின் நிஜமான சொரூபம்? எவ்வளவு அசிங்கம்... என்ன கீழ்த்தரம்! எப்படி இப்படியெல்லாம் நினைக்கத் தோன்றுகிறது. எதற்கு இந்த நடிப்பு?

''பெண்ணே, எனக்கு ஒத்தாசை செய்யத்தான் அழைச்சேன். வேலைக்காரிதான் நீ...'' என்று சொல்லியிருந்தால் கூட அவளால் பொறுத்துக் கொண்டிருக்க முடியுமே! ஓ... இந்த நம்பிக்கைத் துரோகம்... எத்தனை அரக்கத்தனமானது? ஒரு சதைப் பிண்டத்தை இத்தனை நாள் வரை அம்மா என்று நினைத்து சிலிர்ப்படைந்த விதம் எத்தனை அருவருப்பானது! நினைக்க நினைக்க மனசு ஆறவேயில்லை. அனாதை என்பதும், பணம் இல்லை என்பதும் அவள் தவறா? அதனால் கேவலமாக மதிக்க வேண்டும் என்று நினைக்கும் இவர்கள்தான் எத்தனைக் கேவலமானவர்கள். அழுது கொண்டே கீழே போனாள், லட்சுமி இல்லை மேரி!

'மதர் சுப்பீரியரின் நிஜமான கனிவையும், அன்பையும் சலிப்பான விஷயமாய் நினைத்தேனே, அதற்குச் சரியான தண்டனை கிடைத்துவிட்டது. நான் இனி லட்சுமியே அல்ல, மேரியாகவே இருந்துவிட்டுப் போகிறேன். இங்கே இருக்க வேண்டியவளும் அல்ல...' மனத்திற்குள் நினைத்தாள் மேரி. புரிந்து கொண்டாள்.

ரொம்ப நேரமாக லட்சுமியைக் காணாத யசோதாவும், அவள் அம்மாவும் கீழே இறங்கி வந்தனர். ''லட்சுமி... லட்சுமி...'' என்று ரூம் ரூமாய்ச் சென்று பார்த்தாள் யசோதா. அந்தச் சின்னஞ்சிறு மலரைக் காணவில்லை. யசோதா கொடுத்த வளையல், சங்கிலி, உடைகள் அனைத்தும் கட்டிலில் குவிந்து கிடந்தன. கிழிந்த உடையுடன் வந்தவள், கிழிந்த மனத்துடன் சென்றுவிட்டாள் என்று புரியாத யசோதா கத்தினாள். ''சோத்துக்கு வக்கில்லாத அனாதை... நாதியத்த நாய்... ரோஷத்துக்குக் குறைச்ச

## மாகாணி கிழங்கு தோலில் குளிர் பானம்

மாகாணி கிழங்கு ஊறு காய் போடும் போது எல்லோரும் தோலை சீவி எறிந்து விடுவார்கள். அதில் அற்புதமான குளிர் பானம் தயாரிக்கலாம். வாய்க்கு ருசியும் மணமும் நிறைந்த ஆரோக்யமான பானம் இது.

கிழங்கை அழுக்குப் போக நன்றாய் அலம்பிவிட்டு தோலை சீவி, ஒரு கப் தோலிருந்தால் நாலு கப் ஜலம் விட்டு 2 கப் சாறாக வடிகட்டி எடுக்கவும். 1 கப் அளவுக்கு எலுமிச்சம் சாறு எடுத்துக் கொள்ளவும். 3 கப் அளவு சர்க்கரையை இளம்பாகு வைத்து, ஆறினதும் எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து வைத்துக் கொள்ளவும். சிறிது சுக்கைத் தட்டிப் பவுடராக போட்டுக்கொள்ளவும். தேவையான போது ருசிக்குத் தகுந்தபடி ஜலம் கலந்து குடிக்கவும்.

— சாரதா.

லில்லை...'' என்று திட்டித் தீர்த்தாள்.

தன் மடியில் விழுந்து அழும் மேரியைச் சமாதானமாக வருடிக் கொடுத்தாள் மதர் சுப்பீரியர்.

''கடலையும் நிலத்தையும் எப்படித்தான் கலந்தாலும் அது ஒன்றாகிவிடுமா? நிலம் நிலமாகத்தான் இருக்கும். அது மாதிரிதான், அனாதைகளான நாம், நாமாகத்தான் இருக்க முடியும். வசதியும், செழிப்பான உறவுகளும் உடைய அவர்கள் தனி வர்க்கம் தான். அவர்களிடம் நம்மைப் புரிஞ்சுக்கிற தன்மையை நாம் எதிர்பார்ப்பது நமது தவறு தான் மேரி. நாம் இருக்க வேண்டிய இடத்தில் இருந்தால்தான் மதிப்பு...''

''மதர், அப்படின்னா என்னை ஏன் அந்த லேடியோட அனுப்பிச்சீங்க?''

''எல்லாத்துக்கும் ஒரு விதிவிலக்கு உண்டே... அவங்க வித்தியாசமானவங்களா இருப்பாங்களோன்னு நினைச்சேன்... அதான் உன்னை அனுப்பச் சம்மதிச்சேன் மேரி...''

''உங்களை விட்டுப் போக மனசு வந்ததே மதர். அதுக்கு எனக்குச் சரியான தண்டனை கிடைத்தது. எனக்கு வேணும்...''

''அப்படியெல்லாம் சொல்லாதே குழந்தாய். சமீப காலமாக உன் மனசு தாய் தந்தையின் அன்புக்காக ஏங்கறதை நான் கவனிச்சேன்...''

மேரி அழுவதை நிறுத்திவிட்டுத் திடுக்கிடலுடன் பார்த்தாள். மதர் எப்படிக் கண்டு பிடித்தார் என்று!

''உன்னுடைய வேதனைக்குத் தீர்வு, ஒன்று உனக்கு நீ ஆசைப்பட்டது போன்ற பந்தம் கிடைக்கணும். இல்லை, அது இனி மேல் கிட்டாது என்று புரிந்து, உன் மனசை அமைதிப்படுத்திக்கணும். உன்னுள் ஒரு தெளிவு ஏற்பட வேண்டும் என்பதால்தான் இந்த மாதிரி அனுப்பி வைத்தேன்... உன்னை அனுப்பிச்சுட்டு எவ்வளவு கஷ்டப்பட்டேன் தெரியுமா, மேரி?''

அந்தக் கனிந்த குரலும், அன்பு சொட்டும் பார்வையும் கண்டு மேரி சிலிர்த்துப் போனாள். அவளுக்கு உலகம்புரியத்தொடங்கியது. ''இது என் வீடு. இது என் அம்மா. இங்கே நான் சுதந்திரப் பறவை. என்னை யாரும் இங்கே காயப்படுத்த மாட்டார்கள்'' என்று. கண்ணீரைத் துடைத்தபடி மகிழ்ச்சியுடன் எழுந்தாள் மேரி.

''நீ மதிக்கப்படுகிற இடத்தில், உன் அன்பையும் திறமையையும் காட்டி உன்னை அர்த்தமுள்ள பிறவியாக ஆக்கிக் கொள் மேரி. கிடைக்காத... கிடைக்க முடியாத ஒன்றுக்காக ஒரு போதும் ஏங்காதே மேரி. இப்ப தெளிவாயிட்டியா?'' என்று கேட்டார் மதர்.

மேரி மதரை நன்றியுடன் பார்த்தாள். 'மறக்க வேண்டியதை மறந்து, நேசிக்க வேண்டியதை நேசித்து, மகிழ்ச்சியாக இருக்க வேண்டும்' என்று தெளிவு பெற்றாள்.

---

# இம்மாத இல்லத்தரசி போட்டி

**பொருள்: பூ** **கடைசித் தேதி: 15.5.90**

## சமையல் கூப்பன்

.................. என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

வீட்டில் குழந்தை பிறக்கப் போகிறது என்று டாக்டர் நிச்சயித்துக் கூறிய உடனேயே, வீட்டில் எல்லா விதத்திலும் தயார் நிலை ஏற்படுத்தப்படுகிறது. குழந்தைக்குப் படுக்கையில் போட நாப்கின்கள், பிப்புகள் (பால் குடிக்கும்போது மேலே பால் வழிந்து விடாமல் மார்பு மூடுமளவுக்குக் கட்டப் படும் ஒன்று), குழந்தை விளையாடப் பொம்மைகள், தள்ளு வண்டி, இத்யாதி, இத்யாதி என்று எல்லாச் சாமான்களும் தயார் செய்யப்பட்டு வைக்கப்படுகின்றன.

குழந்தை பிறக்கப் போவதற்கு முன்னாலேயே சாமான்கள் பற்றித் திட்டம் போட்டு சாமான்களை வாங்கியும் வைக்கும் நாம், குழந்தை வளரப் போகும் சூழல் (Environment) பாதுகாப்பாக இருக்கிறதா என்று, பார்க்கிறோமா? சூழல் பாதுகாப்பாக இருக்க வேண்டிய முயற்சிகளைச் செய்கிறோமா?

குழந்தை வளர்ந்து வீட்டுக்குள் ஓடியாடும் போது, வீட்டிலுள்ள சாமான்களை எல்லாம் கையாள முயற்சிக்கும் என்றோ, எவையெல்லாம் வாய்க்குள் போட்டுக் கொள்ள முடியுமோ, அவற்றை வாய்க்குள் அடைத்துக் கொள்ளும் என்றோ, ஷெல்ஃபின் மேல் தட்டுக்களில் வைத்துள்ள பீங்கான் சாமான்களை எடுக்க முயன்று, சாமான்களையும் அதோடு ஷெல்ஃபையும் இழுத்துக் கீழே சாய்த்து விடும் என்றோ, இவைகளைச் செய்யும் போது தன்னையும் காயப்படுத்திக் கொள்ளும் என்றோ, குழந்தை பிறப்பதற்கு முன்னரே முழுமையாகக் கற்பனை செய்ய முடியாதுதான். ஆனாலும், ஓரளவுக்குக் குழந்தை வளரும் போது, அது எதையெல்லாம் உருட்டி ஆபத்து விளைவித்துக் கொள்ளுமோ என்ற ஐயத்துடன் நாம் செயல்பட வேண்டியது மிக அவசியம்.

குழந்தைகளுக்கு ஏற்படும் விபத்துக்கள் பற்றியும் அதனால் ஏற்படும் சாவுகள் பற்றியும் அன்றாடம் தினசரிப் பத்திரிகைகளில் செய்திகள் வெளியாகின்றன. குழந்தைகளுக்கு ஏற்படும் விபத்துக்களினால் சில சமயம், குழந்தைகளை மருத்துவமனையில் சேர்க்க நேரிடுகிறது.

குழந்தைகள் விழுவது, தீயில் சுட்டுக் கொள்வது, தற்செயலாக விஷத்தன்மையுள்ள திரவங்களை வாயில் ஊற்றிக் கொண்டு விடுவது, மின்சாரத்தினால் ஏற்படும் ஆபத்து போன்றவைகள் நிகழாமல் தடுக்கப்படக் கூடியவையே.

குறிப்பாகச் சிறு குழந்தைகள் உணவு உட்கொள்ளும் போது தாய் அல்லது வேறு யாராவது பெரியவர்கள் அருகே இருக்க வேண்டும். சில சமயங்களில் குழந்தைகள் நிதானமாகச் சாப்பிடாமல், உணவை வாயில் அடைத்துக் கொண்டு, விழுங்கத் தெரியாமல், திக்கித் திணறலாம். கண்களில் நீர் நிறைந்து, வாயில் போட்ட உணவை விழுங்கவும் முடியாமல், வெளியே கொண்டு வரவும் முடியாமலும் குழந்தை திண்டாடிவிடும் சமயங்களும் உண்டு. இம்மாதிரியான ஆபத்து, தானே உணவைச் சாப்பிடும் குழந்தைகளுக்கு ஏற்படலாம்.

எத்தனையோ வீடுகளில் தாய்மார்கள், வேலைப் பளுவின் காரணமாகவும், நேரமின்மையாலும், தட்டில் உணவைப்போட்டுக் குழந்தையை உட்கார்த்திவிட்டுப் போய் வேறு வேலைகளைக் கவனிப்பதுண்டு. பல சமயங்களில் தாய் உணவைக் குழந்தைக்கு ஊட்டும் போதும் இப்படி நேரும். நேரமின்மையால், பெரிய பெரிய உருண்டைகளைக் குழந்தையின் வாயில் அடைப்பதுமுண்டு. சிறிய உருண்டையாக இருந்தாலும், முதலில் போடப்பட்ட உருண்டையைச் சரியாக விழுங்குவதற்கு முன்னர், இன்னோர் உருண்டையை வைத்து அடைத்தால் குழந்தை என்ன செய்யும்? நமக்குக் கால தாமதம் ஏற்படுவது பற்றிக் குழந்தைக்குப் புரியுமா?

சிறு குழந்தைக்குத் தாய் பாலூட்டியபின் (அது தாய்ப்பாலாகவும் இருக்கலாம், வேறு (புட்டிப்பால்) ஆகாரமாகவும் இருக்கலாம்.) குழந்தையை உடனே கீழே கிடத்திவிடக் கூடாது. பாலூட்டியபின் குழந்தையைத் தோளில் சாய்த்துக் கொண்டு, குழந்தையின் முதுகை மேலிருந்து கீழ், தடவிவிட வேண்டும். குழந்தை மெல்லிய ஏப்பம் விட்ட பிறகு கீழே படுக்கையில் கிடத்த வேண்டும். ஆகாரம் கொடுத்தவுடன் குழந்தையை மல்



# நம் வீடு எத்தனை





லாக்கக் கிடத்திவிட்டால், ஆகாரம, ஆகாரக் குழலுக்குள் செல்லாமல், மூச்சுக் குழலுக்குள் சென்றுவிடக் கூடிய அபாயம் இருக்கிறது.

குழந்தைக்கு ஆகாரம் கொடுத்து முடித்தவுடன் 'பிப்' எடுக்கப்பட்டு விடவேண்டும். பிளாஸ்டிக் பைகள் (சாமான்களைப் பேக் செய்து வருவது) வீடு முழுவதும் இறைந்து கிடப்பதால், அதனாலும் சில ஆபத்துக்கள் ஏற்படலாம். ஏனென்றால் இவைகளை எடுத்து ஒரு சமயம் முகத்தில் மூடிக் கொண்டு அதனால் மூச்சிறைப்பு அபாயம் உண்டாகும். எனவே இவைகளைக் குழந்தைகளின் கைக்கு எட்டாமல் வைக்க வேண்டும். குழந்தைகளைப் படுக்கையில் கிடத்தும் போதும், தள்ளு வண்டியில் கிடத்தும் போதும் வாட்டர் புரூஃப் ஆக உள்ள பிளாஸ்டிக் விரிப்புகளை உபயோகிப்பது ஆபத்து. குழந்தை இதை முகத்துக்கு மேல் இழுத்துக் கொண்டு முகம் விரிப்புக்குள் சிக்கிக் கொண்டு விட்டால் மூச்சுத் திணறல் ஏற்படும்.

குழந்தைகளுக்குச் செய்யப்படும் கட்டில்கள் கூடியவரை ஆபத்துக்கள் ஏற்படாத வண்ணம் தயாரிக்கப்பட்டாலும், சில சமயங்களில் குழந்தை தலைகுப்புற விழுந்து இறக்கும் நிலைகூட ஏற்படலாம். குழந்தையைக் கட்டிலில் கிடத்தும் போது கட்டில் பக்கங்கள் திறந்து கிடக்கும்படி விட்டுவிடக் கூடாது. கட்டிலின் பக்கங்கள் நன்றாகத் தடையாக இருக்கின்றனவா என்று நிச்சயம் செய்து கொண்ட பிறகே குழந்தையை விடவேண்டும். உயரமான நாற்காலியில் குழந்தையை உட்கார வைக்கும் போது, கீழே விழுந்து விடாமல் தகுந்த முன்னெச்சரிக்கை கைக்கொள்ள வேண்டும். நாற்காலி குப்புறக் கவிழ்ந்து விடாமல் இருக்குமா எனப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

குழந்தையைக் குளிப்பாட்டப் பயன்படுத்தப்படும் பிளாஸ்டிக் தொட்டிகள் வாயகன்றவையாக, ஆழமில்லாதவையாக இருக்க வேண்டும். ஒரு போதும், குழந்தையைத்

# பாதுகாப்பானது?

தனியாகப் பக்கத்தில் யாருமில்லாமல் பாத் டப்பில் உட்கார வைத்துவிட்டுச் செல்லக் கூடாது. குழந்தையைப் பக்கெட்டில் உட் கார வைத்துக் குளிப்பாட்டவே கூடாது.

மாடிப் படிகளால் குழந்தைக்கு ஆபத்து நேரிடலாம். மாடிக்குப் போகும் வழியில் நல்ல வெளிச்சம் இருக்க வேண்டும். படிகள் உடைந்திருந்தால் அதனால் குழந்தை தவறி விழ நேரிடும். மாடிப்படிகளின் ஆரம்பத் தில், கீழ்ப் பக்கத்திலும், மேல் பக்கத்திலும் கதவு பொருத்தப்பட வேண்டும். எக்கார ணத்தை முன்னிட்டும் மாடிப்படிகளில் எந்தச் சாமானும் வைக்கக் கூடாது. தரை அதிகமாகப் பாலீஷ் செய்யப்பட்டதாக இருந்தால், தரையில் விரிப்புக்கள் (அவை எத்தனை கவர்ச்சிகரமாக இருந்தாலும்) விரிக்கவே கூடாது. கூடியவரை சமைய லறைத் தரை மிக நைசாக இல்லாமல், இருக்க வேண்டும். எனவே சமையலறைத் தரையை அதிகம் பாலிஷ் செய்யாமல் ஓரளவு சொரசொரப்பாக (**Rough**) விட்டு விடுவது நல்லது.

ஜன்னல்களிலும், பால்கனிகளிலும் கிரில் கள் பொருத்தப்பட வேண்டும். குழந்தைக்கு எட்டும் உயரத்திலுள்ள சன்னல்களை, குறிப் பாகத் தெருப் பக்கமாகத் திறக்கக் கூடிய சன்னல்களை எப்போதும் நன்றாகக் கொக்கி போட்டு வைக்க வேண்டும்.

தீக்காயங்களும் நீராவியினால் ஏற்படும் காயங்களும் குழந்தைக்கு மிகச் சாதாரண மாக ஏற்படுவதே. சமைப்பதற்குப் பயன் படுத்தப்படும் பிரஷர் குக்கர்கள் போன்ற கைப்பிடி உள்ள சாமான்களை, கைப்பிடி கள் சமையல் மேடையின் வெளிப்புறம் நீட் டிக் கொண்டிருக்கிற மாதிரி வைக்காமல், மேடையின் உட்பக்கம் இருக்குமாறு வைக்க வேண்டும். ஏனென்றால் மேடைக்கருகே குழந்தைகள் ஓடும் போது பாத்திரங்களின் கைப்பிடியில் இடித்து அவை தலைகுப்புற விழுந்து குழந்தைக்கு அபாயம் ஏற்பட லாம்.

குளிர் அதிகமான ஊர்களில் (ஊட்டி, கொடைக்கானல்) தீ மூட்டுவதற்காகத் தனிப் பட்ட அமைப்பு இருக்கும். இதற்கு முன் பக்கத்தில் எப்போதும் தடையாக ஒரு ஸ்கிரீன் இருக்க வேண்டும். இது நல்ல முறையில் பொருத்தப்பட்டு நகர்த்த முடி யாமல் அமைக்கப்பட வேண்டும். சில வீடு களில் இந்த இடத்திற்கு மேலே அலங்கார மாக ஏதாவது முகம் பார்க்கும் கண்ணா டியோ, அல்லது கடிகாரமோ வைத்திருப் பார்கள். இவைகள் குழந்தைகளைக் கவரக் கூடியவைகளாதலால் குழந்தைகள் இவை களை எடுக்க முயற்சி செய்யும் போது, தீக்கு மிக அருகில் சென்றுவிடக் கூடிய அபாயம் நேரிடுவதுண்டு. அறையில் வெப் பத்தை உண்டாக்கும் ரூம் ஹீட்டர்ஸ் பயன் படுத்தப்படும் போதும் எச்சரிக்கை தேவை. பண்டிகை நாட்களில் குறிப்பாகத் தீபாவளிப் பண்டிகையில், எல்லா வீடுகளிலும் குழந் தைகள் பட்டாசு கொளுத்தி விளையாடு வார்கள். இம்மாதிரியான நாட்களில் குழந் தைகளுக்குப் பருத்தி ஆடையையே அணி விக்க வேண்டும்.

கிரோசின், தரை, பாத்திரம் போன் றவைகளைச் சுத்தம் செய்ய உபயோகிக்கப் படும் திரவங்கள், பினைல் போன்றவை களைக் குழந்தைகள் எடுக்காதவாறு அல மாரியில் பூட்டி வைக்க வேண்டும். சாப்பிடும் மருந்துகள், உபயோகிக்கும் சோப் புகள் முதலியவற்றையும் எட்டாத உயரத் தில் வைப்பது நல்லது. குளிப்பதற்காகச் சுடுநீர் எடுத்து வைக்கும் போது குழந்தை கள் தொடாதவாறு வைக்க வேண்டும்.

குழந்தைக்கு வீட்டில் ஏற்படும் எட்டு விதமான அபாயங்களில் ஒன்று கட்டாய மாக விஷத்தினால் ஏற்படுகிறது. தேவைக்கு மேலே மருந்தைக் குழந்தைக்குப் புகட்டுவது (**Overdose of Drugs**) தற்செயலாக விஷத்தன் மையுடைய செடிகொடிகள், கிருமிநாசினி கள், சமையல் எரிவாயு, போன்றவை ஆபத்தை விளைவிக்கின்றன. மருந்துகள், முதலுதவிப் பெட்டி போன்றவைகளைக் குழந்தைகள் கைக்கு எட்டாதவாறும், பூட்டப் பட்ட அலமாரியிலும் வைக்க வேண்டும். மருந்துகள் மீது கொட்டையான எழுத்துக் களில் லேபிள் ஒட்டப்பட வேண்டும். அதிக



## நகை சேமிப்புத் திட்டத்தில் சேருங்கள்

# தங்க நகைகளை பரிசாகப் பெறுங்கள்!





- 200 ரூபாய் கொடுத்து 5500 ரூபாய் மதிப்புள்ள உயர்ந்த ரக 'காட்மியம் ஸால்டர்டு' நகைகள் வாங்குவது எப்படி?
- மேலும் 5000 ரூபாய் மதிப்புள்ள நகைகள் பரிசாகப் பெறுவது எப்படி?
- சேருங்கள் நகை சேமிப்புத் திட்டத்தில் ஒவ்வொரு மாதமும் 200 ரூபாய் கட்டி 25 மாதங்களுக்குப்பிறகு 5500ரூபாய்க்கு நகைகள் பெறுவீர்.
- சேரும் போது 200 ரூபாய் மதிப்புள்ள பரிசு பெறுவீர்!

**போனஸ் நகை! 26-வது மாதம் 200 உறுப்பினர்களில்** 85 பாக்கியசாலிகள் 'லக்கி டிப்' முறையில் தேர்ந்தெடுக்கப்படுவீர்.

| | |
|---|---|
| முதல் ஐந்து நபர் | –Rs. 5000 மதிப்புள்ள நகைகள் பெறுவீர் |
| இரண்டாம் பத்து நபர் | –Rs. 2500 மதிப்புள்ள நகைகள் பெறுவீர் |
| மூன்றும் இருபது நபர் | –Rs1250 மதிப்புள்ள நகைகள் பெறுவீர் |
| நான்காம் ஐம்பது நபர் | –Rs. 500 மதிப்புள்ள நகைகள் பெறுவீர் |

Jewellers by Choice for Choicest Jewellery

MSC Estd. 1950

# M.Sreenivasulu Chetty

JEWELLERS & DIAMOND MERCHANTS

AC-1, SHOP NO. 1, SECOND AVENUE, ANNA NAGAR, MADRAS-600 040.
Tuesday Holiday (Near Sri Iyyappan Temple) ☎ 6211781

ADSERVE

மான மருந்துகள் காலம் கடந்துவிட்ட (**Expiry Date** முடிந்தவை) மருந்துகள் உடனே அகற்றப்பட வேண்டும். குறிப்பாக மாத்திரைகளை டிரஸ்ஸிங் டேபிள் மேலேயோ, சுலபமாகக் குழந்தைகளால் திறக்கக் கூடிய மேஜை டிராயர்களிலோ வைக்கவே கூடாது. மருந்து மாத்திரைகளைக் குழந்தைகள் — மிட்டாய் என்று நினைத்துத் தின்றுவிடக் கூடிய அபாயம் பற்றி நாம் மிக்க விழிப்புடன் இருக்க வேண்டும்.

செடிகளை அலங்காரமாகத் தொட்டிகளில் வைத்து வீட்டிற்கு வெளியிலும் உள்ளேயும் வைக்கும் பழக்கம் பரவலாக உள்ளது. குழந்தைகள் கண்ணில் கண்டதையெல்லாம் வாய்க்குள் போட்டு விழுங்கிவிடும் சுபாவம் உடையவை: எனவே, குழந்தைகளுக்குத் தாமாகவே புத்தி தெரிந்து தொட்டிகளில் வைக்கப்பட்டிருக்கும் சில செடிகள் அபாயகரமானவை என்று புரிந்து கொள்ளும் வயது வரும் வரைக்கும் முள் நிறைந்த கள்ளி, சப்பாத்தி போன்ற வகைகளை வீட்டில் வைக்கவே கூடாது.

கிருமிநாசினிகள், பர்னிச்சர் சுத்தம் செய்யும் திரவங்கள் பற்றி மிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இவைகளை நாம் சாதாரணமாக அன்றாடம் பயன்படுத்தும் ஜூஸ் பாட்டில்களில் அடைத்துக் கண்ணிற்குத் தெரியும்படி வைக்கவே கூடாது. கூடிய வரை, கிருமிநாசினிகள், பினைல், பாத்திரம் துலக்கும் திரவம் போன்றவற்றை அவைகளின் ஒரிஜினல் பாட்டில்களிலேயே வைத்து உபயோகிக்க வேண்டும்.

பிளக் பாயிண்டுகள் சில வீடுகளில் தரைக்கு மிக அருகில் அமைக்கப்படலாம். விவரம் புரியாத வயதில் குழந்தைகள் உலோகக் கம்பி போன்றவைகளைப் பிளக் செருகுவதற்காக இருக்கும் துவாரங்களில் நுழைத்து விட்டாலோ, விபரீதம் கேட்கவே வேண்டாம். இம்மாதிரி தாழ்வாகப் பொருத்தப்பட்டிருக்கும் பிளக் பாயிண்டுகள் மீது டேப் போட்டு மூடிவிட வேண்டும். பயன்படுத்துவதே இல்லையென்றால் மின்னிணைப்புத் துண்டிக்கப்பட்டுவிட வேண்டும். மின்சாதனங்களைப் பயன்படுத்திய பிறகு அலுத்துக் கொள்ளாமல் உடனேயே அகற்றி விடுவது நல்லது. குழந்தைகள் வளர்ந்து விஷயம் புரியும் வயது வரும்போது மின்சாதனங்களை ஈரக்கையால் தொடுவது அபாயம் என்று புரிந்து கொள்ளும் வகையில் கூற வேண்டும். மேலும் குழந்தைகளுக்குப் படுக்கையில் சிறுநீர் கழிக்கும் பழக்கம் இருந்து விட்டால் **Electric Blanket** பயன்படுத்தவே கூடாது. குளியலறையில் **Immerson Rod** பயன்படுத்தி நீர் சுட வைக்கும் போது குழந்தைகளைத் தனியே விடக் கூடாது.

வளர்ப்புப் பிராணிகளாலும் குழந்தைக்கு ஆபத்து ஏற்படுவதுண்டு. பொதுவாக நாய், பூனை போன்றவை சிறியதாக இருக்கும்



போதே வீட்டுக்குக் கொண்டுவரப்பட்டுக் குழந்தையைப் போலவே வளர்க்கப்பட்டு வருகின்றன. இம்மாதிரியான நிலையில் அவ்வீட்டில் ஒரு குழந்தை பிறந்து வளரும் போது அவ்வீட்டினர் தங்கள் கவனத்தையும், அன்பையும் குழந்தையின் மீது செலுத்தத் துவங்குவது இயற்கையே. இது அந்தப் பிராணியின் மனத்தில் பொறாமை உணர்ச்சியைத் தூண்டிவிடலாம். பொறாமையால் உந்தப்பட்டு, குழந்தையைக் கடிக்கலாம், நக்கத்தினால் பிறாண்டி விடுவதுமுண்டு. எனவே குழந்தையைத் தனியே விட்டு விட்டுப் போகக் கூடாது. காலப்போக்கில், அப்பிராணிக்கு குழந்தை வந்ததால் வீட்டார் தன்னை உதாசீனம் செய்யவில்லை என்று இயற்கையான உணர்ச்சி வரலாம். பிறகு குழந்தையுடன் சேர்ந்து அது விளையாட முயற்சிக்கும்.

எனவே குழந்தை வளர்ந்து அதற்கு தானாகவே, இதைத் தொடக் கூடாது ஆபத்து என்ற முறையில் அறிவு வளர்ச்சியடையும் வரை, இதுபோன்ற சிறிய சிறிய ஆபத்து விளைவிக்கக் கூடிய சாமான்களையெல்லாம் அப்புறப்படுத்தி குழந்தையின் கைக்கு எட்டாதவாறு செய்து விடுவது மிக நல்லது.

— ராஜி.

# இப்போது, விம்
# ஏறக்குறைய பாதிவிலையிலே...




## பேரச் சலுகை
## அளிக்கும் [கேரிபேக்] தூக்குப் பை.

இபபோது ஏறககுறைய பாதி விலையில கிடை ககிறது நீஙகள விருமபும விம பணமிசசம தரும (கேரி பேக) தூககுப பைகளிலே !

ஒபபிட்டுப பாருங்களேன

| பேக் | 100 கிராம் விலை |
|---|---|
| 500 கிராம கேனிஸ்டர | **145 பைசா** |
| 2.5 கிலோ கேரிபேக பை | **83 பைசா** |




உபயோகிபபிலேயோ மேலும சிககன லாபம கிடைககிறது இதில உஙகளுககு ஒரு துளியளவு விம உயாவளமோஙகும நுரை கொழிதது பிசககுகளை விசக் என வெளியேறறுகிறது கனககுககாக. அதிகப பாததிரஙகளைத துலககுகிறது ஒளிமினுகக

விரைந்தோடி இன்றே வாங்குவீர் புதிய விம கேரிபேக உங்கள தேவைககுகநத அளவிலே (தோநதெடுககக கிடைபபவை 500 கிராம 1 கிலோ. அலலது 2.5 கிலோ பேககுகள)

## ஒரு துளி விம் தரும் துலக்கம் அதிகப் பாத்திரங்கள் ஒளிமினுக்கும்

LINTAS-VG-482A/2519 TAM

இந்துஸ்தான லீவரின தரமான தயாரிப்பு.

இது பற்றி இனிமேல் பேசுவதே இல்லை என்று நாங்கள் தீர்மானித்து விட்டோம்.

'நாங்கள்' என்றால் — நான், என் தங்கை, என் அம்மா, மூன்று பேரும்தான்.

இருந்தாலும் தினமும் — காலையிலும், சாயந்திரமும் — இதனுடன் மல்லுக்கு நிற்க வேண்டியிருப்பதால் இந்த விஷயத்தை அத்தனைச் சுலபமாக ஒதுக்கவும் முடியவில்லை.

காலையில் என் தங்கை பத்மா கேட்டாள்.

''தெரு முனையில் புதுசா ஒரு டைலர் கடை வந்திருக்கு. இந்தத் தடவை வேணுமானா — அவன்கிட்டக் கொடுத்துப் பார்க்கலாமா?''

இதற்கு நான் பதில் சொல்வதற்குள் — பூஜையறையில் இருந்தபடி அம்மா, அவசரமாய் குரல் கொடுத்தாள்.

''எது... அந்த ஸ்டார் டைலரா? அவன் யார் தெரியுமா... பதினஞ்சு வருஷத்துக்கு முன்னாடி — ஒரு தீபாவளிக்காக நான் வாங்கின ரூபியா வாயில் ரவிக்கைத் துணிய நாசம் பண்ணினானே ஆறுமுகம்... அவனோட மூத்த பிள்ளைதான், இந்த ஸ்டார் முதலாளி...''

இந்தத் தையற்காரர் விஷயத்தில் — எங்களிருவரையும் விட, அம்மா தேர்ந்த அனுபவசாலி...

எங்கள் தெருவில் மட்டுமில்லாது, மைலாப்பூர், மாம்பலம் — இப்படி சகலமான இடங்களிலும் உள்ள தையற்கடைகளைப் பற்றியும், டைலர் பற்றியும் பெரிய குறிப்பே வைத்திருக்கிறாள். (இந்தக் குறிப்புகளை எல்லாம் புத்தக வடிவில் தொகுத்தால் — நம்மைப் போன்ற ரவிக்கை சரியான அளவில் இல்லாமல் சிரமப்படும் அபலைகளுக்கு மிகவும் ஒத்தாசையாக இருக்குமே என்று கூட நான் நினைத்தேன். ஆனால், அம்மா என் யோசனையை ஏற்கவில்லை. அம்மாவுக்கு மற்ற பெண்களிடம் — அதுவும் — உடம்போடு ஒட்டினாற் போன்று ரவிக்கை அணியும் பெண்களிடம் ரகசியமானக் கோபம் உண்டு.)

இன்னும் பார்க்கப் போனால் — தையற்காரரின் ஜாதகங்கள், அவர்களுக்கு எத்தனாம் வருஷம் கல்யாணமானது, எத்தனைக் குழந்தைகள் இப்படிப்பட்ட சகலமான விஷயங்களும் அம்மாவுக்கு அத்துபடி.

ஒவ்வொரு முறையும் — புதுசாய் ரவிக்கைகள் தைத்து வந்தவுடன் — நானும் என் தங்கையும் — தெரு முனையிலுள்ள பிள்ளையாருக்கு சதுர் தேங்காய் உடைத்து விட்டுத்தான் — ரவிக்கைகளைப் போட்டுப் பார்ப்போம்.

அதென்னவோ — ஒரு மீட்டர் துணி வாங்கிக் கொடுத்தாலும் — எனக்கு டைலர் தைக்கிற ரவிக்கை கர்ச்சீஃப் அளவில்தான் இருக்கும்...

ஒரு தடவை 'முதுகை இறக்கமா வைப்பா' என்று சொன்னதற்கு — முதுகே இல்லாமல் ரவிக்கை தைத்து விட்டார்.

என் தங்கை வெளியே கிளம்புகிற அவசரத்தில் — சேஃப்டி பின்னை வைத்துக் கொண்டு, ஒவ்வொரு தையலையும் அழுத கண்ணும், சிந்திய மூக்குமாய் பிரிப்பாள் பாருங்கள்.... கண்ராவி.

''பேசாம இந்த கஷ்டத்துக்கு ஒரு தையல்



# ரவிக்கை மகாத்மியம்

அனுராதா ரமணன்

மிஷினை வாங்கிப் போட்டுட்டா — நாமே தச்சுக்கலாம் பாருங்கோ... பத்தும், பதினஞ்சும் அபர தண்டமாக் கொடுத்து, கைதுடைக்கிற துணி மாதிரி அவன் ரவிக்கை தைக்கற லட்சணத்துக்கு....''

அம்மா, எதற்குமே அத்தனைச் சுலபத்தில் கரையாத அப்பாவை கரைத்து — கடைசியில் ஒரு தையல் மிஷின் வாங்கிப் போட்டாள்.

அம்மா அப்போது தையல் கலையில் பால பாடத்தில் இருந்தாள். பழைய வேஷ்டி எல்லாம் கைக்குட்டையாக உருமாறின.

ஆறு பீஸ் பாவாடை நான் தைக்கிறேன் பேர்விழி என்று அம்மாவும், அம்மாவின் சினேகிதிகளும் அடித்த கூத்து எனக்கு இன்னமும் பசுமையாய் நினைவில் இருக்கிறது.

இது மாதிரி ஒரு சித்திரை வெயில். அம்மா, தன் சினேகிதப் பட்டாளம் புடைசூழ — தையல் கிளாசுக்குப் போய்விட்டு, வெற்றி மதர்ப்போடு திரும்பி இருந்தாள்.

ஒரு சினேகிதி — நானும், என் தங்கையும் அதே ஹாலில் இருப்பதை கொஞ்சமும் பொருட்படுத்தாமல் நிமிஷமாய், புடைவையை அவிழ்த்து சுருட்டி எறிந்து விட்டு, புதுசாய் தைத்த உள்பாவாடையை எடுத்து மாட்டினாள்....

''ஐயோ — கன கச்சிதமா இருக்குடி.''

''இடுப்பு என்ன மா ர் மூடியிருக்கு பாருங்கோ.... கடையில வாங்கினா — ஒரு சாண் அகலத்துக்கு ஓபன் இருக்கும்....''

''என்னதான் சொல்லு... நாமே நம்ம துணிங்கள தச்சுக்கறதுல இருக்கற திருப்தி — வேற எதுலேயுமே வராது....''

உள்பாவாடை கட்டியசினேகிதிக்கு, புடைவையை எடுத்து சுற்றிக் கொள்ள மனசே வரவில்லை. காட்ரேஜ் பீரோ கண்ணாடி முன் நின்று — சுழன்று சுழன்று, மயங்கி, மயங்கி பார்த்துக் கொண்டிருந்தாள்.

நான் சும்மாயிருந்திருக்கலாம். பெட்டிகோட் சுந்தரியின் பெரிய சாக்லேட் டப்பாவை (இதில்தான் கத்திரி, இஞ்ச் டேப், நொட் புக் போன்ற சாமான்கள் இருக்கும்) எடுத்துத் திறந்து பார்த்தேன்.

நீளமாய் ஒரு வெள்ளைத் துணி... பாண்டேஜ் துணி மாதிரி... அதை எடுத்து உதறியதும், என் அம்மா தேள் கொட்டினாற் போல அலறினாள்...

''ஐயோடி... இந்தத் துணி ஏது... உன்கிட்டதான் — பெட்டி கோட் தச்சது போக வேற துணியே இல்லையேடி ராஜம்...''

ராஜம் 'திக்'கென விழித்தாள்.

''சித்த இருங்கோ... அனு இங்கே வா...''

நான் அருகில் போனேன்.

''இதப் பாரு... நான் அசையாம நிக்கறேன். என் பெட்டி கோட்லே ஆறு பீஸ் இருக்கான்னு பாரு....''

''ஒண்ணு... ரெண்டு... மூணு... நாலு...''

நான் எண்ணுவதற்குள் அம்மாவுக்கும்,



மற்ற சினேகிதிகளுக்கும் பொறுமை போய் விட்டது.

அவர்களும், ராஜத்தை நிற்க வைத்து, குத்து விளக்கைச் சுற்றி வந்து, கும்மியடிப்பது போல எண்ணினார்கள்.

ஒண்ணு... ரெண்டு... மூணு... நாலு.... அஞ்சு....

எத்தனை முறை பிரதட்சிணம் செய்து எண்ணினாலும் அஞ்சுக்கு மேல் ஆறாவது பீஸைக் காணவே காணோம்.

ஆக, பெட்டியில் இருந்த துண்டுத் துணி தான் ஆறாவது பீஸ்.

''அஞ்சு பீஸ்லேயே பாவாடை தைக்க முடியறப்ப அந்த டீச்சர் எதுக்கு ஆறு பீஸ் வெட்டச் சொன்னா?''

வீட்டில் அன்று படுக்கப் போகும் வரையில் — இதற்காக பட்டி மன்றமே நடந்தது.

பாவாடை விவகாரமே இப்படி காலை வாரி விட்டபின் நானும் என் தங்கையும் — அம்மா ரவிக்கை தைத்து எப்படி போட்டுக் கொண்டு வெளியே செல்வது என்று ரகசியமாய் பேசிப் பேசி நொந்து போனோம்.

இருந்தாலும் அம்மா, எங்களை அவ்வளவு சுலபத்தில் விடுவதாக இல்லை....

பரிசோதனைகளுக்குப் பயன்படும் வெள்ளை எலிகளை விடவும் மோசமானது எங்கள் நிலைமை.

என் தங்கை கொஞ்சம் ஒல்லியான சரீர வாகாக இருந்தபடியால், யூ நெக், ஸ்டார் நெக், ப நெக், ஜன்னல் நெக் — இப்படி வித விதமான நெக்குகளால் கழுத்து நெறிக்கப் பட்டாள் என்றால் —

என் அனுபவம் தனி.

''வளர்ற சரீரம்... எதுக்கும் சுத்தளவுல அரை இஞ்ச் கூட வச்சிடறேன்... இல்லையின்னா அடுத்தமாசமே இறுக்கி பிடிக்க ஆரம்பிச்சிடும்...''

''டைலர்தான் எத்தனை மீட்டர் துணியைக் கொடுத்தாலும், குரங்குக் குட்டிக்குச் சட்டை தைக்கிற மாதிரி தச்சிடறான் — நாமே



தைக்கறதுனால நம்ம இஷ்டப்படி தைக்கலாம்...''

''முந்தா நாள் கேஷியர் வீட்டு மாமி கூட சொன்னா... ரவிக்கையில எங்கே இழுத்துப் பிடிக்கறது; ஒழுங்காத்தானே இருக்குன்னு டைலர் கேட்டப்ப, நாக்கைப் பிடுங்கிட்டு சாகலாம் போல இருந்ததாம். முன் பக்கம் தையல் இழுத்துண்டு, மூச்சே விட முடியாம இருக்குங்கறதை எப்படி வெட்கத்தை விட்டுச் சொல்ல முடியும்... இதுக்குத்தான் நாமே தைக்கறதுங்கறது நல்லதுங்கறேன்.."

ஆக, நான் இருபத்தி நாலு மணி நேரமும் குடு குடுப்பைக்காரன் மாதிரி நின்றேன்.

'லொட லொட'வென இருக்கும் ரவிக்கையை வேலை மெனக்கெட்டு பிடித்து தைப்பதை விட — இன்னும் ஒரு பிடி சாதம் சாப்பிட்டு, ரவிக்கைக்கேற்ற அளவுக்கு உடம்பை பெருக்க வைப்பது எனக்கு சுலபமாகப் போயிற்று.

அம்மா தைப்பதை நாங்கள் அங்கீகரிக்கத் தொடங்கிய பின் — வீடு முழுக்க உடம்பு, கை, இடுப்புப் பட்டி என கலர் கலராய் துணிகள் இறைபட ஆரம்பித்தன.

அம்மா, டைலரைப் பார்த்து எதைக் கற்றுக் கொண்டாளோ இல்லையோ — பளிச் பளிச் செனத் துணிகளை வெட்டி — அப்படியே சுருட்டி ஒரு நாடாவினால் கட்டி — அலமாரியைப் பார்க்க வீசி எறியக் கற்றுக் கொண்டு விட்டாள்.

ஒரு முறை தீபாவளிக்கு ரவிக்கை தைத்து, சொன்ன தேதியில் கொடுக்க வில்லை என — டைலரை மாறு கால், மாறு கை வாங்குகிற அளவுக்குக் கொதித்துப் போன நாங்கள் —

போன தீபாவளிக்கு வாங்கிய ரவிக்கை துணியில் இந்த தீபாவளி வந்தும் தைக்கப் படாமலேயே வெட்டி சுருட்டிப் போடப் பட்டிருப்பதைக் கண்டும் பேசாமல் இருக்க கற்றுக் கொண்டோம்.

ஒரு முறை — என் இன்ஜினீயர் தம்பி, ஆபீசுக்குக் கிளம்புகிற அவசரத்தில் கைகுட்டை தேட, என் தங்கை கைக்கு கிடைத்த வெள்ளைத் துணியை மடித்துக் கொடுக்க—

மகா சாந்த சொரூபியான அவன் — சாயந்திரம் வீட்டுக்கு வந்ததும், வானத்துக்கும் பூமிக்குமாய் குதித்தான்.

''கர்ச்சீஃப் இல்லையின்னா — இல்லையின்னு சொல்ல வேண்டியதுதானே? அதை விட்டுட்டு இப்படி ஒண்ணைக் கொடுத்து, என்னை அவமானப் படுத்தணும்னு எத்தனை நாளாத் திட்டம் போட்டீங்க?''

அவன், எங்கள் முகத்துக்கு எதிரே — கையிலிருந்த வெள்ளைத் துணியை உதறிக் காட்டினான்.

அது —

என் தங்கைக்காக அம்மா வெட்டிய ரவிக்கையின் உடல் பகுதி...

ஆபீசில் நாலு பேரெதிரில் உதறிய போது, எப்படி இருந்திருக்கும் அவனுக்கு?

அன்றிலிருந்து அவன், கைக்குட்டை எடுத்துப் போகும் பழக்கத்தையே விட்டு விட்டான்....

அம்மாவின் கையைப் பிடித்து, காலைப் பிடித்து சுய தையலை நிறுத்துவதற்குள் நாங்கள் பட்ட பாடு — எங்களுக்குத்தான் தெரியும்.

இப்போது மறுபடியும் டைலர் கடை....

புடைவைக்கு மேட்சிங் பிளவுஸ் வாங்கியும் சமயத்தில் போட்டுக் கொள்ள முடியாமல் போய்விடும்.

ஒன்று — அளவு சரியாக இருக்காது.

இரண்டு — அளவு சரியாக இருந்து விட்டால் — அதையே போட்டு போட்டு — ஒரு வழியாய் சாயம் போய் கிழியும் வரையில் உபயோகித்து நார் நாராக்கி விட்டுத்தான் மறு வேலை பார்ப்போம்.!

ஒவ்வொரு புடைவைக்கும் தகுந்த மாதிரி ஒரு ரவிக்கைத் துணி வாங்கினாலும் கடைசியில் ஒரு அவசரத்துக்குக் கைகொடுப்பது கறுப்பு ரவிக்கையோ — இல்லை வெள்ளையோதான்.

அதுவும் என் தங்கையிடம் கி. பி. கி. மு என்பது போல பெ. மு. பெ. பி. ரவிக்கைகள் கூடை கூடையாக இருக்கிறது.

பெ. மு — பெருப்பதற்கு முன்.

பெ. பி. — பெருத்த பின்.

இப்பொழுது என் தங்கைப் பெண் — ஜூனியர் குடு குடுப்பைக்காரன் மாதிரி நிற்கிறாள்...

அவள் அம்மா, 'தாராளமாய் இருக்கட்டும்... வளருகிற சரீரம்தானே' என்று மானாவாரியாய் லூஸாய் தைத்து விடுகிறாளாம்...

பதியப் பதிய உடம்போடு வைத்து தைத்தாற் போல ரவிக்கை போடுபவர்களைக் கண்டால் — அம்மாவைப் போல எனக்கும் பொறாமையாக இருக்கிறது —

நல்ல டைலராக இருந்தால் சொல்லுங்களேன்.

என்னிடம் வரும் அநேக பெண்களின் குறைகளில் "எனக்குத் தலைமுடி அதிகம் கொட்டி, நரைத்து விட்டது."

"கண்ணைச் சுற்றிக் கருவளையம்."

"முகத்தில் அதிகச் சுருக்கங்கள் தோன்றி விடுகின்றன" என்பதுதான் அதிகம்.

இவர்கள் அதிகம் கவலைப்படுவது உடல் ஆரோக்கியத்தைக் காட்டிலும் வெளிப்புற தோற்றத்தைப் பற்றித்தான்.

ஆரோக்கியமான அழகு குறைவதற்குக் காரணம் சரியான விகிதாச்சார முறையில் முறையாக உணவு சாப்பிடாததுதான். நம் வீட்டில் உள்ள பெரியவர்களைப் பாருங்கள். நம்மை விட நல்ல அடர்த்தி முடியுடன், நரை கம்மியாக, சதா 'அங்கு வலி, இங்கு வலி' என்று குறை கூறாதவர்களாக, சுறுசுறுப்புடன் திடமாக வேலை செய்யக் கூடியவர்களாக இருப்பார்கள். ஏன்? இவர்கள் நன்கு உண்டார்கள், உழைத்தார்கள். எல்லாம் ஒரு கட்டுப்பாட்டில் இருந்தது. செலவும் அதிகம் செய்ய மாட்டார்கள்.

இப்பொழுதெல்லாம் எதற்கெடுத்தாலும் செலவுதான். மருத்துவச் செலவு தாக்குப் பிடிக்க முடிவதில்லை. ஒருவேளை வெளியில் உணவருந்தினால் செலவும் கூடி, சுகாதாரக் குறைவைப் பற்றியும் ஐயப்பட வேண்டியுள்ளது. நாகரிக உலகில் பல முன்னேற்றங்களுக்கிடையில் சில குறைபாடுகளும் உள்ளன. இவற்றை ஆராய்ந்து நாம் நல்லவற்றையெல்லாம் ஒருசேர எடுத்துக் கொள்ள வேண்டும்.

நான் ஏதோ புதிதாக ஒன்றையும் சொல்லி விடப் போவதில்லை. நம் பெரியோர்கள் எது நமக்கு நன்மை பயக்கும் என்பதை ஆராய்ந்து நாம் அறியாமலேயே அவற்றை நம் அன்றாட வாழ்க்கையில் புகுத்தி விட்டனர். அவற்றைதான் நான் உங்களுக்குச் சற்று ஞாபகப்படுத்துகிறேன்.

நமக்குதான் எத்தனை பதவிகள். நாம் தானே வீட்டின் ஹோம் மினிஸ்டர், டயட்டீஷியன், டீச்சர் எல்லாம். அதனால்தானே ஒரு பெண் படித்தால் ஒரு குடும்பமே படித்ததற்குச் சமம் என்றார்கள்.

கோவில் 'நமக்கு எத்தனை ஆரோக்கியமான விஷயங்களைச் சொல்கிறது தெரியுமா? அது சொல்லும் இரகசியங்களைத் தெரிந்து கொண்டால் நாம் பேரழகியாகவே மாறி விடலாம்.

இந்து கோவில்களில் நுழைந்ததும் நாம் காணும் கடவுள் பிள்ளையார், இந்தப் பிள்ளையாருக்கு 'அருகம் புல்' மாலை மிகவும் விசேஷம். இந்த அருகம் புல்லின் இரகசியம் உங்களுக்குத் தெரியுமா?

'ஆகாததெல்லாம் அருகம் புல்லில் ஆகும்' என்பார்கள். தீராத உடல் நோய்கள் கூட அருகம்புல்லின் சாற்றினைத் தொடர்ந்து அருந்தி வர தீர்ந்து விடும். இதனைச் சுட்டிக் காட்டத்தான் முதலில் வணங்கப்படும் பிள்ளையாருக்கு இதனைச் சூட்டி அதன் முக்கியத்துவத்தை உணர்த்தியுள்ளார்கள். காலையில் இச் சாற்றினை சுத்தமான நீருடன் கலந்து அருந்த இரத்த அழுத்தம்,



# கோவில்கள் மூலமாக — அழகு, அழகு, அழகு!

நரம்புத் தளர்ச்சி, உடல் எடை இவை ஓடி ஒளிந்து விடும்.

வேப்ப மரத்தினை 'சக்தியின்' ரூபமாக வழிபடுகிறோம். கிராமங்களில் குழந்தைகளின் உடல்நலக் குறைவு, மனநோய் இவற்றிற்கு வேப்பிலை அடித்து குணப்படுத்தப்படுவது வழக்கில் இருக்கின்றது. உடல் நலனைப் பேணிக் காக்க மிகவும் உதவும் வேப்பிலை.

விரல் சூப்பும் குழந்தைகளின் விரலில் சிறிது வேப்ப எண்ணையைத் தடவும்போது விரல் சப்பும் பழக்கமும் விட்டு, சிறிது உள்ளே செல்லும் வேப்பிலை வயிற்றில் உள்ள பூச்சிகளை அறவே நீக்குகிறது. விரல் சப்பும் பழக்கம் விடும் போது பல் முன் நீண்டு வருவது தடுக்கப்படுகிறது.

சிறு துண்டு வேப்பிலை உள்ளே சென்றாலும் பூச்சிகள், கிருமிகள் அழிகின்றன.

அம்மை நோய் போன்ற வைரஸ் நோய்களுக்குக் கூட வேப்பிலை ஒரு தடுப்பு நிவாரணியாக இருக்கிறது.

பெண் குழந்தைகளுக்கு அடிக்கடி வேப்பிலை, மஞ்சள் அரைத்து உடலில் பூசி குளிக்க வைத்தால் 'வாக்ஸிங்' என்ற முறையில் கை, கால்களில் முடி நீக்கும் வேலையே இருக்காது.

கோடை காலமாகிய இப்போது முதல் நாளே சிறிது வேப்பிலைகளைப் பறித்து ஒரு பக்கெட் நீரில் போட்டு வையுங்கள். மறுநாள் குளிக்கும் பொழுது இதைக் கலந்து குளித்தால் வெயில் காலத்தில் ஏற்படும் சரும நோய்களிலிருந்து தப்பலாம். ஆறாத புண்களுக்குக் கூட வேப்ப எண்ணையைத் தடவி வர குணமாகும்.

தலையில் பொடுகு, பேன் தொல்லை உள்ளவர்கள் தலைகாணியின் மேல் வேப்பிலையைப் பரத்தி ஒரு துண்டால் மூடி தலை வைத்து படுத்துத் தூங்குங்கள். தொல்லை நீங்கி விடும்.

அடிக்கடி தலைவலி, சைனஸ் தொந்தரவு உள்ளவர்கள் மிகச் சிறிதளவு சூடு செய்த வேப்பெண்ணையைத் தலைக்குத் தடவி குளித்து வரலாம்.

சிறு சிறு விஷயங்களுக்கெல்லாம் டாக்டருக்குச் செல்லாமல் தவிர்த்து விடலாமே.

வில்வம் சிவனுக்கு உகந்தது. சிவன் கோவில் பிரசாதத்துடன் ஓரிரண்டு வில்வ இலைகளையாவது காணலாம். இது இரத்த சோகை, மஞ்சள் காமாலை, மற்றும் தொற்று நோய் இவைகளின் தடுப்பு மருந்தாகும். வில்வ இலைச்சாறு மிகவும் சுவையுடையது. வில்வ இலையைச் சாறாக்கித் தினந்தோறும் சிறிது குடித்து வாருங்கள். மனமும், உடலும் ஆரோக்கியமாகும்.

பெருமாள் கோவிலில் துளசிநீர் முக்கியப் பிரசாதம். இதன் மருத்துவ குணத்தைப் பற்றி ஒரு சிறு புத்தகமே எழுதலாம். இதன் முக்கிய குணம் இருமல், சளி, கபம்



**முளைக்கீரை, அரைக்கீரை, பசலைக் கீரை, பாலக்கீரை இவைகள் மட்டும் சமைப்பதற்காக அரியும் முன் பத்து நிமிடம் சக்கரைத் தண்ணீரில் முக்கி வைத்திருந்தால் அதன் ருசி அதிகரிக்கும். சமைத்த பிறகு தித்திப்பும் தெரியாது.**

**— கீதா.**

இவற்றை அடியோடு தீர்த்து விடும். ஆஸ்துமா நோயாளிகள் கூட காலை பத்து துளசி இலைகளை மென்று தின்பது நல்லது என்று இயற்கை வைத்தியத்தில் கூறப்படுகிறது. வீட்டில் டீ தயாரிக்கும் பொழுது சிறிது துளசி இலைகளைச் சேர்த்து வாருங்கள். நல்ல மணத்துடனும் இருக்கும்.

கோயிலில் முக்கியமான பழம் எலுமிச்சம் பழம். இது 'ராஜகனி' என்றல்லவா அழைக்கப்படுகிறது? தீயவற்றை அகற்றி விடும் துர்க்கையைப் போல நம் உடலில் உள்ள தீயவைகளை எலுமிச்சை அகற்றி விடும்! பெரிய மனிதர்களைக் காணச் செல்லும் போது கூட எலுமிச்சை கொண்டு செல்லுவதை அறிந்திருப்பீர்கள்.

தினமும் ஏதாவது ஒரு வகையில் எலுமிச்சம் பழத்தை உணவில் சேர்த்துக் கொள்ளுங்கள். பழச்சாறாகவோ சாலெட்டின் மீது பிழிந்தோ, மோரில் கலந்தோ, அல்லது ரசத்திலோ எப்படி சாதம், சன்னா, டால் போன்ற சப்ஜிகளில் கலந்தோ உபயோகிக்கலாமே. ஓரிரு பழங்களுக்கு அதிக செலவும் இருக்காது.

இப் பழம் எப்படி உதவுகிறது என்று நீங்கள் உணர வேண்டும். உடல் சோர்வு நீங்க, நரம்புத்தளர்ச்சி நீங்க, உடல் அழகு பெற வைட்டமின் 'சி' சத்து அதிகம் பெற, நோய் தடுப்புச் சக்தி அதிகரிக்க, பித்தம் நீங்க, புண்கள் ஆற, ஈறுகள் பலப்பட என்று விவரித்துக் கொண்டே போகலாம்.

காலையில் ½ டம்ளர் வெந்நீருடன், பாதி எலுமிச்சம் பழச்சாறு, ஒரு டீஸ்பூன் தேன் கலந்து அருந்தி வர உடல் இளைத்து வனப்பு பெறும்.

பெண்கள் தேங்காய் எண்ணை, எலுமிச்சம் பழச்சாறு கலந்து, தலை, முடி இவற்றில் தடவி குளித்துப் பாருங்கள்.

தெரியாமலா சொன்னார்கள் இதை ராஜ கனி என்று?

அம்மனுக்கு மஞ்சள் காப்பு சாத்துவதும், மஞ்சள் கலந்த அரிசியினால் ஆசி வழங்குதல், மஞ்சளை நனைத்த ஆடைகளை மணமக்கள் அணிவது. மஞ்சள் பூசி குளிப்பது

இவற்றிற்கு நீங்கள் என்ன காரணம் கூறு வீர்கள். மஞ்சள் மங்களச் சின்னம் என்று. உண்மைதான. ஆனால் அதன் மருத்துவ உண்மை, மஞ்சள் சிறந்த ஆன்டி செப்டிக். கிருமி நாசினி என்பதுதான்.

கூட்டம் நிறைந்த இடத்தில் இந்த மஞ்சள் நனைத்த ஆடை நோய்க் கிருமிகளில் இருந்து ஒரு கவசமாக மணமக்களைக் காக்கிறது. உடலுக்குத் தேய்த்துக் குளிப்பதும், சமையலில் சேர்ப்பதும் இக் காரணத்தினாலேதான். ஆரோக்கியமானதே அழகு. அதே போல பலரும் ஆசிர்வாதம் செய்யும் உள்ளங்கைகளே ஆரோக்கியத்தையும், வியாதியையும் பரப்பும் இடம். யாருக்கு என்ன உடம்பு என்று கூட்டத்தில் கணிக்க முடியும்? எனவே மஞ்சளுடன் சேர்த்து உள்ளங் கையிலிருந்து அரிசி விழும் போது, மணமக்கள் மற்றவர்களின் நோய்களில் இருந்து காக்கப்படுகிறார்கள்.

தேங்காய் ஒரு சத்துள்ள உணவுதான். அக் காலங்களில் மக்கள் கோவில் செல்வது என்பது ஒரு யாத்திரையை போல் நெடுந்தூரம் நடந்து செல்ல வேண்டும். அப்படி நடந்து களைப்புறும் போது பிரசாதமாக பெறப்படும் இந்தத் தேங்காயை அவர்கள் உடைத்து உண்டு சற்று இளைப்பாறுவார்கள். இது உடலுக்கு அதிகச் சக்தி கொடுக்க வல்லது.

கட்டு சாதத்திலும், மற்ற வகை உணவுகளிலும் தேங்காய் சேரும் போது வழிப்பயணத்தில் தெம்பு வருகிறது அக் காலத்தில் உண்பதற்கேற்ப உழைப்பு இருந்தது. அதனால் உணவு நமக்கு செரித்தது. இக் காலத்தில் இயந்திரங்களின் உதவியுடன் நாம் வாழ்க்கை நடத்தும் பொழுது 'தேங்காய்' கொலஸ்டிராலை அதிகப்படுத்தும் என்று உணவில் சற்று விலக்கியுள்ளோம்.

சந்தனத்தை உடலில் பூசிக் கொள்வதும் உடலை குளிர்ச்சிப்படுத்துவதற்குத்தான்.

அன்றைய மலை மீது இருந்த கோவில்களும், பிரகாரங்களும் பொது மக்களின் உடற்பயிற்சிக்குப் பெரிதும் உதவின. மலை மீது ஏறுவதும், மிகப் பெரிய கோயில் பிரகாரங்களைச் சுற்றி வருவதும் அருமையான உடற்பயிற்சி. ஆரோக்கியத்திற்கு மிக மிகத் தேவையானது, தினமும் ஒரு மைல் ஆவது நடப்பதுதான். உலகம் முழுக்க டாக்டர்கள் ஒருமித்து கூறும் விஷயம் இது.

இவற்றையெல்லாம் நான் உங்களுக்கு எடுத்துச் சொல்லும் காரணம் நம் முன்னோர்கள் எதைச் செய்தாலும் அதை ஒரு காரணத்தோடே செய்து வந்தார்கள் என்று வலியுறுத்தத்தான். யாத்திரை, விரதம், பிரசாதம் போன்றவைகள் நம் உடல் ஆரோக்கியத்தை மனத்தில் கொண்டே செய்யப்பட்டுள்ளன.

— டாக்டர் கமலி.

---

மகளிர் மன்றம் என்றாலே வெறும் பொழுது போக்குமிடம் என்ற பலரது எண்ணங்களை மாற்றும் வகையில் மாதா மாதம் மகளிருக்கும் குழந்தைகளுக்கும் ஏதாவது உபயோகப்படும்படி செய்ய வேண்டும். என்பது மகளிர் மன்றத்தின் முக்கியமான கொள்கையாக்கப்பட்டது.

மாதா மாதம் நாங்கள் நடத்தும் பலவித உபயோகமான நிகழ்ச்சிகள் தவிர இலவசமாக கைத்தொழில், தையல், அழகுக் குறிப்பு வகுப்புகள், எம்பிராய்டரி ஆகிய வகுப்புக்களும் நடக்கின்றன. மன்றத்தின் புதிய தலைவராக கீதா விஸ்வநாதன் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

பொதுமக்களின் வேண்டுகோளுக்கிணங்க, எங்களது முதல் ஆண்டு விழாவை ஒரு நகைச் சுவை நாடகத்தை அரங்கேற்றி, அத்துடன் ஆண்டு மலரையும் வெளியிட்டு கொண்டாட நினைத்தோம். அதன்படி, மிகச் சிறப்பான முறையில் நிகழ்ச்சிகள் நடந்தேறின. எங்களது பணி தொடர இறைவனின் ஆசியையும் மக்களது ஒத்துழைப்பையும் வேண்டி நிற்கிறோம்.

அகிலா சுப்ரமண்யம்,
செயலாளர்.






பொழுது விடியும் போதே சமாசாரம் வந்து விட்டது! பால்காரன்தான் கூறினான். ''என்னடா சொல்றே? பெரியம்மாதானே?'' என்று அவசரமாகக் கேட்டேன்!

''அப்படி இருந்தரத்தான் தேவலீங்களே! ஐயாவோட சம்சாரமுங்க!'' என்று கூறி விட்டுப் போய்விட்டான். அரைத் தூக்கத்தோடு பில்டரை லொட்டு லொட்டு என்று தட்டிக் கொண்டிருந்த என் மனைவி செல்லத்திடம் மெதுவாக விஷயத்தைக் கூறினேன். அவளும் அதிர்ந்து போய் விட்டாள். நம்பாமல் என்னைச் சந்தேகமாகப் பார்த்தாள்.

''என்ன உளர்றீங்க? போனதை வெள்ளிக்கிழமை கோவிலிலே பார்த்தேன்! மகாலட்சுமி மாதிரி நின்று பேசிட்டுப் போனா! இந்தப் பால்கார அவசரக்குடுக்கை ஏதாவது பேத்தறதோ என்னவோ! இல்லே! நீங்கதான் சரியா காதுலே வாங்கிக்கலியா?..''

''போடி! வேலைமெனக்கெட்டு உங்கிட்ட விடியக்காத்தாலே வந்து இப்படி ஒரு சமாசாரத்தை சொல்லப் போறேனா? பால்காரன் தீர்மானமா சொன்னான்னு சொல்லிண்டேயிருக்கேன்...'' நான் எரிந்து விழுந்தேன்!

செல்லம் மாய்ந்து போனாள்! ''என்னங்க இது! அநியாயம்! மாமிக்கென்ன அப்படி செத்துப் போற வயசா? மாமாவே இப்போத்தானே ரிடையர் ஆனார்? மூத்த பொண்ணு பிரவிச்சு இப்போத்தான் ரெண்டு மாசமாறது! கல்யாணத்துக்கு வேற ஒரு பொண்ணு இருக்கு! அத்தனை பொறுப்பையும் மாமா தலையிலே கட்டிட்டு இவ பாட்டுக்கு போய்ச் சேர்ந்துட்டாளே! யமனுக்குக் கண்ணே இல்லியோ!''

ஆமாம்! சில நேரங்களில் உலக நடப்பு விவகாரங்களைப் பார்க்கும் போது, யமனுக்குக் கூட கண்ணில் காடராக்ட் வந்திருக்குமோ என்றுதான் தோன்றுகிறது! சபேச சர்மாவிற்கு எண்பது வயதிலே தாயார் இருக்கிறாள்! கழி, கொம்பு எதுவும் வைத்துக் கொள்ளாமல் கண்காது எதுவும் பழுது இல்லாமல், நன்றாக நடமாடிக் கொண்டிருக்கிறாள். யார் போய் அவளுக்கு நமஸ்காரம் செய்தாலும் சரி, நிறைஞ்ச ஆசீர்வர்தத்தையும் பண்ணிவிட்டு ''பாட்டி கை கால் திடமா இருக்கறப்பவே செத்துப்போயிடணும்னு வேண்டிக்கோ கொழந்தே'' என்று கூறுவாள்.

சர்மாகூட சில சமயம் தாயாரைக் கோபித்துக் கொள்வார். ''பிராணன் போறதுக்கும் வேளை வரணும்மா! நீ ஏன் அதையே ஜபிச்சிண்டிருக்கே!'' என்பார். திடீரென்று ஒரே ராத்திரியில் எதிர்பாராமல் தன் மருமகள் போய் விட்டதில் அந்தப் பாட்டி எத்தனை அதிர்ச்சியடைந்திருப்பாள்!

செல்லம் பரபரப்பாகக் காரியத்தில் இறங்கினாள். காப்பியைக் கொண்டு வைத்தாள். ''இதைக் குடிச்சிட்டு, நீங்க போய் ஒரு நடை எட்டிப்பார்த்துட்டு வந்துடுங்க! என்னதான் பால்காரன் சொன்னாக்கூட எனக்கு நம்பிக்கையா இல்லே! நீங்க வந்தப்புறம் நான் போறேன்! அதுக்குள்ளே, நான் குக்கரை வச்சுட்டு ரெடியா இருக்கேன்!'' செல்லம் மளமளவென்று உத்தரவுகளைப் பிறப்பித்தாள்.

நான் கிளம்பினேன்! எனக்கும் கொஞ்சம் உதறலாகத்தான் இருந்தது. சமாசாரம் நிஜம்தானா என்று உள்ளூற உதைப்புதான். ஆனால் நான் வாசலை விட்டு இறங்கி தெருவிலே இரண்டடி வைப்பதற்குள்ளாகவே எதிர் வீட்டு கோபாலனும் வந்து சேர்ந்து கொண்டார்! பால்காரன் அன்று, பாலோடு இந்த விஷயத்தையும் சேர்த்து எல்லோருக்கும் சப்ளை செய்திருக்கிறான்!

கடைசி வீடு சபேச சர்மாவுடையது! வீட்டைப் பார்த்தவுடனேயே விஷயம் நிஜமென நிதர்சனமாகத் தெரிந்துவிட்டது. செத்துப் போனவர்களுக்குத்தான் முகத்திலே பிரேதக் களை வந்து விடுகிறது. வீட்டிற்கே அப்படி ஒரு செத்த களை வந்து விட்டிருந்தது!

தயங்கியவாறு உள்ளே போனோம்! நட்ட நடு கூடத்திலேயே கிடத்தியிருந்தார்கள். சர்மா பரிதாபமாக ஒரு பக்கமாக

# கோபத்திலும் ஒரு நியாயம்

— சுந்தரி ஜெயராமன்

உட்கார்ந்திருந்தார். இரவு பன்னிரண்டு மணிக்கு மார்வலி என்றாளாம்! சாதாரண மாக எப்போதும் கொடுப்பது போல் மாத்திரை கொடுத்திருக்கிறார்கள். வலி ரொம்பவும் அதிகமாகி, மூச்சுவிடச் சிரமப் படவே, டாக்டரை அழைத்திருக்கிறார்கள். ஆனால் டாக்டர் வருவதற்குள்ளாகவே எல்லாம் முடிந்து விட்டது.

பாட்டி சுருண்டு துணியாய் ஒரு மூலை யில் கிடந்தாள். பெண்கள் இருவரும் அழுது கொண்டு அம்மாவின் அருகில் இருந் தார்கள். பையன்தான் கேட்பவர்களுக் கெல்லாம், சலிக்காமல் விபரத்தைக் கூறிக் கொண்டிருந்தான்.



நான் திரும்பினேன். செல்லம் வாசற் படியிலேயே காத்துக் கொண்டிருந்தாள். நான் ஸ்னானம் செய்து விட்டு வந்த பிறகு அவள் கிளம்பினாள். அவள் முகம் பார்க்க சகிக்கவில்லை. ஏற்கெனவே மகா கோழை! இரண்டு நாட்கள் முன்பு கோவிலில் பார்த்த சிநேகிதி, பேசாமல் படுத்து விட் டாள் என்றால்....! அவள் ஜீரணித்துக் கொள்ள முடியாமல், மெதுவாக நடந்து போனாள்.



# கண்ணாடி பார்க்கும் நேரம்

ஒரு சமயம் என் பாட்டியைக் கண் டாக்டரிடம் அழைத்துப் போய்க் கண்ணாடி போட்டு கூட்டி வந்தேன். பாட்டி மிகவும் திருப்தியாகக் காணப்பட்டார். மருந்து சாப்பிடுவதோ, அல்லது டாக்டரின் ஆலோசனைகளைப் பின்பற்றி வருவதிலோ மிகவும் கவனமாக இருப்பார் பாட்டி. அப்படியிருப்பவர், பல தடவை கண்ணாடியைக் கழட்டி வைத்து விடுவார். அடிக்கடி குறிப்பிட்ட சில மணிகளில் கழட்டுவதையும், போடுவதையும் பார்த்த நான், பாட்டியிடம் என்ன காரணம் என்று கேட்டேன். "அதுதான் டாக்டரே அட்டையில் எழுதிக் கொடுத்திருக்கிறாரே எப்பொழுது கண்ணாடியைப் போட்டுப் பார்க்கலாம் என்று" பாட்டியின் பதில். நானும் சரியாகக் க வ னி க் க வில்லையோ என்று டாக்டரின் பிரிஸ்கிரிப்ஷனை எடுத்துப் பார்த்தேன். உடனே பாட்டி அத்துடன் இருந்த டாக்டரின் தமிழ் விசிட்டிங் கார்டை என்னிடம் காட்டினார். அதில் டாக்டர் பெயருக்குக் கீழே— "பார்க்கும் நேரம்: காலை 9 மணிமுதல் 1 மணிவரை மாலை 5 மணிமுதல் 7 மணிவரை ஞாயிறு விடுமுறை"
என்று அச்சிடப்பட்டிருந்தது. பாட்டி இதைப் பார்த்து விட்டுத்தான் கச்சிதமாகக் கழட்டுவதும் போடுவதுமாக இருந்திருக்கிறார். எங்களுக்கோ சிரிப்பை அடக்க முடியவில்லை. பாட்டிக்கோ இவ்வளவு புத்திசாலியாக இருந்தும் இவர்கள் நம்மைப் பார்த்து எதற்குச் சிரிக்கிறார்கள் என்று புரியவில்லை.

— சர்மதா.

பத்து நிமிடங்கள் கழித்து பிரஷர் குக்கரை அணைத்து விட வேண்டும் என்று செல்லம் சொன்னதை மீண்டும் ஞாபகப் படுத்திக் கொண்டு, பேப்பரோடு வாசலில் வந்து உட்கார்ந்தேன். மனசே சரியில்லை! என்ன அநித்தியமானதொரு வாழ்க்கை! இப்படி ஒரு மார்வலி வந்தால், குக்கரை அணைப்பதற்கு நான் இருப்பேனோ என்னவோ. என்னை நம்பிப் போயிருக்கிறாளே இந்த செல்லம்? எனக்குச் சிரிப்பு வந்தது!

அட! செல்லம் வந்து விட்டாளே! அதற்குள்ளாகவா? நான் மனத்தில் நினைத்தது அவளுக்கும் தோன்றிவிட்டதா? எப்படி இத்தனை சீக்கிரம் வந்து விட்டாள்? முகத்திலே அசாத்திய கோபம்?

"என்னடீது! போன வேகத்திலே திரும்பி வந்திருக்கே?" நான் கேட்குமுன்பே படபடவென்று பொரிந்து கொட்டினாள்!

"ஆமாம்! அந்த வீட்டுக்குள்ளே நுழைஞ்சாத்தானே! ஆனாலும் உங்க சிநேகிதருக்கு இத்தனை வக்ரபுத்தி வேண்டாம்! வீட்டிலே ஒரு துக்கம் நடந்தா, நாலுபேர் வரத்தான் செய்வா! இது கூடவா அந்த மனுஷருக்குத் தெரியாது! என்ன சத்தம்! என்ன கூச்சல்! அதுதான் அந்த மாமி, சுமங்கலியா சுருக்க போய்ச் சேர்ந்துட்டா! இந்த புத்தி கெட்ட மனுஷர்கிட்டே இத்தனை நாள் குடித்தனம் பண்ணியதே பாவம்! அவ தலையெழுத்து. அதென்ன சத்தம், மூணாம் மனுஷாளையெல்லாம் பார்த்து!" செல்லம் மூச்சு வாங்க இரைந்து விட்டு. குக்கரை அணைக்க உள்ளே விரைந்தாள்.

விஷயம் இதுதான்! சர்மா வந்திருந்த மனிதர்களையெல்லாம் பார்த்துத் திடீரென்று ஒரு சத்தம் போட்டிருக்கிறார். "யாரும் இங்கே வரவேண்டியதில்லை! எல்லோரும் எழுந்து போங்க! நீங்கள்ளாம் துக்கம் கேக்க வரல்லியேன்னு நாங்க யாரும் இப்போ அழல்லை! போங்கோ எல்லோரும் வெளியிலே!" என்று ஒரே கூச்சல் போட்டிருக்கிறார். எல்லோரும் அரண்டு போய் வெளியிலே வந்து விட்டார்கள். அவர் வாசற்கதவையே இழுத்து மூடி விட்டாராம்.

நான் போயிருந்தபோது மனிதர் சாதாரணமாகத்தானே இருந்தார்! எனக்கு ஆச்சரியமாக இருந்தது! பெண்டாட்டி திடுமென போய்விட்டதில் மனுஷனுக்குப் புத்தி ஏதாவது பேதலித்து விட்டதா? அந்தத் தெரு முழுவதும் ஒரு வாரம் இதே பேச்சுத்தான்! ஆனால் யாரும் தப்பித்தவறிக் கூட அந்த வீட்டுப்பக்கம் போகவில்லை.

ஒரு மாதம் கழித்து, ஒரு நாள் நான் ஆபீஸிலிருந்து வீடு திரும்பும் போது, எதேச்சையாகப் பார்த்தேன், வாசல் வராந்தாவில், சபேச சர்மா உட்கார்ந்திருந்தார்!

"வாங்க!' என்று அழகாக அழைத்து புன்னகைத்தார்! நான் வேறு வழியில்லாமல்,

அசடு வழிந்து கொண்டே அவர் அருகில் போய் அமர்ந்து கொண்டேன். மனுஷன் என்னென்னமோ பேசினார்! பெண் காப்பி கொண்டு வந்து வைத்தாள். எனக்கு நடுக்கம்தான். எந்த நிமிஷம் என்ன கத்துவாரோ என்று! கடைசியில் அவரே விஷயத்திற்கு வந்தார்.

''நம்ப சமூகத்தை ரொம்ப ரொம்ப திருத்தியாகணும் சார்! அன்னிக்குப் பாருங்க... அவ போய்ச்சேர்ந்த அன்னிக்கு துக்கம் கேக்க வந்தவா ஏன் சார் அப்படி உளறணும்?'' ஐயோ பாவம்! குழந்தைகளை விட்டுட்டு போயிட்டாளேன்னு சொல்லட்டும் நியாயம்! வயசு காலத்துல பாட்டி தலையிலே இத்தனை பொறுப்பை தள்ளிட்டாளேன்னு சொல்லட்டும்! அதுவும் நியாயம்தான்! திடீர்னு எல்லாருமா எங்கம்மா மேலே பாயறா! ஏற்கெனவே எங்கம்மா ராத்திரி முழுக்க தூங்காம அழுது துடிச்சு, தன்னை விட்டுட்டு அவளைத் தூக்கிண்டு போயிட்டானேன்னு அந்த யமதர்மராஜனுக்கு லக்ஷார்ச்சனை பண்ணி ஓய்ந்து போய் சுருண்டு கிடக்கா!

கார்த்தால பார்க்கறேன், வரிசையா ஒவ்வொருத்தரா ''ஐயோ! யமனுக்குக் கண்ணில்லையே'' அப்படிங்கறா ஒருத்தர்! ''யமனுக்கு தட்டுக் கெட்டுப் போயிடுத்தோ!'' அப்படிங்கறா இன்னொருத்தர். ''பாட்டி! உங்களை வைச்சுட்டு அவளை வாரிண்டு போயிட்டானே இந்த யமன்!' அப்படின்னு கூசாம சொல்லி கட்டி அ ழ ற ா இன்னொருத்தி! கடைசியிலே யாரோ ''ஐயோ பாட்டி! குத்துக் கல்லாட்டம் நீங்க இருக்கறச்சே இதென்ன அநியாயம். அப்படின்னா என்னாலே ஆத்திரத்தை அடக்கவே முடியலை! ஒரே சத்தமா போட்டு எல்லாரையும் வெளியிலே துரத்திட்டேன்!

பின்னே என்ன சார்? என் மனைவி செத்துப் போனதுக்குத் துக்கம் விசாரிக்கிறாளா அல்லது எங்கம்மா உயிரோடு இருக்கறத்துக்கு அனுதாபம் தெரிவிக்கிறாளா!? அம்பத்தைஞ்சு வயசிலே, என் மனைவி செத்துப் போனதாலே, எண்பது, வயசிலே எங்கம்மா உயிரோடு இருக்கறது பெரிய அநியாயமா? ஆண்டவன் விதிப்படி எல்லாம் நடக்கறது! எண்பது வயசு என்ன சார், எங்கம்மா இன்னும் நூறு வருஷம் கூட இருப்பா! இவாளுக்கென்ன? ஏதுடா அந்தக் கிழவி ஏற்கெனவே நொந்து போயிருக்காளேன்னு, ஆறுதலா ''நல்ல காலம்! நீங்க இருக்கேள் குடும்பத்துக்குத் துணையா!'' அப்படின்னு ஒரு வார்த்தை சொல்லத் தெரியலை! உபயோகமத்த ஜனங்கள்!'

அவர் கோபத்திலும் கொஞ்சம் நியாயம் இருப்பதாகத்தான் எனக்குத் தோன்றியது. அவர் ஆவேசம் கொஞ்சம் தணிந்த பிறகு நான் நல்லபடியாக விடைபெற்றுக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன்.

ஒவ்வொரு வருடமும் ஏப்ரல் மே மாதங்கள் குழந்தைகளுக்கு லீவு என்றால் பெரியவர்களாகிய எங்களுக்குப் பரீட்சை தான். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு யுகம். லீவு விட்ட பத்து நாட்களுக்குள் எல்லா சினிமாக்களையும் பார்த்து முடித்து, எல்லா காமிக்ஸ்களையும் படித்துத் தள்ளி 'போர் அடிக்கிறது, போர் அடிக்கிறது' என்று எங்களை ஜிம்பி விடுவார்கள்.

இத்தனை வால்களுக்கும் கட்சித் தலைவி என் பெரிய மகள்தான். சிறிய வயதிலிருந்தே அவள் தரையில் நடந்து யாரும் பார்த்த தில்லை. சோபா, சேர், ஜன்னல் இதன் உச்சியிலிருந்துதான் குரல் கேட்கும். போதாதகுறைக்கு பெரியவன் சட்டைகள் வீணாகப் போகின்றதே, சின்னப் பெண் தானே என்று ஆண்பிள்ளை சட்டைகளைப் போட்டு, முடி அடர்த்தியாய் வளரட்டும் என்று அடிக்கடி முடியை வெட்டி வளர்த் தது துப்பாகி விட்டது. மாங்காய் அடிப்பதில் இருந்து, சினிமாவிற்கு மொத்தத்தையும் கூட்டமாக இழுத்துச் சென்று பாப்கார்ன் வாங்கி சமமாக விநியோகம் செய்து, சின்ன வர்கள் சண்டைக்கு நடுவராக நின்று தீர்ப்புச் சொல்லி, அனைத்தையும் தன் கட்சியி லேயே வைத்துக் கொண்டு திறம்பட விஷமம் செய்யும் மன்னி. (மன்னரின் பெண்பால்).



இவளது எதிர்க்கட்சித் தலைவன் என் பெரிய மகன். ஐந்து நிமிடங்களில் ஒரு ஐஸ்க்ரீமை காட்டி அத்தனை பேரையும் தன் கட்சிக்கு மாற்றி விடும் சமர்த்தன். வருடங் களும், வயதும் கூடினாலும் குணங்கள் மாற வில்லை.

இவர்களின் விடுமுறை அமர்க்களத்தை அடக்க நான் ஒரு நல்ல யோசனை செய் தேன். லீவை வீணடிக்காமல் நல்ல வகுப்பு களில் சேர்த்து விடுவது. நேரமும் உபயோக மாகச் செல்லும். அமர்க்களமும் குறையும் என்று தீர்மானித்தேன்.

'இந்தி படியுங்கள்' என்று அனுபவம் மிக்க ஒரு வயதான இந்தி வாத்தியாரை வீட்டிற்கு அழைத்து வந்தேன். மிகவும் சாந்த சுபாவமுடையவர். தினமும் 'டாண்' என்று மூன்று மணிக்கெல்லாம் வந்து விடுவார். பழி போல் ஹாலில் அமர்ந்திருப்பார். ஒவ் வொரு தலையாக கதவு வழியாக அவரை எட்டி எட்டிப் பார்த்து விட்டு ஓடும். கூட்டத் தலைவியான எனது மகளுக்கு ஹிந்தி வாத்தியார் வந்து விட்டதைப் பற்றி உளவு கூறப்படும். உடனே ஒரு அவசர கூட்டம் நடைபெறும். இரண்டு பேர் 'வயிற்று வலி, வயிற்று வலி' என்று திடீரென்று துடிக்க ஆரம்பிக்க, நான்கு பேர் அவர்களுக்கு சிசுருஷை செய்யத் தொடங்கி விடுவார்கள். மற்றும் இரண்டு பேர் 'நாங்கள் மட்டும் படிக்க வேண்டுமா' என்று முறைப்பார்கள். இப்படித் தினமும் ஒரு நாடகமாக காலம் தள்ளினாலும் நான் கண்டிப்பாகக் இருந் தேன் ஹிந்தி படிக்க வேண்டும் என்று.

வாத்தியாருக்கு என் வீட்டிற்கு வருவது தண்டனை பெறுவதைப் போல் இருந்தது. வந்தாலும் 'ஒன்றும் ஒழுங்காய் படிப்ப தில்லை. 'ஏன் ஹோம்வொர்க் செய்ய வில்லை' என்று அவர் கேட்டால் ஒன்றை ஒன்று பார்த்து 'ஹிஹி' என்று இளிக்கும். தவறிப் போய் அவர் தண்ணீர் வேண்டும் என்று கேட்டால் மொத்தமும் 'நான் கொண்டு வருகிறேன், நான் கொண்டு வரு கிறேன்' என்று ஓடி அரை மணி நேரம் பொறுத்து வரும்.

# அக்கா வந்துட்டா!

''கணேஷ் உன் புத்தகம் எங்கே?''

''இதோ கொண்டு வரேன் சார்'' சென்றவன் புத்தக அச்சாபீஸிற்கே போய் விட்டான். ஆளே காணவில்லை.

''பாப்பா, நீ ஏன் ஹோம்வொர்க் செய்யவில்லை?''

''பென்சில் ஹுக் உடைந்து விட்டது சார்.''

''சார்...''

''என்ன?''

''உங்களுக்கு எத்தனை பசங்க சார்?''

''மூன்று. அதற்கென்ன இப்பொழுது?''

''அவங்க எல்லாம் ஹிந்தி படிக்கிறார்களா சார்?''



இப்படித் தேவையற்ற கேள்விகளும் செயல்களும் அவரை எரிச்சல்படுத்தின. என்னைக் கையெடுத்து கும்பிட்டுச் சென்றவர் வெகு நாட்கள் வரவில்லை. பீஸூம் இந் நாள் வரை வாங்கவில்லை. ஓர் நாள் தற்செயலாய் அவரை ஓர் பஸ் ஸ்டாப்பில் கண்டேன். என்னை அடையாளம் கண்டு கொண்ட அவர் வந்த பஸ்ஸையும் விட்டு விட்டு எதிரே ஒரு சந்தில் என்னை திரும்பித் திரும்பிப் பார்த்தவாறு தலைதெறிக்க ஓடினார்.

பகைவரை புறமுதுகிட்டோடச் செய்த பெருமிதம் என் பிள்ளைகளுக்கு. எனக்குப் பற்றிக் கொண்டு வந்தது. மதிய வேளையில் வீட்டில் சப்தம் காதைப் பிளக்கும். டீவி, ரேடியோ, டெக் இவற்றிற்கு வாய் இருந்தால் கதறி அழும். எந் நேரமும் அழுகிறானா, கத்துகிறானா என்று தெரியாத ஓர் இங்கிலீஷ் பாட்டு. இது என் பையன் கட்சி. மற்றொரு பக்கம் ஏட்டிக்குப் போட்டியாக இரைந்து கத்தும் தமிழ்ப் பாடல்கள். இது என் பெண் கட்சி. அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் சண்டைக்கு வராத குறை.

இதுவாவது போகட்டும். மற்றொரு அமர்க்களத்தைக் கேளுங்கள். உறவினர் பெண் ஒருவரை 'வா பக்கத்து வீட்டு கொய்யாக்கா பறிக்கலாம்' என்று கூட்டிப் போய் ஏணி வைத்துத் தண்ணீர் தொட்டியின் மேல் ஏற்றி ஏணியையும் எடுத்து வந்து விட்டனர்.

வீடு அமைதியாய் இருக்கவே எனக்குச் சந்தேகம் வலுக்க வீட்டைச் சுற்றி ஆராய்ந்தேன். வெயிலில் சிவசிவத்த அந்தப் பெண் உட்கார முடியாமல், நிற்க முடியாமல் காலை நீட்டி மடக்கிக் குதித்துக் கொண்டிருந்தாள்.



வீட்டில் அடைத்துப் போட்டாற் போல் இருக்கிறதே என்று நான் நினைத்தாலும், ஸ்கூல் போல் இருக்கும். இத்தனையையும் எங்கு கூட்டிச் செல்வது. கையில் ஒரு அட்டென்டென்ஸ் ரிஜிஸ்தருடன்தான் செல்ல வேண்டும். இவர்களுக்குப் பிடிக்காத யாரேனும் வீட்டிற்கு வந்தால் அவர்கள் செல்லும் வரை என்னை 'வெடுக், வெடுக்' கென்று கிள்ளி அவர்கள் பின்னால் நின்று அங்க சேஷ்டைகள் செய்து, நிலைமையைச் சமாளிக்க நான் தத்துபித்தென்று சிரித்து வைத்து அசடு வழிவேன்.

சினிமா சென்றால் தியேட்டரே இரண்டுபடும். பாப்கார்ன், பால், ஐஸ்கிரீம் என்று ஒவ்வொன்றும் கையில் அள்ள கடைக்காரர் குழம்பி கொடுத்த காசு போதும் என்று என்னை அனுப்பி விடுவார்.

'ஹைட் அண்ட் சீக்' என்று ஒளிந்து விளையாடும் விளையாட்டு என் தெருவிற்கே பிரசித்தம். யார் வீட்டிற்குள் வேண்டுமானாலும் ஓடி ஒளிவார்கள். இப்படி ஓடி ஒளிந்ததின் விளைவு பக்கத்து வீட்டுக்காரர் என்னை அழைத்து "குழந்தைகள் எல்லாம் ஊரிலிருந்து வந்திருக்காளா? அதான் ஒரே சப்தம். இங்கெல்லாம் கூட குதித்து ஓடிக் கொண்டிருந்தார்கள். கனகாம்பரம் செடியெல்லாம் நசுங்கி விட்டது" என்று வாழைப்பழத்தில் ஊசி ஏற்றுவது போல் கூறினார்.

வைத்த சாமான் வைத்த இடத்தில் இருக்காது. ஸ்பூன், டபரா, வாழைப்பழத் தோல், டிராயரெல்லாம் ஈஷிக் கொண்ட சிக்லெட், ஸ்க்ரூ டிரைவர், பிரஷ், பிதுங்கிக் காய்ந்த பேஸ்ட் இவை எல்லாம் படிக்கும் மேஜை டிராயரில். சுவர் முழுவதும் ப்ரூஸ்லீ, ப்ரூக்ஷீல்ஸ் இன்னும் ஏதேதோ ஷ், புஷ்னின் படங்கள். ஒரு மூலையில் சின்ன சாமி

படம். அதன் தலையில் வாடி உதிர்ந்த பூ நார். இந்த சாமி வருடா வருடம் பரீட்சை சமயத்தில் மட்டுமே நன்கு கவனிக்கப்படுவார். பீரோவைத் திறந்தால் தலை மேல் விழும் துணிப்போர். ரூமில் நொண்டி அடித்துச் செல்ல வேண்டும். என்ன பிள்ளைகள்! அரை நாள் செலவழித்து அத்தனையையும் சரிவர எடுத்து வைத்து விட்டு வெளியே சென்றேன்.

வீட்டில் திரும்ப நுழைந்ததும் என் பையன் பாய்ந்தான்.

''அம்மா! என்னுடைய ஜீன்ஸை எங்கே வைத்தாய்?''

ஏதோ அந்த ஜீன்ஸ் இல்லாததால் துணியே இல்லாதது போல் ஒரு கத்தல்.

''அம்மா! உன்னை யார் என் ரூமை சரிசெய்யச் சொன்னது. என்னுடைய ஹாலிடே ஹோம்வொர்க் நோட்டைக் காணோம். எனக்கு எதையும் நான் வைத்தது போல் வைத்தால்தான் அடையாளம் தெரியும்.''

ஹாலிடே ஹோம்வொர்க் என்பது ஸ்கூல் திறக்கும் கடைசி நாள் வரை திரும்பிக் கூடப் பார்க்கப்படாத ஒரு வேலை. எல்லாவற்றையும் நானே அவசரம் அவசரமாக செய்து தர வேண்டும்.

இவற்றிற்கு நடுவில் சாப்பாடு சரியில்லை என்ற குறை வேறு. ஓர் நாள் ஜம்பமாக அவர்களே சமைத்துக் கொள்வதாகச் சொன்னார்கள். பெண் பிள்ளை பழகட்டுமே என்று நானும் சம்மதித்தேன். கல்யாண வீடு போல் சமையலறை அல்லோகல்லோபட்டது. தட்டு எங்கே, கரண்டி கொண்டா என்று சப்தம். சிண்டு நண்டுகள் குறுக்கும் நெடுக்கும் ஓடின. வெகு நேரம் கழித்து ஒரு தட்டில் எலி போல் கரேர் என்ற ஒரு வஸ்துவை எனக்கு மட்டும் கொடுத்தார்கள். ஸ்பூனால் அதைப்பிய்க்கமுடியவில்லை. வாயில் போட்டதும் தொண்டையில் அடைத்துக் கொண்டது. நான்கு டம்ளர் தண்ணீர் குடித்தேன். ஸ்வீட்டா, காரமா என்று தெரியவில்லை. பிறகு சொன்னார்கள். அது குலோப்ஜாமூன் என்று.

பின்னர் சமையலறையில் கால் வைத்த நான் வழுக்கி கபால மோட்சம் போகாத குறை. எங்கும் பிசுபிசுவென்று இருந்தது. பாத்திரங்கள் அடியில் தீய்ந்து எவ்வளவு சுரண்டியும் விடவில்லை.

இரவில் இவைகள் தூங்கப் போகும் முன் யார் ஃபானுக்கு அடியில் படுப்பது? யார் ஜன்னலுக்கு அருகில் படுப்பது என்ற இடப் பிரச்னை காஷ்மீர் பிரச்னையைக் காட்டிலும் அதிகம்.

ஒவ்வொரு ஜூன் மாத இரண்டாவது வாரத்தில் என் உயிர் பிழைக்கும். உடைந்த டீவி, ரேடியோ, நாற்காலி இவற்றை ரிப்பேர் செய்து வீட்டை நிமிர்த்த ஒரு மாதம் ஆகும். இதோ! லீவும் வந்து விட்டது! என் செல்லங்களும் கட்சித் தலைவி அக்காவுடன் வந்து விட்டன!





# கல்யாணக் கனவுகள்

உமாகுமார்

"கௌரீ! கௌரீ!" — பத்மா கூப்பிட்டபடியே புது கொலுசு கிலுக்! கிலுக்!கென்ற படி ஓடி வருகிறாள். முழங்காலில் ஊன்றியிருந்த தாவாங்கட்டையைத் தூக்கி, நிமிர்கிறேன்.

"ம்! அம்மா அங்கே மண்டபத்துக்கு கிளம்பறதுக்கு ரெடியாச்சான்னு ஆயிரம் தடவைக் கேட்டு பறக்கடிக்கிறா எங்களை, நீ என்னடான்னா தோய்க்கற கல்லுல உட்கார்ந்து பவழ மல்லியைப் பார்த்துண்டிருக்கே. கிளம்பு"

முடித்தவள் சடக்கென்று இடது காலைத் தூக்கிக் கல்லில் வைக்கிறாள்.

"டீ! கௌரீ இந்த டிஸைன் எப்படியிருக்கு என் காலுக்கு?" மெள்ள சிரிக்கிறேன்.

"நல்லாயிருக்கு!"

"பளபளப்பப் பாரேன்!"

குஷியில் சப்தம் நன்றாக வரட்டும் என்று 'நங்' கென்று ஒரு குதி குதிக்கிறாள். கொஞ்சமாவா குதித்தாள் இதை வாங்கிக் கொள்வதற்கு.

"அம்மா! எனக்குக் கொலுசு வாங்கித் தந்தா தா. இல்லைன்னா கல்யாண மண்டபத்து பக்கமே வர மாட்டேன் ஆமா...!"

"ஏண்டி வீட்டு நிலைமைப் புரியறதா? முன்னூறு ரூபா ஆகிறது உன் காலுக்கு அன்னைக்கே கேட்டேன்."

"பெரீசா கேட்டுட்டு வந்துட்டியா. அக்கா கல்யாணம்னு பேரு. ஒரு டிரஸ் உண்டா? அதுதான் கிடையாதுண்ட்டே. இப்ப இந்த சான்ஸை விட்டா அப்புறம் எப்ப கிடைக்கப் போறது எனக்கு?" ஒருவேளை உண்ணாவிரதமும் இரண்டு நாள் மௌனவிரதமும் அம்மாவின் மனசை மாற்ற இதோ வீட்டில் சலக்! சலக்கென்று கொலுசு சப்தம்.

ஆனால் அந்த பத்தர் கடையில் கணக்கு?— நிச்சயம் நிறைய இருக்கும். இரண்டு வளையல் இரண்டு பவுனில் அதைத் தவிர நெக்லஸ் இரண்டரை பவுன் அது இது என்று ஐந்து ஐந்தரை பவுன் வாங்கியிருக்கிறதே. அன்று அப்பா எத்தனை எடுத்துக் கொண்டு போனார். மூவாயிரம்? ஹா! மீதி தலை சுற்றியது. எப்படி இந்தக் கடனை அடைக்கப் போகிறார் அப்பா! மாசக் கடைசியில் பால் பாட்டில் வாங்கக் காசின்றி "நாலஞ்சு நாளைக்குப் பாட்டில் வச்சுட்டு போப்பா! சேத்து வாங்கிக்கோ சித்த!" — என்று அட்ஜஸ்ட் பண்ணும் அம்மா இதை எப்படி சமாளிக்கப் போகிறாள்?

தலையில் ஒரு கை முடியெடுத்துப் பூ வைக்க திரும்புகிறேன், அம்மா!

"நல்லாயிருக்கு போ! கல்யாணப் பொண்ணா லட்சணமா அலங்காரத்தைப் பண்ணிண்டு மண்டபத்துக்குக் கிளம்பறதை விட்டுட்டு இது என்ன தோய்க்கற கல்லுல வந்து உட்கார்ந்துண்டு. முகமெல்லாம் சோர்ந்து கிடக்கு நாலு நாள் பட்டினி மாதிரி. போ! அரிசி உப்புமா பண்றா சித்தி. எடுத்துக்கோ போ! பளிச்சுன்னு இன்னொரு தடவை சோப் போட்டு மூஞ்சி அலம்பிண்டு அந்த "நெட்நெட்" புடைவையை எடுத்துக் கட்டிக்கோ! அதுக்கு மேட்சா மஞ்ச உள் பாவாடை இருக்கோல்லியோ? ம்! எழுந்திரு."

கையைப் பிடித்து எழுப்புகிறாள் அம்மா. என் அம்மாதான். ஆனால் இன்று அவளை நிமிர்ந்து அவள் கண்ணோடு கண் சேர்த்துப் பார்க்கும் தைரியம் துளி கூட இல்லை. பயம்! எங்கே அப்படிப் பார்த்தால் என்னையறியாமல் கதறி அழுது விடுவேனோ என்று பயம்.

"இந்தா! இந்தப் பூவையும் சுத்து கல்யா

ணப பெண் தலையிலே!'' — சித்தி வருகிறாள். கையில் கனகாம்பரத்தோடு.

''நீயே வை! மனசுல எதையோ வச்சுண்டு மருகறதைப் பாரேன் இந்தப் பெண். பொண்ணாப் பொறந்துட்டா இதுதான். ஒரு தொட்டில்ல தவழ்ந்துட்டு இன்னொரு கட்டிலுக்குத்தான் போகணும். அன்ன சத்திரம் கட்டிண்டு அம்மா வீட்டிலேயே கிடக்க முடியுமா என்ன!''

அம்மா பழமொழிப் புலம்பல் புலம்ப சித்தி கையமர்த்தி அவளை சமாதானப் படுத்துகிறாள்.

''சும்மா இருடீ பாரு. குழந்தை கல்யாணம்னா என்னென்ன சொப்பனம் பாப்பாளோ! நம்மகிட்டே சொல்லிண்டா இருப்பா எல்லாம். போ! போ! பட்சணம் பண்ண ஆரம்பிச்சிருப்பான் மண்டபத்துல. ரிக்ஷா வந்து பெட்டியெல்லாம் அனுப்பியாச்சு. நம்ம கிளம்பற வழியப் பாரு போ!''

அவர்கள் மாப்பிள்ளை அழைப்பு முடிந்து சாப்பாட்டில் என்ன போளி போடுவது என்று சர்ச்சித்துக் கொண்டே போக நானும் பின்னால் போகிறேன்.

**மதியம் மணி இரண்டு.**

அந்தக் காலத்து முற்றம். இரண்டாங் கட்டு. ரேழி கொண்ட பழைய காலத்து வீடு! மண்டபமாக மாறியிருக்கிறது. வெளியில்தான் பெரிய போர்ட் ''மஹாலட்சுமி திருமண மண்டபம்'' என்று தொங்குகிறது. உள்ளே அதே வீடு! அதே ரேழி இருட்டு.

''பெட்ரோமாக்ஸ் சொல்லியாச்சோ! ஏண்டா கோபாலா...!''

அங்கே இத்தனை நேரம் உட்கார்ந்திருந்ததால் மறத்துப் போன காலை ஒரு உதறு உதறி நீவி விட்டபடியே எழுந்து அப்பாவைத் தேடிக் கொண்டு போகிறாள்.

''எல்லாம் சொல்லியாச்சும்மா! நீ உள்ள ஆக வேண்டியதைப் பாரு. 'டாண்'ணு ராகுகாலம் முடிஞ்சதோ இல்லையோ மூணு மணிக்கெல்லாம் சம்மந்தி பேர் வந்து இறங்கிடுவா! கொஞ்சம் மாடீல யாரையாவது அனுப்பி ஜமுக்காளம் போட்டு சந்தனம், சர்க்கரையெல்லாம் ரெடி பண்ணச் சொல்லு.''

அப்பாவின் குரல் ரேழியிலிருந்து 'கணீ'ரென்று கூடம் வரை வந்தது.

''அதெல்லாம் இழை கோலம் காஞ்ச உடனேயே தயாரா பண்ணிட்டு இப்பத்தான்



கீழே வந்து சித்த உட்கார்ந்தேன்!''

''ஏண்டாப்பா கோபாலா! வாசல்ல இப்படி இரண்டு வாழை மரங் கட்டின தோட போறும்னு விட்டுட்டியா? ரெண்டு காலை நட்டு ஒரு சின்னப் பந்தலா போட சொல்லக் கூடாதோ? முத மொதல்ல கல்யாணம் பண்ற...''

யாரோ நீட்டி முழக்க, பதில் வரவில்லை கொஞ்ச நேரம்.

''எனக்கும் ஆசைதான். எம் பொண்ணுக்கு என்னென்னமோ பண்ணணும்னு'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே வருகிறார் அப்பா. என்னைத் தாண்டியவர்... நிற்கிறார். திரும்பி அருகே வருகிறார். ''மருதாணி இட்டுண்டியாம்மா?'' — நிமிர்கிறேன் தலையாட்டியபடியே. கண்களின் நீர் அப்பாவை மங்கலாகக் காட்டுகிறது. வாஞ்சையோடு ஒரு தடவை உச்சந்தலையை வருடி விட்டுக் கூடத்தைத் தாண்டிப் போகிறார் விருவிருவென்று.



என்னைப் பெண் பார்க்க வந்த போது எத்தனை சந்தோஷம் இந்த அப்பாவின் முகத்தில். வாசலுக்கும் உள்ளுக்குமாக ஆபீஸிற்கு லீவு போட்டு விட்டு எத்தனை தடவை ஓடியிருப்பார். நடுநடுவே எத்தனை கேலி எத்தனை கிண்டல்.

''பாரு! அம்மா பார்வதி! பரதேவதை. கேசரியைக் கொஞ்சம் பார்த்துக் கிளரு. கேசரியைப் பார்த்துட்டு எங்காவது எம் பொண்ணைப் பிடிக்கலைன்னு போயிடப் போறான் புள்ளையாண்டான்!''

அம்மா சிரித்துக் கொள்வாள். ''ரொம்ப சமர்த்து வழியறது போங்க!'' — என்றபடியே.

''கையிலே காலணா சேர்த்து வச்சுக்கலை! பொண்ணை பொண் பார்க்க கூப்பிட்டாச்சு. பொண் புடிச்சுப் போய் மேல பேச்சு ஆகி பாக்கு வெத்தலை மாத்தணும்னா! என்ன பண்றது, அதை யோசிச்சீங்களா?''

''தோ பாரு நடக்க வேண்டியதை நாம பார்த்துப்போம். நாளைக்கு நடக்கப் போறதை ஏழுமலையான் பார்த்துப்பான். புரிஞ்சுதா! இப்ப பஜ்ஜியைக் கொண்டா இரண்டு. உப்பு போறுமான்னு பார்த்துட்டு ஓடறேன்!''

இப்படி விளையாட்டாக இருந்த அப்பா கூடத்தான் எத்தனை மாறி விட்டார் பின்னால். உடனே நிச்சயம் என்று ஆன பிறகு சொல்லப் போனால் தூக்கம் என்பதே மறந்து விட்டது இருவருக்குமே!

''என் கழுத்து சங்கிலி மூணு பவுன் தானே! மெருகு போட்டு திருமாங்கல்யத்தைக் கோத்து அவ க்ழுத்துல போட்டுடலாம். திருமாங்கல்யம் பண்ணியாகணும். வளை இரண்டு பவுன்னு வச்சுண்டாலும் இரண்டும்சேர்த்து மூணரை ஆச்சு. நெக்லஸ் இரண்டரைபவுன். ஆறுபவுன். மாப்பிள்ளை மோதிரம் அரை பவுன். அப்புறம் வெள்ளியிருக்கே!''

சில சமயம் காப்பி கலந்தவுடன் திரிந்து போய் விடும். புளிக்காமல் இருக்கிறதா என்று பார்த்து விட்டு, டீ வடிகட்டியில் வடிகட்டினால் காப்பி வித்தியாசம் தெரியாமல் நன்றாகவே இருக்கும்.

— பார்வதி.



இதே பேச்சுத்தான் சாப்பிடும் போதும், குளிக்கும் போதும். புடைவை பற்றி, மண்டபம் பற்றி, யாராரிடம் கடன் கேட்பது என்று... அரைத் தூக்கத்தில் புரண்டு படுத்தால் மூலையில் கிசுகிசுப்பாக அப்பா அம்மாவோடு உட்கார்ந்து ஜன்னல் வழியாக வானத்தை வெறித்தபடியே பேசிக் கொண்டிருப்பார்.

''பாரு, பி.எஃப்.லேயிருந்து லோன் வர்றது. நாலோ, நாலரையோதான். அவங்களுக்கு கையிலே வேற மீதி ஆயிரம் கொடுத்தாகணும். நீ சொல்ற பட்சண, புடைவை லிஸ்ட்டைப் பார்த்தா அதுக்கெங்கே போறது போலிருக்கேடி?''

''பின்ன? கல்யாணம்னா சும்மாவா! மணைல நாளைக்கு கன்னிகாதானம் பண்ணிக் கொடுக்க நிக்கணுமேன்னு ஒரு ஒன்பது கஜம்பட்டுப்புடைவை சாதாரணமா ஒண்ணு எனக்கு வாங்கிக்கலாம்னு நினைச்சுண்டிருந்தேன். இங்கே இருக்கறதுக்கே முழி பிதுங்கறதே? ஒரு சின்னாளபட்டீல 'பளிச்'சுன்னு பார்த்து ஒண்ணு எடுத்துக்கறேன்.''

குழந்தைக்கு ஒரு தாலிக் கூரைப் புடைவை, ஒரு ஊஞ்சல் புடைவை, மத்ததுக்கு சாதாரணமா ரெண்டு புடைவை வாங்கிடுவோம் போதும். அன்னைக்கே பாக்கு வெத்திலை மாத்தற அன்னைக்கே புள்ளையோட மாமி கொஞ்சம் சேப்பா, ரெட்ட நாடியா வரலை அவ அப்பவே சொன்னா ''பட்டுப் புடைவைல ஏனோ தானோன்னு வாங்கிடாதீங்கோ. ஆயிரம் ரூபாய்க்குக் குறையக் கூடாதுன்னு.''

''ம்! வாங்கிட்டாப் போறது. நாளைக்கே செட்டியார் கடைல பார்த்துப் பேசறேன். இன்னைக்கு வியாழன். என்ன சொல்லப் போறார். உனக்கா வந்து அள்ளிக்கோம் பார் செட்டியார். நாளைக்கே போறேன் ஆபீஸ் போறச்சே. நாளன்னிக்கு ம்ஹூம் சனிக்கிழமை வேண்டா! திங்கள் கிழமை குழந்தையையும் அழைச்சுண்டு போய் புடிச்சதா போய் எடுத்துக்கங்கோ!'' — இப்படி எத்தனை ப்ளான்கள்?

''கௌரீ!'' — பின்னால் வந்து கழுத்தைக் கட்டிக்கொண்ட பத்மாவை மெள்ள விலக்குகிறேன். "எங்கேடி அம்மாவைக் காணோம்?"

''ம்! அதைக் கூட நான்தான் சொல்லணுமா? அங்கே அத்திம்பேர் வந்து இறங்கியாச்சு பட்டாளத்தோட. அப்பா! மேல மாடி ரூமே ரொம்பி வழியறது.''

இப்பவே இவ்வளவு கூட்டமா? பத்து பேர்தானே வருவதாக சொன்னார்கள்? — நினைத்துக் கொள்கிறேன். சமையல் லிஸ்ட்டில் இன்னும் அதிகமாக சாமான் தேவைப்படுமோ?

''கௌரீ! பாரேன் அம்மாவ இங்கே வந்து கூட என்னைத் திட்ட ஆரம்பிச்சுட்டா!''

''ஏன்?''

''நீயே சொல்லு. மாப்பிள்ளை வீட்டுக்காரா ஜோரா வந்து இறங்கிட்டா. இந்த டிரஸ்ஸ மாத்திண்டேன்! முறைக்கறா. இதை எதுக்குடி இப்பவே தீச்சுண்டு நிக்கறே? மாப்பிள்ளை அழைப்புக்கு என்னத்தைப் போட்டுப்பேன்னு பல்லைக் க டி க் க ற ா.'' நிமிர்ந்து பார்க்கிறேன். போனா வருஷத்திய தீபாவளி டிரெஸ், சிவப்பு வண்ண பாம்பே—டையிங் பாவாடை. சிவப்பு தாவணி, ப்ளவுஸ்.

''தோ பாருடி பத்மா. ஆகிற செலவுல உங்களுக்கெல்லாம் வேற இட்டு ரொப்பிண்டிருக்க முடியாது. புரிஞ்சுதா. மாப்பிள்ளை அழைப்பண்ணிக்கு பளிச்சுன்னு அந்த தீபாவளி டிரஸ்ஸை போட்டுக்கோ. மறுநாள் ஊஞ்சல் போது கௌரியோட புடைவை ஒண்ணை எடுத்து சப்தமில்லாம கட்டிக்கோ! கல்யாணம் ஆன கையோட அவிழ்த்து பத்திரமா அவ பொட்டியிலே மடிச்சு வச்சுட்டு அதே பாவாடையை எடுத்துக் கட்டிண்டுடு தெரிஞ்சுதா? கல்யாணம் நிச்சயமானதிலிருந்து அம்மா அவளிடம் ஓதிய பாடம் இது — சிரிக்கிறேன்!

''சரி! சரி அம்மா டென்ஷன்ல ஏதாவது சொன்னா பட்பட்ன்னு பதில் சொல்லிண்டு நிக்காதே! ஆமா ''பத்தர் தட்டு அடிச்சுக் கொண்டு வந்துட்டானா?''

''ம்ஹூம்! அதான் அப்பா கூட தவிச்சுண்டு இருக்கார். நம்ம பக்கத்து வீட்டு சீனு இல்லே, அவனைத் தன் சைக்கிளைக் கொடுத்து அனுப்பியிருக்கார். போய் பத்தரைப் பார்த்துட்டுவான்னு!''. — பரபர வென்று கதவைத் திறந்து கொண்டு நாலைந்து பேர் நுழைய பத்மா பாக்குத் தட்டைத் தூக்கிக் கொண்டு ஓடுகிறாள்.

மாலை மணி ஐந்து.

''கௌரீ!'' — டீ கௌரி! நீலா வந்திருக்காப் பாரு!

''வாடியம்மா! பிரெண்ட் கல்யாணத்துக்கு வர்ற நேரமா இது! அம்மா அப்பாவெல்லாம் எப்போ வர்றா?''

''கார்த்தால வருவா மாமி!'' — சொல்லிக் கொண்டே ஓடி வந்து கட்டிக் கொள்கிறாள்.

''கன்கிராஜுலேஷன்டி கௌரீ!''

''தேங்க்யூ!''

''எனக்கு விஷயமே தெரியாது தெரியுமோ. ஒரு நாள் ஆபீஸ் விட்டு வரச்சே மாமாவைப் பார்த்தேன். ''சமையக்காரனுக்கு அட்வான்ஸ் கொடுத்துட்டுப் பேசி முடிச்சுட்டு இப்பத்தான் வரேன். இதே மாதிரி கௌரியின் கல்யாணம் நிச்சயமாகியிருக்குன்னு 'பேட்'டு சொன்னார். இல்லேன்னா பத்திரிகை பார்த்துத்தான் தெரிஞ்சிண்டிருப்பேன்.''

கழுத்தில் மின்னிய செயினை விரலை விட்டு முறுக்கியபடியே அவள் பேசிக் கொண்டே போக பேசாமல் முழந்தாளை கட்டியபடி கேட்டுக் கொண்டிருக்கிறேன். எனக்கு எப்போதுமே 'வளவள' வென்று பேசப் பிடிக்காது. பிடிக்காது என்ன? தெரியாது. உட்கார்ந்து அரை மணி நேரம் வாய் ஓயாமல் கதை அளப்பவர்களை ஆச்சரியமாகப் பார்ப்பேன். எப்படி இவர்களால் மூச்சு கூட விடாமல் ஒரு விஷயத்திலிருந்து மறு விஷயத்திற்குத் தாவ முடிகிறது? அதுவும் இந்த நீலா! வாய் திறந்தால் அடித்துத்தான் மூட வைக்க வேண்டும். நல்ல பேச்சு! நல்ல மூளை! நல்ல படிப்பு.

படித்து முடித்து காலேஜ் வாசல் வரை கூடப் போய் டிகிரி வாங்கிக் கொண்டு வேலையும் 'சட்' டென்று கிடைத்து விட ஒரு கம்பெனியில் ஸ்டெனோகிராபராகி விட்டாள். நிச்சயம் இவள் கல்யாணத்தில் இவள் அப்பா, அம்மாவிற்கு இத்தனை... இத்தனை சுமையிருக்காது. இவள் சம்பளத்தில் பாதியையாவது மிச்சப்படுத்தி வாங்கி சேர்ப்பார்கள். நான்? அதிகம் படிப்பில் நாட்டமில்லாமல் டென்த் பரீட்சையைக் கோட்டை விட்டு விட்டு பேப்பரில் நம்பர் வராமல் போக அன்று அழுத அழுகை இன்றும் ஞாபகம் இருக்கிறது: அம்மா என்ன சொன்னாள் அன்று.

''போயிட்டுப் போறது போ! பெயிலானா என்ன இப்ப? பாஸ் பண்ணி எந்த காலேஜ்ல போய் படிச்சு சம்பாதிக்கணும்? ஆசைப்பட்டா அந்த எந்த பேப்பர் போனதோ அதை வேணா முடிஞ்சா எழுது. இரண்டு மூணு வருஷம். ஜாதகம் எழுதி, நாலு இடத்துல கொடுத்து, நல்ல இடமா தகைஞ்சா அப்புறம் என்ன? மகாராணியாட்டமா ராஜ்ஜியம் பண்ண கிளம்பப் போறே!''

அம்மாவின் இந்த விளக்கம் அப்போது



காராமணி ஒரு பங்கு, அரிசி ¼ பங்கு என்ற கணக்கில் லேசாக வறுத்து பொடிக்கவும். இதில் பொடி உப்பு, நீர் கலந்து பிசைந்து சேவை (பெரிய துளைகள் கொண்டது) அல்லது தேன்குழல் அச்சில் பிழிந்து ஆவியில் வேக வைத்து, தேவையான காய்கறி மசாலா தயாரித்து, இரண்டையும் கலந்து, கொத்துமல்லி தூவி பரிமாறலாம். சத்தான சிற்றுண்டி.

— ஆனந்தி.



ஒரு பாட்டிலில் இருந்து வேறு பாட்டிலுக்கு எண்ணெய் மாற்றும் போது, வழியாமல் இருக்க பாட்டிலின் வாயில், ரப்பர் பேண்ட் போடவும்.

— பார்வதி.

வருத்தத்தைப் போக்கியது. மேலே யோசிக்க விடாமல் எல்லா கதவையும் மூடியது. கல்யாணம் என்று நினைத்துப் பார்த்து வெட்கப்பட வைத்தது. ஆனால் இன்று? இன்று இப்போது நினைத்துப்பார்க்கிறேன். நானும் நீலா போல இருந்தால் நிச்சயம் அம்மா ஒரு பட்டுப் புடைவை வாங்கிக் கொண்டிருப்பாள். நிச்சயம் அப்பா... அப்பா..

"ஏய்! கௌரி!" — நீலா பிடித்து உலுக்க சிலிர்த்துப் போகிறேன்:

"எங்கம்மா? நாளைய கனவுக்கு இன்னைக்கே போயாச்சா. மிஸ்டர் ஸ்ரீதரன் கிட்டே சொல்லட்டுமா போயி?"

"யாரு ஸ்ரீதரன்?" பேந்த பேந்த முழித்த என் கன்னத்தைத் திருகுகிறாள்.

"யாரு ஸ்ரீதரனா? போச்சுடிய்ம்மா. எனக்குத் தெரியாது. நான் என்னமோ பத்திரிகையைத்தான் பார்த்தேன். ஸ்ரீதரனுக்குக் கௌரியை கன்னிகாதானம் செய்து கொடுப்பதாய்ன்னு எழுதியிருந்தது. ம்க்கூம்! ஆளு எப்படி கறுப்பா? சேப்பா? இல்லை நம்ம ஜாதியா?"

இடுப்பைக் கிள்ளியவளின் கையைப் பிடித்துக் கோர்த்துக் கொள்கிறேன் விரலோடு விரலாய். கறுப்பா? சேப்பா? யாருக்குத் தெரியும்? சொன்னாள் நம்புவாளா இவள். பெண் பார்க்க வந்த அன்று பயத்தில் வியர்வை வர கையில் பிடித்திருந்த கர்சீப்பில் விரலை உருவியபடி தரையைப் பார்த்தபடியே உட்கார்ந்து விட்டு "தையல் லாம் தெரியுமாம்மா?" என்ற கேள்விக்கு மட்டும், நிமிர்ந்து அருகில் உட்கார்ந்திருந்தவளின் முகத்தைப் பார்த்துப் பதில் சொன்னேன். "கொஞ்சம் கொஞ்சம் தெரியும்!" என்று. பிறகு மீண்டும் கீழே பாயைப் பார்த்துச் சுரண்டல்.

"ரொம்ப வெட்கப்படறா! உள்ள போம்மா!" யாரோ சொல்லி வாய் மூடு முன் ஒரே ஓட்டமாக எழுந்து உள்ளே ஓடி வந்து விட்டேன். ஐந்து நிமிடத்தில் அம்மா அருகில் வந்து "என்னடி புடிச்சிருக்கா?" — என்று தலையைக் கோத காரணமில்லாமல் வெட்கப்பட்டேன். நிச்சயமாகி மாப்பிள்ளை அழைப்பு வரை வந்தாகி விட்டது. இப்போது நான் சொன்னால் யார் நம்புவார்கள்? முதலில் இவள் நம்புவாளா?

"போடி நீலா! போய் டிபன் சாப்பிடு." அம்மா அழைத்தபடியே வர, "ஓகே. மாமி!" என்றபடியே நீலா எழுந்து போகிறாள்.

அம்மா உள்ளே வந்து மூலையில் அடுக்கியிருந்த பட்சணை டின்னை திறந்து பார்க்கிறாள்.

"எறும்பு கிறும்பு வராம இருக்கணும்."

"அம்மா!"

"என்ன? என்ன வேணும்? அப்பவே கௌரிக்கு டிபனைக் கொண்டு குடுன்னு பத்மாகிட்டே சொன்னேன் சாப்பிட்டியோ!"

நிமிர்ந்து பார்க்கிறேன். அலைச்சலின் அயர்ச்சி இப்போதே கண்களில் மிதக்க தளர்ந்து போய் ஒடிந்து நிற்கிறாள்.

"அம்மா வெள்ளித் தட்டு அடிச்சு வந்துடுத்தா?"

அம்மா பதிலின்றி பக்கத்தில் வந்து உட்காருகிறாள்.

"வந்துடும் வந்துடும். இத்தனை நாழி ஏன் ஆச்சுன்னுதான் புரிய மாட்டேங்கறது. முருகன் பத்தன்ட்ட சீனுவை நாலு தடவை அனுப்பியாச்சு. ஆளையே பார்க்க முடியலேன்னு வெறுங்கையோட வந்துட்டான். திரும்ப அதான் உங்க அப்பாவே போயிருக்கார். சாயங்காலம் நிச்சயதார்த்தத்தின் போது மணைல வைக்கணுமே. ஆயிரம் ரூபாவைத் தூக்கி அவன்கிட்டே கொடுத்துருக்கு. நாடியம்பாளைத்தான் வேண்டிண்டிருக்கேன்! அவதான் துணையா இருக்கா இப்ப மட்டும் என்ன, இனிமேலும் அவதான் நின்னு சொச்ச காரியத்தையும் நடத்திக் கொடுக்கணும்."

அம்மா குரல் தழுதழுக்க வழக்கம் போல அடிவயிறு என்னவோ செய்கிறது எனக்கு. என்ன ஆகும்?

"பாரு...ரூ" அப்பா உற்சாகம் குரலில் துள்ள உள்ளே நுழைந்தார்.

"உங்கப்பா வந்துட்டார்!" — அம்மா பரபரக்கிறாள்.

"இந்தா பர்ஸ்ட் கிளாஸா அடிச்சிருக்கான் தட்டு. ரெண்டு பேர் பேரையும் ஒட்டச் சொன்னேன். அதை மறந்துட்டான்."

"போறது சமயத்துக்கு இப்பப் பொருள் கைக்கு வந்ததே! அதே போறும். அதைத்தான் சொல்லிண்டிருந்தேன் கௌரீட்ட."

அப்பா முறைக்கிறார். பட்டென்று என்னருகே வந்து உட்கார்ந்து கொள்கிறார்.

"குழந்தைகிட்டே என்னென்ன பேசறதுன்னு இனிமே நான் சொல்லித்தான் தெரியணும் உனக்கு. நீ எதுக்கும்மா கவலைப்

படறே. பிசியர்புல்! ப்ரெண்ட் நீலா வந்திருக்காப் போலிருக்கே? இன்னும் ஏதாவது வேணுமா உனக்கு! உனக்குத் தேவையான சாமான் ஏதாவது இருந்தாச் சொல்லு. சீனு நிக்கறான் சைக்கிளோட வாங்கிண்டு வரச் சொல்றேன்.''

தலையாட்டுகிறேன். ''ஒண்ணும் வேண்டாம்ப்பா! எல்லாம் இருக்கு!'' — என்கிறேன் குனிந்தபடியே. என்னால் நிமிர முடியாது. நிமிர மாட்டேன். நிமிர்ந்தால் அந்தக் கண்களில் இருக்கும் — ஓரமாக ஒதுங்கி யாருக்கும் தெரியாமலிருக்கும் அந்த வேதனையை என்னால் பார்க்க முடியாது. அந்த அவஸ்தையை ஜீரணிக்கும் சக்தி என்னிடம் இல்லை. முதுகை ஆதரவாய்த் தட்டுகிறார். வெள்ளித் தட்டு வந்தவுடன் கொஞ்சம் தெம்பு கூடியிருக்கிறது அப்பாவுக்கு.

''சரி! சம்மந்தி பேர்லாம் என்ன பண்றாங்கன்னு கவனிக்கறேன்! ம்! வேஷ்டியை மடித்துக் கட்டியபடியே விறுவிறுவென்று ஓடுகிறார் அம்மா பின்தொடர. பெண்ணைப் பெற்று விட்டால் இப்படித்தானா? சேமிப்பைக் கரைத்து, நாலு பேரிடம் பிச்சையெடுக்காத குறையாக கடன் வாங்கி, மாப்பிள்ளை வீட்டாரிடம் பேரம் பேசி குறைத்து, ராத்தூக்கம் இன்றி கவலைப்பட்டு இதெல்லாம் — இத்தனை வேதனைகளும் எதற்காக?



கல்யாணம்? இத்தனையும் பட வேண்டுமென்று கூட்டாயமா? நாற்பது நாற்பத்தைந் தாயிரம் கடனை எப்படி அடைக்கப் போகிறார்கள் இவர்கள்? கீழே நிற்பவர்களின் கதி? தலைசுற்ற இறுக்கி ஜன்னல் கம்பிகளைப் பற்றிக் கொள்கிறேன். வாசலிலிருந்து மேள சப்தம் வந்து மோதுகிறது காதுகளில்.

வெள்ளிக்கிழமை காலை.

அப்பாவின் மடியில் உட்கார்ந்திருக்கிறேன். என்னை ஆதரவாகப் பிடித்துக் கொண்டிருக்கும் அந்தக் கைகளைப் பார்க்கிறேன். கிளார்க்காக ஒரே சேரில் உட்கார்ந்து எழுதி எழுதித் தேய்ந்த விரல்கள் — பெண்ணைத் தானம் செய்வதற்காக என் கைகளைச் சேர்த்து பிடித்துக் கொண்டிருக்கின்றன. இந்தத் தானத்திற்கு புண்ணியமா கிடைக்கிறது? — எத்தனை பிடுங்கல்கள்? எத்தனை புண்கள். யாரோ என் தாவாங்கட்டையைப் பிடித்து நிமிர்த்துகிறார்கள்.

''போட்டோல அப்புறம் மூஞ்சியே தெரியாது.''

நிமிர்ந்தவள் கண்களில் முதலில் பட்டவள் அம்மா. நீலச் சின்னாளப்பட்டில் தன் ஆசைகளைக் குறுக்கிக் கொண்டு எதற்காகவோ சீனுவை விரட்டிக் கொண்டிருந்தாள். கழுத்தில் கவரிங் செயின்! ''எங்காவது போனா கழட்டி கழட்டி வச்சுட்டு போட்டுப்பேன். இனிமே எனக்கு என்ன?''

திடீரென்று கெட்டிமேளம்! கெட்டிமேளம்! என்று பல குரல்கள் ஒலிக்க திடுக்கிட்டு நிமிர்கிறேன். இரண்டு கைகள் மஞ்சள் கயிற்றை என் கழுத்தில் கட்டிக் கொண்டிருக்கின்றன மேள சப்தத்தோடு. அம்மா கண்ணீரைத் துடைத்தபடியே அட்சதையைத் தூக்கித் தூக்கிப் போடுகிறாள். அம்மாவின் செயினை சாஸ்திரிகள் கேட்க அதுவும் என் கழுத்திற்கு வருகிறது.

''தாலி முடிஞ்சதுக்கு எத்தனை வரும்படி!'' — யாரோ ஒரு குரல் பின்னால் கேட்க அம்பத்தொன்னு! — என் நாத்தனார் 'கீச்' குரலில் பளிச்சென்று சொல்ல,

''ப்பூ! பட்டுப்புடைவை கூட இல்லையா? ஒரே தங்கையாச்சே நீ? ஏன் விட்டே?'' — சண்டைக் கோழியாக அந்த பின்குரல் ஒலிக்க, 'பக்பக்' கென்று அடித்துக் கொள்கிறது.

''பகவானே! பட்டுப் புடைவைக்கு எங்கே போவார்கள். சாதாரணமாக இருந்தாலும் ஐநூறு ரூபா ஆகுமே. கடவுளே!'' புகையும் ஓமகுண்டத்தைப் பார்க்கிறேன் கண் கரிக்க.

''சம்மந்தி! முகூர்த்தக் காய்!''

''இதோ வந்துண்டே இருக்கு! எத்தனை வேணும்?''

''இதைக் கூட தலை எண்ணியா சொல்ல முடியும்? கொண்டாருங்க!''

வேஷ்டியைத் தூக்கிக் கட்டியபடியே வெற்றிலை பாக்கு வாயோடு அவர் 'வள்' ளென்று விழ அப்பா விழுந்தடித்துக் கொண்டு ஓடுகிறார். சீனுவும் அப்பாவுமாக தேங்காய் மூட்டையை இழுத்துக் கொண்டு வர அந்த மனிதர் நிதானமாய் வெற்றிலைக் காம்பை கிள்ளி விட்டு சுண்ணாம்பைத் தடவியபடியே,

''கொண்டு வந்துட்டீரா! அக்கா இப்பவே நாட்டுப்பொண்ணை மேல் ஜாகைக்கு அழைச்சுடலாங்கறா. அதனால தேங்காயை மேல மாடீல கொண்டு போட்டுடுங்கோ. அதோட சந்தனம், சர்க்கரை வகையறா.''

''பேஷா! இதோ ஒரு நொடீல.'' சாக்குப் பையின் காதோரத்தை பிடித்தபடி மாடியேறும் அப்பாவைப் பார்க்கிறேன். அப்பாவுக்கு மூட்டு வலி அதுவும் நேற்றிலிருந்து மாடிக்கு எத்தனை தடவை ஏறியிருப்பார். வெயிட்டையும் தூக்கிக் கொண்டு மாடியேறினால்... பத்மாவைக் கொண்டு போடச் சொல்லக் கூடாதா? — யாரோ வருகிறார்கள் பக்கத்தில் நின்று போட்டோ! ஏதேதோ பேசுகிறார்கள். வெறுமனே குனிந்தபடி சமயத்தில் சிரித்தபடி நிற்கிறேன் நான்.

இரவு மணி பத்து.

''எந்தப் புடைவையைக் கட்டிண்டிருக்க?'' அம்மா ஓடி வருகிறாள். இன்னமும் ஓட்டம் நிற்கவில்லை அவளுக்கு.

''பச்சைதானே? அதான் பளிச்சின்னு இருக்கும்! சித்தி, அம்மா, பெரியம்மா எல்லோரும் ஆளுக்கொரு கொத்தாக

---

இட்லிக்கு அரைக்கும் போது, முளை விட்ட கொத்துகடலை, பச்சைப் பயறு ஆகியவற்றைத் தனியாக மிளகாய், இஞ்சி, உப்பு, கொத்தமல்லி சேர்த்து அரைத்து தனியாகவே வைக்கவும். இட்லி வார்க்கும் போது, வாழை இலையில் இட்லி மாவு ஊற்றி ஐந்து நிமிடங்கள் வெந்ததும், எடுத்து பயறு — கடலை கலவையை மேலாக தடவி மேலும் 3 — 4 நிமிடங்கள் வேகவைத்து இறக்கவும். சூடாக சட்னியுடன் பரிமாறவும். வெகு சத்தான உணவு வகையாகும்.

— ஆனந்தி.



பூவைத் தலையில் செருகி, ''வா!'' உனக்கு சொல்ல வேண்டாம்! மனசுப்படி நடந்துக்கோ!''

''கிளம்பு என்று அழைத்துக் கொண்டு போகிறார்கள் மாடிக்கு. ஒரே பெண்கள் கூட்டம்.'' சாந்தி கல்யாணத்துக்குப் பட்டுப் புடைவை, வெள்ளி சொம்பு ரெண்டுமே கிடையாதா?''

அம்மாவின் தவிப்பு பதில் சொல்ல முடியாமல் முகத்தில் பிரதிபலிக்க சித்தி அசடு வழிய ரெடிமேடாக சிரிக்கிறாள். ''வந்து...!'' அவளும் என்ன சொல்வாள்?

''சொம்பு வேண்டாம். சரி! பட்டுப் புடைவை வாங்க வேண்டாமோ?'' மாத்துக் காவது உள்ளே புடைவை வச்சிருக்கா அதுவும் இல்லையா?'' இடக்காக ஒரு குரல்.

''அதெல்லாம் தட்ல முன்னாலேயே கொண்டு வச்சுட்டோம் மாமி!'' குனிந்திருந்தவள் கண்களில் அம்மாவின் கால்கள் அகப்பட எத்தனை வீக்கம்? புறங்கால் இரண்டும் பூரியாக உப்பியிருந்தது! தைலம் தடவி ஒத்த வேண்டும். தைல பாட்டில் கூட வீட்டில் காலிதான். அப்பாவின் தோள் பட்டை வலிக்குத் தடவி உருகி உருகி, போய் வீட்டில் என்ன பண்ணப் போகிறாளோ? பாவம்...

ஒரு கை தோள் பட்டையில் விழ நிமிர்கிறேன். யாரோ முன்பின் பார்த்திராத, அறிமுகமில்லாத அந்தக் கணவர். ஓ! அறைக்குள் வந்து விட்டேன். கட்டில் — மெத்தை இரண்டு தலைகாணியிலும் ஏழெட்டு மல்லிகைப் பூக்கள் தூவப் பட்டிருக்க...

''பூரா ரெண்டு மாசம் கேப் இருந்ததே நிச்சயம் பண்ணினப்புறம். என்னை எத்தனை தடவை நினைச்சுப் பார்த்திருப்பே? ம்!''

அவர் கேட்க முழிக்கிறேன்.

''இந்த ரெண்டு மாசமா எனக்கு ஒரே நினைவுதான். கௌரி! கௌரி! இந்த நாள். இந்த இரவு. நீ என்னென்ன கற்பனை பண்ணின? ம்! கமான்?''

காதருகே குரல் வர கோர்த்திருந்த விரல்களை உருவிக் கொள்கிறேன். நான் என்ன நினைத்துக் கொண்டிருந்தேன்? மூலையில கண்கள் எதேச்சையாக போக... அதே வெள்ளித் தட்டு. அப்பா, அம்மாவைக் கடைசி நிமிடம் வரை தவிக்கடித்த தட்டு. பால் தம்ளர். பால்! நிச்சயம் அம்மா பாலைக் குறைப்பாள். ஏன் ஒரேயடியாக நிறுத்தினாலும் நிறுத்தி விடுவாள்.

சட்டென்று கண்களை அகற்றி.. இதோ இதோ... செக்கச் செவேலென்று மின்னிக் கொண்டிருக்கும் வெல்வெட் மெத்தை... இந்த மெத்தை? மெள்ள குனிந்து கைகளால் தடவிப் பார்க்கிறேன். மெத்தென்று இல்லாமல் குத்துகிறது முள்ளாய். மெத்தை வாங்கிக் கொண்டு வந்த இரவு! அந்த இரவு... அப்பா சொன்னது இன்று போலல்லவா இருக்கிறது.

''பாரு! பணத்தை எடுத்துண்டு மெத்தை ஆர்டர் கடைக்குப் போனா யார்கிட்ட ஆர்டர் கொடுத்தேனோ அவன் இல்லை. இன்னொருத்தன் இருந்தான். பில் போட்டு கிழிச்சான். கைல பணம் குறைஞ்சது. நாளைக்கு கொண்டு தர்றேன்னா நம்ப மாட்டேன்ட்டான். சரி சகுனம்லா பார்த்துண்டு போனோம். அபசகுனமா எதுக்கு வெறுங்கையோட திரும்ப வீட்டுக்குச் சும்மா வருவானேன்னு இரண்டு கட்டடம் தள்ளி இருந்த ஆஸ்பத்திரிக்குப் போய் ரத்தம் குடுத்தேன்.''

''ரத்தம் கொடுத்தேளா?''

''ம்! அரை மணி உட்கார வச்சுட்டான் நம்ப மணி. அவன் கம்பவுண்டரா அங்கே தான் வேலை பண்றான். காப்பி வாங்கிக் கொடுத்தான். ஆஸ்பத்திரியிலே வாங்கின பணமும் போறாம சொச்சம் கொஞ்சம் அவன்கிட்டேயிருந்தும் வாங்கிப் போட்டுக் கொடுத்து மெத்தையைத் தூக்கிண்டு வந்தேன்.''

ரத்தம் சிந்திக்கூட இல்லை... ரத்தம் விற்று வாங்கிய மெத்தை இது! எனக்காக வாங்கின மெத்தை. 'டீ' டென்று குப்புற விழுந்து குலுங்கிக் குலுங்கி வாய் விட்டு அழுகிறேன் பெரிதாக. அறை வெளியில் பாட்டுச் சப்தம் நாலைந்து குரல்கள் இணைந்து பெரிதாகக் கேட்கிறது.



அப்பளத்தை பேப்பர் பஞ்ச் செய்யும் கருவி கொண்டு பஞ்ச் செய்தால் அப்பளம் பொட்டு பொட்டாக வந்து விழும். இப்படி விழும் பொட்டுக்களை ஒரு பெரிய பாட்டிலில் சேர்த்து வைத்துக் கொள்ளவும். மாலை நேரங்களில் திடீரென்று விருந்தினர்கள் வந்தால், எண்ணெயில் இந்த அப்பளப் பொட்டுக்களைப் போட்டுப் பொரித்தெடுக்கவும். அகன்ற தட்டில் இதைப் போட்டு, மேலே இலேசாக மிளகாய்த் தூள் உப்புத் தூள் தூவி நன்றாகக் கலந்து விட்டால் புது மாதிரியான பஞ்ச் அப்பளம் மொறு மொறுப்புடன் தயார். டீ, காப்பியுடன் திடீர் டிபன் ரெடி. (பஞ்ச் செய்யப்பட்ட ஒரிஜினல் அப்பளம் ஓட்டைகள் பலவாக அதைப் பொரித்தெடுத்தால், குழந்தைகளுக்குச் சாப்பாட்டுடன் கொடுத்துவிடலாம்.)

— ராபியா பஸரியா.

# மரங்களும் மலர்களும் தீபாவும்

— ருக்மிணி பார்த்தசாரதி

"டெல்லியே பரவாயில்லை. அங்கே குளிர்காலம் தீபாவளியோடு ஆரம்பிச்சு ஹோலிப் பண்டிகையோடு முடியறது. இந்த ஸிம்லாவிலோ ஜூன் மாசம் முதல் தேதி ஆரம்பிச்சு மே மாசம் முப்பத்தொன்றாம் தேதி முடியறது!'' என்றாள் பாட்டி.

பாட்டிக்கு அப்படியொன்றும் வயதாக வில்லை. ஐம்பத்தைந்துதான். கணவர் அவள் பெயருக்கு வைத்துவிட்டுப் போன சொத்து கணிசமாக இருக்கிறது. அவளே ஃபாஷன் ஸர்க்கிளைச் சேர்ந்தவளாக இருந் திருந்தால் நரைத்துவிட்ட தலைமுடியில் சாயம் பூசி, பூப்போட்ட நைலான் புடைவை கட்டிக் கொண்டிருக்கலாம். ஆனால் சம்பிர தாயங்களில் ஊறிப் போனவள் அவள். நூல் புடைவைதான், அதிலும் கலர் பளிச் சென்று கண்ணை அடிக்கிற மாதிரி உடுத்த மாட்டாள். காது, மூக்கு, கழுத்து எல்லாமே வெறுமை... பிள்ளை ராஜகோபாலனோடு இருப்பதுதான் கௌரவம் என்று நினைப் பாள்.

இந்தக் கதையில் அவளுக்குப் பாட்டி என் பதைத் தவிர வேறு பெயர் கிடையாது. பாட்டி என்றால் யாருக்கு? பேத்தி தீபா வுக்கு! தீபா ராஜகோபாலனின் மகள். பிள்ளை வழிப்பேத்தி! ஆகவே, அசல் பேத்தி! இவளைத் தவிர பாட்டிக்கு ஒரு பேரனும் பேத்தியும் கூட இருக்கிறார்கள் — ஆனால் அவர்கள் பெண்வழிப் பேரன் பேத்திகள் — அதாவது, பாட்டியின் மகள் பங்கஜாவின் குழந்தைகள். ஆகவே இரண் டாம் பட்சம்தான்.

பாட்டிக்கு நல்ல திடகாத்திரமான உடம்பு. தலைவலி, முதுகுவலி, என்றெல் லாம் படுக்க மாட்டாள். ஆனால் குளிர் தாங்காது. குளிர் காலத்தில் கை கால்களெல் லாம் ஐஸ் கட்டிகளாகச் சில்லிட்டுப் போகும். கால் விரல்கள் சிவந்து வீங்கிப் போகும். சற்றே அடிபட்டால்கூட வலியில் துடிதுடித்துப் போவாள். மாட்டுப் பெண் ஜானகி பார்த்துப் பார்த்து நல்ல 'உல்'லாக வாங்கித் தன் கையாலேயே கனமான ஸாக்ஸ் பின்னித் தருவாள். அதை அணிந்து கொண் டாலும் ஸாக்ஸுக்குள்ளும் கால் விரல்கள் சில்லிட்டே கிடக்கும். டெல்லியிலேயே இப் படிக் கஷ்டப்படுவாள். இரண்டு வருடங் கள் ஸிம்லாவில் இருக்க வேண்டும் என் றால் அது கொடுமைதானே!

முதன் முதலில் ராஜகோபாலன் தாயிடம் விஷயத்தைச் சொன்ன போது "என்னால் முடியாதுடா ராஜா! இந்த உடம்பு தாங் காது. அந்தக் குளிரில் காலிலும் கையிலும் ரத்தம் உறைஞ்சு போயே நான் செத்துப் போவேன்!'' என்றாள் பாட்டி.

"இரண்டு வருஷம்தான் அம்மா... அப்புறம் மறுபடியும் டில்லிக்கே மாற்றலா யிடும்... உனக்குத் திக்காக ஸ்வெட்டர் ஸாக்ஸ் வாங்கித் தர்றேன். ரூமுக்கு ரூம் நெருப்பு மூட்டி உஷ்ணப்படுத்தற வசதி அங்கே எல்லா வீடுகளிலேயும் இருக்குமாம். உனக்குக் குளிரே தெரியாது அம்மா!'' என் றான் மகன்.

பாட்டி மகனின் முகத்தைப் பார்த்தாள். அவனை இரண்டு வருடங்களுக்கு "டெபு டேஷனில்" அனுப்புகிறது அலுவலகம். சம்பள உயர்வு உண்டு. இதைத் தவிர, இந்த டெபுடேஷன் அவனுடைய உழைப்புக்கும் தகுதிக்கும் கிடைத்த வெகுமதி.

அடுத்து, பாட்டி தீபாவின் முகத்தைப் பார்த்தாள். "செல்லக் குட்டி, வெல்லக்

கட்டி,'' என்றெல்லாம் பாட்டி கொஞ்சிக் கொஞ்சிச் சீராட்டும் பேத்தி. ஆறு வயது நிறைந்த எழிலோவியம். ''பாட்டி! பாட்டி!'' என்று கழுத்தைக் கட்டிக் கொண்டு தொங்கும் பொற்சித்திரம். பாட்டி ஊட்ட உண்டு, அவள் தாலாட்ட உறங்கி, அவள் கதை சொல்ல லயித்து மகிழ்ந்து வளர்ந்த குழந்தை.

''தீபாவுக்கும் அங்கே நல்ல ஸ்கூல் இருக்கு அம்மா... இது கோடை விடுமுறைதானே? ஸ்கூல் திறந்தவுடனேயே சுலபமாக அட்மிஷன் கிடைச்சுடும்!'' என்றான் ராஜ கோபாலன்.

''பேசாமல் நீ ரெண்டு வருஷம் என் கூட இருந்துடு அம்மா! அண்ணா போயிட்டு வரட்டும்!'' என்று பிரச்னைக்குப் பளிச் சென்று விடை தந்தாள், பாட்டியின் பெண் பங்கஜா.

பாட்டியின் சம்பிரதாய உண்மை அதிர்ந்தது. என்ன! பெண் வீட்டில் தங்குவதா? தாயைத் தாங்கக் காத்திருக்கும் மகன் இருக்கும் போதா? மாமியாரைத் தாயாகவே நினைக்கும் மாட்டுப் பெண் இருக்கும் போதா? முக்கனியாக, சர்க்கரையாகத் தித்திக்கும் பேத்தி தீபாவை விட்டுப் பிரிவதா?

''நான் உன்னோடு வர்றேன் ராஜா... அதுதான் உனக்கும் நிம்மதி, எனக்கும் கௌரவம். ரெண்டு வருஷம் என்ன? நிமிஷமாய்ப் பறந்து போயிடாதா?'' என்றாள் பாட்டி.

''ரெண்டு வருஷமும் குளிர் காலத்துக்கு அம்மாவை என்னிடம் அனுப்பிடணும்!'' என்று தமையனிடம் வாக்குறுதி கேட்டாள் பங்கஜா.

''பார்க்கலாம்!'' என்றாள் பாட்டி.

ஆக, பாட்டி, பிள்ளை, மாட்டுப் பெண், பேத்தியோடு ஸிம்லாவில் அடி வைத்தாள்.

இது மே மாதம், குளிர் காலம் ஆரம்பிக்க இன்னும் நாலைந்து மாதங்கள் இருக்கின்றன. அதற்குள் இந்தச் சீதோஷ்ண நிலை பழகிவிடும் என்று கணக்குப் போட்ட பாட்டி முதல் நாளே தன் கணக்குத் தப்பு என்று தெரிந்து கொண்டாள்.

> புட்டு செய்வதற்குத் தேங்காய்க்குப் பதில் கொப்பரையைத் தூவிச் சேர்த்தால் புட்டு ருசியாக இருக்கும்.
>
> — இந்திரா.
>
> 

மாலை மங்க ஆரம்பித்ததுதான் தாமதம். காற்றில் குப்பென்று குளுமை நிறைந்தது. காலையில் டெல்லியின் உஷ்ணத்தில் வதங்கி விட்டு மகனின் காரில் நேரே இங்கு வந்து இறங்கிய பாட்டி, இந்த மாற்றத்தை எதிர் பார்க்கவில்லை. உடல் நடுங்க ஆரம்பித்த போது சட்டென்று தீபாவைப் பார்த்தாள். தனக்குக் குளிர் என்றால் குழந்தைக்கும் குளிருமே! பேத்தியை அருகே இழுத்து வாரி அணைத்துக் கொண்டாள்.

''நல்ல ஊரடியம்மா இது! மே மாசமே இப்படியானால் ஜனவரி எப்படி இருக்கும்?'' என்று தன் கவலையை வாய் விட்டுச் சொன்னாள் பாட்டி. ஜானகி முறுவலித்தவாறு இரண்டு ஸ்வெட்டர்களை தீபாவுக்கு அணிவித்தாள். ''இப்போதுதான் ரெண்டு மாசம் முன்பு இந்த ஸ்வெட்டரையெல்லாம் தோய்த்து உலர்த்தி மடிச்சுப் பெட்டிக்குள் வைத்தோம்.. கொஞ்ச நாள் இதன் தரிசனம் இல்லாமல் இருக்கலாம்னு பார்த்தால், இதோ மறுபுடியும் ஸ்வெட்டர் உடம்பில் ஏறியாச்சு!'' என்று அலுத்துக் கொண்டாள் பாட்டி.

வந்து இரண்டே மாதங்களில் பாட்டிக்கு ஸிம்லா பழகி விட்டது. குளித்த கையோடு ஸ்வெட்டர் அணிந்து கொள்வதும் பழகி விட்டது. ராஜகோபாலனின் கார் சாதுவாக ஒரு ஷெட்டில் உறங்கிக் கொண்டிருக்க, ஏழை பணக்காரன் என்ற வேறுபாடின்றி மலை ரோடுகளின் ஏற்றத்திலும் இறக்கத்திலும் காலாற நடக்க வேண்டிய நிர்பந்தம் கூட பாட்டிக்குப் பிடித்துப்போய் விட்டது. இயற்கை தன் அழகை இப்படி வாரி வாரிக் கொட்டியிருக்கும் இந்தப் பிரதேசத்தில், நிதானமாக, அந்த அழகை மெள்ள மெள்ள ரசித்துக் கொண்டே நடப்பதே இன்பமல்லவா!

தீபாவைப் பள்ளியில் சேர்த்து விட்டார்கள். பிற்பகல் மணி ஒன்றுக்கெல்லாம் அவள் பள்ளியிலிருந்து திரும்பி விடுவாள். அவசரமாக ஹோம்வொர்க், பின் ஏதாவது டிபன். அதன் பிறகு பாட்டியிடம் வந்து நிற்பாள்.

''ரெடியா பாட்டி?''

''ரெடிம்மா தங்கம்!''

ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு இருவரும் கிளம்பி விடுவார்கள், ''வாக்கிங்'' போக... ராஜகோபாலனோ ஜானகியோ உடன் வருவதும் உண்டு. ஆனால் அவர்களுக்கு வேறு பணிகள் இருந்தாலும், பாட்டி — பேத்தியின் ஜோடி இயற்கையழகைப் பருகக் கிளம்பி விடும்.

மனிதர்களிலும் தான் எத்தனை வகை! உதட்டிலும் கன்னத்திலும் சாயமும், கண்களுக்கு மையும் மாஸ்கராவும், தலையை விடப் பெரிய போலி மயிர்க் கொண்டையும், தழைய தழைய கட்டிய ஹிப்ஸ்டர் புடைவையுமான ''ஃபாஷன்'' சுந்தரிகள்; அவர்களு

ஆனால் ரோஜா நிறமல்ல. ''அசாத்திய வெளுப்போடு சிவப்பைச் சேர்த்துக் குழைத்த ஆண்டவன் எங்கே அந்த நிறத்தின் மீது கண் பட்டு விடுமோ என்று அஞ்சி ஒரே ஒரு சொட்டுக் கறுப்பையும் சேர்த்துக் கலந்து விட்டானோ?'' என்று நினைத்துக் கொள்வாள் பாட்டி.

இயற்கையின் அழகோ பாட்டியும் பேத்தியும் சமமாக ரசிக்கும் விஷயம். ஓங்கி வளர்ந்த பைன் மரங்களைப் பார்த்து, ''பாட்டி! ஒன்றையொன்று துரத்திக் கொண்டும் ஓடும் மேகங்களைப் பார்த்து, ''இது மேகங்களுக்குள் ரன்னிங் ரேஸ்! அதோ, அந்தப் பெரிய மேகம்தான் ஜெயிக்கும்!'' என்பாள். ''பாட்டி! இந்த மேகத்தைப் பார்த்தால் நம் மெத்தையிலிருக்கும் பஞ்சு மாதிரி இல்லை?'' என்பாள். ஒன்றுக்கொன்று மாறுபாடே இல்லாத மலை ரோடுகள்.. மேடுகளில் தடதடவென்று ஓடுவாள். பின் களைப்பில் மூச்சு வாங்க அப்படியே பொத்



நல்ல மாங்காயை, அலம்பி, தோல் சீவிச் சிறு சிறு துண்டங்களாக நறுக்கி இட்லி மாவுடன் கலந்து இட்லி வார்த்தால் பிடித்தமான புதிய ருசியுடன் இட்லி மிக நன்றாக இருக்கும்.

— பாக்யம் ஸ்ரீநிவாஸன்.

தென்று உட்காருவாள்.. சரிவில் சறுக்கு மரத்தில் விளையாடுவது போல் சறுக்கி விரைந்து உன்மத்தம் அடைவாள். ஓடி விளையாடிக் களைத்த பின் பாட்டியின் அரவணைப்பில் சுருண்டு கொள்வாள்.

ஒரு நாள் தீபா, ''பாட்டி, நாம் பார்த்த ரோஜாவின் கலரையெல்லாம் சொல் பார்க்கலாம்!'' என்றாள். சொல்லிக் கொண்டே வந்தாள் பாட்டி. ரத்தச் சிவப்பு, தீ நாக்கின் செம்மை, வெளிர் மஞ்சள், ஆழ்ந்த மஞ்சள், இளஞ்சிவப்பு, வெள்ளை, ஆரஞ்சு... சரி, இதுவரை சுலபம்தான்'' வெள்ளையில் சிவப்பு ரேகைகளையும் மஞ்சளில் வெள்ளைக் கோடுகளையும் எந்த வண்ணத்தில் சேர்க்கலாம்?'' என்று அவள் குழம்பிப் போன போது, ''பாட்டி! நீ தோத்துப் போயிட்டே! ரோஜாதான் ஜெயிச்சது!'' என்று தீபா கைகொட்டிச் சிரித்தாள்.

''ராஜா, ஜானகி இந்தப் பைன் மரம் இருக்கே, இதைச் சீராக வெட்டினால் வீடுகளுக்குத் தரை போடலாம். சிறு சிறு துண்டங்களாக நறுக்கினால் கரி அடுப்பை நிமிடத்தில் ஏற்றலாம். ''ஸில்வர் ஓக்'' மரத்தின் இலைகள் வெள்ளியும் பச்சையுமாகக் கண்ணுக்குத்தான் அழகு என்றில்லை... மாடு இதை எத்தனை ஆசையாய்ச் சாப்பிடறது தெரியுமா? மனுஷன் எப்படி இயற்கையோடு இணைஞ்சு வாழணும் என்கிறதுக்கு இதெல்லாம் எத்தனை அழகான உதாரணங்கள்!'' என்றாள் பாட்டி.

''ஸிம்லா வந்தப்புறம் உன் பேச்சே கவிதையாக இருக்கு அம்மா!'' என்றான் ராஜகோபாலன்.

''கவிதையா? என் பேச்சா? தீபாவின் கண்களைப் பார்.. அவள் இயற்கையின் அழகில தன்னை மறந்து ஆடும் நர்த்தனத்தில் பார்... கவிதையின் உண்மையான அர்த்தம் புரியும்!'' என்று பேத்தியை அணைத்து உச்சிமுகர்ந்தாள் பாட்டி.

மாதங்கள் செல்லச் செல்லக் குளிர் அதிகரித்தது. பாட்டியின் உற்சாகம் குறைந்தது.. சாதாரணமாக ''டீ'' என்றாலே முகம் சுளிப்பவள், ஏலக்காயும் இஞ்சியும் சேர்த்துக் கொதிக்க வைத்த தேனீரை ஜானகி கொடுக்கக் கொடுக்க சூடு மாறுமுன் வாய் வாயாகக் குடித்தாள்.... இதைச் சாப்பிட்டால் உடம்பில் கொஞ்சம் தெம்பு வருது! என்றாள். அம்மா! நீ காலுக்கு 'டபுள் ஸாக்ஸ்'' போட்டுக்கணும்... ''ஒன்றுக்கு மேல் ஒன்று'' என்றான் ராஜகோபாலன். பாட்டியின் பஞ்சு ''ரஜா''யின் உள்பக்கம் கம்பளியை வைத்துத் தைத்துக் குளிருக்கு அடக்கமாகப் போர்த்திக் கொள்ளக் கொடுத்தாள் ஜானகி. பாட்டியும் தன்னால் இயன்றவரை முயன்று பார்த்தாள். ஆனால் குளிரில் கைவிரல்கள் விரைத்துப் போயின. கால்விரல்கள் சிவந்து வீங்கின.. நாளெல்லாம் வெயிலில் உட்கார்ந்திருந்தாள் பாட்டி. சற்றே மேக மூட்டம் தோன்றினாலும் உள்ளே வந்து ரூம் ஹீட்டர் முன் அமர்ந்தாள். மாலையில் ''ஃபயர் ப்ளேஸில்'' கரிகளை அடுக்கித் தகதகவென்று நெருப்பு மூட்டினான் ராஜகோபாலன். அதற்குமுன் உட்கார்ந்து குளிர் காய்ந்தாள் பாட்டி. இருந்தும் நவம்பருக்குமேல் அவளால் சமாளிக்க முடியவில்லை.

தாயை அழைத்துக் கொண்டு டெல்லி சென்று பங்கஜாவின் இல்லத்தில் விட்டு விட்டு வந்தான் ராஜகோபாலன். ''தீபாவை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்!'' என்று கிளிப்பிள்ளையைப் போல் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே இருந்தாள் பாட்டி.

சாதாரணமாக டெல்லியில் மார்ச் மாதம் முடியுமுன் பாட்டியின் பாதங்களில் வீக்கம் வடிந்துவிடும்... பழையபடி பாதம் ஊன்றி நடக்க ஆரம்பித்துவிடுவாள்.. நிறம் மாறிக்

கருத்தும் சிவந்தும் விகாரமாகி விட்ட பாதங்கள் பழைய ஆரோக்கிய நிலையை அடைந்துவிடும்.

மார்ச் பிறந்தவுடனேயே பாட்டி கடித மெழுதி நச்சரிக்க ஆரம்பித்து விட்டாள்.. ''ராஜா... சீக்கிரம் வந்து என்னை அழைத்துக் கொண்டு போ! பெண் வீட்டில் எத்தனை நாள் தங்கமுடியும்? நன்றாகவா இருக்கிறது? என் கால் கைகளில் இப்போது வலி இல்லை. கண்தான் தீபாவைப் பார்க்காமல் பூத்துப் போய்விட்டது!''

''மார்ச் முடியட்டும்!'' என்று ராஜகோபாலன் பதிலெழுதினான். அப்படியே, மாதம் முடிந்ததும் டெல்லி சென்று தாயை அழைத்து வந்தான். பெண் வழிப் பேரக் குழந்தைகளிடம் சிரித்த முகத்தோடு விடை பெற்றுக் கொண்ட பாட்டி ஸிம்லா வந்து தீபாவைக் கண்டதும் வாரி அணைத்து உணர்ச்சி வசப்பட்டுப் போனாள்!

ஸிம்லாவில் குளிர் காலம் ஜூன் முதல் தேதி ஆரம்பித்து மே முப்பத்தொன்றாம் தேதி முடிவடைவதாகப் போன வருஷம் சொன்ன பாட்டி இப்போது வேறு விதமாக எண்ணலானாள். ஸிம்லாவில் கோடைக் காலம் ஆரம்பமாகப் போகிறது. ''ஸம்மர் இன் ஸிம்லா!'' அவளும் தீபாவுமாகக் காலாற நடந்து இயற்கை எழிலை ஆசைத் தீரப் பருகலாம். ஆஹா! வேறென்ன வேண்டும்?

ஆனால் அந்த வருஷம் இயற்கை ஏமாற்றத்தைத் தந்தது.

ஏப்ரல் மாதத்தில் மழை பெய்தது..

நீலமாக, நிர்மலமாக இருக்க வேண்டிய வானத்தில் மேகத் திரள்களைக் கண்ட போது பாட்டி உற்சாகமிழந்து போனாள். உள்ளூர் வாசிகளுக்கே இது அதிசயமாக இருந்தது. ''ஏப்ரலில் மழை பெய்யக் கூடாதே!'' என்றார்கள். ''ஒரு வேளை இந்த வருஷம் ஸம்மரே இருக்காதோ?'' என்றார்கள்.

நாள் மேல் நாளாக நகர்ந்தது.. தீராத, மீளாத மேக மூட்டம். வானத்துக்கு என்ன ஆகிவிட்டது? இயற்கைக்கு யார் மீது கோபம்?

மே, ஜூன், ஜூலை... மழை விட்ட பாடில்லை... மழையென்றால் சடசட வென்று பெய்து ஓய்ந்துவிடும் ஆக்ரோஷமான மழையும் இல்லை. வீட்டுக்குள்ளிருந்து வெளியே உலகைப் பார்த்துப் பார்த்துத் துக்கித்தாள் பாட்டி... உலகமே சாம்பல் பூத்தாற் போல் எங்கும் மேகங்கள். ஏதோ ஓர் அரக்கன் மேகங்களாக உருமாறி மரங்கள், இலைகள், தெருக்கள், கட்டடங்கள் எல்லாவற்றையுமே விழுங்குவது போல் இருந்தது.

''பாட்டி! எங்கே பார்த்தாலும் மேகங்களாகவே இருக்கே? சூரியன் எங்கே?'' என்றாள் தீபா.

''அதைத்தான் நானும் தேடறேன் கண்ணம்மா!'' என்றாள் பாட்டி... பாட்டி! நீ ஒரு கதை சொல்லியே, நினைவிருக்கா? காத்தும் சூரியனும் யார் பலசாலின்னு பார்க்க ''பெட்'' வச்சுதாம். தெருவில் போய்க் கொண்டிருந்த மனுஷனின் கோட்டை யார் கழற்ற வைக்கிறார்களோ, அவர் தான் பலசாலி... காத்து அடிக்க அடிக்க மனுஷன் கோட்டை இன்னும் கெட்டியாய் பிடிச்சுண்டானாம்.. ஆனால் சூரியனின் வெயில் தாங்காமல் கோட்டை எடுத்துப் போட்டானாம். அதனால் சூரியன் தான் பலசாலி....இல்லையா, பாட்டி?''

''ஆமாம்!''

''பின்னே ஏன் சூரியன் மேகத்துக் கெதிரே தோத்துப் போறது?''

இந்தக் கேள்விக்கு என்ன பதில் தரமுடியும்? ''என்ன புத்தியடியம்மா உனக்கு! என் சமர்த்துச் செல்லச் சூடிகைத் தங்கம்!'' என்று பேத்தியைக் கொஞ்சத்தான் முடிந்தது பாட்டியால்.

''உடைந்த கை, கால்களை வைத்துக் கொண்டு வாழ்க்கையில் உயர முடியும். ஆனால் உடைந்த உள்ளத்தை வைத்துக் கொண்டு உழைக்க முடியாது, வாழ்க்கையில் உயர முடியாது.''

— யாரோ

— ரமா ராமநாதன்.



நாட்கள் நகர்ந்தன. இரவு பகல் என்றில்லாமல், வானம் பூமி என்று பாராமல், எங்கும் எப்போதும் மேக மூட்டம். ஜன்னல்களைத் திறந்தால் மேகங்கள் வீட்டுக்குள்ளும் பிரவேசித்தன. மூடியே வைத்தால் வீடெல்லாம் தேங்கி நின்ற நீர்த்துளியின் நாற்றம்... வீட்டின் தரைகள், மேஜை நாற்காலிகள் அனைத்திலும் மக்கிப்போன மரத்தின் நாற்றம். ''இன்றாவது மழை பெய்யும், பெய்துவிட்டு நின்றுவிடும்... இந்த மேகங்கள் இப்படி மழையையும் தராமல் விலகியும் போகாமல் ஏன் சண்டித்தனம் செய்கின்றன?'' என்று நினைத்துச் சோர்ந்து போனாள் பாட்டி.

ஆகஸ்ட் மாதத்தில், வானத்தில் பெரிது பெரிதாய் ஓட்டைகள் விழுந்தாற்போல் நீர் கொட்ட ஆரம்பித்தது... கருமேகங்கள் வானத்தை நிறைத்தாலும், மரங்களும், மலர்களும், தெருக்களும், கட்டடங்களும் மேகச் சிறையிலிருந்து விடுபட்டாற்போல் ஆனந்த


நினைவிருக்கட்டும், ஊட்டச்சத்துமிக்க சமநிலை
உணவு இல்லையேல், உங்கள் குழந்தை
சுறுசுறுப்பாக விளங்கத்தேவையான 'சரி' யான
கலோரிகளைப் பெறமுடியாது.
"ஆகவேதான் என் குழந்தைக்கு
ஸெரிலாக் தருகிறேன்."
'சரி'யான கலோரிகள் என்றால் என்ன?
நாம் உண்ணும் உணவில் புரதங்கள், கார்போஹைட்ரேட்டுகள் மற்றும் கொழுப்புச் சத்துகள் சரியான சமநிலையில் இருந்து, அவற்றிலிருந்து கிடைக்கும் கலோரிகளுக்குத்தான் 'சரி'யான கலோரிகள் என்று டாக்டர்கள் கூறுகின்றனர். இளம் குழந்தைகள் நன்கு வளரவும் சுறுசுறுப்பாக விளங்கவும் இந்த மூன்று முக்கியமான உணவுச்சத்துகள் அவசியம்.
எனவே, உங்கள் செல்லக் குழந்தை 'சரி'யான கலோரிகளைப் பெறுவதற்கு, நீங்கள் ஊட்டச்சத்துமிக்க சமநிலை உணவை அதற்கு அளிக்கவேண்டும்.
ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வேளை உணவிலும் இவை தேவை.
ஆனால், குழந்தைகளுக்கு வழக்கமான உணவுகளைக் கொடுத்து, கலோரிகளை சமநிலைப்படுத்துவது பெரும்பாலான தாய்மார்களுக்கு எளிதல்ல.
இதற்குப் பரிகாரம் உண்டா?
உண்டு. ஸெரிலாக்–ஊட்டச்சத்துமிக்க சமநிலை திடஉணவு.
உங்கள் குழந்தைக்கு பால் மட்டுமே போதாதபோது, அதன் நான்காவது மாதம் முதலே ஸெரிலாக் தாருங்கள்.
ஸெரிலாக்கில் புரதங்கள், கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்புச் சத்துகள், வைட்டமின்கள், இரும்புச் சத்து, மற்றும் கால்ஷியம் அடங்கியுள்ளன. ஆகையால், உங்கள் குழந்தை 'சரி'யான கலோரிகளைப் பெற்று, சுறுசுறுப்புடன் வளரும்; சுவையான ஸெரிலாக்கை ருசித்துச் சாப்பிடும்.
எனவே, ஸெரிலாக்கில் அடங்கியுள்ள ஊட்டச்சத்துமிக்க சமநிலை உணவின் நற்பலன்களை உங்கள் குழந்தைக்குக் கொடுங்கள். குழந்தைக்கு 6 மாதம் ஆனதும், ஸெரிலாக்கைத் தவிர விட்-ஆப்பிள், விட்–ஆரஞ்சு மற்றும் விட்-வெஜிடெபிளின் நற்பலன்களையும் அளிக்கவும்.
பேக்கின் மீதுள்ள விதிமுறைகளைப் பின்பற்றுக.
இலவசம்: ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக், தபால் பெட்டி எண். 21, புது தில்லி-110029.
Nestle Cerelac
Wheat
Nestle Cerelac
Wheat
உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்.

மாக மழைநீரில் குளித்தன. பாட்டி மகிழ்ந்தாள். தீபாவை மடிமேல் அமர்த்திக் கொண்டு நீராகவும் நீர்க் கட்டிகளாகவும் பெய்த மழையின் அழகை ஜன்னல் வழியே கண்டு களித்தாள். கண்ணாடி ஜன்னல் மீது நீர்க் கட்டிகள் பட்பட்டென்று விழுந்த போது தீபா, ''பாட்டி, மழை நம் ஜன்னல் மேல் தபலா வாசிக்கிறது, இல்லை?'' என்றாள். இந்த உபமானத்தைக் கேட்டுச் சொக்கிப்போன பாட்டி குழந்தையை இறுக அணைத்துக் கொண்டாள்.

''மழை ஆசை தீரப்பெய்கிறது, இனி ஓய்ந்து விடும். கதிரவனின் கிரணங்கள் உலகுக்கு மெத்தென்று ஒத்தடம் கொடுக்கும்'' என்று கற்பனை செய்தாள் பாட்டி.

ஆனால் மழை விடவில்லை. நாள்மேல் நாளாகப் பெய்தது. பிரளயகாலமே வந்து விட்டதுபோல் சீற்றத்தோடு பெய்தது. கல்லூரிகள், பள்ளிகள் அனைத்தும் மூடப் பட்டுவிட்டன... இந்த மழையிலும் அலுவலகம் சென்று வந்தான் ராஜகோபாலன். மழையினால் ஏற்பட்ட நாசத்தைப் பற்றிக் கதை கதையாகச் சொன்னான். ஆங்காங்கே மலை ரோடுகள் விண்டு பாதாளத்தில் விழுந்து விட்டன. ஏழை மக்களின் வீடுகளில் பற்பல மழையில் நனைந்த தீப்பெட்டிகள் போல் நசுங்கிவிட்டன... நூற்றுக் கணக்கானவர் தம் உடமைகளை இழந்தனர். வயோதிகர்களும் குழந்தைகளும் மழை நீரோடு அடித்துச் செல்லப்பட்டனர். போக்குவரத்து ஸ்தம்பித்து விட்டது.

செப்டம்பர் மாதத்தில் தான் மழை விட்டது. பள்ளிகள் திறந்தன. தீபா புத்தகப் பையை முதுகின் மேல் ஏற்றிக் கொண்டு பள்ளிக்கு விரைந்தாள். ஆனால் மாலை வேளைகளில் பாட்டியோடு வாக்கிங் போக வில்லை. பாட்டிக்கு நல்ல ஜலதோஷம், லேசாக ஜுரம். இவை வாரக்கணக்கில் நீடிக்கவே பயந்துபோய் ''ஸ்பெஷலிஸ்டிடம்'' காண்பித்தான் ராஜகோபாலன். அவருடைய யோசனைப்படி அக்டோபர் மாதத்திலேயே தாயை டெல்லி அழைத்துச் சென்று சகோதரியின் இல்லத்தில் விட்டு விட்டு வந்தான்.

பிப்ரவரி மாதத்திலிருந்தே பாட்டி மகனுக்குக் கடிதம் எழுதித் தொணதொணக்க ஆரம்பித்துவிட்டாள். ''ராஜா! இந்த வருஷம் எனக்குக் கை கால் வீக்கமெல்லாம் லேசாகத்தான் வந்தது. இப்போதே வடிந்து போய்விட்டது. ஜலதோஷம், சளி, ஜுரம் எதுவும் அடியோடு இல்லை. நாளெல்லாம் தீபாவின் நினைவாகவே இருக்கிறது. சீக்கிரம் வந்து என்னைக் கூட்டிக் கொண்டு போ!''

தீபாவோ தன் பங்குக்கு, ''பாட்டியை சீக்கிரம் வரச் சொல்லு, அப்பா...'' ஸ்னோ ஃபால்'' எத்தனை அழகு! இதைப் பாட்டி மடியில் உட்கார்ந்து பார்த்தால் ஜம்முனு இருக்கும்! என்று நச்சரித்தாள்.

மார்ச் மாதம் பிறந்தவுடனேயே தாயை அழைத்துக் கொண்டு வந்தான் ராஜகோபாலன். வருமுன் பங்கஜாவிடம், ''இந்த ஸம்மரோடு ஸிம்லாவில் என் டர்ம் முடியறது... நீங்கள் எல்லாரும் அதற்குமுன் ஒரு ட்ரிப் அங்கே வாருங்கள்!'' என்று அழைத்து விட்டு வந்தான்.

மார்ச் மாதத்தில் பனி பெய்யாது, தன் தாயைக் குளிர் வாட்டாது என்றுதான் கணக்குப்போட்டான் ராஜகோபாலன். ஆனால் பாட்டி ஸிம்லா வந்திறங்கிய மறுநாளே ''ஸ்னோ ஃபால்'' தன் அழகை அந்தப் பரம ரசிகைக்குக் காட்டிற்று.

மாசு மறுவற்ற பளீர் வெள்ளை நிறத்தில் பஞ்சு போன்ற 'ஸ்னோ' துளி சிறந்த ''பாலே'' நடனக் கதாநாயகியின் லாகவத்தோடு வானத்திலிருந்து பூமியில் மெத்தென்று வந்திறங்கி, மரங்களையும் செடிகளையும் வீடுகளின் சரிந்த கூரைகளையும் வெண் போர்வையால் போர்த்திற்று... சற்று நேரத்தில் வானத்தில் கதிரவன் தோன்ற, அந்த உஷ்ண ரேகையில் வெள்ளைப் போர்வை சற்றே உருகி நீராக, நீரின் ஒவ்வொரு துளியும் கதிரவனின் ஒளி பட்டு வானவில்லின் அற்புத வண்ணங்களைப் பளீர் பளீரென்று வீசிய காட்சியின் அழகே அழகு!

அதன் பிறகு பல நாட்கள் வானம் நீல மாக, மேகங்களின் சுவடே இல்லாமல் இருந்தது. பாட்டி ஆசை தீர வெயிலில் குளிர் காய்ந்தாள். வெள்ளைப் பனிப் போர்வை மெள்ள மெள்ள உருகிச் சின்னஞ்சிறு ஆறுகளாக ஓடும் நளினத்தைப் பார்த்தாள்.. மரங்களின் இலையற்ற கிளைகள் மெள்ள மெள்ள உயிர் பெற்று, மஞ்சளாகவும், இளஞ்

பக்கோடா செய்பவர்கள் சிலர் வெங்காயம் சேர்க்க மாட்டார்கள். அப்படி வெங்காயம் வேண்டாம் என்பவர்கள் பொடிப் பொடியாய் அரிந்த முட்டை கோஸை பக்கோடா மாவில் கலந்து செய்தால் வெங்காயம் சேர்த்தாற்போல் இருக்கும். ருசியாகவும் இருக்கும்.

— இந்திரா.



சிவப்பாகவும், பின் பச்சையாகவும் துளிர் விடும் காட்சியைக் காணக் காண அலுக்கவே இல்லை.

மாலை வேளைகளில் பாட்டியும் பேத்தியுமாக வாக்கிங் போகும் வழக்கத்தைத் தொடர்ந்தார்கள். இயற்கை அழகைத் தனியாகக் கண்டு களிக்கலாம்: அதுவும் இன்பம் தான். ஆனால் தன்னைப் போலவே அதில் இதயத்தைப் பறிகொடுக்கும் மற்றொரு மனிதப்பிறவி உடனிருந்தால், அந்த இன்பம் பன்மடங்காகி விடுகிறது... அந்த மனிதப்பிறவி உயிருக்குயிரான பேத்தியாகவே கொஞ்சிக் கொஞ்சிச் சீராட்டும் பாட்டியாகவே இருந்து விட்டால், பின் கேட்க வேண்டுமா?

பள்ளிகளில் கோடை விடுமுறை ஆரம்பமாகிவிட்டது. பங்கஜா தன் மக்களோடு ஸிம்லா வந்து விட்டாள். தினமும் எல்லோருமாகக் காலாற நடந்து செல்வது வழக்கமாகி விட்டது. கடைகள் கொண்ட ''மால்'' ரோடு, லோவர் பஜார்.... ஒரு தடவை ஜாகோ மலைமீதிருந்த கோயிலைக் கூட தரிசித்துவிட்டு வந்தார்கள். இது ஹனுமான் கோயில். லஷ்மணனின் உயிரைக் காப்பாற்ற சஞ்சீவினி மலையோடு திரும்பிய ஹனுமான் இந்த மலை உச்சியில் அடி வைத்துக் கண நேரம் இளைப்பாறியதாக ஐதீகம்.

''இங்கே இருப்பவர்கள் யாருமே ரெட்டை நாடியாக இல்லையேன்னு பார்த்தேன்... இப்படிச் சதா மலை ரோடுகளில் ஏறிக் கொண்டும் இறங்கிக் கொண்டும் இருந்தால் உடம்பு எப்படிச் சதை போடும்?'' என்றாள் பங்கஜா.

''அது . மட்டுமில்லை. எல்லோருமே வயசுக்கு ஒவ்வாத இளமையோடும் ஆரோக்கியத்தோடும் இருக்கிறார்கள் பார். இதற்கும் இந்த மலை ரோடுகளும் மரங்களும் மலர்களும்தான் காரணம்!'' என்றாள் பாட்டி.

''அம்மாவுக்குச் சிம்லா பைத்தியம் தலைக்கேறிவிட்டது!'' என்றாள் பங்கஜா, முறுவலித்தவாறு.

''ஆமாம்... இன்னும் சில நாளில் இந்த அழகையெல்லாம் விட்டுவிட்டுப் போகணுமேன்னு வருத்தமாய் இருக்கு!'' என்றாள் பாட்டி.

ராஜகோபாலன் அலுவலகத்தில் சார்ஜ் ஒப்படைத்து விட்டான்... ஸிம்லாவில் அவனுடைய வேலை முடிந்துவிட்டது. பெரும்பாலான சாமான்களையெல்லாம் லாரியில் ஏற்றி டெல்லிக்கு அனுப்பி விட்டார்கள். பங்கஜா தன் மக்களோடு டெல்லி திரும்பி விட்டாள். இன்னும் ஒரு வாரத்தில் பாட்டி தன் பிள்ளை மாட்டுப் பெண்ணோடும் செல்லப் பேத்தியோடும் ஸிம்லாவை விட்டுக் கிளம்பிவிடுவாள்.

''இன்னும் ஒரு வாரம்தானா, பாட்டி? ஒரே வாரம் தானா?'' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்த குழந்தையை எப்படிச் சமாதானப்படுத்துவது என்று பாட்டிக்குத் தெரியவில்லை.



வீட்டுத் தோட்டத்தில் மிளகாய்ச் செடி பூத்துக் குலுங்குகிறது. ஆனால் ஒரு காய்கூட காய்ப்பதில்லை என்று சலிப்பவர்களுக்கு இதோ ஓர் ஐடியா. பூக்கள் பூத்திருக்கும் போது சிறிது சர்க்கரை அல்லது வெல்லம் கலந்த தண்ணீரைச் செடியில் தெளித்து விடுங்கள். வண்டுகள் பூவை மொய்த்துவிடும். அத்தனை பூக்களும் காயாகிவிடும். இது என் அனுபவத்தில் கண்ட உண்மை.

— பிரேமா ராமலிங்கம்.

அன்று ராஜகோபாலனுக்கும் ஜானகிக்கும் ஒரு ''ஃபேர்வெல் பார்ட்டி'' அவர்கள் கிளம்பியவுடனேயே பாட்டியும் தீபாவும் வாக்கிங் கிளம்பினார்கள்.. ''பாட்டி! இன்னிக்கு என செல்ல ரோடில் போகலாம்!'' என்றாள் தீபா. அவள் அப்படிக் குறிப்பிட்டது இருபுறமும் மரங்கள் காவலர் போல் வளர்ந்து நிற்கும் ரோடு... மரக்கிளைகளில் குரங்குகள் தாவித் தாவிக் களிக்கும் வாலினால் தொங்கி வேடிக்கை காட்டும்.

''என் கையைக் கெட்டியாய்ப் பிடிச்சுண்டால் போகலாம்!'' என்றாள் பாட்டி. தீபா உடனே அவள் கையைப் பிடித்துக் கொண்டாள்.

ஓங்கி வளர்ந்த பைன் மரங்கள். இவற்றுக்குத்தான் ஆண்டவன் எத்தகைய கம்பீரத்தை அளித்து விட்டான்! காற்றில் அவை அசைந்தாடும் ஆட்டத்தில் நளினம், கூடவே உன்மத்தம்... அவற்றின் நறுமணமே அவர்களை அணைத்துக் கொள்வது போல் இருந்தது.. ஆங்காங்கே வீடுகள். வீட்டின் தோட்டக் கதவுகள் கான்க்ரீட் கம்பங்களுக்கு நடுவே பொருத்தப்படாமல் இரு பெரும் மரங்களுக்கிடையே பொருத்தப்பட்டிருப்பது இங்கு சாதாரணக் காட்சி. வீட்டில் வசிப்பவரின் பெயர்ப் பலகையும் தபால் பெட்டியும் கூட மரங்கள் மீதே பொருத்தப்பட்டிருந்தன.

நின்று நின்று நடப்பதும், தலையை நிமிர்த்தி மரங்களைப் பார்ப்பதும், ''பாட்டி! இந்த மரம் என்ன உயரம் இருக்கும்? ஆயிரம் அடி இருக்குமா?'' என்று கேட்பதுமாக உடன் வந்தாள் தீபா. ''பாட்டி, அதோ பார்! அந்தப் பறவை எனக்கு 'ஹலோ' சொல்லறது!'' என்று விட்டு, ''ஹலோ லிட்டில் பர்ட்! எனக்கும் என் பாட்டிக்கும் டாடா

சொல்லு! நாங்கள் ஊருக்குப் போகிறோம்!" என்றாள்.

எதிர் பாராமல் பத்தே நிமிடங்களில் நிர்மலமாக இருந்த வானத்தை மேகத்திரை மறைத்துக் கொண்டது. உலகெங்கும் கருமை படர்ந்தது... பாட்டி தீபாவை இழுத்துக் கொண்டு ஒரு வீட்டின் வராந்தாவில் ஒதுங்கினாள்.... பார்த்துக் கொண்டிருந்த போதே கோலிக் குண்டுகளாய்ப் பனிக்கட்டிகள் கொட்டி பூமியை வெள்ளைப் பொட்டுக்களால் அலங்கரித்துவிட்டன. பின், பத்து நிமிடங்கள் நல்ல மழை... அரை மணிக்குள் வானம் மறுபடியும் நீலமாய், சாதுவாய், ''நானா மழையைக் கொட்டினேன்?'' என்று கேட்பதுபோல் காட்சி தந்தது.

பாட்டியின் கையைச் சட்டென்று உதறி விட்டு தீபா ஓடினாள்.... கரைய ஆரம்பித்து விட்ட பனிக்கட்டிகளைப் பொறுக்கி உள்ளங்கையில் ஏந்தி, அங்கே அவை முழுவதுமாகக் கரைவதைப் பார்த்துக் கலகலவென்று சிரித்தாள். மழையில் நனைந்த மரங்களின் கிளைகளிலிருந்தும், இலைகளிலிருந்தும் நீர் அவள் மேல் வர்ஷித்தது... ஆடைகள் முழுமையாக நனைந்து உடலோடு ஒட்டிக் கொண்டன. சில்லென நீர் தலை முடியிலிருந்து சொட்டத் தொடங்கிவிட்டது. பாட்டி பதறிப் போய் விட்டாள். குழந்தையின் கையைப் பிடித்துக் கொண்டு வீட்டுக்கு விரைந்து வந்தாள். நனைந்த உடைகளைக் களைந்து உடம்பைத் துடைத்து மாற்றுடை அணிவித்தாள். தலைமுடியை ஈரம் போகத் துவட்டிவிட்டாள். சூடாகப் பால் சாதம் பிசைந்து எடுத்து வந்து ஊட்டி விட்டாள். பின், படுக்கச் சொல்லி ரஜாயினால் போர்த்திவிட்டாள்.

தீபாவுக்குத் தனி அறை... அவள் மூன்று வயதாக இருந்தபோதிலிருந்தே ''டிஸிப்ளின் வேண்டும்'' என்று அவளுடைய பெற்றோர் செய்த ஏற்பாடு இது.

அடுத்த அறை பாட்டியினுடையது.

தன் உடைகளும் உடம்பும் கூட நனைந்து சில்லிட்டு போயிருந்ததை அப்போதுதான் கவனித்தாள் பாட்டி... தானும் மாற்றுடை அணிந்து கொண்டாள்.

விருந்துண்ணச் சென்ற ராஜகோபாலனும் ஜானகியும் ஒன்பதரை மணிக்குத் திரும்பினார்கள். தீபா இதற்குள் உறங்கிப் போயிருந்தாள். பாட்டி தன் வழக்கப்படி ஒரு வாழைப்பழமும் ஒரு தம்ளர் மோருமாகத் தன் இரவுச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு படுத்துக் கொண்டாள்.

உடலெல்லாம் அசாத்திய அசதி. பலமெல்லாம் கழன்று விழுந்து விட்ட மாதிரி இருந்தது.

மெள்ள மெள்ள, உடலில் உஷ்ணம் ஏறிற்று. நல்ல ஜுரம்.. மணி பதினொன்றடித்து ஓய்ந்தது. ஆழ்ந்த உறக்கத்திலிருந்த மகனையும் மருமகளையும் எழுப்பித் தொந்தரவு செய்ய விரும்பாமல் பாட்டி படுத்திருந்தாள்.

ஜுரம் ஏற ஏற உணர்வுகள் மங்கின. அரை மயக்க நிலை..

அப்படி, மயக்க நிலையில் அவள் இருந்திராவிட்டால், தீபா சற்றே முனகுவதையும், நேரம் செல்லச் செல்லக் குழந்தைக்கு மூச்சு விட்டு விட்டுத் தடைபட்டு வருவதையும் தன் அறையிலிருந்து செவியுற்றிருப்பாள், கட்டாயம்.

மறுநாள் காலை கூட பாட்டியின் உடம்பு அனலாகத் தகித்துக் கொண்டுதான் இருந்தது. கண்களைப் பிரிக்க முடியாமல் சோர்ந்து, துவண்டு, படுத்திருந்தாள்.

தீபாவின் உடம்பு சில்லிட்டுப் போயிருந்தது.

பாட்டியின் புலம்பல் ஓயவே இல்லை. ''நான் இல்லையா கிழவி? மரங்களையும் மலர்களையும் தீபாவைப் போலவே நானும் நேசிக்கலையா? ஒரு பலிதான் வேண்டும் என்றால் என்னை எடுத்துக் கொண்டு போயிருக்கலாமே!'' முகத்திலும் கண்களிலுமாக அடித்துக் கொண்டே துயரம் வற்றாமல் அழுது கொண்டே இருந்தாள் பாட்டி.

இந்த அழுகை இனி அவள் வாழ்நாள் முழுவதுமே ஓயாது. வாய்விட்டு அழுவதை அவள் நிறுத்தினாலும் கூட, இயற்கையின் மடியிலேயே நிம்மதியாக உறங்கிவிட்ட முக்கனியான சர்க்கரையான செல்லப்பேத்தியை நினைத்து அவள் இதயம் மௌனமாக அழுது கொண்டுதான் இருக்கும்.

---

இயற்கை நமக்கு அளித்துள்ள இனிய பானங்களில் ஒன்று பதநீர். இது மிகச் சிறந்த ஓர் டானிக் என்றே சொல்லலாம். காலையில் எழுந்தவுடனே, பதநீர் கிடைக்கும் பருவங்களில் காப்பி சாப்பிடுவதை விட்டொழித்து, வெறும் வயிற்றில் இரண்டு தம்ளர் பதநீர் அருந்தி வரும் பழக்கத்தை மேற்கொள்ளுவது மிகவும் நல்லது. இதனால் உடலில் உள்ள சூடு தணிகின்றது. சுறுசுறுப்பு உண்டாகின்றது. மலச்சிக்கல் மறைகின்றது. உடலுக்கு நல்ல வலிமையும், சருமத்திற்கு ஒரு மிருதுத்தன்மையும், பளபளப்பும் தோன்றும். தவிர, இது ஒரு சிறந்த டானிக்!

பதநீரில், புரதம், கொழுப்பு, பாஸ்பரஸ், கனிஜ உப்புக்கள் கால்சியம், சர்க்கரை, வைடமின் பி, சி, ஆகியவையும் உள்ளன. பதநீரைத் தொடர்ந்து அருந்தி வந்தால் சொறி, சிரங்கு, சோகை நோய், வயிற்றுப்புண், மூலச்சூடு, மூத்திர வியாதி ஆகியவை நீங்கும்.

— கே. லலிதா



# எல்லாம் அவன் செயல்

பெங்களூர் பனசங்கரியில் குடிகொண்டுள்ள ஸ்ரீவரப்ரத வெங்கடேச்வர பெருமாளைப் பற்றிப் பக்தர்கள் கூறும் கதைகள் நம்மை மெய்சிலிர்க்க வைக்கின்றன. பனசங்கரியில் ஒரு சிறிய குன்றின் மேல் அமைந்துள்ள கோயில் அழகு என்றால், அங்கு எழுந்தருளியுள்ள வெங்கடேசுவர, பத்மாவதி தாயாரை இன்றெல்லாம் பார்த்துக் கொண்டே இருக்கலாம். மூல விக்கிரகங்கள் அத்தனை அழகு. மூலவர் மறைக்கிறதே எனச் சொல்ல முடியாதபடி உயரக் கட்டப்பட்ட சன்னதி. கருணை முகம் காட்டி அருள் பாலிக்கும் பெருமாள். அங்கே கைத்தலம் பற்ற கனாக் கண்ட ஆண்டாளும் இருக்கின்றாள்.

''இக்கோயிலுக்கு மூல விக்கிரகங்களை வடித்துத் தரும் பாக்கியம் தனக்குக் கிடைத்ததே ஒரு கதை'' என்கிறார் பெங்களூரைச் சேர்ந்த அன்பர் விஜயம் கிருஷ்ணமூர்த்தி.

''எழுபத்தேழு மார்ச்சில் எனக்கு ஒரு 'ஸ்ட்ரோக்' வந்தது. மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டேன். டாக்டர்கள்



எல்லாம் 'உங்களுக்கு வந்துள்ளது கடுமையான ஸ்ட்ரோக். எங்களால் முடிந்த சிகிச்சையைச் செய்கிறோம். ஆனால் காலமெல்லாம் படுக்கையில்தான் இருக்க வேண்டும்' என்று கூறிவிட்டார்கள். ஓரளவு தேறினேன், அவ்வளவுதான்.

அதே வருடம் டிசம்பரில் ஒரு நாள் டாக்டர் வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தேன். என்னுடைய காருக்கு முன்னால் ஓர் ஆள் சைக்கிளில் இப்படியும் அப்படியுமாக ஆடிக் கொண்டே வந்தான். நான் என்ன முயன்றும் அவனோடு சமாளிக்க முடியவில்லை. அந்த ஆள் காரின் முன்னாலேயே விழுந்து விட்டான். கார் நின்றுவிட்டது. அவன் நிமிடத்தில் எழுந்து ஓடிவிட்டான்.

''அதே சமயம் எங்களைக் கடந்து ஒரு ஸ்கூட்டர் இந்தச் சம்பவத்தினால் மெதுவாக நகர்ந்தது. அதன் பின்சீட்டில் ஒரு புரோகிதர். அவர்தான் அமெரிக்காவிலுள்ள பிட்ஸ்பர்க்கில் 'கட்டப்பட்ட வெங்கடேசுவரா ஆலயத்திற்குச் சென்று வந்த சம்பத்குமார பட்டாச்சார்யா. அவரைப் பார்த்தவுடன் எனக்கு ஒரே சந்தோஷம்.

''என்ன சுவாமி, உங்களைப் பார்த்து எத்தனை வருடங்கள் ஆச்சு'' என்றேன். அப்போதுதான் என்னிடம் கிரானைட்டில் மூன்றரை அடி உயரத்தில் செய்யப்பட்ட ஆண்டாள் மூலவிக்கிரகமும், ஒன்றரை அடி உயரத்தில் பஞ்சலோகத்தில் செய்யப்பட்ட ஆண்டாள் உற்சவ விக்கிரகமும் இருப்பது நினைவுக்கு வந்தது. அவற்றை ஏதாவது கோயிலுக்குப் பயன்படுத்தும்படி சொன்னேன். அவர் ஏனோ மெய்சிலிர்த்துப் போனார். பிறகு,

''நான் உங்களோடு பேச வேண்டும். காரில் வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு ஸ்கூட்டர்காரரைப் பின்தொடரும்படி கூறினார்.

வீட்டுக்கு வந்தவுடன் அவர் சொன்ன விஷயங்கள் எனக்கே மெய்சிலிர்ப்பை ஏற்படுத்தியது.

''பனசங்கரியில் வெங்கடேசுவர பெருமாள் ஆலயத்தை நிர்மாணிக்க ஓர் இடத்

தைப் பார்க்கவே, அந்த ஆலய நிர்மாணக் கமிட்டியின் செயலாளர் சுப்ரமண்யத்துடன் சென்று கொண்டிருப்பதாகக் கூறினார். நான் உடனே சொன்னேன்: ''நீங்கள் இடத்தைப் பார்த்துக் கோயில் வேலையை ஆரம்பியுங்கள். மூலவிக்கிரகங்கள், உற்சவ விக்கிரகங்கள் அனைத்தையும் நான் செய்து தருகிறேன்'' என்றேன். இப்படிப்பட்ட ஒரு பாக்கியம் எனக்குக் கிடைக்கவே எத்தனை திருவிளையாடல்களை நிகழ்த்தி இருக்கிறான் என நினைத்து நினைத்து ஆச்சரியப்பட்டேன்'' என்கிறார் விஜயம் கிருஷ்ண மூர்த்தி.

விக்கிரகங்கள் நிகழ்த்திய திருவிளையாடல்கள் இன்னும் பல. விக்கிரகங்கள் ஜலவாசத்தில் இருந்த சமயம். ஸ்ரீ சாய்பதானந்தா ராதாகிருஷ்ண சுவாமிஜி பெங்களூருக்கு வந்திருந்தபோது ஒரு முதியவர் அவரை அணுகினாராம்.

''நான் பெங்களூருக்கு வந்திருக்கிறேன். என்னை வந்து தரிசனம் செய்'' என்று சொல்லிவிட்டு எப்படியோ மறைந்து போய் விட்டாராம். கோயில் எழும்பிக் கொண்டிருந்த பகுதியில் பலரின் கனவுகளில் இந்த முதியவர் தோன்றியிருக்கிறாராம். மெய் சிலிர்க்கப் பலர் கூறிய கதைகள் ஆச்சரியமானவை.

அதேபோல விக்கிரகங்கள் ஜலவாசம், தான்யவாசம், க்ஷீர வாசத்தில் இருந்த போது பிரபல நான்கு மடாதிபதிகளும வந்து பெருமாளைச் சேவித்திருக்கிறார்கள்.

அதேபோல ஜலவாசம் கொண்டிருந்த பெருமாளை ஓர் ஏழை பால்காரர் அழுது கொண்டே அணுகினார்: ''என் மாடு காணாமப் போச்சு. அது இல்லாம என் பொழைப்பே இல்லை'' என வருத்தப்பட்டார். மறுநாள் அவர் தெருவில் போய்க் கொண்டிருந்த போது ஒரு சிறுமி அழுதபடி நின்று கொண்டிருந்தாளாம். ''யாரும்மா நீ? எங்கே உங்க வீடு?'' என அவர் கேட்டிருக்கிறார். அதோ அதோ என வழிகாட்டிக் கொண்டே போன சிறுமி, பல இடங்களைத் தாண்டி அழைத்துக் கொண்டு போயிருக்கிறாள். கடைசியில் ஒரு தெருவின் திருப்பத்தில் அந்தச் சிறுமியைக் காணோம். அங்கே பால்காரரின் மாடு இருந்தது!

இப்படி நடந்த பல உண்மைச் சம்பவங்களை விவரிக்கிறார் விஜயம் கிருஷ்ண மூர்த்தி. ''மூல விக்கிரகத்தினை நிறுத்தும் போது ஏற்பட்ட ஒரு சிறு தவறு என்னுடைய நாடியில் நேரடியாகப் பிரதிபலித்தது. திடீ



ரெண்டு நிமிடத்திற்கு 120 என பல்ஸ் ஏறி விட்டது. டாக்டர்கள் பயந்து விட்டார்கள். கோயிலில் தவறு திருத்தப்பட்ட பிறகு என்னுடைய நாடித் துடிப்பு சரியாகிவிட்டது. இப்படி அவனின் புகழை நாளெல்லாம் பேசிக் கொண்டிருக்கலாம்.''

ஸ்ரீ வரப்ரத வெங்கடேசுவர பெருமாளின் கருணையிலே மூழ்கிச் சிலிர்க்கும் விஜயம் கிருஷ்ணமூர்த்தி மங்கையர் மலர் ஆசிரியர் குழுவிற்குப் புதியவரல்ல. மங்கையர் மலர் திருமணமலர் மூலமாக அவருடைய குடும்பத்தில் ஒரு திருமணம் நிச்சயமானது. அந்தச் சுப காரியத்தின் நினைவாக ஒரு நல்ல சேவைக்கு ரூ. 5000/— அனுப்ப முன்வந்தார். அது பிறகு சென்னையிலுள்ள ஒரு சமூக சேவை நிறுவனத்துக்கு அனுப்பப் பட்டது.

அதே போலச் சமீபத்தில் பம்பாய் சிவப்பு விளக்குப் பகுதியில் இருந்த தமிழ்ப் பெண்களை மீட்ட சாவ்தான் இயக்கம் பற்றி முன்னமேயே மங்கையர் மலரில் ஜுலை இதழில் வெளியிட்டிருந்தோம். அதைப் படித்து அவர்களின் சேவையைப் பாராட்டி அப்பொழுதே அவர் ரூ. 5000/— அனுப்பியிருந்தார். மீண்டும் இப்போதைய அவர்களுடைய சேவையைப் பாராட்டி மீண்டும் ஐந்தாயிரம் ரூபாய் அனுப்பி இருக்கிறார்.

இப்படி எங்கே நல்ல சமூக சேவை செய்கிறார்கள் என்று தெரிந்ததும் தானே முன் வந்து, சேவையைப் பற்றிக் கேள்விப்பட்டவுடன் அனுப்பும் இந்த விந்தையான மனிதரைப் பார்க்கும் போது ஆச்சரியமாக இருக்கிறது. அவருடன் பேசப் பேச கட்டுக்கடங்காத வியப்பாகவே மாறியது.

ஒவ்வொரு வருடமும் தன்னுடைய வருமானத்தில் இருந்து ஒரு குறிப்பிட்ட தொகையை நல்ல காரியங்களுக்கு அன்பளிப்பாக வழங்க வேண்டும் என்ற கொள்கையை வகுத்துக் கொண்டிருக்கிறார் இவர். இப்படி இவர் வழங்கிய தொகை பல இலட்சங்களைத் தாண்டி இருக்கிறது.

பல கோவில்களுக்கும், மடங்களுக்கும் இலட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள விக்கிரகங்களை அளித்து இருக்கிறார். மருத்துவமனைகளுக்கும், நூலகங்களுக்கும், சேவை நிறுவனங்களுக்கும் பணமாகவும், பொருளாகவும் நிறைய அள்ளிக் கொடுத்திருக்கிறார். இவருடைய 'விஜயம் பரணி ட்ரஸ்ட்' செய்துள்ள சேவையைப் பார்க்கும் போது 'இப்படியும் ஒரு மனிதரா?' என வியப்பாக இருக்கிறது.

ரிசர்வ் வங்கியே, 'ஒரு ட்ரஸ்ட் என்பது எப்படிச் செயல்பட வேண்டும் என்பதற்கு முன்னோடியாக விளங்குகிறது' எனப் பாராட்டி இருக்கிறது என்றால் வேறு என்ன வேண்டும்?

திருச்சூரிலுள்ள ஒரு தேவாலயத்திற்குச் சிலுவையிலுள்ள இயேசுகிறிஸ்துவின் சிலையைக் கூட வடித்துக் கொடுத்து இருக்கிறார். இதைப் பற்றி இவரிடம் பேசிய போது அவர் சொன்னது: —

''இதெல்லாம் நான் செய்தேன்னு சொல்றதே தப்பு. எல்லாம் அவன் செயல். அவன் என்னை ஒரு கருவியாகப் பயன்படுத்திக்கிட்டு இந்தக் காரியங்களை முடித்துக் கொள்கிறான், அவ்வளவுதான்,'' என்றார் அடக்கமாக.

கைகால்கள் முழு சுவாதீனம் இல்லாத நிலையிலும், அதற்குத் தகுந்தாற் போல தன் காரை மாற்றியமைத்துக் கொண்டு கார் ஓட்டுகிறார்! தன்னுடைய வியாபாரத்தைத் தானே கவனித்துக் கொள்கிறார். வயிற்றில் புண் ஏற்பட்டு குடல் ஆபரேஷன் செய்த நிலையில், கொஞ்சம் கொஞ்சமான உணவு அடிக்கடி சாப்பிட்டாக வேண்டும். இப்படி ஏராளமான பிரச்னைகளின் நடுவில், வயதும் ஆகிவிட்ட நிலையில் கொஞ்சம் கூட தன்னம்பிக்கை, கம்பீரம் குறையாமல் இவர் நடந்து கொள்ளும் முறை — தெய்வம் இவருக்குக் கொடுத்த வரம் என்றுதான் சொல்ல வேண்டும்.

ஸ்ரீ வரப்ரத வெங்கடேச பெருமாளுக்கு இராஜகோபுரத் திருப்பணி நடந்து கொண்டிருக்கிறது. விஜயம் கிருஷ்ணமூர்த்தி, முதலிலேயே கோபுரக் கலசங்களைச் செய்து கொடுத்து விட்டார்.

ஸ்ரீ வரப்ரத வெங்கடேச பெருமாளைத் தரிசிக்க விரும்பும் வாசகர்களுக்குக் கோயிலின் முகவரி:

ஸ்ரீ வரப்ரத வெங்கடேசுவரா திருக்கோயில், பனசங்கரி, 2 வது ஸ்டேஜ், பெங்களூர் — 560 070.

— பவித்ரா.



பழைய பருப்புத் தேங்காய்க் கூடுகள், அரிசி டின்களுக்கு அவ்வப்போது கலர் பேப்பர்கள், டிசைன் (அ) ஜிகினா பேப்பர்களை மாற்றி மாற்றிக் கத்தரித்து ஒட்டினால், பார்க்கிறவர்கள் நீங்கள் குடும்பம் நடத்தும் அழகைப் பார்த்து வியப்பார்கள்.

— மங்களம்.

# ஜானு கார் ஓட்டினாள்

## கேயெஸ்

**ப**க்கத்து வீட்டு கார் கிளம்பியது. அடுக்களையில் இருந்த ஜானகி என்னும் ஜானு ஜன்னல் வழியே எக்கிப் பார்த்தாள். ஒயிலாகக் காரை ஒடித்துத் திரும்பினாள் கற்பகம். பேப்பர் படித்துக் கொண்டிருந்த இராமநாதனுக்கு அடுத்து என்ன நடக்கும் என்பது தெரியும். தலையைப் பேப்பருக்குள் நன்கு பொதிந்து கொண்டார். ஜானுவின் பெருமூச்சு அடங்கிய குக்கர் சத்தம் போல் அருகில் கேட்டது.

''என்னங்க... உங்களைத்தானே''

''என்ன?''

''எத்தனை வருஷமாக நானும் சொல்றேன், எனக்குக் கார் ஓட்டக் கத்துத்தாங்கன்னு. காதிலேயே போட்டுக்க மாட்டீங்களே.''

''உனக்கென்ன தலையெழுத்து ஜானு. வீட்டில் டிரைவர் இல்லையா? நான் இல்லையா? நீ ராணி மாதிரி ஜம்முனு உட்கார்ந்து வர வேண்டியதுதானே.''

முடிந்த வரையில் ஐஸ் மழையைக் கொட்டினார். பின்னே என்ன? கார் வாங்குவதும் வைத்துக் கொள்வதும் லேசான காரியமா? இதில் ஜானு வேறு கார் ஓட்ட ஆரம்பித்து விட்டால் சம்பளம் பூராவும் பெட்ரோலுக்கே போக வேண்டியதுதான்.

ஆனால் ஜானு விடாப்பிடியாகி விட்டாள். ''நான் ராணியோ, மந்திரியோ கண்டிப்பாய் கார் ஓட்டக் கற்றுக்கொண்டே ஆக வேண்டும். இதனால் செலவும், நேரமும் எவ்வளவு மிச்சப்படும் தெரியுமா? டிரைவரை நிறுத்தி விடலாம். கடை, கண்ணிக்கு உங்களைத் தொந்தரவுபடுத்தாமல் நானே போய் வரலாம். பசங்களை ஸ்கூல் கொண்டு விட்டு அழைத்து வரலாம். எனக்கும் போர் அடிக்காமல் இருக்கும்.''

ஜானுவின் எந்த ஒரு காரியமும் பக்கத்து வீட்டு கற்பகத்தை முன்னிட்டே இருக்கும். புடைவை வாங்குவதில் இருந்து அன்றைய சமையல் மெனு வரை ஜானுவுக்குக் கற்பகத்தின் முன்னால் பீற்றிக் கொண்டே ஆக வேண்டும். இரண்டு நாள் கற்பகம் ஊரில் இல்லாவிடில் ஜானுவுக்குத் தலை வெடித்து விடும் போல் இருக்கும்.

அன்று முழுவதும் காரைப் பற்றியே புலம்பித் தள்ளி விட்டாள் ஜானு. இராமநாதனுக்குத் தப்ப முடியவில்லை.

''சரி நாளைக்கு சனிக் கிழமை. எனக்கு விடுமுறை. ரெடியாய் இரு. கற்றுத் தருகிறேன்.''

ஜானுவுக்குத் தலை கால் புரியவில்லை. சனிக் கிழமை நல்ல நாள். ஸ்திர வாரம். வெங்கட்ரமண ஸ்வாமிக்கு உகந்த நாள். ராகு காலம். எமகண்டம் எல்லாம் பார்த்து காலை பதினோரு மணிக்கு நல்ல நேரம் குறித்தாகி விட்டது.

இரவு முழுவதும் ஜானுவுக்குக் காரிலேயே உலகம் சுற்றும் வாலிபியாகக் கனவு. சரக்கென்று பிரேக் போடும் அழகும், டக்கென்று திரும்பும் ஸ்டைலும் கனவிலேயே திருஷ்டி பட்டு விடும் போல் இருந்தது.

சனிக்கிழமை காலை. பக்கத்து வீட்டு கார் கிளம்பும் சப்தம். ஜானு மனதுக்குள் எண்ணிக்கொண்டாள். எண்ணி பதினைந்து நாள். இதற்கு மேலே நானும் ஜம்முன்னு ஓட்ட மாட்டேனா? புர்..புர் என்று சப்தம் கிளப்பி கற்பகம் வேண்டுமென்றே தன்னை மட்டப்படுத்துவதாக ஜானுவுக்குத் தோன்றிற்று.

தலையை நன்கு வாரி ஒரு போனி டெய்ல். உதட்டில் ஈஷிய லிப்ஸ்டிக். முதல் நாள் அவசரமாக வாங்கிய சுரிதார். கண்களில் கூலிங்கிளாஸ். ஜானு கார் ஓட்டுவதற்கான பந்தாவோடு தயாரானாள்.

பார்க்க சகிக்கவில்லை இராமநாதனுக்கு.
''இதெல்லாம் எதுக்கு ஜானு உன்னைப் போட்டு கஷ்டப்படுத்திக்கிற.''

''நீங்க சும்மா இருங்க. எனக்கே என்னை அடையாளம் தெரியலை. என்னை விட கிழடு எல்லாம் அமர்க்களமாய் போகுது. எனக்கென்ன அப்படி வயசாயிடுத்து.''

''காரை பீச்சுக்கா எடுத்துப் போய் கத்துக் கலாமே.''





''எதுக்கு? நம்ப ரோடு 'விசாலமா இருக்கு. எந்தத் தொந்தரவும் இல்லை. இங்கேயே கத்துக்கலாம்.''

தன் தெருவே பார்க்க வேண்டும் என்ற கவலை ஜானுவுக்கு.

டிரைவர் ஸீட்டில் ஜானுவை உட்கார வைத்து ஸ்டியரிங், ஆக்ஸிலேட்டர், ப்ரேக் என காரின் பாகங்களை விளக்க ஆரம்பித்தார் இராமநாதன்.

''இதெல்லாம் எனக்குத் தெரியாதா. எத்தனை வருஷமா உங்க பக்கத்தில் உட்கார்ந்து வரேன். பேசிப் பேசியே நேரத்தை வீணடிக்காதீங்கோ.''

''சரி. காரை ஸ்டார்ட் செய்.''

வண்டி கிளம்பியவுடன் ஜானுவுக்கு உடம்பெல்லாம் சிலீர் என்றது. கால் இரண்டும் பலம் இல்லாதது போல் இருந்தது. ஓரத்தில் உள்ள மரம் வீடுகள் எல்லாம் காரின் முன்னே வந்து நிற்பது போல் இருந்தது. வேகமாக வந்து திரும்பிய ஆட்டோ முகத்தின் மேல் ஓடுவது போல் இருந்தது.

''ஜானு ப்ரேக்.. ப்ரேக் போடு.''

''ப்ரேக் எங்கேயிருக்கு ஏங்க இந்த வண்டியில் ப்ரேக் வைக்க மறந்துட்டாங்களா?''

'டும்ம்ம்...' முன்னே வந்த ஆட்டோ மீது லேசாக முட்டி நின்றது வண்டி.

இறங்கிய ஆட்டோ டிரைவர் இராமநாதனை முறைத்தார். ''ஏம்ப்பா, அந்த பாப்பாக்குத்தான் ஓட்டத் தெரியாது. நீயாவது டிராபிக் இல்லாத இடமாப் போய் சொல்லிக் கொடுக்கக் கூடாது? அறிவு வேண்டாம் கஸ்மாலம். சோடா புட்டி. ஒண்ணுக்கு யார் பதில் சொல்றது?''

வேகமாக வந்த அர்ச்சனைகளை சமாளிக்க முடியாத இராமநாதன் இருநூற்றைம்பது ரூபாயை அழுது வந்தார்.

''உங்களுக்குப் பொறுமையாய்ச் சொல்லிக் கொடுக்கத் துப்பில்லை. இருநூற்றைம்பது ரூபாய் வேறு தண்டம். நாளையிலிருந்து நான் நம் டிரைவர்கிட்டே கற்றுக் கொள்கிறேன். அப்படியே லைசென்சும் வாங்கிடுவேன்.''

ஜானு கார் படிப்புக்காக செல்லவே இராமநாதன் ஆட்டோவிலும் பஸ்ஸிலும் காரியாலயம் சென்று வந்தார்.

இந்த சில வாரங்களில் இராமநாதனின் சேமிப்பு நன்கு கரைந்தது. ஜானுவின் கார் ஓட்டும் பயிற்சியினால் பாதிக்கப்பட்ட பக்கத்துத் தெரு காம்பவுண்டு சுவர், காய்கறிக்காரி, சைக்கிள் ரிப்பேர் என பட்டியல் நீண்டுக் கொண்டே சென்றது. ரூபாய் நோட்டுக்களை பாங்கிலிருந்து வாங்கி வைத்துக் கொண்டிருந்தார்.

ஓரளவு ஜானு பயிற்சியில் தேர்ச்சி பெற்றாள். எதிரிலும் அருகிலும் எந்த வண்டியும் வராத வரை ஜானுவின் மனம் தன் திறமையை எண்ணித் தானே பாராட்டிக் கொள்ளும். வெகு தூரத்தில் ஓர் வண்டி சென்றாலும் எல்லோரும் தன்னை வேண்டுமென்றே பழி வாங்குவது போல் தோன்றும்.

இப்போதெல்லாம் ஜானு கார் தொடர்பாக லெக்சர் கூட கொடுக்க ஆரம்பித்து விட்டாள். சாலை விதிகளைப் பற்றியும், பெட்ரோல் சேமிப்பைப் பற்றியும், பெண் காரோட்டுவதால் உள்ள நன்மைகள், தீமைகள் என்ற பட்டிமன்றத் தலைப்பில் இரு பக்கத்திலும் தானே வாதாடியும்...

அனைவரும் ஜானுவிடம் அகப்படாமலே தப்ப முயன்றனர்.

ஒரு நாள் ஜானு இராமநாதனை அழைத்

தாள். ''டவுன் வரை போய் கொஞ்சம் சாமான் வாங்க வேண்டி இருக்கு. இரண்டு பேருமா போய் வாங்கி வரலாம்.''

''மூர்த்தி வண்டி எடு.''

''மூர்த்தி எதுக்கு எனக்கு ஓட்டத் தெரியாதா?''

''ஜானு இது பிஸி டைம். டிராபிக் அதிகம் இருக்கும். உனக்கெதுக்கு சிரமம்.''

''எனக்கென்ன சிரமம். முந்தா நாள் ஆண்டாள் மாமி கூட அசந்து போய்ட்டா. உங்களுக்குத்தான் என் பேரில் நம்பிக்கை இல்லை.''

ஜானுவும் இராமநாதனும் கிளம்ப, எதிரே வந்த கற்பகத்தைப் பார்த்த ஜானுவுக்கு ஜன்ம சாபல்யம் ஆயிற்று. கற்பகத்தை இழுத்து வைத்துப் பேசினாள் ஜானு.

''இந்தக் கார் ஓட்டக் கற்றுக் கொண்டது தப்பா போயிடுத்து. வண்டியை எடுத்துக் கொண்டு போய் விட்டு வா என்று எல்லா வேலையையும் இவர் என் தலையில் போட்டு விடுகிறார். விருந்தாளிகளும் உனக்குத்தான் வண்டி ஓட்டத் தெரியுமே? பீச்சுக்கு வா. கடைக்கு வா என்று உயிரை எடுக்கிறார்கள்'' என ஜானகி பேசிக் கொண்டே செல்ல இராமநாதன் முழித்தார். புன்னகையுடன் கற்பகம் கேட்டுக் கொண்டிருந்தவள், ''சரி மாமி... உங்களுக்கு நாழியாச்சு பாவம், கிளம்புங்கோ'' என்றாள். ஜானு பிரமாதமாகக் காரில் ஏறி ஸ்டார்ட் செய்தாள்.

கர்... கர்கர்... கர் வண்டி ஸ்டார்ட் ஆகாமல் குலுங்கிக் குலுங்கி நின்றது.

''ச்ச.... எல்லாம் உங்களால்தான். கிளம்பும்போதே அபசகுனம் மாதிரி வேண்டாம் ஜானு.. வேண்டாம் ஜானுன்னு அடிச்சுண்டீங்க...''

''ப்ப்... கர்...க்கும்.... கர்... வண்டி தத்தித் தத்தி நகர்ந்து நின்றது. கற்பகத்தின் புன்னகை இன்னும் மாறவில்லை.

ஜானுவுக்குக் கற்பகத்தின் முன்னால் அசடு வழிந்தது. வேகமாக ஆக்ஸிலேட்டரை மிதித்தாள்.

''ஹாம்...'' அப்படித்தான்... இன்னும் கொஞ்சம் வேகமா ஆக்ஸிலேட்டர் கொடு... கரெக்ட்... அப்படியேதான்'' என்று ஊக்கமளித்தார் இராமநாதன்.

ரோடு முனை வரை படுத்திய கார் பிறகு சீறிக் கொண்டு சென்றது.

''ஜானு... மெதுவா... ஐயோ சைக்கிள்காரன்.. போச்சு, போச்சு கொஞ்சம் லெப்ட்ல வா... ஆ... ஆ'' என உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு கதறினார் இராமநாதன்.

வண்டியின் தாறுமாறான போக்கைக் கண்ட மற்ற வண்டிகள் எல்லாம் ஒதுங்கியே சென்றன. எல்லோரும் தன்னை எட்டி எட்டிப் பார்த்ததால் ஜானுவுக்கு ஒரே பெருமிதம். ''பொம்பளை கார் ஓட்டி போனால் போதுமே. முறைச்சு முறைச்சு பார்ப்பாங்களே.''

இராமநாதன் மனத்தில் இராமநாமம் ஜபித்துக் கொண்டே வந்தார்.

கார் மேம்பாலத்தில் சென்றது. நெரிசல் அதிகமானதால் வண்டிகள் மெதுவாக ஊர்ந்தன. ஜானுவால் ஈடுகொடுக்க முடியவில்லை. வண்டி கீழே இறங்குவது போல் தெரிந்தது.

''என்னங்க... எனக்கு ரொம்ப பயமா இருக்கு...'' ஜானு வீறிட...

இராமநாதன் காரின் ஜன்னல் வழியாக வெளியே தொங்கி, கைகளால் காரை 'மடார் மடார்' எனத் தட்டி ஒலி எழுப்பி ''இந்தாப்பா அம்பாஸிடர் கொஞ்சம் தள்ளிப் போங்க. அய்யா ஆட்டோ சீக்கிரம் நகரு... நகரு'' என மைக் இல்லாத குறையாகக் கத்தினார்.

''சாவு கிராக்கி. வூட்டுல சொல்லிக்கினு வந்தியா.''

''யார்ரா அவன் கூட வர்றது. அடிர்ரா அவனை.''

எனச் சுற்றி வந்த வண்டிகள் திட்டிச் சென்றன. இராமநாதன் இன்று அபராதமா சிறைவாசமா என கதிகலங்கினார்.

சரிவில் வண்டியை ஓட்டி அறியாத ஜானகி கதறினாள்.

''தயவு செய்து உங்களைத்தானே. நீங்கள் ஸ்டியரிங்கை பிடியுங்கள். நான் நகர்ந்து கொள்கிறேன்.''

பின்னால் வந்த வண்டிகளின் ஹாரன் ஒலி காதைப் பிளந்தது. இராமநாதனால் நடு ரோட்டில் இறங்கி டிரைவர் ஸீட்டுக்கு வர முடியவில்லை. ஒரு வழியாக அவள் மேல் சாய்ந்து ஸ்டியரிங் பிரேக் எல்லாவற்றையும் சமாளித்து வண்டியை நிலைக்குக் கொண்டு வந்தார். மற்றவர்களின் அடி உதையிலிருந்து தப்பினார்கள். இராமநாதன் வேகமாக வண்டியை ஓட்டிச் சென்றார். மூர்ச்சையடையாத குறையாகத் தள்ளி அமர்ந்திருந்த ஜானு சொன்னாள்.

''எனக்கென்ன தலையெழுத்து, நீங்க இருக்கும் போது. நான் இனிமேல் ராணி மாதிரியே உட்கார்ந்து வரேன்.''

இராமநாதனிடம் நிம்மதிப் பெருமூச்சு...



சென்ற வருடப் பள்ளிச் சீருடைகளின் நிறம் வெளுத்து விட்டதால் புதுச் சீருடை வாங்கிக் கொடுக்கும்படி மகள் அடம் பிடித்தாள். மகளின் சீருடைப் பாவாடையை முழுவதுமாகப் பிரித்து, பிரித்த துணியைத் திருப்பி வைத்துப் பாவாடையாகத் தைத்தேன். உள் பக்கத் துணி நிறம் மாறாது இருப்பதால் புதுப் பாவாடை போன்று இருந்தது.

— அம்பிகா

கதவு தட்டும் சப்தம் தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருந்தது. அத்தையின் குரல் 'சரண்யா சரண்யா' என்று மெல்லத் தேய்ந்து நெகிழ்வடைந்ததை உணர்ந்தாள் சரண்யா. வெட்கமாகிவிட்டது. ஏதோவென்று பயந்து அத்தை பக்கத்து வீட்டுக்காரர்களை கூப்பிட்டுவிடக் கூடாது என்றிருந்தது. பரபரவென எழுந்து கதவைத் திறந்தாள.

''என்னாச்சு சரண்யா... சொகமில்லையா...''

''ஒண்ணுமில்லே அத்தை.''

''அப்புறம் சந்திரகுமார் ஏதாச்சும் திட்டிட்டானா.''

''இல்லத்தே.''

''அப்புறம்? அவன் கூட ஆபீஸ் போறப்போ உம்முன்னு போனான்...''

''கொஞ்சம் தலைவலி. தூக்கம் போட்டா செரியாயிடும்...'' கதவுக்குச் சற்று தள்ளி மாமனார் நின்றிருந்தார். சரண்யா அவரைப் பார்த்துத் தலைகுனிந்தாள். அவர் கலவரப்பட்டிருந்தது தெரிந்தது.

''கொஞ்ச நேரம் தூங்கறேன் அத்தை.'' கட்டிலில் போய் உட்கார்ந்து கொண்டாள். அவள் மீதே அவளுக்கு எரிச்சலாக இருந்தது. காலையில் சந்திரகுமாரிடம் சரியாய் முகம் கொடுத்துப் பேசவில்லை அவள். அவனும் ஒன்பதானதும் சொல்லாமல் கிளம்பிவிட்டான்.

காலண்டரில் மாதத் தாள்களை திரும்பத் திரும்ப புரட்டியபடி இருந்தாள் சரண்யா. இரண்டு மாதம் கடந்து மூன்றாவது மாதத்தில் பத்து நாட்கள் ஆகியிருந்தன. மாதத் தாள்கள் தொடரத் தொடர பயமாய் இருந்தது. வாய்விட்டு அழ வேண்டும் போலிருந்தது. உதடு பிதுங்கி அழுகையைக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

அவளுக்கு மாதவிலக்கு சற்று தாமதமாகவே எப்போதும் நிகழும். அவளின் உடல் பலவீனம் ஒரு காரணம். தாமதமாகிற போதெல்லாம் மெல்ல மெல்ல பயம் கிளம்பும். விசுவரூபம் எடுக்கும். வயிற்றில் சுமப்பதும், பெறுவதும் இம்சைதான் என்ற எண்ணம் மேலோங்கும். இம்முறை தாமதப் நீண்டு விட்டது. பயமளித்தது.

ஒவ்வொரு பெண்ணிற்கும் மாதவிலக்கு தருணம் தாமதம் ஆவதைப் போல் இம்சை எதுமிராது என நினைத்தாள் சரண்யா.

''மொதல் கர்ப்பமுன்னா பரவாயில்லே, சந்தோஷமிருக்கும். தாய்மை முழுமையாகற ஒரு அனுபவம்ன்னு நிறைவு இருக்கும். அதுக்கப்புறம்ன்னா சாபம்தான்.

அவளின் முதல் கர்ப்பத்தைப் பற்றி நினைத்துக் கொண்டாள். பிறருக்குச் சொல்லாமல் அதை மறைத்து மறைத்து தன் அம்மாவிற்குக் கடிதம் எழுதுகையில் சொன்னாள்.

''எதுக்கு மறைச்சே.... எங்கிட்ட கூட.... தாமதமானதும் கன்பாம்டுதானே.''

''மறச்சது உறுத்தலா இருக்கு. ஆனா எங்கம்மாகிட்டதா மொதல் மொதல்லா சொல்லணும்ன்னு ஒரு வைராக்யம் போல மனசிலே வெச்சிட்டிருந்தேன். அத்தை கேட்டப்போ எல்லா மறைச்சுதிகச்சேன். எங்கம்மா என்னைப் பெத்தப்போ, அப்புறம் சீக்கிரம் எங்கப்பா செத்து போனப்போ, பின்னாலே என்ன வளர்க்கக் கஷ்டப்பட்டதையெல்லாம் அழுதழுது சொல்வாங்க. வறுமையிலும் நான் ஆரோக்கியமாத்தான் வளர்ந்தேன். என் கல்யாண விஷயத்திலியும் கஷ்டம் கொறையலே. அதெல்லாம் நெனச்சு நானும் பல நாள் அழுதிருக்கேன். வயித்திலே கரு உண்டானதிலிருந்து உங்களைப் பத்தின நெனைப்போட எங்கப்பா நெனைவும் சாஸ்வதமா இருக்கு.''

சரண்யாவின் முதல் குழந்தையைப் பார்க்க

# சங்கடங்களும் சந்தோஷங்களும்

– சுப்ரபாரதிமணியன்

அவளின் அம்மா இருக்கவில்லை. அவள் அம்மாவின் பெயரை முதல் பெண் குழந்தைக்கு வைக்க வேண்டும் என்று சரண்யா சொன்ன போது புகுந்த வீட்டில் முகச் சுளிப்பு இருந்தது. வைக்கவில்லை. அம்மாவின் ஞாபகம் வருகிறபோதெல்லாம் குழந்தையைக் கட்டிக் கொண்டு அழுவாள் சரண்யா.

இரண்டாவது ஆண் குழந்தை வேண்டும் என்று பிரார்த்தித்தாள். மூன்று வருஷ இடைவெளி நல்லது என்றார்கள். தவிர்த்தார்கள். அப்படியே மூன்றரை வருஷம் கழித்து கற்பமுற்றபோது ஆண்தான் என்றார்கள். ஜோசியம் ஆம் என்றது. கோவில் பூ ஆண் என்றது. ஆசீர்வதித்தவர்கள் ஆண் என்றார்கள். மனத்தில் ராகங்கள், மகான்களின் பெயர்களைக் கொண்டு வந்து பெயரையும் ஆண் குழந்தைக்கென்று தேர்வு செய்திருந்தாள்.

பிரசவ தினங்கள் கடக்கவே சிசேரியன் என்றார்கள். ''ஆண் குழந்தைக்காக சிசேரியன் செய்யத் தயார்'' என்றாள் சரண்யா. சிசேரியன் முடிந்து மூன்று மணி நேர மயக்கத்திற்குப் பின் கண்களைத் திறந்தாள். காற்றாகி இருந்தாள். வயிற்றில் கடும் வலி. ''பொண்ணு'' என்றாள் நர்ஸ். ஓவென்று தலையணையைக் கவ்விக் கொண்டாள். ''பொய்.... பொய்..'' என்றாள்.

''நிஜம்தா.... நாங்க எதுக்கு பொய் சொல்லணும். பொட்டச்சிதா...''

சரண்யாவிற்கு ''பொட்டச்சி'' என்ற வார்த்தை எப்போதும் எரிச்சலும், கோபமும் தரக்கூடியது. அச்சொல்லை கேட்டபின் எதிர்வினையாய் அப்படிச் சொல்பவர்களின் மேல் சண்டையிட்டிருக்கிறாள். இப்போது சண்டையிட விருப்பமில்லை. அய்யோ என்று அலற வேண்டும் என்றுதான் இருந்தது. ''கொழந்தை பொறந்து பல மணி நேரமாச்சு. அழுகைச் சப்தமே வர்லியே'' என்றாள் சித்தி. ''எல்லாத்துக்



கும் சேத்துதா அவங்கம்மாவே அழறாங்களே.''

தையல வலி, பிரிந்த தையலின் இம்சைகள் என்று நாட்கள் தொடர்ந்த போது கூடல் இன்பத்தைச் சபித்திருந்தாள். ஆனால் மெல்ல நடமாட ஆரம்பித்து வீட்டு வேலைகளைப் பார்த்து குழந்தைகளின் உலகத்தில் இருந்த போது பெண் குழந்தைகள் என்ற தாழ்வும் குறைந்து போயிற்று.

ஆண் குழந்தையொன்று வேண்டும் என்றார்கள் புகுந்த வீட்டில். குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் ஆண் குழந்தைக்குப் பின் என்றார்கள். சரண்யா ஆபரேஷன பற்றி வலியுறுத்தின போதெல்லாம் சந்திரகுப்தன் முதலில் அவளின் கேள்விகளைத் தடுத்தவன்.

''நாம படிச்சவங்க. இந்தக் காலத்திலே பசங்களும் பொண்ணுங்களும் ஒண்ணுதான் நவநாகரிகம் படிச்சவங்களை திணற வைக்கும். பொண்ணுகளுக்காகக் கட்டுப்பாட்லே அந்தத் திணறல் இருக்காது. பொண்ணுகளே வளர்ந்து அவங்க பாதுகாப்பிலே இருக்கற அனுபவம் நமக்கிருக்கட்டும்.''

''அப்புறம் கடைசி காலத்தில முதியோர் இல்லத்துக்கும், சாப்பாட்டுக்கும் அலையணும்.''

''ஆம்பளப் பசங்களை பெத்தவங்களுக்கு மட்டும் அது வர்றதில்லேங்கறது என்ன உத்திரவாதம்...?''



பதில் கிடைக்காத கேள்வி என்றாலும் சந்திர குமார் உடன்படவில்லை.

இரவுகள் சங்கடமளித்தன. தவிர்க்க இயலவில்லை. சந்தோஷத்தின் எக்கணத்திலும் பயம் இருந்தது. சில வருஷ இடைவெளியாவது வேண்டும். கர்ப்பம் தவிர்க்க வேண்டும். இடைவெளி விட்டு கர்ப்பம் ஆகிற போது ஸ்கேனிங் மூலம் ஆணா, பெண்ணா என்று தெரிந்து கொள்ளவேண்டும். பெண்ணென்றால் கலைத்து விட வேண்டும். ஆண் உன்றால் பிரசவித்து பின் குடும்பக் கட்டுப்பாடு செய்து கொள்ள வேண்டும் என்றிருந்தாள்.

தாமதமானபோது நிஜகர்ப்பமா என்பதில் பயமிருந்தது. கலைத்துவிடு என்ற குரல்கள் அவளின் காதுகளில் தொடர்ந்து கேட்டன. நாயுடு கடைத் தெருவில், ஆபரேஷன் இன்றி மருந்து மூலம் கரு கலைப்புப் பற்றின போஸ்டர்களை அவ்வப்போது அவள் பார்த்திருக்கிறாள். அதைப் பார்க்க சமீப நாலு நாளாய் நாயுடு கடைத் தெருவிற்குப் போய் வந்தாள். காணவில்லை. புதிதுபுதிதாய்போஸ்டர்கள். இரவில்ஒட்டப்படும் போஸ்டர்களின் மேல் விடியற்காலையில் புது போஸ்டர்கள். வெட்கத்தை விட்டு அந்த வைத்யம் பற்றி விசாரிக்க வேண்டும். நினைக்க நினைக்க் அழுகையாக இருந்தது சரண்யாவிற்கு.

எவ்வளவோ ஜாக்கிரதையாக இருந்தும் ஏற்பட்டுவிட்டது. அந்தத் தருணங்களைச் சபித்தாள். கணவனையும் சபித்தாள். கைக் குழந்தைக்கு ஒன்பது மாதமே ஆகியிருந்தது. சந்திர குமாரிடம் இந்தத் தாமதம் பற்றிச் சொல்ல வில்லை. நேற்று கூட அவனிடம் எடுத்ததற்கெல்லாம் எரிந்து விழுந்தாள். என்னாச்சு என்று அவன் பதறினான். தொடர்ந்து கைக் குழந்தைக்கு பால் கொடுப்பதால் ஏனோ மார்பு வலி வந்திருந்தது. தையல் பிரிந்து வேதனையிருந்தது. கால்களில் நீர் இறங்கிக் கொண்டு கஷ்டப்படுத்தியது. இதெல்லாம் குறைந்து விட்டது இப்போது. அவள் எரிந்து விழுவதையும், சோர்வாகிப் போவதையும் கவனித்த சந்திர குமார் பதறி என்ன என்று கேட்ட போதெல்லாம் எதுவுமில்லையென்றாள்.

''என்னாலே முடியலே... உங்க கேள்விக்கு பதில் சொல்லக்கூட முடியல்லே...'' என்று சொல்லி அழுதாள். சந்திரகுமார் அதிர்ச்சியடைந்தான். பெரிய பெண் அவளின் கோபத்தைப் பார்த்து விலகிப் போனது. பாட்டியிடம் அதிகமாய் ஒட்டிக் கொண்டது. மாமனார், ''என்னாச்சு சொந்த ஊர் போகணும்ன்னா போயிட்டு வா'' என்றார்.

அம்மா இறந்த பிறகு அண்ணன் வீடு கூட அந்நியமாகிவிட்டது. பண்டிகை தினங்கள் தவிர அங்கு போவது சங்கடமளித்தது அவளுக்கு. இனியொரு பிரசவத்திற்கென்று போய் நிற்க முடியாது. வெட்கம் பிடுங்கும். மரியாதை குறையும். அதுவும் பெண்ணாக இருந்தால் தற்கொலைக்குப் போய்விடலாம்என்றுமனப்பிசகாய்நினைத்திருந்தாள். அப்படி நினைப்பதை வெறுத்தாலும்,நினைக்காமல்இருக்கமுடியவில்லை.

சாத்தியிருந்த கதவு மெல்ல திறந்தது. முதல் பெண் ஸ்வாதி நின்றிருந்தாள். திரையை மெல்ல விலக்கி அம்மாவைப் பார்த்தாள்.

''வா...'' என்றாள் சரண்யா.

''வரமாட்டே போ....''

''எதுக்கு....''

''எதுக்குக் கதவ சாத்திட்டே. எதுக்கு



டாடி கிட்ட சண்டை போட்டே ... பாட்டிக்குத் கஷ்டமா இருக்கு...''

ஸ்வாதியை நெருங்கி கைகளில் எடுத்துக் கொண்டாள்.

''ஒடம்பு முடியல்லம்மா அதுதா...''

''டாக்டர் கிட்ட போ அம்மா... எதுக்கு டாடியையும, பாட்டியையும கஷ்டப்படுத்தறே.''

சாரின்னு மன்னிப்பு கேக்கறேன். சாரி ஸ்வாதி....'

''உம்....''

''பாட்டி கிட்ட போய் சாரின்னு சொல்லு. சாயங்காலம் உங்கப்பா வந்தப்புறம் டாக்டர்கிட்ட போலாமுன்னு சொல்லு....''

பெண் ஒவ்வொரு காலாய் மாற்றி குதித்து ஏதோ விளையாட்டைத் தொடர்வது போல் எண்ணிப் போனது. கேட் பக்கமிருந்த இரண்டு பக்கத்து வீட்டுப் பெண்களுடன் சேர்வதை சரண்யா ஜன்னலில் பார்த்தாள். சில நிமிஷங்களில் எல்லாத் துயரங்களும் ஒளிந்துவிட்டது போலிருந்தது.

குழந்தைகளுடனான இந்த சந்தோஷங்கள் தான் வாழ்க்கையை ரம்மியப்படுத்துகின்றன என நினைத்தாள். குழந்தை பிறப்பைத் தவிர்த்து விட்டு, ராத்திரிகளை ஜாக்கிரதையாகக் கடத்த வேண்டியது பற்றி யோசித்துக் கொண்டே நின்றாள். விலக்கு மூன்றாம் மாதமாகிவிட்டதே என்ற நினைப்பு சட்டெனவந்து எதிரே விசுவரூபம் எடுத்தது. முகத்தை இறுக்கிக் கொண்டாள். இனியொரு குழந்தையோ, அபார்ஷனோ, ஆஸ்பத்திரியோ இம்சையாக இருக்கும் என நினைத்தாள்.

நினைப்பினிடையே கண்களில் கண்ணீரும் வழிந்தது. துக்கம் பெருக்கெடுத்தது. யாரிட்ட சாபம் என்றிருந்தது.

''அம்மா உன் காலம் வேறு. அது பிள்ளை பெறுவது பாக்யம். எத்தனை பிள்ளையோ அத்தனை செல்வம். ஆஸ்திக்கும், சம்பாத்தியத்திற்கும் ஆண் பிள்ளைகள். ஆசை வளர்ப்பிற்கு பெண் பிள்ளைகள். பிள்ளையில்லாதவள் அபாக்யவதி. ஆனால் இன்று.. நானும் அழுகிறேன் அம்மா....''

வயிற்றில் மெல்ல வலி எடுத்தது. அய்யோ என்று முணு முணுத்துக் கொண்டாள். சிசேரியன் ஆபரேஷன் தையல் ஏதாவது உபாதைக்கு ஆகியிருக்குமோ... இது அந்த வகையான வலியல்ல. அடி வயிற்றிலிருந்து வலி இம்சைப்படுத்தியது. வலியால் கண்களில் நீர் பெருகியது. அடிவயிற்றிலிருந்து ஏதோ ஊர்வது போலிருந்தது. புரிந்து கொண்டாள். வலியினிடையே முகம் மெல்ல மலர ஆரம்பித்தது அவளுக்கு.

சந்திரகுமார் சாயங்காலம் வாடின முகத்துடன் வீடு திரும்பினான். சரண்யா சந்தோஷமாய் இருப்பதைப் பார்த்துச் சிரிக்க முயன்றான். அவள் அருகில் சென்றான். அவள் வெட்கத்துடன் ஒதுங்கினாள்.

''பக்கம் வராதீங்க... அங்கேயே இருங்க..'' சற்று அதிர்ச்சியாக இருந்தது அவனுக்கு. சந்தோஷத்தோடு சங்கடமான வார்த்தைகளைச் சொல்கிறாளே என்றிருந்தது.

''உங்களை காலையிலே எரிச்சல்பட்டு கஷ்டப்படுத்திட்டேன்.''

''எனக்கு இன்னமும் புரியலே...''

''எனக்கு தள்ளிப் போய் எழுபது நாளைக்கு மேலாச்சு. பயந்துட்டிருந்தேன். இது வேறயான்னு அவமானமா இருந்துச்சு. அதுதா எரிச்சலாயிட்டுது...

''இப்ப சரியாப் போச்சு.''

புரிந்து கொண்டவன் போல் மெல்ல புன்னகைத்தான்.

## மன்னார்குடியில்...

மன்னை மங்கையர் மன்றம் ஆரம்பித்து அறு வருடங்களுக்குள் தனக்கென ஒரு சொந்தக் கட்டிடத்தையே கட்டி முடித்திருக்கிறது. ராணி அழகர்சாமி, அனுராதா ராஜாராமன், திருமதி.. அசோக்குமார் போன்ற பல பெண்கள், துடிப்புடன் சமூக சேவை செய்கிறார்கள். இவர்களின் கட்டிடத்தை முன்னாள் அமைச்சர் மன்னை நாராயணசாமி திறந்து வைத்தார்.



மீன ராசி:

பூரட்டாதி 4 — ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

மாதத்தின் பிற்பகுதி மனமகிழ்வையும், நிறைவையும் தரும். ஒரு சிலருக்கு அரசு அலுவலகங்களில் வேலை கிடைக்கும். மற்றும் பரிசுகளும், பட்டங்களும் சிலரைத் தேடி வரும். புதிய தொழிலை ஆரம்பிக்கும் வாய்ப்பு பிற்பகுதியில் ஏற்படும். நகைக் கடைக்காரர்கள் நிலை சீராக இருக்கும். பொற்கொல்லர், தச்சர்கள், சினிமாத் துறையினர், சுற்றுலாத் துறையினர்களும் ஏற்றம் பெறுவர். அதிக நன்மை தரும் மாதமாக இரா விட்டாலும் குறைகள் ஏற்பட்டு மனத்தைக் குழப்பும் மாதமாக இருக்காது. மஞ்சள் நிறப் பொருட்களுக்கு மவுசு ஏற்பட்டு அதிகமாக விற்பனையாகும் கன்னிப் பெண்களுக்குத் திருமணம் கைகூடி வரும்.

## அவனி புகழ பவனி வர வேண்டும்!

பஞ்ச மகாபுருஷ யோகங்களில் ஒன்றான பத்ர யோகம் ஏற்படும் உண்டாகக் கூடியஉன்னதநிலையையும், அதனால்பெறக் கூடிய அருளும் பொருளும் எத்தகையது என்பதையும்தொடர்ந்துருசகயோகத்தைப்பற்றி இக்கட்டுரையில் காணலாம். அங்காரகன் எனும் செவ்வாய் ஆட்சி அல்லது உச்சம் பெற்று லக்கினத்திற்கும் அல்லது சந்திரனுக்கும் கேந்திரத்தில் நின்றால் இந்த யோகம் ஏற்படும். இதனால் நல்ல பெயரும், பெருமையும், அதை அனுபவிக்கத் தக்க விதத்தில் தீர்க்காயுளும், தீமைகளையும் சத்ருக்களையும்வென்று, பொது மக்கள் மத்தியில் தலைவனாகி, அதிகாரத்தையும், மதிப்பையும், மரியாதையையும் பெறத்தக்க அளவுக்கு அதிர்ஷ்டம் நம்மை வந்தடையும். ஜாதகத்தில் மட்டுமல்ல, கைரேகையிலும் இந்த அமைப்பைக் காணலாம். குறிப்பாகப் பெண்களது இடது கையில் செவ்வாய்மேடு உயர்ந்தும், படத்தில் காட்டியுள்ளபடி ஆயுள் ரேகை சங்கு அமைப்புடன் அதன்மேல் செங்குத்துக் கோடுகள் (X-Y) போல ரேகைகள் அமைந்திருக்க வேண்டும். படத்தில் உள்ளது போலவே சங்கமைப்போ, கிளைகளுடன் கூடிய புத்திரேகையோ, சற்றுக் கூடியோ குறைந்தோ அல்லது ஒழுங்கற்ற உருவத்துடனோ கூட இருக்கலாம். ஏனெனில் படத்தில் ஓவியம் போல் காட்டப்படுவதால் அப்படியே அமைந்திருக்கவேண்டுமென்பதில்லை. பல சகோதரிகள் தங்கள் கைகளைப் பார்த்துப் படத்தில் காட்டப்படுவதைப் போல இல்லாமல் சற்று மாறியுள்ளதேபரவாயில்லையா எனக் கேட்பதுண்டு. குறிப்பிட்ட உருவ அமைப்பின் சாயல் தெரிந்தாலேகூட போதும். உங்களுக்கு அதற்குரிய பலன்கள் — எழுதப்பட்ட பலன்கள் — கட்டாயம் உண்டு என அறிய வேண்டும்.

குறிப்பாக ருசக யோகத்தையுடையவர்களுக்குச் செவ்வாய் தோஷம் கடுமையாக இருக்காது. அத்துடன் அங்காரகனால் அவர்களுக்கு அபரிமிதமான மனோதைரியமும், திடமும் கிடைக்கும் என்பதை அறிந்து கொள்ள வேண்டும். சமூக சேவை செய்யும் சகோதரிகளும், அரசியலில் மிகச் சிறந்த பேச்சாளராகவும், பொது மக்களின் பேராதரவைப் பெற்றவர்களாகவும் இருக்கும் பெண்மணிகளும் இத்தகைய ருசக யோகத்தைப் பெற்றவர்களே ஆவார்கள். துணிவும், தூய்மையும், அதே சமயம் வாய்மையும் பெற்றுத் திகழ வேண்டுமானால் இத்தகைய அங்காரக அமைப்பு நமது கைகளிலோ, ஜாதகத்திலோ அமைந்திருக்க வேண்டும். காந்தியாரும், இந்திரா காந்தி, கென்னடி போன்றவர்களும், இத்தகைய யோகத்தைப் பெற்றவர்களே. ஆனால் அவர்களது முடிவுக்கு அவர்கள் கையில் அமைந்திருந்த சனீஸ்வரனின் அமைப்பு மிக முக்கிய காரணமாகும். எனவே இறவாப் புகழ் படைக்க பத்ரயோகத்துடன் ருசக யோகம் கட்டாயம் அமைய வேண்டும். இந்த யோகக்காரர்களின் கைகளில் விதிரேகையும், (a-b) சூரிய ரேகையும் (c-d) நன்கு நேராகவும் சீராகவும் படத்தில் காண்பது போல் அமைய வேண்டும். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் அரசுத்துறை, அரசியல் துறை, சமூக இயல் ஆகிய எத்துறையிலும் பேரும் புகழும் அடைய வேண்டுமானால் ருசக யோகம் அமைப்பு அவர்கள் கையில் அமைந்திருக்க வேண்டும். அப்படிப்பட்டவர்கள் அவனி புகழ பவனி வருவார்கள். இதில் எள்ளளவும் ஐயத்திற்கே இடமில்லை.

— ஜெயலட்சுமி கிருஷ்ணன்.



இரவு முழுவதும் புரண்டு புரண்டு படுத்ததில் கண்களில் எரிச்சல்; உடம்பில் வலி... மனசில்...?

இனம் புரியாத வேதனை அரித்துப் பிடுங்கியது. நினைத்துப் பார்க்கும் பொழுது அந்த வேதனை நேற்று மாலையிலேயே மனதுக்குள் புகுந்து கொண்டது என்றே தோன்றியது. என்ன ஏது என்று விளங்காததால் தான் வேதனை.

மணி ஆறு அடித்துவிட்டது. இதற்குள் ஷ்யாமா எழுந்து விடுவாள் வழக்கமாக. இன்று என்னவோ தெரியவில்லை. காப்பி போட்டு, குளித்து குக்கரையும் அடுப்பில் ஏற்றிவிட்டுச் சமையலறையிலிருந்து வெளியில் வந்த விசாலம், குற்றவுணர்வோடு அவசரமாக வரும் ஷ்யாமாவைப் பார்த்தாள்.

புன்னகைத்துக் கொண்டாள்.

''சாரிம்மா. தூங்கியே போயிட்டேன்.''

அவள் கண்களை ஆழமாகப் பார்த்தாள். ஷ்யாமாவால் நேருக்கு நேர் பார்க்க முடியவில்லை. தலை குனிந்த படி மெல்ல நகர்ந்தாள். அவள் கண்களுக்குக் கீழே தெரிந்த கருவளையம், சோர்வைக் காட்டும் வதங்கிய கன்னம், தூக்கமின்மையால் ஏற்பட்ட கண்களுக்குள் செம்மை —

''ஏம்மா ஷ்யாமா, சரியா தூங்கலியா?''

''என்னமோ தெரியல்லை. நேத்து சரியா தூக்கம் வரல்லை.''

காப்பியைக் கலந்தாள்.

''ஏம்மா நீங்க இன்னும் காப்பி குடிக்கல்லையா?

''நாலு வருஷமா, என்னிக்கு நீ இல்லாம காப்பி குடிச்சிருக்கேன் சொல்லு!''

விசாலம் இதை சிரித்துக் கொண்டேதான் சொன்னாள். ஆனாலும் ஷ்யாமாவுக்குக் கண்ணீர் வந்தது. ஐந்தரைக்கு எழுந்து காப்பி போட்டு முதல் டிகாஷனில் இரண்டு பேருமாகக் காப்பி சாப்பிடுவார்கள். காப்பிக்குள் ஒரு சொட்டுக் கண்ணீர் கலந்தது.

ஷ்யாமா காய்கறிக் கூடையை எடுத்தாள். மௌனமாகக் கொத்தவரங்காயை ஆயத் தொடங்கினாள். மனம் முழுவதும் நேற்றைய மாலைச் சம்பவத்தையே மையமாக வைத்துச் சுற்றிக் கொண்டிருந்தது.

இவளுக்கு என்ன வந்தது? காப்பி குடித்து பேப்பர் படித்து விட்டு, படித்த விஷயங்களை மாமியாரிடம் கொட்டி அளந்து கலகலக்கும் ஷ்யாமா ஏன் இப்படி மௌனமானாள்? விசாலத்திற்கும் நேற்று மாலைச் சம்பவம் நினைவில் சுழன்றது.

ஷ்யாமாவும் சங்கரும் அலுவலகத்திலிருந்து வரும் போது விசாலம் பூஜையறையில் விஷ்ணு ச்கஸ்ரநாமம் படித்துக் கொண்டிருந்தாள்.

''படிச்சுப் படிச்சுச் சொன்னேன். இந்த மாதிரி பண்ணிட்டியே! படிக்காதவளா சரி.''

''என்னவோ என் தலைவிதி. ஒரு நாள் மறந்து போச்சு. ஒங்ககிட்ட பேச்சு வாங்கணும்னு இருக்கு!''

''இதபார்! பேச்சு வாங்கறதைச் சொல்றியே! நெட் ரிசல்ட் என்னன்னு யோசிக்க வேண்டாம். எவ்வளவு பெரிய சுமை. பிராப்ளம். இப்பத்தான் அதுதற்கு வழி இருக்கும் போது, யாராவது வலிய போய் ப்ராப்ளத்தை கிரியேட் பண்ணுவாங்களா? முன்யோசனையில்லாமப் பண்ணிட்டு, எதிர்த்துப் பேசினே எனக்குக் கெட்ட கோவம் வரும்!''

''இந்தப் பிராப்ளத்துக்கு நான் மட்டும் காரணம் இல்லை. நீங்களும்தான்!''

''அறைஞ்சேன்னா! நீ மட்டும் மாத்திரையைப் போட்டிண்டிருந்தா, இப்ப இந்தக் கவலையெல்லாம் எதுக்கு?''

''நடந்தது நடந்து போச்சு. வந்ததை வேண்டாம்னு எதுக்குச் சொல்லணும்தான் எனக்குப் புரியல்லை.''

''இதபார் ஷ்யாமா. இது மாதிரி அசட்டுத்தனமா பேசினே நான் பொல்லாதவனா இருப்பேன்.''

''ஏன் கத்தறீங்க. அம்மா காதுல விழப் போறது.''

''அப்ப நான் சொன்னபடி செய். நாளைக் காலை ஏழரை மணிக்கு டாக்டர்

# வம்ச விருக்ஷம்

## காங்கா ராமமூர்த்தி

மீனாட்சியோட க்ளினிக்குக்குப் போறோம்.''

''அம்மாகிட்ட.... சொல்ல வேண்டாமா ?''
குரலில் தயக்கம் எட்டிப் பார்த்தது.

''ஒனக்கு மூளை இல்லைங்கறதை அப்பப்ப எஸ்டாப்ளிஷ் பண்ணணுமா?''

ஷ்யாமா முகம் சிறுத்து வாட, கண்ததும்ப அந்த இடத்தை விட்டு நகர்ந்த போது.

''ஸ்ரீராம ராமேதி ரமே ராமே மனோரமே
சகஸ்ரநாம தத்துல்யம் ராம நாம
வரானனே....''

சொல்லியபடியே தலை தூக்கி வி[illegible] பார்க்க நேர்ந்தது.

'திடுக்'கென்று ஒரு விநாடி இதயம் நின்றது போல ஸ்லோகமும் நின்றது. மறு விநாடியே சமாளித்துக் கொண்டாள். புருஷன் பெண்டாட்டிக்குள் பேச்சுத்தடிப்பது புதியது அல்லவே! எப்போதும் இழைந்து கொண்டேவா இருக்க முடியும். இரண்டும் இரண்டு உயிர். தனித்தனி மனசு. ஒவ்வொருவர் சூழலும் உலகமும் வெவ்



# ஆயுர் வேத முறையில் புற்று நோய்க்கு சிகிச்சை



நான், கமலாநாகராஜராவ் 'W/o R. Nagaraja Rao Retired Chief Manager, Union Bank of India at Bangalore) கியானகாலோஜிஸ்டை 'Gynaecologist) சந்தித்த பொழுது அவர் என்னை பம்பாயில் உள்ள புற்று நோய்க் கழகத்தை, சொவிக்ஸ் புற்றுநோய் இருப்பதால், பார்க்கச் சொன்னார். நானும் புற்று நோய் சிகிச்சைக்காக இந்தியாவில் உள்ள சில புற்று நோய் மருத் துவமனையில் சிகிச்சை பெற்றுக் கொண்டேன். ஆனால் எந்தவிதமான முன்னேற்றமும் தெரியவில்லை.

1977 டிசம்பர் மாதத்தில் ஒரு சிலரால் மிகவும் வெற்றி கரமாக பல புற்று நோய் உள்ளவர்களை தனது சிகிச்சையின் மூலம் குணப்படுத்திவரும் ஹைதராபாத்தில் கேன்ஸர் இன் பர்மரி டாக்டர் பாபுராவ் அவர்களை பற்றி தெரியவந்தேன். உண்மையில் ஹைதராபாத்தில் உள்ள எனது சில நண்பர் களிடம் விசாரித்தேன், அவர்கள் கொடுத்த தைரியத்தினால் டாக்டா பாபுராவ் அவர் களிடம் சிகிச்சை பெற்றுக் கொண்டேன். பூரண சிகிச்சை முடிந்தவுடன் நான் கியான காலோஜிஸ்டை பார்த்தேன். அவர் எனது நிலைமையை பூரணமாக குணம் ஆனது கண்டு மிகவும் சந்தோஷப்பட்டார். மேலும் புற்று நோய் இருப்பதற்கான எந்த அறிகுறியும் இல்லை என்று சொன்னார். இப்போழுது நான் நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கிறேன்.

## டாக்டர் பாபுராவ்

புற்று நோய்க்கு சிறந்தமுறையில் சிகிச்சை செய்து அவர்களுக்கு மறு பிறவி கொடுக்கிறார்.

கமலா நாகராஜராவ்
ஆர். கமலம்மா
1224, 34-வது கிராஸ் ஜெயநகர்,
பெங்களூர்

### கால அட்டவணை

| விலாசம் | போன் நம்பர் | பார்க்கும் கிழமைகள் |
|---|---|---|
| டாக்டர் பாபுராவ்—வீடு<br>கேன்ஸர் இன்பர்மரி<br>2-1610 செடம்ரோடு, மொமுலாகூடம்<br>ஜெகதாம்பா பெட்ரோல் பங்க் அருகில்<br>குல்பார்கா (கர்னாடகா) | 21452 | பிரதி<br>திங்கள்<br>செவ்வாய்<br>மாத்திரம் |
| ஹோட்டல் மிட் டவுன்<br>அன்டேரி (மேற்கு)<br>ரயில்வே ஸ்டேஷன் எதிரில்<br>பம்பாய். | 6288882<br>6286635 | பிரதி<br>புதன் |
| கேன்ஸர் இன்பர்மரி<br>1-1-271/3 சிக்கட்பள்ளி<br>பஸ் ஸ்டாப் அருகில்<br>ஹைதராபாத் - 500 020. | 64735 | பிரதி<br>வெள்ளி |
| C/o ராம் இண்டாநேஷனல்<br>114, கோடம்பாக்கம் நெடுஞ்சாலை,<br>சென்னை 600 034. | 473350<br>473420 | பிரதி<br>சனி |
| C/O. ஹோட்டல் பிருந்தாவன்<br>மஹாத்மா காந்தி ரோடு,<br>பெங்களூர். | 573271 | பிரதி<br>ஞாயிறு |

வேறு வட்டங்கள். உரசிக் கொள்ளும் போது பொறி பறக்கத்தான் செய்யும். இதுவும் வாழ்க்கைக்கு அத்யாவசியம்தான். உப்புச் சப்பில்லாத பத்தியமாக இருந்தால் ருசிக்கவா செய்யும்?

விசாலம் சண்டையைப் பார்த்து கலங்கவோ, சமாதானத்தைக் கண்டு மகிழவோ மாட்டாள். ஆனாலும் இன்று என்னவோ விபரீதமாக இனம் புரியாத வேதனை வயிற்றைப் பிசைந்தது.

எதுவாயிருந்தாலும் விசாலத்துக்கு அதன் காரணம் தெரிந்திருந்தால் மனம் வேதனைப் பட்டதில்லை. ஆனால் நேற்றிலிருந்து, இவர்கள் கோபதாபத்துக்கும் கடுஞ்சொல்லுக்கும் காரணம் என்ன என்பது விளங்கவில்லையே? சங்கர் முகம் சிவந்து அவள் அதிகம் பார்த்ததே இல்லை. என்ன கோபமாக இருந்தாலும் வார்த்தைகளில் வெளிப்படுத்தவும் மாட்டான். மௌனமாக இருந்து காரியத்தைச் சாதித்து விடுவான். அவன் இப்போது கொதித்துப் போயிருப்பதைப் பார்க்கும் போது விசாலத்தால் கவலைப் படாமல் எப்படி இருக்க முடியும்?

'பட்'டென்று நாசூக்கு இல்லாமல், கேட்பதும் விசாலத்துக்கு நாகரீகமாகத் தெரியவில்லை. ''உனக்கொன்றுமில்லை'' என்று முகத்திலடித்தாற் போல் பேச்சு வாங்க அவளுக்குத் தாங்காது. தனக்குச் சொல்ல வேண்டும் என்று அவர்களுக்குத் தோன்றினால் சொல்லாமல் இருக்க மாட்டார்கள் என்ற நம்பிக்கை, ஆனாலும் அவள் பெத்த மனம் புழுங்கியது. யாரோ எவரோவா, பிள்ளை மாட்டுப் பெண் இவர்கள் முகம் வாடினால் மனம் பொறுக்கவில்லை.

ஷ்யாமா சொல்வாள் என்று எதிர் பார்த்தாள்.

பெண்மணிகளே! இனிமேல் உங்கள் 'பர்ஸை' ஜாக்கெட்டுக்குள் செருகி வைக்காதீர்கள்! இதனால் 'சரும' நோய் (பர்ஸை எந்த இரசாயனப் பொருட்களை உபயோகித்துத் தயாரித்தார்களோ? ) வருகிறது என்று மருத்துவர்கள் கூறுகிறார்கள்.

— ஆர். ராஜேஸ்வரி.



அவளும் இதோ, இறுக்கமான முகத்தோடு காய் நறுக்கிக் கொண்டிருக்கிறாள். விசாலத்துக்குப் புதிராக இருந்த இன்னொரு விஷயம், ஏதோ பேசிக் கொண்டிருந்தவர்கள், இவள் தலையைக் கண்டதும் 'சட்'டென்று நிறுத்திக் கொள்வானேன்!

''ஷ்யாமா, அருணை எழுப்பலியா? ஸ்கூலுக்கு நேரமாயிடுமே!''

நிமிர்ந்து கடிகாரத்தைப் பார்த்தவள் கண்களில் ஜலம் ததும்பியிருந்தது. ''அடடா, மணி, ஏழு ஆயாச்சா! என்னவோ நினைவு. இதோ எழுப்பறேன்.'' வேகமாக எழுந்து போகும்போதே, அவள் கண்களைத் துடைத்துக் கொள்வது தெரிந்தது.

''ஹூம்'' என்று பெருமூச்சு அடிவயிற்றிலிருந்து கிளம்பியது.

ஜன்னலைத் திறந்து வைத்தாள். வானம் ஆரஞ்சுவண்ணத்தில் வெண்மேகங்களோடு தெரிந்தது. எவ்வளவு அழகுகளை இறைவன் காட்டுகிறான். ஆனால் இந்த இயற்கையின் எழிலோவியத்தைப் பார்க்க, பரவசப்பட இங்கே யாருக்கு நேரமிருக்கிறது. வானப் பின்னணியில் பச்சை இலை போர்த்திய மரம் தெரிந்தது. கரிய காக்கைகள் ஒன்று மாற்றி ஒன்று கரைந்தன. எல்லாம் ஆபீஸ் காக்கைகள். ஏழு ஏழரைக்கு எல்லோரும் அன்னம் வைத்து பழக்கப் படுத்தியிருந்தார்கள். 'க்ரீச்' என்று கத்திக் கொண்டு அணில் ஒன்றையொன்று துரத்தின. வரிசையாக வானவீதியில் பச்சைக் கிளிகள் பறப்பதைப் பார்த்தபோது மனத்தில் சந்தோஷ அலைகள் மோதின. உலகம் இந்த சின்ன வீட்டுக்குள் அதன் மனிதர்களுக்குள் அவர்கள் பிரச்னைகளோடு மட்டும் இல்லை என்று விசாலம் மனம் லேசாக திரும்பினாள்.

குக்கர் அவளை நடைமுறை உலகுக்கு இழுத்து வந்தது. மறுபடி சங்கரின் கோபக் குரலில் வார்த்தைகள் தடித்து வருவது கேட்க, சமையலறை வாயிலில் நின்றாள்.

குரல் முணுமுணுப்பாகித் தேய, அவள் ஒரு புறமும் அவன் மறுபுறமாகச் சென்றார்கள். அருணை எழுப்பி ஷ்யாமா பின்புறம் அழைத்துப் போனாள். மறுபடி அவள் கண்களைத் துடைத்துக் கொள்வதைக் காண விசாலத்திற்கு பகீரென்றது. இந்த இரண்டு இளம் உள்ளங்களும் மோதிக் கொண்டு இரத்தம் கசியக் கசிய இருப்பதை வயதில் மூத்தவளான நான் பார்த்துக் கொண்டிருப்பது நியாயமா? நாகரீகம் என்று ஒதுங்கி நிற்பது மூன்றாம் மனிதர் வேலை இல்லையோ? அவர்களே சொல்வதற்குத் தயங்குகிறார்களோ என்னவோ? கண் முன்னால் இவ்வளவு கோபமும் கண்ணீரும் கண்ட பின்பு ஜடமாக இருக்கிறாளே, ஒரு வார்த்தை என்ன விஷயம்?'' என்று கேட்கட்டுமேஎன்றுதவிப்பில் இருக்கிறார்களோ?

தகுந்த சமயத்தை எதிர் நோக்கி விசாலம் காத்திருந்தாள்.

அருணை அழைத்து வந்த ஷ்யாமா, பாலை எடுத்து அவனிடம் திணித்துவிட்டு அவசரமாக, புடைவை இத்யாதிகளை எடுத்துக் கொண்டு குளிக்கக் கிளம்பினாள்.

''இன்னிக்கு ஆபீஸுக்கு சிக்கிரம் போகணுமா ஷ்யாமா? அதிசயமா சங்கர் கூட குளிச்சு ரெடியா இருக்கான்! இல்லை வேற எங்கேயாவது போகப் போறேளா?''

ஷ்யாமா திடுக்கிட்டு மாமியாரை ஏறிட்டாள். உதடு துடித்தது. எதையோ சொல்ல நினைத்து, சொல்லலாமோ வேண்டாமோ என்ற குழப்பத்தில் கூடத்தின் பக்கம் தலை சாய்த்துப் பார்த்தாள்.

''அருண், ஸ்கூலுக்கு எடுத்திண்டு போக புத்தகப் பையை ரெடி பண்ணு, ஓடு.''

குழந்தை துள்ளிக் கொண்டு சென்றதும், ஷ்யாமா மாமியாரிடம் நெருங்கி வந்தாள்.

''ஏழரை மணிக்கு டாக்டர் மீனாட்சியைப் பார்க்கப் போகணும்..''

ஓ, அதுவா விஷயம்! இதற்கு ஏன் இவ்வளவு கோபதாபம், சண்டையும் சச்சரவும்?

''ரெண்டு மாசம் ஆச்சா ஷ்யாமா? சந்தோஷப்பட வேண்டிய விஷயம் தானே. அதுக்காகவா நீங்க ரெண்டு பேரும்...'' விசாலத்துக்கு என்ன சொல்லிக் கேட்பது என்று தெரியவில்லை. அவர்களுடைய கோபக் குரல்கள் தன் காதுகளை எட்டியதைச் சொல்லலாமோ?

''அம்மா, நேத்திக்கு டாக்டர்கிட்ட போய் ஸ்கேன் பண்ணினதிலே கன்பர்ம் ஆயிடுத்து.''

''அருணுக்கோ நாலு வயசாச்சு. இனிமே என்ன? இன்னொன்று பிறக்கட்டுமே. அருணுக்கும் ஒரு ஒடப்பிறப்பு வேண்டாமா?''

''அதைச் சொல்லப் போகத்தான் அவருக்குக் கோவம் வந்திடுத்து. 'காச் மூச்' சுன்னு கத்தறார். இப்பவே எனக்கு இருபத்தெட்டு வயசாறது. இப்படியே தள்ளிண்டே போனா முப்பது வயசு தாண்டினா டெலிவரி கஷ்டப்படாதா?''

''அதானே! அவன் கெடக்கறான் விடு. இன்னிக்கு எதுக்கு மறுபடி டாக்டர்கிட்ட போகணும்?''

''அபார்ஷன் பண்ணிக்கணுமாம்!''

விசாலம் தீயை மிதித்தது போல, துடித்தாள். ஒரு உயிரைக் கொல்வது அவ்வளவு எளிதாகி விட்டதா? மருத்துவமும் விஞ்ஞானமும் உயிர் விதைகள் முளைக்காமல் இருக்க என்னென்ன யுக்திகள் செய்ய வேண்டுமோ செய்து விட்டது.

முளைத்தபின் கிள்ளலாமோ? விசாலத்துக்கு இதயத் துடிப்பு அதிகரித்தது. படபடப்போடு, சுவரில் சாய்ந்தாள்.

''ஷ்யாமா, இன்னுமா நீ ரெடியாகல்லே?''

அம்மா சுவரில் சாய்ந்து நிற்க, ஷ்யாமா அவளைப் பிடித்துக் கொண்டு பரிதாபமாகப் பார்க்க...



**பெரிய நெல்லிக்காயை முழுதாக ஊறுகாய் போடும்பொழுது, சுத்தமான கோணி ஊசியால், 3, 4 இடங்களில் குத்தி விட்டால் சீக்கிரமாக உப்புப் பிடிக்கும். ஊறவும் செய்யும்.**

— பார்வதி

சங்கர் பல்லைக் கடித்தான். இரண்டாம் பேர் அறியாமல் செய்து விட்டுவர நினைத்தவனுக்கு, ஷ்யாமாவின் போக்கு கோபத்தைக் கிளறியது.

''அம்மா கிட்ட சொன்னியா? அவளால இதையெல்லாம் ஜீரணிக்க முடியாதுன்னு தானே நான் சொல்ல வேண்டாம்னேன்.''

''சங்கர், என்னால எதைவேணா ஜீரணிக்க முடியும். ஒரு உயிரைக் கொல்றது பாவம். அந்த நெனைப்புத்தான் என்னை வதைக்கறது. ஆமாம். குழந்தை வேண்டாம்னு சொல்றயே! இப்ப வேண்டாம்னு தான் சொல்றயா?''

''எப்பவுமே வேண்டாம்னு சொல்றேன்.'' சங்கரின் வார்த்தைகள் அழுத்தம் திருத்தமாக வெளிவந்தன. தீர்மானம் செய்தால் அதை நிறைவேற்ற நினைக்கும் பிடிவாதம்.

''அப்படி என்ன, ஒங்களுக்கு குழந்தைகள் மூணு நாலு பொறந்து அலுத்துப் போச்சா? இல்லை வளர்க்க வசதிதான் போறாதா? சொல்லு சங்கர், இப்படி உயிர் வதை செய்யறதுக்கு எது காரணம்?''

''நீதான் என்னமோ சீரியஸா எடுத்துக்கறே. இப்ப இதெல்லாம் சகஜம். ஒரு நாளைக்கு......

''நீ பேச்சை மாத்தாதே, இந்தப் புள்ளி விபரமெல்லாம் எனக்கு வேண்டாம். நான் ஆராய்ச்சியா பண்ணப் போறேன். ஏன் குழந்தையே வேண்டாம்னு சொல்றே. காரணத்தைச் சொல்லு!''

அம்மாவின் குரலிலிருந்த உஷ்ணமும் கடுமையும் சங்கரைக் கொஞ்சம் பயமுறுத்தின.

''அது.... வந்து ஒரு குழந்தை போதுமேனுதான். அடுத்த குழந்தை பெண்ணாகப் பிறந்து தொலைச்சால் என்ன செய்யறது? பெண்ணை வளர்த்து படிக்க வைத்து கல்யாணம் பண்ணி அப்பப்பா... சமுத்ர அலை மாதிரி செலவு விடாம வரும். இதையெல்லாம் அவாய்ட் பண்ணலாமேன்னு தான்....''

''அவாய்ட் பண்ண நெனைக்கறவன் உசிர் வரதுக்கு முன்னே தடுக்கறதுக்கு என்ன ?''

''எல்லாம் இவளாலதான் ...''

''போதும் நிறுத்து. எல்லாம் கடவுளோட சித்தம். நம்மால ஒன்றும் செய்ய முடியாதுன்னு தெரிஞ்சுக்கோ! அதிலேயும் பொறக்கறது பொண்ணா இருக்குமோனு நீ பயப்படறதை நெனச்சா வருத்தமா இருக்கு சங்கர். உன்னைப் பெத்தவ ஒரு பெண். உன்னை தந்தையாக்கியவளும் ஒரு பெண். உன்னைச் சகோதரனா நெனைச்சுக்க மூன்று சகோதரிகள் இருக்கா. பெண் வம்ச விருக்ஷம். அதன் வேரில் வெந்நீரைக் கொட்டிட்டு அண்ணாந்து பார்க்கறவன் முட்டாள்.

''ஒவ்வொரு பெண் கல்யாணத்தின் போதும் அப்பா விழி பிதுங்கிப் போனதை நான் கண்ணால பார்த்துத் தாம்மா வெறுத்துப் போனேன்.'

''அதெல்லாம் அந்தக் காலம். இனிமே வருங்காலத்துல பெண்ணும் ஆணும் சமமா, இருக்கப் போற காலம். ஏன் இப்பவே எடுத்துக்கோயேன். உன் கல்யாணத்துல ஷ்யாமா குடும்பத்துச் செலவை யோசிச்சு நாம சிக்கனமா கல்யாணம் நடத்தினமா இல்லியா?''

''எல்லாருக்குமே என்னைப் போல மாப்பிள்ளை வாய்ச்சிட்டா எப்படி?''

''நீ ரொம்ப அலட்டாதே! நூத்துல ஒருத்தர் தான் வரதட்சணை அது இதுன்னு கேக்கறா. காலம் மாறிண்டே வரது. பொண்ணை அவளுக்காகவே ஏத்துக்கற காலம் வந்திடும்.''

''ஒன்பேச்சை நம்பிண்டு பெண்ணைப் பெற்றுக் கொண்டால் என்னைப் போல மடையன் வேற யாரும் இருக்க மாட்டான். சரி சரி ஷ்யாமா கிளம்பு.''

''விடிய விடிய இராமாயணம் கேட்டு சீதைக்கு ராமர் சித்தப்பாங்கறியே! இத பார். ஒன்னை மாதிரியே இப்ப நாட்ல எல்லாரும் நெனைக்க ஆரம்பிச்சா அடுத்த தலைமுறையில் பெண்ணே இருக்க மாட்டான்னு தோணறது. கடவுள் புத்திசாலி. ஒன்னையும் என்னையும் விட புத்திசாலி. அவன் ஒரு கணக்கு வெச்சிருப்பான். இத்தனை காலமா பெண்கள் பொறந்து வளர்ந்து வாழ்க்கைப்பட்டு பேரெடுத்ததே இல்லியா? என்னவோ புதுசா தத்துவம் பேசறியே! மொளச்ச மொளையைக் கிள்ளாதே. மேல இருக்கிறவனுக்குக் கணக்கு தெரியும் ஆணையும் பொண்ணையும் சமமாத்தான் படைப்பான். படைக்கறதுக்கெல்லாம் ஒரு வழியையும் அவன் காட்டத்தான் செய்வான். நாம் ஒரு கருவி. தெரிஞ்சுக்க. எதிர் காலத்தப்பத்தி சிந்திக்கறதுலேயும் ஓரளவு நியாயம் இருக்கணும். ''வம்ச விருக்ஷத்தை அழிக்க நினைக்கலாமோ?''

ஷ்யாமா, சங்கரை ஆழமாக நோக்கினாள். பார்வையில் ஒரு துணிவு தென்பட்டது.

''ஷ்யாமா போல ஒரு பெண் பிறக்கட்டுமே. வேணாம்னு சொல்லுவமா? பெண் சமூகத்துல பாதி. அவளை ஒதுக்கி ஒண்ணும் செய்ய முடியாது இவ்வளவும் சொல்லிட்டேன். அப்புறம் ஒன்பாடு ஒன் பெண்டாட்டி பாடு.''

விசாலம் அடுப்பை கவனிக்கப்போனாள். சங்கர் ஹாலில் உட்கார்ந்து மோட்டுவளையைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஐந்து நிமிடம் கழித்து, ''ஷ்யாமா... சாப்பாடு ரெடியா.... நான் ஆபீஸ் போகணும்....'' என்றான்.

இரண்டு பெண்களின் முகங்களிலும் சிரிப்புப் பூவாக மலர்ந்தது.

---

தேங்காய் பர்பி செய்யும் போது வேர்க்கடலையின் சிவப்புத் தோலை நீக்கி, இரண்டாக உடைத்து, நெய்யில் பொரித்துப் போடுங்கள். ஆகா, படுஜோர்!

— பார்வதி.



---



வெல்லக் கொழுக்கட்டை வேக வைக்கும் போது, துணி போட்டு வைத்தால், அதில் ஒட்டிக் கொள்ளும். வாழை இலைக் கிழிசலைப் போட்டால், சிறிதும் ஒட்டாது. வீணாகாமல் எடுக்கவும் வசதியாக இருக்கும்.

— பார்வதி.



Colour photo : M. Parwathisam

# மௌனம்

மங்களாம்பிகை அம்மனின் சந்நிதி முன்பு வந்துநின்றேன். மனத்தில் எப்போதும் நிலவும் நிம்மதியை நினைத்து வியந்தேன். எந்த மதத்தைச் சார்ந்தவரும் கடவுள் முன்னிலையில் அப்பெரும் சக்தியுடன் ஒன்றாகி விடும் விந்தையை நினைத்தும் மகிழ்ந்தேன். பல ஆண்டுகளாக இக்கோயிலுக்கு வந்துவிட்டுப் பிறகுதான் அலுவலகம் செல்வேன். ரிடையரான பிறகு வழிபாட்டிற்கு இன்னும் கொஞ்சம் நேரம் என்னால் செலவிட முடிகிறது. வீட்டிற்குத் திரும்பினால் என் மகன் என்னைப் பரிகாசம் செய்வான். ''பேசாமல் அப்பா கோயில் குருக்களாக இருந்திருக்கலாம்'' என்று. எனக்கு அன்றாடம் இந்தச் சந்நிதிக்கு வந்து தொழுதால்தான் அன்றைய நாளே நிறைவு பெற்றதாகத் தோன்றும்.

இத்தகைய சூழ்நிலையில் விளைந்த அந்த அனுபவம்...

அன்று இறைவியின் முன் நான் நின்றிருந்த போது கோயில் குருக்கள் தட்டில் ஏற்றிய கற்பூரத்துடன் என்னிடம் வந்தார். என்னைக் கண்டவர், ''ராஜலக்ஷ்மி அம்மாள் சேதி தெரியுமா உங்களுக்கு?'' என்று கேட்டார். பல ஆண்டுகளாக அந்த அம்மாள் கோயிலுக்கு வந்து மனமுருகி நிற்பதைப் பார்த்திருக்கிறேன். ஆனால் ஒரு நாளும் அவர்களோடு பேசியதில்லை. சில நாட்கள் அவர்களுடன் சூரிதார் அணிந்திருக்கும் ஓர் இளம் பெண்ணையும் பார்த்திருக்கிறேன்.

''அவர்களுக்கு என்ன நேர்ந்தது?'' என்றேன்.

''நேற்று அம்மனைத் தரிசித்துவிட்டு வீடு திரும்புகையில் அந்த அம்மாளை ஒரு கார் இடித்துத் தள்ளிவிட்டது. ராமகிருஷ்ணா ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கிறார்கள்.''

''அட பாவமே, கோயிலிலிருந்து திரும்பும் போதா?'' என்று தொடர்ந்தேன்.

''எல்லாம் அன்னையின் திருவிளையாடல்'' என்றார் குருக்கள்.

வீட்டிற்குச் சென்று என் மனைவியிடம் இந்த விஷயத்தைச் சொன்னேன். ''கலி காலம் என்று சரியாகத்தான் சொல்கிறார்கள்,'' என்றாள் என் மனைவி.

''மண்ணாங்கட்டி! ஏதோ விபத்து. ஏன் அனாவசியமான சர்ச்சை?'' என்றான் என் மகன்.

மேலும் ஒரு வாரம் சென்றது. அன்று குருக்கள் என்னிடம், ''மேலும் கேளுங்கள். ராஜலக்ஷ்மி அம்மாளின் மகள் மொபெட்டில் வரும்போது யாரோ தெருவில் வீசிய கிரிக்கெட் பந்து அடித்து பலத்த அடியாம். பத்துத் தையல் போட வேண்டியிருந்ததாம்.



அந்த அம்மா வீட்டுப் பக்கத்தில் இருப்பவர் சொன்னார்.''

என் மனத்தில் பேரதிர்ச்சி. நான் தொழும் அன்னை ஏன் இப்படிப்பட்ட கஷ்டத்தை அந்தப் பெண்மணிக்குத் தருகிறார்? எனக்கு ஒன்றும் புரியவில்லை. இதை விதி என்பதா, கர்ம வினை என்பதா? இல்லை, கலி முற்றி விட்டதா? தெய்வத்தைப் பார்த்து, ''ஏன் அம்மா, இப்படிச் செய்கிறாய்?' என்றும் கேட்டு விட்டேன். அன்னையின் மௌனம் என் சஞ்சலத்தை அகற்றவில்லை.

'வீட்டிற்குச் சென்றவுடன் அன்றைய தின சரியை எடுத்தேன். ''வழிபாட்டிற்குச் சென்ற ஐந்து பேர் பலி.'' ''கோயிலுக்குச் சென்ற பெண்ணிடம் வழிப்பறி'' என்ற தலைப்புச் செய்திகள் கண்முன் ஆடின. குழப்பம் அதிகமாயிற்று. நாட்டில் என்ன நடக்கிறது, நல்லதுக்குக் காலம் இல்லையா?''

அடுத்த நாள் கோயிலுக்குச் செல்லும் போதே மனநிறைவு இல்லை. எப்போதும் நான் பெறும் அமைதியை இழந்திருந்தேன். யாரோ இரு பெண்மணிகள் பேசிக் கொண்டிருந்தனர். 'ராஜலக்ஷ்மி' என்ற பெயர் பேச்சில் அடிபட்டது. சற்று நிதானித்தேன்.

''பட்ட காலிலே படும் என்பார்கள். அப்படித்தான். ஏற்கெனவே அவர்கள் — அம்மாவும் பெண்ணும். ஹாஸ்பிடலில். அந்த அம்மா புருஷனும் மஸ்கட்டிலேயிருந்து வந்தாகிவிட்டது. அவருக்கு வேலை போயிடுத்தாம்.''

அன்றோடு நான் நாள்தோறும் கோயிலுக்குச் செல்வது நின்றுவிட்டது. என் மனைவியும், மகனும் மிக வியந்தனர். ''அப்பாவிற்கு ஏன் இந்தத் திடீர் ஞானோதயம்?'' என்றான் என் மகன் சிரித்துக் கொண்டு. ஆனால் என் மனநிலையை விவரிக்க நான் தயாராக இல்லை.

பல நாட்கள் வந்தன, ஊர்ந்தன, பறந்தன. நான் கோயில் பக்கமே திரும்பவில்லை. ஆறேழு மாதங்கள் ஆகிவிட்டன.

என் மனைவி ஒரு நாள் மயிலாப்பூர் சென்று காப்பிக் கொட்டை வாங்கி வரச் சொன்னாள். நான் லஸ் சர்ச் வீதி வழியாக வந்து கொண்டிருந்த போது எதிரே ராஜலக்ஷ்மி அம்மாள், அவர் பெண், ஒரு முதியவர். என்னைக் கண்டதும் அந்த அம்மாள் அடையாளம் கண்டு கொண்டார். முகத்தில் ஒரு புன்சிரிப்பு. பிறகு ஒரு கேள்விக் குறி.

என்னிடம் வந்து அவர், ''ஏன், இப்போதெல்லாம் உங்களைக் கோயிலில் பார்க்க முடிவதில்லை? இவர் என் கணவர். பெயர் கோபாலன். இப்போது இங்கேயே சொந்தத் தொழில் செய்கிறார்'' என்றார்.

---

கோபாலன் என்ற அந்த முதியவரும் நானும் மற்றவரும் பேசிக் கொண்டே நடந்தோம். கோபாலன் பேச்சில் சமர்த்தர். பேச்சு சுவாரஸ்யத்தில் நடந்து வந்ததே தெரியவில்லை.

பேச்சு நடுவில் அந்த அம்மாள் என்னிடம்,

''நான் ஒன்று சொல்வேன். தவறாக நினைக்காதீர்கள். நீங்கள் ஏன் கோயிலுக்கு வருவதில்லை? என் அனுபவத்திலிருந்தே சொல்கிறேன். சில சமயங்களில் நமக்குச் சாதகமாக அமையாவிட்டால் தெய்வ நம்பிக்கையை இழந்து விடுகிறோம். உங்களுக்கும் அப்படியா?''

நான் பதிலுக்குச் சற்று உரக்கச் சிரித்தேன். அவர் தொடர்ந்து,

''என்னை எடுத்துக் கொள்ளுங்கள். இவர் மஸ்கட்டில் இருந்தார். பணம்தான் குறி. எனக்கு இவர் இங்கு இல்லாத வாழ்க்கையில் பிடிப்பு இல்லை. இவருடன் பேசிக் கொண்டிருந்தாலே போதும். அம்பாளிடம் என் குறையைப் பல தடவை முறையிட்டிருக்கிறேன். மேலும் எங்கள் பெண்ணையும் ஒரு நல்ல இடத்தில் கொடுத்து அவளுக்கு ஒரு வாழ்வு அமைத்துத் தரவேண்டாமா? இனி இங்குதான் இருக்கப் போகிறார்'' என்றார்.

கோபாலன் சொன்னார்: ''ஆமாம், இவர்களுக்கு ஏற்பட்ட விபத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். நான் இங்கிருந்தால்... நல்லது என்று வந்துவிட்டேன். பணம் மட்டும் முக்கியமில்லை. நம் கடமைகளையும் செய்ய வேண்டுமே? என் நண்பரின் உதவியுடன் சொந்தத் தொழிலும் ஆரம்பித்து விட்டேன். கோயில் குருக்கள் கூடச் சொன்னார். உங்களுக்குக் கல்யாணத்திற்கு ஒரு பையன் இருப்பதாக. என் பெண் வித்யாவிற்கு இருபத்தேழு வயது. இப்போது வேலை பார்க்கிறாள். நீங்கள் சம்மதித்தால் உங்களை வீட்டில் வந்து சந்தித்து ஜாதகத்தையும் வாங்கிக் கொள்கிறோம்.''

எனக்கு அன்னை மங்களாம்பிகையின் மௌனத்தின் பொருள் அப்போதுதான் புரிந்தது.

''தாயே!'' என்று மனத்தளவில் நினைத்தபடியே,

''உங்கள் இருவருடைய சுபாவமும், தெளிந்த பேச்சும் எனக்கு மிக சுவாரசியமாகவே இருக்கின்றது. நான் ஜாதகங்களில் நம்பிக்கை வைப்பவன் அல்ல. எனக்கு வேண்டியது மனப்பொருத்தம்தான். உங்களுக்கு வேண்டுமென்றால் என் மகன் ஜாதகத்தையும் தருகிறேன்'' என்றேன்.

வீட்டிற்குப் போகாமல் நேரே கோயிலுக்குப் போனேன் —

சொல்ல விரும்புகிறோம்!

# எலுமிச்சம் பழத்தை என்ன செய்ய?



* 'கேயெஸ்'ஸின் ''அக்கா வந்துட்டான்னு'' அடிக்கற லூட்டியில அந்தக் குழந்தை(?)களோடு நானும் கலந்து 'கோடை விடுமுறை'யின் சிறப்பை ரசித்துச் சுவைத்தேன்.

சென்னை – 49, மயிலை. கோபி.

* தினம் தினம் விதம் விதமான வகையில் நிகழும் விபத்துக்களை, நீங்கள் கூறியிருக்கும் 'நவ' யோசனைகளைக் கடைப்பிடித்தாலே தடுத்து விட முடியும். கடைப்பிடிப்பார்களா வாகனம் ஓட்டுபவர்களும், அதில் அமர்ந்து செல்பவர்களும்?

தஞ்சாவூர் – 1, இரா. ஆதி நாராயணன்.

* 'மரங்களும் மலர்களும்' சரி. ஆனால் வாயில்லா அவற்றைக் குழந்தை தீபாவுடன் பேச வைத்து, விளையாட வைத்து... கதையா அது. அல்லவே அல்ல. ஆசிரியரின் உள்ளத்தில் குமுறும் ஒரு உண்மை நிகழ்ச்சி தான். சிம்லாவைக் கண் முன் காட்டிய ஆசிரியை, அந்த மகிழ்ச்சியில் தீபாவை மூழ்கடித்து எங்களைக் கண்ணீர்க் கடலில் ஆழ்த்தி விட்டார்.

புகலூர், ஸ்ரீநிவாஸன்.

* ''நினைத்தது நடக்கும்'' என்ற முதல் பக்கக் கட்டுரை தன்னம்பிக்கையை நெஞ்சில் நிலைநாட்டிக் கொள்ள ஒரு அருமையான வெளியீடு.

பத்மாவதி செல்வராஜ் அவர்களுக்கு என் நன்றி கலந்த பாராட்டுக்கள்!!

ஆட்டையாம்பட்டி, தேன்மொழி சந்திரசேகரன்.

* சிறு வயதில் எங்கள் ஊரான அகரமாங்குடியில் இருந்து மெலட்டூர் நாடகம் பார்க்கச் செல்லும் போது அம்பி ஐயரின் (சாமிநாதன்) இரண்ய கசிபு, அரிச்சந்திரன் வேடப் பொருத்தமும், நடிப்பாற்றலும் கண்டு ஆச்சரியப்பட்டிருக்கிறேன். அந்தக் கலைக்காக நாற்பது வேலி நிலத்தை (இன்றைய மதிப்பில் பன்னிரண்டு முதல் பதினைந்து லட்சம் ரூபாய்) விற்ற குடும்பம் அவருடையது என்பதை அறிந்து பிரமிப்பு அடைகிறேன்.

சென்னை – 28, எம். தியாகராஜன்.

* 'கல்யாணக் கனவுகள்' எழுதிய ஆசிரியரை எப்படிப் பாராட்டுவது என்றே தெரியவில்லை. மத்திய தர குடும்ப நிலையை, அதுவும் இரண்டு மூன்று பெண்களைப் பெற்ற பெற்றோர்களின் நிலையை அப்படியே கண் முன்னால் கொண்டு வந்து நிறுத்தி, கண்ணீரை வரவழைத்து விட்டார்.

புது தில்லி, லலிதா விஸ்வநாதன்.

* ஜோதிட சாஸ்திரம் என்பது ஆண்களுக்குத்தான் கைவந்த கலை, பெண்களுக்கு வராது என்று எண்ணிக் கொண்டிருந்த என்னைப் போன்ற எண்ணற்ற பெண்களுக்குக் கடலங்குடி சாஸ்வதியின் ''உண்மையைச் சொல்ல வேண்டும், இதமாகச் சொல்ல வேண்டும்'' கட்டுரை மனதுக்கு மிகுந்த மகிழ்ச்சியையும் சொல்லவொண்ணாப் பெருமிதத்தையும் அதே சமயம் மிகவும் சரியாக எதிர்காலத்தைக் கணிக்கும் அவரது திறமையைக் கண்டு ஆச்சரியத்தையும் அளித்தது.

திருப்பரங்குன்றம், டி. எஸ். லலிதா.

* ''கல்யாணக் கனவுகள்'' கதையின் மூலம், என் நினைவுகளை, இருபது வருடங்கள் பின்நோக்கித் தள்ளி, என் கண்களில் கண்ணீரை வரவழைத்து விட்டார் கதாசிரியர்.

மடிப்பாக்கம், நாமகிரி ராமன்.

* கூழ் வற்றலைப் பற்றிய கட்டுரையில் சொல்லியிருக்கும் பொருட்களில் ''எலுமிச்சம் பழம் – 8 பழங்கள்'' என்று உள்ளது. இதனுடைய உபயோகத்தை எந்தக் கூழிலும் சொல்லவே இல்லையே?

சேப்பாக்கம், சுப்புலக்ஷ்மி ராஜாராம்.

* சூரிய காந்தி பூ செய்யும் கட்டுரை மிகவும் பயனுள்ளது. உடனடியாக இரண்டு டின் டால்டா வாங்கும் செலவை வைத்து விட்டீர்கள்.

திருச்சி, சம்பத்.

* எங்களிரு கைகளிலும் பிடியுங்கள் என்று துணுக்குகளை அள்ளி அள்ளித் தந்து ம. மலர் வள்ளலாக மாறி விந்தை புரிந்ததைக் கண்டு வியப்பில் ஆழ்ந்தேன்.

திருநெல்வேலி, சுந்தர்.

அட்டை மாடல்ஸ்: பிரியங்கா. அட்டை வண்ணப்படம்: டி. வி. நாகேஷ்.


சக்தி கப்பிலே,
ஆமாம், புதிய வீவா சாக்லேட் சுவையும், ஆரோக்யமும் நிறைந்தது. ஏனென்றால், 8 முக்கிய விட்டமின்கள் செறிந்த ஒரே ஒரு ஆரோக்ய பானமான வீவாவில், இப்போது சாக்லேட்டும் இருக்கிறது. இந்த 8 முக்கிய விட்டமின்கள் உங்களுக்கு எப்படி ஆரோக்யமளிக்கின்றன என்பதைப்பாருங்கள். விட்டமின் A கண்பார்வையை மேம்படுத்துகிறது. விட்டமின் B1 பசியைத்தூண்டுகிறது. விட்டமின் B2 ஜீரணசக்தி முறையை சீராக்குகிறது. விட்டமின் B12 ரத்தம் விருத்தி செய்கிறது. விட்டமின் C பற்களுக்கும், எலும்புகளுக்கும் வலுவூட்டுகிறது. விட்டமின் D உடல் வளர்ச்சிக்கு உதவுகிறது. ஃபோலிக் அமிலம் தசை வளர்ச்சிக்கு உதவுகிறது. நியாஸின் சீரான வளர்ச்சிக்கு உதவுகிறது. இதுமட்டுமல்ல, எளிதில் ஜீரணமாகும் பால், புரோடீன், கார்போஹைட்ரேட்கள் மற்றும் மினரல்கள் அடங்கிய வீவா சாக்லேட், உங்களுக்கு முழுமையான ஒரு ஆரோக்ய பானமாகும். எனவே, உங்கள் குடும்பத்தினருக்கு இன்றே வீவா சாக்லேட் கொடுக்கத்தொடங்கவும். உங்களுக்கு அது சக்தி அளிக்கிறது.
"பால் உள்ளது" –தண்ணீர் சேர்த்தாலே போதும்.
புதிய
8
VITAMINS
ViVA
CHOCOLATE

கூட்டத்தில் நடந்து கொண்டிருந்த அமளியைச் சமையலறையிலிருந்து கவனித்துக் கொண்டிருந்த ராஜேஸ்வரிக்கு உடலெல்லாம் வேர்த்துக் கொட்டியது. தன் மாமனார் சதாசிவம் இப்படிக் கூனிக் குறுகி உட்கார்ந்திருப்பதை அவள் இப்போதுதான் முதல் முதலாகப் பார்க்கிறாள்.

வந்தவர் தொடர்ந்து கத்திக் கொண்டிருந்தார். ''அடுத்த தடவை உங்க சின்னப் பையன் ராஜா என் பெண்ணிடம் வம்பு செய்தாலோ, லவ் லெட்டர் கொடுத்தாலோ, அவன் கையையோ காலையோ முறிச்சிடுவேன். ஞாபகம் வச்சிக்குங்க. ஐ.ஜி. கூட என் உறவுக்காரர்தான். தெரியுமில்லே?''

சதாசிவம் தொடர்ந்து தவிக்க, அவரது முதல் பிள்ளை ராகவன் — ராஜேஸ்வரியின் பெரிய மைத்துனன் — பேச ஆரம்பித்தான். ''சார், உங்க கவலை எனக்குப் புரியுது. ஆனா நீங்க வார்த்தையை ரொம்பக் கொட்

# தன் வாயே தனக்கெதிரி

—அருண்சரண்யா

டறீங்க. வெளியிலே வர மட்டும்தான் நம்ம வார்த்தைகளுக்கு நாம முதலாளி. வெளியே வந்தப்புறம் நாம அதுக்கு அடிமை. அதனாலே கொஞ்சம் யோசிச்சுப் பேசுங்க. என் தம்பி இனிமேல் உங்க பெண் வழிக்கு வராம நாங்க அவனைக் கண்டிச்சு வைக்கிறோம். அதே சமயம் நீங்களும் விஷயத்தை ரசாபாசமாக்காம இருங்க. ஏன்னா இதனாலே ஏற்படும் பாதிப்பு எங்களைவிட உங்களுக்குத்தான் அதிகம்.''

வந்தவர் ராகவனின் பேச்சின் உண்மையில் ஓரளவு கட்டுண்டவராய் 'வரேன்' என்ற ஒற்றைச் சொல்லை உறுமலுடன் உதிர்த்து விட்டு வெளியேற, இதுவரை மௌனமாக இருந்த ராஜேஸ்வரியின் கணவன் பலராம் பேச ஆரம்பித்தான்.

''ஏம்ப்பா இடிஞ்சி போயி உட்கார்ந்துட்டீங்க? இப்போ ராஜா என்ன செய்யத் தகாத காரியத்தைச் செய்துட்டான்? இந்தக் காலத்திலேயெல்லாம் காதலிக்கிறதோ, பழகுவதோ பெரிய விஷயமேயில்லை. கல்யாணமானவங்களிலே பாதிப் பேராவது ஏற்கனவே யாரையாவது காதலிச்சவங்களாத்தான் இருப்பாங்க — ஏன் அவங்களோட நெருக்கமாகப் பழகிக் கூட இருப்பாங்க. அதனாலே நீங்க ஏதோ நடக்கக் கூடாதது நடந்துட்ட மாதிரி கவலைப்பட வேண்டாம்.''

சதாசிவம் சமாதானமடையாதவராகத் தோன்ற, ராகவன் தன் எண்ணங்களை வெளியிட்டான். ''அப்பா, வந்தவர் சொன்னது அத்தனையும் உண்மைன்னு நினைச்சுக்காதீங்க. அந்தப் பெண் கூட நம்ம ராஜாவைக் காதலிக்கிறதாக உணர்த்தியிருக்கலாம். அதை நம்பி இவன் அசட்டுத்தனமாக இந்த லெட்டரை எழுதியிருக்கலாம். மாட்டிக்கிட்டப்புறம் அந்தப் பொண்ணுதான் ரொம்ப அப்பாவி மாதிரி நடிச்சிருக்கலாம். அதனாலே பதட்டப்படாதீங்க. நாளைக்கு ராஜா பிக்னிக் முடிஞ்சு திரும்பி வருவான். அவன் வந்ததும், நடந்தது என்னன்னு நிதானமாகக் கேட்டு அதன் பிறகு மேற்கொண்டு ஆகவேண்டியதை யோசிப்போம்.''

இத்தனையையும் சுவாரசியத்துடன் கவனித்துக் கொண்டிருந்த ராஜேஸ்வரியின் தோள்களை ஒரு கை திருப்பியது. மல்லிகா — ராகவனின் மனைவி. ''என்ன ராஜேஸ்வரி, இதைப் பற்றி நீ என்ன நினைக்கிறே?''

''நான் என்னக்கா புதுசா சொல்றது? உங்க கணவர்தான் அழகாக இதற்கான தீர்வைச் சொல்லிட்டாரே.''

மல்லிகா தோளில் தன் முகத்தை இடித்துக்கொண்டாள், ''இவருக்கென்ன சொல்லுவார். எனக்கென்னவோ இந்த ராஜா மேலே சந்தேகம்தான். இப்போவெல்லாம் தினமும் பௌடர், செண்ட்டுன்னு அமர்க்களப் படுத்திக்கிட்டுத்தான் போறாரு. இப்படி லவ் லெட்டரெல்லாம் எழுதி அப்பாவிப் பெண்களுக்குக் கெட்ட பேர் வாங்கித் தரவங்களை சௌதி அரேபியாவிலே செய்வாங்களாமே, அந்த மாதிரி நடுத் தெருவிலே நிக்க வச்சி சவுக்காலே அடிக்கணும்.''

''என்னக்கா இவ்வளவு கோபமாகப் பேசறீங்க?''

''என் வயிற்றெரிச்சல் என்னைப் பேசச் சொல்லுதும்மா. உன் கிட்டே சொன்னால் பாதகமில்லை. ஆனா அதை உன்னோட வச்சிக்கோ. எங்க ஊரிலே கிருஷ்ணகாந்த்னு ஒரு பையன். என் பின்னாடியே சுத்திக்கிட்டிருந்தான். நான் அவனை லட்சியமே செய்ததில்லை. திடீர்னு ஒரு நாள் ''நீ இல்லாம எனக்கு உலகமே இல்லேன்னு டயலாக் பேசினான். நான் திட்டி அனுப்பிச்சிட்டேன். நாலுநாள் கழிச்சு அவன் உடல் கிணற்றிலே கிடந்தது. தற்கொலையா தற்



செயலா விழுந்துட்டானான்னு தெரியல்லே. அவங்க வீட்டிலே என்னைத் திட்டினாங்க. நான்- இரக்கம் இல்லாம நடந்துக்கிட்டே னாம்.'

அன்றிரவு. ராஜேஸ்வரி தன கணவனிடம் பேசிக் கொண்டிருந்தாள். "உங்க அண்ணா இந்தப் பிரச்னையை அணுகிய விதம் எனக்கு ரொம்பப் பிடிச்சுப் போச்சுங்க. அவசரப் பட்டு எந்த முடிவுக்கும் வராமல், ராஜாவையும் விசாரிச்ச பிறகுதான் ஒரு முடிவுக்கு வரணும்னு சொன்னார் பாருங்க அது அவரது விவேகத்தைக் காட்டுது."

பலராம் அவள் கருத்தை ஒத்துக்கொள்ள வில்லை. "அண்ணா அப்படி ஒரு முடிவுக்கு வந்ததுக்குக் காரணமே வேறே. அவனுக்கு ஏற்பட்ட அனுபவம் அவனை அப்படிப் பேச வைச்சது."

"என்ன சொல்றீங்க?"

பலராம் ஒரு நீளமான பதிலைச் சொல்ல

தன்னை ஆயத்தப்படுத்திக் கொள்பவன் போல் கனைத்துக் கொண்டான். பிறகு ''காலேஜிலே ராகவன் படிச்சிக்கிட்டிருக் கறச்சே அவனிடம் கவரப்பட்டு ஒரு பெண் அவனைச் சுற்றிச் சுற்றி வந்தா. இவன் முதலில் பிடி கொடுக்காமல் இருந்தான். பிறகு கொஞ்சம் கொஞ்சமாக அவளை விரும்ப ஆரம்பிச்சான். திடீரென்று ஒரு நாள் அந்தப் பெண்ணுக்கு கலிஃபோர்னி யாவிலே இருக்கிற ஒரு பணக்கார மாப் பிள்ளையை அவளோட அப்பா நிச்சயம் பண்ணிட்டார். அந்தப் பெண்ணும் மனசு மாறிட்டா. இது புரியாத ராகவன் அவங்க வீட்டுக்குப் போய் ''உனக்கு வேறே இடத் திலேமாப்பிள்ளைபார்த்திருக்காங்களாமே? உங்கப்பா கிட்டே நம்ம காதலைப் பற்றி சொல்லிட்டியா?''ன்னு கேட்டான். உடனே அந்தப் பெண் ''நான் உங்க கூட சாதாரண மாகத்தான் பழகினேன். நீங்க அதைத் தவறாக நினைச்சுக்கிட்டீங்க போலிருக் கு''ன்னு அவங்க வீட்டிலே உள்ளவங்களுக் குக் கேட்கிற மாதிரி சத்தம் போட்டுச் சொல் லிட்டா. அங்கேயிருந்து ராகவன் விரட்டி யடிக்கப் பட்டான்.''

''அப்படியா? அதனால்தான் ராஜாவை விசாரிக்காமல்எந்தநடவடிக்கையும்எடுக்கக் கூடாதுன்னாரா?'' என்று சொன்ன ராஜேஸ்வரியின் மனத்தில் வேறு ஒரு பொறி. ஒளிவு மறைவு இல்லாமல் பேசும் தன் இறந்து போன மாமியார் கூறிய சில விஷயங்கள் அவள் நினைவில் தோன்றின.

''அம்மா ராஜேஸ்வரி, எல்லா வயசுப் பிள்ளைகளுமே ஏதாவது ஒரு கால கட்டத் திலே பொண்ணுங்க கிட்டே அசடு வழிவது வழக்கம்தான்னு தோணுது. ஏன், உன் மாமனாரையே எடுத்துக்கயேன். அவர் சின்ன வயசிலே வேறே ஒரு பெண்ணை விரும்பி, அவள் பின்னாலேயே சுற்றினா ராம். அந்தப் பெண் பொறுத்துப் பொறுத் துப் பார்த்துக் கடைசியில் அண்ணாவிடம் இவரைப் பற்றி புகார் பண்ணிடுச்சு. அவன் கூப்பிட்டு இவரை சகட்டுமேனிக்குத் திட்டி யிருக்கான். அதற்குப் பிறகுதான் இவருக்கு ஞானோதயம் வந்தது. வீட்டிலே பெரிய வங்க முடிவு செய்த என்னைக் கல்யாணம் செய்துக்கிட்டார்.''

ராஜேஸ்வரிக்கு ஒருவிஷயம்விளங்கியது. இன்றைய சம்பவத்தினால் மாமனாருக்குத் தான் தன் இளம் வயதில் பட்ட அவமானம் ஞாபகத்திற்கு வந்திருக்கிறது. அதனால் தான் எதையும் சொல்ல முடியாமல் தவித் துக் கொண்டிருக்கிறார்.

'ஆக எல்லோருமே அவங்களோட கடந்த கால வாழ்க்கையில் நடந்தவைகளை வச்சுத்தான் இன்னைய சம்பவத்துக்கு ரியாக்ட் பண்ணியிருக்காங்க' என்று அன்று எல்லார் பேசியதையும் மனத்தில் மீண்டும் கொண்டு வந்த ராஜேஸ்வரியின் முகம் திடீ ரென்று சிவந்தது. அப்படியானால் இவரும் ஒரு காலத்தில்.....

ராஜேஸ்வரி திடீரென்று தன்னை ஏன் உற்றுப் பார்க்கிறாளென்பதோ, ''தொடா தீங்க என்னை'' என்று கத்தியபடி ஏன் தள்ளிப் போய் உட்கார்ந்து கொண்டு அழுகிறாளென்றோ பலராமுக்குச் சத்திய மாகப் புரியவில்லை.

---

மண்ணெண்ணெய் (அ) சீமை எண் ணெய் என்றாலே நமக்கு நெருப்பின் ஞாபகம்/பயம் வந்துவிடும். ஆனால் அந்த எண்ணெயே நெருப்பின் சுடு புண் களுக்கு மருந்தாகும் எனப் பலருக்குத் தெரியாது. ஒரு சமயம், என் கணவரின் காலில் பொறுக்க முடியாத சூட்டில் உள்ள காப்பி கொட்டிவிட்டதில் மிகவும் துடித்து விட்டார். என் அம்மாவின் பழக் கத்தைக் கற்ற நான் உடனே மண்ணெண் ணெயை அவர் காலில் விடச் சென்ற போது, இன்னும் எரிச்சல் உண்டாகும் என மறுத்துவிட்டார். அவர் பேச்சைக் கேட்காமல் மண்ணெண்ணெயைக் காப்பி கொட்டிய காலில் சிறிது ஊற்றி னேன். சிறிது நேரத்தில் எரிச்சல் இல்லா மல், அந்த இடத்தில் கொப்பளம் ஏற் படாததையறிந்து மிகவும் ஆச்சரியப் பட்டார். நாம் அன்றாடம் சமையலறை யில் நெருப்பு மற்றும் சுடும்/கொதிக் கும் பொருட்களால் சுட்டுக் கொள்ளும் இடத்தில் மண்ணெண்ணெய் சிறிது விடுவதால் உடனே எரிச்சல் அடங்கு வதுடன், கொப்பளங்களும் ஏற்படுவ தில்லை.



— ஜான்ஸி ராஜாராமன்.


விஸ்ப்பர்
புதிய
விஸ்ப்பர்
ட்ரை-வீவ்
உறையுடன்
கூடியது.
மற்றொரு
நாப்கின்




whisper

# மண் வழிப் பயணம்

**கவிதா**

'நர்மதா ஸூட்கேஸில் எல்லாம் எடுத்து வைத்துக் கொண்டாள். ஒரு பொம்மை, இரண்டு ஃப்ராக், அதைத் தவிர தனக்கு இரண்டு புடைவை, நாலு நாளைக் குத் தேவையானது. ''ஹோட்டல்ல சாப் பிடுங்க. சமையல் பண்ணிண்டு உட்கார வேணாம்... ஏதாவது சொல்லணுமா அம்மாவிடம்?''

குமார் யோசித்தான்.

''ஒண்ணுமில்ல நர்மதா. அம்மாவுக்கு ஏதாவது வேணுமான்னு கேட்டுண்டு வா. உடம்பைப் பார்த்துக் கொள்ளச் சொல். நீ ஜாக்கிரதையா போயிட்டு வா. ரயில்ல ஜன்னலை சாத்திண்டு படுத்துக்கோ.''

''கவலைப்படாதேங்க. ஒரு ராத்திரி தானே. விடிஞ்சா போய் சேர்ந்துடுவேன்.''

ரயில் கிளம்புகிற வரை சொல்வதற்கு நிறைய விஷயம் இருந்தது. ஆனால் ஜாக்கிர தையாக குழந்தை பற்றிய பேச்சு மட்டும் இல்லை. அவனுள்ளும் ஏக்கம் இருக்குமோ? ஆபீஸிலிருந்து வந்ததும் 'அப்பா'ன்னு ஓடி வர வேண்டிய இரண்டு வயதுக் குழந்தை, கோவில்பட்டி கிராமத்தில் வாசல் மண்ணை அளைந்து கொண்டு, பாட்டியோடு கோவி லுக்குப் போய்க் கொண்டு அத்தை ஊட்டு கிற சாதத்தைச் சாப்பிட்டுக் கொண்டு, ரயில் சத்தம் கேட்டால் ஓடி வந்து அதிசயமாய்ப் பார்த்துக் கொண்டு...

ரயில் நகர ஆரம்பித்தவுடனே நர்மதா வின் மனம் திருச்சி ஜங்ஷனில் இறங்கி விட்டது. பஸ் பிடித்து கோவில்பட்டி போய்... ''சௌக்யமா அம்மா..''

''கண்ணு, யார் வந்திருக்கா பாரு... ஓடி வா.''

குழந்தை வளர்ந்திருக்கும். ஐந்து மாதம் முன்பு பார்த்தது. 'சின்னக் குழந்தை ஒரோரு நொடியும் வளரும். அஞ்சு வயசு வரை அதிசயம்தான். அந்த அழகு அப்புறம் வராது,' என்று அம்மா சொல்வாள். நீ ஏம்மா ஜுரம் வந்து அல்பாயுசுல போன? நீ மட்டும் இப்ப இருந்தா இந்த மாதிரி அல்லல்படுவேனா? ஆயிரம் ரூபாய் வேலைக்காக குழந்தையைக் கிராமத்தில் மாமியார், நாத்தனாரிடம் விட்டு ஐந்தாறு மாசத்துக்கு ஒரு தடவை போய்ப் பார்த்துக் கொண்டு. நீ இருந்தால் முதலில் இந்த மாதிரி இடத்தில் கொண்டு சேர்த்திருப்பாயா? கல்யாணத்திற்குத் தங்கைகள், படிக்கிற தம்பி, ஏதோ சுமாரான கம்பெனியில் கிளார்க் உத்தியோகம் இந்த மாதிரி பையனுக்கு. ''எங்களுக்கு வேலைக்குப் போய்த்தான் ஆக வேண்டும். முதல் பெண் ணுக்கு இப்பத்தான் கல்யாணம் பண்ணி னோம். கழுத்து வரையில் கடன். இன் னொருத்தி இருக்கா. பையன் படிக்கிறான்.''

''அதுக்கென்ன, நர்மதாவுக்குக் கவர்ன் மெண்ட் உத்தியோகம். விடவா போறா? உங்களுக்கு ஒத்தாசையா இருப்பா.'' அப்பா வும் அண்ணாவும் தலையாட்டி சொன்னார் கள். அவளும் சும்மா இருந்தாள் சம்மதம் என்பதாய். வேண்டாமென்றா சொல்ல முடியும்? பிருதிவிராஜா குதிரையில் வந்து கொத்திக் கொண்டா போகப் போகிறான்?

குழந்தை ஆனதும் மாமியார் சொன் னாள். 'நான் எடுத்துண்டு போறேன். என் னால மதறாஸ்ல வந்து இருக்க முடியாது. மீனா, மணி, நான் மூணு பேருன்னா இதை விட பெரிய இடம் பார்க்கணும். ஜாஸ்தி வாடகையாகும். பிசிறிண்டா பிரச்னைகள் வரும். கிராமத்துல சொந்த வீட்ட எதுக்கு விடணும்? சரிபடலைன்னா அப்புறம் பேசிக்கலாம்.'

தீர்மானம் ஆனது. மூன்று மாதக் குழந் தையை, காதை மூடி மஃப்ளர் போட்டு, காலுக்கு சாக்ஸ் போட்டு, போர்த்தி அடக்க மாய் எடுத்துக் கொண்டு போனாள். ரயில் கிளம்பும் போது குழந்தை அழுதது, ஏதோ புரிந்த மாதிரி.

ரயில் ஜங்ஷனில் நின்றது. நர்மதா பெட் டியை எடுத்துக் கொண்டு இறங்கினாள். பஸ் தயாராய் இருந்தது. ஏறி உட்கார்ந்து பஸ் கிளம்பியதும் காற்று முகத்தில் வீச, கொஞ்சம் தெம்பாய் இருந்தது. மாமியார் கொடுக்கப் போகிற கள்ளிச் சொட்டு காப்பி ஞாபகம் வர உற்சாகம் வந்தது.

இன்று ஆபீஸ் போக வேண்டாம். பஸ் நெரிசல், முதுகு ஒடிய வேலை, வீட்டில் சமையல் ஒன்றுமில்லை. அப்பாடா!

வீட்டு வாசலை நெருங்கும் போது மீனா ஓடி வந்து பெட்டியை வாங்கிக் கொண்டாள். ''சௌக்யமா மன்னி? லெட்டர் போட்டிருந்தா மணி ஸ்டேஷனுக்கு வந்திருப்பானே....''

நர்மதா பதில் சொல்லாமல் நடந்தாள். குனிந்து செருப்பைக் கழற்றும் போது, குழந்தை வந்தது தளர் நடையில். ஒரு நிமிஷம் அவளே அசந்து போனாள். கொழு கொழுவென்ற கன்னமும், மாவடு கண்ணும், வாய் நிறைய சிரிப்புமாய்... என் குழந்தை...

நர்மதா அருகில் வந்தது..,

''ம்மா... யாரோ மாமி வந்துக்கா...'' என்றது.

நர்மதாவுக்கு யாரோ மண்டையில் அடித்த மாதிரி இருந்தது. சந்தோஷம் தர வேண்டிய மழலை நாராசமாய் விழுந்தது. விருட்டென்று கிணற்றடிக்குப் போனாள். பல் தேய்த்து, முகம் அலம்பிக் கொண்டு புழக்கடை வராண்டாவில் காலை நீட்டி உட்கார்ந்தாள்.

தூரத்தில் தனியாய், விறைத்துக் கொண்டு நின்ற தென்னை மரம் தெரிந்தது. அதென்னமோ தென்னை மரம் பார்த்தால் மட்டும் தனிமை என்பதாய்த் தோன்றுகிறது. தோப்பில் இருந்தால் கூட தனித் தனியாக.. புடவைத் தலைப்பில் முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டாள்.

மாமியார் சூடாய் காப்பி கொண்டு வந்தாள். நர்மதா கையில் கொடுத்து விட்டு உட்கார்ந்தாள்.







தோ, ஸ்ரீராம் ஸ்ரீநிதி.

உங்கள் வளரும் குழந்தையின்
வருங்காலத் தேவைகளை,
ஒவ்வொரு கட்டத்திலும் நிவர்த்தி
செய்யும் ஒரே நிதி.

னவே 'ஸ்ரீராம் ஸ்ரீநிதி' பற்றி மேலும்
வரமறிய மற்றும் Nestle Cerelac Baby Care
த்தகத்தை பெற கீழ்கண்ட கூப்பனை
ர்த்தி செய்து அனுப்புங்கள்.

**ஸ்ரீராம்**
**நிறுவனங்கள்**
தலைமை அலுவலகம்:
''ஸ்ரீராம் ஹவுஸ்'',
10, கஸ்தூரி எஸ்டேட்,
சென்னை-600 086. போன்: 454805/452113

இலவச Nestle Cerelac Baby Care
புத்தகத்தை அனுப்புங்கள்

பெயர்: ..........................................

குழந்தையின் பெயர்: ..........................................

பிறந்த தேதி: ..........................................

முகவரி: ..........................................

..........................................

கையெழுத்து: ..........................................

Th... is in continuation to the Statutory Advertisement which appeared in Indian Express on 1.7.90.

ADWAVE/SGC/4054 TAM A

''அதென்னமோ என்னால முன்ன மாதிரி காரியம் பண்ண முடியல. அடுப்புல ஏத்தி எறக்கறதே பெரிய யாகம் பண்ற மாதிரி இருக்கு. குழந்தை காரியம் பூரா மீனா தான். உசிரா இருக்கா அதுகிட்டே. அதுவும் அம்மா, அம்மான்னு அவளை நாள் பூரா சுத்திண்டே இருக்கு. பத்து நாள் முன்னால அதுக்கு ரொம்ப உடம்புக்கு வந்துடுத்து. மூணு நாள் கண் முழிச்சு, மாத்திரை, மருந்து குடுத்து, எல்லாம் அவதான்.''

''போறுமே உன் பெருமை. உன் பிள்ளை வந்தால் சொல்லிக் கொள். இதைக் கேட்கவா, பல்லைக் காட்டி லீவ் வாங்கிக் கொண்டு அரக்கப் பரக்க ஓடி வந்திருக்கிறேன்.''

நர்மதா இன்னும் தென்னை மரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். மாமியாருக்கு ஏதோ புரிந்திருக்க வேண்டும்.

''தேவகி... இங்கே வாயேன். உன்னைப் பார்க்க அம்மா வந்துருக்காளோன்னோ, வந்து பேசேன், வா...''

என்ன பெயர், பட்டிக்காடு மாதிரி பாட்டி பேர், பேத்தி பேர்னு.

'உனக்கு வேணுங்கற பேரை நீ கூப்பிட்டுக் கோயேன். அவாளுக்கு வேணுங்கறதை வெச்சுக்கட்டும்..' குமார் சமாதானம் சொல்வான். ஆமாம், வருஷம் முழுக்க அவா தேவகின்னு கூப்பிடச்சே நான் வேற ஏதாவது கூப்பிட்டா திரும்பியா பாக்கப் போறது?

குழந்தை வந்தது. நர்மதா கை நீட்டியதும் பாட்டி மடியில் முகம் புதைத்துக் கொண்டது.

மீனா வந்தாள். ''தலையைக் காட்டு... எழுந்துக்கோ.''

தேக்கி வைத்திருந்த கோபம், எரிச்சல், ஏமாற்றம், எல்லாம் அந்த நொடியில் எல்லையைக் கடந்தது.

''என்ன கையில எண்ணையா? ஒரு குளம் இருக்கும் போல இருக்கே! அபிஷேகமா பண்ணப் போற? அழகாத்தான் இருக்கு அலங்காரம் பண்றது.''

நடு வகிடு எடுத்து, இரட்டைப் பின்னல் பின்னி கலர் கலராய் ரிப்பன் வைத்துக் கட்டி... இந்தக் குக்கிராமத்தில் வளர்ந்தால் என்ன நாகரிகம், என்ன ஸ்மார்ட்னஸ் இருக்கும்?

யோசனையில், மீனா முகம் வாடி உள்ளே போவது கண்ணில் படவில்லை.

இந்தத் தடவை ஒரு முடிவு கட்டியே ஆக வேண்டும். ஊருக்குப் போனதும், முதல் வேலையாய்... வேலையை விட்டு விட முடியுமா? குமாருக்கு வருகிற சம்பளத்தில், பிடித்தம் போக மிச்சம் வருகிற பணத்தில் வாடகை, பால், காய்கறி, குழந்தை செலவு, ஊருக்குப் பணம், இதரக் கடன்கள்... முடியுமா?

நிச்சயம் முடியாது. ஆனால் குழந்தையை அழைத்துக் கொண்டு போக வேண்டியது தான். எப்படியோ பார்த்துக் கொள்ள வேண்டியதுதான்.

கிளம்பும் போது குழந்தை டாடா சொன்னது. 'நாளைக்கு வரியா?' என்றது. நர்மதா மெஷினாக தலையாட்டி விட்டு நடந்தாள். மணி வந்து ரயிலேற்றினான்.

எக்மோர் ஸ்டேஷனில் குமார் இருந்தான். பெட்டியை வாங்கிக் கொண்டான். பஸ் ஏறி வீட்டிற்குப் போய் உள்ளே நுழைந்ததும் குமார் கேட்டான்,

''குழந்தை எப்படி இருக்கு?''

''என்ன கேள்வி? இரண்டு கை, இரண்டு கால், காது, மூக்கு எல்லாம் இருக்கு...''

அக்னி துண்டாய் விழுந்தது வார்த்தை. அந்த அனலில் முகம் கருகி மௌனமாய் எழுந்து போனான் குமார்.

ராத்திரி வேலையெல்லாம் முடித்து படுத்தவுடன் கேட்டான் ''உடம்பு சரியில்லையா, நர்மதா?''

''உடம்புக்கென்ன குறைச்சல் வந்தது இப்ப?''

குமார் அவள் நெற்றியில் இதமாய்க் கை வைத்தான். ''நாளைக்கு வேணா ஆபீஸ் போகாதே. நானும் லீவ் போடறேன். ஏதாவது சினிமா போலாம். இல்ல எங்கேயாவது போகலாம்.''

''அது ஒண்ணுதான் குறைச்சல்!'' பட்டென்று பதில் வந்தது. குமாருக்குத் தூக்கம் வரவில்லை.

மறுநாள் நர்மதா ஆபீஸ் போனாள். சீட்டில் உட்கார்ந்ததும் கொஞ்சம் மண்டைக் குடைச்சல் குறைந்த மாதிரி இருந்தது.

ராதா வந்தாள். முகம் என்னவோ போல் இருந்தது. வெளிறி, கண் சிவந்து, கொஞ்சம் இளைத்து.

'என்ன ஆச்சு ராதா? ஏன் எப்படியோ

---

**சௌசௌ (பெங்களூர் கத்திரிக்காய்) பரங்கிக்காய் முதலியவற்றை அரியும் போது முத்து முத்தாக நீர் வரும். அந்த நீரைக் குழந்தைகளின் புண்களுக்குத் தடவினால் பட்டென்று புண் ஆறுவதைக் காணலாம்.**

— ரவிகுமார்.



இருக்கே?''

அந்தக் கேள்வியில் ராதாவுக்குக் கண் கலங்கிப் போனது.

''கேன்டீனுக்கு வரியா? உன்னோட கொஞ்சம் பேசணும்.''

நர்மதா ஆபீஸரிடம் சொல்லி விட்டு வந்தாள்.

கேன்டீனில் இரண்டு ஸ்ட்ராங் காப்பி ஆர்டர் பண்ணி விட்டு, ''ம், இப்பச் சொல்லு,'' என்றாள்.

''குழந்தைக்கு ரொம்ப உடம்பு சரியில்லை நர்மதா. ஆஸ்பத்திரியில் அட்மிட் பண்ணியிருக்கேன்.''

''என்ன ஆச்சு...?'' நர்மதா பதற்றமாய் கேட்டாள்.

''என்னத்தைச் சொல்ல? நேத்து நான் ஆபீஸ் வரச்சே குழந்தை நல்லாத்தான் இருந்தது. வேலைக்காரி என்ன குடுத்தாளோ என்னமோ தெரியல. திடீர்னு வாந்தி ஆரம்பிச்சிருக்கு. நிக்காம நாள் பூரா எடுத்திருக்கு. சாயங்காலம் போறேன். கண் சொருகிப் போய், உடம்பு அனலா கொதிக்கறது. வேலைக்காரிகிட்டே கேட்டா, 'எனக்கு என்ன தெரியும்கறா. குழந்தையை சரியா க்ளீன் பண்ணக் கூட இல்ல. எறும்பும், ஈயும் மொச்சிண்டு.''

ராதா உடைந்து போனாள். முகம் பொத்தி டேபிளில் சாய்ந்து கொண்டாள். நர்மதா மௌனமாய் இருந்தாள் கொஞ்சம் இறுக்கம் தளரட்டும் என்று. ராதா நிமிர்ந்து முகத்தைத் துடைத்துக் கொண்டாள்.

''காப்பி சாப்பிடு முதல்ல.''

சாப்பிட்டதும் கேட்டாள். ''டாக்டர் கிட்டே போனயா அப்புறம்?''

''ஆமாம். ஓடினேன். 'உடம்பில் தண்ணி நிறைய போயிடுத்து. க்ளுகோஸ் ஏத்தணும். க்ளீனிக்ல வெச்சுத்தான் பார்க்கணும்'ங்கறார் டாக்டர். அங்கே விட்டு விட்டு ஓடி வந்தேன். பதினைந்து நாள் லீவ் எழுதிக் குடுத்துட்டு உன்னையும் பார்த்துட்டுப் போலாம்னு. அவர் இருக்கார் ஆஸ்பத்திரியில்.''

''வேலைக்காரிக்கு என்ன தெரியும் ராதா? நீ அவகிட்டே எல்லாம் சொல்லி வை, நல்லதனமா. என்னென்ன உடம்புக்கு என்ன பண்ணணும்? இந்த மாதிரின்னா அப்பப்ப தண்ணி குடுக்கணும் எல்லாம்.''

''எல்லாம் சொல்லியிருக்கேன் நர்மதா... அவளுக்கு என்ன திமிர் தெரியுமோ? பக்கத்து வீட்டுக்காரிகிட்டேயாவது சொல்லி எனக்கு ஃபோன் பண்ணக் கூடாதான்னு நான் கத்தினதும், ஏம்மா கத்தற, செத்தா போயிடுச்சுங்கறா? அப்படியே கழுத்தைப் பிடிச்சு வெளில தள்ளணும் போல இருந்தது. அப்புறம் என்ன செய்யறது? வேலைக்காரி கிடைக்கறது என்ன சுலபமா? கூலிக்கு வேலை செய்யற ஜென்மங்களுக்கு அக்கறை இருக்குமா சொல்லு?''

**நொறுக்குத் திண்டிக்காக, மைதா மாவில் டைமண்ட் செய்கிறோமல்லவா? அப்பொழுது, கல்லில் மாவை அப்பளமாக இட்டு, கத்தியால் குறுக்கும் நெடுக்குமாக கீறும்போது, சில பகுதிகள் கல்லில் ஒட்டாமல் தனியாக, பெரிய சைஸ்களில் வந்துவிடும். இதனைத் தவிர்க்கச் செய்ய வேண்டியது என்ன? முதலில் கல்லில் எண்ணெய் தடவி, பின் மாவு உருண்டையை அழுத்தி, மேல் புறம் மட்டும் தேவையான போது மாவைத் தடவ வேண்டும். இம்முறையில் துண்டுகள் எகிறிக் குதிக்காமல் சாதுவாக, தேமேன்னு நம் வழிக்கு வரும்.**

**— திருமதி தேவனாதன்.**

படபடவெனப் பேசி விட்டு எழுந்தாள். ''வா போலாம். உனக்கும் வேலை இருக்கும். பார்த்தாயா, என் கவலைல மறந்தே போனேன். உன் குழந்தை எப்படி இருக்கு நர்மதா?''

குழந்தை எப்படி இருக்கு? ரெண்டு கால், ரெண்டு கை... சீ.. என்ன பதில் சொன்னோம் குமாருக்கு.

எப்படி இருக்கு? க்ளாக்ஸோ பேபி மாதிரி ஆரோக்கியமாய். பளிச்சென்று.. தேறின கலைஞன் ஆசையாய்ப் பண்ணின பொம்மை மாதிரி. கண்ணை மூடினால் அதற்குப் பின்னால் இன்னொரு முகம். தேசலாய் வாஞ்சையாய்... மீனா!

''என்ன யோசனை நர்மதா? அப்புறம் பார்க்கலாம். ஏதாவது ஹெல்ப் வேணுன்னா ஃபோன் பண்றேன். வரட்டுமா?''

நர்மதா தலையாட்டினாள். குப்பையெல்லாம் விலகினதும் ஆழம் தெளிவாய்த் தெரிந்தது.

மண் பாதையில் பயணப்பட்டாலும் போக வேண்டிய இடம் வந்தே சேரும், ஒரு செம்பு நீரில் மண் அகன்று போகும், நடந்த காலில் உறுதி இருக்கும். தார் சாலையில் வேகம் இருக்கிற அளவு வேதனையும் இருக்கும்.

விலையில்லாமல் கிடைக்கிற பாசமும் பரிவும் உதாசீனப்படுவது துக்கம்.

நாளை மீனாவுக்குக் கடிதம் எழுத வேண்டும். அடுத்த மாதத்திலிருந்து கொஞ்சம் பணம் அதிகம் அனுப்பி அவளைப் பால் வாங்கி சாப்பிடச் சொல்ல வேண்டும். அப்புறம்... குமாரிடம் இதமாய் நாலு வார்த்தை...

# ஃப்ரூட் சாலட்

1) 1956 இல் சிறை வைக்கப் பட்டு சமீபத்தில் விடுதலை செய்யப் பட்டவர் தென்னாப்பிரிக்கவிடுதலைவீரர் நெல்சன் மாண்டெலா பதீமா மீர் என்பவர் எழுதியுள்ள மாண்டெலாவின் வாழ்க்கை வரலாறு புத்தகமாக வெளியாகியுள்ளது. இதில் மாண்டெலா தன் மனைவி வின்னியைப் பெரிதும் புகழ்ந்திருக்கிறார். ''சிறையிலிருந்தபோது என் ஜன்னலாகத் திகழ்ந்தவள் அவள். அவளது வாழ்த்துக் கடிதங்கள் கிடைக்கும் போதெல்லாம் நான் வானில் மிதப்பதாக உணர்வேன். எனக்காக அவள் செய்த தியாகங்கள் எண்ணிலடங்காதவை'' என்று நெகிழ்கிறார் மாண்டெலா.

2) வயிற்றுக் கோளாறு மற்றும் குடல் நோய் ஆகியவற்றால் அவதிப் படுபவர்களுக்கு வைட்டமின் — வி மிகவும் நல்லது என்று சோவியத் விஞ்ஞானிகள் கண்டு பிடித்துள்ளதாக 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' கூறுகிறது. வைட்டமின் — வி அல்சரைத் தடுக்கக் கூடியது; சீர்குலைந்த வயிற்றின் உட்புறத் திசுக்கள் சீக்கிரம் வளர இந்த வைட்டமின் பெரிதும் உதவுமாம். வைட்டமின் — வி முட்டைக் கோஸில் பெருமளவில் காணப் படுகிறதாம். ஒரு நாளைக்கு மூன்று க்ளாஸ் கோஸ் ஜூஸ் சாப்பிடுவது சிறந்த பலனை அளிக்குமாம். ஜீரணக் கோளாறுகளுக்கும் இந்த ஜூஸ் நல்லது.

3.) நடாலி பெடார் — நீச்சல் விளையாட்டில் இந்தியாவின் நம்பிக்கை நட்சத்திரம் என்று இவரைச் சொல்லலாம். இவ்வருடம் நடந்த தேசிய விளையாட்டுப் போட்டிகளில் ஐந்து தங்கங்களையும், சாம்பியன் பதக்கத்தையும் பெற்றிருக்கும் இவரது முழு கவனமும் பெய்ஜிங்கில் நடக்கப் போகும் ஆசிய விளையாட்டுகளில்தான் உள்ளதாம்.

4) சீனாவில் தங்கள் பெண்ணுக்காக 165 டாலர் வரதட்சணை வாங்கிக் கொண்டு அவளை 67 வயதான பியான் கௌன்லீ என்றவருக்குக் கல்யாணம் செய்து கொடுத்திருக்கிறார்கள் அவளது பெற்றோர். இதில் மேலும் வினோதம் என்னவென்றால் அந்தப் பெண் ஏற்கனவே இறந்து விட்டவள் என்பதுதான். ஜோசியர் ஒருவர் பியானைப் பார்த்து 'பேருக்காவது நீ ஒரு கல்யாணத்





# மீசை

ரேஷ்மி தன்யா

அப்பாவை எனக்கு ரொம்பப் பிடிக்கும். செவப்பா, உயரமா, — எல்லாத்துக்கும் மேலே, கருகருவென அடர்த்தியான மீசையோட. அப்பாவோட மீசை மேல் எனக்கு ரொம்ப இஷ்டம். எப்படி அப்பாவுக்கு மட்டும் இப்படி அடர்த்தியா, அழகா இருக்கு மீசை? அப்பான்னாலே, சிரித்த முகமும் அதில் கம்பீரமா இருக்கும் மீசையும்தான் நினைப்புக்கு வரும்.

எனக்கு விவரம் தெரிந்ததிலிருந்து அப்பாவை இந்த மாதிரி மீசையோடயே தான் பார்த்திருக்கேன். காலையில் விழிப்பு வந்ததும், பக்கத்தில் படுத்திருக்கும் அப்பாவின் முகத்தில் கைகளை ஓட்டி, அப்பாவோட மீசையை நெருடிக் கொண்டே படுத்திருப்பேன் பிடிவாதமா கண்களை மூடியபடி. அந்த நேரம்தான் எனக்கு ரொம்பப் பிடிச்ச நேரமாக்கும்.

மத்த நேரம்னா அம்மா ஏதானும் தொணப்பிட்டே இருப்பா. காலையிலதான் இச்சன்ல இருப்பாங்க. அதான் ஜாலியா அப்பா பக்கத்தில படுத்துட்டு, ஒரு கையால் அவரோட கழுத்தை கட்டிக்கிட்டு, இன்னொரு கையால் எனக்கு இஷ்டமான மீசையை வருடியபடி, அப்பாட்ட ஏதானும் பேசிட்டேயிருப்பேன்.

மாமரத்தில் ஏறினது, கன்னுக் குட்டியோட விளையாண்டது, அண்ணனோட அடிபட்டுக்கிட்டது, அந்த மாசமும் ஃபர்ஸ்ட் ரேங்க் எடுத்தது. தோட்டத்தில் புதுசா இன்னுமொரு அணில் வந்து சேர்ந்தது என எல்லாரும் பேசுவது அப்போதான்.

அப்பா நான் சொல்றதையெல்லாம், ரொம்ப இஷ்டமா, சலிப்பில்லாம கேட்பார். ஏன் இந்த அம்மா மட்டும் இப்படி கேட்கிறதில்லே? எப்பப்பார் ஏதானும் செய்துட்டு இருக்கா. நான் சொல்றதை கேட்கிறதேயில்லை. அப்பாதான் சரி, எனக்கு. வீட்ல அப்பா இருக்கும் போது, அவர் கையைப் பிடிச்சிட்டு, பூனைக் குட்டி போல, கூடவே ஒட்டிட்டு இருப்பேன். டீ.வி. பார்க்கும் போதும், அவர் உட்காரும் சேரின் கைப்பிடி மேல உட்கார்ந்து, அப்பா தோள் மேல் சாய்ஞ்சிட்டு, ஒரு கையால் கழுத்தைக் கட்டியபடி, இன்னொரு கையால் அப்பா மீசையை நெருடிட்டேதான் பார்ப்பேன்.

அப்ப கூட அம்மா கத்துவா, "ஒரு நிமிஷமாவது அவரை நிம்மதியா இருக்க விடேன். எப்பப்பார் கூடவே ஒட்டிட்டு! தொண தொணன்னு என்ன பேச்சு? பொம்பளைப் பிள்ளை வேற. என்ன பண்றதோ உன்னை வைச்சிட்டு" என்றவள், தனக்குள்ளேயே புலம்புவா, "இன்னமும் குழந்தை போல, என்ன பழக்கமோ? எப்படித்தான் இவளை மாத்தப் போறேனோ" என்பாள்.

அப்பா இதையெல்லாம் கண்டுக்கவே மாட்டார். அவருக்கு என் மேல் தான் ரொம்ப இஷ்டம்.

எனக்கென்ன வயசாச்சுன்னு இந்த அம்மா இப்படிக் கத்தறாளோ? இப்பதானே, ஃபோர்த் படிக்கிறேன்? "கழுதை வயசு"ன்னா எத்தனையிருக்கும்? அம்மா அடிக்கடி அப்படித்தானே சொல்றா? எவ்வளவோ இருந்துட்டுப் போகட்டும், எனக்கென்ன? எனக்கு என் அப்பாட்ட எப்பவும் இப்படித்தான் இருக்க முடியும்; நான் என் அப்பாட்டதானே கொஞ்சறேன்? இந்த அம்மாக்களே இப்படித்தான். எதுக்கெடுத்தாலும் எரிஞ்சு விழறது, மரம் ஏறினா திட்டறது, ஓடிப் பிடிச்சு விளையாண்டா கத்தல், அப்பா மட்டும் கூட இல்லாட்டா நான் யார்ட்டதான் என் ஸ்கூல் விஷயமெல்லாம் சொல்வேனோ?

...ஹை! அப்பா ஷேவ் பண்ணப் போறார் போலிருக்கு. என்ட்ட தண்ணி எடுத்துட்டு வரச் சொல்றார். எனக்கு ரொம்ப ஜாலியான, சந்தோஷமான நேரம் இதுதான். அப்பா பக்கத்திலேயே உட்கார்ந்துப்பேன். முதல்ல தண்ணியைத் தடவி, பின் கிரீமைத் தடவி, பிரஷால் தடவத் தடவ, நுரை குபுகுபுன்னு நுரைச்சிட்டு வரும் பஞ்சு போல, எத்தனை அழகு! எனக்கும் தடவிக்கணும் போல ஆசையா இருக்கும்.

என் ஆசையை அப்பா புரிஞ்சிப்பார்

போல, ''என்னடா, நீயும் பண்ணிக்கிறியா?'' என விளையாட்டா கேட்டபடி, பிரஷ்ஷால் என் முகத்தில் செல்லமா தீட்டுவார். எனக்கு ஒரே குஷியா, கிளுகிளுப்பா இருக்கும். பின்னே, அப்பா ஷேவிங் மெஷின் எடுத்து, 'சர்'ரென இழுத்தா, உடனே அந்த நுரை எல்லாம் வழிந்து, அப்பா முகம், அந்த வழித்த இடத்தில், 'பளபள'ன்னு சந்தனக் கலர்ல மின்னும். பின்னே, ஒவ்வொரு 'சர்'ரென்ற இழுப்பிலும் எல்லா நுரையும், கன்னத்திலிருந்து, பிளாஸ்டிக் கிண்ணத்திலிருக்கும் தண்ணிக்கு வந்துடும்.

கடைசியா, என் இஷ்டமான மீசை! உடனே டப்பாவிலிருந்து சின்ன கத்தரிக்கோலை ரெடியா எடுத்து வைச்சு, அப்பாட்ட நீட்டுவேன். அந்தச் சின்னக் கத்தரிக்



கோலால், மிக அழகாக அப்பா, மீசையை சரிசெய்வதுதான் எனக்கு ஆச்சரியமா இருக்கும். எப்படி, இப்படி இரண்டு பக்க மும் சமமா இருக்கிற மாதிரி வெட்டறாரோ?



அதுவும் உதட்டில் பட்டுக்காம. அப்பா எத்தனை பெரியவர்? — அதனால் தானா யிருக்கும். உதட்டை உள்புறமா மடிச்சிட்டு, மெல்லமா வெட்டறதை கண்மூடாம பார்ப் பேன். தினம் தினம் பார்ப்பதென்றாலும், ஒரு நாள் கூட சலிப்பே வர்றதில்லை.

அவ்வளவு பிடிச்சிருக்கு அவர் மீசை! எத்தனை பேரை மீசையோட பார்த்திருக் கேன்? பால்கார வேலுச்சாமிக்கு— ஆட்டுக் கிடா மீசை! பயம்மா இருக்கும். திருச்சி சித்தப்பா கூட அழகாதான் மீசை வைச் சிருக்கார், இருந்தாலும் அப்பாவோடது போலில்லை. எங்க கிளாஸ் வாத்யார், கஞ்சனாட்டம், ரொம்ப மெல்லிசா இருக் கிறாப்படியே தெரியாத மாதிரி மீசை வைச்சிருப்பார். என் ஃபிரெண்ட் செல்வி யோட அப்பா மீசை, நினைச்சாலே சிரிப்பு வரும்— சதுரமான சாக்லேட் வில்லைகளை வைச்ச மாதிரி, தமாஷா இருக்கும்.

...யப்பா, பார்த்ததிலேயே பயங்கரமா னது அந்த டீக் கடைக்கார ஆள் மீசைதான். ஸ்கூல் போற வழில, அந்த டீக்கடைல, கைலி கட்டிட்டு முண்டா பனியனோட, கழுத்தில தாயத்து வைச்ச கயிறு கட்டிட்டு, பெரிய்ய மீசையோட— வீர பாண்டிய கட்ட பொம்மன் 'சிவாஜி' போல, முகத்தையே மறைக்கிறாற் போல... எவ்ளோ பெரிசு...!

இருந்தாலும் கூட அவர் டீ ஆத்தறதை பார்த்துட்டே இருக்கலாம் போலிருக்கும். ஒரு கையில் ஒரு டப்பாவும், இன்னொரு கையில் மற்றொரு டப்பாவும் வைச்சுக் கிட்டு, ஒண்ணைத் தலைக்கு மேல் உயர்த்தி, இன்னொண்ணைக் கீழே கொண்டு போய், — மேலேயிருந்து "சர்"ரென, துளி கூட சிந்தாமல்... எப்படித்தான் ஊத்தறாரோ? தினமும் பார்த்தாலும் சலிக்கவே மாட் டேன்னுது."

பின்னே, அப்பா ப்ரெண்ட் ஒருத்தர் வரு வாரே, அந்த அக்கௌண்டண்ட் மாமா — பாவம் மீசையே இருக்காது. அப்படி கூட வளராம போகுமோ...? மங்களா அத்தை புருஷன் வெங்கிட்டு மாமாவோட மீசை, தொங்கிட்டு இருக்கும் இரண்டு பக்கமும். வாய்க்குள் பூந்துடுமோன்னு பயமா இருக் கும். என்ன இருந்தாலும் என் அப்பா மீசை போல யாருக்குமே வராதுதான். அம்மா வோட அப்பாவுக்கு, அதான் என் தாத்தா வுக்கு, தலையிலும் முடியில்லை, மீசையு மில்லை, பாவமா இருக்கு அவரை நினைச்சா.

ரெண்டு, மூணு வருஷங்களுக்கு முன்னால் வரை நான் ரொம்பவே அசடா கத்தான் இருந்திருக்கேன் — ஏன் அம்மா வுக்கும் அப்பா போல அழகா மீசையில்லை என்று நினைத்திருந்தேன். ஆனால், இப்போ நினைச்சா வெட்கமா இருக்கு. எத்தனை முட்டாள் பொண்ணு நான்! பெண் பிள்ளைகளுக்கு மீசையெல்லாம் வரா

தேன்னு போன முறை லீவுக்கு வந்த, மங்களா அத்தை பெண் ராஜி சொல்லித் தானே தெரிந்தது...!

பசங்களுக்கு — அதுவும் அப்பா போல பெரிசான பின்தான் மீசை வருமாம். ஏன் அப்படி...? பெண் பிள்ளைகளுக்கு மீசையெல்லாம் வராதென்பது, எனக்குப் புரிந்ததென்னவோ, அப்போ அவள் சொல்லித்தான்! அவள் கோயம்புத்தூரில் படிக்கிறா — சிக்ஸ்த் கிளாஸில்.

அப்பா டெய்லி ஷேவ் பண்ணினாலும், உடனே, நான் ஸ்கூலுக்கும், அப்பா ஆபீஸுக்கும் போயிடறதால, அந்த அழகு மீசையை நாள் முழுக்கப் பார்க்க முடியாது. ஞாயிற்றுக்கிழமைதான் ஜாலி — அப்பா அந்த ஷேவ் பண்ணின முகத்தோட, ஷாம்பு போட்டுக் குளித்து, வெள்ளை வேஷ்டியும் பனியனும் போட்டுக்கிட்டு, சேர்ல உட்கார்ந்திருக்கையில், அப்பா...! என்ன வாசனை அப்பாவிடமிருந்து! அப்பா முகத்தோட சேர்த்துக் கட்டிக்கிட்டு கொஞ்சுவேன். அப்பாவுக்கும் என் இஷ்டம் புரியும், "என்னடா தங்கம்? என் குட்டிம்மாவுக்கு என்ன வேணுமாம்?" என்றபடி அணைச்சுப்பார்.

அப்பாவுக்கு நேர் எதிர் அம்மா! காரணமேயில்லாம கத்துவா சமயத்துல. ஆனாலும், நல்லா கவனிச்சுப்பா. சாப்பிடறப்போ வேணும்னா கூட விடாம ஊட்டி விட்டானும் சாப்பிடப் பண்ணிடுவா. நல்ல அம்மாதான்னாலும், என் அப்பாட்ட சண்டை போடுகையில் கோபமா வரும். கடைசில அம்மா, அழுதுக்கிட்டே போய்ப் படுப்பா. அப்பா அமைதியா, மௌனமா சேர்ல உட்கார்ந்துடுவார். எனக்கு என்ன பண்றதுன்னே தெரியாம, படுக்கையில் படுத்து — பின் தூங்கியும் போவேன். அடிக்கடி இப்படித்தான் ஆகும். அந்தச் சமயத்தில் என் அப்பா கூட என்னை விட்டு எங்கேயோ போன மாதிரி தோணும். அழுகையா வரும். ஆனா... யார்கிட்ட சொல்ல?

காலைல ரெண்டு பேரும் சிரிச்சுப் பேசிப்பாங்க. என்ன "டு" இது? நானெல்லாம், ஸ்கூலில் ப்ரெண்ட்ஸ் யாரும் அழ வைச்சுட்டா, பத்து நாள்னா கூட பேசவே மாட்டேன். இவங்க என்னடான்னா...?

இன்னிக்கும் ஸ்கூல் முடிஞ்சு வந்து, டிபன் சாப்பிட்டுவிட்டு, ஹோம் வொர்க் முடிச்சுட்டு அப்பாவோட ஸ்கூட்டர் வாற சத்தத்துக்காகக் காத்திருந்தேன். ஆனா, மாமாதான் வந்தார் வேகவேகமா. அம்மாட்ட என்னவோ சொன்னார். அதைக் கேட்டு அம்மா முகம் ஒரு மாதிரியா போச்சு. எனக்கு ஒண்ணுமே புரியலை. பாட்டி, தாத்தாட்டயும் அம்மா போய் ஏதோ பேசினா. கடைசியில் காரில் அம்மா, மாமா இருவரும் கிளம்பிப் போகையில் என்னைக் கூப்பிட்டு, அப்பாவோட மாமா இறந்து போனதால அவங்கல்லாம் போயிட்டுக் காலைல வர்றதாயும், என்னைச் சாப்பிட்டுட்டு சமத்தாப் பாட்டியோட தூங்கும்படியும் சொல்லிட்டுப் போயிட்டாங்க.

எனக்கு அழுகையா வந்தது; அப்பாவுக்காகக் காத்திருந்து, அவரும் வராததால நான் ஸ்கூலில் நடந்ததையெல்லாம் யார்ட்டயும் சொல்லிக்காம, அது வேற அழுகை, அழுகையா வந்தது. சாப்பிடவே பிடிக்கலை. எனக்கு அப்பா பக்கத்துல படுத்து, அவர் மேல் கை, காலை போட்டுட்டு, மீசையோட விளையாடிட்டு பின் அப்படியே தூங்கித்தானே பழக்கம்? இந்தப்பாவுக்குத் தெரியாதா? பின் ஏன் வராம போனார்? மாமா இறந்து போனது, 'என்னை விட்டுட்டு இருப்பதைவிட முக்கியமானதா...?' அழுதபடியே பாட்டி மடில படுத்துத் தூங்கிப் போனேன்.

காலைல முழிச்சதும் திரும்ப உறைத்தது. அப்பா இன்னும் வரலேன்னு ஆத்திரமும், அழுகையும் வந்தது. தோட்டத்தில் போய்க் கன்னுகுட்டிகிட்ட உட்கார்ந்துட்டேன், விளையாடக் கூடப் பிடிக்காம. அப்...புறமா வாசல்ல அம்மாவோட குரல்...

"...பாவம், பெரியவருக்குப் பிள்ளைகள் இல்லை. நீங்களே கொள்ளி வைக்க வேண்டியதாப் போச்சு. ஆன்ா உங்க முகம்தான் என்னவோ மாதிரி ஆயிப் போச்சு..."

அம்மாவும், மாமாவும் உடன் அப்பாவும் இதோ வர்றாங்க. ஆனா... இதென்ன அப்பா இப்படி ஆயிட்டார்? அழகான மீசை வைத்த என் அப்பாவா? எங்கே போச்சு அவர் மீசை?

"குட்டிம்மா..." என ஆசையோடு கூப்பிட்டபடி வந்த அப்பாவை விலக்கிவிட்டு, படுக்கையில் போய் விழுந்து பெரிசா அழத் தொடங்கினேன்.

ஒரு நாள் — அதுவும் ஒரு ராத்திரி கூடக் குழந்தையால் தன்னைப் பிரிந்திருக்க முடியலையே என்றெண்ணி, அப்பா அம்மாவிடம், "குழந்தையைப் பார்த்தியா?" என ஆதங்கத்தோடு சொல்லிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது. என் அழுகைக்குக் காரணம் எனக்குத்தானே தெரியும்?

---

**சமையல் சோடா போடாமலேயே வடை, பக்கோடா, மொற மொறப்பாக இருக்க வேண்டுமா? மாவுடன் ஒரு டேபிள் ஸ்பூன் ரவையைக் கலந்து செய்து பாருங்கள். அசந்து விடுவீர்கள். சூடு ஆறிய பின்பும் மொறமொறவென்று வைக்கும் சக்தி ரவைக்குத்தான் உண்டு. சுவையும் கெடாது.**

**— லட்சுமி.**



# சின்னச் சின்ன ஆசைகள்



ரொம்ப நாட்களாகவே ஸ்ரீதரமூர்த்தி என்னைத் தன் வீட்டுக்கு வரச் சொல்லியிருந்தான். போயிருந்தேன். அவனும், அவன் மனைவியும் எங்கோ வெளியில் புறப்பட ஆயத்தம் செய்து கொண்டிருந்தார்கள். முன்னறிவிப்பின்றி நான் போனதால் அவன் தயங்கினான்; மனைவியைப் பார்த்தான்.

அவர்களுடைய தர்மசங்கடத்தைப் புரிந்து கொண்ட நான், ''நீங்க புறப் படுங்க; நான் அம்மாகிட்டப் பேசிக்கிட்டிருக்கேன்'' என்று சொன்னேன்.

அவர்களுக்குத் திருமணமாகி நான்கு வருடங்கள் ஆகின்றன. ஒரு பெண் குழந்தை. விடுமுறைக்காக அம்மாவின் அம்மா வீட்டுக்குப் போயிருக்கிறாள். இப்போது ஸ்ரீதரமூர்த்தி, அவன் மனைவி, அம்மா ஆக மூன்று பேர்தான் வீட்டில்.

அவனை நான் திருமணத்திற்குப் பிறகு சந்தித்த போது என்னிடம் சில விஷயங்கள் மனம் விட்டுப் பேசியிருக்கிறான். அவனுடைய அம்மா எல்லா விதங்களிலும் மருமகளுடன் ஒத்துப் போனாலும், அவ்விருவரும் சேர்ந்து எங்கேயாவது வெளியில் போனால் மட்டும் கடுகடுவென்கிறாள் என்று குறிப்பிட்டிருக்கிறான்.

''பரவாயில்லை, பரவாயில்லை. இன்னிக்கு இல்லாட்டா இன்னொரு நாளைக்குப் போகலாம். வராதவங்க வந்திருக்கிங்க, வாங்க,'' என்று உபசரித்தாள் அவன் மனைவி.

''நோ, நோ. சம்பிரதாய உபசாரம் எல்லாம் வேண்டாம். நானும் மூர்த்தியும் ரொம்ப நெருங்கிப் பழகினவங்க. எதையுமே யதார்த்தமா எடுத்துக்கிற பக்குவம் எங்களுக்கு உண்டு. நீங்க போயிட்டு வாங்க,'' என்றேன்.

''ஆபீசுக்கு ஒரு ஃபோன் கால் போட்டிருக்கக் கூடாதா, பிரபு? சினிமாவுக்கு டிக்கெட் ரிசர்வ் செய்யாமலாவது இருந்திருப்பேன்...,'' வருத்தம் தொனிக்கச் சொன்னான் மூர்த்தி.

''இதோ பார், நீங்க புறப்படுங்க. இன்னொரு நாள் நான் வர்றேன், சாவகாசமாப் பேசிக்கலாம்'' என்று கூறி அவர்களை விரட்டினேன்.

''கொஞ்சம் லெமன் ஜூஸாவது கலந்து தர்றேன்,'' என்ற அவன் மனைவி உள்ளே போய் ஒரு தம்ளரில் ஜூஸைக் கலக்கிக் கொண்டு வந்தாள்.

''நான் அம்மாகிட்டப் பேசிட்டு அப்புறமாப் புறப்பட்டுப் போறேன்; நீங்க போய் வாங்க. ஆல் த பெஸ்ட்,'' என்று வாழ்த்தி அனுப்பி வைத்தேன்.

வெளிக் கதவு, அவர்கள் தன்னைத் தாண்டிச் சென்றதை 'டொடக்' என்று அறிவித்த போது, ஸ்ரீதரமூர்த்தியின் அம்மா ஆரம்பித்தார். ''எத்தனை மாசத்துக்கு அப்புறம் வந்திருக்கே நீ? கொஞ்சம் இருந்து பேசிட்டுப் போனாத்தான் என்னவாம்? அப்படி என்ன சினிமா முக்கியமாம்? என் வீட்டுக்காரர் இருந்த போது இந்த மாதிரி ஆச்சுன்னா, அவரோட நண்பரை உபசரிக்கிறதுதான் என் கடமைன்னு நினைச்சுப் பேசாம நின்னுடுவேன்.''

அந்தக் குரலில் உண்மையைக் காட்டிலும் ஏக்கம்தான் அதிகமாக என் மனத்தில் எதிரொலித்தது. மருமகளைக் குறை சொல்லும் அந்த மாமியார், இந்தச் சந்தர்ப்பத்தில் மட்டுமின்றி பிற சந்தர்ப்பங்களிலும் கூடத் தன் ஆற்றாமையை வெளிப்படுத்தியதை மூர்த்தி என்னிடம் சொல்லியிருக்கிறான். அது இருவரின் மனத்தாங்கலுக்கும் வித்திட்டிருந்தது.

வந்ததற்கு ஏதாவது உபயோகமாகச் செய்ய முடியுமா என்ற யோசனையில் அந்த அம்மையாரிடம் பேச்சுக் கொடுத்தேன்.

''உங்க காலத்திலே நீங்க கணவரோட அடிக்கடி வெளியிலே போவீங்களா?''

''அடிக்கடி எங்கே போக முடியும்? எப்பனாச்சும்தான். அப்போகூட யாரேனும்சொந்தக்காரங்க, இல்லாட்டி அவரோட ஃப்ரெண்டுங்க வந்திட்டா, நான் உடனே

சமையல்கட்டுக்குப் போயிடுவேன். வந்தவங்களுக்குக் காப்பி, பலகாரம் செய்து கொடுத்து, அவங்களை உபசரிக்கிறது தானே முறை? கணவரோட நண்பரையோ, சொந்தக்காரங்களையோ உபசரிக்கிறதை விட்டுட்டுச் சினிமாவுக்குப் போக நான் ஆசைப்பட மாட்டேன். அதுமட்டுமில்லே, 'எனக்காக என் மனைவி எவ்வளவு சின்னச் சின்னத் தியாகங்கள் செய்யறா!' அப்படின்னு என் புருஷன் மனசிலே பட்டுதுன்னா எனக்குத்தான் எவ்வளவு பெருமை! இதை விட ஒரு மனைவிக்கு வேறே என்ன சந்தோஷம் இருக்க முடியும்?''

அவர் பேசிய விதத்தில், தன் கணவன் தன்னைப் பற்றிப் பெருமையாக நினைத்துக் கொள்வார் என்ற கற்பனை வளம்தான் அதிகம் தொனித்தது. ஆனால் அன்றைய நிகழ்ச்சிக்கு — சினிமாவோ, கச்சேரியோ — தன்னால் போக முடியவில்லையே என்ற ஏக்கம், தியாகம் என்ற நீறு பூத்துக் கொண்டு,



நெருப்பாகத் தணல் விட்டுக் கொண்டிருந்ததை அந்தப் பெண்மணி உணரவில்லை என்பதை நான் புரிந்து கொண்டேன். கணவருடன் வெளியே போக வேண்டும்; நான்கு பேர் தங்கள் ஜோடிப் பொருத்தத்தைப் பார்த்து மனசுக்குள்ளாவது பாராட்ட வேண்டும், எல்லாவற்றையும் விட, கணவருடன், வெளியே ஓரிடத்தில் சில மணி நேரம் தனிமையில் கழிக்கும் சுதந்திரம் வேண்டும் என்ற ஏக்கமெல்லாம் நசிந்து போய், துக்கம் கிணற்றில் விழுந்த கல்லாகத் தங்கிவிட்டதையும், மேலோட்டமாக, தண்ணீர் தெளிவு போல மனச்சமாதானத்தை வலுக்கட்டாயமாக ஏற்படுத்திக் கொண்டு விட்டதையும் அவர் அன்றைக்கு உணர்ந்திருக்க மாட்டார் என்று ஊகித்தேன்.

தன் கணவன் இறந்துவிட்ட சூழ்நிலையில், தன்னால் முழுமையாக அனுபவிக்க முடியாததை, 'எங்கிருந்தோ வந்த ஒருத்தி தன் மகனுடன் அனுபவிப்பதைக் காணும் போது அந்தப் பலவருட ஏக்கம் கொஞ்சம் கொஞ்சமாகப் பீறிடுகிறது. அது கோபமாக மாறுகிறது; வெறுப்பாகத் தங்கிவிடுகிறது.

''நீங்க சரியானவங்க அம்மா,'' என்றேன்.

''ஏம்ப்பா?''

''வெளியே புறப்படற போது யார் வந்தால் என்ன? நாசூக்கா அவங்களை அப்புறமாப் பார்க்கறதாச் சொல்லிட்டு, போயிட்டு வந்திட வேண்டியதுதானே?''

''சரிதான். என் புருஷன் என் பிள்ளை மாதிரியா? கொன்னு போட்டுடுவாரு. 'ஏன் ஃப்ரெண்ட்ஸை விடச் சினிமா உசத்தியாப் போச்சா உனக்கு?' அப்படின்னு வாங்கிடுவாரு. என் மாமனார், மாமியாருக்கும் நான் வெளியே போகாம நின்னாதான் என்னைப் பாராட்டுவாங்க.''

''அது சரிதான். ஆனால் காலம் மாறுதில்லே. இப்பவும் பெண்கள் உங்களை மாதிரிதான் இருக்க விரும்பறாங்க; ஆனா ஆம்பிளைங்கதான், அவங்க மனசுக்குள்ளே சின்னச் சின்ன ஏக்கம் எதுவும் வித்தாகி அப்புறம் பெரிய மரமாயிடக் கூடாதுன்னு அதுக்கு இடம் கொடுக்கிறதில்லே.''

அவர் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தார்.

''இப்போதைய கணவன், தன் மனைவியின் சின்னச் சின்ன ஆசைகளை நிறைவேத்த முயற்சிக்கிறான். இது வெறும் மோகத்தால் அல்ல. அனுபவ பூர்வமாப் பார்க்கும் போது, தன் அம்மா இது மாதிரி சின்ன விஷயங்களில் எல்லாம் நிறைவு பெறாததாலதான், தன் மருமகள் அனுபவிக்கும் போது, அதைத் தாங்கிக்க முடியறதில்லே என்ற உண்மையைத் தெரிஞ்சு வைச்சிருக்கான். தன்னுடைய மகன் — மருமகளுக்கும் இந்த நிலை ஏற்பட்டுடக் கூடாதுன்னுதான், தன் தாயாரின் மனப்போக்கிலேயே தன் மனைவியும் சிந்திக்கக் கூடாதுன்னுதான் அவன் மனைவியின் ஆசை



யைப் பூர்த்தி செய்ய முயற்சிக்கிறான்.

"அப்படின்னா...?"

"நம்ம காலத்திலே நிறைவேறாத சின்னச் சின்ன ஆசைகளை — ஏக்கத்தை — நாம மறந்திடறோம். அதுக்குப் பதிலா நம்மை மாதிரி, நம்ம மருமக இல்லையே, சின்ன விஷயங்களைக் கூடத் தியாகம் பண்ணத் தெரியாம இருக்காளே; தாம்பத்தியப் பெருமையைத் தெரிஞ்சுக்காம இருக்காளேன்னு வருத்தப்படறோம். சிறு வயசிலேயே கல்யாணமாகி, சுமார் ஐம்பது வருஷத் திருமண வாழ்க்கையில் முக்காலும் சமையல் கட்டிலேயே கழிச்சுப் பழகிப் போயிட்டுது. மருமக, மகனோட வெளியிலே போகும் போது, நாம பட்ட கஷ்டத்திலே, இந்தப் பெண் கொஞ்சம்கூட படறதில்லையேன்னு நினைச்சுக்கிறோம். இந்தக் காலத்திலே வேலையைச் சுலபமாக்க எத்தனையோ சாதனங்கள் வந்திருக்கு. நாம இடுப்பொடிய, கை நோக எவ்வளவு வேலை செஞ்சிருக்கோம்னு ஒப்பிட்டுப் பார்த்து, மனத்தாங்கலை அதிகப்படுத்தி விட்டிருக்கோம்."

"அதுசரி..."

"காலத்துப் போக்குக்கு ஏத்தா மாதிரி நம்மை நாம மாத்திக்கிறதில்லையா? அந்தக் காலம் மாதிரியா விதவைக் கோலம் போடறோம்? அது எவ்வளவு அநாகரிகம், மிருகத்தனம் என்பதை உணர்ந்து, சில சம்பிரதாயங்களை ஒதுக்கி வெச்சு மனித நேயத்தோட நடந்துக்கிறதில்லையா? அதே மாதிரி, நமக்கப்புறம் வர்றவங்களை மனிதாபிமானத்தோட நடத்த வேண்டியதும் நம்ம பொறுப்பு. நம்மோட உள் மனசுக்குள்ளே புதைஞ்சிருக்கக் கூடிய ஆசைகள், ஏக்கங்கள், இனிமே நிறைவேறப் போறதில்லேங்கிற உண்மையைப் புரிஞ்சுக்கிட்டா அதே ஆசைகள், ஏக்கங்கள் இருக்கிற மருமகளையும் நாம சரியா நடத்துவோம்."

ஸ்ரீதரமூர்த்தி என் பால்ய சினேகிதன் என்பதால் அவன் அம்மாவிடம் நான் உரிமையுடனேயே பேசுவேன்; பழகுவேன்.

நாலைந்து நாட்களுக்குப் பிறகு அவனை மீண்டும் சந்தித்தேன். "என் அம்மாகிட்ட என்ன பேசிக்கிட்டிருந்தே நீ? வழக்கமா ஊர் வம்புதான் பேசுவே, அன்னிக்கு என்ன வெல்லாமோ பேசிட்டே போலிருக்கே?" என்று கேட்டான்.

"ஏண்டா, என்னாச்சு?" பதறினேன் நான். எதையோ பேசப் போக எதிலோ முடிந்து விட்டதோ?

"பயப்படாதே. அவங்களோட பழக்கத்திலே நல்ல மாறுதல் இருக்கு. என் மனைவிக்கு வந்து உதவி செய்யறாங்க. அவங்க முகத்திலே எப்பவுமே இருக்கிற கடுகடுப்பு இப்போ இல்லே. ரொம்ப தத்துவார்த்தமாகவும் பேசறாங்க. என்னவோ மந்திரம் போட்ட மாதிரி இருக்கு. சில சந்தர்ப்பங்களிலே ரெண்டு பேர்ல யாருக்கு சப்போர்ட் பண்றதுன்னு தெரியாமத் தவிச்சிருக்கேன். இனிமே அதுமாதிரி சூழ்நிலை வராதுன்னு நினைக்கிறேன்," என்றான் ஸ்ரீதரமூர்த்தி. அவன் குரலில் உற்சாகமும், நன்றியும் நிறைந்திருந்தது.

பெரியவர்கள், தங்களுடைய கடந்த கால வாழ்க்கையின் நிறைவேறாத ஆசாபாசங்களை மனசிலேயே தேக்கி வைப்பதன் கோளாறு, இளையவர்களின் சுமுகமான வாழ்க்கையில் சூறாவளியாகக் கூட மாறும் வாய்ப்பு உண்டு என்பதை அந்த அம்மையார் தெளிவாகவே புரிந்து கொண்டு விட்டார்.

— பிரபுசங்கர்.



ஜவ்வரிசி புட்டு

புழுங்கல் அரிசியை ஊற வைத்து, களைந்து கல்லுரலிலோ அல்லது கிரைண்டரிலோ சிறிது கரகரப்பாக அரைத்து அதில் பாதி அளவு உப்பு சேர்க்க வேண்டும். அரைத்த மாவை நீர் உறிஞ்சும் வெள்ளைத் துணியில் வைத்து மாவின் நடுவில் குழி போல் செய்து ஜவ்வரிசியைக் கல்லில்லாமல் பார்த்து அக்குழியில் கொட்ட வேண்டும். அந்த மாவை மூட்டையாகக் கட்டி ஜன்னல் கம்பியிலோ அல்லது ஆணியிலோ கட்டித் தொங்கவிட வேண்டும். காலையில் மாவிலுள்ள நீரும் வடிந்து ஜவ்வரிசியும் ஊறி இருக்கும். இந்த மாவைக் கட்டியில்லாமல் உதிர்த்து இட்லி கொப்பரையில் வேக வைத்து எடுத்து தேங்காய்த் துருவல், ஏலக்காய் ஆகியவற்றைக் கலந்து சாப்பிட்டால் சுவையாக இருக்கும். குழந்தைகள் விரும்பிச் சாப்பிடுவார்கள்.

— கலாப்ரியா.

**கா**லையில் விழிப்பு வந்தவுடனேயே, 'கடவுளே! இன்றைக்காவது கடிதம் வர வேண்டும்' என்று வேண்டிக் கொள்ளத் தான் தோன்றிற்று. நேற்றோடு கடிதம் வந்து பதினான்கு நாட்கள் ஆகிவிட்டன. நாலு பேரிடமிருந்தும் கடிதம் வரவில்லை. ஒன் றிற்கு நான்காக குழந்தைகள் இருந்தும் ஒன்று கூட அருகில் இல்லையே என்று நினைக்கும் போது விரக்தியாக இருந்தது.

முதல் பெண் லட்சுமியை பரோடாவிலும், இரண்டாவது பெண் சரஸ்வதியை டெல்லி யிலும் கல்யாணம் பண்ணிக் கொடுத்தா யிற்று. முதல் பையன் குமார் மிலிட்டரியில் ஆபீசராய்ச் சேர்ந்து, இப்போது பாட்னா வில் இருக்கின்றான். இரண்டாவது பையன் சாரதி பெங்களூரில் காலேஜ் ஹாஸ்டலில் தங்கிப் படித்துக் கொண்டு இருக்கிறான்.

நாலுபேரும் வருடத்துக்கு ஒரு முறையோ, இரண்டு முறையோ வந்து விட்டுப் போவார் கள். அவ்வளவுதான்; இவ்வளவு பெரிய வீட்டில் நானும் அவரும் மட்டும் காலம் தள்ளிக் கொண்டு இருக்கிறோம். காலை யில் ஒருமுறை வேலைக்காரி கண்ணம்மா வந்து வேலைகளை முடித்துவிட்டுப் போய் விட்டால், இவர் ஆபீஸிலிருந்து திரும்பும் வரை எனக்குத் தனிமைதான்.

எத்தனை முறைதான் பேப்பரைப் புரட்டிப் புரட்டிப் படிப்பது... எத்தனை முறைதான் 'ஜய ஜய தேவி; துர்கா தேவி' பாட்டுக் கேட்பது. வர வர எல்லாமே பிடிக் காமல் போய்விட்டது.

நாலு குழந்தைகளும் வீட்டில் ஒன்றாய் இருந்த பொழுது நடந்த நாடகங்கள் எல்லாம் இன்னும் பசுமையாக மனத்தில் உள்ளது. லட்சுமி ஒரு குட்டிப் பிரம்புச் சேரில் உட் கார்ந்து கொண்டு மற்ற மூவருக்கும் கணக் குப் பாடம் சொல்லித் தந்தது, சாரதி குமாரின் பேனாவை எடுத்து ரகளை செய் தது, குமார் எஸ். எஸ். எல். ஸி. யில் முதல் மார்க் வாங்க, ஊருக்கெல்லாம் சாக்லேட் கொடுத்தது, சரஸ்வதி டைப் ரைட்டிங் லோயர் எக்ஸாமில் செகண்ட் கிளாஸ்தான் கிடைத்தது என்பதற்காக அழுது ஆர்பாட்டம் செய்தது, இரண்டு பசங்களும் அப்பாவோடு ஸ்கூட்டரில் ஸ்கூலுக்குப் போனது, தீபாவளி போது பட்டாசுக்கு அடித்துக் கொண்டது, நாலு பேரும் ஒன்று சேர்ந்து அப்பாவைக் கிண்டல் செய்தது, கூடத்தில் எல்லோருமாய் வட்டமாய் உட் கார்ந்து கொண்டு ஊர்க்கதை பேசி சாப் பிட்டது — எல்லாம் ஞாபகம் உள்ளது. எல்லாம் மனத்தில் ஆழமாய்ப் பதிந்து, சிதை யாமல், அழியாமல் உள்ளது.

எல்லாவற்றையும் இப்போது நினைக்க, நினைக்கக் கண்ணில் கண்ணீர் வந்தது. அந்த நாட்கள் எல்லாம் மீண்டும் திரும்பி வாராதா என்று ஏக்கமாய் உள்ளது. நாலு பேரும் மீண்டும் குழந்தைகளாகி 'அம்மா'





வென்று என்னிடம் ஓடி வரமாட்டார்களா என்று உள்ளது. நாலு பேருக்கும் மறுபடி கையில் சாதம் பிசைந்து போடமாட்டோமா என்று ஆவலாக உள்ளது.

ஆனால் நான் மட்டும்தானே இப்படி யோசித்துக் கொண்டு இருக்கிறேன். அவர்கள் நாலு பேரும் பெற்றவளைப் பற்றி நினைப்பதாய்த் தெரியவில்லையே. இல்லையென்றால் ஏன் அவர்களால் எனக்குக் கடிதம் போட முடியவில்லை. நாலு பேரில் ஒருவரால் கூட எழுத முடியவில்லையா.

விரக்தியோடு வேலைகளைச் செய்ய ஆரம்பித்தேன். வெந்நீர் அடுப்புப் பற்ற வைத்து,வாசலில்கோலம்போட்டு,குளித்து, விளக்கேற்றி, அவர் எழுந்ததும் காப்பி போட்டுக் கொடுத்து, டிபன் செய்து, அவரை ஆபீஸுக்கு அனுப்பும் வரை வேலை சரியாக இருந்தது.

கண்ணம்மா வந்ததும் தேய்ப்பதற்கான பாத்திரங்களை எடுத்துப் போட்டேன். பிறகு, நாளைய இட்லிக்கான மாவிற்கு, அரிசியைக் கிரைண்டரில் போட்டு ஆன் செய்தேன். பிறகு, கடியாரத்தைப் பார்த்தால் போஸ்ட்மேன் வருகின்ற நேரம் ஆகியிருந்தது.

பேப்பரைக் கையில் எடுத்து மனம் அதில் பதியாமல் புரட்டிக் கொண்டிருந்தேன். இன்றைக்கு என்று பார்த்து போஸ்ட் மேன் வர தாமதமாகிக் கொண்டு இருந்தது. வாசலுக்கும், உள்ளுக்குமாய் நடந்து, நடந்து கால் வலிக்க ஆரம்பித்தது. இட்லிக்கு மாவு வேண்டிய அளவு அரைப்பட்டு விட்டதால், கிரைண்டரை ஆஃப் செய்தேன்.

மீண்டும் ஒருமுறை வாசலுக்குப் போய் வந்தேன். இன்னும் போஸ்ட் மேனைக் காணவில்லை. உள்ளே வந்து, கிரைண்டரிலிருந்து மாவை வழித்து எடுக்க ஆரம்பித்தேன். பாதி வழித்துக் கொண்டு இருக்கையில் போஸ்ட் மேன் வந்து கடிதத்தை விட்டெறிந்து விட்டு போவது தெரிந்தது.

எனவே, கடிதம் வந்துவிட்டது. சந்தோஷமாய் இருந்தது. மாவுக் கையோடு என்ன செய்வது என்று புரியாமல் நின்றேன். பிறகு பொறுமையில்லாமல், வீட்டைப் பெருக்கிக் கொண்டு இருந்த கண்ணம்மாவிடம், "கண்ணம்மா! அப்புறம் பெருக்கலாம் லெட்டர் வந்திருக்குது பாரு. அத மொதல்ல எடுத்துட்டு வா" என்று சொல்லிவிட்டு, கையைக் கழுவ பின்பக்கம் சென்றேன்.

கையைக் கழுவுகையில் கண்ணம்மாவிடம், "எத்தனை லெட்டர் வந்திருக்குது?" என்று கேட்டேன். "ஒண்ணுதாம்மா வந்திருக்குது" கண்ணம்மா சொல்லி விட்டு கடிதத்தை மேஜை மீது வைத்துவிட்டுப் போனாள்.

ஒரு நிமிடம் ஒன்றுதான் வந்துள்ளதா என்று தோன்றிற்று. ஆனால், ஒன்றாவது வந்ததே என்று மனத்தைத் தேற்றிக் கொண்டேன். யாரிடமிருந்து வந்திருக்கும். அந்தக்

கடிதம். லட்சுமி, சரஸ்வதி, குமார், சாரதி என ஒவ்வொருவர் முகமாக மனத்தில் வந்து போயிற்று.

நாலு பேரில் யார் போட்டிருப்பார்கள் அந்தக் கடிதத்தை. திடீரென்று மனத்தில், 'யார் அந்தக் கடிதத்தைப் போட்டிருப்பார்களோ அவங்களுக்குத்தான் என் மீது பாசம் அதிகம்' என்று தோன்றியது. ஏன் அப்படித் தோன்றியது என்று புரியவில்லை. ஆனால் அது நிச்சயம் சரியாக இருக்கும் என உள்ளுணர்வு கூறிற்று.

யாராக இருக்கும் அது? லட்சுமியா, சரஸ்வதியா, குமாரா, சாரதியா. எனக்கு ஒரு மாதிரி படபடப்பாக இருந்தது. என்னை நானே நிதானப் படுத்திக் கொண்டேன்.

கை ஈரத்தை முந்தானையில் துடைத்துக் கொண்டு வரும் போது, ஒரு வேளை அது எல். ஐ. ஸி. யிலிருந்தோ, எலெக்ட்ரிசிடி போர்டிலிருந்தோ வந்த கடிதமாய் இருக்கப் போகிறது என்ற பயம் வந்தது.

ஆனால் மேஜையின் மேலே நீல நிற இன்லாண்ட் லெட்டர் சிரித்தது. எனவே, இது நான் எதிர் பார்த்த கடிதம் தான். மறுபடியும் சந்தோஷமானேன். கடவுளுக்கு நன்றி சொன்னேன். கடைசியாய், பதினான்கு நாட்களாய் இருந்த கவலை மறைந்து போயிற்று. குறைந்தது, என்னுடைய ஒரு குழந்தையாவது என்னை ஞாபகம் வைத்துக் கொண்டு எனக்குக் கடிதம் போட்டிருப்பது திருப்தியைத் தந்தது.

ஆனால், யார் அந்தக் குழந்தை என்கிற ஆவல் அதிகமாயிற்று. பட படக்கும் இதயத்தோடு கடிதத்தை எடுத்து பின் பக்கத்தைப் பார்த்தேன். அனுப்புவோர் முகவரி எதுவும் எழுதப் படவில்லை. முகவரியில் இருந்த கையெழுத்தும் யாருடையது என்று புரியவில்லை.

எனக்குப் பதட்டம் இன்னும் அதிகமாயிற்று. ஒரே புதிராக இருந்தது. முகவரியில் இருந்த கையெழுத்தை நான் இதுவரை பார்த்ததேயில்லை. பதட்டத்துடனும், குழப்பத்துடனும் கடிதத்தைப் பிரித்தேன்.

'உன்னுடைய கடிதம் வந்து ஒன்றரை மாதமாகிறது. அதற்குப் பின் நீ எழுதவேயில்லை. தினமும் உன்னிடமிருந்து கடிதத்தை எதிர்பார்த்து ஏமாந்து போகிறேன். உனக்கு என்னை ஞாபகம் இருக்கிறதோ, இல்லையோ. அதனால்தான் வேறு வழியில்லாமல் தபால்காரரின் உதவியோடு உனக்கு இந்தக் கடிதத்தை எழுதிப் போடுகிறேன். சீக்கிரம் பதில் போட்டு' என்று தபால் காரரின் உதவியோடு எழுதியிருந்தாள் கிராமத்தில் இருக்கிற எழுதப் படிக்கத் தெரியாத வயதான என் அம்மா.

---

**சமீபத்தில் வி.வி.எஸ் நல்லெண்ணெயின் சென்னை விநியோகிப்பாளர்களின் கூட்டத்தினை அம்மன் ஏஜென்சீஸ் கூட்டியது. விற்பனையில் முதலிடம் வகித்தவர்களுக்குப் பரிசுகளை அளித்து மகிழ்ந்தது.**





வளரும் வயதில் குழந்தைகளுக்குத்
தேவை
காம்ப்ளான்
ஏனெனில், காம்ப்ளான், குழந்தைகளுக்கு
அன்றாடம் தேவைப்படும் அத்யாவசிய
ஊட்டச்சத்தை வழங்குகிறது.
குழந்தைகளின் வளர்ச்சிப் பருவம்
சாதாரணமாக 15 அல்லது 16
வயதிலே நிறைவு பெறுகிறது. இந்த
வளர்ச்சிக்கு அடிப்படையான
ஊட்டச்சத்து, புரதமாகும். ஆகவே,
உங்கள் குழந்தைகளுக்கு இப்போது
காம்ப்ளான் மிகமிக அவசியம். புரதச்
சத்துக்களிலேயே தலைசிறந்த பால்-
புரதம் (20%) கொண்டது
காம்ப்ளான். மேலும்
22 ஆதார உணவுச்சத்துக்களும்
காம்ப்ளானில் உள்ளன.
குழந்தைகள் ஆசையோடு கேட்டு
அருந்தும் சுவைகளில் கிடைக்கிறது
காம்ப்ளான்.
Complan
23
மூலாதார
சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்
பால சேர்க்கத் தேவையில்லை
காம்ப்ளான்®
GX/62/203 TAM
திட்டமிட்ட பரிபூரண உணவு

ஆடி வெள்ளிக் கிழமை —
பதினெட்டாம் பெருக்கு —
வரலட்சுமி விரதம்.

மூன்றும் ஒன்றாகச் சேர்ந்து வந்த அந்த நாளில் விசேஷத்திற்குக் கேட்கணுமா? அரக்குப் புடைவையும், சிவந்த பெரிய பெரிய ரோஜாப் பூக்களின் மாலையும், தங்கக் கிரீடமும் ஜொலிக்க ஆனந்தமயமாக 'அம்மை' காட்சியளித்துக் கொண்டிருந்தாள். அந்த, அவளின், அன்னையின் கடைக்கண் பார்வைக்கு ஏங்கி நிற்கும் பக்தர்களின் கூட்டம். 'கணகண'வென்ற மணியோடு தீபம் காட்டிய போது, கண்களே சொருகிக் கொண்டு போனது. 'அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகி'யின் சௌந்தர்ய லஹரி!

பெங்களூர் அருகேயுள்ள காஞ்சனஹள்ளியில் வீற்றிருக்கும் ஞானாக்ஷி ஸ்ரீ இராஜ ராஜேஸ்வரியின் திருக்கோலம்தான் இது! இவள் பெயரால் அந்த இடமே இராஜ இராஜேஸ்வரி நகர் என்று அழைக்கப்படுகிறது. கன்னட நாட்டில் முழுக்க தமிழ் நாட்டுப் பாணியில் ஒரு கோயில்.

தெய்வ அருட் குழந்தையாக பிறந்த திருச்சி சுவாமிகள் ஞானதாகத்தோடு இமய மலைச் சென்ற போது அங்கிருந்த இவருடைய குரு சிவபுரி சுவாமிகள் காஞ்சன ஹள்ளியின் ஸ்தல சிறப்பைக் கூறினாராம்.

காஞ்சனஹள்ளி 'காஞ்சனகிரி' என்ற பெயரோடு இருந்திருக்க வேண்டும். அத்திரி மகரிஷியின் ஆஸ்ரமம் இருந்த தவச்சாலை இது. அனுசுயா தேவி மும்மூர்த்திகளைக் குழந்தைகளாக்கித் தொட்டிலில் போட்டுத் தாலாட்டிய திவ்ய க்ஷேத்ரம் இது. மும்மூர்த்திகள் குழந்தைகளானவுடன் உலக இயக்கம் எப்படி நடக்கும்? பதறிப் போன பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி மூவரும் அனுசுயாவை வந்து வேண்டினார்களாம். அந்தக் கற்புக் கரசியோ,

''இது நான் வணங்கும் மகா அன்னையின் விளையாடல். என்னிடம் முறையிடுவதை விட அவளிடம் போய் முறையிடுங்கள்'' என்றாளாம்.

மூவரும் தன் கணவன்மார்கள் திரும்ப வேண்டி தொழுது நின்ற போது அன்னை மகாசக்தி எழுந்தருளி, குழந்தைகளை மும்மூர்த்திகளாக்கினாளாம். மக்களை இரட்சிக்கும் இராஜாக்களுக்கெல்லாம் இராஜாவான அன்னை இராஜ ராஜேஸ்வரி ஆனாள்!

இத்தனைக்கும் மேலாக அற்புதமான சிறப்பு ஒன்று இங்கு உண்டு. இந்தியாவெங்கும் சக்தி ஸ்தலங்கள் ஐம்பத்தியொன்று உண்டு. சக்தி தன் உடலை வெட்டித் துண்டாக்கி அங்கங்களை விட்டெறிந்தாள். அப்படி விழுந்த இடங்களே சக்தி ஸ்தலங்கள் ஆயின என்று சொல்வர். அப்படி காஞ்சனஹள்ளியின் தேவியின் கர்ண பாகம் (காது) விழுந்ததாம். எனவே இதுவும் ஒரு திவ்ய க்ஷேத்ரமானது.

அதே போல இந்தப் புனித பூமிக்கு இன்னொரு விசேஷமும் உண்டு.

இராமனும், சீதா தேவியும் வனவாசத்திற்கு வந்த போது இங்கு தங்கியிருந்திருக்கிறார்கள். அப்போது ஒரு அசுரன் காக வடிவில் வந்து அன்னையைத் தொந்தரவு செய்த போது, அஞ்சனவண்ணன் ஒரு புல்லைப் பிடுங்கி அஸ்திரமாக்கி எறிந்திருக்கிறான். பயந்து அலறி ஓடிய அசுரனை மூன்று உலகத்திலும் பின்தொடர்ந்தது அந்த அஸ்திரம்! இராமபர்ணத்திலிருந்து அவனை யார் காப்பாற்ற முடியும்? முடிவாக இராமனிடமே அடைக்கலம் புகுந்தான்! கடைசியில், விட்ட அஸ்திரத்திற்கு ஒரு கண்ணை மட்டும் பலியாகக் கொடுத்தான். இன்றும் குறிப்பிட்ட அந்த ஒரு மலையில் மட்டும் காகமே போகாதாம்! பக்கத்து இடங்களில் எல்லாம் காகங்கள் உண்டு!

இப்படி எல்லா மகிமையும் இந்தத் திவ்ய பூமியில் இருந்ததால்தான் இங்கு கைலாஸ ஆஸ்ரமத்தை நிறுவி தேவியை ஸ்தாபிக்க வேண்டும் என்று கட்டளையிட்டு இருக்கிறார் குரு! சீடரும் அதைச் சிரமேற்கொண்டு காஞ்சனஹள்ளிக்கு 1960ல் வந்து ஆஸ்ரமப் பணியை ஆரம்பித்து இருக்கிறார்.

# கண்ணால் கிடைத்தேற்றி...

இங்கே ஆலயத்தை அமைத்த ஸ்ரீ நச்சி [illegible] ஒரு ஞானாக்ஷி இராஜ இராஜேஸ்வரியை ஸ்தாபிதம் செய்ய வேண் [illegible]சி, மீனாக்ஷி, விசாலாக்ஷி இல்லையா? அது என்ன ஞானாக்ஷி?

[illegible] அனைத்து நவதுர்க்கைகளுக்கும், சிவன், விஷ்ணு, பிரம்மா மூவருக்கும் மேலாகி அண்ட சராசரங்களுக்கும் அன்னையானவள் இந்த ஆதிபராசக்தி! அதையே அனுசுயாவின் கதையும் நமக்குக் கூறுகிறது. அவளே இராஜ இராஜேஸ்வரி ஆகிறாள்.

இவள் ஞானாக்ஷி ஆனதும் அற்புதமானதே!



Jnanakshi
Sri Raja Rajeshwari Ambal



* திருச்சி சுவாமிகள்

ஆமை இருக்கிறதே, அது முட்டையிட்டுப் போட்டு விட்டுப் போய் விடுகிறது. பின்னர் முட்டை பக்குவமடைந்து குஞ்சு வெளி வருகிறது. அதற்கு உணவு? எங்கோ இருக்கும் ஆமை 'ஐயோ நம் குட்டிக்குப் பசிக்குமே' என நினைத்தாலே இங்கு குஞ்சுகளின் வயிறு ரொம்பி விடுமாம். இது விஞ்ஞானமும் ஒத்துக் கொண்ட விந்தை!

மீன் இருக்கிறதே, அது தாயாகித் தன் குஞ்சுகளின் புடைசூழ நீரில் நீந்திக் கொண்டிருக்கும்., குட்டி மீன்களெல்லாம் இரண்டு பக்கமும் தாயோடு ஒட்டிக் கொண்டு பின்னாடியே ஓடி வந்து கொண்டே இருக்கும். தாய் மீன் தன் கண்களை இப்படி அப்படித் திருப்பிப் பார்க்குமாம்! அதன் பார்வை பட்ட இடத்திலுள்ள மீன்களின் வயிறெல்லாம் நிறைந்து விடும். இதுவும் ஆச்சரியமே!

அப்படி அன்னை தன் கடைக்கண் பார்வை பட்டாலே தம் மக்களின் துயரெல்லாம் தீர்ந்து விட ஏதுவாகிறாள். அதனால் தானே உருகி உருகிப் பாடிய அபிராமி பட்டரும்,

'தனம் தரும், கல்வி தரும், ஒருநாளும்
தளர்வறியா மனம் தரும், தெய்வ வடிவும்
தரும்...
அபிராமி கடைக் கண்களே!'

என்றார்.

மடைப்பள்ளி வாசம் செய்தவன் கவி காளமேகம் ஆனதும், அடி மரத்தில் அமர்ந்து நுனி மரம் வெட்டிய மடையன் கவிகாளிதாஸன் ஆனதும் அவளின் கடைக் கண் மகிமைதானே!

இதைப் பெறவல்லவா அம்பிகையின் முன் நிற்க வேண்டும். அடம் பிடிக்கும் குழந்தையாக அருளுக்கு ஏங்க வேண்டும்.

இவள் என்ன தருவாள்? ஞானம் தருவாள்! அதுவும் கடைக்கண்ணின் பார்வையிலே. ஏனென்றால் இகலோக இன்பங்களையும் கடந்து முக்திக்கு வித்தாக, இராஜேஸ்வரியாக இருப்பதால் இவள் கடைக்கண்ணில் ஞானத்தை அளிக்கிறாள். அதுவே பேரின்பம் அன்றோ! அதற்காகத்தான் இங்கே ஞானாக்ஷி இராஜ இராஜேஸ்வரி குடிகொண்டாள்.

இவள் மேல் வைத்த பக்தியின் உயர்வை மிக அழகாகக் கூறினார் கிரிஜா இராமச்சந்திரன். இவர் வழக்கமாக இங்கே வந்து அம்பிகையின் பல மகிமைகளை வாழ்க்கையில் உணர்ந்தவர்.

''என்னால கோவில்லே முழு மனதோட 'கான்சன்ட்ரேட்' பண்ண முடியலை! த்யானமாவது, ஒண்ணாவது இந்த விஞ்ஞான யுகத்திலே என்றெல்லாம் சொல்வார்கள். ஆனால் நம் அன்றாட வாழ்க்கையிலே பாருங்க. நமக்கு மிக மிகப் பிடித்தவரோட பேசுகிறோம். அதே சமயம் சுற்றுப்புறத்திலும் பார்க்கிறோம். நமக்கு மிக வேண்டியவர்களெல்லாம் வருவார்கள். ஆனால் நம் கண் பார்ப்பதில்லை. நமக்குப் பிடித்தமான புத்தகம் படிக்கிறோம். காதுக்கருகே பேசுகிறார்கள். ஒலி எழுகிறது. அர்த்தத்தை மூளை எடுத்துக் கொள்வதில்லை. இப்படிச் செய்யும் காரியத்தில் ஒன்றும் போது கண், காது, மூக்கு திறந்திருந்தாலும் பிரயோஜனமில்லை!

அதே போல மனம் மிகத் தீவிரமாக ஒன்றைச் சிந்தித்துக் கொண்டிருக்கும் போது சாப்பிட்டாலும், வெற்றிலைப் பாக்குப் போட்டாலும் கிரமமாகத்தான் செய்வோம். ஆனால் என்ன சாப்பிட்டோம் என்று நினைவு இருப்பதில்லையே தவிர, பாயாசத்



கல்யாண அழைப்பிதழ்களை போஸ்ட் செய்யும் போதும், ஒரே நாள், ஒரே போஸ்ட் பாக்ஸில் போடாமல் கொஞ்சங் கொஞ்சமாக வெவ்வேறு நாளில், வேறு வேறு இடங்களில் போஸ்ட் பண்ணினால் ஒரளவிற்குத் தவறாமல் போய்ச் சேருகிறது.

— பானு சுரேன்.

தையும், மோரையும் ஒன்றாக்கிச் சாப்பிடுவதில்லை.

இதையே கோயிலில் அன்னையின் முன் நின்று பக்தி செய்து பாருங்கள். காது திறந்திருந்தாலும் பக்கத்து மாமியின் வம்பு பேச்சு கேக்காது. கண்கள் அன்னையைப் பார்க்குமே தவிர அடுத்தவரின் பட்டுப் புடைவையைப் பார்க்காது!

சரி, இப்படி பக்தி செலுத்தி ஞானத்தை வாங்குவதால் என்ன பிரயோஜனம் என்று கேட்கிறீர்களா?

நமக்கு ஒரு பிரச்னை வருகிறது என்று வைத்துக் கொள்வோம். பிரச்னை என்றாலே என்ன? நம்மால் செய்ய முடியாதது, நமது சக்திக்கு மீறியது என நினைப்பதுதான் இல்லையா?

ஒரு காரை எடுத்துக் கொள்வோம். அதில் பாட்டரி டவுன் ஆகி விட்டதால் அதால் கிளம்ப முடியவில்லை. ஓட முடியவில்லை. உடனே என்ன செய்கிறோம்? பாட்டரிக்கு சார்ஜ் பண்ணுகிறோம். அதில் சக்தி நிரம்பியவுடன் ஓட ஆரம்பிக்கிறது.

அதே போலத்தான் இங்கே சக்திமயமாக நிற்கிறாள் அன்னை. இங்கே வந்து கருத்தொன்றி நிற்கும் போது அவரவர்க்குத் தேவையான சக்தியை 'சார்ஜ்' செய்து கொள்ள முடியும். இவள் எத்தனை வோல்ட். தொட்டாலே ஷாக் அடிக்காதோ! அதனால்தான் 'கடைக்கண் பார்வை' போதும் என்பது. இந்தச் சக்தியைத் தொழும் போது நம் பிரச்னைகளைத் தாண்டுதற்கான சக்தியை நாம் பெறலாம்.

நமக்கு வரும் பிரச்னைகளை நாம்தான் தீர்க்க வேண்டும். அதுதான் வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு வழி. சாதிக்க முடியாதவையெல்லாம் சாதிக்கப்படும் போது வெற்றியாளராகிறோம். அதற்கு இந்த ஞானாக்ஷி நெஞ்சில் உரமேற்றுகிறாள்'' என்றார் நெகிழ்ந்து.

எத்தனையோ சம்பவங்கள் இந்தக் கோயிலில் நடந்து இருக்கின்றன. ஊருக்கெல்லாம் மருத்துவம் பார்த்த டாக்டர் தனக்குப் பிள்ளை வரம் வேண்டி இவளை வலம் வந்தாள்! மகா அன்னை கேட்ட வரம் கொடுத்தாள்.

அறுபதாம் ஆண்டு திருப்பணித் தொடங்கிய நாளில் இருந்து இன்று வரை யாரிடமும் நிதியுதவி கேட்டுச் சென்றதில்லையாம் சுவாமிகள். தானாகவே வந்து நிதி குவிவது இவளின் சக்திக்குச் சான்று.

முப்பதாண்டுகளாகச் சிற்பக் கலைஞர்களின் உளிச் சத்தம் இங்கு ஓயவே இல்லை. தமிழக பாணியில் கோயில் கட்டி முடிந்த பிறகு, யாக சாலையும், மகாமேரு பீடமும் ஆரம்பித்து இருக்கிறார்கள். வேலைகள் நடந்து கொண்டு இருக்கின்றன.

நவராத்திரி விழா இங்கு வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. ஒன்பது நாளும் சண்டி ஹோமமும் விசேஷ பூஜைகளும் நடைபெறுகின்றன. அன்னை அவளுக்கே உரிய சரத் காலத்தில் களி நடம் புரிகிறாள்.

அதே போல பொங்கல் சமயத்தில் கனுப் பொங்கலன்று இங்கு அம்மனுக்குச் 'சாகம்பரி அலங்காரம்' செய்யப்படுகிறது. காய்கறிகளாலேயே செய்யப்படும் அலங்காரம் சாகம்பரி அலங்காரம் எனப்படும்.

'பூக்களுக்குத்தான் தேவியின் திருமேனியைத் தீண்டும் பாக்கியமா? எங்களுக்குக் கிடையாதா?' என முறையிட்ட காய்கறிகளுக்கும் அன்னை அருள்பாலித்துத் தன்னை காய்கறிகளால் அலங்கரித்துக் கொண்டாள் என்று சொல்லலாம்.

ஆனால் பொங்கல் நன்னாளில் புது அரிசியும், வெல்லமும், காய்கறிகளும் வந்து குவியும். அதற்கு அடையாளமாகவே கனுப் பொங்கலன்று காய்கறிகளால் அலங்கரிக்கப்படுகிறாள் என்று எடுத்துக் கொள்ளலாம்.

சிரத்தையும், பக்தியும் பின்னிப் பிணைந்து தெய்வீகமாகி நிற்கின்ற அழகை இந்தக் கோயிலிலே காண முடிகிறது. சுத்தமான சுற்றுப்புறம். அம்மனுக்குப் புடைவையைக் கொசுவிக் கட்டியிருக்கும் அழகே அழகு. அதற்கு மேல் பூ அலங்காரத்திலும் சிரத்தை. பூஜைக்கு வரும் பூவையெல்லாம் தூக்கி அவள் மேல் போடாமல் அலங்கார வல்லியாக அவள் அமர்ந்திருக்க, காலடியில் மலர்ச் சரங்கள் தஞ்சமடைகின்றன.

லக்ஷ்மி, சரஸ்வதி இருபுறமும் நிற்க ஞானாக்ஷி உற்சவ மூர்த்தியாக மூலஸ்தானத்தின் பின்புறம் குடிகொண்டாள்.

நாளெல்லாம் பார்த்தாலும் சலிக்காத அழகு! அழகின் வெள்ளம்! நெஞ்சிலும் அந்த பக்தி அமுதத்தைச் சுமந்து திரும்ப மனமில்லாமல் திரும்புகிறோம்.

— மஞ்சுளா ரமேஷ்.



**குழந்தைகளுக்கு வெற்றிலை, பாக்குக்குப் பதில் ஒரு வாழைப் பழம் கொடுக்கலாம். விரும்பிச் சாப்பிடும். 'வேஸ்ட்' ஆகாது.**

**— பார்வதி.**

காப்பியுடன் வழக்கத்திற்கு மாறாக போண்டாவும் வரவே, என்ன விசேஷம் என்பது போல மனைவியைப் பார்த்தான் முரளி. தினம் டிபன் பண்ண மாட்டாள் ரமா. பசிக்கிறது என்றால், "இரண்டு பிஸ்கட் எடுத்துக்கங்க. சீக்கிரம் சாப்பிடலாம்" என்று தட்டிக் கழிப்பாள். களைத்து ஓய்ந்து ஆபீஸிலிருந்து வருபவனுக்குச் சுடச்சுடக் காப்பியுடன் டிபன் சாப்பிட்டவாறு அக்கடாவென்று காலை நீட்டிக் கொண்டு பேப்பர் படிப்பதில் இருக்கும் இன்பம். அதை அவளுக்குச் சொல்லிப் புரிய வைக்க முடியாது. கொஞ்சம் கடிந்து சொன்னால்... "நாள் முழுக்கச் சமையல் ரூம்ல அடைஞ்சு கிடக்க என்னால முடியாது. அப்படிப் பசிச்சா, வரச்சே ஏதாவது வாங்கி வர்றது எனக்கும் சேர்த்து..." என்று ஓங்கிச் சொல்லுவாள்.

இன்றைக்கென்ன அதிசயமாக டிபன்?

"அப்பா வந்திருக்கார்..." என்றாள் ரமா, அழகாகச் சிரித்தபடி. அப்பா என்பது அவளுடைய அப்பா.

போண்டாவைத் தின்பதற்குள்...

"அடடா, மாப்பிள்ளை, எப்ப வந்தீங்க ஆபீஸிலிருந்து..." என்று எதிரில் வந்து உட்கார்ந்தார் மாமனார். வழக்கமான குசல விசாரிப்புகள் நடந்தன. ஏதோ தத்துவ தர்க்கத்தைக் கேட்கும் பாவனையில் லயித்தவாறு ரமா நின்று கேட்டுக் கொண்டிருந்தாள் முகமெல்லாம் ஒரு பூரிப்பு.

மணி ஏழடிக்கவே...

"அப்பா ராத்திரிக்கு என்ன சமைக்கட்டும்?"

"என்ன வேணா பண்ணேன். நீ வெறும் சாதம் வடிச்சாக் கூட அப்படி மணக்கறது. அப்படியே உங்கம்மா கைமணம்" என்று சிலாகித்தார்.

"இல்லேப்பா. உங்களுக்குப் பிடிச்சதா பண்றேன்," ரமா சமைக்கப் போய் விட்டாள்.

டீ. வி. யைப் போட்டுவிட்டு எதிரில் உட்கார்ந்த மனுஷர் சாப்பிடத்தான் எழுந்தார்.

சாப்பாடு பிரமாதம். கத்திரிக்காய் ரச வாங்கி, அரைத்துவிட்ட ரசம், பீன்ஸ் கறி, பச்சடி... அப்பளம்... மாமனார் ஒரு பிடி பிடித்தார். சாப்பிட்டபின் பேரனுடன் சீட்டு விளையாடினார். பிறகு பெண்ணுடன் அரட்டை. மாதம் ஒரு முறை வருவதும், வக்கணையாகச் சாப்பிடுவதும், நாட்டுப் பெண் பற்றிக் குற்றப் பத்திரிகை வாசிப்பதும் வாடிக்கையானது. அதிம் நாம் ஏன் தலையிட வேண்டும் என்று முரளி படுக்கப் போய் விட்டான். புத்தகம் படித்துக் கொண்டிருந்ததால் தூக்கம் வரவில்லை. ரமா படுக்க வரும் போது மணி பத்தரை.

"அப்பாவைப் பார்த்தாப் பாவமாயிருக்கு."

"ஏன், என்னாச்சு?"

"அம்மாவுக்கப்புறம் அவரை யாரும் கவனிக்கிறதில்லே."

"உன் மன்னிதான் பத்திரமாப் பார்த்துக்கிறாளே?"

"ஆமாம். எல்லாம் சுயநலம். அப்பா பாவஞ், நாக்கு செத்துப் போய்க் கிடக்கிறார். வயசான காலத்தில் வாய்க்கு ருசியாச் சாப்பாடில்லை."

"ஏன் மன்னி சமைக்கிறதில்லையா?"

"சமைச்சா ஆச்சா? பாக்கி வேலையெல்லாம் யார் செய்யறது? எங்கப்பா மாதிரி ஒரு மாமனார் கிடைக்க மன்னி கொடுத்து வைச்சிருக்கணும். ரவி ஸ்கூல்லேருந்து வந்தபின் அப்பாதான் சாதம் போடறார். மத்தியானம் பால் வாங்கிக் காய்ச்சி வைக்கிறார்."

"இதென்ன பெரிய வேலையா?"

"உங்களுக்கென்ன சொல்றதுக்கு? அப்பாக்கு ஒரு ஸ்பூனை எடுத்து அந்தண்டை போட்டுப் பழக்கமில்லே. வயசான காலத்தில் ரெஸ்ட் வேணாமா? அப்பா சொல்

# வருகை

**பானுகுமார்**

வதையெல்லாம் கேட்டா எனக்குக் கண்ணிலே ரத்தமே வர்றது,'' என்று விசும்பி அழுதாள்.

முரளிக்குத் தன் அப்பாவின் நினைவு வந்தது. அம்மா இருந்தவரை அவரும் ஒரு வேலை செய்ததில்லை. எதிர்பாராமல், காலேஜ் படிக்கும் இரண்டு பிள்ளைகளையும் அவர் பொறுப்பில் விட்டுவிட்டு அவள் இறந்தபின், வாழ்க்கை நூல் அறுந்துவிடாமல்கெட்டியாகப்பிடித்துக்கொண்டு, அக்கம் பக்கத்தினர் உதவியுடன் வீட்டு வேலை



களைக் கற்றுக் கொண்டு செய்யத் தொடங்கினார். பிள்ளைகளுக்குச் சமைத்துப் போட்டு, படிக்க வைத்து, வேலைக்கு ஏற்பாடு செய்து, திருமணமும் செய்து வைத்தார்.

ஆரம்பத்தில் பிள்ளைகளுடன் இருக்கத்தான் அப்பாவும் ஆசைப்பட்டார். இருவரும் வீடு வாங்கப் பண உதவி செய்து, தன்னை அவர்களுடன் ஐக்கியப்படுத்திக் கொள்ளப் பார்த்தார். ஆனால் என்னவோ ஒட்டவேயில்லை. அனாவசியமாக, ஒரு வார்த்தை பேசி அறியாத ஆதர்சவாதி அப்பா. சுடுசொல் பொறுக்க முடியவில்லை. அதையும்விடக் காரணமில்லாத அலட்சியத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. பிள்ளைகளின் மண வாழ்க்கையில் தன்னால் கசப்பு ஏற்பட வேண்டாம், இழுத்து இழுத்து உறவு முறைகளும் ஒரேயடியாக முறிந்து போக வேண்டாமென்று ஒதுங்கி வாழ முடிவு செய்தார்.

எழுபது வயதிலும் தானே சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டு, பொழுது போகவில்லை என்று பார்ட் டைம் வேலை பார்த்துக் கொண்டு, 'வாக்' போவதிலும், காசெட் கேட்பதிலும் வாழ்க்கையின் அர்த்தத்தைத் தேடும் அவருக்காகப் பரிதாபப்பட வேண்டாம். கூடுமான வரையில் தன் கையையேநம்பிப்பிழைக்கும்அவரைநினைத்துப் பெருமைப்படவும் வேண்டாம். ''கிழத்துக்கு உடம்பில கொழுப்பு அதிகம். சக்தியிருக்கு. செஞ்சுக்கட்டும்'' என்று விட்டேற்றியாகப் பேசிவிட்டுப் போகட்டும். குறைந்தபட்சம் பொய்ப் பிரசாரமாவது செய்யாமலிருக்கலாம்.

ரமாவும், முரளியின் தம்பி மனைவி சீதாவும், ஊர்ப் பார்வையில் தங்கள் பெயரைக் காப்பாற்றிக் கொள்ள நாக்கில் நரம்பில்லாமல் பேசுவார்கள்.

''எங்க மாமனார் ஒரு முசுடு. அவருக்கு மனுஷாளே வேண்டாம். பிள்ளைகள் தாங்கக் காத்திருக்கிறச்சே, முறுக்கிண்டு எங்கேயோ போய் உட்கார்ந்திருக்கார்.''

என்ன நியாயமில்லாத பேச்சு. அதைவிட நியாயமில்லாதது முரளியும், அவன் தம்பியும் அதை மறுத்துப் பேச முடியாதது தான். வீட்டின் அழுக்கை வெளியில் அலசுவதில் யாருக்கு என்ன லாபம்?

அப்பாவை நினைத்து மனத்திற்குள் மருகுவதைத் தவிர முரளியால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

''என்னங்க, நான் பாட்டுக்குப் பேசிண்டே போறேன். நீங்க சும்மாயிருக்கீங்க. அப்பாவை ஒரு வாரம் இங்கேயே இருங்கன்னு சொன்னேன். நீங்களும் ஒரு வார்த்தை சொல்லுங்க. அவரைப் பார்த்தால் பாவமா இருக்கு.''

''ஆமாம், பாவம்தான் அப்பா'' என்று கண்ணை மூடிக் கொண்டான் முரளி. இமையோரத்தில் ஒரு துளிக் கண்ணீர் எட்டிப் பார்த்தது.

---

பப்பாளிப் பழத்தை மட்டுமே பயன்படுத்தி வரும் நாம் அதன் காயைச் சமைப்பதில்லை. பப்பாளிக்காயை குறுக்காக வெட்டி, விதைகளை நீக்கிய பிறகு தேங்காய்த் துருவியில் துருவலாகத் துருவிக் கடுகு, உளுந்து வெடிக்கவிட்டு மிளகாய் ஒன்று காரத்திற்குச் சேர்த்து துருவல்களைக் கொட்டி வதக்கி உப்புத் தண்ணீர் தெளித்து மூடி, வெந்தவுடன் தேங்காய்த் துருவல் சேர்த்துப் பொரியல் செய்யலாம். சாதத்திற்கு நன்றாக இருக்கும். சௌசௌ (பெங்களூர்க் கத்திரிக்காய்) சமைப்பது போல் தோல் நீக்கிச் சிறு துண்டுகளாக்கி அதோடு கடலைப் பருப்பு சேர்த்துக் கூட்டுப் பண்ணலாம். பப்பாளிக் கூட்டு என்றே சொன்னாலும் நம்ப மாட்டார்கள். சாம்பாரிலும் இதைப் போட்டுச் செய்யலாம். இரத்த விருத்திக்குப் பப்பாளிப் பழம் எவ்வளவு நல்லது! அதைப் போலவே காயும் சிறந்தது.

— விஜி.





# அதே பல்லவி

கேயெஸ்

"மணி எட்டு. ஸ்கூலுக்கு நேரமாச்சு. சிப்பு எடுத்துண்டு தலைவாரிக்க வா. டெய்லி இதே பாட்டு பாடணுமா" சமையல்றையில் இருந்து என் அம்மாவின் குரல். இந்த அம்மாவுக்கு பெரிய்ய 'இது'ன்னு நினைப்பு. எதுவும் நேரப்படி நடக்கணும். ஐந்து நிமிடம் முன்னே பின்னே ஆனா அரை மணி நேரம் கத்தல்.

"மசமசன்னு நிக்காதே. சின்னக் குழந்தைங்கன்னா சுறுசுறுப்பா இருக்காதோ? நாங்க எல்லாம் குழந்தையாய் இருக்கும் போது பம்பரமா சுத்துவோம். உங்களுக்கு கண்ணைத் திறக்கவே ஏழு மணி ஆகிறது."

ஒவ்வொன்றுக்கும் புராணக் கதை உதாரணத்தை ஆரம்பித்தாகி விடும். ஆனாலும் இந்த அம்மா மாதிரி ஊருக்கு முன்னாடி ரெடியாகி நிக்க யாரால் முடியும்? சாயந்திரம் ஏழு மணிக்கு ரெயில் என்றால் காலை பத்து மணிக்கெல்லாம் வீட்டைப் பூட்டு என்பார்.

பூட்டிய வீட்டை எல்லோரையும் விட்டு இழுத்துப் பார்க்கச் சொல்லும் முன் ஜாக்கிரதை. தன்னைப் போலவே எல்லோரும் கெட்டிக்காரியாக இருக்க வேண்டும் என்ற அறிவுரை வேறு.

''இந்தக் கணக்கு தப்பா இருக்கே. வா நான் சொல்லித் தருகிறேன்'' ஏதோ தப்பான அந்தக் கணக்கை மட்டும் சொல்லிக் கொடுத்தால் போறாதோ. மொத்த வாய்ப்பாடுகளையும் கேட்டு மற்ற கணக்குகளையெல்லாம் சரிபார்த்து, மூக்குக் கண்ணாடி மூலமாக என்னை முறைத்து, அப்பப்போ தலையில் குட்டி அரை நாள் பிராணனை வாங்கி விடுவார். என் நல்ல



காலம் அவருக்கு சயன்ஸ் அவ்வளவாக பிடித்தமில்லை. வார விடுமுறை குழந்தைகளுக்கு ஆவலாயிருக்கும். ஆனால் எனக்கோ வெள்ளிக் கிழமையே உதற ஆரம்பிக்கும். எண்ணெய் தேய்த்துக் குளி, இரண்டு பக்கம் கையெழுத்து எழுது, பாட்டு கிளாஸ் போ என்று அடுத்தடுத்து கட்டளைகள்.

அம்மாவின் சமையல் லீவு நாட்களில் தூள் பறக்கும். மொறுமொறுவென்ற உருளைக் கிழங்கு ரோஸ்டும், மூக்கைத் தூக்கும் முருங்கை வெங்காய சாம்பாரும்.... அம்மா கைக்கு மோதிரம்தான் செய்து போடணும். சாக்லேட், பன் பட்டர் ஜாம் போன்றவை அன்றைய படிப்பின் திறமையைப் பொறுத்து எனக்கு அளிக்கப்படும் வெகுமதிகள்.

மாலை இரண்டு மணி நேர சுதந்திரம் எனக்கு உண்டு. எப்படிப்பட்ட சுதந்திரம்! குழந்தைகளுக்கான புத்தகங்களைப் படிக்கலாம். அதிலும் எல்லாவற்றையும் நான் படித்தேனா, அதிலுள்ள பொது அறிவு வினாக்களுக்கு விடை சொல்லத் தெரிகின்றதா என்ற சோதனைகளுக்குட்பட்ட சுதந்திரம். மற்ற புத்தகங்களில் ஜோக்ஸ் மட்டுமே படிக்கலாம். மிலிடரி ரூல்.

''என் கிளாஸ் அநுத்தமா நிறைய கதைப் புத்தகம் படிக்கிறாள். அவள் அம்மா உன்னை மாதிரி சும்மா மிரட்டுவதில்லை'' மெதுவாக முனகினேன் நான்.

''அநுத்தமா போல் நீயும் கணக்கில் பர்ஸ்ட் வா பிறகு பார்க்கலாம்.''

எல்லாமே என் படிப்புகளையும், மார்க்குகளையும் சுற்றிச் சுற்றி வந்தன. ''இன்னிக்கு புதன் கிழமையாச்சே. ஜாமெண்டரி நோட்புக் எடுத்துக் கொண்டு போ. சயன்ஸ் நோட்டில் படம் வரையச் சொன்னாயே. வரைந்து விட்டேன். டீச்சரிடம் கொடு'' எப்படித் தான் அம்மாவுக்கு இதெல்லாம் ஞாபகம் இருக்கோ. ஆக மொத்தம் பள்ளியும் உலகமும் எனக்கு எளிதாகவே இருந்தன.

பள்ளி சென்று மறக்காமல் நோட்டைக் கொடுத்தேன். மதிய இடைவேளை. சயன்ஸ் டீச்சர் என்னை அழைத்தார்கள். அம்மா தான் படம் வரைஞ்சாச்சே. டீச்சர் ஏன் கூப்பிடுகிறார்கள்? சென்றேன். என் நோட்டை பிரித்துக் காண்பித்தார் டீச்சர்.

ராட்சஷ அளவாக வரையப்பட்டிருந்த ஒரு குண்டு பிப்பெட்! ''என்ன இது ஒரு தண்ணீர்த் தொட்டி போல் வரைந்திருக்கிறாய்'' பக்கத்தில் இருந்தவர்கள் சிரிக்க எனக்கு அழுகை வந்தது.

''அவ கிடக்கிறா. எல்லோர் முன்னாடியும் அவ உன்னைத் திட்டினாளா, தெளிவாக இருக்கட்டுமே என்று சற்று பெரிதாகப் போட்டேன். இவளுக்கென்ன வந்ததாம்.''

என் அழுகை கண்டு பொறுக்காத அம்மாவின் ஆறுதல் மொழிகள். இதன் பிறகு ஒவ்வொரு படமும் பேப்பரில் வரைந்து என்னிடம் ஓ.கே. வாங்கிய பிறகே நோட்டில் வரையப்பட்டது. எவ்வளவு முயன்றும் எனக்கு ஒரு கோழி முட்டை வரையக் கூட ஒழுங்காய் வருவதில்லை.

''அம்மா இனிமே காலேஜுக்கு இந்த எல். ஐ. ஸி. காரியரில் சாப்பாடு அனுப்பாதே.''

''ஏன்?''

''எல்லோரும் என்னை 'இருபத்தஞ்சு ரூபாய் ஸ்பெஷல் சாப்பாடு'ன்னு கூப்பிட றாங்க!''

''வாளிப்பா இருந்தா இதுங்க கண்ணை உறுத்தறதாக்கும். வயசு குழந்தைங்க நல்லா சாப்பிட வேண்டாமோ.''

அன்று மாலையே ஸ்க்கிப்பிங் கயிறுடன் என் அம்மா. ''குண்டாயிருக்கேன்னு கண்டவா பேச்சைக் கேட்டுச் சாப்பிடாம இருக்காதே. தினம் இருநூறு தடவை ஸ்கிப்பிங் குதி. சரியாகி விடும்.''

அம்மா நீ அந்தக் காலமா இந்தக் காலமா புரிஞ்சுக்கவே முடியலையே.

''காலேஜில் பாட்டுப் போட்டி. நானும் சேர்ந்திருக்கேன்'' எனத் தப்பித் தவறி ஒரு நாள் சொல்லி விட்டேன்.

''வா. நான் நல்லா சொல்லித் தரேன். அந்தக் காலத்துப் பாட்டுப் போல் வருமா? காற்றினிலே வரும் கீதம். எம். எஸ். பாட்டு பாடு. சினிமாப் பாட்டாகவும் இருக்கும்.''

பத்து நாட்கள் காலையும் மாலையும் எனக்கு அசுர சாதனை. ''மூக்காலே பாடாதே. குரல் என்ன இப்படி நடுங்குகிறது? அழுத்தமா இருக்க வேண்டாமோ.'' அம்மாக்கு மனத்தில் எம். எஸ். விஸ்வநாதன் என்று நினைப்பு. கையை மேலும் கீழும் உசத்தி நீட்டி என்னைப் படுத்தி விட்டார்.

போட்டி நடக்கும் பொழுது கதவின் மூலையில் நின்று எனக்குத் தெரியாமல் நின்று கவனிக்கும் அம்மா.

''தலைமுடி இப்படி வேரோடு சுழல் கிறதே. தொம் தொம்மென்று வெய்யிலில் குதிக்கிறாயா!'' 'நங்'கென்று என் மண்டையில் ஒரு குட்டு விழுந்தது. அரை லிட்டர் தேங்காய் எண்ணெயைத் தலை, முகம் எல்லாம் அப்பி தடவி தழைய இழுத்து வாரி ஒரு இரட்டைப் பின்னல் போட்டாகி விட்டது. புயலே அடித்தாலும் ஒரு முடி கூட அசைய முடியாது. கழுத்தில் எண்ணெய்ப் பிசுபிசுத்தது.

எங்கம்மாவை யாரும் ரொம்ப கர்நாடகமாக நினைத்து விடாதீர்கள். அந்தக் காலத்து எம். ஏ. ஆக்கும். கல்யாணம் பண்ணிக் கொண்டும் மேலே படித்த பாரதியாரின் புதுமைப் பெண். பெயிண்டிங், பாட்டு, விளையாட்டு இப்படி எல்லாம் தெரிந்த சகலகலாவல்லி. இதனால் ஏற்படும் கஷ்டங்களை நானே அனுபவிக்க வேண்டும். பேப்பரில் விளம்பரப்படுத்தப் படும் எல்லா வகுப்புகளிலும் சென்று சேர்ந்து விடுவார். மேக்—அப் வகுப்பு சென்று வந்து தன் திறமையைக் காட்ட எனக்கு மேக்—அப் போட்டு ஃபோட்டோ எடுத்தார். கதகளி ஆடுபவள் போல் ஃபோட்டோவில் இருந்ததால் என்னை எனக்கே அடையாளம் தெரியவில்லை. இதனால் அந்த ஃபோட்டோக்காரருக்கும் அவருடைய ஒட்டை(?!) காமிராவுக்கும் ஒரு வாரம் அர்ச்சனை.

கடைசி வருட பரீட்சை. அப்பா பக்க, அம்மா பக்க குல தெய்வங்களுக்கு மஞ்சள் துணியில் காசு முடிந்தாயிற்று. பக்கத்துக் கோயில் பிள்ளையார் அதிகமாக கவனிக்கப்பட்டார். முதல் நாள் பரீட்சை ரொம்ப சுலபம். அம்மா பக்கத்து வீட்டு அம்மாவி



நெய் முறுக்கு:

இடியாப்பத்திற்கு மாவு பிசைந்தேன். பக்குவக் கோளாறா, அரிசி கோளாறா என நான் அறியேன்! இடியாப்பம், படியிலிருந்து கீழே இறங்கினால்தானே வரும். பிசைந்த அத்தனை மாவையும் என்ன செய்ய? உளுத்தம் பொடியோ, கடலைப் பொடியோ கையில் இல்லை. 100 கிராம் வெண்ணெயை அள்ளி மாவில் போட்டுப் பிசைந்தேன். சட்டியில் எண்ணெய் வைத்து, சிறிய, சிறிய முள் முறுக்காக பிழிந்து எடுத்தேன். அற்புதமான நெய் முறுக்கு, வாயில் போட்டால் கரைந்தது. சாப்பிட்டவர்கள் அனைவரும் எப்படிச் செய்தாய் எனக் கேட்டனர். மாவும் நஷ்டமாகாமல், புதிய முறை முறுக்கும் ரெடி!

— கமலா.



# “ஒவ்வொரு ஸ்பூனிலும் ஒப்பற்ற சக்தி”

உங்களது கடுமையான உழைப்புக்கும், மூளையின் வேலைக்கும் செறிவான ஊட்டமும் வலிமையுமே அடிப்படை. வெறும் நெல்லிக்காய் லேகியங்களும், சாதாரண டானிக்குகளும் இவற்றை நிறைவாகத் தரமுடியாது.

ஒப்பற்ற சக்தியைத் தினந்தோறும் உங்களுக்கு அளிக்கக் கூடிய அரிய மூலிகை டானிக் கிரௌன் காய கல்பம். இது பல்லாண்டு ஆராய்ச்சிக்குப் பின், சித்த வைத்திய முறையில் தயாரிக்கப்படும் சிறந்த மூலிகை டானிக்.

**கிரௌன் காயகல்பம் ரெகுலர்:**
கவனமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கல்ப மூலிகைகளான வல்லாரை, தூதுவளை, கரிசலாங்கண்ணி, பொற்சீந்தில், கடுக்காய், தான்றிக்காய், அஸ்வகந்தா, நெல்லிக்கனி ஆகியவற்றுடன் சுத்தமான தேன் மற்றும் முறையாகப் பாடம் செய்யப்பட்ட செந்தூரம், துத்தநாக பஸ்பங்களும் சேர்த்து இயற்கை முறையில் விசேஷமாகத் தயாரிக்கப் படுகிறது.

இது இரத்தத்தைச் சுத்தமாக்கி, உணவு எளிதில் ஜீரணம் ஆகவும், ஊட்டச் சத்துக்கள் இரத்தத்தில் சேரவும் உதவுகிறது. குடலைச் சுத்தம் செய்து வாயுக்கோளாறுகளை நிவர்த்தி செய்கிறது.

பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் நிறைய சக்தியும் ஊட்டமும் அளிக்க இரும்புச்சத்து நிறைந்தது.

**கிரௌன் காயகல்பம் ஸ்பெஷல்:**
கல்ப மூலிகைகள், தேன் ஆகியவற்றுடன் விசேஷ முறையில் பாடம் செய்யப்பட்ட தங்க பஸ்பம், வெள்ளி பஸ்பம், செந்தூரம், துத்த நாகம் உட்பட நவலோக பஸ்பங்கள் யாவும் சேர்க்கப்பட்டுள்ளன.

இதில் பல இயற்கை வைட்டமின்களும், தாது உப்புகளும் நிறைந்திருப்பதால் அதிகப்படியான வலிமையும் சுறுசுறுப்பும் எப்போதும் உங்களிடம் நிறைந்திருக்கும்.

| ரெகுலர் | ஸ்பெஷல் |
|---|---|
| இரும்புச்சத்து நிறைந்தது | தங்க பஸ்பம் அடங்கியது |
| *160 கி: ரூ. 18* | *150 கி: ரூ. 35* |
| *500 கி: ரூ. 54* | *500 கி: ரூ. 105* |
| *(வரிகள் உட்பட)* | *(வரிகள் உட்பட)* |



தயாரிப்பாளர்:
*கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ், சென்னை-3.*

## கிரௌன் காயகல்பம்

ஒயாமல் உழைத்திட ஒப்பற்ற சக்தி.

பம்பாய் விற்பனையாளர்: லக்ஷ்மி ஸ்டோர்ஸ், தாராவி மெயின் ரோடு, தாராவி, பம்பாய் — 17.
பெங்களூர் விற்பனையாளர்: ஜெயின் பிரதர்ஸ், 146, O. K. ரோடு, கும்பார்பேட், பெங்களூர் — 2.

எல்லா மருந்துக் கடைகளிலும் மற்றும் ஜெனரல் ஸ்டோர் களிலும் கிடைக்கும்.

டம் பேசிக் கொண்டிருந்தாள். 'என் பொண்ணு குழந்தையில் இருந்தே படுசுட்டி. பரீட்சையெல்லாம் ஊதித் தள்ளிடுவா' மூன்றாம் நாள் கேள்வித்தாள் சற்றுக் கடினம். கேள்வித்தாள் தயாரித்தவர் மூன்று மாதம் வரையிலும் என் அம்மா வாயில் அகப்பட்டு கடிபட்டார்.

படிப்பு முடிந்து உள்ளூரிலேயே கல்யாணம். நல்ல ஒரு சிநேகிதியைப் பிரியுப் உணர்வு. என் சமையலில் குறை சொல்ல, கோலம் புள்ளி வைத்து கொடுக்க, நினைத்த போதெல்லாம் வம்புக்கிழுக்க ஒரு நல்ல துணை இல்லாதது போல் ஓர் தவிப்பு.

'உனக்கு பிடிக்குமேன்னு இட்லி பொடி செய்தேன். கடலை உருண்டை செய்தேன் என்று இன்னமும் என்னைக் குழந்தையாக நினைத்து ஓடி வரும் அம்மா, ஓர் நாள் விருந்தாளிகளுக்குப் பூரி செய்யும் போது வந்தார். ''அம்மாடி... இவ்வளவு எண்ணெய் வைத்து பூரி பண்ணினா குடும்பம் எப்படி கட்டுப்படி ஆகும். அடுப்பை இப்படி திகுதிகுவென்று எரிய விடுவார்களோ. சிறுகக் கட்டி பெறுக வாழ ணும். இந்த மாதிரி வேலை செய்தால் என் மாமியார் கையை ஒடித்து விறகடுப்பில் வைத்து விடுவார். ஏதோ உன் மாமியார் சாது.''

''அதற்குப் பதிலாக நீ இருக்கிறாயே மனத்தில் நினைத்தேன் நான்.

'லேசாக ஜுரம் வந்திருந்த என் கடைக் குட்டியை தூக்கிக் கொண்டார். ''குழந்தையை நல்லா வளர்க்க உங்களுக்குப் பொறுப்பேயில்லை. எனக்கும் வீடு வெறிச் சோன்னு இருக்கு. இவளை நான் வச்சிக் கறேன். அப்பப்போ வந்து பார்த்துப் போ.''

அதன் பிறகு எல்லாமே தலைகீழாக மாறியது. பேத்தி வீணா அதி மேதாவியாகவும் மகளாகிய நான் சமர்த்துக் குறைவாகவும் தோன்ற ஆரம்பித்து விட்டது. இட்லி பொடி, கடலை உருண்டை வருகையும் சற்று குறைந்து விட்டது.

பாட்டிக்குப் பேத்திக்குப் பேப்பர் கப்பல் செய்வதிலும், ரெயில் விடுவதிலும், வருவோர் போவோரிடம் பேத்தியின் நர்ஸரி ரைம்ஸ் சொல்லும் திறமையைப் பற்றிப் பீற்றி அவர்களைப் போர் அடிப்பதிலும் செலவாயிற்று. ஆனால் காலப்போக்கில் சில மாறுதல்கள். வழிய வழிய தலையில் எண்ணெய் தடவுவதில்லை. புஸுபுஸு வென்று தலைமுடி இருப்பது மார்டனாம். சனி, ஞாயிறு டீ.வி. முன்னாலேயே தவம் செய்யும் என் பெண்ணை மிரட்ட முடிவதில்லை. மாறாக ''கண்ணா, இந்தப் பாடம் முடித்து சினிமா பார்க்கலாம்மா'' என்ற கெஞ்சல், கொஞ்சல். மற்றபடி அதே பழைய ப்ல்லவி ஆரம்பமாகி விட்டது.

''மணி எட்டு. சீப்பு கொண்டா. டெய்லி சொல்லணுமா.''

# சக்தி கப்பிலே,

# சாக்லேட் சுவையிலே

ஆமாம், புதிய வீவா சாக்லேட் சுவையும், ஆரோக்யமும் நிறைந்தது. ஏனென்றால், 8 முக்கிய விட்டமின்கள் செறிந்த ஒரே ஒரு ஆரோக்ய பானமான வீவாவில் இப்போது சாக்லேட்டும் இருக்கிறது. இந்த 8 முக்கிய விட்டமின்கள் உங்களுக்கு எப்படி ஆரோக்யமளிக்கின்றன என்பதைப்பாருங்கள். விட்டமின் A கண்பார்வையை மேம்படுத்துகிறது. விட்டமின் $B_1$ பசியைத்தூண்டுகிறது. விட்டமின் $B_2$ ஜீரணசக்தி முறையை சீராக்குகிறது. விட்டமின் $B_{12}$ ரத்தம் விருத்தி செய்கிறது. விட்டமின் C பற்களுக்கும் எலும்புகளுக்கும் வலுவூட்டுகிறது. விட்டமின் D உடல் வளர்ச்சிக்கு உதவுகிறது. ஃபோலிக் அமிலம் தசை வளர்ச்சிக்கு உதவுகிறது. நியாஸின் சீரான வளர்ச்சிக்கு உதவுகிறது. இதுமட்டுமல்ல, எளிதில் ஜீரணமாகும் பால், புரோடீன், கார்போஹைட்ரேட்கள் மற்றும் மினரல்கள் அடங்கிய வீவா சாக்லேட், உங்களுக்கு முழுமையான ஒரு ஆரோக்ய பானமாகும். எனவே, உங்கள் குடும்பத்தினருக்கு இன்றே வீவா சாக்லேட் கொடுக்கத்தொடங்கவும். உங்களுக்கு அது சக்தி அளிக்கிறது



"பால் உள்ளது"—தண்ணீர் சேர்த்தாலே போதும்.




90/JIL/184 Tam

''எடிட்டர் உன்னைக் கூப்பிடறார்'' என்று ராமலிங்கம் சொல்லிச் சென்ற போது நான் கலெக்டர் மீனாவைப் பேட்டி காணக கிளம்பிக் கொண்டிருந்தேன். பேனா, டைரி, டேப் ரிகார்டர், கேமரா என்று செக் பண்ணி தோள் பையினுள் தயார் செய்து கொண்டு திருப்திப் பட்டேன். ஹெள ஐ கேன் கோ என்று மனதினுள் சொல்லிக் கொண்டேன். எடிட்டர் கூப்பிட்டு அனுப்பியிருப்பதால் ஒரு வார்த்தை அவரைப் பார்த்து விட்டுச் செல்லலாம் என்று அவர் அறையினுள் நுழைந்தேன்.

''என்ன நடராஜன் ரெடியாயிட்டயா?'' என்று கேட்டார் நிமிர்ந்து கண்ணாடியைச் சரி செய்து கொண்டபடியே, ''உட்காரேன்'' என்றார்.

எதிரே உட்கார்ந்தேன்.

''ஒரு நிமிடம்'' என்றபடியே ஏதோ மேட்டரைப் படித்துக் கொண்டிருந்தார். நான் அவரையே பார்த்துக் கொண்டிருந்தேன். இவருடைய அறிவே தனி. அனுபவ முதுமை. சப் எடிட்டர்களை ரிப்போர்ட்டர்களை வேலை வாங்கும் அழகே அழகு. அவர்கள் மனம் புண்படாமல் தன் கருத்தைப் பதிய வைப்பதில் மன்னர். எல்லோரும் திங்கட்கிழமை என்று சொல்வதை செவ்வாய்க்கு முந்தின நாள் என்று சொல்ல வேண்டும் என்று நினைப்பவர். எவருக்குமே தோன்றாத பல ஐடியாக்கள் இவருக்குத் தோன்றும். எங்கள் பத்திரிகையின் புரட்சிகரமான பல கட்டுரைகளின் பின்னே இவருடைய 'டச்' ரகசியமாக இல்லாமல்



இருந்ததில்லை.

படித்துக் கொண் டிருந்த மேட்டரை மூடி வைத்து விட்டு ''கேள்வியெல்லாம் தயாரா வச்சிருக்கியா?'' என்று கேட்டார்.

''ஓ அவுட் லைனா வச்சிருக்கேன் சார். அவங்க சொல்ற பதில்கள்ல இருந்தே பின்னிப் பின்னி நிறைய கேட்டிருவேன் சார்'' என்றேன் நம்பிக்கையுடன்.

''குட்'' என்றார். ''நான் கொஞ்சம் பார்க்கலாமா கேள்விகளை?''

''ஷ்யூர் சார்'' என்றபடி டைரியை வெளியே எடுத்துப் பிரித்து நீட்டினேன். வாங்கி அதில் பார்வையை ஓட்டினார். வாய் விட்டே வாசித்தார்.

''ம்.... நீங்க பதவி ஏற்று பத்து நாள் ஆகுது... இத்தனை நாளில் இந்த மாவட்டத்தைப் பற்றி என்ன தெரிஞ்சுகிட்டீங்க.... ம்.... உங்களுடைய முதல் மற்றும் முக்கிய அட்டென்ஷன் எங்கே இருக்கணும்னு தீர்மானம் பண்ணியிருக்கீங்க?... இந்த மாவட்டத்தைக் குறிப்பாகத் தலைநகரை மட்டுமாவது சீர்திருத்த என்ன பிளான்கள் வச்சிருக்கீங்க.... இந்த ஊர் மக்களை சந்திச்சீங்களா என்ன சொல்றாங்க... ம்.....'' என்று வாசித்தவர் நிமிர்ந்து ''என்னப்பா நடராஜா கேள்வி எல்லாமே இந்த ரகம் தானா?'' என்று கேட்டார்.

''கடைசியில் ஒன்று கேட்கப் போகிறேன் சார் ஆறு மாசத்துக்குள் அவங்க என்னென்ன செய்யப் போறாங்க என்கிற பிளானை கேட்டு விட்டு சொல்வேன். ஆறுமாசம் கழிஞ்சு அடுத்த பேட்டிக்கு வர்றேன். இப்போ சொன்னதில் எவ்வளவு செய்ய முடிஞ்சதுன்னு நீங்களே ஒரு அலசு அலசி கொடுங்கன்னு சொல்லப் போறேன். இதுக்கு நல்ல எஃபக்ட் இருக்கும் சார். இது ஒரு சவால் மாதிரி நிச்சயமா நிறைய எடுத்துப் பண்ணுவாங்க. ஆறுமாதம் கழித்த பேட்டியில் சாதனை லிஸ்ட் தரணும்ங்கறதுக்காகவே நிறைய செய்வாங்க. படிச்சவங்க சார். பெரியவங்க, நம்மை மாதிரி பத்திரிகைகள் பேட்டிங்கற பேர்ல கொடுக்கற ஊக்கம்தான். ஊட்டச் சத்து மாதிரி.''

என்னையே கொஞ்ச நேரம் வெறித்துப் பார்த்து விட்டு உதட்டைப் பிதுக்கினார் எடிட்டர்.

''நடராஜா! நீ சொல்றதெல்லாம் சரி தான். ஆனா ஒரு விஷயம் யோசிச்சயா? இப்படி ஒரு பேட்டி வயலும் வாழ்வும் மாதிரி வாங்கிப் போட்டால் யார் படிப்பா? முதல் இரண்டு கேள்விகளைப் பார்த்ததுமே அப்படியே அந்த எட்டு பக்கத்தையும் தள்ளி விட்டுட்டுப் போயிருவான். நம்ம பத்திரிகையின் ஆங்கிளே தனின்னு காட்டணும். கலெக்டர் பேட்டின்னா, எவ்வளவு க்ளாமரான ஒரு விஷயம்! உதாரணமா நீ கலெக்டரை பேட்டி காணப் போகிறாய் என்றால் இப்படி திங்க் பண்ணனும். அவங்களைப் பற்றி நமக்குத் தெரிஞ்ச விஷயங்களில் சுவாரஸியமான விஷயங்கள் என்னென்ன? கலெக்டர் ஒரு பொம்பளை. இது நம்பர் ஒண்ணு. காதல் கல்யாணம் பண்ணிக்கிட்டவங்க. இது நம்பர் இரண்டு. ஏற்கெனவே சப்கலெக்டரா இன்னொரு பெண் கலெக்டர்கிட்டே ஒர்க் பண்ணியிருக்காங்க. இந்த மூணு விஷயங்களை மட்டும் வச்சுகிட்டு எவ்வளவு கேள்வி கேட்க முடியும் தெரியுமா?'' என்று நிறுத்தினார்.

அட! எனக்கு வியப்பாய் இருந்தது. இது தான் எடிட்டர். இந்த மாதிரி எனக்கு நினைக்க வரவில்லையே!

''நீங்க ஒரு பெண்ணா இருந்து கொண்டு ஐஏஎஸ் பாஸ் பண்ணியதைப் பற்றி என்ன நினைக்கிறீங்க?'' என்று ஆரம்பித்தார்




Royal INDIA
STEEL AND
WOODEN
FURNITURE
ROYAL DELUXE SPECIAL
WOODEN COT
75" x 60"
ROYAL DELUXE SPECIAL
WOODEN COT
75" x 48"
75" x 60"
ROYAL
WOODEN COT
ROYAL
DRESSING TABLE
ROYAL
DINING SET
6' x 4' WITH 6 CHAIRS
5' x 3' WITH 4 CHAIRS
ROYAL MERRIT SOFA SET
WITH 2 SIDE CHAIRS
ROYAL CUP-BOARD
WITH MIRROR
78" x 48" x 20"
ROYAL REVOLVING CHAIR
WITH CUSHION SEAT & BACK
ROYAL
EXECUTIVE TABLE
WITH DECOLAM TOP
54" x 30" x 30
60" x 36" x 30
72" x 36" x 30
Distributors
ROYAL AGENCIES
209-210, JAIL ROAD,
COIMBATORE - 641 018 PHONE : 32847
SILVER JUBILEE YEAR
1990
SYMBOL OF SUPERB QUALITY

எடிட்டர்.

புன்னகைத்தபடி குறித்துக் கொள்ள ஆரம்பித்தேன்:

''பெண்களும் பொறுப்பான பெரிய பதவிகளில் அமர்ந்து கொண்டு ஆண்களுக்குச் சமமாகச் சாதனைகள்செய்ய முடியும் என்று நம்புகிறீர்களா? உங்களுக்குக் கீழே உள்ள ஆண் அதிகாரிகள் உங்களை வித்தியாசமாக பார்க்கிறார்களா?''

''பெண் புத்தி பின் புத்தி என்கிறார்களே அதைப் பற்றி உங்கள் கமென்ட் என்ன?'' என்றேன் நான்.

எடிட்டர் புன்னகைத்தார். ''வெரிகுட்'' என்றார். தொடர்ந்தார். ''உங்கள் திருமணம் காதல் திருமணம் தானே! உங்கள் இருவருக்கும் காதல் மலர்ந்தது எப்படி?''

''நீங்கள் சப்கலெக்டராக இருந்த போது உங்கள் மேலதிகாரியாக இருந்த நீனா குப்தா என்கிறபெண் கலெக்டர்பொறாமையினால் உங்களை சப்ரஸ் பண்ணி வைத்திருந்தார் என்பது உண்மையா?'' என்றேன்.

எடிட்டர் நிமிர்ந்து ''அப்படியா? உனக்கெப்படி தெரியும்?'' என்று கேட்டார்.

சிரித்தேன். ''சும்மா உட்டுப் பார்ப்போம்னு தான். யாருக்குத் தெரியும்!'' என்றேன்.

''ஹா ஹா...'' என்று சிரித்தார். ''நீ தேறிடுவே. குட். இப்படித்தான் இருக்கணும். இதோபார், பொம்பளைங்க கிட்ட சம உரிமை, பின்புத்தின்னு வார்த்தைகளை விட்டோம்னு வை. பொங்கிப் பொங்கி வரும் பதில்கள். அவ்வளவையும் நோட் பண்ணிக்கோ. எப்படியும் ஆம்பளைங்களைத் திட்டியோ சேவலப் படுத்தியோ எதாவது சொல்லியே தீருவாங்க. அட்டைல இவங்க போட்டோ போட்டு இவங்க திட்டினதை கொட்டேஷன்ல போட்டு கலெக்டர் பேட்டின்னு போட்டா பாரு. நாலுபேர் படிச்சிட்டு எதிர்ப்பு எழுதுவான். அதையும் போடணும்திருப்பி மறுப்பு வரும். இப்படியே நாலஞ்சுவாரம் அட்டகாசமா போயிட்டிருக்கும். என்ன சொல்றே?'' என்று கேட்டார்.

''கரெக்ட் சார். பின்னிடறேன் பின்னி'' என்று அவரிடம் விடை பெற்று வெளியே வந்தேன்.

கலெக்டர் ஆபீஸ் சுறுசுறுப்பான இயக்கத்தில் இருந்தது. என் விசிட்டிங் கார்டை வாங்கிப் பார்த்த அந்தப் ப்யூன் ''உட்காருங்க சார். அம்மா ஒருத்தங்களோட பேசிட்டிருக்காங்க. நீங்க வருவீங்கன்னு சொல்லியிருந்தாங்க. தாமதத்துக்கு மன்னிக்கச் சொன்னாங்க'' என்று பணிவாக நாற்காலி காட்டினான். கொஞ்சம் வித்தியாசமாக உணர்ந்தேன்.

தறுக்கும் நெடுக்குமாய் பைலும் கையுமாய் ஆணும் பெண்ணுமாய் அலைந்து கொண்டிருந்தவர்களைப் பார்த்துக் கொண்டிருந்ததில் பதினைந்து நிமிடம் ஓடியதே தெரியவில்லை.

கலெக்டரின் அறைக்கதவு திறந்தது. இருபத்தைந்து வயதில் ஒரு பெண்ணும் அவள் தந்தை போன்ற ஒருவரும் வெளிப்பட்டு நடந்தார்கள். ப்யூன் உள்ளே போய் வந்து ''அம்மா உங்களைக் கூப்பிடறாங்க'' என்று என்னை உள்ளே அனுப்பினான்.

''குட்மார்னிங் மேடம்'' என்றபடி நுழைந்தேன்.

''வாங்க'' என்று வரவேற்றார். ''ரொம்ப நேரம் வெயிட் பண்ண வச்சுட்டேன்.''

''நோ ப்ராப்ளம்'' என்றேன் சகஜமாக.

அழகாக கம்பீரமாக சிரித்தார். முப்பது வயதுக்கு மேல் மதிக்கமுடியாத தோற்றம். தினம் உடற்பயிற்சி செய்பவராக இருக்க வேண்டும். இதைப் பற்றிக் கூட இரண்டு கேள்வி கேட்க வேண்டும். முகத்துக்கு அந்த நேர்வகிடும் குங்குமமும் தந்த கம்பீரம் கையெடுத்துக் கும்பிட வைக்கும்.

''என்ன சாப்பிடறீங்க'' என்று கேட்டபடியே காலிங் பெல்லை அழுத்தினார். ப்யூன் உள்ளே வர ''இரண்டு லெமன்'' என்றார்.

அவன் போனதும், ''தாமதமானதற்குக் காரணம் இதுதான். நான் பெண் என்பதால் தினமும் நிறைய பெண்கள் என்னைப் பார்த்துத் தங்கள் பிரச்னைகளைப் பகிர்ந்து கொள்ள வருகிறார்கள். அப்படி ஒரு பெண் தன் தந்தையுடன் வந்திருந்தாள்.''

''பார்த்தேன்'' என்றேன். என் ரிப்போட்டர் புத்தி இவரிடம் பாதிக்கப் பட்ட பெண்களின் பரிதாபக்கதைகள் என்கிற தொடர் வாங்கிப் போட்டால் என்ன என்று எண்ணியது.

''என்ன பிரச்னையாம்?'' என்று சாதாரணமாக முதல் கேள்வியை வீசினேன்.

மீனா சிரித்தார். ''நீங்களும் தெரிந்து கொள்ளக் கூடியது தான் என்றால் உங்களை வெளியே காத்திருக்கவே வைத்திருக்க மாட்டேனே. நேரே உள்ளே அழைத்திருப்பேனே''

''சாரி'' என்றேன்.

---

**மிக்ஸியில் இட்லி, தோசை மாவு அரைப்பவர்களுக்கு இதோ ஒரு அருமையான யோசனை. அரிசி, உளுந்து = 3 : 1 என்ற விகிதத்தில் போட்டும் இட்லி பாறையாக இருக்கிறதே என்று வருந்தாமல் இருக்க என்ன செய்ய வேண்டும்? அரிசி மாவையும், உளுந்து மாவையும் அரைத்துத் தனித்தனிப் பாத்திரத்தில் வழித்து, அரை மணி அவகாசத்திற்குக் குளிர்ந்த நீரில் வைத்து, சூடு ஆறிய பின் உப்பு போட்டு, இரண்டையும் ஒரு பாத்திரத்தில் கொட்டிக் கலந்து வைத்தால் மறுநாள் இட்லி, மல்லிகைப்பூக் கணக்கில் சாஃப்டாக இருக்கும்.**

**— திருமதி தேவனாதன்.**

''பரவாயில்லை. பேட்டி என்று உங்க எடிட்டர் டைம் கேட்டார். ரொம்ப ஆச்சர்யமா இருந்தது. உங்க பத்திரிகைக்கு பத்து வருஷ வாசகி நான்.''

''சந்தோஷமா இருக்கு மேடம்.''

சிரித்தார். பேட்டிக்கான முஸ்தீபுகளை தயார் செய்தேன். போட்டோக்கள் எடுத்துக் கொண்டேன். டேப்ரிகார்டரை செட் செய்தேன். டைரியைப் பிரித்துக் கொண்டு எடிட்டரும் நானுமாய் தயார் செய்த கேள்விகளை ஒருமுறை நோட்டம் விட்டுக் கொண்டேன். சுவாதீனமாக ஆரம்பிக்கப் போனேன்.

''ஒரு நிமிடம். நீங்க என்ன விஷயமா பேட்டி என்பதற்கு ஓர் அவுட் லைன் பண்ணிட்டு வந்திருப்பீங்க இல்லியா? ஷல் ஐ கோ த்ரூ த கொஸ்சன்ஸ் பிபோர் பிகினிங் டு ரிப்ளை, இஃப் யூ டோன்ட் மைன்ட்'' என்றார் மென்மையாக.

''ஒய்நாட்?'' என்றபடி டைரியை நீட்டினேன்.

வாங்கி புன்னகை மாறாத முகத்துடன் படித்துப் பார்த்தார். இரண்டு முறை எல்லா கேள்விகளையும் படித்து விட்டு நிமிர்ந்தார்.

''நல்ல கேள்விகள்'' என்று பாராட்டினார்.

புன்னகை செய்தேன்.

''நீங்க மீனா என்கிற கலெக்டரைப் பேட்டி காண வந்திருக்கீங்களா அல்லது மீனா என்கிற பெண்ணைப் பேட்டி காண வந்திருக்கீங்களா?''

ஒருகணம் திடுக்கிட்டாலும் சமாளித்து ''மீனா என்கிற பெண் கலெக்டரை'' என்றேன்.

சிரித்தார். ''கலெக்டர் பெண்ணை'' என்று திருத்தினார்.

''என்ன வித்தியாசம் இருக்கிறது?'' என்று கேட்டேன்.

''இருக்கிறது மிஸ்டர் ரிப்போர்ட்டர். இங்கே இந்த இடத்தில் உட்கார்ந்து கொண்டு நான் அரசாங்கத்தின் திட்டங்கள் என் செயல் முறைகள் எண்ணங்கள் யோசனைகள் பற்றிச் சொல்லலாம். அது கலெக்டர் என்ற முறையில். என்னுடைய பர்ஸனல் வாழ்க்கை பற்றிக் கேட்க உங்களுக்குத் தேவை என்ன? நான் ஓர் அதிகாரி. என்னுடைய தனி வாழ்க்கை எனக்கு மட்டுமே சொந்தமானது. நான் அரசியல்வாதி அல்ல. பொது வாழ்க்கைக்கு வரவில்லை நான். புரிகிறதா?''

''மேடம்.....''

''நான் சொல்லி முடித்துக் கொள்கிறேன். உங்கள் கேள்விகள் எல்லாமே விஷமமானவை. ஒவ்வொரு கேள்விக்கும் பின்னால் கொஞ்சம் ஏளனம் இருக்கிறது. பெண் சுதந்திரத்தைப் பற்றி நிஜமாகவே கவலைப் படுபவனின் கேள்விகள் இப்படி இருக்கர்து. அந்த விஷயத்தையே கேலிக்கூத்தாக நினைப்பவனின் கேள்விகள் இவை. இவற்றுக்கு நான் பதில் கொடுத்தால் பெண் இனத்தையே கேவலப்படுத்தியவளாகி விடுவேன்.

என்னுடைய பேட்சில் ஆறுபேர் புது கலெக்டர்கள். நான் மட்டும் பெண். மற்ற ஐந்து பேரிடமும் யாரும் பேட்டி என்று போகவில்லை. என்னிடம் மட்டும் ஏன்? உங்களுக்கெல்லாம் ஆச்சர்யம். அட ஒரு பொம்பளை இவ்வளவுதூரம்வந்துட்டாளா. அதையும்தான் பார்ப்போமே என்று பேட்டி. வெறும் வாய்க்கு ஏதாவது அவல் கிடைக்காதா என்று கிளம்பி விட்டீர்கள். இல்லையா?'' என்று சிரித்தார்.

அவர் முகத்தில் கோபமோ எரிச்சலோ துளிக்கூட இல்லாதது எனக்கு வியப்பை அளித்தது.

''மிஸ்டர் ரிப்போர்ட்டர்! முதலில் இந்த பேட்டி மாதிரி விஷயங்களையே தவிர்க்க நினைத்தேன். அப்புறம் நினைத்தேன்; எப்படியும் என் திட்டங்கள் பற்றி ஏதாவது கேட்பீர்கள். அதன் மூலம் மக்களுக்கு சில விஷயங்களை விளக்கிச் சொல்ல ஒரு வாய்ப்பு கிடைக்கும், அது என் திட்டங்களின் செயல்பாட்டை எளிதாக்கும் என்று. நான் இந்த மாவட்டத்தின் ஆட்சித் தலைவர். இந்த மாவட்டத்தின் நலனுக்கும், முன்னேற்றத்துக்கு என்றுதான் என் சிந்தனைகளும் செயல்பாடுகளும் இருக்கும். அதைப் பற்றிய அக்கறையே இல்லாத உங்களுடன் பேசிக் கொண்டிருக்கும் ஒவ்வொரு விநாடியும் என் கடமையிலிருந்து நான் தவறிக் கொண்டிருக்கும் விநாடியாகும்'' என்று நிறுத்தினார்.

நான் உறைந்து போய் உட்கார லெமன் ஜூஸ் வந்தது.

''ப்ளீஸ் டேக் இட். சாரி மிஸ்டர் ரிப்போர்ட்டர் இன்று இந்த லெமனைத் தவிர வேறு போட்டி அது இது என்று எதுவும் தர இயலாததற்கு வருந்துகிறேன்'' என்றார் கம்பீரமாகச் சிரித்தபடி.

**முதல் நாள் அரைத்த புதினா துவையல் மீந்து விட்டதே என்று கவலைப்படாதீர்கள். ஃப்ரிட்ஜில் வைத்துவிட்டு மறுநாள் குக்கரில் சாதம் வைக்கும் போது, அதன் மேல் பீட்ரூட், காரட், உருளைக் கிழங்கு முதலிய காய்களை நறுக்கி வைக்கவும். எண்ணெயைச் சிறிது சூடேற்றிப் புதினா துவையலை வதக்கி காய்கறி, சாதங்களைக் கலந்து கொத்துமல்லி தூவி விருந்துக்குப் பரிமாறினால் சுவையான விஜிடபிள் பிரியாணி கிடைக்கும். தயாரிப்பதும் சுலபம்.**

**— கே. ஜானகி.**

# அடையாளங்கள்

ரிஷபன்

ஸர்வ மங்கள மாங்கல்யே
சிவே ஸர்வார்த்த ஸாதகே
சரண்யே த்ரயம்பஹே தேவி
நாராயணி நமோஸ்துதே....'

அம்மாவின் குரல்தான்.... எத்தனை வருடங்களுக்குப் பிறகு கேட்கிறேன்..

படுக்கையை விட்டு எழுந்திருக்க மனசில்லை. நேற்றிரவு ரயிலில் வந்தது. அம்மா சமைத்து வைத்திருந்தாள்.

''எதுக்கும்மா.. நாங்கதான் வேணாம்னு எழுதியிருந்தோமே...''

சிரித்தாள். வேறு வழியில்லை. வற்புறுத்த வேண்டிய அவசியமே இல்லை. ஏதோ ஒரு குற்ற உணர்வு தோன்றிவிடும். பேருக்காவது சாப்பிட்டேன் என்று இலையில் அமர்ந்து எழுந்தாக வேண்டும்.

கிரிஜாவைப் பார்த்தேன். கை கழுவப் போனாள். பாபுவும், தீபாவும் ஏற்கெனவே சாப்பிட உட்கார்ந்து விட்டார்கள்.

நானும் பேசாமல் அமர்ந்தேன். சாப்பிட்டு.... தூக்கம் வராமல் புரண்டு.... ஏதேதோ நினைவுகளில் மனசு உழன்று... கடைசியில் எப்போது தூங்கிப் போனேன்..

இப்போது... அம்மாவின் ஸ்லோகம் மட்டும் என்னை எழுப்பாமல் விட்டிருந்தால்.... இன்னும் எவ்வளவு நேரம் படுத்திருப்பேனோ...

கிரிஜா குளித்திருந்தாள். தலையைச் சுற்றிய டர்க்கி டவலும், முகத்தில் மெலிதாய் அப்பிய மஞ்சள் சுவடும், குங்குமப் பொட்டும் சூழ் நிலையுடன் அவள் ஒன்றிவிட்டதை உணர்த்தின.

''பாபு... எங்கே...''

''காவேரிக்குக் குளிக்கப் போனான். தீபாவும் போயிருக்கா....''

''யாரோட போயிருக்கா...'' என்றேன் கொஞ்சம் பதற்றமான குரலில்.

''வாசு போயிருக்கான்டா...'' என்றாள் அம்மா.

''... வாரிசுகள் மேல அவ்வளவு உயிர்..'' என்றாள் கிரிஜா கேலியாக. ''பயப்படாதீங்க.... காவேரில தண்ணி வத்திப் போய்... பல வருஷம் ஆச்சு... உங்க தம்பி கூட கேலி பண்ணார். கழுத்து வரைக்கும் ஆழமாம். தலை கீழ நின்னா....''

ரயிலில் வரும் போதே பார்த்தேன்... அவ்வளவு இருட்டிலும்... சின்னதாய் ஒரு நீர்க்கோடு... கரை புரண்டு ஓடிய காவிரி... இப்போது சரித்திர அடையாளம் மட்டுமாய்..

''அம்மா... உனக்கு ஞாபகம் இருக்கா... ஒரு தடவை காவேரி... கொள்ளிடம்... ரெண்டுமே வெள்ளம் வந்து... கோவில்ல ரெண்டு தண்ணியுமே... சேர்ந்து ஹய்யா... எவ்வளவு கஷ்டப்பட்டு.. மண் மூட்டை எல்லாம் போட்டு... அணை போட்டு தடுத்தாங்க...''

''இந்த வெளி சுவத்துல தெரியற கோடு.. வெள்ளம் வந்த அடையாளமாமே... வீடே முழுகிப் போச்சாமே...'' என்றாள் கிரிஜா.

''பயத்துல என்ன பண்றதுன்னு தெரியாமே அல்லாடி.. மாடிக்கு ஓடி... முக்கியமான சாமான்களை மட்டும் எடுத்து வைச்சிண்டு ரெண்டு நாள் இருந்தோம்... இதுல எங்க கூட வெளி மனுஷா வேற...'' என்றேன்.

''கோடி வீட்டு ரமேஷ் குடும்பம்...'' என்றாள் அம்மா.

கை பாட்டுக்கு வேலை செய்து கொண்டு இருந்தது. ஒரு புறம் அடுப்பில் ரசம் கொதிக்க... மறுபுறம் பாலில் சாதம் வெந்து கொண்டிருந்தது. அம்மாவின் ஸ்பெஷலான அக்கார வடிசல்.

''கிரிஜா... நீ என்ன பண்றே... இங்கே... பேசாமே வெளியே வந்திரு... ஒரு நாளாவது ருசியா சாப்பிடறேன். உன்னோட த்ரீ-இன்-ஒன் சமையல்லேர்ந்து தப்பிச்சுக்கலாம்....''

''அவளை ஏண்டா வம்புக்கு இழுக்கறே...''

கிரிஜா சிணுங்கினாள்.

''நீங்களே சொல்லுங்கம்மா. எதைச் செஞ்சாலும் அதுல ஒரு குறை சொல்லிகிட்டு.... அப்புறம் எப்படி மனசு வரும்.''

''அது என்னடா... த்ரீ-இன்-ஒன்... சமையல்...'' என்றாள் அம்மா.

''மேல ரசம்... நடுவுல சாம்பார்... கீழே

கூட்டு. ஒரு அடுக்குல கொதிக்க விட்டு இறக்கிடுவா.''

''அம்மா சமையல் என்னைக்கும் கிடைக்காது. என் கையையும் நீங்க நம்பித்தான் ஆகணும். மறந்துடாதீங்க... என்றாள் கிரிஜா பாதி கேலியும், பாதி சீரியஸுமாய்.

''பாவம்... பெண்டாட்டிய வேலை வாங்கிடப் போறான்னு... நாசூக்கா கூப்பிடறான். நீ ஏன் அவனை கரிக்கிறே...'' என்றாள் அம்மா.

''இது என்ன... எனக்கு வக்காலத்தா... இல்லே.. புள்ளைக்கு சப்போர்ட்டா... ஒண்ணும் புரியலியே...''

''சரி.. சரி... மாமியாரும் மருமகளும் எனனமோ பண்ணுங்க... நான் குளிக்கப் போறேன்''

நகர்ந்து பாத்ரூமில் நுழைந்த போது... நாற்பது வாட்ஸ் பல்பு மெலிதாய் மின்னுக்கிறது. கரி அப்பிய சுவர்கள். ஒரு புறம் நிரந்தரமாய்க் கிடக்கும் விறகுக் கட்டைகள். தேங்காய் மட்டை, கரி மூட்டை... அப்பாவுக்கு எப்போதும் வெந்நீர்தான். பச்சைத் தண்ணீரில் குளித்தால் போதும். உடனே மூச்சிரைக்க ஆரம்பித்துவிடும்.

சபரி மலைக்குப் போன போது மட்டும்... அந்த ஒரு மண்டலமும் கிணற்று நீர் ஸ்நானம்தான்.

''எப்படிப்பா உன்னால முடிஞ்சுது...''



''அதுதாண்டா... பக்தி...'' என்பார்.

மாலையைக் கழற்றியதும் மறுபடி வெந்நீர். அதுவரை மனசிலிருந்த தைரியம் போய் விட்ட மாதிரி.

லேசாக வழுக்கியது அம்மாவின் குரலும் கேட்டது.

''பார்த்துடா... வழுக்கும்...''

உள்ளுக்குள் ஏனோ சிலிர்த்தது. இது எப்படி சாத்தியம்... என்ன வேலை செய்தாலும்... என் மேலும் ஒரு கவனம் வைத்து.. ஒரு எச்சரிக்கை கொடுத்து....

பம்பாயில் மொசைக் தளமிட்ட வீடும்... ஷவர் பொருத்திய பாத்ரூம்.... வெந்நீருக்கும் தண்ணீருக்கும் தனித்தனி குழாய்களும் ஏனோ மனத்தில் நிழலாடின.

''வாயேம்மா... அங்கேயே எல்லோரும் சேர்ந்து இருக்கலாம்.....''

''இல்லைடா... எனக்கு... இதுதான் வசதி....''

''என் மனசுல எப்பவும் ஏதாவது உறுத்தல் இருந்துகிட்டே இருக்கணுமா...''

''என்ன உளர்றே... அம்மா அப்பாவை கூட வைச்சிண்டா தானா... அதான் பணம் அனுப்பறியே.. மாசா மாசம்....''

''இல்லம்மா... அது ஈடா ஆகாது...''

''பைத்தியம்மாதிரிபேசாதே...எங்களுக்கு இதுதான் நிம்மதி... உனக்கு அது வேணும் ரெண்டையும் குழப்பிக்காதே....''

பாத்ரூம் கதவை யாரோ தட்டினார்கள்.

''... எவ்வளவு நேரம்.... குளிக்க... எழுந்ததே லேட்டு... காவேரிலேர்ந்து பசங்க வந்தாச்சு.... மணி பத்தாச்சு... சாப்பிட வேணாமா....''

கிரிஜாதான். குரலின் உச்சமும், அழுத்தமும் என்னை எப்போதும் போல விரட்டின.

''என்னது... அப்பா... நெத்திக்கு விபூதி எல்லாம் இட்டுகிட்டு...'' பாபு சிரித்தான்.

''ஊருக்குத் தகுந்த வேஷம்....''

''நீங்களும் உட்கார வேண்டியதுதானே... நடுவுல வைச்சிண்டு... எல்லோரும் எடுத்துப் போட்டுக்கலாமே....''

''இது என்ன... உங்க ஊருன்னு நினைச்சீங்களா....''

''வேணாம் நாங்க அப்புறம் சாப்பிடறோம்... நீங்க முதல்லே சாப்பிடுங்க...'' என்றாள் அம்மா.

அப்பாவை பாபுவும், தீபாவும் ஏதோ தொண தொணவென்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். எனக்குத்தான் பேச ஆளில்லை. வாசுவும் நானும் ஏனோ சின்ன வயதிலிருந்தே ஒட்டவில்லை. இரண்டு பேரும் ஏதோ தனித்தனி உலகம் போல.

மௌனமாகச் சாப்பிடும் போதுதான் சட்டென்று உறைத்தது.

''அம்மா... பழைய டேஸ்ட் அப்படியே இருக்கே... ஏய்... கிரிஜா... பார்த்துக்க... இதுதான் சாம்பார்... நீ வைக்கிறது இல்லே....'' என்று சீண்டினேன்.

''போதும்டா... அவளை ஒரேடியா மட்டம் தட்டாதே...''

''நெஜம்மாவே அம்மா... நல்ல சாப்பாடு சாப்பிட மனசு ஏங்கிப் போச்சு....''

வாசு திடீரெனப் பேசினான்.

''பழைய டேஸ்ட்.... இப்ப இல்லை..''

''ஏன், நல்லாத்தான் இருக்கு....'' என்றேன். என்னம்மா... நீ என்ன சொல்றே...''

''உனக்கு சப்பாத்தியா சாப்பிட்டு... அலுத்துப்போச்சு. அதனால...என் சமையல் ருசிக்கிறது. ஆனா... பழைய டேஸ்ட் இப்ப இல்லைதான்...'' என்றாள் அம்மா மெதுவாக.

ஒரு நிமிஷம் சுருக்கென்றது. ஏனோ எதுவும் பேசாமல் சாப்பிட்டேன். கை கழுவும் போது கூட மனசுக்கும் உறுத்தல் மிஞ்சியிருந்தது.

அப்பா வாசலுக்குப் போய்விட்டார். தீபாவும் பாபுவும் மாடியில் வாசுவுடன் கேரம் போர்டு விளையாடப் போய் விட்டார்கள். சமையல் அறையில் அம்மாவும், கிரிஜாவும் சாப்பிட அமர்ந்திருந்தனர்.

''நான் போடட்டுமா...'' என்றேன்.

''வேணாம்... அப்புறம் எரிஞ்சு விழுவீங்க... உங்க அவசரத்துக்கு எங்களால சாப்பிட முடியாது... பாதி பரிமாறும் போதே பொறுமை போயிடும்....'' என்றாள் கிரிஜா.

''... நாங்க ரெண்டு பேர்தானேடா. நாங்களே போட்டுக்கிறோமே...'' என்றாள் அம்மா.

ஒரே கேள்விக்கு இரண்டு விதமான பதில்கள். பழைய தலைமுறை சற்று நாசூக்காய் மனம் புண்படாத விதமாய்ப் பதில் சொன்னால்... இந்தத் தலைமுறை... பட்டென்று

**ஈரமான காப்பி ஃபில்டரில் காப்பிப் பொடியைப் போட்டால் அடைத்துக் கொள்ளும். எனவே, ஃபில்டரைச் சூடு காட்டிப் பிறகு பொடியைப் போட்டு வெந்நீர் ஊற்றினால் டிகாக்ஷன் நன்றாகவும் சீராகவும் இறங்கும்.**

**— சுமதி.**



முகத்தில் அறைவது போல் பதில்...

"எப்படி சாம்பார் வைக்கிறதுன்னு கத்துக்கோ... அம்மாகிட்டே..." என்றேன்.

"...எல்லாம் என் சமையலே போதும்... உங்களை மாதிரி ஆளுக்கு...."

அம்மா பேசாமலிருந்தாள்.

"என்னம்மா... நீயே சொல்லிக்கிறே... உன் சமையல்லே பழைய டேஸ்ட் இல்லேன்னு இந்த வாசனை... இந்த ருசி... எல்லாம் உன்னோட அடையாளம்மா... அது வேற யாருக்கு வரும்..."

"இல்லைடா... எனக்கே தெரியுது... பழைய டேஸ்ட் இல்லைன்னு..."

"வயசாச்சு...எப்பவும் அதே பர்பெக்ஷன் இருக்க முடியுமா..." என்றேன் சமாதானமாய்.

"அதில்லே... எல்லாம் 'உ ங் க ள ா ல' தான்..." என்றாள் கிரிஜா.

"என்னது...."

"...ம். என்ன பண்ணாலும் சின்ன வயசுல... குறை சொல்லிண்டே இருப்பாராம் உங்கப்பா... அதே குணம்தான் உங்க கிட்டேயும்... அம்மாவுக்கும் மனசு விட்டுப் போச்சு... ரசனை இல்லாத மனுஷங்களோட பழகிப் பழகி... எதையோ... பண்ணிப் போட்டாப் போதுங்கிற மாதிரி..... மாத்திண்டுட்டா...."

"... நெ... நெஜம்மாவாம்மா...."

அம்மா ஒன்றும் சொல்லவில்லை. பிறகு மெல்லச் சிரித்தாள்.

வாஸ்தவம்தான். எத்தனை முறை தட்டை விட்டு அடித்திருக்கிறார் அப்பா. ஏன்.... எனக்கே எத்தனை முறை கோபம் வந்திருக்கிறது... என்னவெல்லாம் சொல்லி இருக்கிறேன்....

அம்மாவும் மனுஷிதானே... ஆபீசில் என் சர்வீஸை மதிக்கவில்லை... வேலை செய்யப் பிடிக்கவில்லை... என்று சொல்லிக் கொள்ளும் போது... வீட்டிலும் அதே மாதிரி தானே மனைவியும் எதிர்ப்பார்ப்பாள்... அதை மட்டும் ஏன் உணராமல் போகிறேன்.

"அதான்... அம்மா சொல்றா... அடிக்கடி என்னைக் குறை சொல்ல வேண்டாம்னு புரிஞ்சுதா...."

கிரிஜாவால் இன்று சொல்ல முடிகிறது.. அம்மாவால்... அந்த கால மனுஷியால்.,. அன்று முடியவில்லை.

அடையாளங்கள்... இவை சொல்கின்ற அர்த்தங்கள்... புரிந்து கொள்ளத் தவறினால்... என்ன நஷ்டம்... எனக்குத்தான்.

"... காவேரில மறுபடி அதே மாதிரி தண்ணி வருமா..." என்றபடி தீபா உள்ளே வந்தாள்.

பின்னாலேயே பாபுவும், வாசுவும்.

வரலாம். வராமலும் போகலாம். ஆனால் என் மனசுக்குள் வந்த வெள்ளம் நிரந்தரமாய் இருக்கும்.

கிரிஜாவை அன்புடன் பார்த்தேன்.



தேங்காய், தனியா, பெருங்காயம், உப்பு, புளி, கறிவேப்பிலை, கடுகு ஆகிய வற்றை நல்லெண்ணெயில் விட்டு வதக்கி யெடுக்கவும். வதக்கியதைத் தூளாக்கி இட்லி, தோசை, தயிர்ச் சோறு, ஆகியவைகளுக்குத் தொட்டுக் கொண்டு சாப்பிட்டால் மிக மிகச் சுவையாக இருக்கும். இந்தப் பொடிக்குத் 'தவணைப் பொடி' என்று பெயர்.

— சுமதி.

## ஐடியா சொல்கிறார் அப்பாசாமி!

ஃபிளாட்டுகளுக்கு மவுசு இப்போது! ஜாண் இடத்தில் என்னத்தைக் கொலு வைப்பது என அலுத்துக் கொள்கிறார்கள். இவர்களுக்கு ஒரு அருமையான ஐடியா கூறுகிறார், அப்பாசாமி ரியல் எஸ்டேட் அதிபர் அப்பாசாமி —

"அடுக்கு மாடிக் கட்டடத்திற்கு நிச்சயமாகக் கீழேயோ, பக்கவாட்டிலோ கார் ஷெட்டிற்கு இடம் இருக்கும். அதைச் சுத்தப்படுத்தி அவரவர் வீட்டில் இருக்கும் பொம்மைகளை எடுத்து வந்து ஒன்றாகக் கொலு வைக்கலாம். ஒவ்வொருவர் வீட்டிலும் பத்து பொம்மைகள் இருந்தால் கூட ஆறு வீடு சேரும் போது என்ன ஆச்சு? அருமையான கொலு வைக்கலாம்.

ஒவ்வொரு நாள் ஒவ்வொருத்தர் பொறுப்பு. அன்றைக்கு அவரவர்க்கு வேண்டியவர்களைக் கூப்பிடலாமே? ஒற்றுமை, சிக்கனம், வேலைப் பளு குறைவு எல்லாம் இதில் வந்து சேரும்!"

